# எரிமலை

அல்லது

# முதலாவது இந்திய சுதந்தர யுத்தம்

வீர ஸாவர்க்கர்

தமிழாக்கம்:

ஜெயமணி ஸா. சுப்பிரமணியம்

கலைமகள் காரியாலயம்

சென்னை - 4.



## சமர்ப்பணம்

1857 - இல் நடந்த முதலாவது இந்திய சுதந்தரப் போரில் வீர சுவர்க்கம் அடைந்த ஆடவர்கள், பெண்மணிகள் ஆகியவர்களின் நினைவுக்கு.

# முன்னுரை

**ப**ல ஆண்டுகளுக்கு முன், வீர விநாயக தாமோதர ஸாவர்க்கர் ஆங்கிலத்தில் எழுதிய **எரிமலை அல்லது முதலாவது இந்திய சுதந்தர யுத்தம்** என்ற நூலைப் பிரிட்டிஷார் பறிமுதல் செய்து விட்டனர். எனினும், அவர்களுடைய கழுகுப் பார்வைக்கு இலக்காகாமல் சில பிரதிகளை மறைத்து வைப்பதில் இந்திய தேச பக்தர்கள் வெற்றி பெற்றுர்கள். இரண்டாவது உலக மகாயுத்தம் மிகத் தீவிரமாக நடந்துகொண் டிருந்த போது, மலாய் நாட்டில் இருந்த எனக்கு, ஓர் அன்பரிடமிருந்து அந்த அபூர்வமான பிரதியொன்று கிடைத்தது. அவர் அந்தப் புத்தகத்தை, ''ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு'' என்று பேணிப் பாதுகாத்து வந்தார். என் கைக்கு வந்தபோது அந்த நூல் மிகவும் சிதிலமான நிலையில் இருந்தது. அதன் பக்கங்கள் நொறுங்கிய அப்பளங்களைப் போல் காட்சியளித்தன. எனவே, அதை மொழிபெயர்ப்பதைக் காட்டிலும், அந்தப் புத்தகத்தின் ஏடுகள் மேலும் உருத் தெரியாது நொறுங்காமல் இருக்க நான் அதிகச் சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டி யிருந்தது.

'எரிமலை'யை நான் என்றும் மறக்க முடியாது. கிழக்கு ஆசியாவில், குறிப்பாக மலாய் நாட்டில் இந்தியத் தேசீய சேனை உருவானபோது, எனக்கு இந்தியச் சுதந்தர சங்கத்தின் மூலமும், நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் கட்டளையால் ஆரம்பிக்கப்பட்ட இந்திய யுவர் சங்கத்தின் தலைவன் என்ற முறையிலும் ஓரளவு தொண்டு புரியும் வாய்ப்புக் கிடைத்தது. ஆனுல், அவற்றைக் காட்டிலும் 'எரிமலை'யின் மூலம் தொண்டு புரிய எனக்குக் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தை நான் எவ்வாறு மறக்க முடியும்?

அதன் பயனுக, கடிதத்தின் வாயிலாகவும் நேரிலும் நேதாஜியின் பாராட்டுதலைப் பெறும் அதிருஷ்டம் எனக்குக் கிடைத்தது. நேதாஜி மறைவதற்குப் பத்துத் தினங்களுக்கு முன் அவருடன் ஒரு மணி நேரத்துக்கு மேல் அளவளாவவும், அவருக்கு இருதய பூர்வமாக அஞ்சலி செலுத்தவும் எனக்குப் பேறு வாய்த்தது. மலாய் நாட்டில் நான் எழுதிய மற்றும் சில தமிழ் நூல்களை அவரிடம் கொடுத்தபோது, நேதாஜி அவற்றை அன்புடன் வாங்கி, பக்கத்தில் வீற்றிருந்த நேதாஜி அரசாங்கத்தின் மந்திரிகளில் ஒருவரான ஸ்ரீ எஸ். ஏ. ஐயரிடம் கொடுத்த காட்சி

# எரிமலை

## 1

## வெள்ளை ஆசிரியர்களின் விஷப் பிரசாரம்

மாடமாளிகையாயினும் மண் குடிசையாயினும், அஸ்திவாரமின்றி அமைக்க முடியாதென்பது கல்வியற்றவர்கள்கூட அறிந்த உண்மையாகும். அரண்மனையோ, ஆண்டி மடமோ எதுவாயினும் அஸ்திவாரமின்றிக் கட்டமுடியுமென ஒருவர் கூறத் துணிவாராயின், அவரது புத்திசாலித்தனத்தை என்னவென்று கூறுவது! 1857-ஆம் ஆண்டு இந்தியாவில் பொங்கி எழுந்த சுதந்தர மகா யுத்தமாகிற மாளிகைக்கு அஸ்திவாரம் எதுவும் இல்லையென்று, அதாவது அச்சுதந்தர யுத்தத்துக்கு மூலகாரணங்கள் எவையும் இல்லை என்று வெள்ளைச் 'சரித்திராசிரியர்கள்' சாதிக்கின்றனர்! ஒன்று அவர்கள் அறிவிலிகளாக இருக்க வேண்டும்; அல்லது பிறர் கண்களில் மண்ணைத் தூவி உண்மையை மறைக்கும் அயோக்கியர்களாகவும் மோசக்காரர்களாகவும் இருக்க வேண்டும். அது எப்படியாயினும், அத்தகையோர் புனிதத்தன்மை பொருந்திய சரித்திராசிரியர் தொழிலுக்குச் சிறிதும் தகுதியற்றவர்கள் என்பது மாத்திரம் நிச்சயந்தான்.

மதப் புரட்சிபற்றியோ அரசியல் புரட்சிபற்றியோ சரித்திரம் எழுத விரும்புவோர் முதல் முதலாக அவற்றின் மூலகாரணங்களை நன்கு ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும். அந்தப் புரட்சியை இயக்குவித்த மர்மமான காரணங்களையும் மாயசக்திகளையும் உணர்ந்து உண்மையைத் தெளிவாக எடுத்துக்காட்ட வேண்டும். அவ்விதமின்றித் தெரிந்தோ தெரியாமலோ பொருத்தமற்ற விஷயங்களைப் பிணைத்துத் தங்கள் மனம் போனபடி எழுதுவது பொறுப்பற்ற செய்கையாகும்.

ஒரு குறிப்பிட்ட புரட்சியைப்பற்றிய வரலாற்றை எழுதுவோர், அதன் உண்மையான மூல காரணங்களை விவரித்துரைத்த பின், அப்போது நிகழ்ந்த சம்பவங்களை விவரிக்க வேண்டும். சரித்திர லட்சணம் அதுதான். அப்படியானால்தான் சம்பந்தப்பட்ட புரட்சியின் உண்மையான லட்சியங்களை எல்லோரும் அறிந்துகொள்ள முடியும். புரட்சியின் ஆதிகாரணங்களையும், அதை இயக்குவித்த சக்திகளையும் தெளிவாகவும் உண்மையாகவும் பாரபட்சமின்றியும் விவரித்தால்தான், அதைப்பற்றிய சரித்திரமானது அதன் சம்பந்தமான சகல விவரங்களும் அடங்கிய ஒரு நிரந்தரமான உண்மைச் சாசனமாக விளங்க முடியும்.

புரட்சியை ஒட்டிய சம்பவங்களைக் காட்டிலும், அந்தப் புரட்சி ஏற்படுவதற்கான மூலகாரணங்களை ஆராய்வதே சரித்திராசிரியரின் முக்கிய வேலையாகும். காக்கை உட்கார்ந்த சமயம் பனம் பழம் விழுந்தால், அதைத் தள்ளியது காக்கைதான் என்று முடிவு கட்டிவிடக் கூடாது! அவ்விதம் எழுதப்படும் சரித்திரமானது முன்னுக்குப் பின் முரணாக இருப்பதுடன் குழப்பத்தையும் உண்டாக்கிவிடும். விபரீதப்போக்குள்ள சரித்திராசிரியர்களால் அவ்விதம் குழப்பப்பட்ட சரித்திரங்கள் பல உள்ளன. தீ வைத்ததாக நடைபெற்ற ஒரு வழக்கில், தீ வைத்தவனை நீதிபதி விடுதலை செய்துவிட்டு, தீ வைப்பதற்குக் காரணமான நெருப்புக் குச்சியின்மீது குற்றப் பத்திரிகை படித்தாராம்! சில விபரீத மனப்பான்மையுள்ள சரித்திராசிரியர்களின் போக்கும் அவ்விதமே நகைப்பிற்கு இடமாக இருக்கிறது.

விருப்பு வெறுப்பும், உண்மையைத் திரித்துக் கூறும் சுபாவமும் உள்ள சரித்திராசிரியர்களால் மற்றொரு பெருந்துன்பமும் விளைகின்றது. குறிப்பிட்ட தலைவர்களைத் தலைமுறை தலைமுறையாகப் போற்றி வணங்க வேண்டிய சந்ததிகள், அந்தத் தலைவர்களைத் தூற்றும்படியாகவும் அறிவிலிகளான அல்லது பொய்யர்களான சரித்திராசிரியர்கள் செய்துவிடுகின்றனர்.

உலகப் புகழ் பெற்ற ஆசிரியர் கார்லைல் எழுதிய 'பிரெஞ்சுப் புரட்சி' என்ற நூலை ஆராய்ந்த இத்தாலிய தேசீய வீரர் மாஸினி கீழ்வரும் தத்துவத்தை வெளியிட்டுள்ளார்: 'ஒவ்வொரு புரட்சியும் ஒரு மகத்தான தத்துவத்தை, இலட்சியத்தை அடிப்படையாகக் கொண்டே நடைபெறுகிறது.'

ஒரு தேச மக்களின் வாழ்க்கையை மாற்றி அமைப்பதற்காகச் செய்யப்படுவதே புரட்சியாகும். திடீரென்று நேர்ந்த அற்பமான ஓர் அக்கிரமத்துக்காகப் பெரும் புரட்சி ஒருபோதும் ஏற்படாது.

பழைய அரசாங்கம் மறைந்து புதிய அரசாங்கம் ஏற்படுதல், பழையன கழிந்து புதியன தோன்றுதல், சிம்மாசனங்கள் சிதறுண்டு போதல், லட்சியத்துக்காக எண்ணிக்கையற்ற வீரர்கள் உயிரைத் துச்சமாக மதித்துப் போர் புரிந்து பலியாதல் —இவைபோன்ற திடுக்கிடும் சம்பவங்கள் அடங்கிய பிரளயம் ஒன்று புரட்சி உருவத்தில் ஏற்பட வேண்டுமாயின் அதற்கு முக்கிய காரணம் இல்லாமல் இருக்க முடியுமா?

முக்கிய காரணம் அல்லது லட்சியம் நல்லதா கெட்டதா என்பது தெரிந்தால்தான், புரட்சி நியாயமானதா நியாயமற்றதா என்பதையும் நிர்ணயிப்பது சாத்தியமாகும். அப்போதுதான், அந்தப் புரட்சியில் ஈடுபட்டவர்களின் உயர்வு தாழ்வையும், அவர்கள் செய்த தியாகத்தின் தன்மையையும் அறிந்துகொள்ள முடியும். அவ்விதம் அறிந்துகொண்டால்தான், மண்ணாசை காரணமாகப் போர் புரிந்த மகா அலெக்ஸாந்தருக்கும், இத்தாலியின் விடுதலைக்காகப் போர் புரிந்த கரிபால்டிக்கும் உள்ள வேற்றுமை நமக்கு நன்கு புலனாகும்.

இருவரும் யுத்தம் செய்து ஜயம் பெற்ற வீரர்கள்தாம். ஆனால் இருவருடைய லட்சியங்களும் ஒன்றுக்கொன்று நேர்மாறானவை. எனவே, ஒரு புரட்சியைப்பற்றி எழுத முற்படும் சரித்திராசிரியர்கள், அதன் சம்பந்தமான சகல காரணங்களையும் ஆராய்ந்தறிந்து பாரபட்சமின்றி எழுத வேண்டும். அவ்விதம் ஆராய்ந்தால்தான் குழப்பம் தீர்ந்து தெளிவு ஏற்படும்; இருள் அகன்று ஒளி தோன்றும்; பொய்யும் பித்தலாட்டங்களும் மறைந்து உண்மை பளிச்சிடும்.

ஆனால் 1857-ஆம் ஆண்டு பரத கண்டத்தில் நடைபெற்ற முதலாவது சுதந்தர யுத்தத்தின் சரித்திரம் துரதிருஷ்டவசமாக, பாரபட்சமற்ற ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் எழுதப்படவில்லை. எனவே, அதுபற்றித் தவறான, நியாயமற்ற அபிப்பிராயமே நிலவி வருகின்றது. அவ் விஷயமாக ஆங்கில சரித்திராசிரியர்கள் பித்தலாட்டமும் பொய்யும் கூறுவதில் தங்களுடைய முழுத் திறமையையும் காட்டி யுள்ளனர். சிலர் அந்தப் போர் நிகழ்ச்சிகளை மாத்திரம் எழுதிவிட்டு, அவற்றின் காரணங்களை நன்கு ஆராயாமல் விட்டுவிட்டார்கள். பெரும்பாலோர் அந்த யுத்தம் பற்றித் தம் மனம் போன போக்கில் திரித்தும் பொறுப்பற்ற முறையிலும் பாரபட்சத்துடனுமேயே எழுதியுள்ளனர்.

பிஷாவரிலிருந்து கல்கத்தா வரையில் பொங்கி எழுந்த அரசியல் புரட்சி வெள்ளமானது யாதொரு காரணமும் இல்லாமலா எழுந்தது? டில்லி முற்றுகைகள், கான்பூர்ப் படுகொலைகள், தேசீயக் கொடிக்காகக் கணக்கற்ற வீரர்கள் புரிந்த உயிர்த் தியாகம்—இவைகளெல்லாம் மூலகாரணம் எதுவும் இல்லாமலா நிகழ்ந்தன? அப்போது எண்ணிக்கையற்ற பாரதத் தவப்புதல்வர்கள் புரிந்த வீர சாகசங்களுக்கு முக்கிய காரணம் இல்லாமல் இருக்க முடியுமா? அவற்றிற்கெல்லாம் தகுந்த காரணம் இல்லை என்று கூறுவோர், ஒன்று அரசியல் ஞானம் அற்றவர்களாக இருக்கவேண்டும்; அல்லது சுயநலப் பேய்களான கொடியர்களாக இருக்க வேண்டும். இந்திய மகா ஜனங்கள் புரிந்த முதலாவது சுதந்தர யுத்தத்தைப்பற்றிய உண்மைகளைத் திரித்துக் கூறியுள்ள ஆங்கிலச் சரித்திராசிரியர்களை, அரசியல் ஞான சூனியர்களென்று கூறுவதைக் காட்டிலும் அயோக்கிய சிகாமணிகள் என்பதே பொருந்தும்.

தோட்டாக்களில் கொழுப்புத் தடவும்படி ஆங்கில அதிகாரிகள் உத்தரவிட்டதால்தான், புரட்சி கிளம்பியதென்று ஸ்தாபிப்பதற்காக ஆங்கில சரித்திராசிரியர்கள் தங்களுடைய புத்தி, கற்பனா சக்தி எல்லாவற்றையும் உபயோகித்திருக்கிறார்கள்! கூலிக்கு மாரடிக்கும் சில இந்தியர்களும் அந்தச் சரித்திராசிரியர்களின் கூற்றுக்குத் தகுந்தவாறு தாளம் போட்டிருக்கிறார்கள். ஆங்கிலேயர்களின் செல்லப் பிள்ளைகளில் ஒருவரான இந்திய சரித்திராசிரியர், தோட்டாக்களில் பசு, பன்றிக் கொழுப்புத் தடவப்பட்டிருக்கிறது என்ற வதந்தியைக் கேட்டவுடன் மூட ஜனங்களுக்கு வெறி பிடித்துவிட்டதாகவும் அது உண்மையா பொய்யா என்றுகூட யாரும் விசாரிக்கவில்லை என்றும் கூறியிருக்கிறார்.

உண்மையில், தோட்டாக்களில் கொழுப்புத் தடவப்பட்டிருக்கிறது என்ற 'வதந்தி'யை இந்திய ஜனங்கள் குருட்டுத்தனமாக நம்பிவிடவில்லை. சரி, அந்த அற்ப காரணத்துக்காகச் சில அறிவீனர்களால் அந்தப் புரட்சி ஆரம்பமானதாகவே வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால் நானா சாஹிப், லக்ஷ்மிபாய், டில்லி சக்கரவர்த்தி பகதூர்ஷா, ரோஹில்கண்ட் கான்பகதூர் கான் முதலிய மேதாவிகளும் மண்டலாதிபதிகளும் வீரர்களும் அதில் ஏன் கலந்துகொண்டனர்? கொழுப்புத் தடவப்பட்ட தோட்டாக்களைத் தொடும்படியான அவசியம் அவர்களுக்கு ஏற்பட்டு விடவில்லை.

அவ்விதம் இருக்க அந்த முதலாவது சுதந்தரப் போரில் அவர்கள் முக்கிய பாத்திரங்களாக விளங்கியதற்குக் காரணம் என்ன? அவர்கள் வெறி பிடித்த பைத்தியக்காரர்களா? மற்றும் அவ்வதந்திதான் அந்தப் பிரளயத்திற்குக் காரணம் என்றால், 'இனி அந்தத் தோட்டாக்கள் உபயோகிக்கப்பட மாட்டா' என்று கவர்னர் ஜெனரல் ஒரு பிரகடனம் விடுத்தவுடனேயே, புரட்சி அடங்கியிருக்க வேண்டும் அல்லவா? ஆனால் ஏன் அது அடங்கவில்லை? அப்படியிருந்தும் இந்திய சேனாவீரர்கள் ஏன் கொதித்தெழுந்தனர்? அவர்கள் மட்டுமா? அவர்களுடன் எவ்விதச் சம்பந்தமும் இல்லாத மகாராஜாக்கள், ராஜாக்கள், லட்சக்கணக்கான ஜனங்கள் முதலியோரும் அந்த வேள்வித் தீயில் குதித்ததற்குக் காரணம் என்ன? ஹிந்து - முஸ்லிம், அரசன் - ஆண்டி, சேனாவீரன் - சாதாரண மனிதன் முதலிய சகலரும் கொதித்தெழும்படி செய்தது அந்த அற்பச் சம்பவமா? இல்லை, இல்லை. பொய்யர்களான சரித்திராசிரியர்களோ, கூலிக்கு மாரடிக்கும் பேடிகளோ அதன் மூலகாரணத்தை மறைத்துவிட முடியாது.

அயோத்தியா ராஜ்யத்தை ஆங்கிலேயர்கள் கைப்பற்றியது அந்தப் புரட்சிக்கு ஒரு காரணமென்று ஆங்கில சரித்திராசிரியர்கள் கூறியிருப்பதும் சரியல்ல. ஒருவேளை புரட்சிக்கான பல காரணங்களில் அதுவும் ஒன்றாக இருக்கலாம். எனினும் சுதந்தர யுத்தம் பீறிட்டெழுந்ததற்கு அது மூலகாரணம் அல்ல.

அவ்வமயம் அயோத்தி நவாப் கல்கத்தாவில் சிறைப்பட்டிருந்தார். பிரஜைகள் அவர்மீது மிகவும் வெறுப்புக் கொண்டிருந்ததாக ஆங்கிலேயர்கள் கூறுகின்றனர். அப்படியிருக்க, அந்த ராஜ்யத்தைச் சேர்ந்த பிரபுக்கள், சிப்பாய்கள், சாதாரணப் பிரஜைகள் முதலிய யாவரும் வாளேந்தித் தங்கள் அரசருக்காகப் போர் புரிவானேன்? அரசரிடம் வெறுப்புக்கொண்ட பிரஜைகள் ஏன் அவ்வாறு செய்ய வேண்டும்? அப்போது அங்கு நிலவிய நிலைமைபற்றி இங்கிலாந்திலிருந்த வங்காளப் பிரமுகர் ஒருவர் எழுதிய வியாசம் ஒன்றில் கீழ்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: 'நவாபை இதற்குமுன் ஒருபோதும் பார்த்திராதவர்களும், இனியும் பார்ப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்க ஹேது இராத சாதாரண ஜனங்களுங்கூட, அவருடைய துர்ப்பாக்கிய நிலைமையைக் குறித்துத் தங்கள் குடிசைகளில் கண்ணீர் வடிக்கின்றார்கள் என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். வாஜித் அலி ஷாவுக்கு இழைக்கப்பட்டுவரும் அவமானத்திற்குப் பதிலாகப் பழிவாங்

காது விடுவதில்லை என்று எவ்வளவோ வீரர்கள் தங்கள் வாட்களின்மீது ஆணையிட்டு ஆத்திரத்துடன் இருந்துவருகிறார்கள் என்பதையும் நீங்கள் சிறிதும் அறியமாட்டீர்கள்.'

நவாப் விஷயத்தில் சிறிதும் அக்கறை இல்லாத ஏராளமான மக்களும் அந்தப் புரட்சியில் சம்பந்தப்பட்டதிலிருந்து, புரட்சிக்கு அதுவும் மூலகாரணம் அல்ல என்பதை எவரும் அறிந்துகொள்ளலாம்.

பிரிட்டிஷார் அயோத்தியா ராஜ்யத்தைக் கைப்பற்றாமலும், தோட்டாக்களுக்குக் கொழுப்புத் தடவாமலும் இருந்திருந்தால்கூட அந்தப் புரட்சி ஏற்பட்டே இருக்கும். ஏற்கனவே புகைந்துகொண்டிருந்த கனல், ஜ்வாலையைக் கக்கும்படி அவ்விரு சம்பவங்கள் செய்தன என்பதைத் தவிர, அவை புரட்சிக்கு மூலகாரணம் அல்ல. பிரான்ஸில் ஏற்பட்ட மகத்தான புரட்சிக்கு, உணவுப் பொருள்களின் விலையேற்றமும், அரசரின் அநீதிகளும், பாஸ்டில் கோட்டைப் பயங்கரச் சிறையும், பிரபுக்களின் அட்டூழியங்களும் சில்லறைக் காரணங்களே; மூல காரணம் வேறாகும்.

1857-ஆம் ஆண்டு பீரிட்டுக்கொண்டு எழும்பிய புரட்சிக்கு மூலகாரணம் என்ன? அற்ப காரணத்துக்காகவா ஆயிரக்கணக்கான சுத்த வீரர்கள் போர்க்களத்தில் வாள் வீசினர்? சாதுக்களான மக்கள் வீறு கொண்டெழும்படியும், இழிவுபடுத்தப் பட்டுப் புழுதியில் கிடந்த தாயின் மணிக்கொடி மீண்டும் வான வீதியில் கம்பீரமாகப் பறக்கவும், மங்கிய கிரீடங்கள் மீண்டும் ஒளி பெற்றுத் திகழவும் செய்தது எது? புரட்சியில் கலந்து கொண்டவர்களை மௌல்விகளும் வேதியர்களும் வேற்றுமையின்றி ஒருங்கே வாழ்த்தியதன் மர்மம் என்ன? அவர்கள் வெற்றி பெறுவதற்காக டில்லி மசூதிகளிலும் காசிக் கோவில்களிலும் முறையே தொழுகையும் பூஜைகளும் பிரார்த்தனைகளும் நடந்த மர்மம் என்ன?

அந்தப் புரட்சியின் மூலகாரணங்கள் சுதர்ம நோக்கமும் சுதந்தர தாகமுந்தாம். மத உணர்ச்சியை அழிப்பதற்காகத் தந்திரமான, அபாயகரமான, நாசகரமான முறைகளை ஆங்கிலேயர்கள் கையாள ஆரம்பித்தவுடன் ஜனங்களிடையே எழுந்த 'தீன், தீன்!' என்ற வீர கோஷமே அதை விளக்கப் போதுமானது. அரசியல் அடிமைகளாகி வரும் இந்திய ஜனங்களின் மத உணர்ச்சியையும் நசுக்கிவிட்டால், பின்னர் இந்தியாவைத் தாங்கள் எவ்வித இடையூறுமின்றி ஏகபோகமாக ஆட்சி புரியலாம் என்று ஆங்கிலேயர்கள் எண்ணி, அதற்கான அக்கிரமத் திட்டமொன்றை வகுத்தனர். அதைக் கண்டதுந்தான் இந்திய மக்களிடையே ஆத்திரம் பொங்கியது. தங்கள் பிறப்புரிமைகளை அடியோடு நசுக்க ஆங்கிலேயர்கள் சூழ்ச்சி செய்து வருகின்றனர் என்பதை அறிந்ததும் மக்களின் மனத்தில் தேச பக்திக் கனல் மூண்டெழுந்தது.

உலகிலுள்ள வேறு எந்த நாட்டிலும் இத்தகைய பிரளயம் ஏற்பட்டதில்லை என்று கூறுவது மிகையாகாது. அரசியல்

அல்லது மதம் காரணமாகப் புரட்சிகள் மூண்டது உண்டு. ஏக காலத்தில் நாட்டுப்பற்றையும் மதப்பற்றையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு புரட்சி மூண்டது, உலகிலேயே இதுதான் முதல் தடவையாகும். பாரபட்சமும் நிறத் திமிரும் துவேஷ புத்தியும் கொண்ட வெள்ளை ஆசிரியர்கள் நம் நாட்டின் பெருமையை மறைப்பதற்காக எவ்வாறு எழுதிய போதிலும் சரி, சித்தூரின் பெயர் நம் சரித்திரத்தில் இடம் பெற்றிருக்கும் வரையிலும், பிரதாபாதித்தியன், குரு கோவிந்த சிம்மன் முதலியோரின் வீர தீரச் செயல்கள் நம் சரித்திர ஏடுகளை அலங்கரிக்கும் வரையிலும், பாரதத் தவப் புதல்வர்களின் சந்ததிகள் முதலாவது சுதந்தர யுத்தத்தை நடத்திய தலைவர்களை என்றென்றும் போற்றி வணங்கியே வருவார்கள்; அந்தப் புதல்வர்களின் நரம்புகளிலும் எலும்புகளிலும் வீர சுதந்தர ரத்தமானது ஓடிக்கொண்டுதான் இருக்கும். கார்மேகங்கள் கதிரவனை மறைப்பதுபோல, அந்நியரின் அக்கிரமங்களால் பாரதப் புதல்வர்களின் பெருமை மங்கிக்கிடப்பது தாற்காலிகமானதே. அதை நிரந்தரமாக மறைக்கும் சக்தி உலகில் எவருக்கும் இல்லை.

'உயிரினும் இனிய மதத்தையும் தேசத்தையும் அபாயத்தினின்று விடுவிக்க எழுமின்' என்ற மூல மந்திரத்துடனே முதலாவது சுதந்தர யுத்தம் ஆரம்பமாயிற்று. அப்போது டில்லி சக்கரவர்த்தி விடுத்த அறிக்கை ஒன்று கூறியதாவது: 'ஹிந்துஸ்தான் சகோதர சகோதரிகளே! நாம் மட்டும் உறுதி கொண்டோமானால் எதிரிகளை நிமிஷத்தில் வென்றுவிட முடியும். உயிரைக் காட்டிலும் சிறந்த நமது மதத்தையும் தேசத்தையும் அந்நியரின் ஆதிக்கத்திற்கு உட்படாமல் காப்பாற்ற முடியும்.' எனவே 1857-ஆம் வருஷப் புரட்சிக்கு மூலகாரணம் தேச, மத விடுதலை லட்சியமே யன்றி வேறு எதுவும் இல்லை.

அவ்வமயம் பரேலியிலிருந்து வெளியிடப்பட்ட சக்கரவர்த்தியின் பிரகடனம் கூறியதாவது: 'ஹிந்துக்களே, முஸ்லிம்களே, எழுங்கள்! சகோதரர்களே, எழுங்கள்! கடவுளால் அளிக்கப்பட்ட கொடைகளில் சிறந்தது சுயராஜ்யந்தான். வெள்ளையர்களான கொடியவர்கள் நம்மை வஞ்சித்து அதை அபகரித்துள்ளனர். எனினும் அந்த அநீதி நிலைத்துவிடாது. ஆங்கிலேயர்களின் கொடுங்கோன்மை, கோர தாண்டவமாடி வருகின்றது. நம் நாட்டை அடிமைப்படுத்திவரும் அவர்கள், இப்போது நமது மதத்தையும் நசுக்க முற்பட்டுள்ளனர். இனியும் நீங்கள் அலட்சியமாக இருக்கப் போகிறீர்களா? அப்படி இருப்பது நாம் கடவுளுக்கே அபசாரம் செய்வதாகும். வெள்ளையர்களை நாட்டிலிருந்து விரட்ட வேண்டும் என்ற உணர்ச்சி நமக்கு ஏற்பட்டிருப்பது இறைவனின் கிருபையே. வீரர்களான நீங்கள் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் இருந்த அடையாளமே இல்லாமல் செய்துவிட முடியும். நாம் எல்லோரும் நமது லட்சியத்தை நிறைவேற்ற எவ்விதப் பேதமுமின்றி ஒன்றுபடுவோமாக! புனித மதத்தையும் தேசத்தையும் நாம் காப்பாற்ற வேண்டும் என்பது கடவுளின் கட்டளையாகும்; நம் எல்லோருடைய முழு முதற்

கடமையும் ஆகும். எனவே சகலரும் ஆயுதம் ஏந்திப் போரில் குதியுங்கள்.'

'சுதர்மம்', 'சுயராஜ்யம்' என்று இங்கே தனித்தனியாகக் குறிப்பிட்டிருப்பினும், இரண்டும் ஒன்றுதான். சுதர்மம் இல்லாத சுயராஜ்யம் வெறுக்கத்தக்கது. அதுபோலவே சுயராஜ்யமின்றிச் சுதர்மம் என்ற பேச்சே எழ இடமில்லை. சுயராஜ்யமின்றி நாம் நமது சுதர்மத்தை எவ்வாறு அநுஷ்டிக்கவோ பாதுகாக்கவோ முடியும்? மதத்தை அழித்தால் சுதர்மம் அழிந்துவிடும்; பின்பு சுயராஜ்யத்துக்கே வழி இல்லாமல் போய்விடும் என்ற நோக்கத்துடனேயே ஆங்கிலேயர்கள் ஹிந்து, இஸ்லாம் மதங்களை அழிக்க முற்பட்டனர்.

டில்லி முற்றுகையிடப்பட்டு யுத்தம் கடுமையாக நடைபெற்று வருகையில், டில்லி சக்கரவர்த்தி விடுத்த மற்றொரு பிரகடனம் கூறியதாவது: 'நிலம், செல்வம், சக்தி முதலியவற்றை ஆண்டவன் எதற்காக அருளியிருக்கின்றார்? குறிப்பிட்ட சிலர் மாத்திரம் பிறரைச் சுரண்டிச் சுகபோகம் அநுபவிப்பதற்காக அல்ல; நமது பரிசுத்தமான மதத்தைப் பாதுகாக்கும் புண்ணிய கைங்கரியத்துக்குப் பக்கபலமாகவே அவை வழங்கப்பட்டிருக்கின்றன. தெய்வம் கொடுத்த சுதந்தரத்தை மனிதன் அபகரிக்கும்படி விடுவது மகா பாதகம் என்பதுடன் பேடித்தனமுமாகும்.

'நம் செல்வம் எங்கே, பூமி எங்கே, சக்தி எங்கே? எல்லாம் அடிமைத்தனத்தினால் மறைக்கப்பட்டு விட்டன. நாம் மதத்தையும் தேசத்தையும் பாதுகாக்கும் சக்தியை இழந்தால், அவற்றை அழிக்கும் பாதகமும் நம்மையே சாரும். எனவே, சுயராஜ்யம் பெற முயற்சி செய்யாதவனும், சுதர்மத்தை நிலைநிறுத்த ஆர்வம் கொள்ளாதவனும் அந்தப் பாவத்துக்கு ஆளாகியே தீர வேண்டும். ஆவேசம் கொண்டு பொங்கி எழாது, அடிமைத்தனத்தில் மௌனமாக ஆழ்ந்திருப்பவன் நாஸ்திகன், மத விரோதி, தேசத் துரோகி. ஆகையால் சுதர்மத்தையும் சுயராஜ்யத்தையும் ஸ்தாபிக்க எழுங்கள்!'

ஆஹா! இதற்காக நம் தேசமக்கள் எவ்வளவு தியாகங்கள் புரிந்துள்ளனர்! முனிவரும் கவியுமான குரு ராமதாஸ் இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன் மகாராஷ்டிரர்களுக்கு என்ன கட்டளையிட்டார், தெரியுமா? 'உங்கள் தர்மத்தைப் பாதுகாக்க உயிரையும் லட்சியம் செய்யாதீர்கள். நீங்கள் மடியும்போது உங்கள் தர்மத்தின் விரோதிகளையும் கொல்லத் தவறாதீர்கள். உயிர்களைப் பலிகொடுத்துப் போர் புரிந்து உங்கள் ராஜ்யத்தைத் திரும்பவும் பெறுங்கள்.'

குரு ராமதாஸ் அன்று செய்த இந்த உபதேசமானது எந்தக் காலத்துக்கும் பொருந்தும்.

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தத்தில் கலந்துகொண்டவர்களும் அந்த உபதேசத்தின்படியே நடந்துகொண்டார்கள். முதலாவது சுதந்தர யுத்தம் தோல்வியடைந்து விட்டது என்பதற்காக அதன் புனிதத் தன்மையையோ

சிறப்பையோ இகழ்ந்து கூற முடியுமா? குரு கோவிந்த சிம்மர் தமது ஜீவிய காலத்தில் நிறைவேற்ற முடியாமற் போனதற்காக அவரது லட்சியத்தின் உயர்வை எவரும் அலட்சியம் செய்ய முடியாது. 1848-ஆம் ஆண்டு இத்தாலியில் ஏற்பட்ட மகத்தான புரட்சி தோல்வியடைந்தது என்பதற்காக, அதன் பெருமை குன்றிவிடுமா? பின்னர் இத்தாலியின் மகத்தான வெற்றிக்கு அது அஸ்திவாரமாக அமைந்ததுபோல், இந்தியாவின் முதலாவது சுதந்தர யுத்தமும் எதிர்காலத்தில் ஏற்படப் போகும் மகத்தான வெற்றிக்கு அஸ்திவாரமாக அமைந்துள்ளது. விஷத்தன்மை பொருந்திய வெள்ளை ஆசிரியர்கள் என்ன சூழ்ச்சி செய்தாலும், என்ன ஜாலவித்தை செய்தாலும் இந்தப் புனித உண்மையை மறைத்துவிட முடியாது.

# 2

## பிளாஸியில் செய்த பிரதிக்ஞை

இமயம் முதல் குமரி வரையில் கம்பீரமான தோற்றத்துடன் விளங்கும் பரத கண்டம், கோடிக்கணக்கான வீரர்களுக்கும் வீராங்கனைகளுக்கும் ஞானிகளுக்கும் பிறப்பிடமான பரத கண்டம் பூர்ண சுயேச்சையுடன் இருப்பதா? அந்நியருக்கு அடிபணிந்து அடிமை நாடாக அல்லல்படுவதா? இந்தப் பிரச்னையைத் தீர்க்கவே 1857-ஆம் வருஷம் சுதந்தரப் போர் ஆரம்பமாயிற்று.

எனினும் அந்தப் பிரச்னை அப்போது திடீரென எழுந்துவிடவில்லை. 1757-ஆம் வருஷமே அது பீரிட்டுக்கொண்டு கிளம்பி விட்டது. அவ் வருஷம் ஜூன் மாதம் 23-ஆம் தேதி, 'இந்தியா இந்தியருக்கா அல்லது ஆங்கிலேயருக்கா?' என்ற கேள்வியானது பிளாஸிப் போர்க்களத்திலே வாள்முனையில் விவாதிக்கப்பட்டது. உண்மையில் அன்றே முதலாவது சுதந்தர யுத்தத்துக்கு விதை விதைத்தாகி விட்டது.

அன்றைத் தினத்திலிருந்து நூறு வருஷங்களுக்கு மேல் ஆகியும் பிளாஸியில் நிகழ்ந்த கொடுமைகளை இந்திய மகா ஜனங்கள் மறக்கவில்லை. 1857 ஜூன் மாதம், 23-ஆம் தேதி நிகழ்ந்த பயங்கரச் சம்பவங்களே அதற்கு அத்தாட்சியாகும். 'பிளாஸி அக்கிரமங்களுக்குப் பழி வாங்கியே தீருவோம்' என்று 1857-இல் பாரத மக்கள் நாள்தோறும் முழங்கிக்கொண்டே போருக்குப் புறப்பட்டனர். மறுபடி சுதந்தர யுத்தம் செய்தே தீருவதென்று இந்தியா, பிளாஸிப் போர்க்களத்திலேயே பிரதிக்ஞை செய்துகொண்டது. அந்தப் பிரதிக்ஞையை இந்தியர்கள் மறக்காமலிருக்க, ஆங்கிலேயர்களும் புண்ணில் கோலிடுவதுபோல் இந்தி

யர்களைத் துன்புறுத்தியும் அவமதித்தும் வந்தனர். அதனுல் புரட்சி விதை முளைத்து வெகு செழுமையாக வளர்ந்து வந்தது. வங்காளம், காசி, ரோஹில்கண்ட் முதலிய இடங்களில் வாரன் ஹேஸ்டிங்ஸும், மைசூர், அஸ்ஸாம், புனு, ஸாதாரா முதலிய இடங்களில் வெல்லெஸ்லியும் தங்களுடைய அட்டூழியங்களின் மூலம் புரட்சிச் செடிக்குத் தண்ணீர் பாய்ச்சி வந்தனர். ஷான்வர் அரண்மனை, உன்னத சிகரங்களுடன் கூடிய ஸஹ்யாத்ரிக் கோட்டைகள், டில்லி சிம்மாசனம் முதலியவைகளையும் அழிக்க ஆங்கிலேயர்கள் சூழ்ச்சி செய்தனர். பிரசித்தி பெற்ற கோட்டை கொத்தளங்கள் தகர்க்கப்பட்டுங்கூட அவர்களின் வெறி தணியவில்லை. எனவே, சிறிய நாடுகளும் அரசுகளும் ஒன்றன்பின் ஒன்ருக ஆங்கிலேயர்களின் துரோகத்துக்கும் கொடுமைக்கும் இலக்காகி அழிந்தன.

ஆங்கிலேயர்கள் அவ்விதம் வெற்றி பெற உதவியவர்கள், துரோகிகளின் வலையில் சிக்கி, அறியாமையில் ஆழ்ந்து கிடந்த சிப்பாய்கள்தாம்! அப்படி இருந்தும் அந்தச் சிப்பாய்களை ஆங்கிலேயர்கள் இழிவாக நடத்தியும் துன்புறுத்தியுமே வந்தார்கள். இந்திய அரசர்களோ தங்கள் சிப்பாய்கள் முக்கியமான வெற்றிகள் பெற்ருல் அவர்களைப் பாராட்டிப் பரிசுகளும் ஜாகீர்களும் வழங்குவார்கள். ஆனுல் நிறத் திமிர்பிடித்த வெள்ளையர்களோவெனில், தங்களுக்கு வெற்றியைத் தேடித் தந்த இந்தியச் சிப்பாய்களைப் பொருட்படுத்தவே இல்லை. போரில் காயம்பட்ட சிப்பாய்களை வைத்தியசாலைகளுக்கு அனுப்பாமல் பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுக் காரியத்தைச் சுலபமாக முடித்துவிடும்படி ஜெனரல் ஆர்தர் வெல்லெஸ்லி உத்தரவிட்டான்!

இந்தியாவின் சுயேச்சை, ஆங்கிலேயர்களால் சிறிது சிறிதாக அபகரிக்கப்பட்டு வருவதை முதல் முதலாக அறிந்து கொண்டவர்கள் புனு நானு ஃபர்னவிஸும், மைசூர் ஹைதர் ஸாஹிபும் ஆவர். அதன் பின்தான் மற்றவர்கள் அந்த உண்மையை உணர்ந்தனர்.

1806-ஆம் ஆண்டு மூண்ட வேலூர்ச் சிப்பாய்களின் புரட்சியும் சுதந்தர தாகத்தையே மூலகாரணமாகக் கொண்டதாகும். பின்னர் ஏற்பட்ட முதலாவது சுதந்தர யுத்தத்துக்கு அது ஓர் ஒத்திகையாக இருந்தது. இத்தாலியில் 1827-இல் நடந்த சுயராஜ்யப் போரின் ஒத்திகை நாடகம் 1861-இல்தான் வெற்றிகரமாக முடிவுற்றது. இந்தியாவிலும் சுயராஜ்யப் போரின் ஒத்திகைகள் நடந்துள்ளன. அந்த ஒத்திகைகள் வெற்றி யடையாமற் போயினும், அவற்றின் பயனுக இந்திய தேச பக்தர்கள் சுதந்தரப் போரில் மிகுந்த அநுபவம் பெற்றனர் என்பதில் சந்தேகமில்லை.

பிளாஸிப் போர்க்களத்தில் விதைத்து வளர்க்கப்பட்ட பயிரின் அறுவடைக் காலம் சமீபித்தது. அந்த அறுவடை அலுவல்களை நிறைவேற்ற விரும்புபவன்போல் டல்ஹௌஸியும் 1846-ஆம் ஆண்டு இந்தியா வந்து சேர்ந்தான். அவன் இந்தியாவுக்கு வருமுன்னரே எங்கும் ஜனங்களிடையே அதிருப்தியும்

வெறுப்பும் ஆத்திரமும் உள்ளூறப் பொங்கிக்கொண் டிருந்தன. ஆங்கிலேயர்களிடம் ராஜ்யங்களை இழந்த ராஜாக்களும் மகா ராஜாக்களும் மனம் புழுங்கிக்கொண் டிருந்தார்கள். பிளாஸி யுத்தத்தின் நூறுவது ஆண்டு வருகிறது என்ற எண்ணமும் மக்களுக்குப் புதிய நம்பிக்கையையும் உணர்ச்சியையும் உண்டு பண்ணியது. பிரிட்டிஷாரின் கீழிருந்த இந்தியச் சிப்பாய்கள்கூட ஆங்கிலேயரின் அக்கிரமங்கள் காரணமாக மனத்திற்குள் ஆத்தி ரத்துடன் இருந்து வந்தனர். டல்ஹௌஸி வைசிராயாக வரு முன், ஆங்கிலேயர்கள் ஓரளவு மறைமுகமாகத் தங்களுடைய அக்கிரமங்களைச் செய்து வந்தனர். ஆனால் டல்ஹௌஸியோ அத்தகைய ரகசிய முறையைக் கைவிட்டுப் பகிரங்கமான, நேரடியான அநீதிகளில் ஈடுபட்டான்.

இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த முக்கிய கர்த்தாக்களில் டல்ஹௌஸியும் ஒருவன் என்று ஆங்கில சரித்தி ராசிரியர்கள் அவனைப் பாராட்டுகின்றனர். எல்லையற்ற பொன்னாசையும் மண்ணாசையும் பிடித்த அந்நியர்களின் அக்கிரம யுத்தங்களாலும் அட்டூழியங்களாலும் அல்லல் பட்டு வரும் நம் நாட்டில், எவன் சகிக்க முடியாத அநீதிகளும் கொடு மைகளும் இழைக்கின்றானோ, அவன்தான் மகா சாமர்த்திய சாலி என்றும், ராஜதந்திரி என்றும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் தின் இரும்புத் தூண் என்றும் ஆங்கிலேயர்களால் கொண்டா டப்படுகின்றான்! பிடிவாதம், அகம்பாவம், நிறத் திமிர், ஏகாதி பத்திய கர்வம், அயோக்கியத்தனமான ஈவிரக்கமற்ற துணிச் சல் முதலிய சகல 'குணாதிசய'ங்களும் டல்ஹௌஸியிடம் நிறைந்திருந்தன.

அவ்வமயம் பாஞ்சாலத்தில் ரஞ்சித சிம்மன் என்ற வீரன் கர்வம் பிடித்த வெள்ளையர்களுக்கு யமனாக இருந்து வந்தான். எனவே அவன் இருக்கும் வரையில் தன்னிஷ்டப்படி நினைத்த இடமெல்லாம் யதேச்சாதிகாரம் நடத்த முடியாது என்பதை டல்ஹௌஸி உணர்ந்தான். அந்தச் சிங்கத்தை எப்படியாவது அடிமைத்தனமாகிற இரும்புக் கூட்டில் அடைத்துவிடத் தீர்மானித்தான். ரஞ்சித சிம்மனை வெள்ளையர்கள் எதிர்த்துத் தோல்வியடைந்தனர் என்றாலும், எதிரிகளைப் பாஞ்சாலத்தின் பின்வாசலான குஜராத் வழியாக வரச் சில துரோகிகள் அநு மதித்து விட்டனர். நம்ப முடியாத அந்தத் துரோகத்தைக் கண்டு திகைத்த ரஞ்சித சிம்மனைப் பகைவர்கள் சிறைப்படுத்தி விட்டார்கள். அவனுடைய மனைவியான ராணி சந்த்குவார் லண்டனில் அல்லல்பட்டு நிர்க்கதியாக இறந்தாள். ரஞ்சித சிம்மனின் புத்திரனான தூலிப் சிங்கோ, பகைவர்களின் தயவில் வயிறு வளர்க்கும்படியான துர்ப்பாக்கியத்துக்கு உள்ளானான்.

இவ்விதமாகப் பாதகனான டல்ஹௌஸிக்கு முதல் வெற்றி கிடைத்தது. பாஞ்சாலமும் எளிதில் ஆங்கிலேயர் வசமாயிற்று. இந்தச் செய்தியை மிகுந்த படாடோபத்துடனும் மமதையுட னும் டல்ஹௌஸி லண்டனுக்குத் தெரிவித்தான். "இமயமலை யிலிருந்து கன்னியாகுமரி வரையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம்

சங்கிலித் தொடர்போல் பரவியுள்ளது'' என்று அதில் குறிப்பிட்டிருந்தான்.

வெற்றி வெறியில் மூழ்கியிருந்த டல்ஹௌஸியின் கண்ணோட்டம் உடனே பர்மாவை நோக்கிச் சென்றது. பர்மாவில் அமைதியை உண்டாக்குவதற்காக, சமாதானத் தூதுகோஷ்டி ஒன்றை அனுப்புவதுபோல் ஆங்கிலேயர்கள் சூழ்ச்சி செய்து பர்மாவையும் வெகு தந்திரமாகக் கைப்பற்றினர். அவ்வாறாக இமயத்திலிருந்து குமரி வரையிலும், சிந்துவிலிருந்து ஐராவதி வரையிலும் ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஏற்படவே இவர்களுக்குத் தலைகால் புரியவில்லை. வியாபாரிகளைப்போல் வேஷம் போட்டுக் கொண்டு வந்த அந்தக் கொடியர்கள் இவ்வாறு நாடு பிடிக்கச் சூழ்ச்சி செய்வார்கள் என்று இந்தியர்களோ பர்மியர்களோ கனவிலும் கருதாததால் அவர்களுடைய கழுத்தை ஆங்கிலேயர்கள் சுலபமாக நெரித்துவிட்டனர்.

பாஞ்சாலமும் பர்மாவும் வெள்ளையர் வசமானதால், அவர்களுக்கு ஏற்பட்ட லாபம் அபரிமிதமாகும். பாஞ்சாலம் மட்டும் ஐம்பதாயிரம் சதுர மைல்கள் பரப்பும், நாற்பது லட்சத்துக்கு மேற்பட்ட ஜனத்தொகையும் உள்ளது. புனிதமான பஞ்ச ஜீவநதிகளால் வளம் பெற்று விளங்குவதால் அதன் பெயர் பாஞ்சாலம் என வழங்குகிறது. வேதங்களால் போற்றப்படும் அந்தப் புண்ணிய நதிகளின் கரைகள், மகரிஷிகள் தவம் புரிந்த புனித ஸ்தலங்களாகும். பொன் விளையும் அந்தப் பூமியின்மீது ஆசை கொண்டே அலெக்ஸாந்தர் படையெடுத்து வந்தான். அந்தப் பூமியை அந்நியர்கள் கைப்பற்றாமல் பாதுகாப்பதற்காக நடத்திய யுத்தத்திலேயே புருஷோத்தமன் அழியாப் புகழ் பெற்றான்.

ஆயினும் என்ன? துரதிருஷ்டவசமாக அது ஆங்கிலேயர்களின் வசமாயிற்று. பாஞ்சாலத்தையும் பர்மாவையும் கைப்பற்றிய பின்னருங்கூட டல்ஹௌஸிக் கூட்டத்தினரின் மண்ணாசை தீரவில்லை! புராதன காலத்தில் கீர்த்திபெற்று விளங்கிய ராஜ்யங்களின் சின்னங்கள், சமாதிகள் முதலியவற்றையும் தரை மட்டமாக்கி விடும்படி அவன் கட்டளையிட்டான். ஏன்? அவை அழியாதிருந்தால், ஆங்கிலேயர் செய்த அட்டூழியங்களுக்குப் பழிவாங்க வேண்டுமென அந்தச் சின்னங்கள் தேசாபிமானிகளின் உணர்ச்சியைத் தூண்டிவிடும் என்பதே அவன் கொண்ட பீதியாகும்.

மகோன்னதமாக விளங்கிய ஹிந்து சாம்ராஜ்யம் மறைந்து ஸாதாரா சமாதியில் புதைக்கப்பட்டு இருந்தது. கிறிஸ்துவின் மறு பிறப்பை நம்பும் டல்ஹௌஸி, அந்நிய ஆட்சியை அடியோடு துடைத்து ஒழிக்கக் கூடிய வல்லமை பொருந்திய தேசபக்தர்கள் ஸாதாரா சமாதியிலிருந்து கிளம்பி விடலாம் என்று திகிலடைந்திருக்கக் கூடும்!

## துரோகப் படலம் ஆரம்பம்

**1848**-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் ஸாதாரா மகாராஜா வான அப்பா சாஹிப் காலமானார். அந்தச் செய்தியைக் கேட்டதும் கொடிய டல்ஹௌஸியின் மூளை தீவிரமாக வேலை செய்யத் தொடங்கியது. ஸாதாராவை ஆக்கிரமித்துக்கொள்ள அது தான் உற்ற சமயம் என்று அவனுக்குத் தோன்றியது. இருந் தாலும் அதற்கு ஒரு காரணம் கூற வேண்டாமா? அப்பா சாஹிபிற்குப் பிள்ளையில்லை என்ற காரணத்தைக் கூறி அந்த ராஜ்யத்தை ஆக்கிரமித்துக்கொண்டான். இந்தியாவில் பிள்ளை யில்லாதவர்களின் சொத்துக்களுக்கு ஆங்கிலேயர்கள்தாம் வாரிசுகள் போலும்! இந்திய தர்மப்படி ஒரு குடிசையாயினும், அதன் சொந்தக்காரருக்கு மகன் இராவிட்டால், அது அவ ருடைய சுவீகார புத்திரனையோ, நெருங்கிய தாயாதியையோ தான் சேரும். இந்த நியதி ஆங்கிலேயர்கள் அறிந்ததே. எனினும் துரோகமும் சூழ்ச்சியுமே உருவான அவர்கள், தர்மத்தையும் நீதியையும் பொருட்படுத்த வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?

ஸாதாரா, ஆங்கிலேயரின் நேச ராஜ்யமாகவும் இருந்து வந்தது. அப்பா சாஹிபுக்கு முன் ஸாதாராவை ஆட்சி புரிந்த பிரதாபசிங் சத்திரபதி, ஆங்கில அரசாங்கத்தைக் கவிழ்க்கச் சதி செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு 1839-ஆம் ஆண்டு சிம்மா சனத்தினின்று நீக்கப்பட்டார். பின்னர், கிழக்கிந்தியக் கம் பெனியார் அவர் தம்பியான அப்பா சாஹிபை ஸாதாரா சத்திரபதியாக நியமித்தனர். அதிலிருந்து, பிள்ளையில்லாதவர் களின் ராஜ்யத்துக்கு நெருங்கிய உறவினர் பாத்தியஸ்தர்கள் என்பதை ஆங்கிலேயரே ஒப்புக்கொண்டதாக ஆகிறது; அல்லவா?

1825-ஆம் ஆண்டு கோடா மகாராஜாவின் சுவீகார புத் திரன் பட்டத்துக்கு வந்தபோது கிழக்கிந்தியக் கம்பெனியார் விடுத்த அறிக்கையில் கூறியதாவது: 'கோடா அரசருக்குப் புதல்வர் இராததால், ஹிந்து சாஸ்திர விதிகளின்படி சுவீகாரம் செய்துகொள்ள அவருக்கு உரிமை உண்டு என்பதை நாங்கள் அங்கீகரிக்கிறோம்.'

1837-ஆம் ஆண்டு ஓர்ச்சா மன்னன் சுவீகாரம் செய்து கொண்டதையும் அந்தக் கம்பெனியார் ஒப்புக்கொண்டனர். சுருங்கக் கூறுமிடத்து 1846—1847-இல் நிகழ்ந்த பல சுவீகாரங் களையும் அவர்கள் அங்கீகரித்தார்கள். ஆயினும் என்ன? முதலில் அவைகளை அங்கீகரிப்பதுதான் தங்களுக்கு நன்மை என்றும், தங்களுக்கு அதிகப் பலம் ஏற்பட்டதும், வாக்குறுதிகள் ஒப்பந் தங்கள், தர்மம், நியாயம் எல்லாவற்றையும் உதறித் தள்ளி விடலாம் என்றும் அவர்கள் கருதியிருக்கலாம்!

இவ்விதமாக, டல்ஹௌஸியின் ஆட்சியில் சுவீகார உரிமையும் அபகரிக்கப்பட்டது. பிரதாப சிம்மனும், அப்பா

சாஹிபும் சுவீகாரம் செய்துகொண் டிருந்துங்கூட அவர்களுக் குச் சொந்தப் புதல்வர்கள் இல்லையென்று கூறி ஆங்கிலேயர்கள் ஸாதாராவைக் கைப்பற்றிக்கொண்டார்கள். ஸாதாரா ராஜ்ய மானது ககாபட்டின் அன்புக் கரங்களால் முடிசூட்டப்பட்ட சிவாஜி அமர்ந்திருந்த சிம்மாசனத்தை யுடையது. அந்த ராஜ்யத்தை ஸ்தாபிக்கவே பாஜி ராவ் தமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகம் செய்தார். சிவாஜி வீற்றிருந்ததும், சாந்தாஜி, தாஞ்ஜி, நீராஜி, பாஜி முதலிய வீரர்கள் வணங்கி வந்ததுமான பெருமை பொருந்திய ஸாதாரா ராஜபீடத்தின் கதி இவ்வாறு ஆயிற்று. டல்ஹௌஸி இழைத்த இந்த அக்கிரமம், இந்தியாவில் பின்பு பிரிட்டிஷார் செய்த எண்ணிக்கையற்ற அட்டூழியங்களுக்கு முதற்படியாக அமைந்தது எனலாம்!

சுவீகார புத்திரனை அங்கீகரியாது பிரிட்டிஷார் ராஜ்யத் தைக் கைப்பற்றிய அக்கிரமத்தைக் கண்டு மகாராஷ்டிரர்கள் திகைத்துப் போயினர். எனினும் அதை மௌனமாகச் சகித்துக் கொண்டிருக்க அவர்கள் விரும்பவில்லை. மகா சமர்த்தரும், தேசபக்தியும் ராஜவிசுவாசமும் உடையவருமான ரங்க பாபுஜி, ஸாதாராவில் நிகழ்ந்த அக்கிரமத்தைக் குறித்து மேல் அதிகாரிக ளிடம் விண்ணப்பம் செய்துகொள்ளுவதற்காக லண்டன் சென்றால் பலன் ஏற்படலாம் என்று பலரும் எண்ணினர். பாவம்! ஆங்கிலேயர்களின் உண்மையான உருவம் அப்போதும் அவர் களுக்குத் தெரியவில்லை. வெற்றியாயினும் தோல்வியாயினும், முயற்சி செய்யாது வாளா இருந்துவிடக் கூடாது என்று பலரும் கருதினர். தாங்கள் பரிதாபகரமாக ஏமாற்றமடையும் படியே நேரும் என்பதை அவர்கள் எவ்வாறு அறிவர்? மேல் அதிகாரிகளிடமிருந்து நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் ரங்க பாபுஜி லண்டன் சென்று மிகவும் கஷ்டப்பட்டார்; அலைந்தார்; அதிகாரிகளிடம் மன்றாடினார். அவரிடம் இருந்த பொருளும் கரைந்தது. அன்னாரிடமிருந்து ஆங்கில பாரிஸ் டர்கள் லட்சக் கணக்கில் கொள்ளையடித்தனர். திரும்பி ஸாதாரா வருவதற்குக்கூட அவர் கையில் பணமில்லை. 'ஸாதாராவைத் திருப்பிக் கொடுக்க முடியாது' என்று இறுதியில் ஆங்கிலேயர்கள் 'தீர்ப்பு'ம் கூறிவிட்டார்கள்.

லண்டனுக்குச் செல்ல ரங்க பாபுஜி ஸாதாராவில் மும்முர மான ஏற்பாடுகள் செய்துகொண் டிருக்கையில் ஆதிக்க வெறிக்கு மற்றொரு விருந்து கிடைத்தது! அவ்வமயம் நாகபுரி மன்னரான ராகோஜி பான்ஸ்லே தமது நாற்பத் தேழாம் வயதில் திடீரென்று காலமானார். அவர் ஆங்கி லேயரின் நெருங்கிய நண்பர். அந்த நட்புத்தான், அவரது வம்சமே அழிந்து மறையக் காரணமாயிற்று!

இந்திய சரித்திர நிகழ்ச்சிகளைக் கவனிப்போர் ஓர் உண் மையை நன்கு அறிந்துகொள்ளலாம். அதாவது ஆங்கிலேயர் களைத் தங்கள் பகைவர்களாகக் கருதிய பலரும் தங்கள் ராஜ்யங்களை இழக்காமல் இருக்க முடிந்தது. ஆனால் ஆங்கி

லேயர்களிடம் மடத்தனமாக நம்பிக்கை வைத்து, அவர்களை நண்பர்களென்று கருதிய நபர்கள்தாம், பிரிட்டிஷ் கம்பெனி' யாரின் துரோகத்துக்கு ஆளாகித் தங்கள் ராஜ்யங்களை இழக்க நேர்ந்தது.

நாகபுரி அரசரான ராகோஜி பான்ஸ்லே சுவீகாரம் செய்துகொள்ளவில்லை. தமக்குச் சந்தான பாக்கியம் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்து வந்தது. எனினும் துரதிருஷ்டவசமாக அவர் அகால மரணத்துக்கு உள்ளானுர்.

அவருக்குச் சந்ததி இராவிடினும், அவருடைய பட்ட மகிஷிக்குச் சுவீகாரம் செய்துகொள்ள உரிமை உண்டு. அதற்கு முன் இறந்துபோன அரசரின் மனைவிமார் சுவீகாரம் செய்து கொண்டதைப் பிரிட்டிஷ் கம்பெனியாரே ஒப்புக்கொண்டிருக்கின் றனர். 1826-ஆம் வருஷம் தௌலத்ராவ் ஸிந்தியா மன்னனின் மனைவியும், 1834-இல் தார் ராணியும், 1836-இல் ஜங்கோஜி ஸிந்தியா மனைவியும், 1841-இல் கிருஷ்ண நகர் ராணியும் செய்து கொண்ட சுவீகாரங்களைக் கம்பெனியார் அங்கீகரித்தது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

அவர்கள் யாவரும் விதவைகளாவர். அந்தச் சந்தர்ப்பங்களில் அந்தச் சுவீகாரங்களை அங்கீகரிப்பது கம்பெனியாருக்கு லாபகரமாக இருந்தது. ஆனுல் ராகோஜி பான்ஸ்லேயின் சுவீகாரத்தை அங்கீகரிப்பது அவர்களின் சுயநலத்துக்கு ஏற்றதாக இல்லை. லாபகரமாயின் அவர்கள் எத்தகைய அநீதியும் இழைக்க அஞ்சமாட்டார்கள் என்பதற்குப் பிரிட்டிஷ் ஆட்சியில் எண்ணிக்கையற்ற உதாரணங்கள் காட்ட முடியும். ஏன், பிரிட்டிஷ் சாம்ராஜ்யமே அநீதிகளையும் அட்டூழியங்களையும் அடிப்படையாகக் கொண்டு நிர்மாணிக்கப் பெற்றதுதானே!

ஆங்கிலேயர்கள், சுவீகாரப் புதல்வனுக்கு உரிமையில்லை என்று கூறி ஸாதாராவைக் கைப்பற்றிக் கொண்டார்கள்; அரசன் சுவீகாரம் செய்துகொள்ளவில்லை என்று கூறி நாகபுரியைப் பறித்துக்கொண்டார்கள்! நாற்பத்து ஆறரை லட்சம் ஜனத்தொகையுள்ள நாகபுரியைக் கபளீகரம் செய்ததன் மூலம், ஆங்கிலேயர்களுக்கு 76,832 சதுர மைல்கள் பரப்புள்ள பூமியும், ஆண்டுதோறும் செலவு போக ஐந்து லட்ச ரூபாய் மிச்சம் ஏற்படும்படியான வசதியும் கிடைத்தன. நாதியற்ற நாகபுரி ராணிகள் துக்கம் தாங்க முடியாமல் அழுதுகொண்டிருக்கையில், அரண்மனை வாயிற்கதவு பலமாகத் தட்டப்படும் சப்தம் கேட்டது. கதவு திறக்கப்பட்டதும், ஆங்கிலத் துருப்பினர் 'மடமட'வென்று உள்ளே நுழைந்தார்கள். அவர்களைக் கண்டு பயந்து, யானைகளின் மீதேறிய ராணிகள் பலவந்தமாகக் கீழே இறக்கப்பட்டார்கள். அந்த யானைகளும் அரண்மனை லாயங்களில் இருந்த குதிரைகளும் கடைத்தெருவுக்குக் கொண்டுவரப்பட்டன. அவைகளை ஆங்கிலேயர்கள் விலை கூற ஆரம்பித்தார்கள். அரண்மனையில் இருந்த ஏராளமான தங்க வெள்ளிச் சாமான்களும் பகிரங்கமாக ஏலம் போடப்பட்டன. ராணிகளின் அழகிய கழுத்தில் மின்னிக்கொண்டிருந்த பவுன்

காசுமாலைகளும், நல்முத்து மாலைகளும் கடைத்தெருப் புழுதியில் ஒளியிழந்து கிடந்தன.

ஒவ்வொரு யானையும் 100 ரூபாய் வீதம் விற்கப்பட்டது. கொள்ளையடித்த சொத்துக்களுக்குக் கிடைத்த லாபம் போதும் அல்லவா! டல்ஹௌசியைக் காட்டிலும் எவ்வளவோ அதிக சொகுசாக அரண்மனையில் வளர்ந்த அழகிய அசுவம் ஒவ்வொன்றும் 25 ரூபாய் வீதம் விற்கப்பட்டது! ராணிகள் அணிந்திருந்த ஆபரணங்களையும் கொள்ளைக்காரர்களான ஆங்கிலேயர்கள் விடவில்லை. அவைகளும் ஏலம் போடப்பட்டன. அந்தக் கொடியர்கள் அத்துடன் நிற்கவில்லை. நாகபுரி ராஜ்யத்தின் சின்னமாக விளங்கிய அரண்மனையும் அவர்களுடைய கண்களை உறுத்தியது. உடனே வெள்ளைத் துருப்புகள் அதையும் தகர்க்க ஆரம்பித்தனர். கற்பரசிகள் வாழ்ந்த இடம் இவ்விதம் வெள்ளையர்களின் கொள்ளை வெறிக்கு இலக்காயிற்று.

வாசக நேயர்களே! அதற்குள் திடுக்கிடாதீர்கள்; நடுங்காதீர்கள்! கண்ணீரைத் துடைத்துக்கொள்ளுங்கள்! ஆங்கிலேயர் இழைத்த அட்டூழியங்களின் முதற்படலந்தான் இது! வெள்ளையர்களால் அரண்மனை தகர்க்கப்பட்டு வருகையில், ஓர் அறையில் நாகபுரி ராஜ்யத்தின் பட்டமகிஷியான மகாராணி அன்னபூரணி பாய் இறக்குந் தறுவாயில் இருந்தார். அவருடைய ஆவி பிரியும் சமயத்தில் வெள்ளைத் துருப்புகளின் கடப்பாரைச் சத்தம் மகாராணியின் மனத் துடிப்பையும் வேதனையையும் பன்மடங்கு அதிகப்படுத்தியது. ஆங்கிலேயர்களுடன் நட்புக் கொண்டாடிய ராகோஜி பான்ஸ்லேயின் மனைவியான பட்ட மகிஷியினிடத்தில் வெள்ளையர்கள் நடந்துகொண்ட விதத்தைப் பாருங்கள்!

தங்கள் பண்டைய ராஜவம்சத்துக்கு இழைக்கப்பட்ட அநீதியால் துடிதுடித்த வண்ணம் மகாராணி அன்னபூரணி பாய் இறந்தார். ஆனால் மற்றொரு ராணியான பங்கா பாய்க்கு ஆங்கிலேயர்களிடம் உள்ள நம்பிக்கை இறக்கவில்லை! அவர்களிடமிருந்து நீதி கிடைக்கும் என்ற வீண் எண்ணம் அவர் மனத்தை விட்டு அகலவில்லை. அதன் பின், ஆங்கிலேயர்கள் ஜான்சியிலும் தங்கள் நாச வேலைகளை ஆரம்பித்தார்கள். மேன்மேலும் அவர்களின் அட்டூழியங்களைக் கண்டு சகிக்க முடியாத பங்கா பாயின் புதல்வர்கள் தேசபக்தி மேலீட்டால் ஆங்கிலேயர்களை எதிர்த்துச் சுதந்தரப் போர் தொடங்க ஆயத்தமாயினர். ஆனால் பங்கா பாய், ஆங்கிலேயர்கள் நீதி வழங்குவார்கள் என்ற நம்பிக்கையால் தம் புதல்வர்களைத் தடுத்ததுடன், ஆங்கிலேயர்களுக்கு விரோதமாக அவர்கள் வாளை உருவுவார்களாயின், தானே ஆங்கிலேயரிடம் அவர்களைக் காட்டிக் கொடுத்துவிடுவதாயும் கூறினார். அவர்களைச் சிரச்சேதம் செய்யும்படி தாமே ஆங்கிலேயர்களுக்கு யோசனை கூறப்போவதாயும் பயமுறுத்தினார்! பாவம்! ஆங்கிலேயரிடம் சிநேகமாக இருந்த ராகோஜி பான்ஸ்லேக்கு ஏற்பட்ட கதியே தமக்கும் ஏற்படும் என்பதை அவர் உணர்ந்துகொள்ளவில்லை.

## 4
## நானா சாஹிபும் லக்ஷ்மிபாயும்

உண்மைச் சரித்திராசிரியர்களே! தேச பக்தர்களே! உங்களுடைய வீர சங்கங்களை வானளாவ முழக்குங்கள்! ஏனெனில் மிகக் கீர்த்தி வாய்ந்த இரண்டு வீரர்கள் சரித்திர மேடைக்கு வருகின்றனர். அதிருப்தி, அமைதியின்மை என்னும் கருமேகங்களால் பரத கண்டம் முழுவதும் இருண்டு கிடந்த சமயத்தில், இந்தியா முழுதும் மங்காத நட்சத்திரங்களாக ஒளி வீசித் திகழ்ந்தவர்கள் அந்த இருவருந்தாம். அவர்கள் பாரத அன்னையின் ஆரத்தில் இணையற்றுப் பிரகாசிக்கும் ஆணிமுத்துக்கள். இந்தியாவுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பழிவாங்க வேண்டுமென்று தங்களுடைய உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகம் செய்த தீரர்கள். தேசம், மதம், சுதந்தரம் இவற்றிற்காகத் தங்கள் உயிர்களையும் அர்ப்பணம் செய்த உத்தமர்கள். சிவாஜி போன்ற வீர திலகங்களை உற்பத்தி செய்யும் ஹிந்துஸ்தான ஊற்று வற்றி விடவில்லை என்பதை உலகம் அறியக் காட்டியவர்கள். பரத கண்டத்தின் சரித்திரத்தில் கலங்கரை விளக்காக விளங்கும் சீலர்கள். தர்ம யுத்தத்தில் வாள் ஏந்தி, தோல்வியிலும் பெருமை குன்றாத பாரத திலகங்கள். இவர்கள்தாம் நானா சாஹிப் பேஷ்வாவும், வீர தீர ரமணியான ராணி லக்ஷ்மிபாயும்!

மகாராஷ்டிரத்தில் வானளாவி நிற்கும் மாதேரான் மலைச் சிகரங்களால் அலங்கரிக்கப் பெற்றுள்ள இடத்தில் வேணு என்ற சிறிய கிராமம் ஒன்று இருந்தது. அதில் மாதவ ராவ் நாராயண பட் என்பவர் எளிய வாழ்க்கை நடத்திவந்தார். அவர் பெருந் தனவந்தரல்ல; ஆயினும் உயர் குடும்பத்தைச் சேர்ந்தவர்; நற்பண்புகளும் குணங்களும் வாய்ந்தவர். மாதவ ராவுக்கும் அவர் மனைவியான கங்கா பாய்க்கும் அருந்தவப் பயனாக 1824-இல் ஓர் ஆண் மகவு பிறந்தது. பின்பு தன் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே ஆங்கிலேயர்கள் அலறும்படி செய்து, தாய் நாட்டின் விடுதலைக்காகப் போர் புரிந்து அழியாப் புகழ் பெற்ற நானாதான் அந்தக் குழந்தை!

மகாராஷ்டிர ராஜ்யத்தின் கடைசி அரசரான பாஜி ராவ் பேஷ்வா, ஆங்கிலேயர்களின் சூழ்ச்சியைச் சகிக்க முடியாமல் சிம்மாசனத்தைத் துறந்தார். பிறகு கங்கா தீரத்திலுள்ள ஒரு கிராமத்தில் அமைதியாக வாழ்ந்துவந்தார். அவருடன் மற்றும் சில மகாராஷ்டிரக் குடும்பங்களும் வசித்துக்கொண்டிருந்தன. பாஜி ராவ் தமக்குக் கிடைக்கும் அற்ப உபகாரச் சம்பளத்திலிருந்து, வந்தவர்களையெல்லாம் உபசரித்து ஆதரிக்கின்றார் என்ற செய்தியைக் கேள்வியுற்றுப் பல அகதிகள் அந்தக் கிராமத்துக்கு வந்து குடியேறினர்.

பாஜி ராவின் உதவியை நாடி அவ்வாறு வந்தவர்களில் மாதவ ராவும் ஒருவர். அவர் 1827-ஆம் வருஷம் தம் மனைவியுடனும், குழந்தை நானாவுடனும் அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். விளையும் பயிர் முளையிலே என்பதற்கிணங்க, நானா

வின் தோற்றமும் வீர லாவண்யமும் பாஜி ராவின் மனத்தைக் கவர்ந்தன. பாஜி ராவுக்கும், அவரைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் நாஞ செல்வப் புதல்வஞஞன். குழந்தை நாஞவின் புத்தி கூர்மையைக் கண்டு அவன்மீது பாஜி ராவுக்கு அளவற்ற அபிமானம் உண்டாயிற்று. 1827-ஆம் வருஷம் ஜூன் மாதம் 7-ஆம் தேதி பாஜி ராவ் நாஞ சாஹிபைச் சாஸ்திர விதிப்படி சுவீகாரம் செய்துகொண்டார். அப்போது நாஞவுக்கு இரண்டரை வயதுதான். வேணு கிராமத்தில் ஏழையாகப் பிறந்த அந்தக் குழந்தை, அதிருஷ்ட தேவதையின் கடாட்சத்தால் திடீரென்று பேஷ்வாப் பட்டத்திற்கும் மகாராஷ்டிர ராஜ்ய சிம்மாசனத்துக்கும் உறவு கொண்டாடும் உரிமையைப் பெற்ருன்!

ஏ குழந்தாய்! அத்தகைய உரிமை உனக்குக் கிடைத்தது மகத்தான அதிருஷ்டம் என்பதில் சந்தேகமில்லை. ஆஞல், அதே சமயம் நீ வகிக்க இருக்கும் பொறுப்பை உணர்ந்து நடந்து கொள்வாயா? பேஷ்வாக்களின் சிம்மாசனம் அற்ப சொற்பமானது அல்ல. பாஜி ராவ் வீற்றிருந்து ஏக சக்கராதிபத்தியம் செலுத்தியது; ஸிந்துவின் புண்ணிய தீர்த்தத்தால் புனிதமடைந்தது. அந்தச் சிம்மாசனத்தைப் பாதுகாக்கவே முன்பு பானிபட் யுத்தம் நடைபெற்றது. அந்தச் சிம்மாசனத்தின் புகழையும் பெருமையையும் பாதுகாக்க வேண்டியது உனது முக்கியக் கடமையாகும். ஒன்று அந்தப் பீடமானது வெற்றி மாலையால் அலங்கரிக்கப்பட வேண்டும்; அல்லது சித்தூர் மகளிரைப்போல் அழியாப்புகழெனும் அக்கினியில் தகனமாகி மறைய வேண்டும். பேஷ்வாப் பீடத்தின் பெருமையைக் காப்பாற்ற இவ்விரண்டைத் தவிர மூன்ருவது வழி எதுவும் இல்லை. உன் தந்தை அந்தச் சிம்மாசனத்தைக் கைவிட்டபோது மகாராஷ்டிரம் முழுவதும் வெட்கித் தலைகுனிந்தது. அதற்குப் பரிகாரமாக நீ மீண்டும் அந்தச் சிம்மாசனத்தின் புகழை நிலைநிறுத்த வேண்டும்.

அவ்வமயம் சின்ஞஜி அப்பா பேஷ்வா காசி க்ஷேத்திரத்தின் அதிபதியாக இருந்து வந்தார். அவரைச் சேர்ந்த பரிவாரங்களுள் மாரபந்து - பாகீரதி பாய் என்ற தம்பதிகள் இருந்தனர். இந்திய சரித்திரத்தில் தங்களுடைய பெயர்கள் அழியாத இடம் பெறப்போகின்றன என்று அவர்கள் கனவிலும் கருதியிருக்க மாட்டார்கள். அவர்களுக்குப் பிறந்த ஒரு பெண் குழந்தை, வீராங்கனை என்று பரதகண்டம் முழுவதும் பிரசித்திபெற்று விளங்கப் போகிறது என்பதும் அவர்களுக்குத் தெரியாது. 1835-ஆம் ஆண்டு பிறந்த அந்தப் பெண்குழந்தையின் பெயர் மனு பாய் என்பதாகும். என்றென்றும் அழியாத புகழுடம்புடன் விளங்கிவரும் ராணி லக்ஷ்மிபாய்தான் அந்த மனுபாய்!

மனுபாய்க்கு மூன்று அல்லது நான்கு வயதானபோது அவளுடைய பெற்ரேர் காசியிலிருந்து புறப்பட்டு பாஜி ராவ் வசித்து வந்த பிரம்மாவர்த்தத்துக்கு வந்து சேர்ந்தனர். அந்தக் குழந்தையின் முகவசீகரத்தைக் கண்டு பிரமிக்காதவர்கள் இல்லை. எதிர்காலத்தில் வீரதிலகமாக விளங்கப்போகும் குழந்தை அல்லவா? லக்ஷ்மிபாயின் அழகையும் முக ஒளியையும் கண்டு பிரம்மாவர்த்

தத்திலுள்ள ஜனங்கள் அந்தக் குழந்தைக்கு, 'சபீலி' (அழகி) என்று செல்வப்பெயரிட்டு அழைக்கலாயினர். இரு குழந்தைகளான நாஞவும் சபீலியும் இணை பிரியாது களங்கமற்று ஒருவரை ஒருவர் தழுவி விளையாடிய காட்சி பிரம்மாவர்த்தத்தில் உள்ள மக்களுக்கு எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுத்திருக்கும்! இரு குழந்தைகளும் ஆயுதசாலையில் வாட்போர் கற்றுக்கொண்ட காட்சியைக் கண்டு எவர்தாம் ஆனந்தக் கண்ணீர் சொரியாமல் இருந்திருக்க முடியும்! அவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காகவோ பகட்டுக்காகவோ வாட்போர் கற்றுக்கொண்டார்களா? இல்லை. தங்களுடைய நாட்டையும் மதத்தையும் பாதுகாப்பதற்காக அவர்கள், தங்களுடைய வாட்போர்த் திறமையை உபயோகிக்க வேண்டும் என்பது எல்லாம் வல்ல இறைவனின் கட்டளை அல்லவா?

மனிதனின் நோக்கம் எவ்வளவு குறுகியது! அவனது சக்தி எவ்வளவு அற்பமானது! நாஞ சாஹிபும் லக்ஷ்மிபாயும் சேர்ந்து வாட் போர்ப் பயிற்சி பெற்று வருகையில் அதைக் கண்டு களித்தவர்கள், அந்தக் குழந்தைகள் எதிர்காலத்தில் அடையப் போகும் அபாரமான கீர்த்தியை அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனல் இன்று அவர்களின் கீர்த்தியையும் பெருமையையும் அறிந்தவர்கள், அந்தக் குழந்தைகள் விளையாடிய காட்சியைக் கண்டு ஆனந்திக்கும் பாக்கியத்தைப் பெறவில்லை. நல் முத்துக்களான அக்குழந்தைகளின் பால்யலீலைகளை ஊனக்கண்களால் நாம் பார்க்க முடியவில்லையாயினும், அவற்றை நம் மனக்கண்களால் கற்பனை செய்துகொள்ள முடியும்.

நாஞ சாஹிபும் அவருடைய உறவினரான ராவ் சாஹிபும் தங்கள் குருவிடம் பாடங்களைக் கற்று வருகையில் சபீலியும் கூட இருந்து அவற்றை மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருவாள். இவ்விதமாக அவள் படிக்கக் கற்றுக்கொண்டாள். சிற்சில சமயங்களில் நாஞ யானைமீது அம்பாரியில் அமர்ந்து செல்லுகையில், குழந்தை சபீலி, "என்னையும் ஏற்றிக்கொண்டு செல்ல மாட்டாயா?" என்று இனிமையாகவும் அன்புடனும் கேட்பாள். நாஞவும் அவளை ஏற்றிக்கொள்வார். இருவரும் அச்சமின்றி யானைமீது ஏறிச்செல்லப் பழகுவார்கள். சிற்சில சமயங்களில் நாஞ குதிரை மீதேறி, சபீலியும் தம்முடன் வருவதற்காகக் காத்துக்கொண் டிருப்பார்.

சபீலி தன் இடையின் ஒரு புறத்தில் பட்டாக் கத்தி தொங்கக் குதிரை மீதேறி வேகமாக வருவாள். அவ்வமயம் அவளுடைய தலைமயிர் காற்றில் பறப்பது அவளுக்குப் புதிய அழகைக் கொடுக்கும். முரட்டுக் குதிரையை அடக்கி நடத்திச் செல்லுவதால் ஏற்படும் சிரமம் காரணமாக அவளது முகம் சிவந்திருப்பது, அந்தக் குழந்தையின் மேனி எவ்வளவு மிருதுவானது என்பதைக் காட்டும். இருவரும் சேர்ந்து வெகு வேகமாகச் செல்லுவார்கள்.

அப்போது நாஞவுக்குப் பதினெட்டு வயது. மனுபாய்க்கு ஏழு வயது. வரப்போகும் அறப் போருக்காக அந்த வீரப்

பெண், குழந்தைப் பருவத்திலேயே பயிற்சி பெற்றதை நினைக்க நம் எல்லோருக்கும் உடல் சிலிர்க்கின்றது. அந்த இரு ரத்தினங்களும் குழந்தைப் பருவத்திலிருந்தே இணைபிரியாத நண்பர்கள் ஆயினர்.

பிரம்மாவர்த்தத்தில் வளர்ந்து வந்த நாஞ சாஹிப், லக்ஷ்மி பாய், தாதியா டோபே இம் மூவரும் 1857-ஆம் வருஷம் நடந்த சுதந்தர யுத்தத்தில் முக்கியப் பங்கெடுத்துக் கொண்டார்கள். எதிர்காலத்தில் நடைபெற இருந்த பயங்கர நாடகத்துக்கு அம் மூவரையும் தயார் செய்வதற்கென்றே இறைவன் பிரம்மாவர்த்தத்தைச் சிருஷ்டித்தார் போலும்! ஒவ்வோர் ஆண்டும் நடைபெறும் யமத்விதீயை விழாவின்போது, சரித்திரப் பிரசித்தி பெற்ற சகோதரரும் சகோதரியுமான நாஞவும் லக்ஷ்மிபாயும் 'பாவூபீஜ்' என்ற வைபவத்தை நடத்துவது வழக்கம் என்று கூறப்படுகிறது. வனப்பும் வசீகரமும் உத்வேகமுமுள்ள சபீலி ஒரு கையில் தங்கத் தாம்பாளத்தையும், மற்றொரு கையில் தீபக் கொத்தையும் வைத்துக்கொண்டு அந்த வைபவத்தை நடத்தும் அற்புதக் காட்சியை நாம் கற்பனை செய்துகொள்ளலாம்.

நாஞ சாஹிபின் முகத்தைச் சுற்றி லக்ஷ்மிபாய் புனித தீப ஆரத்தி எடுப்பது போன்றதொரு கண்கொள்ளாக் காட்சியை நாம் வேறு எந்த நாட்டில் காண முடியும்? பாரத அன்னையே! அத்தகைய சகோதர சகோதரிகள் உன் வயிற்றில் பிறந்துகொண்டிருக்கும் வரையில் நீ அஞ்ச வேண்டியதில்லை. அற்புதமான பாவூபீஜ் வைபவங்கள் நடைபெற்று வரும் வரையில், கற்பனைக் கதைகளைக் காட்டிலும் மிகவும் அற்புதமான உண்மைச் சரித்திரக் கதைகள் மறையாமல் இருந்து வரும் வரையில், தீய எண்ணத்துடன் உன்னைப் பார்க்க எவரும் துணியமாட்டார்கள்.

நாஞ சாஹிப், மனுபாய் இவர்களின் வருங்காலத்திய புகழுக்கான அறிகுறிகள் அவர்கள் குழந்தையாக இருந்த போதே தென்பட ஆரம்பித்தன. குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்களுடைய ரத்தத்தில் நாட்டுப்பற்று, சுயமதிப்பு உணர்ச்சி, புராதனப் பெருமை இவை ஊடுருவியிருந்தன.

1812-ஆம் ஆண்டில் சபீலியை ஜான்ஸி மகாராஜாவான கங்காதரராவ் பாபா சாஹிபுக்கு விவாகம் செய்து கொடுத்தனர். அப்போதுதான் மனுபாய், ஜான்ஸி மகாராணி லக்ஷ்மிபாய் என்று பட்டம் பெற்றார். அழகும் இறைவன் அருளும் இணையற்ற வசீகரமும் எல்லையற்ற வீர தீரமும் திறமையும் பொருந்திய லக்ஷ்மிபாய் வெகு விரைவில் ஜான்ஸி மக்களின் ஆழ்ந்த விசுவாசத்துக்குப் பாத்திரரானதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

1851-ஆம் வருஷம் இரண்டாவது பாஜி ராவ் பேஷ்வா இறந்தார். அவரது மரணத்துக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடாதீர்கள்! பேஷ்வாக்களின் வம்சத்தில் ஒரு கோடரிக் காம்பாகப் பிறந்த அவர் 1818-ஆம் ஆண்டில் தமது ராஜ்யத்தை இழந்ததுமன்றி, மற்ற அரசர்களின் ராஜ்யங்களை அழிப்பதற்கும் உதவி செய்ய முற்பட்டார். கம்பெனியார் அவருக்கு அளித்து

வந்த உதவித் தொகையான எட்டு லட்சம் ரூபாயிலிருந்து அவர் ஏராளமாக மீதம் பிடித்து அதையெல்லாம் கம்பெனி யாரிடமே கொடுத்திருந்தார். பின்னர் அவர், ஆங்கிலேயர்கள் ஆப்கானிஸ்தானத்துடன் போருக்குச் சென்றபோது, அவர் களுக்கு ஐம்பது லட்சம் ரூபாய் கடனும் கொடுத்து உதவினர்.

அதன்பின் ஆங்கிலேயர் பாஞ்சாலத்தில் சீக்கியர்களுடன் போர் தொடுத்தனர். எனினும் மகாராஷ்டிரர்களும் சீக்கியர் களும் சேர்ந்து வெள்ளையர்களை முறியடித்து விடுவார்கள் என்று எல்லோரும் மிகுந்த நம்பிக்கையுடன் இருந்தார்கள். அவ்விதம் நடைபெறலாம் என்ற திகில் வெள்ளையர்களுக்கு இருந்தது.

இந்தியா முழுவதும் ஔரங்கஸீபை எதிர்த்துப் போர் புரிந்து வருகையில், பாஞ்சாலத்தில் தோல்வியடைந்த குரு கோவிந்த சிம்மன் மகாராஷ்டிரத்துக்கு வந்து சேர்ந்தார். மகாராஷ்டிரர்களுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளவே அவர் வந்தார். அதுபோலவே மகாராஷ்டிரர்களும் பரஸ்பர உதவி கோரி வட இந்தியாவுக்குச் செல்லுவார்கள் என்று தோன்றியது. ஆனால் கடைசி நேரத்தில் பாஜி எல்லாவற்றையும் கெடுத்து, ஜனங்களின் நம்பிக்கையைச் சிதற அடித்துவிட்டார்.

வீர சிவாஜிக்கும் அவருடைய சந்ததிகளுக்கும் மந்திரிகளாக இருந்து பின்னர் மண்டலாதிபதிகளாகவும் விளங்கியவர்களின் வம்சத்தில் உதித்த பாஜி ராவ், ஆங்கிலேயர்களுக்கு ஏராளமான தொகை கொடுத்ததுடன் தம் சொந்தச் செலவில் ஆயிரம் காலாட்படைகளையும் ஆயிரம் குதிரைப் படைகளையும் அந்தத் துரோகிகளுக்கு உதவியாக அனுப்பினர். தம் சொந்த ராஜ்யத்தைப் பாதுகாத்துக்கொள்வதற்குப் போதுமான துருப்புகள் இல்லாத பாஜி ராவ், குரு கோவிந்த சிம்மனின் பரிசுத்த ஆலயத்தைப் பாழாக்கிய விரோதிகளுக்கு உதவியாகத் துருப்புகளை அனுப்ப முடிந்தது எத்தகைய விபரீதம்!

சீக்கியர்களின் ராஜ்யத்தை மகாராஷ்டிரர்கள் அபகரித்துக் கொள்ள வேண்டுமா? மகாராஷ்டிரர்களின் ராஜ்யத்தைச் சீக்கியர்கள் பறித்துக்கொள்ள வேண்டுமா? இதெல்லாம் எதற் காக? அவ்விரு சமூகத்தினரும் அடங்கிய பிணக் குவியல்களின் மீது வெள்ளையர்கள் களி வெறி நடனம் செய்வதற்காகத்தான்! அப்பேர்ப்பட்ட துரோகியான பாஜி ராவ் மீண்டும் தாய் நாட்டுக்குத் துரோகம் இழைக்க முடியாமல், 1857-ஆம் ஆண்டுக்கு முன் மரணமடைந்ததைக் குறித்து நாம் யம தர்ம ராஜனை வணங்குவோமாக!

பாஜி ராவ் எழுதி வைத்திருந்த மரண சாசனத்தின்படி பேஷ்வாவின் சகல அதிகாரங்களும் சொத்துக்களும் அவரது சுவீகார புத்திரரான நானு சாஹிபுக்குக் கிடைக்க வேண்டும். பேஷ்வாவின் வாரிசுரிமைக்கு அவர்தாம் சட்ட ரீதியாகவும் சம்பிரதாய ரீதியாகவும் தகுதியுள்ளவர். ஆனால் பாஜி ராவ் காலமானர் என்று செய்தி கிடைத்தவுடனே பேஷ்வாவுக்குக் கொடுக்கப்பட்டு வந்த எட்டு லட்சம் ரூபாய் உதவித் தொகை

யைப் பெற நாஞ சாஹிபுக்கு உரிமை இல்லை என்று வெள்ளை யர்கள் அறிவித்துவிட்டனர். ஆஹா! அதைக் கேட்டதும் நாஞ சாஹிபின் மனத்தில் எத்தகைய எண்ணங்கள் எழுந்திருக் கும்? ஹிந்து சாஸ்திரங்கள், அரசியல் விதிகள், சம்பிரதாயங்கள் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு அவர் ஆங்கிலேயர் களுக்கு அனுப்பிய மகஜரிலிருந்து அவரது மன நிலையை நாம் உணர்ந்துகொள்ளலாம்.

அந்த மகஜரில் அவர் குறிப்பிட்டிருந்ததாவது: 'பெருமை வாய்ந்த பேஷ்வாக்களின் குடும்பத்தைக் கம்பெனியார் இவ்வளவு அலட்சியமாக நடத்துவது அநீதியாகும். ஆண்டு தோறும் கம்பெனியார் பேஷ்வாவுக்கு எட்டு லட்சம் ரூபாய் உதவித் தொகை கொடுத்துவர வேண்டுமென்ற திட்டமான நிபந்தனையின் மீதே, ஸ்ரீமத் பாஜீராவினுல் எங்கள் சிம்மாசன மும் ராஜ்யமும் கம்பெனியாரிடம் ஒப்படைக்கப்பட்டன. இந்த உதவித் தொகையை நீங்கள் நிரந்தரமாக வைத்துக்கொண் டிருப்பதென்பது எவ்விதம் நியாயமாகும்? உதவித் தொகைக் குப் பிரதியாகத்தானே ராஜ்யம் உங்களிடம் ஒப்பிக்கப் பட்டது? அந்த ஒப்பந்தத்துக்கு ஒரு சாரார் உங்களிடம் கட்டுப்பட்டு வருகையில், மற்ருெரு சாரார் மட்டும் அதை வேண்டுமென்று மீறுவது அர்த்தமற்றது, அநீதியானது, சட்டத்துக்கு முரணனது. உதவித் தொகை கொடுப்பதை நிறுத்துவதற்குக் கம்பெனியார் மற்ருெரு சாக்கும் சொல்லு கின்றனர். அதாவது இரண்டாவது பாஜி ராவ் ஏராளமான தொகை மிச்சப்படுத்தி வைத்திருப்பதால், அவரது குடும்பச் செலவுக்கு அது போதுமானது என்று சாதிக்கின்றனர். ஆனல் அவர்கள் ஓர் உண்மையை மறந்தே அவ்வாறு கூறுகிருர்கள். உதவித் தொகை கொடுத்து வரவேண்டும் என்பது உடன் படிக்கையின் ஷரத்துகளில் ஒன்று. அந்தத் தொகை எவ்வளவு செலவழிக்கப்பட வேண்டும் என்பதுபற்றி உடன்படிக்கையில் எவ்வித நிபந்தனையும் இல்லை. ராஜ்யத்தின் விலையாகவே உதவித் தொகை அளிக்கப்பட்டது. எனவே பாஜி ராவ் அந்தத் தொகை முழுவதையும் மிச்சப்படுத்தி வைத்திருந் தாலுங்கூட அது சட்டத்துக்கும் நீதிக்கும் முரணகாது. உதவித் தொகை செலவழிக்கப்படும் விதத்தை ஆட்சேபிக்கக் கம்பெனியாருக்குச் சிறிதாவது உரிமை உண்டா? இது மாத்திர மல்ல. உதவித் தொகைகளை எவ்விதம் செலவழிக்கிருர்கள், அல்லது அவற்றிலிருந்து எவ்வளவு மிச்சப்படுத்தி வைக்கிருர்கள் என்று தங்கள் சொந்த ஊழியர்களைக் கேட்கவாவது கம்பெனியாருக்கு உரிமை உண்டா? தங்கள் சொந்த ஊழியர் களையே கேட்கத் துணியாத ஒரு கேள்வியை, ராஜ குடும்பத்தின் வாரிசான ஒருவர் விஷயத்தில் கம்பெனியார் எழுப்பி, உடன் படிக்கையை மீற முற்படுவது விந்தையாக இருக்கிறது.''

தர்ம நியாயமும் ஆணித்தரமான வாதமும் அடங்கிய அந்த விண்ணப்பத்தை எடுத்துக்கொண்டு நாஞவின் நம்பிக்கைக்குப் பாத்திரரான அஸிமுல்லா கான் இங்கிலாந்துக்குத் தூது சென் ருர். 1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தத்துக்குக் காரண

புருஷர்களான முக்கியத் தலைவர்களுள் அஸிமுல்லா கானும் ஒரு வர். முதலாவது சுதந்தர யுத்தத்தை உருவாக்கிய மகா மேதாவிகளுள் அஸிமுல்லா கானுக்குத்தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். அந்த யுத்தத்தை நடத்துவதற்கான பல திட்டங்களிலும் அஸிமுல்லா கான் வகுத்த திட்டந்தான் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. அவர் மிகவும் எளிய குடும் பத்தில் பிறந்தவராயினும், தம்முடைய அபாரமான புத்தி கூர்மையால் உயர்ந்த ஸ்தானத்துக்கு வந்து, இறுதியில் நானா சாஹிபின் நம்பிக்கைக்குப் பாத்திரரான அமைச்சரும் ஆனார்.

மிகுந்த வறுமை காரணமாக அவர் முதலில் ஓர் ஆங்கிலேய ரின் குடும்பத்தில் கையாளாக வேலை பார்த்து வந்தார். அவ் வளவு தாழ்ந்த நிலையிலுங்கூட, தாம் உயர்ந்த பதவிக்கு வர வேண்டும் என்ற ஆர்வம் அவரது உள்ளத்தில் சுடர்விட்டுக் கொண்டிருந்தது. அந்த வேலையை அவர் தமக்குச் சாதக மாக உபயோகப்படுத்திக்கொண்டு அந்நிய மொழிகளைக் கற்க ஆரம்பித்தார். அதன் பயனாக ஆங்கில, பிரஞ்சு மொழிகளில் நன்கு பேசும் திறமை அவருக்கு வெகு சீக்கிரத்தில் ஏற்பட்டு விட்டது. பிறகு அவர் அவ்வேலையிலிருந்து விலகி கான்பூரி லுள்ள ஒரு பள்ளிக்கூடத்தில் படிக்க முற்பட்டார். அவரது ஒப்பற்ற திறமை வெகு சீக்கிரத்தில் வெளியானதால் அவரையே அந்தப் பள்ளிக்கூடத்துக்கு உபாத்தியாயராக நியமித்தனர்! அவ ரது அறிவையும் ஆற்றலையும் கேள்வியுற்ற நானா சாஹிப், அவரைப் பிரம்மாவர்த்தத்துக்கு அழைத்துவரக் கட்டளையிட் டார். பிரம்மாவர்த்த சபையில் அஸிமுல்லா கானின் அரிய யோசனைகள் எல்லோராலும் பாராட்டப்பெற்றன. அந்த யோசனைகளின் சிறப்பை நானா நன்கு அறிந்துகொண்டதால், பின்னர் அஸிமுல்லா கானுடன் கலந்து யோசியாமல் நானா சாஹிப் எவ்வித முக்கியத் தீர்மானமும் செய்வதில்லை. அதனால் தான் 1854-ஆம் வருஷம் அஸிமுல்லா கான் நானா சாஹிபின் முக்கியப் பிரதிநிதியாக இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார்.

அஸிமுல்லா கான் வசீகரமான தோற்றம் உடையவர்; இனிமையாகப் பேசும் ஆற்றல் படைத்தவர். அவர் ஏற்கனவே ஆங்கிலேயரின் பழக்க வழக்கங்களை நன்கு அறிந்தவராதலால் லண்டனில்கூட அவர் சில நாட்களில் மிகுந்த புகழும் செல் வாக்கும் பெற்றார். அவரது பேச்சு வன்மையையும் தோற்றத்தை யும் திடகாத்திரத்தையும் கண்டு பல ஆங்கில யுவதிகளும் அவர் மீது காதல் கொண்டனர். லண்டன் நந்தவனங்களிலும் பிரைட்டன் கடற்கரையிலும் அவரைக் காண ஜனங்கள் கூடி விடுவார்களாம்! அவரை எல்லோரும் இந்திய 'ராஜா' என்று சொல்லுவார்கள். அவரிடம் காதல் கொண்ட உயர் குடும்பத் தைச் சேர்ந்த பல பெண்கள், அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்த பிறகுகூட, தங்களுடைய காதற் பெருக்கைத் தெரிவித்து அவருக்குக் கடிதம் எழுதி வந்தார்கள். ஹாவ்லாக் என்ற ஆங்கிலேயரின் படைகள் பிரம்மாவர்த்தத்தைக் கைப்பற்றிய போது, 'என் அன்பார்ந்த அஸிமுல்லாவுக்கு' என்று விளித்து

வெள்ளைப் பெண்கள் எழுதியிருந்த பல காதற் கடிதங்கள் அவர் கையில் சிக்கின.

அஸிமுல்லாவைக் கண்டு வெள்ளைப் பெண்கள் மயங்கி மோகங் கொண்டார்களெனினும், கிழக்கு இந்தியக் கம்பெனி யார் மயங்கிவிடுவார்களா? சிறிது காலம் வரையில் நய வஞ்சக மான வார்த்தைகளைக் கூறி இறுதியில் வழக்கம்போல் பதில் கூறிவிட்டார்கள். 'பாஜி ராவின் சுவீகாரப் புதல்வருக்கு அவருடைய தகப்பனுர் பெற்று வந்த உதவித் தொகையைப் பெறச் சிறிதும் உரிமையில்லை என்று கவர்னர் ஜெனரல் செய்த தீர்மானத்தை நாங்கள் முற்றும் அங்கீகரிக்கிறோம்.' இது தான் அவர்கள் அளித்த பதில்!

ஆகவே, அஸிமுல்லா அவ்விஷயம் சம்பந்தப்பட்ட வரை யில் தோல்வியே அடைந்தார். எனினும் அதே சமயம் அவரது உள்ளத்தில் புதிய உத்வேகமும் நம்பிக்கையும் எழுந்தன. அந்த நம்பிக்கை நிறைவேற அவர் அந்நியர் எவருடைய உதவி யையும் நாடவேண்டிய அவசியமில்லை. அது நிறைவேறுவது தமது தேசத்தையும் தம் தேச மக்களையுமே பொறுத்ததாகும். ஸாம, தான, பேத முறைகளால் தேசத்தின் சுதந்தரத் தைக் காப்பாற்ற முடியாவிடில், தண்ட முறையால், அதாவது பலாத்காரத்தினுல்தான் சுதந்தரத்தைப் பாதுகாக்க முடியும். அதற்கு ஏற்றவாறு என்ன முறைகளைக் கைக்கொள்ளுவது? அவற்றையொட்டித் தம் நாட்டுச் சகோதர சகோதரிகளின் சம் மதத்தை எவ்விதம் பெறுவது? இவை போன்ற எண்ணங்களே அஸிமுல்லாவின் மனத்தில் குமுறியெழுந்தன. இதன் பயனுக அவர் புத்துயிர் பெற்ருர். அவரது இருதயத்தில் ஒரு புதிய நம் பிக்கை உண்டாயிற்று.

அதே சமயம் லண்டனில் ஒரு பிராமணர், தமது நாட்டை வெள்ளையர்களிடமிருந்து விடுவிக்க மேற்கொண்டு என்ன செய்வ தென்ற சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தார். தமது தேசத்துக்கு நீதி கிடைக்க வேண்டுமென்று வெள்ளை அதிகாரிகளுக்கு அவர் விடுத்த விண்ணப்பங்களும் வேண்டுகோளும் வியர்த்தமாயின. தம் தாய் நாட்டைச் சிதைப்பதற்கான அட்டூழியங்களில் ஈடுபட்டுள்ள வெள்ளையர்கள் மீது எவ்விதம் வஞ்சம் தீர்ப்பது என்பது பற்றியே அவர் ஆலோசித்துக்கொண் டிருந்தார். அவரது லட்சியம் நிறைவேறுவதற்கான பல திட்டங்கள் அவரது மூளையில் உரு வாகி வந்தன. அவர்தாம் ஸாதாராவைச் சேர்ந்த ரங்க பாபுஜி என்பவர். பேஷ்வாவின் பிரதிநிதியான அஸிமுல்லா அடிக்கடி அவரைச் சந்தித்து வந்தார். இருவரும் எதிர்காலத் திட்டம் பற்றி ரகசியமாக ஆலோசனை செய்துவந்தனர்.

## 5

# ஹிருதயத்தில் கத்தி

அவ்வமயம் இந்தியாவில் நாநா சாஹிபும் வாளாவிருக்க வில்லை. நாநா சாஹிப், சாங்கிலி மண்டலாதிபதியின் நெருங்கிய உறவினரான ஒருவரின் புதல்வியைத் திருமணம் செய்துகொண்டார். வடக்கே 1857-ஆம் ஆண்டில் புரட்சியை ஆரம்பிப்பது சம்பந்தமான யோசனைகள் நடந்துகொண்டிருந்தன. அதே சமயத்தில், மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த பட்வர்த்தன் சம்ஸ்தானத்திலும் புரட்சியை ஆரம்பிப்பதற்கான முயற்சிகள் மும்முரமாக நடந்து வந்தன.

நாநா தம் தந்தையின் மரணத்துக்குப் பின் பிரம்மாவர்த்தத்தையே தமது உறைவிடமாகக் கொண்டிருந்தார். இணையற்ற இயற்கை வனப்பு வாய்ந்த பிரம்மாவர்த்தத்துக்குப் புனித பாகீரதி நதி பின்னும் அதிக அழகைக் கொடுத்தது. கம்பீரமாக நின்றுகொண்டிருந்த நாநாவின் மாட மாளிகையிலிருந்து பார்த்தால் பாகீரதி நதியும் மற்ற இயற்கைக் காட்சிகளும் கண்களுக்குத் தெவிட்டாத விருந்தளிக்கும். ஆற்றங்கரை கவலையின்றி ஆனந்தமாக நடமாடும் ஆடவர்களாலும் பெண்களாலும் நிறைந்திருக்கும். கரை நெடுக நிர்மாணிக்கப் பெற்றிருந்த சிற்பச் சிறப்புடன் கூடிய அழகிய ஆலயங்கள் பாகீரதி நதிக்குச் செயற்கை அலங்காரமாக விளங்கின.

பேஷ்வாவின் அரண்மனை கம்பீரமாகவும் ஜீவனுடனும் பிரகாசித்தது. அங்குள்ள பல்வேறு காரியாலயங்கள், பெரிய கடைகள், அரண்மனை வாயிலுக்குள்ளிருக்கும் அழகிய ரஸ்தாக்கள் முதலியவற்றைப் பார்ப்போர், ராஜ்ய காரியங்கள் எவ்வளவு சுறுசுறுப்புடன் நடைபெற்று வருகின்றன என்பதை அறிந்து கொள்ளலாம். அரண்மனைக்குள்ளிருந்த பல பெரிய சுவர்கள் விலையுயர்ந்த ரத்தினக் கம்பளங்களாலும் அபூர்வச் சித்திர வேலைப்பாடுள்ள திரைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. சிற்ப நிபுணர்களால் நிர்மாணிக்கப்பட்ட சலவைக் கற்சிலைகளும், அநுபவசாலிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மாசு மறுவற்ற அபூர்வப் பீங்கான் சாமான்களும், வைரங்களால் இழைக்கப்பட்ட சர விளக்குகளும், தந்த வேலைப்பாடுகளுடன் கூடிய பெரிய நிலைக் கண்ணாடிகளும், மற்றும் தங்கத்தினாலும் நவரத்தினங்களாலும் இழைக்கப்பெற்று ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்த மற்ற அபூர்வப் பொருள்களும், 'ஆஹா! இது என்ன, தேவேந்திரன் சபையோ!' என்று எவரும் பிரமிக்குமாறு செய்தன. சுருங்கக் கூறுமிடத்து, இந்திய மன்னர்களின் செல்வச் செழுமைக்கும், முதிர்ந்த நாகரிகத்துக்கும், இந்தியச் சிற்ப நிபுணர்களின் இணையற்ற திறமைக்கும் நாநா சாஹிபின் சபை ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. அவருடைய ஜன்ம விரோதிகளான வெள்ளைச் சரித்திராசிரியர்களும் இதையெல்லாம் ஒப்புக்கொண்டுள்ளனர்!

நாறு சாஹிபின் உயர்ந்த ஜாதிக் குதிரைகளும் ஒட்டகங்களும் வெள்ளிச் சேணங்களால் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. உத்தம ஜாதி அசுவங்களின்மீது நாறுவுக்கு மிகுந்த விருப்பம் உண்டு. குதிரைச் சவாரியில் நாறு சாஹிபையோ லக்ஷ்மி பாயையோ யாரும் வெல்ல முடியாதென அவர்கள் காலத்தில் கூறப்பட்டு வந்தது. நாறு சாஹிபின் லாயங்களில் நுட்பமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உத்தம ஜாதி அசுவங்களே நிறைந்திருந்தன. மற்றும் அவரிடம் ஏராளமான வேட்டை நாய்கள், ஒட்டகங்கள், அழகிய மான்கள் முதலியனவும் இருந்தன. அவரது ஆயுதசாலையோ உயர்ந்த எஃகுப் பட்டாக்கத்திகளாலும் துப்பாக்கிகளாலும் பலவிதப் பீரங்கிகளாலும் நிறைந்திருந்தது.

அரண்மனையின் பிரதான மண்டபத்தைச் சத்திரபதி சிவாஜியின் படமும், மகாராஷ்டிர சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ள மற்ற வீர சிங்கங்களின் படங்களும் அலங்கரித்துக்கொண் டிருந்தன. முதலாவது பாஜி ராவ், மகா மேதாவியான மாதவர், ராஜ தந்திரியான நாறு பர்னவிஸ் முதலியோரின் படங்களைப் பார்த்தபோதெல்லாம் நாறுவின் மனத்தில் எத்தகைய உணர்ச்சி வெள்ளம் பொங்கி யிருக்கும்? பிரசித்தி பெற்ற வீரர்களின் வம்சத்தில் நாம் பிறந்தோம் என்ற உணர்ச்சி அவரது மனத்தில் எத்தகைய சிந்தனைச் சுழல்களை உண்டு பண்ணி யிருக்கும்? தம் முன்னோர்கள் முதல் மந்திரிகளாகவும் மண்டலாதிபதிகளாகவும் இருந்த ஒரு சாம்ராஜ்யத்துக்குப் பதிலாக, விரோதிகளிடம் உபகாரச் சம்பளத்துக்கு விண்ணப்பம் செய்துகொள்ளும்படியான இழி நிலைமை தமக்கு நேர்ந்ததைக் குறித்து அவரது மனம் எவ்விதம் துடித்திருக்கும்? அவரது இருதயம் என்ன பாடு பட்டிருக்கும்? எப்போதும் மகத்துவம் பொருந்திய சிவாஜியின் உருவத்தைத் தம் இருதய பீடத்தில் வைத்துக்கொண் டிருந்த நாறுவுக்கு அவ்வீர புருஷரின் அற்புதமான வீர சாகசங்களைப் பற்றிய கதைகள் எவ்வித ஆத்திரத்தையும், உறுதியையும், ஆங்கிலேயர்கள் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்ற உத்வேகத்தையும் எழுப்பியிருக்கும்?

உத்தமர்கள், உயிரைக் காட்டிலும் மானத்தையே பெரிதாக மதிப்பார்கள். நாறுவோ மகா உத்தமர். அவருக்கு மானந்தான் சிறந்த பொக்கிஷம். ஐரோப்பிய அதிகாரிகள் அனுப்பும் அழைப்பை அங்கீகரிக்க நாறு சகியார். ஏனெனில் பேஷ்வா என்ற ஹோதாவில் அவருக்கு மரியாதைக் குண்டுகள் போடப்பட வேண்டும். ஆனால் கம்பெனியார் அவ்விதம் அவரைக் கௌரவிக்க விரும்பவில்லை.

நாறு சாகிப் மிகவும் பெருந்தன்மை வாய்ந்தவர்; இரக்க சித்தம் உள்ளவர். எனவே அவர் தம் பிரஜைகளின் பேரபிமானத்தைப் பெற்றதில் ஆச்சரியம் எதுவுமில்லை. நன்றி கெட்ட, நாடு பிடிக்கும் ஆசையுள்ள வெள்ளையர்கள் தம்மை நாடி வந்தாலும் அவர்களை அன்புடன் உபசரிப்பது நாறுவின் விசேஷ குணங்களில் ஒன்றாகும். அவருடைய விருந்தினராக

வந்து, விலையுயர்ந்த சால்வை முதலிய பல சாமான்களும் பெற்றுச் சென்ற வெள்ளையர்களின் தொகைக்குக் குறைவில்லை. வெள்ளையர்களை அவர் அவ்வாறு உபசரித்து வந்தவரையில் ஆங்கில ஆடவர்களும் பெண்களும் அவரைப் பிரமாதமாகப் புகழ்ந்து வந்தார்கள். எனினும், நீதியை நிலைநிறுத்துவதற்காகவும் கொள்ளைக்காரர்களை ஒழிப்பதற்காகவும் நானு வாளை உருவியதும், அதே வெள்ளையர்கள் அவரை நாக்கில் நரம்பின்றித் தூற்றவும் துணிந்தனர்.

நானு சாஹிப் சிறந்த கல்விமான்; கலாவல்லவர். அதே சமயம் அவர் அரசியல் விவகாரங்களிலும் மிகுந்த அக்கறை காட்டி வந்தார். உலக நாடுகளில் ஏற்பட்டு வரும் மகத்தான மாறுதல்களை அறிந்துகொள்வதற்காக அவர் ஆங்கிலப் பத்திரிகைகளைத் தருவிக்க நேர்ந்தது. டாட் என்ற ஓர் ஆங்கிலேயர்தாம் அவரது முன்னிலையில் ஆங்கிலப் பத்திரிகைகளை வாசிப்பது வழக்கமாம்.

நானுவைக் காலியென்றும், . கொள்ளைக்காரரென்றும், பிசாசென்றும், சைத்தானென்றும் தங்கள் மனம் போனவாறு தூற்றியிருக்கும் வெள்ளைச் சரித்திராசிரியர்கள்கூட, அவரது மேதையையும் உயர்ந்த குணங்களையும் மறைக்க முடியாமல் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். அதிலிருந்தே நானுவின் தனிச் சிறப்பை எவரும் அறிந்துகொள்ளலாம். தமது தாய்நாட்டின் சுதந்தரத்துக்காக அவர் வெள்ளையர்களை எதிர்த்துப் போராடினார் என்பதற்காகவே அவரைப் பிசாசென்றும் சைத்தானென்றும் அயோக்கியத்தனமாகத் தூற்ற வெள்ளைச் சரித்திராசிரியர்கள் துணிந்தனர்.

இந்திய சுதந்தர விரோதிகளின்மீது நானு வஞ்சம் தீர்த்தது தவறா? அப்போது நானு தம் தேசத்தின் நரசிம்ம மந்திரமாகத் திகழ்ந்தார். அந்நியத் துரோகிகளை, சுதந்தரத்தின் விரோதிகளைக் கிழித்தெறிய முற்பட்டார். அவருடைய அந்தக் கைங்கரியம் ஒன்றே, இந்தியர்கள் அவரை என்றென்றும் தங்களுடைய இருதய பீடத்தில் வைத்துப் போற்றும்படி செய்திருக்கிறது.

இதையெல்லாம் படிக்கும்போது நானுவின் அழகிய கம்பீரமான உருவம், தலையில் முடியுடனும், மிகுந்த பலம் பொருந்திய திடகாத்திரத்துடனும், பிரகாசமான கண்களுடனும், வெள்ளையர்களின் துரோகத்தால் பொங்கிய கோபத்துடனும், இடையில் தொங்கும் மூன்று லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள வாளுடனும் நம் கண்முன் நிற்பதுபோல் தோன்றுகிறது அல்லவா?

கடைசியில் திமிர்பிடித்த வெள்ளையர்களிடமிருந்து செய்தி வந்து சேர்ந்தது. பாஜி ராவுக்குக் கொடுக்கப்பட்டு வந்த உபகாரச் சம்பளத்தில் நானுவுக்குச் சிறிதும் உரிமையில்லை என்பதுதான் அந்தச் செய்தி! அது மட்டுமல்ல, பிரம்மாவர்த்தத்தில் அவருக்குள்ள உரிமையையும் நானு விட்டுவிட வேண்டு

மென்றும் வெள்ளையர்கள் கட்டளை பிறப்பித்து, அவர் அவ்விதம் உடனே விட்டுக் கொடுப்பதுதான் 'நீதி' என்றும் கூறினர்.

இவ்வாறாக மகாராஷ்டிரத்தின் இருதயத்தில் வெள்ளையர்களின் கத்தி ஊடுருவிப் பாய்ந்தது. அந்த அநீதிக்குப் பதிலளிப்பதற்கான ஏற்பாடுகள் வெகு துரிதமாக ஆரம்பமாயின. வெள்ளையர்கள் செய்தது நீதியா, அநீதியா என்பதைக் கான்பூர்ப் போர்க்களத்தில் முடிவு செய்ய இந்திய வீரர்கள் உறுதி கொண்டனர்.

நானா சாஹிபின் அரண்மனையில் போருக்கான ஏற்பாடுகள் வெகு துரிதமாக நடந்துகொண் டிருக்கையில், அவருடைய சகோதரியான லக்ஷ்மிபாய் சோம்பேறித்தனமாக உட்கார்ந்திருக்கவில்லை. அங்கும் அதே பிரச்னை எழும்பிவிட்டது. 1858-ஆம் ஆண்டில் லக்ஷ்மிபாயின் கணவர் திடீரென மரணமடையவே, லக்ஷ்மிபாய் தமது அன்புக்குப் பாத்திரமான தாமோதரன் என்னும் குழந்தையைச் சுவீகாரம் செய்துகொண்டார்.

ஆனால் ஆங்கிலேயர்கள் அவருடைய சுவீகார உரிமையை ஒப்புக்கொள்ள மறுத்து, ஜான்ஸியையும் தங்கள் ராஜ்யத்துடன் சேர்த்துக்கொள்ளப்போவதாக அறிவித்தனர். மற்றப் பிரதேசங்களைப்போல் ஜான்ஸியையும் சுலபமாகக் கைப்பற்றி விடலாமென வெள்ளையர்கள் எண்ணினார்கள். நானாவின் வீர சகோதரியான லக்ஷ்மிபாய், நாகபுரி பங்கா பாய் அல்ல என்பதை ஆங்கிலேயர்கள் அறிந்துகொள்ளவில்லை!

ஆங்கிலேயர்களின் உத்தரவைக் கண்டு ஜான்ஸி ராணி சிறிதும் அஞ்சவில்லை. அவர்களுடைய நீசத்தனமான பேராசையை அறிந்ததும், அவரது உள்ளத்திலிருந்து தேசபக்தி உணர்ச்சி பொங்கியது. "எனது ஜான்ஸியை வெள்ளையர்களுக்குக் கொடுப்பதா? ஒருகாலுமில்லை! ஆண்மையுள்ளவர்கள் ஈட்டிமுனையில் அதை எடுத்துக் கொள்ளட்டும்!" என்று கர்ஜித்தார் லக்ஷ்மிபாய்.

## 6

## நவாபின் வீழ்ச்சி

இந்தியாவில் அப்போது நடந்த கொடுமைகளுக்கெல்லாம் டல்ஹௌஸிதான் பொறுப்பாளி என்று கூறி முழுக் குற்றத்தையும் அவன்மீது சுமத்துவது சரியாகாது. அவனன்றி வேறு எவன் அந்தப் பதவிக்கு வந்திருப்பினும், டல்ஹௌஸியைப்போலவேதான் நடந்துகொண் டிருப்பான்.

பிரிட்டிஷ் அதிகாரிகளால் ஏற்கனவே துரோகம், கொள்ளை, கொலை இவற்றை அடிப்படையாகக் கொண்ட கொடிய முறை யொன்று வகுக்கப்பட்டு விட்டது. வெள்ளை அதிகாரிகளும் பரம்பரையாக அம்முறையைப் பின்பற்ற ஆரம்பித்துவிட்டார்கள். இந்தியாவில் நடந்த அட்டூழியங்களுக் கெல்லாம் பொதுவாகப் பிரிட்டிஷ் அதிகாரிகள் எல்லாருமே பொறுப்பாளிகள்தாம். ஏற்கனவே வெள்ளையர்கள் தங்களுடைய நயவஞ்சகத்தினாலும் துரோகத்தினாலும் இந்தியாவை நசுக்கு வதற்கான அஸ்திவாரம் போட்டு வைத்திருந்ததால்தான் டல்ஹௌஸி தன் பேனாமுனையினால் எளிதில் பல பிரதேசங்களையும் ஆக்கிரமித்துக் கொள்வது சாத்தியமாயிற்று.

1764-ஆம் வருஷந்தான் கம்பெனிக்கும் அயோத்தி நவாபுக்கும் முதல் முதலாகத் தொடர்பு ஏற்பட்டது. அன்றையிலிருந்தே கம்பெனியார மிகவும் செழுமையான அயோத்தியை ஆக்கிரமித்துக்கொள்ளும் சூழ்ச்சியில் இறங்கிவிட்டனர். நவாபுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகக் கூறி, வெள்ளையர்கள் தங்களுடைய சேனைகளை அயோத்தியில் கொண்டுவந்து வைத்ததுடன், அவற்றின் செலவுக்காக நவாபை வற்புறுத்தி அவரிடமிருந்து வருஷம் பதினாறு லட்சம் ரூபாய்க்குமேல் தண்டவும் ஆரம்பித்தனர். இவ்விதக் கட்டாய 'ராணுவப் பாதுகாப்பி'னால் நவாப்பின் கஜானா காலியாயிற்று. அப்போது ஆங்கிலேயர்கள் நவாபுக்கு மற்றொரு யோசனையும் கூறினார்கள். உண்மையில் அந்த யோசனை நவாபைக் கட்டாயப்படுத்தும் ஒரு கட்டளையே ஒழிய வேறொன்றும் அல்ல. சுதேசிச் சிப்பாய்களை யெல்லாம் நீக்கிவிட்டு அவர்களின் ஸ்தானத்தில் ஆங்கிலச் சிப்பாய்களை நியமித்தால், பின்னும் அதிகத் 'திறமை'யுடன் நவாபின் ராஜ்யத்தைப் பாதுகாக்க முடியும் என்பதே அந்த நயவஞ்சகர்கள் கூறிய யோசனையாகும்!

ஆங்கிலச் சேனைகள் அடங்கிய ஒரு பகுதியின் செலவையே சமாளிக்க முடியாத நவாப், முழுவதும் ஆங்கிலேயர்கள் அடங்கிய சேனைக்கு எவ்வாறு நிரந்தரமாகச் சம்பளம் கொடுத்துவர முடியும்? அவரால் முடியாது என்பதை ஆங்கிலேயர்களும் அறிவர். அறிந்தேதான் அவ்விதம் செய்தனர். கஜானா காலியாக இருந்தால் என்ன? நவாபிடம் மிகச் செழுமையான பூமி இல்லையா? அதை அபகரித்துக்கொள்ளவே ஆங்கிலேயர்கள் அந்தப் பளுவை நவாபின்மீது சுமத்தி, வருஷந்தோறும் இரண்டு கோடி ரூபாய் வருமானம் கிடைக்கக்கூடிய பூமியையும் அவரிடமிருந்து அபகரித்துக்கொண்டனர். ரோஹில்கண்ட், தோவாப் இவ்விரு பிரதேசங்களையும் ஆங்கிலேயர்கள் இவ்வாறு ஆக்கிரமித்துக்கொண்டார்கள்.

அயோத்தி சம்ஸ்தானத்திலிருந்து இந்தப் பிரதேசங்களைக் கொள்ளையடித்தபின், அவர்கள் நவாபுடன் ஓர் ஒப்பந்தமும் செய்துகொண்டார்கள். ரோஹில்கண்ட், தோவாப் இவ்விரு இடங்களிலும் தமக்குள்ள எல்லா உரிமைகளையும் நவாப் விட்டுக்கொடுத்துவிட்டதால், மீதியுள்ள பிரதேசங்களெல்லாம்

பரம்பரையாக நவாபின் குடும்பத்தைச் சேர்ந்தவை என்பதே அந்த ஒப்பந்தத்தின் முக்கிய ஷரத்தாகும். நவாப் தம் பிரஜைகளைத் துன்புறுத்தக் கூடாதென்றும் ஒரு ஷரத்து அந்த ஒப்பந்தத்தில் சேர்க்கப்பட்டிருந்தது! இந்தியாவையே கொடுந் துன்பத்திற்கு உள்ளாக்க வந்த ஆங்கிலேயர்கள், அந்த ஒப்பந்தத்தில் அவ்வித ஒரு விதியைச் சேர்த்தது வேடிக்கை அல்லவா?

1801-ஆம் வருஷம் அந்த உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. இனி நவாபைத் தங்கள் இஷ்டப்படி ஆட்டிவைக்கலாம் என்ற உத்தேசத்துடன் ஆங்கிலேயர்கள், தங்களுக்குத் தேவையாக இருந்தபோதெல்லாம் அவரை வற்புறுத்திக் கோடிக்கணக்கான தொகை பெற்று வந்தனர். அயோத்தி ராஜ்யமே கம்பெனியைச் சேர்ந்த ராணுவ அதிகாரிகளின் கைக்கு வந்துவிட்டது எனலாம். கம்பெனியார் கேட்ட போதெல்லாம் கோடிக்கணக்கான தொகை கொடுக்க வேண்டியிருந்த நவாப், தம் குடிகளிடையே சமாதானமும் சந்தோஷமும் ஏற்படும்படி எவ்வாறு செய்ய முடியும்?

மக்களின் நலனுக்கு மிக அவசியமாக இருந்த கோடிக் கணக்கான தொகையைச் சுரண்டிவந்த கம்பெனியார், அதே சமயத்தில் மக்களிடையே அமைதியும் ஆனந்தமும் ஏற்படுவதற்கு உற்ற முறைகளைக் கைக்கொள்ளும்படி நவாபை வற்புறுத்தி வந்தனர்! கம்பெனியாரின் கொள்ளை காரணமாக மக்களின் சுபிட்ச வாழ்க்கைக்கு அவசியமான சீர்திருத்தங்களை நவாபினுல் செய்ய முடியவில்லை. ஜனங்களின் நன்மைக்கான பழைய சட்டங்களை யெல்லாம் கம்பெனியார் ரத்துச் செய்து, புதிய சட்டங்களையும் புகுத்த முற்பட்டனர்.

பத்து வருஷங்கள் கழித்துக் கம்பெனியாரே தங்கள் பிழையை உணர்ந்து அந்தச் சட்டங்களைத் திருத்தும்படி நேர்ந்ததென்றால், அவற்றால் ஜனங்கள் எவ்வளவு துன்பத்துக்கு உள்ளாகியிருக்கவேண்டும் என்பதை ஊகித்துக்கொள்ளலாம். கம்பெனியார், சட்டத்துக்கு விரோதமாக ஒரு புறம் உள்நாட்டு விஷயங்களில் தலையிட்டு வந்ததுடன், மற்றொரு புறம் நவாபின் பிரஜைகள் எவ்விதப் புகாரும் கூற இடமிராதவாறு நடந்துகொள்ள வேண்டுமென அவரை வற்புறுத்தியும் வந்தனர்.

கம்பெனியார் வற்புறுத்திப் பெற்ற தண்டத் தொகைகள் காரணமாக நவாபின் கஜானு காலியாயிற்று. அது காலியான பிறகுங்கூடக் கம்பெனியாரின் பேராசை தணியவில்லை. மேலும் அவர்கள் தங்களுக்குப் பெருந்தொகை வேண்டுமென்று நவாபை வற்புறுத்தியதால், நவாப் அவர்களின் கொடிய பேராசையைத் தணிக்க வேறு வழியின்றி, தம் பிரஜைகளுக்கு வரி விதிக்கும்படி நேர்ந்தது. புதிய வரிகளைக் குறித்து மக்கள் புகார் கூற முற்படவே, நவாபின் ஆட்சிமுறை ஊழலாக இருக்கிறதென்று கம்பெனியார் குற்றஞ் சாட்ட ஆரம்பித்தனர்!

இவ்விதமாக நவாபின் நிர்வாகம் ஸ்தம்பிக்கும்படி கம்பெனியார் சூழ்ச்சி செய்தனர். அநீதியை எதிர்த்தும் நிர்வாக

முறையை மாற்றும்படியும் ஜனங்கள் கிளர்ச்சி செய்தபோதெல்லாம், அவர்களை அடக்கி நசுக்க வெள்ளையர்களின் துப்பாக்கிகளும் கத்திகளும் தயாராக இருந்தன. அரசியலை மாற்ற நவாபுக்கோ ஜனங்களுக்கோ சிறிதும் இடம் கொடுக்காத கம்பெனியாரின் கூக்குரல், அதாவது நிர்வாகம் சீர்திருந்த வேண்டுமென்ற கூக்குரல் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது.

'ஜனங்கள் சமாதானமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதற்கான அரசியல் திட்டத்தை அமலுக்குக் கொண்டுவருவதற்கு உற்ற உண்மையான, பிரயோஜனகரமான வழி பிரிட்டிஷ் ரெஸிடென்டைத் திருப்பி அழைத்துக்கொண்டு நவாபுக்குத் தமது சம்ஸ்தான நிர்வாகத்தில் பூரண சுதந்தரம் அளிப்பது தான். ஆனால் கம்பெனியார் அவ்விதம் செய்யத் தவறிவிட்டனர். நவாபின் சம்ஸ்தானத்தில் அமைதி குலைந்ததற்குக் கம்பெனியார் தாம் முற்றும் பொறுப்பாளிகள் ஆவர். அது சம்பந்தமான குற்றம் அவர்களைத் தவிர வேறு எவரையும் சாராது' என்று வெள்ளைச் சரித்திராசிரியர் சார்லஸ் பால் குறிப்பிட்டிருக்கிறார். கொடிய வாரன் ஹேஸ்டிங்ஸும் தன் சாட்சியத்தில் அந்த உண்மையை ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொண்டான்.

நவாபின் நிர்வாகத்தைச் சீர்குலைத்த கம்பெனியார், கடைசியில் அவரை மிரட்டவும் முற்பட்டனர். ஜனங்கள் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற முறையில் நவாப் ராஜ்ய நிர்வாகம் செய்யாவிட்டால், அது 1801-ஆம் வருஷத்திய உடன்படிக்கையை மீறியதாகும் என்றார்கள். இது காரணமாக 1801-ஆம் வருஷத்திய உடன்படிக்கை ரத்தாகி, 1837-இல் புதிய உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது. அதன்படி நவாபின் அதிகாரம் முற்றும் குறைந்துவிட்டது எனினும், அதில் கையெழுத்திட நவாப் சிறிதும் தயங்கவில்லை. ஏனெனில் வெள்ளையர்களின் தந்திரமும் அக்கிரமமும் நிறைந்த 1801-ஆம் வருஷ உடன்படிக்கையிலிருந்து எப்படியாவது தாம் விடுதலை அடைந்தால் போதும் என்று அவர் கருதினார்.

1847-ஆம் வருஷம் வாஜித் அலி ஷா அயோத்தி நவாப் பட்டத்துக்கு வந்தார். தமது ராஜ்யத்தின் வாழ்க்கையையே பாழாக்கி வரும் விஷத் தன்மை பொருந்திய வெள்ளைப் புழுவை அடியோடு அழித்துவிட வேண்டுமென்று புதிய நவாப் முதலிலிருந்தே திடசங்கல்பம் செய்துகொண்டார். அந்த நோக்கத்துடன் அவர் தமது ராஜ்யத்தின் உயிர்நாடியான ராணுவத்தைச் சீர்திருத்த முற்பட்டார்.

இளைஞரான புதிய நவாப் சிப்பாய்களிடையே ஒழுங்கு நிலவுவதற்கான கண்டிப்பான விதிகளை அமலுக்குக் கொண்டு வந்ததுடன், அவர்கள் தினந்தோறும் தேகப்பயிற்சி செய்வதைத் தாமே நேரில் பரிசோதிக்கவும் முற்பட்டார். நவாபின் முன்னிலையில் சகல ராணுவப் பிரிவினரும் தினசரி காலையில் தேகப்பயிற்சி செய்துதான் தீரவேண்டும். துருப்புக்களின் பிரதம தளபதி என்ற ஹோதாவில் அவ்வமயம் நவாப் ராணுவ உடையுடன் வந்து நிற்பார். குறித்த நேரத்தில் அணிவகுப்பு மைதானத்துக்கு

வராத பிரிவினருக்கு இரண்டாயிரம் ரூபாய் அபராதம் என்று விதி ஏற்பட்டது. அச்சமயம் தாம் வராவிடினும் தாமும் அந்தத் தொகையை அபராதமாகச் செலுத்த வேண்டுமென்று நவாப் விதித்துக்கொண்டார்! இந்த உண்மையை மெட்காப் என்ற வெள்ளைச் சரித்திராசிரியர் தமது நூலில் வெளியிட்டிருக்கிறார்.

நவாப் இவ்வாறு தமது நிலைமையைப் பலப்படுத்திக் கொண்டு வருவது கம்பெனியாருக்குக் கலக்கத்தை உண்டு பண்ணியது. நவாப் ராணுவ பலத்துடன் விளங்குவதை அவர்கள் சகிப்பார்களா? புதிய நவாபின் நடவடிக்கைகளைத் தடுத்து, பிரிட்டிஷ் ரெஸிடெண்ட் ஓர் உத்தரவு பிறப்பித்தான்: நவாப் ராணுவ நடவடிக்கைகளை யெல்லாம் விட்டுவிட வேண்டும் என்பதே அவனுடைய கட்டளையாகும். ராணுவத்தின் பலத்தை அதிகப்படுத்த வேண்டுமென நவாப் விரும்பினால், கம்பெனியார் தங்களிடமுள்ள துருப்புகளை அதிகரித்துக்கொள்ளத் தயாராக இருப்பதாகவும், அதிகப்படியான துருப்புகளின் பராமரிப்புக்காக ஒவ்வொரு வருஷமும் நவாப் மேற்கொண்டு குறிப்பிட்ட தொகை கொடுத்துவிட்டால் போதுமென்றும் வெள்ளையர்கள் யோசனை கூறினர்!

அதைக் கேட்டதும் இளைஞரான நவாபின் ரத்தம் கொதித்தது. தமது ராஜ்யத்தில் தேகப்பயிற்சி செய்யக்கூட எவருக்கும் உரிமை இல்லையென்று வெள்ளையர்கள் கூறியது, அவருக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணியது. ஆயினும் என்ன செய்வது? தங்களுடைய நிலைமையைப் பலப்படுத்திக்கொண்டிருந்த வெள்ளையர்களுக்குக் கீழ்ப்படிவதைத் தவிர வேறு வழியில்லை. அதனால் நவாப் தமது ராணுவ நடவடிக்கைகளை யெல்லாம் கைவிட்டுச் சோம்பேறி வாழ்க்கை நடத்தும்படி நேர்ந்தது. தம் பிரஜைகளின் சந்தோஷ வாழ்க்கைக்கு உரிய முறைகளை நவாப் கைக்கொள்ள வேண்டுமென வற்புறுத்துவதையும் 'தர்ம சிந்தனை' யுள்ள கம்பெனியார் கைவிடவில்லை!

தம் பிரஜைகள் சந்தோஷமாக இருப்பதற்கான முறைகளைப்பற்றி ஆலோசிக்கும் சிரமத்தை, இனி நவாப் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை! ஏனெனில் டல்ஹௌஸி இந்தியாவுக்கு வந்துவிட்டான் அல்லவா? இந்தியாவிலுள்ள சுயேச்சையான சகல சம்ஸ்தானங்களின் நிர்வாகமும் திருப்திகரமாகவும், ஜனங்களுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணும் விதத்திலும் நடைபெற வேண்டுமென்ற பொறுப்பையெல்லாம் 'தர்ம சிந்தனை' யுள்ள டல்ஹௌஸி தன் தலையில் சுமத்திக்கொண்டான்! அவன் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்ததன் ஒரே நோக்கம், இந்திய ஜனங்கள் சந்தோஷ வாழ்க்கையை நடத்துவதற்கு உதவியாகத் தொண்டு புரிய வேண்டும் என்பதுதான்!

அரசியல் சூழ்ச்சியில் கைதேர்ந்த டல்ஹௌஸி இந்தியாவுக்கு வந்ததும், நவாபுடன் வெள்ளையர்கள் செய்துகொண்ட 1837-ஆம் வருஷத்திய உடன்படிக்கை ஒரு பெரும் தவறு என்பதை உணர்ந்துகொண்டான். பழைய உடன்படிக்கையை ரத்துச்

செய்தபோது கிடைத்த ஓர் அபூர்வமான சந்தர்ப்பத்தைக் கம்பெனியார் இழந்துவிட்டதைக் குறித்து வருந்திஞன். நவாபின் நிர்வாகம் சரிவர நடைபெறவில்லை என்று கூறி, அப்போதே அயோத்தி சம்ஸ்தானத்தைக் கம்பெனியார் தங்கள் வசம் எடுத்துக்கொண்டிருக்கலாம். நவாபின் பிரஜைகள் சந்தோஷமாக இருக்கவில்லை என்று கம்பெனியார் எந்த நேரத்திலும் கூறி அயோத்தியை அபகரித்துக்கொள்ள 1801-ஆம் வருஷத்திய உடன்படிக்கை சந்தர்ப்பம் அளித்தும், அவர்கள் அவ்விதம் செய்யாதது பெரும் தவறு அல்லவா!

அந்தத் தப்புக்குப் பரிகாரம் என்ன? திடுக்கிடத்தக்க ஒரு பெரும் புளுகைத் தவிர வேறு வழி இல்லை! 'உடன்படிக்கையா? என்ன, ஆச்சரியமாக இருக்கிறதே! 1837-இல் கம்பெனியார் நவாபுடன் எவ்வித உடன்படிக்கையும் செய்துகொள்ள வில்லையே!' என்று டல்ஹௌஸி கலப்பற்ற கொடிய ஒரு பொய்யைக் கூசாது கூறிவிட்டான்!

எனினும் அந்த உடன்படிக்கையை 1847-இல் ஹார்ட்டிங்டனும், 1851-இல் கர்னல் ஸ்லீமனும் பகிரங்கமாக ஒப்புக்கொண்டுள்ளனர். 1853-ஆம் வருஷம் அதைப்பற்றி வெள்ளை அதிகாரிகள் குறிப்பிட்டதுடன் கம்பெனியாரின் தஸ்தாவேஜுகளிலும் அந்த உடன்படிக்கையைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தது எல்லோரும் அறிந்ததே. அப்படியிருந்தும் 183 -இல் நவாபுடன் எவ்வித உடன்படிக்கையும் செய்துகொள்ளவே இல்லை என்று கம்பெனியார் சாதித்துவிட்டனர். நவாபின் ஆட்சி முறை ஜனங்களுக்குச் சந்தோஷகரமானதாக இராவிடில், அவரது ராஜ்யத்தைக் கம்பெனியார் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக்கொள்ளுவார்கள் என்றும் வாஜித் அலி ஷா நவாபுக்குப் பட்டவர்த்தனமாக அறிவிக்கப்பட்டது.

டல்ஹௌஸி இந்தியாவுக்கு வருமுன்னரே அயோத்தியை அபகரித்துக்கொள்ளக் கம்பெனியார் தீர்மானித்துவிட்டனர் என்பதை நாம் மறக்கக் கூடாது. அயோத்தியைக் கபளீகரம் செய்வதற்கான வழிகளை, டல்ஹௌஸிக்கு முன்னிருந்தவர்கள் செப்பனிட்டு வைத்திருந்தனர். அந்தச் சூழ்ச்சியை இறுதியாக அமலுக்குக் கொண்டுவரும் 'பெருமை' டல்ஹௌஸிக்குக் கிடைத்தது!

யுத்தம் செய்து அவர்கள் அயோத்தியைக் கைப்பற்றுவதென்ற பிரச்னை அப்போது எழ இடமில்லை. பாஞ்சாலத்தையும் பிரம்ம தேசத்தையும் (பர்மா) கைப்பற்றியதுபோல, துரோகம் செய்து அயோத்தியைக் கைப்பற்றுவது முடியாத காரியம். ஏனெனில் வெள்ளையர்களுக்கு ஆதரவாக அயோத்தியில் ஒரு நபரைக்கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. நவாப், தங்களுக்கு விரோதமாக நடந்துகொண்டார் என்றும் வெள்ளையர் கூறத் துணியவில்லை. ஏனெனில் அவர் எந்தச் சமயத்திலும் வெள்ளையர்களுக்கு உதவியளித்தே வந்தார். அவர்கள் லட்சக் கணக்கில் பணம் கேட்டபோது பணமும், மற்றும் வெள்ளையர்களின்

யுத்தங்களுக்குச் சாதகமாகப் பண்டங்கள் கேட்டபோது பண்டங்களும் நவாப் தங்கு தடையின்றிக் கொடுத்து வந்தார்.

நாகபுரியில் வெள்ளையர்கள் செய்ததுபோல் அயோத்தி நவாபுக்கு வாரிசு இல்லை என்றும் சொல்வதற்கில்லை. ஏனெனில் நவாபுக்கு ஏராளமான குழந்தைகள் இருந்தனர். சொந்த மனைவிக்குப் பிறந்த சட்டபூர்வமான குழந்தைகள்! ஜான்ஸியில் ஏற்பட்டதுபோல் சுவீகாரப் பிரச்னையும் அங்கே எழவில்லை. இளைஞரான நவாப் முந்திய நவாபின் சட்ட பூர்வமான புதல்வர் என்பதுடன், பல வருஷங்கள் வரையில் சிம்மாசனத்தில் வீற்றிருந்து ராஜ்யாதிகாரத்தையும் நடத்தியவர். அதனால் அவர்மீது வெள்ளையர்களுக்கு எத்தகைய குற்றத்தையும் சுமத்த முடியவில்லை.

எனினும் நவாப் செய்த ஒரு 'பெரும் குற்றம்' மன்னிக்க முடியாததே! அயோத்தி சம்ஸ்தானத்தை அவர் மிக மிகச் செழுமையாகவும் சகல வளங்களுடனும் வைத்திருந்தார். எங்கே பார்த்தாலும் பயிர் பச்சைகள் கண்களைக் கவர்ந்தன. அது ஒரு பெரும் குற்றம் அல்லவா! அந்தச் சம்ஸ்தானத்தின் நீர்வளம், நிலவளம் பற்றியும், அதன் இயற்கை வனப்புப்பற்றியும் ஆங்கில அரசாங்கத்தின் அறிக்கைகள் பிரமாதமாகப் புகழ்ந்தன. அப்படிப்பட்ட ஒரு சம்ஸ்தானத்தை, கொள்ளைக்காரர்களான வெள்ளையர்கள் எப்படியாவது அபகரித்துவிட வேண்டுமென்று சூழ்ச்சி செய்ததில் ஆச்சரியம் இல்லை.

ஓர் இந்திய நவாப் அவ்வளவு அழகிய பிரதேசத்துக்கு அதிபராக இருப்பதைப் பொறுமையும் பேராசையும் சுயநலமும் உருவெடுத்து வந்த வெள்ளையர்கள் எவ்விதம் சகித்துக் கொண்டிருக்க முடியும்! 1856-ஆம் வருஷம் டல்ஹௌஸியிடமிருந்து ஒரு கட்டளை பிறந்தது. அயோத்தியும் வெள்ளையர்களின் வசமாயிற்று. அயோத்தியை அபகரித்ததற்கு வெள்ளையர்கள் காரணம் கூறாமல் இல்லை. நவாபின் நிர்வாகம் திருப்திகரமாக இல்லை என்பதுதான் அவர்கள் கூறிய காரணம்!

சமாதானமே உருவெடுத்த அந்த நவாபை வெள்ளையர்கள் இவ்விதம் ஒடுக்கினர். அடுத்த வீட்டுக்காரர் தமது குடும்பத்தைச் சரிவர நிர்வகிக்கவில்லை என்பதற்காக, அவருடைய கால்களையும் கைகளையும் கட்டி, வாயில் துணியை அடைத்து, அவருடைய சொத்துக்களை யெல்லாம் கொள்ளையிட அந்நியர் எவருக்காவது உரிமை உண்டா? ஆனால் அவ்விதம் செய்ய வெள்ளையர்கள் சிறிதும் தயங்கவில்லை!

டல்ஹௌஸியின் தாசனான ஆர்னல்ட் என்ற ஒரு சரித்திராசிரியன் நவாப்மீது சாட்டியுள்ள குற்றங்களைப் பாருங்கள்: 'நவாப் தம் வேலையாட்களுக்குச் சால்வைகள் பரிசளித்தார். சம்ஸ்தானத்தில் ஓர் உற்சவத்தின்போது வாண வேடிக்கை நடத்தும்படி செய்தார். இவைகளெல்லாம் சகிக்க முடியாத குற்றங்கள் அல்லவா!'

இங்கிலாந்தில் மன்னர்களும் பிரபுக்களும் செய்த அக்கிரமங்களும் அட்டூழியங்களும் படலம் படலமாக எழுதப்பெற்றுள்

ளன. அவை யெல்லாம் வெறும் புகார்கள் அல்ல; ஆதார பூர்வ மான குற்றச் சாட்டுகள். நாகரிக உலகையே திடுக்கிடச் செய்யும் குற்றங்கள். அப்படியிருந்தும் அத்தகையோருடைய சொத்துகளையும் பூமிகளையும் எவரும் அபகரித்துக்கொண்ட தாகத் தெரியவில்லை.

'அயோத்தியை அபகரித்துக் கொள்க' என்ற உத்தரவு டல்ஹௌஸியிடமிருந்து கிடைத்ததும் பிரிட்டிஷ் ரெஸிடென்ட் நவாபின் அரண்மனைக்குச் சென்று, கம்பெனியாரிடம் தமது ராஜ்யத்தை ஒப்பிக்கத் தாம் விரும்புவதாகக் குறிப்பிட்ட ஒரு பத்திரத்தில் கையெழுத்து இடவேண்டும் என்று நவாபை வற் புறுத்தினான். தாங்கள் பலாத்காரமாக அயோத்தியை அபகரித்த தாக யாரும் நினைக்கக் கூடாது என்பதற்காகவே, பிரிட்டிஷ் ரெஸிடென்ட் அவ்வாறு ஒரு தந்திரத்தைக் கையாண்டான்.

அந்தப் பத்திரத்தை வாசித்த நவாப் அதில் கையெழுத் திட அறவே மறுத்துவிட்டார். நவாபை அதில் கையெழுத் திடும்படி செய்வதற்காக பிரிட்டிஷ் ரெஸிடென்ட், ராணிக்கும் நவாபின் மந்திரிக்கும் லஞ்சம் கொடுக்க முயன்றதுடன், நவாப் அதில் கையெழுத்திடாவிடில் அவருக்கு உதவித்தொகை யும் கொடுக்கப்பட மாட்டாதென மிரட்டினான். அதைக் கேட்டு நவாப் துக்கம் தாங்க முடியாமல் கண்ணீர் விட்டார்.

அது பயத்தினாலோ கோழைத்தனத்தினாலோ பொங்கிய கண்ணீர் அல்ல. அயோத்தி நவாபுகள் செய்துள்ள பேருதவிக் குப் பிரதியாக என்றென்றும் நன்றி செலுத்தவேண்டிய வெள்ளை யர்கள் கொடும் துரோகத்தில் ஈடுபட்டதைக் குறித்து வடித்த ரத்தக் கண்ணீராகும் அது. ஆனால் அதை யெல்லாம் கண்டு கன்னெஞ்சனான ரெஸிடென்டின் மனம் இரங்கிவிடுமா?

மூன்று நாட்கள் கழிந்தன. பொய்க்கூற்று அடங்கிய அந்தப் பத்திரத்தில் கையெழுத்திட நவாப் முற்றும் மறுத்துவிட் டார். அவ்வளவுதான்! பிரிட்டிஷ் படைகள் உடனே தமது நாச வேலையை ஆரம்பித்துவிட்டன. நவாபை அலட்சியம் செய்து வெள்ளைத் துருப்புகள் லக்ஷ்மணபுரிக்குள் பிரவேசித்து, நவாபின் அரண்மனை உள்பட எல்லா இடங்களையும் ஆக்கிரமித் துக்கொண்டன; அரண்மனையும் அந்தப்புரங்களும் கொள்ளை யிடப்பட்டன; ராணிகள் அவமதிக்கப்பட்டனர்; நவாப், சிம்மா சனத்திலிருந்து பிடித்துத் தள்ளப்பட்டார்! அரண்மனைப் பிர தேசங்களெல்லாம் ஆங்கிலேயச் சிப்பாய்களின் குதிரை லாயங்க ளாக மாறின. அதுவரை நவாப் நடத்தி வந்த அதிருப்திகர மான ஆட்சி மறைந்து, ஆங்கிலேயர்களின் 'அற்புத ஆட்சி' இவ் வாறு வெகு விமரிசையாக ஆரம்பமாயிற்று!

அயோத்தி சம்ஸ்தானாதிபதி ஒரு முஸ்லிமாயினும், அவரது நிர்வாகத்தின் கீழ் இருந்த பெரும்பாலான ஜமீன்தார்களும் ஹிந்துக்களே ஆவர். அந்த ஜமீன்தார்களின் குடும்பங்களில் ஜாகீர்களும் தாலுக்தாரி உரிமைகளும் வாழையடி வாழையாகத் தொடர்ந்து அமலில் இருந்து வந்தன. ஒவ்வொரு ஜமீன்தாரின்

நிர்வாகத்திலும் நூற்றுக்கணக்கான கிராமங்களும் உண்டு. அவர்களுக்குச் சொந்தமாகக் கோட்டை கொத்தளங்களும் இருந்தன.

அவ்வளவு பலமும் செல்வாக்கும் உள்ள ஜமீன்தார்களைப் பார்த்து வெள்ளையர்கள் எவ்வாறு சகித்துக்கொண் டிருக்க முடியும்? அவர்கள் அந்த ஜமீன்தார்கள்மீதும் தங்களுடைய நாகபாசத்தை வீசினார்கள். ஜமீன்தார்களின் செல்வாக்கைச் சீர்குலைக்க வேண்டும்; சுபிட்ச நிலையில் இருந்துவந்த அவர்களைக் கொடிய வறுமைக்கு உள்ளாக்க வேண்டும்.—இதுதான் கம் பெனியார் நிறைவேற்ற முற்பட்ட அடுத்த வேலையாகும்.

அந்த நோக்கம் பூர்த்தியாவதற்காக, கம்பெனியாரின் நில வரி நிர்வாக இரும்பு உருளை ஜமீன்தார்களை நசுக்க ஆரம்பித் தது தாலுக்தார்கள் தங்கள் கிராமங்களை இழந்தனர்; அவர்க ளுடைய நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன; கோட்டை கொத்தளங்கள் இடிக்கப்பட்டுத் தரைமட்டமாயின. அயோத்தி முழுதும் ஜனங்களின் அழுகைக் குரலே வானளாவியது! நேற்று அமீராக இருந்தவர் கம்பெனியாரின் 'சிறந்த' ஆட்சி காரண மாக இன்று பக்கிரியானார்! பரம்பரையாகச் சுபிட்சமாகவும் கௌரவமாகவும் வாழ்க்கையை நடத்தி வந்த எத்தனையோ குடும்பங்கள், சொத்து சுதந்தரங்களை இழந்து கிராமம் கிராம மாக அலைந்த கோலம் சகிக்க முடியாது. பல குடும்பங்கள் இருந்த இடமே தெரியாமல் மறைந்து மண்ணோடு மண்ணாயின.

ஏழை விவசாயிகள், கிராமவாசிகள் முதலியோரின் நன் மைக்காகவே ஜமீன்தார்களையும் தாலுக்தார்களையும் ஒழிப்ப தாக வெள்ளையர்கள் கூறினர். கொடிய நிலச்சுவான்தார்களின் பிடியிலிருந்து ஏழை விவசாயிகளை விடுவிப்பதாகப் பறை சாற்றி னர். எனினும் வெள்ளை ஆஷாடபூதிகளின் பொய்க் கூற்றுகளை விவசாயிகளும் கிராமவாசிகளும் நம்பி மோசம் போய்விடவில்லை. அந்தக் கஷ்டத்திலும் அவர்கள் யஜமான விசுவாசத்துடன் இருந்தார்கள். வீடின்றி வறுமையால் வாடி வதங்கிய ஜமீன் தார்களுக்கும் தாலுக்தார்களுக்கும் அவர்கள் உணவளித்து உதவி செய்தார்கள். பணக்காரர்களின் பரிதாப நிலைமையைக் கண்டு ரத்தக் கண்ணீர் வடித்தார்கள்.

ஆங்கிலேயர்களின் அட்டூழியங்கள் காரணமாக நவாப் முதல் ஏழை விவசாயி வரையில் சகலரும், சகிக்க முடியாத துன் பத்தில் ஆழ்ந்தனர். கொள்ளை, வீடுகள் தகனம், அடக்குமுறை, கொடுங்கோன்மை முதலியவை எங்கணும் தாண்டவமாடின. பல இடங்கள் மயானம்போல் தோன்றின. நவாபின் 'அக்கிரம' ஆட்சி ஒழிந்து, கம்பெனியாரின் 'தர்ம' ஆட்சி இத்தகைய கோலங்களுடன் ஆரம்பமாயிற்று!

சுயாட்சிக்கும் அந்நிய ஆட்சிக்கும் உள்ள எல்லையற்ற வேற் றுமையை அயோத்தி ஜனங்கள் சில நாட்களுக்குள் நிதரிசன மாகத் தெரிந்துகொண்டார்கள். அடிமைகளாக வாழ்வதைக் காட்டிலும் உயிரை விடுவது ஆயிரம் மடங்கு சிறந்தது என்பதை

யும் உணர்ந்துகொண்டார்கள். இனி எவ்வளவு காலம் சுயேச்சையை இழந்து தவிப்பது என்ற ஏக்கம் அவர்களுக்கு ஏற்பட்டது. தங்களுக்கு இழைக்கப்படும் அவமதிப்புகளையும் தங்களுடைய வெட்கக்கேடான நிலைமையையும் வெறுத்து, மனம் புழுங்கினார்கள். டல்ஹௌஸிபோன்ற விஷப் பூச்சிகள் இருக்கும் வரையில், அவை தங்களை அடிக்கடி கொட்டி நரக வேதனைக்கு உட்படுத்தித்தான் தீரும் என்பதையும் உணர்ந்தார்கள். டல்ஹௌஸியை மாத்திரம் ஒழிப்பதால் பலன் ஏற்படாது; அந்த விஷப் பூச்சிகளின் கூட்டத்தையே வேரறுக்க வேண்டுமென்றும் உறுதிகொண்டார்கள். அவ்வாறு உறுதிகொண்ட அயோத்தி மக்கள் அந்நியர் ஆதிக்கத்தை அறவே ஒழித்துச் சுயராஜ்யம் பெறும் நோக்கத்துடன் தங்களுடைய வில்களில் நாண்களைப் பூட்டினர்.

அதே சமயம் வெள்ளையர்களும் சும்மா இருக்கவில்லை. இனும் கமிஷன் என்ற ஓர் இரும்பு உருளையானது, மற்ற மாகாணங்களிலுள்ள ஜமீன்தார்கள், வட்டம்தார்கள் முதலியோரை நசுக்க முற்பட்டது. முப்பத்தையாயிரம் பெரிய ஜாகீர்களில் ஐந்தில் மூன்று மடங்குக்குமேல் பத்து வருஷ காலத்துக்குள் வெள்ளையர்களால் அபகரித்துக் கொள்ளப்பட்டன என்றால், இனும் கமிஷனின் உண்மையான ரூபத்தை அறிந்துகொள்ளுவது கஷ்டமல்ல. மன்னர்களின் சிம்மாசனங்கள், சர்தார்களின் வட்டங்கள், ஜமீன்தார்களின் நிலங்கள், தாலுக்தார்களின் தாலுகாக்கள், ஜனங்களின் வீடுகள், கோயில்களுக்கு அளிக்கப்பட்டிருந்த மானியங்கள், விவசாயிகளின் வயல்கள் எல்லாம் வெள்ளையர்களின் கொள்ளை காரணமாக அதோகதியாயின. மக்களின் உயிர்கள்கூட அவர்களுக்குச் சொந்தமில்லை என்ற நிலைமை ஏற்பட்டது! பழைய சுதந்தர வாழ்க்கை இந்திய மக்களுக்குக் கனவுபோல் தோன்றியது. அந்நிய ஆட்சியும் அடிமைத்தனமும் ஜனங்களின் முன்னிலையில் நிர்வாண நடனம் புரிந்தன. ஆண், பெண், குழந்தைகள் சகலரும் வாழ்க்கையை வெறுத்தனர்! இந்திய மன்னர்களின் 'கொடுங்கோல்' மறைந்து, வெள்ளையர்களின் 'செங்கோல்' இவ்வித அலங்கோலத்துடன் ஆரம்பமாயிற்று!

## 7

## நெருப்பும் காற்றும்

சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளவற்றைப் போல் இன்னும் எண்ணற்ற எத்தனையோ அக்கிரமங்கள் நிகழ்ந்தன. கணக்கில் அடங்காத அட்டூழியங்களைக் குறிப்பிடுவதென்பது எவ்விதம் சாத்தியம்? அடிமை வாழ்வில் அவ்விதக் கொடுமைகளும் அநீதிகளும் நடந்துவருகையில்,

அவற்றின் கர்த்தாக்களுக்கு ஜனங்கள் எவ்விதம் தலை வணங்கிக்கொண்டிருக்க முடியும்? அவ்வாறு அடிபணிவது மதத்தையே அழிப்பதாகாதா? அடிமைத்தனத்தையும் பிறரை அண்டி வாழ்வதையும் கண்டிக்காத மதம் உலகில் உண்டா?

எல்லாவற்றையும் ஆட்டிவைக்கும் ஆண்டவனின் கட்டளைகளைப் பின்பற்றி எல்லோரும் பெரும் பேறு பெறுவதே உண்மையான மதத்தின் இறுதி லட்சியம். அவ்விதம் பரிபூர்ண நிலையை அடைவதற்கு உற்ற சக்தியுடனேயே அவர் சகல ஜீவராசிகளையும் சிருஷ்டித்துள்ளார். ஒரு மனிதர் பரிபூர்ணத்துவம் பெற வேண்டுமாயின், அவர் எல்லாவித அடிமைத்தளைகளிலிருந்தும் விடுதலை பெற வேண்டும். குறையுள்ளவன் நிறைந்தவனாக இருக்க முடியுமா? அதுபோலவே அடிமைத்தனத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஒரு தேசத்தில் குறைகளைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்?

நீதியின் நிறைவே கடவுள்; நீதி இன்மையே அடிமைத்தனம். சுதந்தரமாகிற அமுதமே கடவுள்; சுதந்தர சூனியமாகிற விஷமே அடிமைத்தனம். கடவுள் இருக்கும் இடத்தில் அடிமைத்தனத்துக்கு அணுவளவும் இடமில்லை; அடிமைத்தனம் இருக்கும் இடத்தில் தெய்வமோ தெய்வத் தன்மையோ இருக்க முடியாது. இறைவனுக்கு இடமிராத பிரதேசத்தில் மதத்துக்கும் இடமில்லை. சுருங்கக் கூறுமிடத்து, அநீதிக்கு நாற்றங்காலான அடிமைத்தனம் தாண்டவமாடும் இடத்தில் உண்மையான மதம் வாழ முடியாது. அடிமைத்தனம் நரகத்துக்கு நேர்ப் பாதை; உண்மையான மதம் சுவர்க்கம் பெற உற்ற வழி. அடிமை விலங்குகளைத் தகர்த்து எறிந்தாலன்றி ஆண்டவனை அடைவது ஆகாத காரியம்.

இதுதான் ஸ்ரீ சமர்த்த ராமதாசர் சிவாஜிக்குச் செய்த உபதேசம்! இதுதான் ஸ்ரீ பிராணநாதர் சத்திரசாலனுக்குச் செய்த உபதேசம்! மதத்தைக் காப்பாற்றச் சுயராஜ்யம் பெற வேண்டும். அவர்களின் உபதேச தத்துவம் இதுதான். அதாவது உண்மை மதத்துக்கு அஸ்திவாரமான சுயராஜ்யத்துக்காகவும் சுதந்தரத்துக்காகவும் போராட வேண்டும்; உயிர்த்தியாகம் செய்ய வேண்டும். அவர்கள் உபதேசம் செய்த இருநூறு வருஷங்களுக்குப் பின் 1857-இல் அந்த உபதேசம், அடிமைத்தனத்தினால் நசுக்குண்ட பாரத மக்களின் இருதயங்களைக் கிளற ஆரம்பித்தது.

இயற்கைக்கு முரணான, அநீதியை அடிப்படையாகக் கொண்ட அடிமைத்தனத்தை ஹிந்துஸ்தானத்தின்மீது தந்திரமாகச் சுமத்திய பாதகர்கள் இந்தியாவில் மாத்திரம் அல்ல, உலகம் முழுவதுமே மதத்தை அழிக்க ஆரம்பித்தனர். அநீதிகளைச் செய்வோர் எவ்விதம் மதத் துரோகிகள் ஆகாமல் இருக்க முடியும்? இந்தியாவில் காலடி வைத்ததிலிருந்து வெள்ளையர்கள் மதத்தை அவமதித்ததுடன் நில்லாமல், ஹிந்து மதத்தையும் இஸ்லாம் மதத்தையும் நசுக்கவும் இடைவிடாது முயற்சி செய்ய ஆரம்பித்தார்கள்.

ஆப்பிரிக்காவிலும் அமெரிக்காவிலும் மத மாற்ற விஷயத்தில் ஆங்கிலேயர்கள் பெற்ற மாபெரும் வெற்றி, இந்தியாவை முற்றும் கிறிஸ்துவ மயமாக்கிவிட முடியும் என்பதில் அவர்களுக்குப் பூர்ண நம்பிக்கையை உண்டுபண்ணியது. இங்கே ஹிந்து மதத்தையும் இஸ்லாம் மதத்தையும் நசுக்கிவிட்டால், பின்னர் என்றென்றும் இந்தியா தங்களுடைய கைப்பிள்ளையாக இருந்து வரும் என்று அவர்கள் மனப்பால் குடித்தனர். மேல் நாட்டு நாகரிகத்தை இந்தியாவில் புகுத்திஞல், இந்தியர்கள் மயங்கித் தங்கள் மதத்தைக் கைவிட்டு விடுவார்கள் என்பதே ஆங்கிலேயர்களின் எண்ணமாக இருந்தது.

அந்த எண்ணம் நிறைவேறுவதற்கான நூல்களையும் அவர்கள் வெளியிட்டனர். அவ்வமயம் ஆங்கிலேயர்கள் நிகழ்த்திய பிரசங்கங்களிலெல்லாம், அந்த எண்ணம் மிளிர்ந்து கிடந்தது. கிழக்கிந்தியக் கம்பெனியின் டைரக்டர் போர்டு தலைவனை மாங்கிள்ஸ் என்பவன் 1857-ஆம் வருஷம் பிரிட்டிஷ் பார்லிமென்டில் பேசியபோது கீழ்வருமாறு குறிப்பிட்டான்: 'பரந்த ஹிந்துஸ்தான் சாம்ராஜ்யத்தைக் கடவுளே நம்மிடம் ஒப்பித்துள்ளார். இந்தியாவின் ஒரு முனையிலிருந்து மற்ருெரு முனை வரையில் கிறிஸ்துவக் கொடி பறக்க வேண்டும் என்பதே அவருடைய கட்டளை. அந்தக் கட்டளை நிறைவேற ஒவ்வோர் ஆங்கிலேயனும் தன் முழுச் சக்தியையும் உபயோகிக்க வேண்டும். இந்தியாவை ஒரு கிறிஸ்துவ நாடாகச் செய்யும் விஷயத்தில் அணுவளவும் தயக்கமோ தாமதமோ கூடாது.'

'நம் கல்வித் திட்டம் வழுவின்றிப் பின்பற்றப்படும் பட்சத்தில், இன்னும் முப்பது வருஷ காலத்துக்குள் வங்காளத்தில் ஒரு ஹிந்துவோ முஸ்லிமோ இருக்க மாட்டார்; எல்லாரும் கிறிஸ்துவராகிவிடுவார்கள் என்பது எனது உறுதியான நம்பிக்கை' என்று 1836-இல் மெக்காலே என்பவன் வங்காளத்தில் முதல் முதலாக ஆங்கிலக் கல்வி ஆரம்பமான போது கூறிஞன்.

ஹிந்து, இஸ்லாம் மதங்களின்மீது அவர்களுக்கு இருந்த வெறுப்பை, மேலே குறிப்பிட்ட உதாரணங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பிரபல ஆங்கில எழுத்தாளர்கள்கூட இழிவான தங்களுடைய சுயநல உணர்ச்சி காரணமாக, அவ்விரு மதங்களையும் தூற்றுவதற்குச் சிறிதும் தயங்கவில்லை. இந்தியர்களின் தேசீய உணர்ச்சியை அடியோடு நசுக்குவதற்கு ஏற்ற சுலபமான வழி, அவர்கள் மதங்களை அழிப்பதுதான் என்பதை ஆங்கிலேயர்கள் நன்கு அறிந்தே அவ்வாறெல்லாம் செய்ய முற்பட்டனர். மதத்தைக் கைவிட்டவர்களுக்குச் சுயமதிப்போ தேசபக்தியோ உயர்ந்த கொள்கையோ இருக்க முடியாதல்லவா? இந்தியர்களின் தேச பக்தியையும் புராதனப் பெருமையையும் கத்தியிஞல் ஒழிக்க முடியாது என்பதை அவர்கள் உணர்ந்தே ஆணி வேரை அறுப்பதற்கொப்ப, மதத்தை அழிக்கும் தந்திர முறையைக் கையாள ஆரம்

ஔரங்கசீபின் சரித்திரத்திலிருந்து ஆங்கிலேயர்கள் பல உண்மைகளைத் தெரிந்துகொண்டிருந்தார்கள். ஔரங்கசீப் அநுஷ்டித்த கொள்கையின் பலத்தையும் பலவீனத்தையும் அவர்கள் மிக ஜாக்கிரதையாக ஆராய்ச்சி செய்தார்கள். போரில் தோல்வியடைந்தவர்களை நிரந்தரமாக ஆண்டுவர வேண்டுமாயின், அவர்களுடைய மதத்தை அழிக்க வேண்டும் என்பது அந்த உண்மைகளில் ஒன்றாகும். எனினும் ஔரங்கசீபைப்போல், கத்தியால் பகிரங்கமாக மதத்தை அழிக்கும் மடத்தனத்தை அவர்கள் பின்பற்றாமல், தந்திரமான முறையைக் கையாண்டனர்.

அவ்வமயம் கென்னடி என்ற ஓர் ஆங்கிலப் பாதிரி எழுதியிருப்பதைப் பாருங்கள்: 'நமக்கு எவ்விதக் கஷ்டங்கள் நேர்ந்தாலும், இந்தியாவில் நமது சாம்ராஜ்யம் இருந்துவரும் வரையில், அங்கே நமது முக்கியமான கடமை கிறிஸ்துவ மதத்தைப் பரப்புவதுதான் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. கன்னியா குமரியிலிருந்து ஹிமாசலப் பிரதேசம் வரையில் ஹிந்துஸ்தானம் முழுவதும், ஹிந்து, இஸ்லாம் மதங்களைக் கண்டித்து, எல்லோரும் கிறிஸ்துவ மதத்தைத் தழுவும்படி செய்ய வேண்டும். அதுவரையில் நம் முயற்சிகளில் வெற்றி பெற நாம் எல்லாவித முறைகளையும் கைக்கொள்ள வேண்டும். நமக்குள்ள சக்தி முழுவதையும் உபயோகிக்க வேண்டும். இந்தியா கீழ்த் திசையிலேயே கிறிஸ்துவ மதத்தின் ஒரு பிரம்மாண்டமான கோட்டை ஆகிவிடவேண்டும். அதுவரையில் நமது முயற்சி சிறிதும் தளரக்கூடாது. நாம் விடாமுயற்சியுடன் இருந்து வருவோமாயின், இறுதியில் கடவுள் நமக்கு வெற்றியைக் கொடுத்தே தீருவார்.'

ஆங்கிலேயர்கள் பகிரங்கமாகவும் ரகசியமாகவும் இவ்விதமெல்லாம் கூறிவந்ததால், ஆங்கிலேய ஆட்சியின்கீழ் எல்லா இந்தியர்களும் கிறிஸ்தவர்கள் ஆகும்படி பலாத்காரம் செய்யப் படுவார்கள் என்று இந்திய மக்கள் கருதியதில் ஆச்சரியமில்லை.

சுயராஜ்யம் மறைந்தவுடன், ஏற்கனவே கோவில்களுக்கும் மசூதிகளுக்கும் இனாம்களும் ஜாகீர்களும் வழங்கி, அவைகளைப் பேணிவந்த ராஜாக்களும் மகாராஜாக்களும் மறைந்து கொண்டிருந்தார்கள். சுயாட்சி நிலவி வந்தபோது கோவில்களுக்கும் மசூதிகளுக்கும் அடிக்கடி புதிய இனாம்களும் புதிய காணிக்கைகளும் அளிக்கப்பட்டு வந்தன. ஆனால் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்டதும், உள்ள இனாம்களும் பணமும் பலாத்காரமாகக் கைப்பற்றிக் கொள்ளப்பட்டன. தங்களுடைய மதங்களுக்கு எவ்விதப் பாதுகாப்பும் இராததைக் கண்டு, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மனங் கலங்கினர். அது மாத்திரமல்ல. தங்கள் மதங்களை அந்நியர்கள் இழிவுபடுத்திக் கூறியதால், ஹிந்து, முஸ்லிம்களுடைய ரத்தமும் கொதிக்க ஆரம்

இதில் மற்றொரு விசேஷம் என்னவெனில், வெள்ளையர்கள் இந்தியாவைக் கிறிஸ்துவ மயமாக்க எண்ணியது

கிறிஸ்துவ மதத்தின்மீது அவர்களுக்குள்ள பக்தியினால் அல்ல; தேசீய உணர்ச்சியை நசுக்குவதற்கு அதுதான் சுலபமான வழி என்பதற்காகவே! உண்மையில் அவர்களுக்குக் கிறிஸ்துவ மதத்தில் உள்ள பக்தியைக் காட்டிலும், வர்த்தகத்திலும் பணத்திலுந்தான் மிகவும் அதிக பக்தி! அவர்கள் முதலில் பகிரங்கமாக இந்தியர்களின் மதங்களில் தலையிடத் துணிய வில்லை யெனினும் தங்களுக்கு அதிக அதிகாரம் கிடைத்த பின் மதங்களில் பகிரங்கமாகவும் தலையிடத் தொடங்கி விட்டார்கள்.

மதசம்பந்தமாக அவர்கள் கொண்டுவந்த சட்டங்கள் நன்மையானவையா அல்லவா என்பதை ஆராய்வது கூடாது. மதசம்பந்தமாகச் சட்டங்கள் கொண்டுவரும் உரிமை அந்நி யர்களுக்கு இல்லை என்பதே முக்கிய விஷயமாகும். அந்த அந்த மதத்திலுள்ள குறைபாடுகளை அகற்ற அந்த அந்த மதத்தினருக் குத்தான் உரிமை உண்டேயன்றி, பிற மதத்தினர் அதில் தலை யிடுவது சுயநலக் கலப்பற்றதாக இருக்க முடியாது. இத்தகை யோர் முதலில் குறைபாடுகளைத் தீர்க்க முற்படுவதுபோல் பாசாங்கு செய்துவிட்டு, பின்னர் மதத்தின் ஆணிவேரையே அறுக்கச் சூழ்ச்சி செய்வார்கள்.

ஔரங்கசீபைப்போல் ஆங்கிலேயர்களும் மதத்தில் தலை யிட முற்பட்டார்கள். எனவே, அதைத் தடுக்க இந்தியாவில் ஒரு சிவாஜியோ ஒரு குரு கோவிந்தரோ மீண்டும் அவதரித்துத் தீரவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது.

ஆங்கிலேயர்களின் சூழ்ச்சிக்கிணங்க, இங்கிலாந்திலிருந்து ஏராளமான பாதிரிமார்கள் வந்து சேர்ந்தனர். பல இடங்களி லும் அவர்களால் கிறிஸ்துவப் பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப் பட்டன. இவைபோன்ற இன்னும் பற்பல முறைகள் கைக்கொள் ளப்பட்டன. அவற்றை யெல்லாம் அமலுக்குக் கொண்டுவர வெள்ளையர் அரசாங்கம் ஏராளமான தொகையும் செலவழிக்க முற்பட்டது. ஹிந்து, இஸ்லாம் மதங்களிலிருந்து கிறிஸ்துவ மதத்துக்கு மாறியவர்களுக்கும், தங்கள் உறவினருடைய சொத்துக்களில் உரிமை உண்டு என்று சட்டம் நிறைவேற்றப் பட்டது. பாதிரிமார்களுக்கு இந்தியர்களின் பணத்திலிருந்து அபரிமிதமான சம்பளங்கள் கொடுக்கப்பட்டன. வெள்ளை அதி காரிகள் எல்லோரும் தங்கள் காரியாலயங்களில் உள்ள குமாஸ் தாக்களையெல்லாம் கிறிஸ்துவர்கள் ஆகும்படி வற்புறுத்தினர்.

இவ்விதமாக இந்தியாவின் உப்பைத் தின்றுகொண்டே இந் திய மதங்களை நசுக்க அவர்கள் செய்த சூழ்ச்சியைக் காட்டிலும் கொடிய அட்டூழியத்தை இவ்வுலக சரித்திரத்தில் காண முடி யாது. ஹிந்து, இஸ்லாம் மதங்களைப் பகிரங்கமாகப் பொது இடங்களில் தூஷித்துப் பிரசாரம் செய்வதற்காக இந்தியக் கஜானாவிலிருந்து லட்சக் கணக்கில் பாதிரிமார் உதவி பெற்றனர்.

இந்தியர்களின் மூலபலமான சிப்பாய்களிடையே கிறிஸ் துவ மதத்தைப் பிரசாரம் செய்து, வேரூன்றும்படி செய்துவிட்

டால், பின்பு சாதாரண ஜனங்களின் கிளர்ச்சியைப் பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை என்ற எண்ணத்துடன், பாதிரிமார்கள் இந்தியச் சிப்பாய்களின் மனத்தில் விஷத்தைப் புகுத்த முற்பட்டார்கள். யுத்தம் நடைபெறாத சாதாரண காலங்களில், சிப்பாய்களின் சரீரமும் மனமும் புத்தியும் பக்குவம் அடைவதற்கான பயிற்சிகளே அளிக்கப்பட வேண்டும். ஆனால், அத்தகைய பயிற்சிகளுக்குப் பதிலாக, ஆங்கிலேயப் பாதிரிமார் அந்தச் சிப்பாய்களிடம் இடைவிடாது மதப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்கள்!

அவர்கள் கிறிஸ்துவ மதத்தைப் புகழ்ந்து கூறியிருந்தால், அதைப்பற்றிக் குறைகூற இடம் இராது. ஆனால் அதற்கு மாறாக இழிவான பாஷையில் ஹிந்து - முஸ்லிம் மகான்களையும் அவதார புருஷர்களையும் தூஷித்தனர். நீதியும் நல்லொழுக்கங்களுமே உருவெடுத்து வந்த கடவுளின் அவதாரமான, ஹிந்துக்கள் சதா சர்வ காலமும் மிகுந்த பய பக்தியுடன் வணங்கும் ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியையும், முஸ்லிம்களின் ஏகோபித்த அன்புக்கும் பக்திக்கும் பாத்திரமான மகான் நபி நாயகத்தையும் வெள்ளைப் பாதிரிகள் நாக்கில் நரம்பின்றித் தூற்றினர். வேதங்களும் குரானும் இழிவுபடுத்தப் பட்டன. பாதிரிமாரின் பாதகப் பிரசாரத்தை எதிர்த்த சிப்பாய்கள் தண்டிக்கப்பட்டனர்; பட்டினி போடப்பட்டனர். ஹிந்து மதத்தையோ இஸ்லாம் மதத்தையோ ஆதரிப்பவர் சிப்பாயாக இருக்க முடியாது என்ற நிலைமை ஏற்பட்டது!

கிறிஸ்துவ மதத்தை யாராவது ஒரு சிப்பாய் தழுவினால், ஆங்கிலேயர்கள் அவரை வானளாவப் புகழ்ந்து கௌரவித்தனர். அவருக்கு உயர்ந்த பதவியும் அதிகச் சம்பளமும் அளித்தனர். மதம் மாறாத, அதாவது தங்களுடைய மதத்தை விட்டுக் கிறிஸ்துவ மதத்தைத் தழுவாத சிப்பாய்களின் யோக்கியதாம்சங்கள் எவ்வளவு மேலாக இருப்பினும் அவர்கள் அலட்சியம் செய்யப்பட்டனர். சொந்த மதத் துரோகியான சிப்பாய் ஹவல்தாராவதும், அதே விபரீத புத்தி படைத்த ஹவல்தார், சுபேதார் மேஜராக உயர்த்தப்படுவதும் சகஜமாயின! சொந்த மதத்தைத் துறப்பதும் தூற்றுவதுமே சிறந்த யோக்கியதாம்சங்களாகக் கருதப்பட்டன!

இந்தியச் சிப்பாய்களில் பெரும்பாலோர் ஏழைகளாகவும் சாதுக்களாகவும் தீர்க்காலோசனை அற்றவர்களாகவும் இருந்ததை வெள்ளையர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொண்டார்கள். ராணுவத்தைக் கிறிஸ்துவ மயமாக்கிவிட்டால், பின்னர் நாளடைவில் பொதுஜனங்களிடையே கிறிஸ்துவ மதத்தைப் பரப்புவது வெகு எளிது என்பதே ஆங்கிலேயர்களின் எண்ணம். எனவே சிப்பாய்களைக் கிறிஸ்துவர்களாக்குவதென ரகசியமாக முடிவு செய்தனர். அந்த முடிவுக்கு இணங்க அவர்கள் பல்வேறு திசைகளிலிருந்தும், ரகசியமாகவும் பகிரங்கமாகவும் ஹிந்து, இஸ்லாம் மதங்களைத் தாக்க முற்பட்டார்கள்.

அது மாத்திரம் அல்ல; ராணுவத்தில் இருந்த சில தளபதிகளும் அதிகாரிகளும் திமிர்பிடித்து, சிப்பாய்களின் மதத்தை அழிக்கவே தாங்கள் ராணுவத்தில் சேர்ந்திருப்பதாகப் பத்திரிகைகளின் மூலம் விளம்பரப்படுத்தவும் துணிந்தனர்! வங்கக் காலாட் படையைச் சேர்ந்த ஒரு தளபதி, ராணுவத்தைக் கிறிஸ்துவ மயமாக்கும் கொள்கையைத் தான் இருபத்தெட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து அநுஷ்டித்து வருவதாகவும், அது தான் தன்னுடைய வாழ்க்கையின் முழு முதற் கடமையாக இருந்து வந்திருக்கிறதென்றும் அரசாங்க அறிக்கை ஒன்றில் பகிரங்கமாகக் கூறினன்.

இந்த நிலைமையில் தங்களுடைய மதங்களுக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று சிப்பாய்கள் பயந்ததில் ஆச்சரியம் என்ன? அவர்களின் பீதிக்கு ஆதாரம் இல்லையென்று எவர்தாம் கூறத் துணிவர்? ஆங்கில அதிகாரிகளின் இவ்வித நடவடிக்கைகள் காரணமாக, இந்திய மக்களின் சொந்த மதங்களை அழித்துக் கிறிஸ்துவ மதத்தையே இந்தியாவில் நிரந்தரமான மதமாக்க வெள்ளையர்கள் தீர்மானித்துள்ளனர் என்ற திகில் எங்கும் உண்டாயிற்று.

வெள்ளையர்களின் அட்டூழியம் ஜனங்களின் மனத்தில் எவ்வளவு வெறுப்பை உண்டுபண்ணியது என்பதைக் கீழ்க்கண்ட சம்பவங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

ஒரு மௌல்வியும் ஓர் ஆங்கிலேயரும் நண்பராக இருந்தனர். மௌல்வி, நோய்வாய்ப்பட்டு மரணப் படுக்கையில் இருக்கையில், அந்த ஆங்கிலேயரும் அவருடன் கூட இருந்தார். அவர் மரணம் அடையுமுன் அவரது கடைசி விருப்பம் என்ன என்று ஆங்கிலேயர் மௌல்வியைக் கேட்டதற்கு, ''நான் உங்களுக்கு என் மனத்திலுள்ள ஓர் ஏக்கத்தை ஒளிக்காமல் கூறுகிறேன். என் ஆயுளில் இரண்டு வெள்ளையர்களைக்கூட என் கையினல் கொல்லும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே என்றுதான் நான் வருந்துகிறேன்'' என்று பதில் அளித்தாராம்!

மற்றொரு சமயம் ஒரு பிரபல இந்தியர் ஆங்கிலேயர் ஒருவரிடம் கூறியதாவது; ''நீங்கள் எங்கள் நாட்டை விட்டுச் சென்று விடவேண்டும். இங்கே எங்கள் முன்னேர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி நாங்கள் வாழ வேண்டும். இதுதான் எங்கள் விருப்பம்.''

இவ் விவரங்களையெல்லாம் கென்னடி என்ற ஆங்கில சரித்திராசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறுக வெள்ளையர்கள்மீது நாடெங்கும் வெறுப்பும் அதிருப்தியும் கொழுந்துவிட்டு எரிந்து வருகையில், டல்ஹௌஸி, மேற்கொண்டும் ஹிந்து, இஸ்லாம் மதங்களைத் தாக்கமுற்பட்டான். இந்தியாவில் ஆங்கிலேயர்கள் செய்ததெல்லாம் சரியே என்று ஸ்தாபித்துள்ள வெள்ளைச் சரித்திராசிரியர்கள்கூட டல்ஹௌஸியின் அந்த அக்கிரமத்தைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை.

ஹிந்து மதத்தைச் சேர்ந்த ஒருவர் தமக்குப் பிள்ளை இரா விடில் சுவீகாரம் செய்துகொள்ளுவது என்பது ஹிந்து சாஸ் திரங்கள் விதித்துள்ள அற்புதமான, புனிதமான, அன்பு மய மான ஒரு கட்டளை. பல்லாண்டு பல்லாண்டாக இந்தியாவில் இந்த முறை அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. புனிதமான அந்த வழக்கத்தை ஒழிக்க டல்ஹௌஸி முற்பட்டதைக் கண்டு இந்தி யர்கள் திடுக்கிட்டனர். டல்ஹௌஸியின் அந்தச் செய்கை, சுயராஜ்யம், சுதர்மம் இரண்டையும் ஏககாலத்தில் இருந்த இடம் தெரியாமல் செய்துவிட்டது. வெடி மருந்துக் குவிய லில், எரியும் நெருப்புக் குச்சியை எறிவதற்கு ஒப்ப, ஜனங் களின் மனக் கொதிப்பை டல்ஹௌஸியின் அக்கிரமச் செய்கை பொங்கி வழியும்படி செய்துவிட்டது.

மற்றும் கொழுப்புத் தடவப்பட்ட புதிய தோட்டாக்களை இந்தியச் சிப்பாய்கள் உபயோகித்தே தீரவேண்டுமென்றும் கட் டளைகள் பிறந்தன! புதிய தோட்டாக்களை ஏராளமாக உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலைகளும் பல்வேறு இடங்களில் திறக் கப்பட்டன. தோட்டாக்கள் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் இருப்பதற்காக ஒருவிதக் கொழுப்பை உபயோகித்தனர். அந்தக் கொழுப்பை ஏற்கனவே கையால் அகற்றியதுபோல் அகற்றக் கூடாதென்றும், அதைப் பல்லால் கடித்து அகற்ற வேண்டும் என் றும் உத்தரவிட்டனர். எவ்விதம் பல்லால் கடித்து அதைச் சுலபமாக அகற்றலாம் என்பதும் சிப்பாய்களுக்குக் கற்பிக்கப் பட்டது!

தோட்டாக்களில் எந்தக் கொழுப்புத் தடவப்பட் டிருக் கிறது என்பது முதலில் சிப்பாய்களுக்குத் தெரியாது. அவர்கள் வெள்ளை அதிகாரிகள்மீது நம்பிக்கை வைத்திருந்ததால், அவ் விஷயமாக அவர்கள் சிந்திக்கவும் இல்லை. ஆனால் அவற்றில் பசு வின் கொழுப்பும் பன்றியின் கொழுப்பும் தடவப்பட்டிருக்கின் றன என்பதை அறிந்ததும் சிப்பாய்களுக்கு ஏற்பட்ட ஆத்திரம் கொஞ்சமல்ல. ஹிந்து இஸ்லாம் மதங்களை இழிவு படுத்தவேண் டும் என்பதற்காகவே வெள்ளையர்கள் சூழ்ச்சி செய்து தங்களை ஏமாற்றியுள்ளனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. தங்கள் சூழ்ச்சி பகிரங்க மானதை அறிந்ததும், வெள்ளையர்கள் அது உண்மை அல்ல என்று மழுப்பப் பெரு முயற்சி செய்தனர். எனினும் தொழிற்சாலைகளில் வேலை செய்த இந்தியர்கள் தோட்டாக் களின்மீது தடவப்பட்டிருப்பது பசு, பன்றிகளின் கொழுப்புத் தான் என்பதை ஒப்புக்கொண்டார்கள்.

அவ்வளவுதான்! அந்தச் செய்தி அதி சீக்கிரத்தில் காட்டுத் தீப்போல் இந்தியா முழுவதும் பரவியது. அதைக் கேட்டு ஜனங் களுக்கு அடக்க முடியாத ஆத்திரம் ஏற்பட்டது. ஜனங்களின் ஆத்திரத்தைக் கண்டு அஞ்சிய ஆங்கிலேயர்கள், தோட்டாக் களுக்குப் பசுவின் கொழுப்பையோ பன்றியின் கொழுப்பையோ தாங்கள் உபயோகிக்கவே இல்லையென்று சாதிக்க முற்பட்டார் கள். ஆனால் அதிகாரிகள் ஒரு 'கன்டிராக்டரு'டன் செய்து

கொண்ட ஒப்பந்தத்தில் பசுவின் கொழுப்பும் பன்றியின் கொழுப்பும் தேவையான அளவு கொடுக்க வேண்டுமென்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தது! 'இந்தியாவில் நாற்பது வருஷம்' என்று லார்டு ராபர்ட்ஸ் எழுதியுள்ள புத்தகத்தில், அதிகாரிகள் மிகவும் ஆட்சேபகரமான, பசுவின் கொழுப்பையும் பன்றியின் கொழுப்பையும் தோட்டாக்களுக்கு உபயோகித்தது உண்மைதான் என்பதை ஒப்புக்கொண் டிருக்கிறார்.

தங்களுடைய சூழ்ச்சி வெளியானதும், தோட்டாக்களுக்கு ஆடுகளின் கொழுப்பைத்தான் உபயோகிக்க வேண்டுமே அன்றி வேறு எந்தக் கொழுப்பையும் உபயோகிக்கக் கூடாது என்று அதிகாரிகள் உத்தரவு பிறப்பித்தனர். அதிலிருந்தே அவர்கள் அதற்குமுன் ஆட்சேபகரமான கொழுப்பை உபயோகித்து வந்துள்ளனர் என்பது தெரிகிறதல்லவா? அதிகாரிகள் முதலில் சாதித்தது உண்மையாயின், ஆடுகளின் கொழுப்பைத் தவிர வேறெதையும் உபயோகிக்கக் கூடாது என்று புதிதாக உத்தரவு பிறப்பிக்க வேண்டிய அவசியம் என்ன? பாரெஸ்ட் என்பவர் வெளியிட்ட சர்க்கார்ப் பத்திரங்களிலிருந்தும் தோட்டாக்களுக்குப் பசுவின் கொழுப்பையும் பன்றியின் கொழுப்பையும் அதிகாரிகள் உபயோகித்தது உண்மையென்று தெரிந்தது.

அதிகாரிகள் தோட்டாக்களுக்கு ஆட்சேபகரமான கொழுப்பைத் தடவியதுடன், 'மூட நம்பிக்கை' காரணமாக அவைகளைக் கடிக்க மறுக்கும் சிப்பாய்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள் என்றும் பயமுறுத்தினர். ஆனால் அவர்களின் மிரட்டலைக் கண்டு சிப்பாய்கள் சிறிதும் அஞ்சவில்லை. தங்களுடைய சுதர்மத்தைப் பாதுகாப்பதற்காக அவர்கள் எவ்விதத் தண்டனையையும் சகிக்கச் சித்தமாயிருந்தனர்; ஆண்மையுடன் யாரையும் எதிர்த்து நிற்கவும் உறுதியாக இருந்தனர். இவ்விதமாகத் தங்களுடைய மிரட்டல் பலிக்காமற் போகவே, அதிகாரிகள் சிறிது பணிந்து கொடுத்தனர்.

எனினும், சிப்பாய்களுக்குத் தெரியாமல் அத்தகைய சூழ்ச்சி செய்த படுபாவிகள், தங்கள் நோக்கம் நிறைவேற எத்தகைய துரோகம் செய்யவும் அஞ்ச மாட்டார்கள் என்ற எண்ணம் ஜனங்களின் மனத்தில் குடிகொண்டது. ஒரு புறம் ஜனங்களின் ஆத்திரத்தைத் தணிக்க முற்படுவதுபோல் பாசாங்கு செய்த வெள்ளையர்கள், மற்றொரு புறம் ராணுவ அணிவகுப்பின் போது, ஸ்ரீராமபிரானையும் முகமது நபி நாயகத்தையும் கடுமையாகத் தூஷித்து, ஆயிரக்கணக்கான துண்டுப் பிரசுரங்களை வழங்கி வந்தார்கள்.

தோட்டாக்களுக்கு விரோதமாக ஜனவரி மாத ஆரம்பத்தில் கிளர்ச்சி உண்டாயிற்று. அந்த மாதம் முடிவதற்குள் அதிகாரிகள் சிப்பாய்களின் கோரிக்கைக்குப் பணியும்படி நேர்ந்தது. அதாவது அதிகாரிகளிடமும் அவர்களின் வாக்குறுதியிலும் சிப்பாய்களுக்கு நம்பிக்கை இராததால், சிப்பாய்கள் தாங்கள் சொந்தமாகத் தயாரிக்கும் கொழுப்பைத் தோட்டாக்களுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம் என்பதற்கு அதிகாரிகள்

இசைந்து, அவ்விதமே ஒரு சட்டமும் இயற்றினர். நிலைமை மோசமாகாமல் தடுக்க, முழுப்பொய் கூறுவதைத் தவிர வேறு வழி இல்லையென்று கருதி, பர்ச் என்பவன் சர்க்கார் சார்பில் அறிக்கை ஒன்று விடுத்தான். ஆட்சேபகரமான ஒரு தோட்டா கூட ராணுவத்துக்கு அனுப்பப்படவில்லை என்று அவன் அந்த அறிக்கையின் மூலம் முழுப்பொய் கூறச் சிறிதும் தயங்க வில்லை!

ஆனால் உண்மை என்னவெனில், 1856-ஆம் வருஷம் அம்பாலா தொழிற்சாலையிலிருந்து இருபத்திரண்டாயிரத்து ஐந்நூறு தோட்டாக்களும், சியால்கட் தொழிற்சாலையிருந்து பதினாலாயிரம் தோட்டாக்களும் பல இடங்களில் இருந்த பட் டாளங்களுக்கு அனுப்பப்பட்டன. அந்தத் தோட்டாக்களைக் கொண்டே சிப்பாய்களுக்குப் பயிற்சியும் அளிக்கப்பட்டது. கூர்க்க ராணுவப் பிரிவுகளில் அந்தத் தோட்டாக்களைப் பகிரங்க மாக உபயோகித்தனர். அவற்றை உபயோகிக்கச் சில சிப்பாய் கள் மறுத்ததற்காக அந்தப் பிரிவைச் சேர்ந்த சிப்பாய்கள் எல் லோரும் தண்டிக்கப்பட்டனர்.

போல் இன்னும் பல அக்கிரமங்களும் நிகழ்ந்தன. இவற்றிற்கெல்லாம் காரணம் அரசியல் அடிமைத்தனந்தான் என்பதைச் சிப்பாய்கள் அறிந்துகொண்டு, அந்த ஆணிவேரை அறுக்கும் வரையில் தாங்கள் வாளா இருக்கக் கூடாதென்று உறுதிகொண்டார்கள். அடிமைக்கு மதம் ஏது? மதத்தைப் பாதுகாப்பதற்கான முதற்படி, சுதந்தர நாட்டில் சுதந்தரமாக இருப்பதுதான் என்ற முடிவுக்கும் வந்தார்கள்.

'ஆகையால், ஹே ஹிந்துஸ்தானமே! எழுந்திரு! தர்மத் துக்காக உயிர்த் தியாகம் செய். இறக்கும்போது எல்லாப் பகைவர்களையும் கொன்று மீண்டும் சுயராஜ்யத்தை அடைவா யாக!' என்ற கோஷங்கள் வானளாவின. ஒவ்வொரு சிப்பாயும் அந்தச் சுலோகங்களை ஜபித்துக்கொண்டு, சுதர்மத்துக்காகவும் சுயராஜ்யத்துக்காகவும் போராடுவதற்காகத் தன்னுடைய பட்டாக்கத்தியைத் தீட்ட ஆரம்பித்தான்!

## 8

## அக்கினி தேவனுக்குப் பலி

நாட்டை அடிமைத்தனத்தில் ஆழ்த்தி, ஹிந்து, இஸ்லாம் மதங்களை இழிவுபடுத்திய வெள்ளையர்களின்மீது வஞ்சம் தீர்க்க வேண்டிய நாள் நெருங்கிக்கொண்டே வந்தது. எனவே யுத்த தேவனை அக்கினி பகவானுக்குப் போதிய பலிகள் கொடுக்க வேண்டாமா?

இந்திரஜித் செய்த மகத்தான யாகத்தில், எவராலும் ஜயிக்க முடியாத ரதம் தோன்றும் வரையில் ஒன்றன் பின் ஒன்றாகப் பலிகள் கொடுக்கப்பட்டனவாம். அதுபோலவே இங்கும் தேவதை நேரில் பிரசன்னமாகும் வரையில், யாக குண்டத்தில் பலிகள் எறியப்பட்டே தீர வேண்டும்! இந்திரஜித்தின் யாகத்துக்குத் தடை ஏற்பட்டதுபோல இந்த யாகத்துக்குத் தடை எதுவும் ஏற்பட இடமில்லை. ஏனெனில், இந்திரஜித்தின் லட்சியம் அதர்மமானது; ஆனால் நம்முடைய லட்சியம் முற்றும் புனிதமானது; தர்ம நியாயமானது. ஆகவே இந்த யாகம் வெற்றி அடையும் என்பதற்குச் சந்தேகம் இல்லை!

அப்போது கோபாக்கினி மிகவும் பயங்கரமாக எரிந்து கொண்டிருந்தது. அக்கினி பகவானின் எண்ணற்ற நாக்குகள் ஆகாயத்தில் எழும்பி, பலி வேண்டுமென்று கோரின. அப்படி இருக்க ஏன் இன்னும் தாமதம்? 1757-ஆம் வருஷத்திலேயே பூர்வாங்கச் சடங்குகள் நடந்து, சங்கல்பமும் செய்துகொண்டாகிவிட்டது. ஆகையால் தாமதமின்றிப் பலிகளைத் தொடங்கலாம்! ஹே கிளைவே! ஹே மீர்ஜாபரே! முதல் பலி கொடுக்கும் மகத்தான கௌரவமும் உரிமையும் பிளாஸிக்குத்தான் உண்டு என்பதை நீங்கள் அறியீர்களா? அப்படியிருக்கப் பிளாஸியைப் பலி கொடுக்க இன்னும் ஏன் தாமதம்?

மிக மிகச் சிறிய ராஜாக்கள், ராஜ்யங்கள், படைகள்-எதுவும் பாக்கி இருக்கக்கூடாது. ஏ ராக்ஷஸர்களே! உங்கள் கண்களுக்கு என்ன தென்பட்டாலும் எங்கே தென்பட்டாலும் அதை அக்கினி பகவானுக்கு ஆகுதி செய்யுங்கள்!

பாஞ்சாலத்திலுள்ள கோஹினூர் வைரத்தை ஏன் இன்னும் பலி கொடுக்கவில்லை? ஏ டல்ஹௌஸி! சிறிதும் தாமதமின்றிச் சென்று அதன் நியாயமான சொந்தக்காரரிடமிருந்து அதைப் பறித்து வா! களங்கமற்ற மகிமை வாய்ந்த அந்த ரத்தினத்தைக் காட்டிலும் சிறந்த பலி என்ன இருக்க முடியும்? அது மிகவும் புராதனமானது அல்லவா; சரித்திரப் பிரசித்தமானது அல்லவா? ஆகையால் கோஹினூரை உடனே பலி கொடு!

அடுத்தபடியாகப் பிரம்ம தேசம் கௌரவத்துக்கு உரியதாகும். ஆகையால், ஏ டல்ஹௌஸி, அதையும் உன்னுடைய ஆதிக்கத்தின் கீழே கொண்டு வா. கொடிய தீயில் பர்மாவையும் ஆகுதி செய்து ஆனந்தப்படு!

ஸாதாராவில் சிவாஜியின் சிம்மாசனம் என்ன நிலைமையில் இருக்கிறது? அதற்குள்ள முன்னுரிமையை நீங்கள் அங்கீகரிக்க வேண்டுமல்லவா? ஆகையால், ஏ வெள்ளைப் பிசாசுகளே! அங்கே சென்று அந்தச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் மன்னர்களை வானுலகிற்கு அனுப்பிவிடுங்கள்! வானுலகில் அவர்கள் எவ்விதத் தொந்தரவுமின்றிச் சுதந்தரமாக ஆட்சி புரிந்து வரட்டும்! அந்தச் சிம்மாசனத்தை நீங்கள் விரைவில் கொண்டு வாருங்கள். உக்கிரமாக இருக்கும் ஜ்வாலையில், மகாராஷ்டிரர்களின் அந்தச் சிம்மாசனத்தையும் ஆகுதி செய்யுங்கள். அந்த ஜ்வாலைக்கு அது

மாத்திரம் போதுமா? ஆகையால் நாகபுரி அரண்மனைகள், யானைகள், குதிரைகள், கண்ணீர் விட்டுக் கதறும் ராணிகள் முதலியோரையும் ஆகுதி செய்யுங்கள்!

அவைகளை யெல்லாம் பலி கொடுத்தபின் அக்கினி குண்டம் பயங்கரமானதாகத் தோன்றும். அப்போது அதற்கு, மேற்கொண்டு தகுந்த பலி கொடுக்க வேண்டாமா? பிரம்மாவர்த்தத்தின் கிரீடத்தைக் காட்டிலும் தகுந்த காணிக்கை வேறு என்ன இருக்க முடியும்? எனவே அதையும் அக்கினி குண்டத்தில் வீசி எறியுங்கள்! தேசீய வஞ்ச தேவதை தோன்றும் வரையில் பலி கொடுத்துக்கொண்டே வாருங்கள். மற்றும் அந்த அக்கினி ஜ்வாலை ஆகாயம் அளாவ எழும்ப வேண்டுமாயின், ஜான்ஸி மின்னல் கொடியையும் பலி கொடுக்க முன் வாருங்கள்!

இப்போது பாருங்கள்! கொழுந்துவிட்டு எரியும் ஜ்வாலையின் நடுவில் தேவியின் கிரீடம் தெரிகின்றது! இதுதான் சமயம். இடைவிடாது பலி கொடுத்து வாருங்கள்! ஆர்க்காட்டு நவாப், தஞ்சாவூர் சம்ஸ்தானம், அங்கோல் ராஜ்யம், சிக்கிம் மாகாணங்கள், ஸம்பல்புரி கிரீடம், கெய்ரபுரி அமீர் முதலியவர்களைப் பலி கொடுங்கள்! கொடுக்கும் பலிகளை எண்ணுதீர்கள். அவற்றை எண்ணிச் சாத்தியப்படாது. சாதுக்களையும் நிரபராதிகளையும் பலி கொடுப்பதுதான் மிகவும் சிலாக்கியமாகும்! ஆகையால் பரம சாதுவான அயோத்தி நவாபை விட்டுவிடாதீர்கள்! அவரையும் தீயில் தூக்கி எறியுங்கள்!

பயங்கரமாகச் சீறும் தீயிலிருந்து தோன்றும் தேவியின் பயங்கர உருவத்தைப் பாருங்கள்! இந்த உக்கிர தேவதையின் வாய்க்கு இந்த உலகம் முழுவதுங்கூட அற்பமான ஒரு பட்சணம் என்றே தோன்றுகிறது! அதிகமாகப் பலி கொடுக்கக் கொடுக்கத்தான் தேவியின் சிங்கப் பல் அதிகக் கூர்மையை அடையும்! ஆகையால் பலியை நிறுத்திவிடாதீர்கள். டில்லியிலுள்ள கூட கோபுரங்களையும் மாடமாளிகைகளையும் பூட்டிவிடுங்கள்; மயில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் சக்கரவர்த்தியைக் கீழே இழுத்து வீழ்த்துங்கள்! அக்பர் சக்கரவர்த்தியின் சந்ததியை ஏன் பாக்கி வைக்க வேண்டும்?

அயோத்தியிலுள்ள தாலுக்தார்கள் என்ன செய்துகொண்டிருக்கின்றனர்? அவர்களுடைய நிலங்களையும் உரிமைகளையும் அபகரித்து, காட்டு மிருகங்களைப்போல் அவர்களை விரட்டி இங்கே கொண்டு வாருங்கள்! பம்பாயிலும் வங்காளத்திலும் உள்ள முதலாளிகளின் உரிமைகளை நசுக்கி, அவர்களையும் இங்கே இழுத்து வாருங்கள்! இப்போது அக்கினி மிகவும் உக்கிரமாகச் சீறுகிறது. ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள், தாலுக்தார்கள், வட்டம்தார்கள் முதலிய எல்லோரையும் அதில் வீசி எறியுங்கள்!

ஆகா! இப்போது பாருங்கள்! அவ்வேள்வித் தீயிலிருந்து தேசீய ஆக்கிரக தேவதை விசுவ ரூபத்துடன் தோன்றுகிறாள்! என்ன பயங்கர ரூபம்! ஹே தேவி! எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடு. எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டும் என்பதற்காக நாங்கள் உனக்கு எதைக் காணிக்கையாகக் கொடுக்க

முடியும்? ஆகையால் எங்களையே உன் பாதங்களில் அர்ப்பணம் செய்துகொள்ளுகிறோம். அம்பிகே! இந்தக் காணிக்கையை ஏற்றுக்கொள்! பகைவர்களே! நீங்களும் காணிக்கை செலுத்த தம்தம் தொழிற்சாலையிலுள்ள சகல தோட்டாக்களிலும் பசுக்கள், பன்றிகளின் கொழுப்பைத் தடவிக் கொண்டு வாருங்கள்!

சுப நேரம் வந்துவிட்டது. அக்கினியின் வாய் அகண்டாகாரமாகத் திறந்திருக்கிறது, கொடியர்களே! தம்தம் குண்டுகளை அதன் வாயில் எறியுங்கள். இப்போது பாருங்கள்; அக்கினி ஜ்வாலையின் நடுவிலிருந்து தேவி பயங்கர ரூபத்துடன் தோன்றுகிறாள்! எல்லாவற்றையும் சாம்பலாகச் செய்யும் சக்தி அவளிடம் இருக்கிறது. 'இதோ எல்லாவற்றையும் தகிக்கிறேன்!' என்று இடி முழக்கம்போல் கர்ஜித்துக்கொண்டு அவள் கிளம்புகிறாள்.

ஹே ஆக்கிரக தேவியே! உனக்குக் கோடி நமஸ்காரம். உன் சூலாயுதம் பகைவர்களின் திமிர், கொடுங்கோல் ஆட்சி, அநீதி எல்லாவற்றையும் அழித்து ஒழித்துவிடும் என்பதில் ஐயமும் உண்டோ! உன் கையிலுள்ள கோடரியானது அடிமைச் சங்கிலியைத் துண்டு துண்டாகத் தகர்த்துவிடும் என்பதிலும் சந்தேகம் உண்டோ? உன் கண்களிலிருந்து பறக்கும் தீப்பொறி, பகைவர்களின் வம்சமே பூண்டோடு ஒழியும்படி செய்யவல்லது அல்லவா? உன் ஆயிரம் நாக்குகளும் பகைவர்களின் குருதியைக் குடிக்கும் சக்தி படைத்தவை அல்லவா? ஆக்கிரக தேவியே! விரோதிகள்மீது வஞ்சம் தீர்த்தருள். எங்கள் வாட்களைக் கூராக்கி எங்களுக்கு வெற்றி கிடைக்க அருள் புரிவாயாக!

## 9

## ரகசிய ஸ்தாபனம்

இந்தியா முழுவதும் ஒரு புறம் புரட்சி பக்குவமடைந்து வருகையில், மற்றொரு புறம் பிரம்மாவர்த்தத்தில் ஒரு போர்த் திட்டம் தயாரிக்கப்பட்டு வந்தது. சுதந்தர யுத்தத்தில் பூர்ண வெற்றி பெறுவதற்குற்ற எல்லாக் காரியங்களையும் உருவாக்குவது என்பதே அந்தத் திட்டமாகும்.

லண்டனிலுள்ள ஓரிடத்தில் ரங்க பாபுஜியும் அஸிமுல்லாகானும் ரகசியமாக ஆலோசனை செய்து வந்தனர் என்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அவர்களுடைய சம்பாஷணையின் விவரங்களைச் சரித்திரம் குறிப்பிடவில்லை. எனினும், ஸாதாராவைச் சேர்ந்த பிராம்மணரும் பிரம்மாவர்த்தத்தைச் சேர்ந்த கான் சாஹிபும் சுதந்தரப் போர்த் திட்டத்தைத்தான் தயாரித்து வந்தனர் என்பதில் அணுவளவும் சந்தேகமில்லை.

லண்டனிலிருந்து புறப்பட்டபின் ரங்க பாபுஜி நேராக ஸாதாராவுக்குச் சென்றார். ஆனால் அஸிமுல்லா கான் நேராக ஹிந்துஸ்தானம் வர முடியவில்லை. பிரிட்டிஷ் சாம் ராஜ்யத்தின் மண் இராத இடமே இல்லை யாதலாலும், பிரிட்டிஷார் சூழ்ச்சியில் கை தேர்ந்தவர்கள் ஆதலாலும், எத்தனை இடங்களிலிருந்து சாத்தியமோ அத்தனை இடங்களி லிருந்தும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தாக்க வேண்டியது அவசியம் என்பதை அவர் உணர்ந்தார். வரப்போகும் சுதந்தர யுத்தத்தில் ஐரோப்பாவிலுள்ள எந்த எந்த இடங்களிலிருந்து நேரடியான உதவியும் அநுதாபமும் கிடைக்கக்கூடும் என்பதை யும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. எனவே, அஸிமுல்லா கான் இந்தியாவுக்குத் திரும்பி வருமுன், அந்த நோக்கத்துடன் ஐரோப்பா முழுதும் யாத்திரை செய்தார்.

'முஸ்லிம் உலகத்தின் கலிபா' என்று உலகப் பிரசித்தி பெற்ற துருக்கி சுல்தானின் தலை நகருக்கு அவர் சென்றார். அப்போது நடந்து வந்த ருஷ்ய—துருக்கி யுத்தத்தில் ஆங்கி லேயர்கள் செபஸ்டபூலில் நடந்த முக்கியமான போரில் தோல்வியுற்றனர் என்ற செய்தி கிடைத்தபின், அவர் ருஷ்யா வில் சிறிது காலம் தங்கியிருந்தார்.

ஆசியாவில் இங்கிலாந்துக்கு விரோதமாக ருஷ்யா யுத்தத்தைத் தொடர்ந்து நடத்த முன்வருமா? சாத்திய மாயின் இங்கிலாந்துக்கு விரோதமாக இந்தியாவுடன் உடன்படிக்கை செய்துகொள்ளுமா? இந்த விஷயங்களைத் தீர்மானமாக அறிந்துகொள்ளுவதற்காகவே அவர் ருஷ்யாவுக்குச் சென்றார் என்பது பல ஆங்கில சரித்திராசிரியர்களின் சந்தேக மாகும்.

ருஷ்ய ஜார் சக்கரவர்த்தியுடன் நானா ஓர் உடன் படிக்கை செய்துகொண்டிருப்பதாகவும், வெள்ளையர்களை எதிர்த் துப் போராட ருஷ்ய ராணுவம் முழுதும் தயாராக இருக் கிறதென்றும் இந்திய தேசீய யுத்த பேரிகை முழங்க ஆரம் பித்தவுடன் ஜனங்கள் பகிரங்கமாகக் கூறியதைக் கவனிப்போ மாயின் வெள்ளைச் சரித்திராசிரியர்களின் சந்தேகத்துக்குக் காரணம் இருக்கலாம் என்று தோன்றுகிறது.

அஸிமுல்லா ருஷ்யாவில் இருந்தபோது லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையின் ராணுவ நிருபரும், பிரபல எழுத்தாளருமான ரஸ்ஸெல் அவரைப் பேட்டி கண்டார். ஆங்கிலேயர்கள் தோல்வி அடைந்ததையும் ஆங்கில-பிரெஞ்சுத் துருப்புகள் ஒன்று சேர்ந்துங்கூட, ருஷ்யர்களைத் தோற்கடிக்க முடியாமற் போனதையும், ஜூன் மாதம் 18-ஆம் தேதி ருஷ்யா வெற்றி பெற்றதையும் கேள்விப்பட்ட அஸிமுல்லா, வெள்ளையர் ராணுவ முகாமுக்குச் சென்றார். அவர் நடையுடை பாவனையில் ஓர் இந்திய மன்னர்போல் இருந்ததைக் கண்டு ரஸ்ஸெல், முகா முக்கு வெளியே வந்தார். அவரிடம் அஸிமுல்லா, "இந்தப் பிரபல நகரையும், பிரஞ்சு ஆங்கில ராணுவம் இரண்டையும்

தோற்கடித்த ருஷ்ய வீரர்களையும் பார்க்க விரும்புகிறேன்'' என்றார். குத்தலாகவும் இருதயத்தில் தைக்கும்படி கிண்டலாகவும் பேசுவதில் அஸிமுல்லா மிகுந்த சாமர்த்தியசாலி என்பது அதிலிருந்து தெரிகிறது.

•

வெள்ளையர்களுக்கும் ருஷ்யர்களுக்கும் நடந்த பீரங்கி யுத்தத்தை அஸிமுல்லா நேரில் பார்த்துக்கொண்டிருந்த போது ஒரு பீரங்கிக் குண்டு அவர் காலின் அருகில் பூமியில் பாய்ந்தது. அந்த ஆபத்தான சமயத்தில்கூட அவர் கலங்கவோ அவ்விடத்தை விட்டு நகரவோ இல்லை. இவ்விவரங்களை எல்லாம் ரஸ்ஸெல் தம்முடைய பிரபல நூலில் குறிப்பிட்டுள்ளார்.

அன்று மாலை அஸிமுல்லா தமது ஜாகைக்குத் திரும்புகையில், ரஸ்ஸெலிடம், ''பலமான கோட்டைபோன்ற இந்தப் பிரதேசத்தை நீங்கள் ஒருபோதும் கைப்பற்ற முடியாதென்றே தோன்றுகிறது'' என்று துணிச்சலாகத் தமது கருத்தைத் தெரிவித்தார். அஸிமுல்லா அன்றிரவு ரஸ்ஸெலின் கூடாரத்திலேயே படுத்துத் தூங்கினார். பின்னர் அவர் விடியற்காலம் எழுந்து சென்றுவிட்டார். ரஸ்ஸெலின் மேஜைமீது அஸிமுல்லாவினால் கீழ்வருமாறு ஒரு சீட்டு எழுதி வைக்கப்பட்டிருந்தது. 'அஸிமுல்லா கான், தம்மை அன்புடன் உபசரித்ததற்காக ஸ்ரீ ரஸ்ஸெலுக்குத் தம் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்கிறார்.'

ருஷ்யாவிலிருந்து புறப்பட்ட பின் அஸிமுல்லா எங்கே சென்றார் என்பது தெரியவில்லை. எனினும் கான்பூர் பிரகடனத்திலிருந்து அதன் சம்பந்தமான ரகசியம் வெளியாயிற்று. அதாவது ஏதோ அரசியல் தந்திரத் திட்டம் ஒன்றை அமலுக்குக் கொண்டுவருவதற்காக அவர் எகிப்து சென்றிருந்தார் என்று தெரிகிறது. ஹிந்துஸ்தானத்தில் நிகழ்ந்து வந்த கொடுங்கோன்மையைக் குறித்துத் துருக்கி சுல்தானுக்கு அஸிமுல்லா எழுதிய கடிதம், ராபர்ட்ஸ் என்ற வெள்ளையரின் கைக்குக் கிடைத்ததிலிருந்தே இவ்விஷயம் வெளியாயிற்று.

அதையொட்டிச் சரித்திராசிரியர் ராபர்ட்ஸ் கூறுகிறார்; 'அஸிமுல்லாவின் காதலிகளான ஆங்கிலப் பெண்களிடமிருந்து அவருக்கு வந்த பல கடிதங்களும் ஒரு பிரெஞ்சுக்காரரிடமிருந்து அவருக்கு வந்த இரண்டு கடிதங்களும் அகப்பட்டன. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஒழிக்கும் விஷயமாக, சந்திரநாகூரிலிருந்த பிரெஞ்சுக்காரர்களின் உதவியை நாடியதுபோன்ற சில ரகசியங்கள் அந்தக் கடிதங்களிலிருந்து வெளியாகின்றன. கான்ஸ்டான்டிநோபிலில் உமர் பாஷாவுக்கு அஸிமுல்லா எழுதிய கடிதத்தில், பொதுவாக இந்தியாவிலும், குறிப்பாகச் சிப்பாய்களிடையேயும் ஏற்பட்டிருந்த அதிருப்தியையும் அமைதியின்மையையும்பற்றிக் குறிப்பிட்டிருந்தார்.'

அஸிமுல்லா தமது ஐரோப்பிய யாத்திரையை முடித்துக்கொண்டு பிரம்மாவர்த்தத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

அவர் வந்ததும் அங்கே அரசியல் நிலைமை அடியோடு மாறத் தொடங்கியது. ஏற்கனவே இந்தியா முழுதும் வெகு கால மாகக் கம்பீரமாகவும் வெற்றியுடனும் அசைந்துகொண் டிருந்த கொடி, அரண்மனையில் தூசி படிந்து கிடந்தது. பேஷ்வாக்களின் மகிமை பொருந்திய யுத்த பேரிகையின் தீனமான சப்தம், கேட்பதற்குப் பரிதாபமாக இருந்தது. ஒரு காலத்தில் அந்தப் பேரிகையின் வீர முழக்கத்தைக் கேட்டு, ஆயிரக் கணக்கான மகாராஷ்டிரர்களின் பட்டாக் கத்திகள் போர்க்களங்களில் புரிந்த அற்புதமான தீரச் செயல் கள் எல்லாம் கனவுபோல் தோன்றின. மொகலாய சாம் ராஜ்யத்தின் விதியை நிர்ணயிக்கும் வல்லமை பெற்றிருந்த ராஜ முத்திரையானது, பதியை இழந்த பத்தினியைப்போல் அரண்மனையில் ஒளியிழந்து கிடந்தது!

ஆனால், அஸிமுல்லா திரும்பி வந்ததும் அவற்றிற் கெல்லாம் புத்துயிர் உண்டாகி விட்டதுபோல் தோன்றியது. தூசி படிந்து கிடந்த கொடி மீண்டும் பிரகாசத்துடன் பறக்கலாயிற்று. வீர சப்தத்தை இழந்து கிடந்த பேரிகைகளி லிருந்து மீண்டும் கம்பீரமான ராணுவ ஒலிகள் கிளம்பின. ராஜ முத்திரையோ வெனில், அந்நியர்களின் குருதியைக் குடித்துச் சுதந்தரமாகிய குங்கும திலகத்துடன் விளங்கத் துடித்துக்கொண் டிருப்பதுபோல் தோன்றியது! அந்நியர்களின் அநீதிகள் காரணமாக மனம் புழுங்கிக்கொண் டிருந்த நானு சாஹிபின் கண்கள் தீப்பொறிகளைக் கக்க ஆரம்பித்தன!

'ஆகையால், போருக்கு ஆயத்தமாயிரு' என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்குச் செய்த உபதேசம் நானுவின் செவிகளில் இடைவிடாது ஒலிக்கலாயிற்று. 'தஸ்மாத் யுத்தாய யுஜ்யஸ்வ' என்ற ஆதியந்தமற்ற கீதோபதேசம் பிரம்மா வர்த்தம் முழுதும் எதிரொலியை உண்டாக்கியது. ஏனெனில் பாரத காலத்தில் இருந்ததைக் காட்டிலும் நிலைமை மோசமாகி விட்டதல்லவா? அப்போது துஷ்டர்கள் ஆட்சி புரிந்தனர்; இப் போது அதைக் காட்டிலும் மோசமான துஷ்டர்களான அந்நியர் கள் ஆட்சிபுரிந்து வந்தனர்; சுயராஜ்ய உரிமையையும் அபகரித் துப் பரதகண்ட ஜனங்களை அடிமைத்தனத்தில் ஆழ்த்தி. சமா தானமாகவும் பணம் கொடுத்தும் வேண்டுகோள் விடுத்தும் தேசத்தை விடுவிப்பதற்காகச் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. எனவே போருக்குச் செல்லுவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை. 'நீ போர்க்களத்தில் இறந்தால் வீரசுவர்க்கம் அடைவாய்; அவ்விதமின்றி வெற்றி பெற்றால் இவ்வுலகில் மகத்தான சுகத்தை அநுபவிப்பாய். ஆகையால் போருக்குத் தயாராக இரு. தர்ம யுத்தம் புரிவது எவ்விதத்தி லும் பாவமல்ல' என்ற கீதோபதேசம் நானுவின் மனத்தில் மகத்தான ஆவேசத்தையும் கண்களில் மங்காத ஒளியையும் உண்டுபண்ணியது.

நானு சாஹிப் தமது தேசத்தின் நிலையை நன்கு ஆராய்ந் தார். தம் தேச மக்கள் படும் கஷ்டங்களை உணர்ந்தார்; தமது

மதம் அந்நியர்களால் அழிக்கப்பட்டு வருவதையும் கவனித்தார். இவையெல்லாம் பயங்கரமான அடிமை நோயின் அறிகுறிகள் என்பதை அவர் தெரிந்துகொண்டு கத்தியாலன்றி வேறு எத னாலும் அதைத் தீர்க்க முடியாதென்ற திட்டமான முடிவுக்கு வந்தார். அவரது நோக்கத்தில் சிக்கல் எதுவும் இல்லை. கத்தியை உருவி ஆங்கிலேயர்களை விரட்டிச் சுதந்தரம் பெற வேண்டும்; பெற்ற சுதந்தரத்தை இந்திய மன்னர்களின் ஐக்கிய அதிகாரக் கொடியின் கீழே பாதுகாக்க வேண்டும்;-இதுதான் அன்று அவரது ஒரே லட்சியமாக இருந்தது.

உள்நாட்டுச் சண்டை பூசல்கள் காரணமாகச் சுதந்தரம் மறைந்து,தேசம் அடிமைத்தனத்தில் ஆழ்ந்த வரலாறு அவர் கண் களுக்கு எதிரே சித்திரம்போல் காட்சியளித்தது. ஒரு புறம் சிவாஜி மகாராஜாவின் படமும் மற்றொரு புறம் அவர் தந்தை யான பாஜிராவின் படமும் முறையே பழைய பெருமையையும் தற்போதைய வெட்கக் கேடான நிலைமையையும் விளக்கும் உருவங்களாகத் திகழ்ந்தன. எல்லோருமாகச் சேர்ந்து ஒற்றுமையுடன் அந்நியர்களை எதிர்த்துப் போராடிச் சுததந்ரம் பெறுவது, பின்னர் உள்நாட்டுக் கலகங்களை ஒழித்து, எல்லா ராஜ்யங்களும் அடங்கிய ஓர் ஐக்கிய அரசாங்கத்தை இந்தயா வில் ஏற்படுத்தி, உலகிலுள்ள மற்ற நாடுகளைப்போல் தாங்களும் சம அந்தஸ்துடன் விளங்குவது; - இதுதான் நானா சாஹிபின் திட்டமாகும்.

'ஹிந்துஸ்தானம்' என்பது ஹிந்துக்கள், முஸ்லிம்கள் இரு சமூகத்தினருக்கும் சொந்தம் என்பதே நானாவின் கருத்தாகும். ஆளும் ஆசையின்றி முஸ்லிம்கள் சகோதரர்களைப்போல இருந்து வரும் வரையில், இரு சமூகத்தினருக்கும் சச்சரவு ஏற் படக் காரணம் இல்லை என்பதும் அவர் அபிப்பிராயம். அவர் கள் ஹிந்துஸ்தானத்தில் தனியரசு செலுத்த வேண்டுமென்ற ஆசை கொண்டிருந்ததாலேயே பாஞ்சாலத்தில் குரு கோவிந்த ரும்,ராஜபுதனத்தில் ராணா பிரதாபரும்,புந்தேல்கண்டில் சத்திர சாலனும், மகாராஷ்டிரத்தில் சிவாஜியும் அவர்களின் அட்ட காசங்களை அடக்கும்படி நேர்ந்தது. பின்னர் அவர்கள் தங்க ளுடைய ஆளும் ஆசையை விட்டு விட்டதால், இரு சமூகங்க ளுக்கும் இடையே இருந்த பகைமையும் ஒழிந்தது; இரு சமூகத் தினரும் இந்தியர்களே என்ற எண்ணமும் ஏற்பட்டது. தாங்கள் பாரதத் தாயின் புதல்வர்கள் என்பதை இரு சமூகத்தினரும் உணர்ந்தனர்.

நானா சாஹிப், டில்லி பகதூர் ஷா, மௌல்வி அகமது ஷா, கான் பகதூர் கான் முதலிய பல தலைவர்களும் அதை உணர்ந் தார்கள்; தங்களுடைய பகைமையை எல்லாம் மறந்து, சுதேசிக் கொடியின் கீழே ஒன்று சேர்ந்தார்கள். ஹிந்துக்களும் முஸ்லிம் களும் தோளோடு தோள் நின்று போர் செய்து தேசம் சுதந்தரம் பெற்றதும் இந்திய மன்னர்களின் தலைமையில் ஐக்கிய இந்திய அரசாங்கத்தை அமைக்க வேண்டுமென்றும் நானா சாஹிபும் அஸி முல்லாவும் திட்டம் போட்டிருந்தனர்.

ஆனால் அந்த லட்சியத்தை எவ்விதம் நிறைவேற்றுவது?- இந்தக் கேள்வி பிரம்மாவர்த்த அரண்மனையில் இருந்த எல்லோருடைய மனத்தையும் ஆட்கொண்டது.

சுதந்தரத்தை மீண்டும் பெறுவதற்காக நடக்கப் போகும் பயங்கர யுத்தத்தில் வெற்றிபெற இரண்டு சாதனங்கள் மிக அவசியமானவை. முதலாவதாக, அந்த லட்சியத்தை வெற்றிகரமாக அமலுக்குக் கொண்டு வர வேண்டும் என்ற மகத்தான ஆர்வத்தை உண்டுபண்ண வேண்டும்; இரண்டாவதாக, அதை அடைவதற்குத் தேசம் முழுவதும் ஏககாலத்தில் கொதித்தெழும்படி செய்ய வேண்டும்; இந்தியர்களின் சுதந்தர ஆர்வத்தை நிறைவேற்றுவதற்கு உற்ற போரில் இறங்க வழி காட்ட வேண்டும்; அதற்கான திட்டம் பக்குவம் அடைவதற்கு முன் ஆங்கிலேய அரசாங்கம் அறிந்துகொள்ள முடியாதவாறு அந்த ஏற்பாடுகள் எல்லாம் மிகவும் ரகசியமாக நடைபெற வேண்டும்.

இதை யெல்லாம் மனத்தில் எண்ணியும், அநுபவங்களை மனத்திற் கொண்டும், பிரம்மாவர்த்தத்தில் உடனே ரகசிய ஸ்தாபனம் அமைப்பதெனத் தீர்மானித்து, அவ்விதமே சிறிதும் தாமதமின்றி அதை நிறுவினர். அந்த ரகசிய ஸ்தாபன சம்பந்தமான முழு விவரங்களும் இன்று தெரிய வழியில்லை எனினும், தெரிந்த சில விவரங்களிலிருந்து, அதன் கர்த்தாக்களின் இணையற்ற திறமையைக் குறித்து ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை.

1855-ஆம் ஆண்டு இறுதியில் இந்தியா முழுவதும் பிரசாரம் செய்வதற்காக நானா ஏராளமான தூதுவர்களை அனுப்பினார். அரசியல் லட்சியத்தை ஜனங்கள் எல்லோரும் நன்கு அறிந்துகொள்ளும்படி செய்வதே அந்தப் பிரசாரகர்களின் வேலையாகும். மக்களிடையே விழிப்பு ஏற்படுவதற்காக அவர் பிரசாரகர்களை அனுப்பியதுடன், டில்லியிலிருந்து மைசூர் வரையிலும் உள்ள பலவேறு இந்திய மன்னர்களிடமுங்கூட மிகவும் சாமர்த்தியமும் ராஜதந்திரமும் வாய்ந்த தூதர்களை அனுப்பினார். ஐக்கிய இந்தியாவின் அற்புத ஆட்சியாகிற உயர்ந்த லட்சியத்தை மன்னர்களின் மனத்தில் பதிய வைத்து, புரட்சியில் சேரும்படி அவர்களையும் தூண்டவே நிபுணர்கள் அனுப்பப்பட்டனர். இந்திய மன்னர்கள் எல்லோருக்கும் ரகசியக் கடிதங்களும் அனுப்பப்பட்டன. 'வாரிசு இல்லை' என்ற காரணத்தைக் கூறி, இந்தியர்களின் ராஜ்யங்களை அபகரிக்க ஆங்கிலேயர்கள் எவ்விதம் சூழ்ச்சி செய்து வருகிறார்கள் என்பதும், பாக்கியுள்ள இந்திய ராஜ்யங்களுக்கும் ஏற்கனவே வீழ்ச்சியடைந்த ராஜ்யங்களின் கதியே ஏற்படும் என்பதும், மற்றும் தேசமும் மதமும் அந்நியர்களின் ஆதிக்கத்தின் கீழே மிதியுண்டு வருவதும் அக்கடிதங்களில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருந்தன.

நாட்டை விடுவிப்பதே புரட்சியின் நோக்கமாதலால், இந்திய மன்னர்கள் அதில் கலந்து வேலை செய்ய வேண்டுமென்றும் அக்கடிதங்களின் மூலம் நானா அவர்களைக் கேட்டுக்கொண்

டிருந்தார். கோல்ஹாபூர், பட்டவர்த்தன் சம்ஸ்தானங்களுக்கும் அயோத்தி, புந்தேல்கண்டு முதலிய இதர ராஜ்யங்களின் மன்னர்களுக்கும் நானு தூதர்களையும் கடிதங்களையும் அனுப்பினுர் என்பதற்கு வேண்டிய சாட்சியங்கள் இருக்கின்றன.

மைசூர் தர்பாரில் அத்தகைய தூதர் ஒருவரை ஆங்கிலேயர்கள் கைது செய்தனர். அந்தத் தூதர் கொடுத்த சாட்சியம் மிகவும் முக்கியமானதால் அதை ஒரு வார்த்தைகூட விடாது அப்படியே தருகின்ருேம்: 'அயோத்தியை ஆங்கிலேயர்கள் அபகரிப்பதற்கு இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு முன், ஸ்ரீஜத் நானு சாஹிப் பல சம்ஸ்தானங்களுக்கும் கடிதங்கள் அனுப்ப ஆரம்பித்தார். ஆனுல் அவரது நோக்கம் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை யாருக்கும் இராததால், முதலில் ஒருவரும் அவர் கடிதங்களுக்குப் பதில் அளிக்கவில்லை. பின்னர் அயோத்தியையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றவே நானு பல இடங்களுக்கும் சரமாரியாகக் கடிதங்களை அனுப்பி வந்தார். அதன் பயனுக, நானுவின் கருத்துகளுக்குத் தகுந்த ஆதாரம் இருக்கிறது என்பதை லக்ஷ்மணபுரி அரசாங்கம் உணர்ந்து கொள்ள முற்பட்டது, ராஜா மான்சிங்போன்ற பிரமுகர்களும் நானுவின் அபிப்பிராயத்தை அங்கீகரித்தனர். பிறகு சிப்பாய்களும் கட்டுக் கோப்பான முறையில் தங்களைப் பலப்படுத்திக் கொள்ளத் தொடங்கினர். அவர்களுக்கு லக்ஷ்மணபுரி அரசாங்கமும் உதவியளிக்க முற்பட்டது. அயோத்தியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றும் வரையில் நானுவின் கடிதங்களுக்கு எவ்விதப் பதிலும் கிடைக்கவில்லை. ஆனுல் அவர்கள் அயோத்தியைக் கைப்பற்றியதும் நூற்றுக்கணக்கானவர்கள் நானுவின் கடிதங்களுக்கு அந்தரங்கமாகப் பதிலளித்தனர். தோட்டாக்களில் பசு, பன்றிகளின் கொழுப்பைத் தடவிய சம்பவமும் பின்னர் நிகழ்ந்ததால், ஆங்கிலேயர்கள்மீது ஜனங்களுக்கு அடக்க முடியாத ஆத்திரமும் வெறுப்பும் ஏற்பட்டன. அதிலிருந்து பல இடங்களிலிருந்தும் நானுவுக்குக் கடிதங்கள் வந்து குவிய ஆரம்பித்தன.'

மேலே குறிப்பிட்ட விதம் சாட்சியம் கூறியவர் பல்வேறு சம்ஸ்தானங்களுக்கும் நானு அனுப்பிய கடிதங்களின் ஜாப்தாவையும் கொடுத்துள்ளார். நானுவின் ஒப்பற்ற ராஜதந்திர முறையை, கேய் என்ற ஆங்கில சரித்திராசிரியர் 'சூழ்ச்சிகள்' என்று வர்ணித்திருக்கிருர். எனினும் அவரது திறமையை அந்தச் சரித்திராசிரியரும் புகழாதிருக்க முடியவில்லை!

நானுவின் தூதர்கள், சம்ஸ்தானுதிபதிகளையெல்லாம் சுதந்தர யுத்தத்தில் கலந்துகொள்ளும்படி செய்வதற்காக, டில்லியிலிருந்து மைசூர் வரையிலும் உள்ள பல இடங்களுக்கும் சென்று வருகையில், புரட்சி விதை மற்ற இடங்களைக் காட்டிலும் டில்லியிலே ஆழமாக வேரூன்றி முளைக்க ஆரம்பித்தது. அவ்வமயம் ஆங்கிலேயர்கள் பாதுஷாவின் ராஜ்யத்தைக் கைப்பற்றியதுடன் நில்லாமல், பாபர் சந்ததியாரின் பாதுஷாப் பட்டத்தையும் எடுத்துவிடத் தீர்மானித்தனர்.

டில்லி சக்கரவர்த்தியின் நிலைமை அவ்வளவு மோசமாகியுங் கூட அவரோ, அவரது அளவற்ற அன்புக்குப் பாத்திரமானவரும் திறமையும் உறுதியும் வாய்ந்தவருமான சக்கரவர்த்தினி ஸினத் மஹலோ நம்பிக்கையைக் கைவிட்டுவிடவில்லை. தாங்கள் இழந்த பெருமையை மீண்டும் அடைய அதுதான் இறுதியான சந்தர்ப்பம் என்று நினைத்து அதைப் பூரணமாக உபயோகப் படுத்திக்கொள்ள உறுதிகொண்டனர். அம்முயற்சியில் தாங்கள் உயிர் இழக்கும்படி நேர்ந்தாலும், அது ஆங்கிலேயர்களிடம் பணிந்து வாழ்வதைக் காட்டிலும் எவ்வளவோ மேலானது என்றும் முடிவு செய்தனர்.

அச்சமயம் ஆங்கிலேயர்கள் பாரசீகத்துடன் யுத்தம் புரிந்து கொண்டிருந்தார்கள். அதே சமயம் இந்தியாவில் புரட்சி ஏற்படுமாயின், அது தமக்கு மிகவும் உதவியாக இருக்குமென்று பாரசீக ராஜ்யாதிபதியான ஷா கருதி, டில்லி சக்கரவர்த்தியுடன் கடிதப் போக்குவரத்தை ஆரம்பித்தார். டில்லியிலிருந்து பாரசீகத்துக்கு அவ்வமயம் ஓர் அந்தரங்க தூதர் அனுப்பப்பட்டார் என்பது, டில்லி சக்கரவர்த்தியின் பிரகடனத்திலிருந்து சந்தேகமின்றித் தெரிகிறது.

ஷாவின் ராஜ்யத்தின் நிலைமை இவ்விதம் இருந்து வருகையில் டில்லியில் பொதுஜனங்களின் உணர்ச்சியைத் தூண்டுவதற்கான கிளர்ச்சி ஆரம்பமாயிற்று. அவ்விஷயமாகப் பகிரங்கமான பிரகடனங்கள் சுவரில் ஒட்டப்பட்டன. 1857-ஆம் வருஷம் டில்லியில் கீழ்வருவாறு ஒரு பிரகடனம் சுவர்களில் காணப்பட்டது. 'பாரசீகப் படைகள் பறங்கிகளின் கையிலிருந்து இந்தியாவை விடுவிக்கப் போகின்றன. ஆகையால் இளைஞர்கள்-வயோதிகர்கள், பெரியோர்-சிறியோர், படித்தவர்-பாமரர், சிப்பாய்கள்-சாதாரண ஜனங்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களான சண்டாளர்களிடமிருந்து நம் நாட்டை விடுவிப்பதற்காகப் போர்க்களத்தில் குதிக்க வேண்டும்.'

இவ்விதப் பிரகடனங்கள் பல இடங்களிலும் சுவர்களில் பகிரங்கமாக ஒட்டப்பட்டிருந்துங்கூட, யார் ஒட்டினார்கள் என்பதைக் கண்டுபிடிக்க ஆங்கிலேயர்களால் முடியவில்லை. இந்தியப் பத்திரிகைகளும் அந்தப் பிரகடனத்தைப் பிரசுரித்ததுடன், மிகவும் மர்மான பாஷையில் அதைக் 'கண்டித்தன'! டில்லி அரண்மனையிலுள்ள பாவலரும் ஆங்கிலேயர்களிடம் மக்களுக்கு அதிருப்தி உண்டாகும்படி செய்ததுடன், அவர்களுக்கு விரோதமாகத் தீவிரச் சதி ஆலோசனையிலும் ஈடுபட்டனர்.

அதன் பயனாக ஆங்கிலேயர்களின்மீது ஜனங்களுக்கு எவ்வளவு வெறுப்பு ஏற்பட்டது என்பதைப் பின்வரும் ஒரு சம்பவத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

அதாவது ஸார்ஜன்ட் பிளெமிங் என்ற ஆங்கிலேயனின் புதல்வன் நவாப் பகத்தின் அரண்மனை மைதானத்தில் ஆறு வருஷ காலமாகக் குதிரைச் சவாரிப் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தான். ஆனால் 1857-ஏப்ரல் மாதம் அந்த இளைஞன் மந்திரி

மஹபூப் அலியின் வீட்டுக்குச் சென்றபோது, அவர் ஆங்கிலேயர்களின் அக்கிரமங்களை எண்ணி ஆத்திரமடைந்தவராய், 'இங்கே நிற்காதே, வெளியே போ; பறங்கியின் முகத்தைப் பார்க்கும் போது என் வயிறு பற்றி எரிகிறது' என்று சொல்லிவிட்டு, அவன் முகத்தில் காறி உமிழ்ந்தார். எனினும், மற்றவர்கள் தங்களுடைய ஆத்திரத்தை வெளியே காட்டாமல், சுதந்தர யுத்தத்துக்கு உரிய ஏற்பாடுகளை ரகசியமாகச் செய்துவந்தனர்.

டில்லி மன்னர்மீது நடந்த வழக்கில் ஆல்ட்வெல் என்ற ஆங்கில மாது கொடுத்த சாட்சியத்தில் குறிப்பிட்டதாவது: 'ஆங்கிலேயர்களைப் பூண்டோடு அழித்துவிட வேண்டுமென்று ஆண்டவனைத் தொழும்படி முஸ்லிம் தாய்கள் தங்களுடைய குழந்தைகளிடம் கூறியதை நான் நேரில் கேட்டேன்.'

டில்லி சக்கரவர்த்தியின் அந்தரங்கக் காரியதரிசியான முகுந்தலால் தமது சாட்சியத்தில் கூறியதாவது: 'மொகலாயர்களும் மற்றவர்களும் புரட்சியைப்பற்றிப் பகிரங்கமாக விவாதிக்கத் தொடங்கினார்கள். கூடிய சீக்கிரம் சிப்பாய்கள் புரட்சி செய்வர்; டில்லிப் படைகள் ஆங்கிலேயர்களை எதிர்த்து ஆர்த்தெழும்; பிறகு எல்லா ஜனங்களும் படைகளுடன் சேர்ந்து கொண்டு வெள்ளையர் பூட்டியுள்ள நுகத்தடியைத் தகர்த்தெறிந்து சுயராஜ்யம் பெறுவர்.' - இவ்வித அபிப்பிராயங்களே எங்கும் நிலவி வந்தன: சகல இந்திய மகா ஜனங்களின் மனத்திலும் நம்பிக்கை தளிர்விட்டது. ஆங்கிலேயர்களை ஒழித்துவிட்டால் பின்னர் எல்லா அதிகாரங்களும் தங்கள் கைக்கு வந்துவிடும் என்பதே ஜனங்களின் நம்பிக்கை.

இவ்விதமாக டில்லியிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு நிலவறையிலும் ஆங்கிலேயர்கள்மீது வெறுப்பும் அதிருப்தியும் பரவியிருந்தன. ஒரு பொறி தெறிக்க வேண்டியது தான் தாமதம்; உடனே அது அஷ்டதிக்குகளும் அதிர வெடிப்பது நிச்சயம் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது.

தலை நகரங்களான டில்லி, பிரம்மாவர்த்தம் இவற்றைப் போல் டல்ஹௌஸியின் பேராசைக்குக் கடைசியாகப் பலியான லக்ஷ்மணபுரியும் (அயோத்தியின் தலைநகர்) புரட்சி யுத்த ஜ்வாலையால் பற்றிக்கொண்டது. லக்ஷ்மணபுரி நவாபும் மந்திரியும் அவ்வமயம் கல்கத்தாவுக்கு அருகில் வசித்துக்கொண்டிருந்தனர். அயோத்தி மந்திரியான அலி நக்ஹி கான் வீண் ஆடம்பரச் செலவு செய்துகொண்டு, கல்கத்தாவில் வீண் பொழுது போக்கி வருவதாக வெளிக்குத் தோன்றியது; ஆனால் உண்மையில் அவர் வீண் பொழுது போக்குவதற்காகக் கல்கத்தாவில் வசிக்கவில்லை; மிகவும் ஆபத்தான புரட்சித் திட்டத்தை உருவாக்குவதில் நானா சாஹிபைப்போல் அவரும் முனைந்திருந்தார்.

அவர்கள் ரகசியமாகவும், பரந்த முறையிலும், துணிகரமாகவும் உருவாக்கிய திட்டத்தைக் குறித்து எவரும் ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது. வங்காளச் சிப்பாய்களைத் தங்கள் பக்கம் கவரும் நோக்கத்துடன் அலி நக்ஹி கான் வலையை வீச முற்பட்

டார். தாங்கள் வகுத்துள்ள திட்டத்தின்படி உற்ற நேரம் வந்ததும், தங்களுடன் அந்தச் சிப்பாய்களும் சேர்ந்துகொள்வதற்கான வழியை அவர் செப்பனிட்டு வந்தார். பக்கிரிகள், சந்நியாசிகள் போன்ற வேஷத்தில் அந்தரங்கமாக ஆட்கள் அனுப்பப்பட்டு வந்தனர். ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகச் சிப்பாய்களிடையே பிரசாரம் செய்ய வேண்டியதே அவர்களுடைய வேலை. ஆங்கிலேயர்களிடம் ஊழியம் செய்வதைக் காட்டிலும் சுயராஜ்ய அரசாங்கத்தின் கீழ் ஊழியம் செய்வது ஆயிரம் மடங்கு சிறந்தது என்பதை ராணுவத்திலுள்ள இந்திய அதிகாரிகள் அறிந்து கொள்ளும்படி செய்வதற்காக அவர்களுடன் அலி நக்ஹி கான் கடிதப் போக்குவரத்தும் செய்ய ஆரம்பித்தார்.

அயோத்தியைக் கைப்பற்றியதன் மூலம் ஆங்கிலேயர்கள் இழைத்துள்ள மன்னிக்க முடியாத குற்றம், ஆங்கிலேயர்களால் நவாபின் குடும்பத்தினர் அடைந்த அவமதிப்பு, ராணியையும் ராஜ ஸ்திரீகளையும் ஆங்கிலேயர்கள் பலாத்காரமாக அரண்மனையிலிருந்து வெளியே துரத்திய சகிக்க முடியாத அநீதி - இவற்றைப்போல் மனத்தை உருக்கி, ரத்தம் கொதிக்கச் செய்யும் பல சம்பவங்கள் அக்கடிதங்களில் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன. தைரியசாலிகளான சிப்பாய்களும் அவற்றைக் கேட்டுத் துக்கம் தாங்க முடியாது கண்ணீர் விட்டனர். ஆங்கிலேயர்களின் அக்கிரமச் செயல்கள் சிப்பாய்களின் இருதயங்களில் அம்பு போல் பாய்ந்தன. ஆங்கில ஆட்சியை அழிப்பதே தங்கள் வாழ்க்கையின் முக்கிய லட்சியமென்றும், அந்த ஆட்சியை ஒழித்தே தீருவதென்றும் ஹிந்து சிப்பாய்கள் கங்கைத் தீர்த்தத்தையும், முஸ்லிம் சிப்பாய்கள் குரான் நூலையும் கையில் வைத்துக்கொண்டு சபதம் செய்தனர்.

சுபேதார் மேஜர்கள், சுபேதார்கள், ஜமேதார்கள் முதலிய உயர்தர ராணுவ அதிகாரிகள் எல்லோரும் அவ்விதம் பிரதிக்ஞை செய்துகொண்டதால் ராணுவம் முழுவதுமே பிரதிக்ஞை செய்துகொண்டு விட்டது எனலாம். அத்தகைய சிறந்த தந்திர முறைகளால் அயோத்தி மந்திரி, வங்காளத்தில் ஆங்கிலேயர்களின் கீழிருந்த படைகள் முழுவதையும் தம் வசப்படுத்திக்கொண்டு விட்டார். கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட்டையில்கூட அலி நக்ஹி கானின் புரட்சித் தூதர்கள் மௌனமாக நடமாடலாயினர்!

நானா, பிரம்மாவர்த்தத்திலிருந்து பல சம்ஸ்தானாதிபதிகளுக்கும் கடிதங்கள் அனுப்பிய பின், ஜனங்களிடம் மறைந்து கிடக்கும் சக்தியை எல்லாம் தூண்டிவிடுவதில் தமது முழுக் கவனத்தையும் செலுத்த ஆரம்பித்தார். பிரம்மாவர்த்தம், டில்லி, லக்ஷ்மணபுரி, ஸாதாராபோன்ற பிரபல சம்ஸ்தானங்களின் அதிபதிகள் புரட்சி ஸ்தாபனத்தில் தீவிரமாக ஈடுபட்டிருக்கையில் பணத்துக்கு என்ன பஞ்சம்? சுதந்தரப் போரில் கலந்துகொள்ளும்படி பிரபலஸ்தர்களை எல்லாம் தூண்டுவதற்காக, சொற்ப காலத்துக்குள் ஆயிரக் கணக்கான சந்நியாசிகளும் பக்கிரிகளும் பண்டிதர்களும் தேசமெங்கும் அனுப்பப்பட்டனர்.

மாறுவேடம் பூண்டு சென்ற பக்கிரிகளில் பலர் மிகப் பெரிய மனிதர்கள் ஆவர்; அவர்களில் பலர் கீர்த்தி வாய்ந்த அமீர்களுடன் வசித்தவர்கள். எனவே அவர்களுடைய யாத்திரைக்காக யானைகள் கொடுக்கப்பட்டன. அவர்களுக்குப் பாதுகாப்பாக ஆயுதந் தாங்கிய காவலர்களும் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் தங்கும் இடங்களில் எல்லாம் கூடாரங்கள் அமைக்கப்பட்டன. அவர்கள் தேச சஞ்சாரம் செய்பவர்களைப் போல ஆடம்பரமாகச் சென்றதால் அவர்களை மக்கள் மிகவும் கௌரவித்ததுடன், அவர்களுடைய வார்த்தைகளுக்கும் ஆர்வத்துடன் செவி கொடுத்தனர். அவர்கள் அவ்வாறு பகிரங்கமாகவும் ஆடம்பரமாகவும் சென்றதால் ஆங்கிலேய அரசாங்கம் அவர்கள்மீது சந்தேகம் கொள்ளவில்லை. தேச யாத்திரை செய்வதாகக் கூறிவந்த சந்நியாசிகளும் பக்கிரிகளும் மௌல்விகளும் பண்டிதர்களும் ஒவ்வோரிடத்திலும் ரகசியமாக ஜனங்களுக்குச் சுதந்தர யுத்தத்தைப்பற்றிப் போதித்துச் சென்றனர்! இவ்வாறுகப் புரட்சித் தீ எங்கும் பரவுவதற்கான முறைகள் வெகு தந்திரமாகக் கைக்கொள்ளப்பட்டன.

அந்தப் போதகர்கள் ஒவ்வொரு நகரத்துக்கும் கிராமத்துக்கும் சென்று பிரசாரம் செய்து வருகையில், அவர்களுக்குப் பின் ஏராளமான தொண்டர்கள் பிச்சைக்காரர்களைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு கூட்டம் கூட்டமாகச் சென்று தீவிரப் பிரசாரம் செய்து வந்தார்கள். அவர்கள் பிச்சையெடுப்பவர்கள்போல் வீட்டுக்கு வீடு சென்று, ஜனங்களின் உள்ளத்தில் சுதந்தர உணர்ச்சியும் தேசபக்தியும் குமுறி எழும்படி செய்தார்கள். அந்நியர்களின் ஆதிக்கம் காரணமாக நம் தேசம் அடைந்துள்ள இழிவான நிலைமையைப்பற்றியும் ஜனங்களுக்கு எடுத்துரைத்து, அவர்களின் மனத்தில் தேச ஆவேசம் பொங்கும்படி செய்தனர்.

இந்தியர்கள்மீது எப்போதும் சந்தேகக் கண் வைத்திருந்த தந்திரிகளான ஆங்கிலேயர்களுக்குச் சிறிதும் தெரியாமல் இந்த ஏற்பாடுகளெல்லாம் நடந்து வந்ததுதான் ஆச்சரியமாகும். இதிலிருந்து தேசபக்தர்கள் எவ்வளவு ஜாக்கிரதையாகவும் ரகசியமாகவும் நடந்துகொண் டிருக்க வேண்டும் என்பதை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம். சந்நியாசிகளோ பக்கிரிகளோ சென்று பிரசாரம் செய்த இடங்களிலெல்லாம் மக்களிடையே சுதந்தர உணர்ச்சியும், வெள்ளையர்கள்மீது வெறுப்பும் உண்டாகத் தொடங்கின.

வெள்ளை அதிகாரிகளுக்குத் தண்ணீர் கொண்டுவர இந்திய வேலையாட்கள் மறுத்தனர். வெள்ளையரின் வீடுகளில் வேலை பார்த்த ஆயாக்கள் அவர்களிடம் சொல்லிக்கொள்ளாமலே வேலைகளை விட்டுவிட்டனர். வேலையாட்கள் சரிவர உடுத்துக் கொள்ளாமல் வெள்ளை எஜமானர்களின் முன்னிலையில் வரத் துணிந்தனர். வெள்ளையர்கள் தங்களிடம் வேலை பார்க்கும் சிறு பையன்களை ஏதாவது அலுவலாக வெளியே எங்கேயாவது அனுப்பினல், அவர்கள் தாமதித்து வரவும், தாமதத்துக்கு என்ன

காரணமென்று கேட்டால் எதிர்த்துப் பேசவும் ஆரம்பித்தார்கள். இந்தியர்களிடையே ஏற்பட்ட இத்தகைய மாறுதலைக் கண்டு ஆங்கிலேயர்கள் ஆச்சரியப்பட்டனரே அன்றி, இதன் மூலகாரணம் என்ன என்பதுபற்றி அவர்களுக்குச் சிறிதும் சந்தேகம் ஏற்படவில்லை!

பக்கிரிகளும் பண்டிதர்களும் எந்தச் சமயத்திலும் ராணுவக் கூடங்களையே சுற்றிச் சுற்றி வரலாயினர். பாரக்புரி, மீரத், அம்பாலா, பிஷாவர் முதலிய இடங்களிலிருந்த ஒவ்வொரு ராணுவக் கூடத்தையும் சூழ்ந்துகொண்டு மௌல்விகள் பல ரகசியச் சங்கங்களை ஏற்படுத்தினார்கள். ராணுவத்திலிருந்த ஹிந்து, முஸ்லிம் சிப்பாய்கள் தங்களுடைய மத குருமார்களிடம் மிகுந்த பக்தியுடன் இருந்ததால், அந்தக் குருமார்கள்மீது வெள்ளையர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டாலுங்கூட, அவர்களுக்கு எதிராக நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக்கொண்டால், ஏற்கனவே ஆத்திரங் கொண்டுள்ள சிப்பாய்களின் மனத்தை, மேற்கொண்டு புண்படுத்துவதாகுமோ என்று ஆங்கிலேயர்கள் அஞ்சினர். அந்த மத போதகர்கள்மீது சர்க்காருக்குச் சந்தேகம் ஏற்பட்ட சமயங்களில், அந்த அரசியல் சந்நியாசிகள் அவ்விடத்தை விட்டு அகன்று அருகில் இருக்கும் கிராமத்துக்குச் சென்று சிப்பாய்களின் வீடுகளிலேயே வசித்துக்கொண்டு புரட்சி யுத்தத்துக்கு விதைகளை விதைக்கத் துவங்கினர்.

மீரத் ராணுவ முகாமுக்கு அருகில் வசித்துக்கொண்டிருந்த ஒரு பக்கிரியை, சர்க்கார் அவ்விடத்தை விட்டுச் சென்றுவிடும்படி உத்தரவிட்டார்கள். சர்க்காரின் உத்தரவு கிடைத்ததும் அந்தப் பக்கிரி ஒன்றும் அறியாத சாதுவைப் போல் யாதொரு பதிலும் கூறுமல் தன் யானைமீது ஏறி, பக்கத்திலுள்ள கிராமத்துக்குச் சென்று சிப்பாய்களின் வீடுகளில் சொஸ்தமாக வசித்துக்கொண்டு தம் அலுவல்களைக் கவனிக்க முற்பட்டார்!

அவர்தாம் அதி தீவிர தேச பக்தரான மௌல்வி அகமதுஷா என்பவர். அவரது புனிதமான பெயர் ஹிந்துஸ்தானத்துக்கே ஒளியைக் கொடுத்திருக்கிறது. தேசத்துக்காக அவர் புரிந்த அற்புதச் சாகசங்கள் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. புரட்சி யுத்த வெறியை நாடெங்கும் விதைப்பதற்காக யாத்திரை சென்று வந்த அவர், லக்ஷ்மணபுரியில் நடந்த பொதுக் கூட்டங்களில் பதினாயிரக்கணக்கான ஜனங்களுக்கு முன்னிலையில் பகிரங்கமாகத் தேசீயப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். ஆங்கிலேயர்களைக் கொன்று குவித்து, தேசத்திலிருந்து அவர்கள் பூண்டையே ஒழித்தாலன்றி, தாய் நாட்டையோ மதத்தையோ பாதுகாக்க முடியாது என்பதுதான் அவர் செய்த உபதேசம். அவ்விதம் உபதேசம் செய்ததற்காக அவர்மீது ராஜத் துவேஷக் குற்றம் சாட்டி, ஆங்கிலேயர்கள் அவருக்குத் தூக்குத் தண்டனை விதித்தார்கள்.

மதோபதேசம் செய்வதற்காகப் படைகளின் ஒவ்வொரு பிரிவிலும் ஒரு முல்லாவும் ஒரு பண்டிதரும் இருப்பது வழக்கமாக இருந்து வந்தது. அவ்வழக்கத்தைத் தங்களுக்குச் சாதகமாகக் கொண்டு புரட்சிக்காரர்கள் ராணுவத்தில் பிரவேசித்து, இரவு நேரங்களில் சிப்பாய்களுக்கு ரகசியமாகப் புரட்சி உபதேசம் செய்து வந்தனர். இவ்வாறாக அந்த அரசியல் சந்நியாசிகள் இரண்டு வருஷகாலம் வரையில் கிராமம் கிராமமாகச் சென்று புரட்சி உபதேசம் செய்து, வரப் போகும் பயங்கர யுத்தத்துக்கான விதைகளை விதைப்பதில் வெற்றியும் பெற்றூர்கள்.

கிராமங்களில் பிரசாரம் நடந்ததுபோல் நகரங்களிலும் தீவிரப் பிரசாரம் நடந்து வந்தது. ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் கூடும் முக்கிய ஸ்தலங்களில் புரட்சிக்காரர்கள் தங்களுடைய அலுவல்களை அதி தீவிரமாக நடத்தி வந்தனர். கொள்ளைக்காரர்களான வெள்ளையர்கள்மீது மக்களுக்கு இருந்து வந்த மௌன வெறுப்பு, புரட்சிக்காரர்களின் ஆவேச உபதேசங்களால் ஆழ்ந்த துவேஷமாக மாறியது,

கங்கை நதிக்கரையிலுள்ள புண்ணிய ஸ்தலங்களிலெல்லாம் பெரும் பரபரப்பு ஏற்பட்டது. அந்த க்ஷேத்திரங்களிலுள்ள ஜனங்களுக்கு வெள்ளையர்கள்மீது ஏற்பட்ட எல்லையற்ற வெறுப்பை ஒரே ஒரு சம்பவத்தால் அறிந்துகொள்ளலாம். அதாவது வெள்ளையர்களை வெறுத்த ஜனங்கள் காசியிலுள்ள கோவில்களில் எல்லாம் தங்கள் சொந்த ராஜாக்களின் வெற்றிக்காக இடைவிடாது பிரார்த்தனைகள் நடத்தலாயினர்.

சுதர்மமும் சுதந்தரமும் எவ்வாறு அந்நியர்களால் நசுக்கப்பட்டு வருகின்றன என்பதை ஜனங்களுக்கு எளிய பாஷையில் சிறிதும் சந்தேகமின்றி வலியுறுத்திக் கூறுவதற்காகப் புரட்சிக்காரர்கள், பல்வேறு இடங்களிலும் வழக்கமாக நடைபெறும் உற்சவங்களையும் தமாஷாக்களையும் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக்கொண்டார்கள். கூட்டங்கள் கூட்டினால் வெள்ளை அதிகாரிகளுக்குச் சந்தேகம் ஏற்படக் கூடும் என்றே இம்முறையைக் கையாண்டார்கள். திருவிழாக்களிலும் தமாஷாக்களிலும் எவ்விதத் தூண்டுதலும் இன்றி ஏராளமான ஜனங்கள் கூடுவது வழக்கமல்லவா?

நாடக சாலைகள், கூத்து மேடைகள், போலீஸ் ஸ்டேஷன்கள், தர்மசாலைகள் முதலிய பல இடங்களிலும் மக்கள் புதிய பாஷையில் (புரட்சி பாஷையில்) பேச ஆரம்பித்தனர். ஜனங்களுக்கு ஆவேசத்தையும் போர்வெறியையும் தூண்டும் வீர ரசம் ததும்பும் பாடல்கள் எல்லாத் திசைகளிலும் கிளம்பின.

ஆல்ஹா - ஊதல் என்ற பிரசித்தி பெற்ற கீதத்தில் நமது முன்னோர்களின் சிறப்பு விவரிக்கப்பட் டிருக்கின்றது. பிரசாரகர்கள் அந்தக் கீதத்தை ஆவேசத்துடன் பாடியபோது ஜனங்களின் கைகள் தினவெடுத்ததுடன் தங்களுக்கு ஒரு காலத்தில் இருந்த சிறப்பையும், தற்போதைய தாழ்வையும் குறித்து

அவர்கள் ரத்தம் கொதிக்க ஆரம்பித்தது. பறங்கியர்மீது அவர்களுக்கு வெறுப்பும் மனத்தில் வீரமும் பொங்கின.

பல உற்சவங்களில் வேடிக்கைகள் நடத்திய எல்லோரும் தீவிர தேசபக்தர்களான புரட்சிக்காரர்களே. அவர்களெல் லோரும் பரம சாதுக்களைப்போலவும், வயிற்றுப் பிழைப்புக்காக வேடிக்கைகள் செய்பவர்போலவும் பாசாங்கு செய்துகொண்டு ஜனங்களிடையே புரட்சித் தீ பரவும்படி செய்து வந்தனர். அவர்கள் மிகுந்த தந்திரசாலிகள் ஆனதால், அவர்களைப்பற்றிய உண்மையை வெள்ளையர்கள் சிறிதும் அறிந்துகொள்ள முடிய வில்லை. அந்தப் புரட்சிக்காரர்கள் கல்கத்தாவிலிருந்து பாஞ் சாலம் வரையில், தங்களுடைய விசித்திரமான தமாஷாக் களின் மூலம் ஜனங்களுக்குத் தேச ஆவேசத்தை உண்டு பண்ணியதுடன் சுதந்தர யுத்தத்துக்கு அவர்களைப் பக்குவப் படுத்தியும் வந்தார்கள்.

அந்தத் தமாஷாக்களின் மூலம் பெண்களிடையே பிரசாரம் செய்ய முடியாததால், புரட்சித் தலைவர்கள் ஒரு யுக்தி செய்தனர். பல புரட்சிக்காரர்களையும் அவர்க ளுடைய மனைவிமார்களையும் குறவர்போல் மாறுவேடம் தரிக்கும்படி செய்து, வைத்தியம் செய்பவர்கள்போலவும், குறி சொல்பவர்கள் போலவும் பல இடங்களுக்கு அனுப்பி, பெண் களின் மனத்திலும் தாய்நாட்டின்மீது பற்றுதலும் வெள்ளையர் கள்மீது துவேஷமும் ஏற்படும்படி செய்தனர். குறி சொல்லும் பெண்களைக் கண்டால், இந்தியப் பெண்கள் விடமாட்டார்கள். அவர்களிடமிருந்து தங்களுடைய எதிர்காலத்தை அறிந்து கொள்ள மிகவும் ஆர்வம் கொள்வார்கள். அவர்களிடையே பிர சாரம் செய்யப் புரட்சித் தலைவர்கள், குற ஜாதிப் பெண்களைப் போல வேடம் பூண்டவர்களை அனுப்பியது மகா புத்திசாலித் தனமாகும்.

மற்றும் அடிமைப் பிணியை அகற்றவும் தாயைப் பிடித் துள்ள கொடிய பிசாசு என்று தொலையும் என்பதுபற்றிக் குறி சொல்லவும் பெண்களை அனுப்பியது மிகப் பொருத்தமான செய்கையல்லவா? அந்தப் பெண்கள் தந்திரமாகச் செய்த பிரசா ரம் காரணமாக, இந்தியப் பெண்மணிகளுக்கும் ஆங்கிலேயர்கள் மீது வெறுப்பும், அவர்களின் ஆட்சியை அழித்து ஒழித்துவிட வேண்டும் என்ற ஆர்வமும் ஏற்பட்டன.

இவ்வாறுகக் கோவில்கள், தீர்த்தங்கள், க்ஷேத்திரங்கள், களியாட்டங்கள், திருவிழாக்கள், ரஸ்தாக்கள், வீடுகள், சிப்பாய் களின் இருப்பிடங்கள், நாடகங்கள், கூத்து மேடைகள் முதலிய எல்லா இடங்களும், வரப் போகும் சுதந்தரப் போருக்கு மக்களைத் தயாரிப்பதற்கான பயிற்சிச்சாலைகளாக மாறின.

எங்கே பார்த்தாலும் அடிமைத்தனத்தில் வெறுப்பும் சுதந்தர ஆர்வமும் பொங்கி வழிந்தன. தேசம் புத்துயிர் பெற வேண்டும், மீண்டும் இந்தியர்கள் வீர புருஷர்களாகத் திகழ வேண்டும் என்ற ஆர்வம் ஒவ்வொருவருடைய மனத்திலும்

பொங்கியது. சுதந்தரத்தைப் பெற ஆறுபோல் ரத்தம் சிந்து வதும் அற்பமான தியாகமே என்ற உறுதியான எண்ணம் எங்கும் நிலவியது. எங்கே பார்த்தாலும் சுதந்தர யுத்த கோஷங்கள் வானை அளாவின.

ஒருவருடைய மனத்தில் சுதந்தர ஆர்வத்தை உண்டாக்க வும், அந்த ஆர்வத்தை நிறைவேற்றுவதற்கான செயலில் அவர் இறங்கும்படி செய்யவும் சுவை நிறைந்த இன்னிசைப் பாடல் களைக் காட்டிலும் சிறந்த கருவி வேறு எதுவும் இல்லை. ஜனங்களின் மனத்தை மகத்தான ஒரு லட்சியம் ஆட்கொள்ளும் பொழுது, அந்த லட்சியத்தின் உயர்வை மற்றவர்களைக் காட்டிலும் கவிமணிகள்தாம் நன்கு அறிந்துகொள்ளுகிறார்கள். உடனே அவர்கள் அதை அழகிய பண் நிறைந்த மொழிகளால் உருவாக்கி, அது மக்களின் மனத்தை உருக்கி இருதயத்தைக் கொள்ளை கொள்ளும்படி செய்கிறார்கள். அதனால்தான் சகல புரட்சிகளிலும் தேசீய கீதங்கள் முக்கிய ஸ்தானம் வகித்துப் பேருதவி புரிகின்றன. தேசீய கீதங்கள் தேசத்தின் ஆத்மாவை யும் ஆத்ம சக்தியையும் சித்திரிப்பனவே யாகும். அந்தக் கீதங்கள்தாம் மக்களின் இருதயங்களை ஒன்றுபடுத்துகின்றன.

பாரத பூமியின் ஆத்மா சுதந்தர ஆர்வத்தினால் ஏங்கி வருகையில், தங்களுடைய சுதர்மத்தைப் பாதுகாத்துச் சுயராஜ்யம் அடைய வேண்டுமென்று மக்கள் துடித்து வருகை யில், அவர்களின் அபிலாஷைகள் கீதங்களாகப் பீரிட்டுக் கொண்டு கிளம்புவது இயற்கையே. டில்லி சக்கரவர்த்தியின் பிரதான சம்ஸ்தானக் கவிவாணர், தாமே ஓர் அற்புதமான தேசீய கீதத்தை இயற்றினார். அந்தக் கீதத்தை அப்போது பாடாதவர்களே இல்லை எனலாம். பொது வைபவங்கள் எல்லா வற்றிலும் அதைப் பாட வேண்டும் என்று டில்லி சக்கர வர்த்தியே நேரில் கட்டளை பிறப்பித்தார். அந்தக் கீதம் இந்தியர்களின் பண்டைய வீரச் செயல்களை விளக்கியதுடன், தற்போதைய வீழ்ச்சியையும் கேட்பவர் மனம் உருகும்படி சித்திரித்தது. நேற்று, கம்பீரமாகவும் சுதந்தரத்துடனும் சிம்மாசனத்தில் வீற்றிருந்த முடி மன்னர்கள் இன்று எப்படி அடிமைகளாகி அவதிப்படுகிறார்கள்? நேற்று ராஜாங்க மதங் களாக இருந்த இந்தியர்களின் மதங்கள் இன்று பாதுகாப்பின்றி எப்படிச் சீர்குலைந்திருக்கின்றன? சமீப காலம் வரையில் முடிதரித் துப் பெருமையுடன் விளங்கியவர்கள் இன்று அந்நியர்களின் காலால் மிதியுண்டு எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறார்கள்?— இருதயத்தைப் பிளக்கும் இவைபோன்ற சம்பவங்கள், அந்தக் கீதத்தில் அடங்கியிருந்தன. தேசமக்கள் கூக்குரலின் எதிரொலி போல் அந்தக் கீதம் திகழ்ந்தது.

மக்களின் பழைய பெருமையையும் தற்போதைய வீழ்ச்சி யையும் குறித்து, அந்தக் கீதம் அவர்களுடைய இருதயத்தில் உணர்ச்சி வெள்ளம் பொங்கும்படி செய்து வருகையில், திடீரென்று ஒரு தீர்க்கதரிசனம் ஜோதிபோல் உதய மாயிற்று. அந்த ஜோதி, எதிர்காலத்தை ஒட்டி ஜனங்

களின் மனத்தில் இருந்த அந்தகாரத்தை அகற்றி, நம்பிக்கையை உண்டுபண்ணியது. அதன் காரணமாக எல்லா ஜனங்களும் மிகுந்த உற்சாகம் கொண்டார்கள்.

சுயராஜ்யம் எப்போது கிடைக்குமென்று இந்தியாவின் இருதயம் மிகுந்த ஏக்கம் கொண்டிருந்தது அல்லவா? இந்தியர்களின் சுதந்தர ஏக்கம் தீர்ந்து சுயராஜ்யம் சீக்கிரத்தில் கிடைத்து விடும் என்பதே அப்போது எழுந்த தீர்க்க தரிசனமாகும். இமயத்திலிருந்து குமரி வரையிலுமுள்ள சகல ஜனங்களும் அந்தத் தீர்க்க தரிசனத்தைப் பரப்பினர். வெள்ளையர் ராஜ்யம் இந்தியாவில் ஏற்பட்டதிலிருந்து சரியாக நூருவது வருஷத்தில் அந்த ராஜ்யம் மறைந்துவிடுமென்று பல பல நூற்றுண்டுகளுக்கு முன் தெய்விக முனிவர் ஒருவர் கூறியிருக்கிறுர் என்பதே அந்தத் தீர்க்க தரிசனமாகும்! அதை இந்தியப் பத்திரிகைகள் பிரபலமாகப் பிரசுரித்ததுடன், 1857-ஆம் வருஷம் ஜூன் மாதம் 23-ஆம் தேதி பிரிட்டிஷ் கம்பெனியின் ராஜ்யம் பல சுக்கல்களாகத் தகர்ந்துவிடப் போகிறது என்பதே அந்தத் தீர்க்க தரிசனத்தின் பொருள் என்றும் வியாக்கியானம் செய்தனர்.

ஆஹா! இந்தியா முழுவதும் அது செய்த வேலை ஆச்சரியமானது. அப்போது பல அற்புதச் செயல்கள் நிகழ்ந்ததற்கும் அதுதான் மூல காரணம். அந்தத் தீர்க்கதரிசனம் அப்போது ஏற்பட்டிராதிருக்குமாயின், இந்தச் சரித்திரத்தின் பல பகுதிகளையும் முற்றும் வேறு விதமாக எழுதும்படி நேர்ந்திருக்கும்!

1857-இல் பிளாஸி யுத்தம் நடந்து சரியாக நூறு ஆண்டுகள் ஆகியிருந்தன. கம்பெனியின் ஆட்சி அவ்வருஷத்தில் முடிந்துவிடும் என்ற எண்ணம் ஜனங்களின் மனத்தில் விசித்திரமான நம்பிக்கையை உண்டுபண்ணியது! அந்த எண்ணம் 1857-ஆம் ஆண்டில் இந்தியா முழுவதும் மகத்தான உத்வேகத்தையும் எழுப்பியது.

மேலே குறிப்பிட்ட தீர்க்கதரிசனத்தின் கர்த்தா யார் என்பதுபற்றி ஆங்கில சரித்திராசியர்களுக்குள் கடுமையான விவாதம் நடந்த பின், அது சில தேசபக்தர்கள் செய்த ஒரு தந்திரமே என்பது சந்தேகத்துக்கு இடமின்றி முடிவு செய்யப்பட்டது. அது எப்படியாயினும், அந்தக் காரணத்திஞல் தேசம் முழுவதும் இளைஞர், வயோதிகர் என்ற பேதமின்றிச் சகலருடைய மனத்திலும் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது என்பதிலும், அந்தத் தீர்க்கதரிசனத்தை மெய்ப்பிக்க எல்லோரும் ஆயத்தமாயினர் என்பதிலும் சிறிதும் சந்தேகம் இல்லை.

முதல் முதலாகப் பிரம்மாவர்த்தத்தில் ஆரம்பிக்கப்பட்ட ரகசியப் புரட்சி ஸ்தாபனம், அவ்வமயம் அதிவேகமாக வளர்ச்சி பெற்று வந்தது. அதன் தலைவர் மௌல்வி அகமது ஷாதாம் என்றும், புரட்சியின் கிளை ஸ்தாபனங்கள் இந்தியா முழுதும் இருந்தனவென்றும், ஆக்ரா, டில்லி, மீரத், பாடலிபுரம், கல்கத்தா முதலிய இடங்களில் புரட்சி ஸ்தாபனங்கள் இருந்தன

என்பதற்குச் சந்தேகமில்லை என்றும் மாலிஸன் என்ற ஆங்கில சரித்திராசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

இதற்குள் வட இந்தியாவிலுள்ள பல இடங்களிலும் புரட்சிச் சங்கங்கள் உரம் பெற்று, அவைகளுக்குள் ஒழுங்காகக் கடிதப் போக்குவரத்தும் நடைபெறலாயிற்று. தக்ஷிணத்திலும் இந்த ஸ்தாபனத்தின் முக்கியக் கிளை ஒன்றை ஆரம்பிப்பதற்காக ரங்க பாபுஜி பெரு முயற்சி செய்து வந்தார்.

கான்பூரில் புரட்சி நடவடிக்கைகளுக்கெல்லாம் பிரம்மா வர்த்தமும், டில்லியில் அந்நகர் மந்திராலோசனை மண்டபமும் பிரதான இடங்களாக விளங்கின. மகானும் ஞானியுமான அகமது ஷா சுதந்தர யுத்தத்துக்கான வலைகளை வெகு திறமையுடன் வீசி வந்தார். அந்த வலை லக்ஷ்மணபுரியிலும் ஆக்ராவிலும் உள்ள மூலை முடுக்குகளிலுங்கூடப் பரவிக் கிடந்தது!

ஜகதீசபுரி வீரரான குமாரசிம்மன் தமது மாகாணத்தின் தலைமைப் பதவியை ஏற்று, நானா சாஹிபுடன் கலந்து ஆலோசித்து யுத்த சாதனங்களைச் சேகரிப்பதில் மும்முரமாக ஈடுபட்டார்.

சுதந்தர யுத்த விதை பாடலிபுரத்தில் மிகவும் ஆழ்ந்து வேரூன்றி இருந்ததன் பயனாக, அது அந்நகர்ப் புரட்சிக் கட்சியினரின் உறைவிடமாகியது! ஜாதி, சமய, மத வேற்றுமை எதுவுமின்றி மௌல்விகள், பண்டிதர்கள், ஜமீன்தார்கள், குடியானவர்கள், வியாபாரிகள், வக்கீல்கள், மாணவர்கள் முதலிய எல்லோரும், சுதந்தரத்தையும் சுதர்மத்தையும் பாதுகாப்பதற்காகத் தங்களுடைய உயிர்களையும் தியாகம் செய்ய ஆயத்தமாயினர். அந்த ரகசிய ஸ்தாபனத்தின் பிரபலத் தலைவர் ஒரு புத்தக வியாபாரியாவார்!

கல்கத்தாவுக்கு அருகில் அயோத்தி நவாபும் அவருடைய மந்திரியான அலி நக்ஹி கானும் சிப்பாய்களின் மனத்தை மாற்றி, சுதந்தர யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கச் செய்தனர். ஹைதராபாத்திலுள்ள முஸ்லிம்களெல்லோரும் ரகசியக் கூட்டங்கள் கூடி, சுதந்தரப் போருக்குச் சன்னத்தமாயினர். புரட்சிச் சுழல்கள் கோல்ஹாபூர் தர்பாரையும் சூழ்ந்துகொள்ள ஆரம்பித்தன. பட்டவர்த்தன சம்ஸ்தானமும் கங்கிலியிலுள்ள நானா சாஹிபின் மாமனாரும் தங்களுடைய படைகளுடன் போர் புரிய முனைந்து நின்றனர். தேச முழுவதும் ஒரே கொடியின் கீழ் ஒற்றுமையுடன் போர் புரியச் சித்தமாயினர்.

அவ்வமயம் சென்னையிலும் ஜனங்கள் தூங்கிக்கொண்டிருக்கவில்லை. மற்ற இடங்களைப்போல் அங்கும் புரட்சித் தீ கொழுந்துவிடும் தறுவாயில் இருந்து வந்தது. 1857-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் சென்னை நகரிலுள்ள பல சுவர்களிலும் ஒட்டப்பட்டிருந்த பிரகடனம் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது.

'தேச சகோதர சகோதரிகளே, மத பக்தர்களே, எழுங்கள்! எல்லோரும் எழுங்கள்! நம் நாட்டின் பகைவர்களும் நமது

மதத் துரோகிகளுமான பறங்கியர்களை விரட்டியடிக்க வீறு கொண்டு எழுங்கள்! நீதியையும் தர்மத்தையும் அவர்கள் கால்களால் மிதித்து நசுக்கிவிட்டார்கள். சுயராஜ்யம் என்ற நமது விலையிலாப் பொக்கிஷத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டார்கள். நம் நாட்டை மண்ணோடு மண்ணாகச் செய்ய அவர்கள் உறுதி கொண்டுள்ளனர். அந்தக் கொடிய துரோகிகளிடமிருந்து இந்தியாவை விடுவிக்க 'ஒரே வழிதான் இருக்கிறது; கோரமான யுத்தத்தைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை. இது சுதந்தர யுத்தம்; நீதியை அடிப்படையாகக் கொண்ட மதப் போர். இந்த யுத்தத்தில் பலியாவோர்தாம் நம் நாட்டின் உண்மையான தியாகிகள் ஆவர். அவர்களுக்குத் தான் வீரசுவர்க்க வாசல் திறக்கும். தங்களுடைய தேசத்துக்குச் செய்யவேண்டிய கடமையிலிருந்து வழுவும் கோழைகளான துரோகிகள் கொடிய நரகத்தில் ஆழ்ந்து துடிப்பர் என்பதில் அணுவளவும் ஐயமில்லை. தேச சகோதர சகோதரிகளே! இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? இன்றே, இந்த க்ஷணத்திலேயே முடிவு செய்யுங்கள்!' என்பது தான் அந்தப் பிரகடனமாகும்.

பல்வேறு மாகாணங்களிலும் எண்ணிக்கையற்ற கோஷ்டியினர் தேச விடுதலைப் போராட்டத்தை ஒட்டித் தனித்தனியாக வேலை செய்துகொண் டிருந்தனர். எனவே, அவர்களை யெல்லாம் ஒன்று சேர்க்கப் புரட்சித் தலைவர்கள் முயலவேண்டி இருந்தது. அதற்காகப் பலர் ரகசியமாக அனுப்பப்பட்டனர். அது சம்பந்தமாகத் தலைவர்கள் கடிதங்கள் அனுப்பாதது மிகவும் புத்திசாலித்தனமான காரியமாகும். இரண்டொரு கடிதங்கள் அனுப்பித் தீரவேண்டிய அவசியம் ஏற்பட்டபோதும், அவர்கள் பெயர்களைக் குறிப்பிடாமல் மிகவும் மர்மமான பாஷையிலேயே எழுதி அனுப்பினர்.

இவ்வாறு சிறிது காலம் சென்றதும் ஆங்கிலேய அதிகாரிகளுக்கு ஏதோ சந்தேகம் உண்டாகி, மர்மமான எல்லாக் கடிதங்களையும் பிரித்துப் பார்க்க முற்பட்டார்கள். அதன் பின் புரட்சித் தலைவர்கள், தேச பக்தர்களைத் தவிர வேறு யாருக்கும் புரியாத ஒரு பாஷையை, அதாவது புள்ளிகளும் இலக்கங்களும் மாத்திரம் அடங்கிய ஒரு பாஷையைத் தாங்கள் எழுதும் கடிதங்களில் உபயோகிக்கலாயினர்.

இவ்விதமாக நாடெங்கும் புரட்சி உருவாகி வருகையில், அதிகாரிகள் எரியும் ஜ்வாலையில் எண்ணெயை ஊற்றுவதற்கொப்ப, சிப்பாய்களின் மத உணர்ச்சியை நசுக்கும் நோக்கத்துடன், தோட்டாக்களில் பசுவின் கொழுப்பையும் பன்றியின் கொழுப்பையும் தடவத் தொடங்கினர். அதிகாரிகளின் அந்தச் செய்கை, புரட்சியாகிற மருந்துக் குவியலில் தீப் பொறி தெறித்ததுபோல் ஆகியது! உற்ற சமயம் வந்ததும் தேசத்தின் சார்பில் துப்பாக்கிகளை ஏந்திச் செல்லச் சிப்பாய்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு கிளம்பினர்.

நானா சாஹிபும் அலி நக்ஹி கானும் எப்படி ஒவ்வொரு படைப் பிரிவிலும் உள்ள சிப்பாய்களைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டார்கள் என்பதும், எப்படி ஆயிரக்கணக்கான பக்கிரிகள் பல இடங்களுக்கும் சென்று சிப்பாய்களின் மனத்தில் தேச பக்தித் தீயை மூட்டினார்கள் என்பதும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆனால் ஆங்கிலேயர்கள் தோட்டாக்களுக்குக் கொழுப்புத் தடவும் அக்கிரம முறையைக் கைக்கொண்டபின், பக்கிரிகள் பல இடங்களுக்கும் சென்று பிரசாரம் செய்ய வேண்டிய அவசியம் இராமற் போயிற்று. ஏனெனில் ஆங்கிலேயர்களின் அந்தச் செய்கை சிப்பாய்களுக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணிவிட்டதால் அவர்களே பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

அந்த இரண்டுமாத காலத்துக்குள் பாஞ்சாலம், மகாராஷ்டிரம், அம்பாலா முதலிய பல இடங்களிலும் முகாம் போட்டிருந்த சிப்பாய்களுக்கு அயோத்தி நவாபின் பெயரால் பாரக்புரியிலிருந்து ஆயிரக்கணக்கான கடிதங்கள் பறந்தன. சிப்பாய்களுக்கு அவ்வளவு அதிகக் கடிதங்கள் செல்வதைக் கண்ட ஆங்கில அதிகாரிகளுக்கும், குறிப்பாக ஸர் ஜான் லாரென்ஸுக்கும் சந்தேகம் ஏற்படவே அவர்கள் அதையெல்லாம் பிரித்துப் பார்க்க ஆரம்பித்தார்கள். இதன் மத்தியில் சிப்பாய்களிடையே சுய நம்பிக்கை பலமடைந்து வந்தது.

காளி நதியில் நடந்த சுதந்தரப் போரில் காயமடைந்த சிப்பாய்களை எல்லாம் பீரங்கிகளின் வாயில் வைத்துச் சுட்டு விடும்படி வெள்ளையர்கள் உத்தரவிட்டனர். ''எங்களுக்கு விரோதமாகப் புரட்சி செய்ய நீங்கள் எவ்விதம் துணிந்தீர்கள்!'' என்று அவர்கள் சிப்பாய்களைக் கேட்டபோது, ''இந்தியச் சிப்பாய்கள் எல்லோரும் ஒன்றுபடுவார்களாயின், பின்னர், கடலில் பெருங்காயம் கரைத்ததுபோல் வெள்ளையர்கள் இருந்த சுவடே தெரியாமல் போய்விடும்'' என்று சிப்பாய்கள் பதிலளித்தனர்!

ஆங்கிலேயர்களால் பிரிக்கப்பட்ட ஒரு கடிதத்தில் கீழ்வருமாறு குறிப்பிட்டிருந்தது: 'சகோதரர்களே, அந்நியர்களின் கத்தியால் நாமே நம்முடைய உடலில் குத்திக்கொள்ளுகிறோம். நாம் எல்லோரும் ஒற்றுமையுடன் எழுவோமாயின் நமக்கு வெற்றி நிச்சயம். பின்பு கல்கத்தாவிலிருந்து பிஷாவர்வரையில் நமது இஷ்டப்படி செல்லுவதை எவரும் தடுக்க முடியாது.'

சிப்பாய்கள் இரவில் ரகசியமாகக் கூட்டங்கள் கூடுவதும் வழக்கமாயிற்று. கூட்டங்களில் எல்லாத் தீர்மானங்களும் அபிப்பிராய பேதமின்றி நிறைவேறின. தீர்மானங்களுக்கெல்லாம் சிறிதும் ஆட்சேபமின்றி எல்லோரும் கீழ்ப்படிந்து நடக்கலாயினர். ரகசியக் கூட்டங்களுக்கு அவர்கள் வந்தபோது, தங்களை எவரும் அறிந்துகொள்ளா வண்ணம் தங்களுடைய முகங்களை மூடிக்கொண்டு வந்தனர். தங்கள் தங்கள் பிரதேசங்களில் ஆங்கிலேயர்கள் செய்யும் அட்டூழியங்களை எல்லாம் கூட்டத்தில் உள்ளவர்களுக்கு ஆவேசம் உண்டாகுமாறு அவர்கள்

விவரித்துக் கூறினர். புரட்சிக்காரர்களுடைய பெயரை விரோதி களிடம் தெரிவித்தவர்கள் உடனே கொல்லப்பட்டார்கள்.

பலவேறு படைப் பிரிவுகளையும் சேர்ந்த சிப்பாய்கள் ஒன்று கூடி யோசிப்பதற்காக, உற்சவ காலங்களை உபயோகப்படுத்திக் கொண்டார்கள். அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒரு படையினர் மற்றொரு படையினரை விருந்துக்கு அழைப்பார்கள். அவ் விருந்துகளில் ரகசிய ஆலோசனைகள் வெற்றிகரமாக நடை பெறும். குறிப்பிட்ட சிப்பாய்களின் கூட்டங்கள் சுபேதார்களின் வீடுகளில் நடைபெற்றன. அரசியல் சம்பந்தமாகவும் மத சம்பந்தமாகவும் இந்திய மகா ஜனங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளெல்லாம் சிப்பாய்களுக்கு விவரித்துக் கூறப்பட்டன. அதன் விளைவாக ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட வேண் டும் என்ற ஆத்திரம் ஒவ்வொரு சிப்பாயின் மனத்திலும் பொங்கி எழுந்தது.

புரட்சி பற்றிய விஷயங்கள் ராணுவ அதிகாரிகளின் தீர்மானத்துக்கு விடப்பட்டன. தங்களுடைய அதிகாரி இடும் கட்டளையின்படி சிறிதும் ஆட்சேபமின்றி நடந்துகொள்வதாக ஹிந்து, முஸ்லிம் சிப்பாய்கள் அனைவரும் முறையே கங்கா தீர்த் தத்தையும் குரானையும் வைத்துக்கொண்டு பிரமாணம் செய் தனர். பல்வேறு படைப் பிரிவுகளும் சிறிதும் வேற்றுமை யின்றி ஒற்றுமையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்றும் முடிவு செய்தனர்.

பின்னர் வெளியிடப்பட்ட அரசாங்க அறிக்கை ஒன்றில் வில்ஸன் என்பவன் குறிப்பிட்டுள்ள விவரங்களே புரட்சியின் தீவிரத்தைச் சந்தேகமற வெளிப்படுத்தின. அதில் அவன் கூறிய தாவது: '1857-ஆம் வருஷம் மே மாதம் 31-ஆம் தேதி ஏக காலத்தில் எங்கும் புரட்சியை ஆரம்பிக்க வேண்டுமென்று புரட்சிக்காரர்கள் தீர்மானித்திருந்தனர். அதற்காக ஒவ்வொரு படைப்பிரிவிலும் மூன்று பேர்கள் அடங்கிய ஒரு குழுவை நிய மித்திருந்தனர். புரட்சி சம்பந்தமான எல்லா விஷயங்களையும் அந்தக் குழுவினரே முடிவு செய்தனர். என்ன முடிவுகள் செய்யப் பட்டிருக்கின்றன என்பதைப்பற்றிச் சிப்பாய்களுக்கு எதுவுமே தெரியாது. எல்லாப் படைப் பிரிவுகளும் பரஸ்பரம் பூரணமாக ஒத்துழைப்பதென்று பிரதிக்ஞை செய்துகொண் டிருந்தனவாதலால், ஒரு படைப் பிரிவு கைக்கொள்ளும் முறையை மற்றப் பிரிவுகளும் உடனே பின்பற்ற முற்பட்டன. மே மாதம் 31-ஆம் தேதி எல்லாச் சிப்பாய்களும் புரட்சியை ஆரம் பித்துவிட வேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானம் செய்யப் பட்டிருந்தது. அன்று ஞாயிற்றுக்கிழமை யானதால் பெரும் பாலான ஆங்கில அதிகாரிகள் ஆலயத்தில் (சர்ச்) இருப்பார் கள். அவர்களும் மற்ற ஆங்கிலேயர்களும் கொல்லப்பட வேண் டும்; பின்னர் அரசாங்கத்தைச் சேர்ந்த கஜானாக்களை யெல்லாம் கொள்ளையிட வேண்டும்; சிறைகளை யெல்லாம் தகர்த்துக் கைதிகளை விடுவிக்க வேண்டும்; - இவைதாம் புரட்சித் திட்டத் தின் முக்கிய அம்சங்களாக இருந்தன. வடமேற்கு எல்லைப்புற

மாகாணத்தில் உள்ள சிறைகளில் மாத்திரம் சற்றேறக்குறைய இருபத்தையாயிரம் கைதிகள் வைக்கப்பட் டிருந்தனர். புரட்சி ஆரம்பமானதும் எல்லா மருந்துச் சாலைகளையும் ஆயுத சாலைகளையும் கைப்பற்றிவிட வேண்டுமென்றும், மற்றும் சாத்தியமான இடங்களில் கோட்டைகளையும் முக்கிய ஸ்தானங்களையும் ஆக்கிரமித்துக்கொள்ள வேண்டுமென்றும் தீர்மானித்திருந்தனர்.'

புரட்சி இயக்கம் சிப்பாய்களிடையே மிகுந்த ஒற்றுமையை உண்டுபண்ணி யிருந்தது. சிப்பாய்கள் ரகசியமாகத் தங்களுடைய புரட்சித் திட்டத்தை உருவாக்கி வருகையில், அற்பத் தவறு காரணமாகவும் இரண்டொரு துரோகிகளின் வஞ்சகத்தினாலும் சிற்சில ரகசியங்கள் வெளியாகி விட்டன. எந்தப் படைப் பிரிவின்மீது தங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டதோ அந்தப் படைப் பிரிவை உடனே கலைத்துவிடும்படி ஆங்கில அதிகாரிகள் உத்தரவிட்டனர். அந்தச் செய்கை புரட்சி இயக்கத்துக்கு மிகவும் சாதகமாயிற்று! இவ்விதமாகப் புரட்சி இயக்கத்தை நாடெங்கும் பரப்ப ஆங்கிலேயர்களே பல தொண்டர்களைப் புரட்சிக்காரர்களுக்கு அளித்தனர்!

மிகவும் சாமர்த்தியசாலிகளான புரட்சித் தலைவர்களுடைய பெரு முயற்சியால் ஹிந்துஸ்தானத்திலுள்ள பல்வேறு சம்ஸ்தானங்கள், மக்கள், படைகள் ஆகிய மூன்று சாராரும் ஒன்று சேர்ந்தனர். ஆங்கில அரசாங்கத்தைச் சேர்ந்த இந்திய அதிகாரிகளும் புரட்சியில் ரகசியமாகப் பங்கெடுத்துக் கொண்டார்கள். இந்திய ஹைகோர்ட் நீதிபதிகள் உட்படப் பல ஹிந்து, முஸ்லிம் அதிகாரிகளும் வக்கீல்களும் குமாஸ்தாக்களும் ஆங்கிலேயர் அறியாவண்ணம் புரட்சி இயக்கத்தில் கலந்துகொண்டார்கள்.

இவ்வளவு மகத்தான புரட்சித் திட்டம் உருவாகியும், அரசாங்கத்துக்கு இதுபற்றி எதுவுமே தெரியவில்லை! இவ்விஷயமாக அவர்களுக்கு ஏதாவது தெரிவதாயின் இந்திய அதிகாரிகளின் மூலந்தான் தெரியவேண்டும். இந்திய அதிகாரிகளும் புரட்சி இயக்கத்தில் கலந்துகொண்டதனால், இதுபற்றி அரசாங்கத்துக்கு எதுவும் தெரிய வழியில்லாமல் போயிற்று. எனினும் கடைசி நேரம் வரையில் இந்திய அதிகாரிகள் அரசாங்கத்துக்கு விரோதமான தங்களுடைய உணர்ச்சியை ஆங்கிலேயர்கள் அறிந்துகொள்ளா வண்ணம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டுமென்றும் தீர்மானமாகி யிருந்தது.

யாராவது புரட்சித் தலைவர் கைது செய்யப்பட்டால், அவருக்கு இந்திய நீதிபதிகள் வேண்டுமென்றே கடுமையான தண்டனை விதித்து அவரை மிகக் கொடுமையாக நடத்தும்படியும் உத்தரவிட்டனர். தங்கள்மீது ஆங்கிலேயருக்கு அணுவளவும் சந்தேகம் ஏற்படக் கூடாது என்பதற்காகவே அவர்கள் அவ்விதம் வெகு தந்திரமாக நடந்துகொண்டார்கள். புரட்சித் தலைவர்களுக்குக் கடுமையான தண்டனை விதித்த நீதிபதிகளே ரகசியமாகப் புரட்சியில் கலந்துகொண் டிருந்தனர் என்பது பின்னால் தெரிய வந்தது!

லக்ஷ்மணபுரிச் சுவர்களிலெல்லாம் ஒட்டப்பட்டிருந்த பிரகடனங்கள் ஜனங்களின் மனத்தில் ஆவேச உணர்ச்சியை எழுப்பின. அவை தீயைக் கக்கும் பாஷையில் எழுதப்பட்டிருந்தன. அதிலிருந்தே அவற்றைத் தயாரித்தவர்கள் மகா மேதாவிகள் என்பதையும் நாவன்மை படைத்தவர்கள் என்பதையும் அறிந்துகொள்ளலாம்.

தினந்தோறும் அவ்விதப் பிரகடனங்கள் சுவர்களில் ஒட்டப்பட்டு வந்தன. அன்றுடம் அவற்றைக் கிழித்தெறியும்படி உத்தரவிடுவதைத் தவிர ஆங்கில அதிகாரிகளால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை! பிரகடனங்களைச் சுவர்களில் ஒட்டுபவர்களைத் தாங்கள் கண்டுபிடிக்க முடியவில்லையென்று போலீசார் சாதித்தனர். எனினும், போலீசாரால் அவர்களை ஏன் கண்டு பிடிக்க முடியாமற் போயிற்று என்பதைப் பின்னர் ஆங்கிலேயர்கள் அறிந்துகொண்டனர்; அதாவது போலீசாரே புரட்சி இயக்கத்தில் தீவிரமாகக் கலந்துகொண் டிருந்தனர் என்பது பிறகுதான் ஆங்கிலேயர்களுக்குத் தெரியலாயிற்று!

இவ்வாருகப் புரட்சி இயக்கத்தின் சக்கரங்கள் சுழல ஆரம்பித்தன. 'எல்லாம் தயாராகி விட்டது; எல்லோரும் ரத்தம் சிந்த ஆயத்தமாக இருங்கள்' என்பதற்கு அறிகுறியாக ஒரு சிவப்பு ரோஜாப் புஷ்பத்துடன் புரட்சித் தூதர் ஒருவர் இந்தியப் படைகள் இருக்கும் இடங்களுக்கெல்லாம் அனுப்பப்பட்டார். ஒவ்வொரு படைப் பிரிவுத் தலைவரிடமும் அவர் ரோஜாப் புஷ்பத்தைக் கொடுப்பார்; தலைவர் அதைத் தமக்கு அருகிலுள்ள சிப்பாயிடம் கொடுப்பார்; இவ்விதமாக அந்தப் புஷ்பம் அந்தப் பிரிவிலுள்ள சகல சிப்பாய்களின் கைக்கும் மாறும். பிறகு தூதர் அந்தப் புஷ்பத்தை எடுத்துக்கொண்டு படைகள் இருக்கும் வேறு இடத்துக்குச் சென்று அதைக் கொடுப்பார். அங்கும் அது எல்லோருடைய கைகளுக்கும் சென்று வரும். இவ்விதமே எல்லாச் சிப்பாய்களும் மௌனமாக இறுதிப் போருக்குத் தாங்கள் தயார் என்பதைத் தெரிவித்தனர்.

அந்த ரோஜாப் புஷ்பம், புரட்சி இயக்கத்தின் முக்கிய அறிகுறியாயிற்று. ஆஹா! அந்தப் புஷ்பத்தை ஒவ்வொரு சிப்பாயும் ஏற்று அடுத்தவரிடம் கொடுத்தபோது, அவரது மனத்தில் எத்தகைய சிந்தனைச் சுழல்கள் எழுந்தனவோ! எவ்வளவு தீவிரப் பிரசாரத்திஞலும், எவ்வளவு வாசாலக சக்தி படைத்தவர்களாலும் செய்ய முடியாத அரிய காரியத்தை, வாயில்லாத, உயிரற்ற அந்தச் சிவப்பு ரோஜா மலர் செய்து முடித்துவிட்டது!

தூய்மை, வெற்றி, ஒளி இவற்றின் அறிகுறியான ரோஜாப் புஷ்பத்தைப் புரட்சித் தலைவர்கள் தங்கள் இயக்கத்தின் அறிகுறியாக உபயோகித்தது மிகவும் புகழத்தக்க செய்கையாகும். ரோஜாப் புஷ்பத்தைப் பார்க்கும் ஒவ்வொருவர் மனமும், அதை ஸ்பரிசிக்கும் ஒவ்வொருவருடைய இருதயமும் மலர்ந்து பக்குவமடையும் என்பதில் ஐயமும் உண்டோ! மிக மிகக் கஷ்டப்பட்டு, நீண்ட காலம் செய்யவேண்டிய வேலை

யைச் சிவப்பு ரோஜாப் புஷ்பம், சுலபமாகவும் சீக்கிர மாகவும் செய்து முடித்துவிட்டது என்பதை, அதாவது சகல சிப்பாய்கள் இடையேயும் ஒற்றுமையையும் விடுதலை பெற வேண்டும் என்ற ஒரே எண்ணத்தையும் உண்டுபண்ணிவிட்டது என்பதை, வெள்ளைச் சரித்திராசிரியர்கள் ஒப்புக்கொண் டிருக் கிறார்கள்!

எனினும் அந்த ஒற்றுமையை உருவான முறையில் பலப் படுத்தவும், பலன் அளிக்கும்படி செய்யவும் வேண்டியது அவசி யம் என்பதை உணர்ந்த நானா சாஹிப் பிரம்மாவர்த்தத்தி லிருந்து புறப்பட்டார். அவருடன் அவருடைய சகோதரரான பாலா சாஹிபும், அந்தரங்க நண்பரும் ஆலோசனை கர்த்தாவுமான அஸிமுல்லாவும் புறப்பட்டார். ஆனால், அவர்களுடைய யாத்திரையின் நோக்கம் என்ன என்பதை ஆங்கி லேயர்கள் அறிந்துகொண்டு விடாமல் இருப்பதற்காக, தாங்கள் ஸ்தலயாத்திரைக்குப் புறப்பட்டிருப்பதாகச் சொல்லிக்கொண் டார்கள்!

1857-ஆம் வருஷம் மார்ச் மாதம் 'ஸ்தல யாத்திரைக்கு'ப் புறப்பட்ட அவர்கள் முதல் முதலாக டில்லிக்குச் சென்றார் கள். அவ்வமயம் ஆக்ராவில் நீதிபதியாக இருந்த மோரெல் என்ற ஆங்கிலேயர் நானா சாஹிபைக் காண்பதற்காகச் சென்ற போது அவர், நானா தமக்கு அளித்த அன்பான வரவேற்பைக் கண்டு ஆனந்தமடைந்து திரும்பிச் சென்றார்! பாவம், ஆங்கி லேயர்களைக் காட்டிலும் நானா சாஹிப் மிகுந்த தந்திரசாலி என்பதையும், அதிலிருந்து இரண்டொரு மாதங்களுக்குள் நானா சாஹிப் ஆங்கிலேயருக்கு முற்றும் வேறு விதமான வர வேற்பு அளிக்க ஆயத்தம் செய்து வருவதையும் குறித்து மோரெலுக்கு என்ன தெரியும்!

டில்லியிலுள்ள ஏற்பாடுகளை எல்லாம் பரிசோதனை செய்த பின் நானா அம்பாலாவுக்குச் சென்று ஏப்ரல் மாதம் 18-ஆம் தேதி லக்ஷ்மணபுரியை அடைந்தார். லக்ஷ்மணபுரிப் பிரதம கமிஷனரான ஹென்ரி லாரென்ஸ, கற்களாலும் மண்ணாலும் ஜனங்களிடம் அடிபட்ட தினம் அதுதான். அன்றைத் தினமே நானாவும் அங்கே வந்தது மிகவும் விசேஷமாகும்! நானாவின் விஜயம் அந்த நகர ஜனங்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்ததுடன், அவர்களிடையே மிகுந்த பரபரப்பையும் உண்டுபண்ணியது. நானா லக்ஷ்மணபுரித் தெருக்களின் வழியாக ஊர்வலம் சென்ற காட்சி, புரட்சிக் கட்சியினரின் மனத் தில் மிகுந்த நம்பிக்கையை உண்டுபண்ணியது.

பிறகு நானா கால்பிக்குச் சென்றார். அவ்வமயம் அவருக் கும் ஜகதீசபுரி அதிபரான குமார சிம்மனுக்கும் அந்தரங்கக் கடிதப் போக்குவரத்து நடந்து வந்தது. ஒவ்வோரிடத்திலும் உள்ள முக்கியத் தலைவர்களைச் சந்தித்து ஒற்றுமையைப் பலப் படுத்துவதுடன், சுதந்தரப் போரை ஆரம்பிக்கும் நன்னாளை நிர்ணயிக்கவும் வேண்டும் என்பதே நானாவின் நோக்கமாகும்.

நானா மிக மிக ரகசியமாகவும் வெகு திறமையுடனும் தம் அலுவல்களைச் செய்துவந்ததால், ஆங்கிலேயருக்குச் சிறிதும் சந்தேகம் ஏற்படவில்லை. எங்கும் அமைதி நிலவி யிருப்பதாகவே அவர்களுக்குத் தோன்றியது. 'தவத்தையும் பொறுமையையும் யார் பொக்கிஷமாகப் பெற்றிருக்கின்றாரோ, அவரிடம் ஆத்ம சக்தியாகிய ஊழித் தீ மறைந்து கிடக்கும் என்பதையும், அந்த அக்கினி பீறிட்டுக் கிளம்புமாயின் உல கத்தையே சாம்பலாக்கி விடும் என்பதையும் மறக்காதே' என்ற மகா கவி காளிதாசனின் வாக்கியத்தை ஆங்கிலேயர்கள் எவ்வாறு அறிவர்?

அதுபோலவே சாந்த ரூபமான இந்தியாவின் இருதயத்தில் பயங்கரத் தீ மறைந்து கிடப்பதையும் அந்தத் தீ பீறிட்டுக் கொண்டு கிளம்புமாயின் தங்களை அடியோடு தகனம் செய்து விடும் என்பதையும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. இந்திய எரிமலை சிவபெருமானின் நெற்றிக் கண்ணைக் காட்டிலும் கோரமான அக்கினிக் குழம்பைக் கக்க வல்லது என்பதையும் அவர்கள் உணர்ந்துகொள்ளவில்லை!

## 10

## தியாகி மங்கள பாண்டே

**1857-ஆம்** வருஷத்தில் ஏற்பட்ட புரட்சியின்போது பல அதிசயங்கள் நிகழ்ந்தன. அந்த அதிசயங்களில் முக்கியமானது என்ன தெரியுமா? புரட்சித் தலைவர்கள் பரந்த முறையில் செய்து வந்த சுதந்தர யுத்த ஏற்பாடுகள்பற்றி ஆங்கிலேயர் கள் அணுவளவும் சந்தேகம் கொள்ளாமல் இருந்ததுதான்! புரட்சித் தலைவர்கள் அவ்வளவு சாமர்த்தியமாகவும் ரகசியமாக வும் தங்களுடைய முஸ்தீபுகளைச் செய்து வந்தார்கள். புரட்சி மூண்ட ஒரு வருஷத்துக்குப் பின்னருங்கூட, அதன் உண்மை யான காரணத்தை ஆங்கிலேயர்கள் அறிந்துகொள்ளவில்லை. தோட்டாக்களில் கொழுப்பைத் தடவியதுதான் அதற்குக் காரணமென்று அவர்கள் எண்ணி வந்தனர்.

எனினும், வெள்ளைச் சரித்திராசிரியர்கள் அதன் உண்மை யான காரணத்தை உணர்ந்துகொள்ளாமல் இல்லை. தேச பக்தி யும் மதப் பற்றுமே இந்திய வீரர்களின் எழுச்சிக்குக் காரணம் என்பதையும், தோட்டா சம்பவம் அதைத் தூண்டிய ஒரு நெருப்புப் பொறியே என்பதையும் அவர்கள் இப்போது ஒப்புக் கொண்டுள்ளனர்.

ஆங்கில அதிகாரிகளின் கண்ணெதிரிலேயே ஓர் மகத்தான இயக்கத்தை ரகசியமாக உருவாக்கிய நானா சாஹிப், மௌல்வி

அகமது ஷா, அலி நக்ஹி கான் போன்ற தலைவர்களின் இணை யற்ற திறமையை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். அந்தத் தலைவர் கள், ஹிந்து, முஸ்லிம்களான இரு சமூகத்தினருக்கும் பரஸ்பர உதவி, ஒற்றுமை இவற்றின் அவசியத்தை மனத்தில் பதியும்படி செய்தனர். அது மாத்திரம் அல்ல; ஆங்கிலேயர்களுக்கு அணு வளவு சந்தேகமும் ஏற்படா வண்ணம் சிப்பாய்கள், போலீசார், ஜமீன்தார்கள், அதிகாரிகள், விவசாயிகள், வியாபாரிகள், பாங் கர்கள் முதலிய எல்லாப் பிரிவினரிடையேயும் புரட்சி உணர்ச்சி பொங்கி எழும்படி செய்துவிட்டார்கள். பல்வேறு துறை களிலும் ஈடுபட்டிருந்த அவர்களையெல்லாம் ஒன்று சேர்த்து, அவர்கள் எல்லோருக்கும் தேச விடுதலையில் மிகுந்த ஆர்வம் ஏற் படும்படி செய்த அந்தத் தலைவர்களின் சாணக்கிய தந்திரத்திற் குச் சரித்திரத்தில் உவமை காண்பதரிது.

அந்த ரகசிய இயக்கம் பிரமாதமாக உருவாகி வருகையில், மருந்துக் குவியலில் தீப் பொறி தெறிப்பதற்கொப்ப ஆங்கி லேயர்கள் பசுக் கொழுப்புத் தடவப்பட்ட தோட்டாக்களை உபயோகிக்கும்படி வங்காளத்திலுள்ள சிப்பாய்களை வற்புறுத்த முற்பட்டார்கள். முதல் முதலாக 19-ஆவது பிரிவுப்படையில் அந்தப் பரிசோதனையை நடத்திப் பார்ப்பதென்று அவர்கள் முடிவு செய்தார்கள். அப்போது வங்காளத்தில் முகாம் போட் டிருந்த படைகளுள் 34-ஆவது பிரிவுப் படைதான் புரட்சியை ஆரம்பிக்கத் துடித்துக்கொண் டிருந்தது.

அப்படை பாரக்புரியில் இருந்ததால், கல்கத்தாவுக்கு அரு கில் தங்கியிருந்த அலி நக்ஹிகான் அதைச் சேர்ந்த சகல சிப்பாய் களுக்கும் தேச ஆவேசத்தை உண்டுபண்ணிவிட்டார்; அவர்கள் எல்லோரும் ஒற்றுமையுடன் புரட்சியில் ஈடுபடுவதாகப் பிர திக்ஞை எடுத்துக்கொள்ளும்படியும் செய்தார். அவர்களில் சிலர் 19-ஆவது பிரிவுப் படை இருக்கும் இடத்துக்கு அனுப்பப் பட்டனர். அதன் பயனாக அந்தப் படையினரிடையேயும் தேசீய உணர்ச்சி பரவியது. இந்த உண்மையை ஆங்கில அதிகாரிகள் அறியாராதலின், பசுக் கொழுப்பும் பன்றிக் கொழுப்பும் தடவப் பட்ட தோட்டாக்களை முதலில் 19-ஆவது பிரிவுப் படையினர் உபயோகிக்கும்படி பரிசோதனை செய்து பார்க்கத் தீர்மா னித்தனர்.

ஆனால் அந்தப் படையினர், ஆங்கில அதிகாரிகளின் அக்கிரம மான அந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படியப் பகிரங்கமாக மறுத்த துடன், அவசியமாயின் அந்த அக்கிரமத்தை எதிர்த்து நிற்க வாளை உருவவும் தாங்கள் தயங்கப் போவதில்லை என்பதை அதிகாரிகள் உணர்ந்துகொள்ளும்படி செய்தனர். இத்தகைய சுயமதிப்பு உணர்ச்சியையும் துணிச்சலையும் ஆங்கிலேயர்கள் சகிப்பார் களா? உடனே அந்தச் 'சுதேசி'களை அவர்கள் அடக்கி ஒடுக்க ஆரம்பித்தார்கள். எனினும் 'சுதேசி'களின் வாட்கள் வேலை செய்யத் தொடங்கவே, ஆங்கிலேயர்கள் மருண்டு, தங்களுக்கு ஏற்பட்ட அவமதிப்பை மௌனமாக ஏற்றுக் கொண்டனர்.

அப்போது அந்த மாகாணத்தில் வெள்ளைத் துருப்புகள் இராததால் ஆங்கிலேயர்கள் 'சுதேசி'களின் துணிச்சலைத் தாற்காலிகமாகச் சகித்துக்கொண்டார்கள். இனி அத்தகைய சங்கடம் எதுவும் தங்களுக்கு நேரக் கூடாது என்பதற்காக அவர்கள் பர்மாவிலிருந்து கல்கத்தாவுக்கு ஆங்கிலப் படைப் பிரிவு ஒன்றைத் தருவித்துக்கொண்டார்கள். உடனே 19-ஆவது பிரிவுப் படையினரை நிராயுதபாணிகள் ஆக்கி, அந்தப் படையைக் கலைத்துவிடவும் கட்டளை பிறந்தது. அந்த உத்தரவைப் பாரக்புரியில் நிறைவேற்றுவதென்றும் தீர்மானித்தனர்.

எனினும், தங்கள் சகோதரர்களுக்கு ஏற்படப் போகும் அவமதிப்பைப் பாரக்புரிப் படைகள் பேசாமல் பார்த்துக்கொண்டிருக்குமா! அந்த நகரிலுள்ள ஒவ்வொருவரின் வாளிலிருந்தும் சுதந்தர ஜ்வாலை வீச ஆரம்பித்தது. குறிப்பாக, மங்கள பாண்டேயின் வாள், உறையில் ஓய்வெடுத்துக்கொண்டிருக்க மறுத்துவிட்டது! 19-ஆவது படையைப்போல் 34-ஆவது படையும் வெள்ளையர்களை வெறுத்து ராணுவத்திலிருந்து விலகிக் கொள்ள விரும்பியது. அந்த நிலைமையில் வெள்ளையர்கள் 19-ஆவது பிரிவைக் கலைக்கத் தீர்மானித்தது, தங்களுடைய நோக்கத்துக்குச் சாதகமாகும் என்று சகல தேசபக்தர்களும் கருதினர். எல்லோருடனும் கலந்து ஆலோசிக்கும் வரையில் சிப்பாய்கள் ஒரு மாதகாலம் பொறுமையுடன் இருக்க வேண்டும் என்று தலைவர்கள் யோசனை கூறினர். சிப்பாய்கள் ஏகோபித்து எழ ஒரு நாளைக் குறிப்பிடும்படி பாரக்புரியிலிருந்து பல இடங்களுக்கும் கடிதங்கள் பறந்தன.

ஆனால், மங்கள பாண்டேயின் வாள் மாத்திரம் உறைக்குள் செல்ல மறுத்துவிட்டது!

மங்கள பாண்டே பிராம்மண குலத்தில் பிறந்தவர். எனினும் அவர் க்ஷத்திரிய தர்மத்தை ஏற்று, மிகுந்த தீரமுள்ள ஓர் இளம் வீரராகத் திகழ்ந்தார். மாசற்ற வாழ்க்கையும், அமர்க்களத்தில் அஞ்சா நெஞ்சமும், மதத்தை உயிரினும் இனியதாகக் கருதும் உத்தம குணமும் வாய்ந்த இந்த இளம் சிங்கத்தின் இருதயத்தில் ஏற்பட்ட சுதந்தர தாகம், அவரது ரத்தம் கொதிக்கும்படி செய்துவிட்டது. இந்த நிலைமையில் அவருடைய வாள் வாளாவிருப்பது எவ்வாறு சாத்தியமாகும்?

வீரத் தியாகிகளின் வாட்கள் ஒரு காலத்திலும் வேலையற்றுக் கிடந்ததில்லை. வெற்றியாயினும் தோல்வியாயினும் சிறிதும் லட்சியம் செய்யாமல், தங்களுடைய கண்கள் போன்ற உயர்ந்த கொள்கைகளைத் தங்களுடைய ஜீவரத்தத்தால் அபிஷேகம் செய்யும் சிலர்களின் சிரங்களில் மாத்திரமே வீரத் தியாகி என்ற கீர்த்திக் கிரீடம் ஒளி வீசுகின்றது. யாதொரு பலனும் இன்றி வீணாகச் சிந்தப்படுவதுபோல் தோன்றும் அந்தக் குருதி வெள்ளத்திலிருந்துதான் ஜயலக்ஷ்மி உற்பவிக்கிறாள்.

தமது கண்முன் தம் சகோதரர்கள் நிராயுதபாணிகளாகி அவமதிப்புக்கு உள்ளாக நேருவதை அவரால் சகிக்க முடிய

வில்லை. தம் படைப் பிரிவினர் அன்றே கொதித்தெழ வேண்டு மென்று அவர் வற்புறுத்தினார். எனினும் புரட்சித் தலைவர்கள் அவரது திட்டத்துக்கு இசையாததால், மங்கள பாண்டே தமது தேச ஆவேச உணர்ச்சியை அடக்க முடியாமல், துப்பாக்கியில் தோட்டாக்களை நிரப்பிக்கொண்டு ராணுவ அணிவகுப்பு மைதானத்துக்குத் தாவியோடினார்; தம் சகோதர வீரர்களை நோக்கிக் கர்ஜிக்கலானார்: ''சகோதரர்களே, வீறுகொண்டு எழுங்கள்! ஏன் வாளா இருக்கின்றீர்கள்? உங்கள் மதத்தின்மீது ஆணையிட்டு உங்களை அழைக்கிறேன். துரோகிகளான விரோதிகள்மீது பாய்ந்து, விடுதலை பெறுவோம்!''

பாண்டேயின் ஆவேச நிலையைக் கண்ட ஸார்ஜன்ட்-மேஜர் ஹியூஸன் அவரைக் கைது செய்யும்படி சிப்பாய்களுக்கு உத்தர விட்டான். ஆனால், சிப்பாய்கள் அவரது உத்தரவைப் பொருட் படுத்தாது, பேசாமல் இருந்தனர். அதே சமயம் பாண்டேயின் துப்பாக்கியிலிருந்து சீறிச் சென்ற ஒரு தோட்டா ஹியூஸன்மீது பாய்ந்து அவனைப் பிணமாக்கியது.

அப்போது மற்றோர் அதிகாரியான லெப்டினன்ட் பாக் அவ் விடத்தை நோக்கிக் குதிரைமீது வந்துகொண் டிருக்கையில், பாண்டேயின் துப்பாக்கியிலிருந்து சென்ற மற்றொரு தோட்டா குதிரையின்மீது பாய்ந்தது. உடனே குதிரையும் அதிகாரியும் கீழே விழுந்து உருண்ட காட்சியைச் சிப்பாய்கள் கண்டு களித் தனர். பாண்டே மீண்டும் தம் துப்பாக்கியைக் கெட்டிக்கையில் லெப்டினன்ட் பாக் எழுந்து பாண்டேயை நோக்கிக் குறி வைத் தான். எனினும் பாண்டே சிறிதும் கலங்காது தம் வாளை உருவி னார். பாக் வைத்த குறி தவறிவிட்டதால், அவனும் வாளை எடுத் தான். ஆயினும் பாண்டேயின் பட்டாக்கத்தி துரிதமாக வேலை செய்ததால், அவன் கீழே வீழ்த்தப்பட்டான்.

அதே சமயம் மற்றோர் வெள்ளை அதிகாரி பாண்டேயை நோக்கிக் குறிவைக்கையில், ஒரு சிப்பாய் தன் துப்பாக்கியின் அடிக்கட்டையால் அவன் மண்டையைப் பிளந்துவிட்டான்.

உடனே, 'மங்கள பாண்டேயைத் தொடாதே!' என்ற கோஷம் சிப்பாய்களிடையிலிருந்து வானளாவியது. பிறகு கர்னல் வீலர் என்பவன் அங்கே வந்து, மங்கள பாண்டேயைக் கைது செய்யும்படி உத்தரவிட்டான். 'இந்த உத்தமப் பிராம்மண வீரரின் ரோமத்தைக்கூட நாங்கள் தொடமாட்டோம்' என்று மீண்டும் சிப்பாய்கள் கோஷம் செய்தனர். வெள்ளை அதிகாரி களின் உதிரம் ஓடுவதையும், சிப்பாய்களின் ஆவேசத்தையும் கண்ட வீலர் அருண்டு, சேனாதிபதியின் பங்களாவை நோக்கி ஓட்டம் பிடித்தான். மைதானத்தில் இருந்த மங்கள பாண் டேயோ ரத்தம் தோய்ந்த தம் கைகளை வீசி, 'எழுங்கள்! சகோ தரர்களே, எழுங்கள்!' என்று இடைவிடாது கோஷம் செய்து சிப்பாய்களுக்கு உற்சாக மூட்டினார்.

இவ்விவரங்களை ஜெனரல் ஹியர்ஸே கேள்வியுற்றதும் பல ஆங்கிலச் சிப்பாய்களை அழைத்துக்கொண்டு பாண்டே இருக்கு

மிடம் வந்து சேர்ந்தான். அவர்களின் தொகை அதிகமான தால் அவர்களுடைய கையில் சிக்குவதைத் தவிர வேறு வழி இல்லை என்பதை அறிந்த பாண்டே, விரோதிகளின் கையில் வீழ்வதைக் காட்டிலும் வீரசுவர்க்கம் அடைவதே சிறந்ததென்று கருதித் துப்பாக்கியைத் தம் இருதயத்துக்கு நேராகத் திருப்பித் தம்மையே சுட்டுக்கொண்டார். அந்தோ! படுகாயமடைந்த பாண்டேயின் புனித சரீரம் பூமியில் துவண்டு வீழ்ந்தது. உடனே அவர் வைத்தியசாலைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். பாண்டேயின் தீரத்தைக் கண்டு பிரமித்துப் போன ஆங்கில அதிகாரிகள், சிந்தனையில் ஆழ்ந்து, தங்கள் தங்கள் கூடாரங் களுக்குச் சென்றனர். என்றும் மறக்க முடியாத இந்தச் சம்பவம் 1857 மார்ச் மாதம் 29-ஆம் தேதி நிகழ்ந்தது.

பின்னர் மங்கள பாண்டே ஒரு ராணுவ சபையின் முன்னிலை யில் விசாரிக்கப்பட்டார். விசாரணையின்போது அவரிடமிருந்து மற்றப் புரட்சித் தலைவர்களின் பெயர்களைத் தெரிந்துகொள்ளு வதற்காக அதிகாரிகள் பெரு முயற்சி செய்தனர். எனினும் அவர்கள் வலையில் விழ வீர பாண்டே முற்றும் மறுத்து விட்டார். தாம் சுட்டு வீழ்த்திய அதிகாரிகளின்மீது தமக்குச் சொந்த மாற்சரியம் எதுவும் இல்லை என்பதையும் விளக்கினார்.

மங்கள பாண்டேயின் வீரச் செய்கை, உயர்ந்த லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டது. தேசத்தையும் மதத் தையும் பாதுகாக்கவே அவரது வாள் உறையினின்றும் வெளி யேறியது. கீதோபதேசத்துக்கு இணங்க வெற்றி தோல்வியைச் சமமாகக் கருதி அவர் தமது கடமையைச் செய்து முடித்தார். தமது நாட்டுக்கும் மதத்துக்கும் இழைக்கப்படும் அவமதிப்பைச் சகித்துக்கொண் டிருப்பதைக் காட்டிலும், உயிர்த் தியாகம் செய் வது சிறந்தது என்ற உறுதியே அவரைத் தூண்டியது. எனவே, அவருடைய வீரமும் தேசபக்தியும் என்றென்றும் போற்றத் தக்கவை அல்லவா?

அந்தப் புனித தேச பக்தருக்கு இறுதியில் ஆங்கிலேயர்கள் தூக்குத் தண்டனை விதித்தனர். ஏப்ரல் மாதம் 8-ஆம் தேதி அந்தத் தண்டனையை நிறைவேற்றவும் முடிவு செய்தனர். ஆஹா! பாண்டேயைப் போன்ற அரும் தியாகிகளின் பெயர் களைக் கேட்டாலே நமது சோர்வு அகன்று ஒரு புதிய சக்தி பிறக்கின்றது; நமது மனத்தில் தேச ஆவேசம் பொங்குகின்றது! அவர்களின் பெயர்களைக் கேட்ட மாத்திரத்திலே நமக்கு அவ்வித உணர்ச்சிகள் எழும்போது, அந்த வீரர்களை நேரில் காணும் பாக்கியம் பெற்றவர்களுக்கு எத்தகைய சக்தி யும் உத்வேகமும் ஏற்பட்டிருக்கும்!

எனவே, மங்கள பாண்டேயைத் தரிசித்தவர்களுக்கு அவர் மீது தெய்விகமான அன்பு உண்டானதில் ஆச்சரியமில்லை. அவரைத் தூக்கிலிட வெள்ளையர்களுக்குப் பாரக்புரியில் ஓர் ஆள்கூடக் கிடைக்கவில்லை. இறுதியில் அந்தக் கொடிய வேலையை நிறைவேற்றுவதற்காகக் கல்கத்தாவிலிருந்து நாலு நபர்களைக் கொண்டு வரும்படி நேர்ந்தது! ஏப்ரல் மாதம் 8-ஆம் தேதி

காலையில் மங்கள பாண்டே ஆயுதமேந்திய காவலர்கள் சூழத் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவர் சிறிதும் அஞ்சாது சிங்கக் குட்டிபோல் கம்பீரமாக நடந்து சென்று தூக்கு மேடையில் ஏறினார். மற்றப் புரட்சித் தலைவர்களின் பெயர்களை வெளியிட்டால் அவரை மன்னித்துவிடுவதாக வெள்ளையர்கள் கடைசியாகக் கூறியதற்கும் இணங்கப் பாண்டே முற்றும் மறுத்துவிடவே, தூக்கு மரக் கயிறு அவரது கழுத்தில் மாட்டப்பட்டது. மங்கள பாண்டேயின் புனித ஆத்மா சரீரத்திலிருந்து பிரிந்து வீர சுவர்க்கம் எய்தியது!

மங்கள பாண்டே 1857-ஆம் வருஷம் நிகழ்ந்த சுதந்தர யுத்தத்தில் முதல் முதலாகத் தமது உயிரை அர்ப்பணம் செய்த வீரத் தியாகியாவார். சுதந்தர யுத்த விதைக்கு முதல் முதலாக மங்கள பாண்டேயின் உதிரந்தான் பாய்ச்சப்பட்டது. ஆகையால் அந்த விதை மகத்தான விருட்சமாக வளர்ந்து பலனைக் கொடுக்கும்போது, முதல் முதலாக அதற்குத் தண்ணீர் ஊற்றிய மங்கள பாண்டேயை நாம் எக்காலத்திலும் மறக்கவே முடியாது!

மங்கள பாண்டே மறைந்துவிட்டார். எனினும் அவருடைய ஆத்மா ஹிந்துஸ்தானம் முழுவதும் பரவி நிற்கின்றது. அவர் எந்தக் கொள்கைக்காக உயிர்த் தியாகம் செய்தாரோ அந்தக் கொள்கை சிரஞ்சீவியாக நிற்கிறது! அந்தச் சம்பவம் நிகழ்ந்ததிலிருந்து முதலாவது சுதந்தர யுத்தத்தில் ஈடுபட்ட ஒவ்வொரு சிப்பாயையும் 'பாண்டே' என்று அழைக்கலாயினர்.

ஆகையால், இந்த வீர இளைஞரின் வரலாற்றை ஒவ்வொரு தாயும் பெருமையுடன் தன் புதல்வனுக்குப் போதிக்க வேண்டும்.

## 11

## மீரத்தில் மூண்ட ஊழித் தீ

தியாகி மங்கள பாண்டேயின் ரத்தத்தில் ஊறிய புரட்சி விதை முளை விட அதிக காலம் ஆகவில்லை. 34-ஆவது படைப் பிரிவின் சுபேதார்மீது, இரவில் ரகசியமாகப் புரட்சிக் கூட்டங்கள் நடத்தி வந்தாரென்று குற்றம்சாட்டி, வெள்ளையர்கள் அவருக்குச் சிரச்சேத தண்டனை விதித்தனர். அந்தச் சுதந்தர யுத்தத்தில் இரண்டாவதாக உயிரை அர்ப்பணம் செய்த வீரர் அவர்தாம். 19-ஆவது பிரிவும் 34-ஆவது பிரிவும் புரட்சியை ஆரம்பிப்பதற்காக ரகசிய ஏற்பாடுகள் செய்து வந்தன என்பதை நிரூபணம் செய்யும் பத்திரங்கள் அதிகாரிகளின்

கைக்குக் கிடைத்தன. எனவே, அவர்கள் உடனே அவ்விரு படைப் பிரிவினரையும் நிராயுதபாணிகள் ஆக்கியதுடன், அந்தப் பட்டாளங்களையும் கலைத்துவிட்டார்கள்.

அவ்வாறு செய்தது சிப்பாய்களுக்கு ஒரு சரியான தண்டனை யாகும் என்று அதிகாரிகள் கருதினர். ஆனால் சிப்பாய்களோ அதை ஒரு பெருமையாகக் கருதி ஆனந்தம் அடைந்தார்கள். அன்றைய நிலைமையைச் சமாளிப்பதற்காக ஆங்கிலப் படைகள் தயாராக வைக்கப்பட்டிருந்தன. பட்டாளங்கள் கலைக்கப்பட்ட தால் சிப்பாய்கள் பயந்து, தாங்கள் ஆய்ந்தோய்ந்து பாராமல் தவறு செய்துவிட்டதாக வருந்துவார்கள் என்று வெள்ளை அதிகாரிகள் நம்பினார்கள்.

ஆயிரக்கணக்கான சிப்பாய்களோவெனில், அடிமைத்தனம் தோய்ந்த பாவ வடிவமான அந்த ஆயுதங்களைச் சந்தோஷமாக அப்பால் எறிந்தனர். மற்றும் அவர்கள் தங்களுடைய ராணுவ ஜோடுகளையும் உடைகளையும் கிழித்து எறிந்துவிட்டு, அடிமைத் தனமாகிற அழுக்கைக் களைந்து ஸ்நானம் செய்வதற்காக அடுத்துள்ள நதிக்குச் சென்றனர்!

சிப்பாய்கள் தங்கள் சொந்தப் பணத்தைக் கொண்டு ராணுவக் குல்லாய்கள் வாங்குவது வழக்கமாக இருந்தது. எனவே, அவைகளை மாத்திரம் அவர்கள் வீட்டுக்கு எடுத்துச் செல்லக் கம்பெனியார் அநுமதித்தனர். ஆயினும் அடிமைத் தனத்துக்கு அறிகுறியான அந்தக் குல்லாய்களைத் தரித்துக் கொள்ளச் சிப்பாய்கள் அறவே விரும்பவில்லை. நதியில் ஸ்நானம் செய்து பரிசுத்தமான பின், மீண்டும் அடிமைத்தனமாகிற சேற்றைப் பூசிக்கொள்ள அவர்கள் மனம் இடம் கொடுக்குமா?

எனவே ஆயிரக்கணக்கான குல்லாய்கள் ஏக காலத்தில் ஆகாயத்தில் பறந்தன. ஆயினும் என் செய்வது? ஆகாயத்தில் எறியப்படும் பொருள்கள் மீண்டும் கீழேவந்து விழுவது இயற்கை யின் தவிர்க்க முடியாத நியதியல்லவா! அதற்கிணங்க, அந்தக் குல்லாய்கள் கீழே விழுந்து மீண்டும் பாரத பூமியை அசுத்தப் படுத்தின. உடனே சிப்பாய்கள் அவைகளைக் கால்களால் மிதித்துச் சின்னபின்னமாக்கினர். குல்லாய்களை மிதித்து, அவற்றின்மீது சிப்பாய்கள் களிநடம் புரிந்த காட்சியைக் கண்ட ஆங்கிலேயர்கள் திகைத்து, சிலைகளைப்போல் உணர்ச்சி யற்று நின்றார்கள். சிப்பாய்களின் அந்தச் செய்கை அவர்களுக்கு மிகுந்த ஆத்திரத்தையும் வெறியையும் உண்டு பண்ணியது.

மங்கள பாண்டேயின் ரத்தம் வங்காளத்தில் மாத்திரம் சுதந்தர விதையை விதைக்கவில்லை; அந்த இளைஞரின் இணை யற்ற தியாகம், இந்தியாவின் மறு கோடியிலுள்ள அம் பாலாவிலும் மகத்தான சண்டமாருதத்தைக் கிளப்பியது. அப் போது அம்பாலா ஆங்கிலேயப் படைகளின் தலைமை ஸ்தலமாக விளங்கியது. ஆங்கிலப் பிரதம தளபதியான ஆன்ஸன் அங்கே தங்கி யிருந்தான்.

வீர பாண்டே தூக்கில் மாண்ட கொடுமைக்குப் பிரதியாக வஞ்சம் தீர்க்க அம்பாலாவிலிருந்த இந்தியச் சிப்பாய்கள் துடித்துக்கொண் டிருந்தனர். உடனே ஒரு புதிய திட்டம் உருவாயிற்று. இந்தியர்களுக்கு விரோதிகளான ஒவ்வோர் ஆங்கில அதிகாரியின் வீட்டையும் கொளுத்திச் சாம்பலாக்கிவிட வேண்டும் என்பதுதான் அந்தத் திட்டமாகும். அதன்படி ஒவ்வொரு நாளும் இரவில், கொடியர்களும் துரோகிகளுமான வெள்ளை அதிகாரிகளின் வீடுகளுக்கு அக்கினி பகவான் விஜயம் செய்ய ஆரம்பித்தார்! மிகத் துரிதமாகவும் ரகசியமாகவும் அந்த வேலை செய்யப்பட்டதால், அக்கினி பகவான்கூடப் புரட்சி இயக்கத்தில் சேர்ந்துகொண்டு விட்டாரோ என்று தோன்றியது! பல கட்டிடங்கள் பற்றி எரிந்தன. அதற்குக் காரண புருஷர்களைப் பற்றி உளவு கூறுவோருக்கு ஆயிரக்கணக்கான தொகை வெகுமதி அளிப்பதாக அதிகாரிகள் அறிவித்தனர். எனினும், எவரும் தாய் நாட்டுச் சகோதரர்களான தேச பக்தர்களைக் காட்டிக் கொடுக்கும் துரோகத்தில் இறங்கத் துணியவில்லை.

மாயத் தீ விபத்துக்களைக் கண்டு பிரமித்து, வகை யொன்றும் தோன்ருது தவித்த பிரதம தளபதியான ஆன்ஸன், கவர்னர் ஜெனரலுக்கு எழுதிய கடிதம் ஒன்றில், 'தீ விபத்துக்குக் காரணமானவர்களை இன்னும் கண்டு பிடிக்காமல் இருப்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. இங்கே அதிகாரிகள் அனைவரும் கண் கொட்டாமல் மிக்க ஜாக்கிரதையாக இருந்து வருகிருர்கள். அப்படி இருந்தும் குற்றவாளிகளைப்பற்றி யாதொரு புலனும் கிடைக்கவில்லை' என்று குறிப்பிட்டிருந்தான்.

அம்பாலாவில் இந்தியர்களிடையே ஒரு துரோகிகூட இல்லாததால், பிரதம தளபதி ஆன்ஸன் மௌனமாகவும் ரகசியமாகவும் வஞ்சம் தீர்ப்பதென்று உறுதிகொண்டான்.

அம்பாலாவில் திருவிளையாடல்களை ஆரம்பித்த அக்கினி பகவான், ஹிந்துஸ்தானத்திலுள்ள மற்றும் பல இடங்களிலும் வியாபிக்கலானுர். நானு சாஹிப் லக்ஷ்மணபுரிக்கு விஜயம் செய்ததிலிருந்து, அங்கும் நிலைமை குமுறத் துவங்கியது. அங்கும் அந்நியர்களின் வீடுகளும் துரோகிகளின் வீடுகளும் தகனமாயின. மே மாதம் 31-ஆம் தேதி ஹிந்துஸ்தானம் முழுவதும் ஏக காலத்தில் ஊழித் தீ போன்று ஜ்வாலையைக் கக்க வேண்டும் என்பதுதான், தலைவர்கள் நிர்ணயித்திருந்த திட்டமாகும். தன் வினை தன்னைச் சுடும் என்பதற்கு ஒப்ப, எந்த நாட்டை வெள்ளையர்கள் அடிமைப்படுத்த விரும்பினுர்களோ அந்த நாட்டிலேயே அவர்கள் உயிர் தப்ப வழியின்றி ஊழித் தீயில் மாய்ந்து சாம்பலாக வேண்டும் என்பதே தலைவர்களின் நோக்கமாகும்.

ரகசிய ஸ்தாபனத்தின் லக்ஷ்மணபுரிக் கிளை அந்தத் திட்டத்துக்கு இசைந்த தெனினும், வீர சிப்பாய்களால் அதுவரையில் பொறுத்திருக்க முடியவில்லை. ஒவ்வொரு நாள் இரவிலும் கூட்டங்களில் தேசபக்தர்கள் பொழிந்த ஆவேசம் ததும்பும் பிரசங்க மாரிகளும், பகைவர்களின் வீடுகள் தகனமாகும் கோலமும் சிப்பாய்களின் ஆக்கிரகத்தைப் பன்மடங்கு அதிகப்படுத்தின.

அத்தகைய சிப்பாய்களில் நால்வர் மே மாதம் 3-ஆம் தேதியன்று லெப்டினன்ட் மெச்சாம் என்ற வெள்ளை அதிகாரியின் விடுதிக்குப் பாய்ந்து சென்று, 'தனித்த முறையில் எங்களுக்கு உன்மீது எத்தகைய கோபமும் இல்லை; எனினும் நீ இந்தியாவை அடிமைப்படுத்திய ஒரு வெள்ளையன் ஆனதால் நீ பலியாகியே தீர வேண்டும்' என்று கர்ஜித்தனர்.

ஆத்திரத்துடன் நிற்கும் சிப்பாய்களைக் கண்டு மெச்சாம் நடுநடுங்கி, தன்மீது இரக்கங் கொண்டு உயிர்ப் பிச்சை கொடுக்கும்படி அவர்களை மன்றாடிக் கேட்டுக்கொண்டான்: 'நீங்கள் விரும்பினால் என்னை ஒரு விநாடியில் கொன்றுவிட முடியும். ஆயினும் என் போன்ற ஓர் ஏழையைக் கொல்லுவதால் உங்களுக்கு என்ன லாபம்? நான் இறந்தால் என் ஸ்தானத்துக்கு வேறு எவனாவது வந்து சேருவான். இந்த அரசாங்க முறையில் தான் குற்றம் இருக்கிறதே யன்றி என்மீது குற்றமில்லை. ஆகையால் எனக்கு நீங்கள் உயிர்ப்பிச்சை கொடுக்கக் கூடாதா?' என்றான் பரிதாபமாக.

இதைக் கேட்டதும் சிப்பாய்கள் மனம் இரங்கி, அரசாங்க முறையை அடியோடு ஒழிப்பதுதான் தங்களுடைய லட்சியம் என்பதை மனத்தில் எண்ணி அவ்விடமிருந்து திரும்பினர். (சார்லஸ் பால் எழுதியுள்ள சரித்திரத்தில் இந்த விவரங்கள் உள்ளன.) எனினும் அந்தச் செய்தி, மற்ற அதிகாரிகளுக்கும் ஹென்ரி லாரென்ஸுக்கும் எட்டவே, லாரென்ஸ் ஒரு சூழ்ச்சி செய்து அந்தப் பிரிவைச் சேர்ந்த சிப்பாய்களை யெல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கிவிட்டான்.

அதே சமயம் மீரத்திலும் பல சம்பவங்கள் நிகழலாயின. தோட்டாக்களைத் தொடச் சிப்பாய்கள் உண்மையிலேயே ஆட்சேபிக்கிறார்களா என்பதைப் பரிசோதனை செய்வதற்காகச் சில வெள்ளையர்கள் ஒரு 'யுக்தி' செய்தார்கள். அதாவது அந்தத் தோட்டாக்களை உபயோகிக்கும்படி குதிரைப் பட்டாளம் ஒன்றை மே மாதம் 6-ஆம் தேதி வற்புறுத்தினார்கள். ஆனால் அந்தப் பிரிவைச் சேர்ந்த தொண்ணூறு பேர்களில் ஐவரைத் தவிர வேறு எவரும் அவற்றைத் தொடவில்லை.

அதே தோட்டாக்கள் மறுபடியும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவற்றைத் தொட அவர்கள் மீண்டும் மறுத்துத் தங்கள் கூடாரங்களுக்குத் திரும்பிச் சென்றுவிட்டார்கள். உடனே அவர்கள்மீது ராணுவ சபையில் வழக்குகள் தொடரப்பட்டன. தோட்டாக்களைத் தொட மறுத்த எண்பத்தைந்து சிப்பாய்களுக்கும் எட்டு வருஷத்திலிருந்து பத்து வருஷம் வரையில் கடுங்காவல் [illegible] ர்.

நெஞ்சைப் பிளக்கும் இந்தச் சம்பவம் மே மாதம் 9-ஆம் தேதி நிகழ்ந்தது. ஆங்கிலக் காலாட் படை, பீரங்கிப் படை, இவற்றின் காவலில் அந்த எண்பத்தைந்து சிப்பாய்களும் வரிசையாக நிறுத்தப்பட்டனர். மற்றும் அந்தக் கோலத்தைப் பார்க்க வரவேண்டும் என்று இந்தியச் சிப்பாய்கள் எல்லோருக்கும் உத்

தரவு பிறந்தது. தண்டனை யடைந்த சிப்பாய்களின் ராணுவ உடைகள் கிழித்தெறியப் பட்டன. பின்பு, திமிர் பிடித்த ஆங்கிலேயர்கள் அந்தச் சிப்பாய்களின் ஆயுதங்களைப் பறித்த துடன், எல்லோருக்கும் கைகளில் விலங்கிட்டனர். விரோதிகளை விண்ணுலகிற்கு அனுப்பும் வீர வாள்களை வெகு காலமாக ஏந்தி நின்ற அந்தத் தேசபக்தர்களின் கைகள் விலங்குகளை ஏந்த நேர்ந் தது. அந்தக் கோலத்தைக் கண்ட மற்ற இந்தியச் சிப்பாய்களின் ரத்தம் கொதித்ததெனினும் ஆங்கிலப் பீரங்கிப் படைகள் சூழ்ந்து நின்றதால் அவர்கள் அவ்விடத்திலேயே தங்களுடைய வாள்களை உருவ விரும்பவில்லை. பிறகு எண்பத்தைந்து சிப்பாய் களும் விலங்குகளுடன் சிறைக்குக் கொண்டுபோகப் பட் டார்கள்.

அவர்களின் சகோதரர்களான மற்றச் சிப்பாய்கள் அப்போது அவர்களுக்கு என்ன சமிக்ஞை செய்தார்கள் என்பது கூடிய சீக்கிரம் தெரியவரும்! சிறை சென்ற சிப்பாய்களுக்கு அந்தச் சமிக்ஞையானது மிகுந்த உற்சாகத்தை அளித்திருக்கும் என்ப தில் ஐயமில்லை. 'பசு, பன்றியின் கொழுப்புத் தடவப்பட்ட தோட்டாக்களைத் தொட மறுத்ததற்காகப் பத்து வருஷம் கடுங் காவல் தண்டனை விதிக்கும் அந்நியரின் ஆட்சியையும், இந்த அடிமைத்தனத்தையும் நாங்கள் அழித்திடுவோம்! உங்க ளுடைய கால்களைப் பிணைத்துள்ள சங்கிலிகளை மாத்திரம் அல்ல; நமது அருமை அன்னையின் கழுத்தை நூறு ஆண்டுகளாக இறுக்கி யுள்ள அடிமைச் சங்கிலியையும் நாங்கள் வெகு சீக்கிரத்தில் தகர்த்திடுவோம்!'—இவைதாம் அந்தச் சிப்பாய்கள் செய்த சமிக்ஞையின் கருத்தாகும்!

இந்தச் சம்பவம் காலையில் நிகழ்ந்தது. தேசபக்தர்களான வீரர்கள் விலங்கிடப்பட்ட அநீதியைக் கண்ட சிப்பாய்களின் பொறுமை எல்லை கடந்துவிட்டது. அந்நியர்களால் தம் சகோதரர்கள் சிறையில் அடைபட்ட அவமானம் அவர்களுடைய இருதயத்தைப் பிளந்தது. அந்த வீரர்கள் செய்த குற்றம் என்ன? தங்களுடைய சுயமதிப்பையும் மதத்தையும் பாதுகாத்துக்கொள்ள முற்பட்டதுதான். மற்றச் சிப்பாய்கள் மனம் வெதும்பி, கடைத் தெரு வழியாகச் சென்றுகொண் டிருக்கையில், அவர்களைப் பார்த்த பெண்மணிகள், 'உங்க ளுடைய சகோதரர்கள் சிறையில் இருக்கிறார்கள். வெண்ணெய் வெட்டிச் சிப்பாய்களான நீங்கள் கடைத் தெருவிலுள்ள ஈக்களைக் கொல்லுவதற்காக வந்திருக்கிறீர்களோ! சீ, உங்களுக்கு உங்கள் உயிர் வெல்லமாகி விட்டது!' என்று இடித்துக் கூறவே, ஏற்கனவே குமுறிக்கொண் டிருந்த சிப்பாய் களின் ஆத்திரம் பொங்கித் ததும்பும் தறுவாய்க்கு வந்து விட்டது!

அன்றிரவு சிப்பாய்கள் இருந்த இடங்களிலெல்லாம் ரகசியக் கூட்டங்கள் நடந்தன. 'மே மாதம் 31-ஆம் தேதி வரையில் நாம் எல்லோரும் வாளாவிருப்பதா? நம் சகோதரர்கள் சிறையில் உழன்று வருகையில் நாம் பொம்மைகளைப்போல் இருந்த இடத்தி

லேயே உட்கார்ந்துகொண் டிருப்பதா? பெண்களும் குழந்தைகளுங்கூடத் தெருக்களில் நம்மைத் துரோகிகளென்று கடிந்து கூறி வருகையில், மற்றவர்களுக்காக நாம் காத்துக்கொண் டிருப்பதா? 31-ஆம் தேதி இன்னும் வெகு தொலைவில் இருக்கிறது; அதுவரையில் நாம் வெள்ளையர்களின் ஆட்சியைச் சகித்துக்கொண் டிருப்பதா?' இவைபோன்ற சரமாரியான கேள்விகள் சிப்பாய்களின் மனத்தை உறுத்தின. அந்தக் கேள்விகளுக்குச் சிப்பாய்களின் பதில் என்ன? ''கூடாது'', ''கூடாது'' என்பதுதான்!

'நாளை ஞாயிற்றுக்கிழமை மாலை சூரியன் மறைவதற்குள் தேச பக்தர்களின் விலங்குகள் தகர்க்கப்படவேண்டும்; தாய் நாட்டைப் பிணைத்துள்ள சங்கிலிகள் தூளாக்கப்படவேண்டும். சுதந்தரக் கொடி வானளாவிப் பறக்க வேண்டும்!' என்று இந்திய வீரர்கள் பிரதிக்ஞை செய்துகொண்டனர். '11 அல்லது 12-ஆம் தேதி நாங்கள் அங்கே வந்து சேருவோம். போருக்கு ஆயத்தமாக இருங்கள்' என்ற செய்தியுடன் டில்லிக்கும் உடனே தூதர்கள் அனுப்பப்பட்டனர்.

10-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை பொழுது விடிந்தது. மீரத்தில் நடந்த சிப்பாய்களின் கூட்டங்களைப் பற்றியோ, அவர்களுக்கும் மற்ற இடங்களிலுள்ள சிப்பாய்களுக்கும் செய்திப் போக்குவரத்து நடந்துகொண் டிருந்ததைப்பற்றியோ ஆங்கிலேயர்களுக்கு ஒன்றுமே தெரியாது. ஆகையால் அவர்கள் வழக்கம்போல் குதிரை வண்டி சவாரி, புஷ்ப அலங்காரம், உல்லாச நடை, பாட்டு, கூத்து முதலிய கேளிக்கைகளில் ஈடுபடலாயினர். சில ஆங்கிலேயர்களுடைய வீடுகளிலிருந்த வேலைக்காரர்கள் திடீரென்று வேலையை விட்டுச் சென்றது வெள்ளையர்களுக்கு க்ஷணநேரம் ஆச்சரியத்தை உண்டுபண்ணியதே தவிர, அதன் மர்மத்தை அவர்கள் சிறிதும் அறிந்துகொள்ளவில்லை.

சிப்பாய்களின் முகாம்களிலோவெனில் வெள்ளையர்கள் எல்லோரையும் கூண்டோடு படுகொலை செய்வதா, வேண்டாமா என்பதுபற்றி விவாதம் நடந்துகொண் டிருந்தது. அப்போது 20-ஆவது படைப்பிரிவினர், 'நாமெல்லோரும் யுத்த கோஷங்களுடன் அணிவகுத்து டில்லிக்குச் செல்லும் வழியில் ஆடவர்கள், பெண்கள் உள்பட எல்லா ஆங்கிலேயர்களையும் துவம்சம் செய்து அவர்களின் பூண்டையே வேரறுக்க வேண்டும்' என்று கூறிய ஆவேச மொழிகளை எல்லோரும் அங்கீகரித்தனர். அப்போது கிறிஸ்துவ ஆலயங்களில் மணிகள் அடிக்கத் துவங்கின. வெள்ளையர்கள் தங்கள் மனைவிமார்களுடன் ஆலயங்களை நோக்கிச் சென்றுகொண் டிருந்தனர். மீரத்தில் உள்ளவர்களைத் தவிரக் கிராமங்களிலிருந்து வந்திருந்த ஆயிரக் கணக்கானவர்களும் கைக்குக் கிடைத்த ஆயுதங்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

ஐந்து மணி இருக்கும். கிறிஸ்துவ ஆலய மணிகள் அடித்துக் கொண்டிருந்தன. தாங்கள் செய்த பாவங்களுக்காகக் கூடிய

சீக்கிரம் ஆண்டவனின் முன்னிலையில் அலறும்படி நேரப் போகிறது என்பதை அப்போதுகூட ஆங்கிலேயர்கள் அறியார்! அப்போது திடீரென்று இந்தியச் சிப்பாய்கள் இருக்கும் இடங்களிலிருந்து, 'மாரோ பறங்கீகோ!' (கொல்லுங்கள் அந்நியர்களை) என்ற பயங்கர கோஷங்கள் வானைப் பிளந்தன.

சுதந்தரப் போர் பீறிட்டு எழுந்துவிட்டது! முதலில் நூற்றுக்கணக்கான குதிரை வீரர்கள், தங்களுடைய சகோதரர்களை விடுவிப்பதற்காகச் சிறைச்சாலையை நோக்கி அதிவேகமாகச் சென்றனர். சிறைக் காவலர்களும் புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்களே யாதலால், அவர்கள் காவல் வேலையை விட்டுத் தங்களுடைய சகோதரர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். சிறிது நேரத்தில் சிறைக்கூடச் சுவர்களெல்லாம் தகர்க்கப்பட்டுத் தரை மட்டம் ஆயின! ஒரு தேசபக்தர் கைதிகள் எல்லோருடைய விலங்குகளையும் உடைத்தெறிந்தார்.

தங்களுக்கு விடுதலையளித்த சகோதரர்களை அவர்கள் மகிழ்ச்சி பொங்க ஆலிங்கனம் செய்துகொண்ட காட்சியை நினைக்கும்போது உடல் சிலிர்க்கின்றதல்லவா? விடுதலை அடைந்தவர்களும் மற்ற வீரர்களுடன் சேர்ந்து, நாற்றிசையும் அதிரயுத்த கோஷங்கள் செய்துகொண்டு கிறிஸ்துவ ஆலயத்தை நோக்கிச் சென்றனர். அவர்கள் அங்கே செல்லுமுன்னமே காலாட்படைகள் தங்கள் வேலையை ஆரம்பித்துவிட்டன. 11-ஆவது படைப் பிரிவைச் சேர்ந்த கர்னல் பின்னிஸ் குதிரை மீதேறி வந்து வழக்கம்போல் மிகத் திமிருடன் சிப்பாய்களை அலட்சியமாக நோக்கி மிரட்டினன். ஆத்திரங்கொண்ட சிப்பாய்கள் மரணதேவனே உருவெடுத்தாற்போல் அவன்மீது பாய்ந்தனர். ஆனால் அதற்குள் 20-ஆவது படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய், அவனைக் குறிவைத்துத் தன் கைத் துப்பாக்கியில் இருந்த தோட்டாக்களைக் காலி செய்துவிட்டார். அதன் பயனாகக் கர்னல் பின்னிஸின் உடல் மண்ணில் உருண்டது. அவனது குதிரை கீழே விழுந்து இறந்தது.

காலாட் படைகள், பீரங்கிப் படைகள், ஹிந்துக்கள், முஸ்லிம்கள் முதலிய எல்லோரும் ஆங்கிலேயர்களைப் பலியிடத் துடித்தனர். இந்தச் செய்தி, காட்டுத் தீப்போல் சில நிமிஷ நேரத்தில் மீரத் நகரெங்கும் பரவிவிட்டது.

கண்ட இடமெல்லாம் ஜனங்கள் ஆங்கிலேயர்களைக் கொல்ல ஆரம்பித்தனர். கடைத்தெருக்களில் இருந்த ஜனங்கள் பட்டாக் கத்திகள், ஈட்டிகள் போன்ற கைக்குக் கிடைத்த ஆயுதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு இந்தியாவை அடிமைப் படுத்தி அட்டூழியங்கள் புரிந்த ஆங்கிலேயர்களை அழிக்க ஓடினர். வெள்ளையர் சம்பந்தமுள்ள பங்களாக்கள், காரியாலயங்கள், பொதுக்கட்டிடங்கள், ஹோட்டல்கள் முதலியவை தகனம் செய்யப்பட்டன. மீரத்தில் ஆகாயம் முழுவதும் அக்கினிமயம் ஆகியது. கார் மேகங்களைப்போல் புகை மண்டலங்கள் [illegible] அக்கினி ஜ்வாலைகளும்

ஆகாயம் அளாவின. ஆயிரக்கணக்கான தொண்டைகளிலிருந்து ஏக காலத்தில் கூக்குரல்கள் கிளம்பின. எனினும் அந்தக் கூச்சல்கள் எல்லாவற்றையும்விட 'மாரோ பறங்கீகோ!' என்ற கோஷமே உச்ச ஸ்தாயியில் எல்லோருக்கும் தெளிவாகக் கேட்டது!

புரட்சி ஆரம்பமானதும் ஏற்கனவே வகுத்திருந்த திட்டத்திற்கு இணங்க டில்லி செல்லும் தந்திக் கம்பிகளெல்லாம் அறுக்கப்பட்டன; ரெயில் பாதைகள் மிகவும் கவனமாகக் காவல் புரியப்பட்டன; அன்று மையிருட்டாக இருந்ததால், உயிர் தப்பிய ஆங்கிலேயர்கள் என்ன செய்வதென்று தோன்றாமல் குழப்பமடைந்து தவித்தார்கள். அவர்களில் சிலர் குதிரை லாயங்களில் பதுங்கிக்கொண்டனர்; சிலர் மரங்களின் கீழ் இரவைக் கழித்தனர்; சிலர் தங்கள் வீட்டு மாடிகளில் கிடந்தனர்; சிலர் பள்ளங்களில் மறைந்துகொண்டார்கள்; சிலர் விவசாயிகளைப்போல் மாறு வேடம் பூண்டு உயிர் தப்பினர்; மற்றவர்கள் தங்களுடைய இந்தியச் சமையற்காரர்களின் (பட்லர்) கால்களில் விழுந்து உயிர்ப் பிச்சை கொடுக்கும்படி மன்றாடினார்கள்.

அஸ்தமிக்க ஆரம்பித்தவுடனே சிப்பாய்கள் டில்லியை நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள். எனவே நூறு வருஷங்களாக இந்தியாவில் சகிக்க முடியாத அட்டூழியங்கள் புரிந்து வந்த ஆங்கிலேயர்களின்மீது வஞ்சம் தீர்க்கும் வேலையை மீரத் நகர மக்கள் நிறைவேற்றலாயினர். தீயினால் சேதமடையாத வெள்ளையர்களின் கல் வீடுகளை ஜனங்கள் இடித்துத் தரை மட்டமாக்கினர்! கமிஷனர் கிரேட் ஹெட்டின் பங்களாவுக்குத் தீ வைக்கப்பட்டது. அப்போது அவன் உள்ளே ஒளிந்துகொண்டிருந்தான். அவனது பங்களாவை ஜனங்கள் சூழ்ந்துகொள்ளவே, அவன் தன் பட்லரின் காலில் விழுந்து தனக்கும் தன் குடும்பத்துக்கும் உயிர்ப் பிச்சை கொடுக்க வேண்டுமென்று கெஞ்சினான். அந்தப் பட்லரும் மனமிரங்கி வெளியிலிருந்த ஜனங்களிடம் தந்திரமாக ஏதோ கூறிக் கமிஷனரைக் காப்பாற்றினார்.

சில ஜனங்கள் சேம்பர்ஸ் என்பவரின் பங்களாவுக்குள் பிரவேசித்து அவன் மனைவியை வாளால் கொன்றனர். காப்டன் கிரெய்கி தன் மனைவியையும் குழந்தைகளையும் மாறுவேடம் தரிக்கும்படி செய்து, இடிந்து கிடந்த கோவிலில் இரவு முழுதும் அவர்களை மறைத்து வைத்திருந்தான். டாக்டர் கிருஸ்டியும் ஸர்ஜன் பிலிப்ஸும் ஆத்திரங்கொண்ட மக்களால் அடித்துக் கொல்லப்பட்டனர். காப்டன் மெக்டொனால்டு, லெப்டினென்ட் ஹெண்டர்ன், காப்டன் டெய்லர் முதலியோரை ஜனங்கள் விரட்டிச் சென்று விண்ணுலகிற்கு அனுப்பினர். எரிந்த வீடுகளில் இருந்த வெள்ளைப் பெண்களும், குழந்தைகளில் பலரும் மாண்டனர். ஆங்கிலேயர்களின் ரத்தம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகச் சிந்தியதோ, அவ்வளவுக்கு அவ்வளவு தேச பக்தர்களின் பயங்கரமான கோஷங்களும் பலாத்காரச் செயல்களும் அதிகமாயின.

சீக்கிரம் ஆண்டவனின் முன்னிலையில் அலறும்படி நேரப் போகிறது என்பதை அப்போதுகூட ஆங்கிலேயர்கள் அறியார்! அப்போது திடீரென்று இந்தியச் சிப்பாய்கள் இருக்கும் இடங்களிலிருந்து, 'மாரோ பறங்கீகோ!' (கொல்லுங்கள் அந்நியர்களை) என்ற பயங்கர கோஷங்கள் வானைப் பிளந்தன.

சுதந்தரப் போர் பீறிட்டு எழுந்துவிட்டது! முதலில் நூற்றுக்கணக்கான குதிரை வீரர்கள், தங்களுடைய சகோதரர்களை விடுவிப்பதற்காகச் சிறைச்சாலையை நோக்கி அதிவேகமாகச் சென்றனர். சிறைக் காவலர்களும் புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்களே யாதலால், அவர்கள் காவல் வேலையை விட்டுத் தங்களுடைய சகோதரர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். சிறிது நேரத்தில் சிறைக்கூடச் சுவர்களெல்லாம் தகர்க்கப்பட்டுத் தரை மட்டம் ஆயின! ஒரு தேசபக்தர் கைதிகள் எல்லோருடைய விலங்குகளையும் உடைத்தெறிந்தார்.

தங்களுக்கு விடுதலையளித்த சகோதரர்களை அவர்கள் மகிழ்ச்சி பொங்க ஆலிங்கனம் செய்துகொண்ட காட்சியை நினைக்கும்போது உடல் சிலிர்க்கின்றதல்லவா? விடுதலை அடைந்தவர்களும் மற்ற வீரர்களுடன் சேர்ந்து, நாற்றிசையும் அதிர யுத்த கோஷங்கள் செய்துகொண்டு கிறிஸ்துவ ஆலயத்தை நோக்கிச் சென்றனர். அவர்கள் அங்கே செல்லுமுன்னமே காலாட்படைகள் தங்கள் வேலையை ஆரம்பித்துவிட்டன. 11-ஆவது படைப் பிரிவைச் சேர்ந்த கர்னல் பின்னிஸ் குதிரை மீதேறி வந்து வழக்கம்போல் மிகத் திமிருடன் சிப்பாய்களை அலட்சியமாக நோக்கி மிரட்டினான். ஆத்திரங்கொண்ட சிப்பாய்கள் மரணதேவனே உருவெடுத்தாற்போல் அவன்மீது பாய்ந்தனர். ஆனால் அதற்குள் 20-ஆவது படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய், அவனைக் குறிவைத்துத் தன் கைத் துப்பாக்கியில் இருந்த தோட்டாக்களைக் காலி செய்துவிட்டார். அதன் பயனாகக் கர்னல் பின்னிஸின் உடல் மண்ணில் உருண்டது. அவனது குதிரை கீழே விழுந்து இறந்தது.

காலாட் படைகள், பீரங்கிப் படைகள், ஹிந்துக்கள், முஸ்லிம்கள் முதலிய எல்லோரும் ஆங்கிலேயர்களைப் பலியிடத் துடித்தனர். இந்தச் செய்தி, காட்டுத் தீப்போல் சில நிமிஷ நேரத்தில் மீரத் நகரெங்கும் பரவிவிட்டது.

கண்ட இடமெல்லாம் ஜனங்கள் ஆங்கிலேயர்களைக் கொல்ல ஆரம்பித்தனர். கடைத்தெருக்களில் இருந்த ஜனங்கள் பட்டாக்கத்திகள், ஈட்டிகள் போன்ற கைக்குக் கிடைத்த ஆயுதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு இந்தியாவை அடிமைப்படுத்தி அட்டூழியங்கள் புரிந்த ஆங்கிலேயர்களை அழிக்க ஓடினர். வெள்ளையர் சம்பந்தமுள்ள பங்களாக்கள், காரியாலயங்கள், பொதுக்கட்டிடங்கள், ஹோட்டல்கள் முதலியவை தகனம் செய்யப்பட்டன. மீரத்தில் ஆகாயம் முழுவதும் அக்கினி மயம் ஆகியது. கார் மேகங்களைப்போல் புகை மண்டலங்கள் மீரத் நகரையே சூழ்ந்துகொண்டன. அக்கினி ஜ்வாலைகளும்

ஆகாயம் அளாவின. ஆயிரக்கணக்கான தொண்டைகளிலிருந்து ஏக காலத்தில் கூக்குரல்கள் கிளம்பின. எனினும் அந்தக் கூச் சல்கள் எல்லாவற்றையும்விட 'மாரோ பறங்கிகோ!' என்ற கோஷமே உச்ச ஸ்தாயியில் எல்லோருக்கும் தெளிவாகக் கேட்டது!

புரட்சி ஆரம்பமானதும் ஏற்கனவே வகுத்திருந்த திட்டத் திற்கு இணங்க டில்லி செல்லும் தந்திக் கம்பிகளெல்லாம் அறுக்கப்பட்டன; ரெயில் பாதைகள் மிகவும் கவனமாகக் காவல் புரியப்பட்டன; அன்று மையிருட்டாக இருந்ததால், உயிர் தப்பிய ஆங்கிலேயர்கள் என்ன செய்வதென்று தோன்றாமல் குழப்பமடைந்து தவித்தார்கள். அவர்களில் சிலர் குதிரை லாயங்களில் பதுங்கிக்கொண்டனர்; சிலர் மரங்களின் கீழ் இர வைக் கழித்தனர்; சிலர் தங்கள் வீட்டு மாடிகளில் கிடந்தனர்; சிலர் பள்ளங்களில் மறைந்துகொண்டார்கள்; சிலர் விவசாயி களைப்போல் மாறு வேடம் பூண்டு உயிர் தப்பினர்; மற்ற வர்கள் தங்களுடைய இந்தியச் சமையற்காரர்களின் (பட்லர்) கால்களில் விழுந்து உயிர்ப் பிச்சை கொடுக்கும்படி மன்றாடி னார்கள்.

அஸ்தமிக்க ஆரம்பித்தவுடனே சிப்பாய்கள் டில்லியை நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள். எனவே நூறு வருஷங்களாக இந்தியாவில் சகிக்க முடியாத அட்டூழியங்கள் புரிந்து வந்த ஆங்கிலேயர்களின்மீது வஞ்சம் தீர்க்கும் வேலையை மீரத் நகர மக்கள் நிறைவேற்றலாயினர். தீயினால் சேதமடையாத வெள்ளை யர்களின் கல் வீடுகளை ஜனங்கள் இடித்துத் தரை மட்டமாக் கினர்! கமிஷனர் கிரேட் ஹெட்டின் பங்களாவுக்குத் தீ வைக்கப் பட்டது. அப்போது அவன் உள்ளே ஒளிந்துகொண் டிருந்தான். அவனது பங்களாவை ஜனங்கள் சூழ்ந்துகொள்ளவே, அவன் தன் பட்லரின் காலில் விழுந்து தனக்கும் தன் குடும்பத்துக்கும் உயிர்ப் பிச்சை கொடுக்க வேண்டுமென்று கெஞ்சினான். அந்தப் பட்லரும் மனமிரங்கி வெளியிலிருந்த ஜனங்களிடம் தந்திரமாக ஏதோ கூறிக் கமிஷனரைக் காப்பாற்றினார்.

சில ஜனங்கள் சேம்பர்ஸ் என்பவரின் பங்களாவுக்குள் பிர வேசித்து அவன் மனைவியை வாளால் கொன்றனர். காப்டன் கிரெய்கி தன் மனைவியையும் குழந்தைகளையும் மாறுவேடம் தரிக்கும்படி செய்து, இடிந்து கிடந்த கோவிலில் இரவு முழுதும் அவர்களை மறைத்து வைத்திருந்தான். டாக்டர் கிருஸ்டியும் ஸர்ஜன் பிலிப்ஸும் ஆத்திரங்கொண்ட மக்களால் அடித்துக் கொல்லப்பட்டனர். காப்டன் மெக்டொனால்டு, லெப்டினென்ட் ஹெண்டர்ன், காப்டன் டெய்லர் முதலியோரை ஜனங்கள் விரட்டிச் சென்று விண்ணுலகிற்கு அனுப்பினர். எரிந்த வீடு களில் இருந்த வெள்ளைப் பெண்களும், குழந்தைகளில் பலரும் மாண்டனர். ஆங்கிலேயர்களின் ரத்தம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகச் சிந்தியதோ, அவ்வளவுக்கு அவ்வளவு தேச பக்தர் களின் பயங்கரமான கோஷங்களும் பலாத்காரச் செயல்களும் அதிகமாயின.

வழிப்போக்கர்கள் வெள்ளையர்களின் பிரேதங்களை வெறுப்புடன் உதைத்துத் தள்ளினர், வெள்ளையர்களை வீழ்த்தும் விஷயமாக யாராவது தயங்கி இரக்கம் காட்ட முற்பட்டால், உடனே ஆயிரக்கணக்கானவர்கள் 'மாரோ பறங்கிகோ!' என்று இடி முழக்கம் செய்வார்கள். விலங்குகளால் வடு விழுந்த தேச பக்தர்களின் கைகளைச் சுட்டிக்காட்டி, 'இந்தக் கொடுமைக்கு நாம் வஞ்சம் தீர்த்தே ஆக வேண்டும்!' என்று கர்ஜிப்பார்கள். அவ்வளவுதான்; பளபளவென்று மின்னும் பட்டாக்கத்திகள் தயக்கமின்றி மீண்டும் சுழல ஆரம்பித்துவிடும்!

மற்ற இடங்களிலெல்லாம் புரட்சி மூண்ட பின்னர், கடைசியாகவே மீரத்தில் புரட்சியை ஆரம்பிக்கவேண்டும் என்று தலைவர்கள் திட்டம் போட்டிருந்தார்கள். ஏனெனில் அங்கே இந்தியச் சிப்பாய்கள் அடங்கிய காலாட் படைப் பிரிவுகள் இரண்டும் குதிரைப் படைப் பிரிவு ஒன்றுமே இருந்தன. ஐரோப்பியர்கள் அடங்கிய துப்பாக்கிப் படைகளோ மிகவும் அதிகமாக இருந்தன. மற்றும் பீரங்கிப் படை முழுவதும் வெள்ளையர்களிடமே இருந்தது. இந்த நிலைமையில் அங்கே சிப்பாய்கள் வெற்றி பெறுவது கடினம் என்பதற்காகவே புரட்சி ஜாபிதாவில் மீரத்தைக் கடைசியாகக் குறிப்பிட்டிருந்தனர். அதனால்தான் அங்கே புரட்சி மூண்டதும், வெள்ளையர்கள்மீது வஞ்சம் தீர்க்கும் வேலையை மக்களிடம் விட்டு, சிப்பாய்கள் சிறிதும் தாமதமின்றி டில்லிக்குப் பிரயாணமானார்கள். அப்போது மீரத்தில் ஏராளமான ஆங்கிலப் படைகள் இருந்ததால், டில்லிக்குப் புறப்பட்ட சிப்பாய்களை அவர்கள் வெகு எளிதில் தடுத்துச் சின்ன பின்னமாக்கியிருக்க முடியும். எனினும் அவ்விதம் நடைபெறாததற்குக் காரணம் ஆங்கில அதிகாரிகளின் கோழைத்தனமும், நிர்வாகத் திறமையின்மையும், தீர்க்காலோசனை யின்மையுந் தாம் என்பதை ஆங்கில சரித்திராசிரியர்கள் வெட்கத்துடன் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள்.

தன்னுடைய பட்டாளம் வெள்ளையர்களுக்கு விரோதமாகக் கிளம்பிவிட்டது என்பதைக் கேள்விப்பட்டதும், இந்தியக் குதிரைப் படைத் தலைவனான கர்னல் ஸ்மித், தன் உயிருக்கு எங்கே ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்று பயந்து ஓட்டம் பிடித்தான். பீரங்கிப் படைத் தலைவன் தன் படையின் ஆயுதங்களையெல்லாம் சேகரித்துக்கொண்டு வருவதற்குள் சிப்பாய்கள் டில்லிச் சாலை வழியாகச் சென்றுவிட்டனர். அப்போதுங்கூட ஆங்கிலப் படைகள் புறப்பட்டுச் சென்றிருந்தால் அவர்களைத் தடுத்திருக்க முடியும். ஆனால் அவை அவ்விதம் செய்யாமல், தோல்வியடைந்துவிட்டதுபோல் நம்பிக்கை இழந்து சோர்ந்து போயின!

உண்மை என்னவெனில், மீரத்தின் எழுச்சி ஆங்கிலேயர்களை ஒன்றும் தோன்றாமல் பிரமித்துப் போகும்படி செய்துவிட்டது. திடீரென்று ஏற்பட்ட, முன் பின் கண்டிராத இந்த எழுச்சியைப்பற்றி மறுநாள் வரையில் அவர்களால், மனக் குழப்பம் காரணமாக எதுவுமே சிந்திக்க முடியவில்லை! அதற்கு

மாருக, சிப்பாய்களின் மனநிலை மிகவும் தெளிவாக
அவர்கள் சிக்கல் எதுவுமின்றித் தெளிவாகத் தங்கள் திட்டத்தை வகுத்திருந்தனர். அவர்களின் திட்டம் இதுதான்: திடீரென்று எழ வேண்டும்; தேச பக்தர்களான கைதிகளையெல்லாம் விடுவிக்க வேண்டும்; ஆங்கிலேயர்களை யெல்லாம் துடைத்து ஒழிக்க வேண்டும்.

வெள்ளையர்களின் மனக் குழப்பம் தீருமுன் சிப்பாய்கள் டில்லியை நோக்கி வெகு தூரம் சென்றுவிட்டார்கள். டில்லிப் படையெடுப்பு, தலைவர்களின் அற்புதமான சாணக்கிய தந்திர மாகும். ஆரம்ப வேகத்தில் டில்லியைக் கைப்பற்ற ரகசிய ஸ்தா பனத் தலைவர்கள் முற்பட்டது, அவர்களின் உவமையற்ற திறமையையே காட்டுகிறது. புரட்சி இயக்கம் பகிரங்கமாகத் தேசீய மயமானதுடன், நாடெங்கும் ஆங்கிலேயர்களின் கௌரவ மும் சீர்குலைந்தது.

புரட்சியைப்பற்றிய செய்தி வெள்ளையர்களுக்குக் கிடைக்கு முன், மீரத்துக்கும் டில்லிக்கும் இடையே இருந்த தந்திக் கம்பி கள் அறுபட்டு விட்டன; ரஸ்தாக்களையும் தேசபக்தர்கள் காவல் புரியத் தொடங்கினர்; சிறைப்பட்ட வீரர்கள் விடுவிக்கப் பட்டார்கள்; ஆங்கில அரக்கர்களின் ரத்தம் ஆருக ஓடியது. அந்த ரத்தத்தில் நனைந்த வாள்களுடன் இரண்டாயிரம் சிப் பாய்கள், 'சலோ டில்லி', 'சலோ டில்லி' என்ற வெற்றிக் கோஷத்துடன் புறப்பட்டுச் சென்றார்கள்.

## 12

## ஐந்தே நாட்களில்

நானா சாஹிப் பேஷ்வா ஏப்ரல் மாதக் கடைசியிலேயே டில்லிக்குச் சென்றுவிட்டார். எனவே, புரட்சி பீறிடப்போகும் தினமான மே மாதம் 31-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையை எல்லோரும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். ஹிந்துஸ்தானம் முழுவதும் ஏககாலத்தில் அன்று ஆர்த்தெழுந் திருக்குமாயின், ஆங்கிலேயர்களின் அழிவிற்காக 1857-ஆம் ஆண்டுக்குப் பின்னரும் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற் பட்டிராது. அப்போதே இந்தியாவில் ஆங்கில சாம்ராஜ்யம் மண்ணாகியிருக்கும். சுதந்தர இந்தியாவும் வாகை மாலை சூடி யிருக்கும். ஆனால் மீரத்தில் மூண்ட அகாலப் புரட்சி, தேச பக்தர்களைக் காட்டிலும் ஆங்கிலேயர்களுக்கே அதிக நன் மையைக் கொடுத்தது. இவ்விஷயமாக மூன்று சரித்திராசிரி யர்களின் அபிப்பிராயங்கள் இங்கே கொடுக்கப்பட்டிருக்

மாலிஸன்: 'குறிப்பிட்ட தேதியில் திடீரென்று புரட்சி ஆரம்பித்திருக்குமாயின், ஆங்கிலேயர்களில் வெகு சிலரே உயிர் தப்பியிருக்க முடியும். பிறகு இந்தியாவை மீண்டும் கைப்பற்றும் மிகக் கஷ்டமான கடமை நம்மைச் சார்ந்திருக்கும்; அல்லது நமது கீழ்த்திசை சாம்ராஜ்யத்தைக் கைநழுவ விட்டோம் என்ற வெட்கக் கேடான வசைமொழிக்கு நாம் பரம்பரையாக ஆளாகும்படி நேர்ந்திருக்கும்.'

ஒயிட்: 'மீரத்தில் ஆரம்பிக்கப்பட்ட அகாலப் புரட்சி நமக்கு ஒரு விதத்தில் மகத்தான நன்மையை அளித்தது. மே மாதம் 31-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று தேசம் முழுதுமுள்ள சிப்பாய்கள் ஏககாலத்தில் எழவேண்டுமென வகுக்கப்பட்டிருந்த திட்டத்தை அந்த அகாலப் புரட்சி சீர்குலைத்துவிட்டது.'

ஜே. ஸி. வில்ஸன்: 'மே மாதம் 31-ஆம் தேதி ஏககாலத்தில் நடைபெறவிருந்த படுகொலைகளிலிருந்து நம்மைக் காப்பாற்றியவர்கள், மீரத் பெண்களேயாவர். சுரங்க வெடிகள் தயாராக இருந்தன. வலைகளும் விரிக்கப்பட்டிருந்தன. மூன்று வாரங்களுக்குப் பின்னரே ஏககாலத்தில் வெடிகளுக்குத் தீ வைப்பதென்று திட்டம் போடப்பட்டிருந்தது. ஆனால், அதற்குள் மீரத் பெண்களின் வாயிலிருந்து தெறித்த பொறிகளால் வெடிகள் உடனே பற்றிக்கொண்டுவிட்டன. அதன் விளைவாக, பிரிட்டிஷ் ஆட்சியிலேயே அதற்கு முன் கண்டிராத கோரமான நரபலி மே மாதம் 10-ஆம் தேதி இரவு ஆரம்பமாகியது.'

தேசாபிமானம் கொண்ட மீரத் பெண்கள், ஆங்கிலேயர்களின் அட்டூழியங்களைக் கண்டு ஆத்திரமடைந்து, சிப்பாய்களைப் பரிகாசம் செய்து, தண்டனை அடைந்தவர்களை விடுவிக்கும்படி தூண்டியது, நமது சரித்திரத்தில் இந்தியப் பெண்களுக்கே மகத்தான கௌரவம் அளிக்கும் படலம் என்பது உண்மையே. எனினும் குறிப்பிட்ட தேதிக்கு முன் மீரத் சிப்பாய்கள் புரட்சியை ஆரம்பித்தது, அவர்களுடைய சகோதரர்களுக்கு மிகுந்த குழப்பத்தை உண்டாக்கியதுடன், பகைவர்களுக்கும் முன் எச்சரிக்கை ஆகிவிட்டது!

அப்போது டில்லியிலிருந்த சிப்பாய்கள் யாவரும் இந்தியர்களே யாவர். மங்கள பாண்டேயின் வீரத் தியாகம் காரணமாக அவர்களும் பொறுமையை இழக்கலாயினர். எனினும் சக்கரவர்த்தி பகதூர் ஷாவும், சக்கரவர்த்தினி ஸீனத் மஹலும், சிப்பாய்களுடைய ஆத்திரம் எல்லை கடந்துவிடாமல், சாமர்த்தியமாக அவர்களைச் சாந்தப்படுத்தி வந்தார்கள். அச்சமயத்தில்தான், 'நாங்கள் நாளை வருகின்றோம்; அவசியமான ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்து ஆயத்தமாயிருங்கள்' என்ற எதிர்பாராத விசித்திரமான செய்தி, ரகசிய ஸ்தாபனத்தின் மீரத் கிளையிலிருந்து டில்லிக்கு வந்து சேர்ந்தது.

அதே சமயம் இரண்டாயிரம் வீர சிப்பாய்கள், 'டில்லி! டில்லி!' என்ற கோஷத்துடன் டில்லிக்குச் சென்றுகொண்டிருந்தார்கள். அன்று நிசி தேவியே உறங்கவில்லை என்று

தோன்றியது! ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் செல்லும் குதிரைகளின் காலடிச் சப்தமும், பட்டாக் கத்திகள், துப்பாக்கிகள், சிப்பாய்களின் ஆவேச கோஷங்கள் முதலியவற்றின் சப்தமும் ஒருங்கே சேர்ந்த பயங்கரமான சந்தடியில் நிசி தேவி எவ்வாறு உறங்க முடியும்?

மறுநாள் பொழுது விடிந்தது. ஆங்கிலேயர்களின் பீரங்கிப் படைகள் தங்களைத் துரத்தி வராததை அறிந்த சிப்பாய்கள் மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். இரவு முழுதும் அதிவேகமாக நடந்து வந்ததால் ஏற்பட்ட களைப்பையும் மறந்தார்கள். ஒரு நிமிஷமும் தாமதியாது உற்சாகத்துடன் தங்கள் யாத்திரையைத் தொடர்ந்து சென்றார்கள்.

மீரத்திலிருந்து டில்லி சுமார் முப்பத்திரண்டு மைல் தூரம் இருக்கிறது. சிப்பாய்களின் முதற் பிரிவினர் காலை எட்டு மணிக்குப் புனித யமுனையைத் தரிசித்தனர். யமுனா தேவி மந்த மாருதத்துடன் அவர்களை வரவேற்றாள். புனிதமான சுதந்தரப் போரை நடத்திச் செல்லும் அவர்களுக்கு உற்சாகம் ஊட்டுவது போல் தோன்றியது. 'யமுனா தேவிக்கு ஜே!' என்ற கோஷத்துடன் ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் அவளை வணங்கி அஞ்சலி செய்தார்கள்.

படகுகளாலான பாலத்தைக் குதிரைகள் அதிவேகமாகக் கடந்து சென்றன. அந்தப் படையினர் தங்களுடைய புனித லட்சியத்தை யமுனைக்கு அறிவித்து, அவளது ஆசீர்வாதத்தைப் பெற வேண்டாமா? அந்தப் பாலத்தின் வழியாகச் சென்றுகொண்டிருந்த ஓர் ஆங்கிலேயனை அதற்காக அந்த நதிக்குப் பலி கொடுத்தனர். அங்கே சிந்திய ஆங்கிலேயனின் ரத்தம், அந்தச் சிப்பாய்கள் டில்லியை நோக்கி ஏன் அவ்வளவு அவசரமாகச் செல்லுகிறார்கள் என்பதை யமுனா தேவிக்கு அறிவித்திருக்கும்!

பாலத்தைத் தாண்டிய சிப்பாய்கள் சிறிது நேரத்தில் டில்லிக் கோட்டை வாயிலுக்கு அருகில் வந்துவிட்டார்கள். டில்லியிலுள்ள வெள்ளை அதிகாரிகளுக்கு அந்த வதந்தி எட்டியதும், அவர்கள் தங்களிடம் இருந்த சிப்பாய்களையெல்லாம் ராணுவ மைதானத்தில் கூட்டி, அவர்களுக்கு ராஜ பக்தியின் பெருமைபற்றிப் பிரசங்கங்கள் செய்யலாயினர்! கர்னல் ரிப்லி 54-ஆவது பட்டாளத்தைக் கூட்டிக்கொண்டு மீரத் சிப்பாய்களை எதிர்ப்பதற்காகப் புறப்பட்டான். டில்லி சிப்பாய்கள் புறப்படுகையில், 'மீரத் சிப்பாய்களை எங்களுக்குக் காட்டுங்கள்; பிறகு நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம்!' என்று ரிப்லியிடம் கூறினர். ரிப்லியோ, 'சபாஷ்' என்று அவர்களை மெச்சினான்.

டில்லி சிப்பாய்கள் சிறிது தூரம் சென்றபின், டில்லிக் கோட்டையை நோக்கி மீரத் குதிரைப் படை வருவதைப் பார்த்தனர். குதிரைப் பட்டாளத்துக்குப் பின்னால் சிவப்பு உடைகள் தரித்து, ஆங்கிலேயர்களின் ரத்தத்தைச் சிந்த ஆவேசம் கொண்டவை போன்று காலாட்படைகளும் வந்துகொண்

டிருந்தன. மீரத்திலிருந்து வந்துகொண் டிருந்த சிப்பாய்களும் டில்லியிலிருந்து சென்ற சிப்பாய்களும் சந்தித்தனர். இரு சாராரும் பரஸ்பரம் வணங்கினார்கள். அவர்களுடைய கண்களில் சகோதர உணர்ச்சி சுடர்விட்டது. உடனே மீரத் சிப்பாய்கள், 'ஆங்கில ஆட்சி ஒழிக!', 'டில்லி சக்கரவர்த்தி நீடூழி வாழ்க!' என்று கோஷம் செய்தார்கள். அதற்குப் பதிலாக, 'அந்நியர்களைக் கொல்லுங்கள்!' என்று டில்லி சிப்பாய்களிடமிருந்து கோஷம் பிறந்தது. ரிப்லியோ திகைத்துப்போய், 'இதென்ன!' 'இதென்ன!' என்று கூக்குரலிட்டான். உடனே பல தோட்டாக்கள் அவன்மீது பாய்ந்து அவனுடைய கேள்விக்குப் பதிலளித்து விட்டன.

அவனைப்போலவே டில்லி ராணுவத்தைச் சேர்ந்த ஆங்கில அதிகாரிகள் யாவரும் கொல்லப்பட்டனர். இவ்வாறு தங்களுடைய தேச பக்தியை வெள்ளையர்களின் ரத்தத்தால் முத்திரையிட்ட பின்னர், மீரத் குதிரை வீரர்கள் கீழே இறங்கி வந்து, டில்லியைச் சேர்ந்த தோழர்களை அன்புடன் ஆலிங்கனம் செய்துகொண்டார்கள். உடனே டில்லிக் கோட்டையிலுள்ள பிரசித்தி பெற்ற காஷ்மீர் வாசற் கதவு திறக்கப்பட்டது. சுதந்தர வீரர்கள் அதன் வழியாக உட்பிரவேசித்து ஜயகோஷங்களுடன் முன்னேறிச் சென்றார்கள்.

மீரத் படையின் இரண்டாவது பிரிவுத் துருப்புகள் டில்லிக் கோட்டையின் கல்கத்தா வாசற் கதவு வழியாக உள்ளே செல்ல முயன்றன. அது தாழிடப்பட்டிருந்ததெனினும் மீரத் சிப்பாய்களின் பயங்கரமான தாக்குதலால் திறந்துகொண்டது. உள்ளேயிருந்த காவலர்களும், 'சுதந்தரம்!'. 'சுதந்தரம்!' என்ற கோஷத்துடன் மீரத் சிப்பாய்களுடன் சேர்ந்துகொண்டார்கள். கல்கத்தா வாசலின் வழியாகப் பிரவேசித்த சிப்பாய்கள் தரியா கஞ்சிலுள்ள ஆங்கிலேயர்களின் பங்களாக்களை நோக்கிச்சென்றார்கள். சிறிது நேரத்திற்குள் அங்கிருந்த வெள்ளையர்களின் வீடுகள் யாவும் ஜ்வாலை மயமாயின. தீயிலிருந்து தப்பிய வெள்ளையர்கள் சிப்பாய்களின் வாள்களுக்கு இரையானார்கள்.

சமீபத்தில் ஆங்கிலேயர்களின் ஆஸ்பத்திரி ஒன்று இருந்தது. பல ஆங்கிலேயர்களுக்கு அது புகலிடமாக இருந்து வருவது தெரிந்ததும், சிப்பாய்கள் அங்கே சென்று ஆஸ்பத்திரியை மாத்திரம் அல்ல, அங்கே ஒளிந்துகொண் டிருந்த விரோதிகளையும் மண்ணோடு மண்ணாக்கிவிட்டார்கள். ஆவேசம் கொண்ட சிப்பாய்கள் பின்னர் ஆங்கிலேயர்களின் ரத்தத்துக்காக நகரெங்கும் வேட்டையாடினார்கள். தேசீய வீரர்கள் வாட்களுடன் வரிசை வரிசையாகச் சென்றது, பயங்கர தேவியே விசுவரூபம் எடுத்து வாளுடன் செல்லுவது போல் தோன்றியது! அத்தகைய படைகளுக்கு உரிய ஒரு கொடி வேண்டாமா? வெறும் துணிக்கொடி அதற்குப் பொருத்தமாக இருக்குமா? ஆகையால் வீரர்கள் தங்களுடைய ஈட்டி முனைகளில் வெள்ளையர்களின் தலைகளைப் பொருத்திக் கொடிகளைப்போல் ஏந்திச் சென்றனர்!

சிப்பாய்களும் நகர ஜனங்களும் டில்லி அரண்மனை வாயிலில் வந்து கூடி, 'சக்கரவர்த்திக்கு ஜே!' என்று கோஷம் செய்தார்கள். காயமடைந்த கமிஷனரான பிரேஸர் அவ்வமயம் அரண்மனைக்குள் பிரவேசித்துக்கொண் டிருந்தான். உடனே நுஸுல் பேக் என்பவர் அவனைக் குத்திக் கீழே தள்ளினார். புரட்சி வீரர்கள் அரண்மனை மாடிக்குச் செல்லுவதற்குப் பிரேஸரின் பிரேதம் ஒரு படியாகியது! மாடியில் ஜென்னிங்ஸும் அவன் குடும்பத்தினரும் வசித்துக்கொண் டிருந்தனர். சிப்பாய்களைக் கண்டதும் யாரோ ஒருவர் மாடி அறையின் கதவைத் தாழிட முயன்றார். எனினும் சிப்பாய்களின் உக்கிரமான தாக்குதலால் கதவு படீரென்று திறந்துகொண்டது. ஜென்னிங்ஸும் அவன் மகளும் மற்றொருவரும் ஒரு விநாடியில் சிப்பாய்களின் வாள்களுக்கு இரையாயினர். மாடியின் ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டிருந்த கலெக்டருக்கும், பயத்தினால் டில்லித் தெருக்களின் வழியாக ஓடிய காப்டன் டக்லஸுக்கும் அந்தக் கதியே நேர்ந்தது.

இவ்வாறாக, டில்லி அரண்மனை, ஜனங்களுடைய படைகளின் வசமாயிற்று. உடனே எதிர்காலத் திட்டங்களை ஒட்டிச் சக்கரவர்த்தி, சக்கரவர்த்தினி, சிப்பாய்களின் தலைவர்கள் முதலியோர் மந்திராலோசனை செய்தனர். ஏற்கனவே வகுத்திருந்த திட்டப்படி இனி 31-ஆம் தேதி வரையில் காத்திருப்பது அர்த்தமற்றதாகும். சக்கரவர்த்தி முதலில் சிறிது தயங்கினார் என்றாலும் பிறகு தேசீய வீரர்களுடன் பகிரங்கமாகச் சேர்ந்துகொள்வதென்று தீர்மானித்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தில், மீரத்திலிருந்து பீரங்கிப் படையின் பெரும் பகுதியும் டில்லி வந்து சேர்ந்தது. அந்தப் படையைச் சேர்ந்த வீரர்கள் அரண்மனைக்குள் பிரவேசித்ததும், சக்கரவர்த்திக்கும் சுதந்தரத்துக்கும் மரியாதையாக இருபத்தொரு குண்டுகள் போடப்பட்டன. பீரங்கிப் படையின் பேரிடி முழக்கத்தைக் கேட்டதும், சக்கரவர்த்தியின் மனத்திலிருந்த அற்பத் தயக்கமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. ஆங்கிலேயரின் ரத்தம் தோய்ந்த வாள்களுடன் சிப்பாய்களின் தலைவர்கள், கம்பீரமும் பெருமையும் வாய்ந்த சக்கரவர்த்தியின் முன்னிலையில் நின்று கூறலாயினர்.

''ராஜாதி ராஜனே! மீரத்தில் ஆங்கிலேயர்கள் தோல்வியடைந்து விட்டார்கள். டில்லி உங்கள் வசம் இருக்கிறது. பிஷாவரிலிருந்து கல்கத்தா வரையிலும் உள்ள எல்லாச் சிப்பாய்களும் மக்களும் உங்களுடைய கட்டளைக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆங்கிலேயர்கள் பூட்டிய அடிமைச் சங்கிலியைத் தகர்த்து, ஆண்டவனால் அருளப்பட்டுள்ள நமது பிறப்புரிமையாகிற சுதந்தரத்தைப் பெற ஹிந்துஸ்தானம் முழுவதும் ஆர்த்தெழுந்துவிட்டது. ஆகையால், இவ்வமயம் உங்கள் கையில் சுதந்தரக் கொடியை ஏந்துவீர்களாயின், அந்தக் கொடியின் கீழ், பகைவர்களை எதிர்த்துப் போர் புரிவதற்காக இந்தியாவிலுள்ள வீரர்கள் எல்லோரும் வந்து கூடுவார்கள். இழந்த சுயராஜ்

யத்தை மீண்டும் பெறுவதற்காகப் போர் புரிய ஹிந்துஸ்தானம் ஆரம்பித்துவிட்டது. தலைமை வகித்து அந்தப் போரை நடத்த நீங்கள் இசைவீர்களாயின், ஒரு நொடியில் இந்தப் பறங்கிப் பிசாசுகளை யெல்லாம் கடலில் மூழ்கடிக்கின்றோம்! அல்லது கழுகுகளுக்கு இரையாக்கி விடுகின்றோம்!''

ஹிந்து, முஸ்லிம் தலைவர்கள் அவ்விதம் ஒற்றுமையுடனும் உணர்ச்சி ததும்பவும் கூறிய ஆவேச மொழிகளைக் கேட்ட சக்கரவர்த்தியின் உள்ளம் உருகியது. ஷாஜஹானும் அக்பரும் அவரது மனக்கண்முன் வந்து நின்றனர். அவரது இருதயத்தில் தெய்விகமான உத்வேகம் எழும்பியது; அடிமைச் சேற்றில் உழன்றுகொண்டிருப்பதைக் காட்டிலும் தாய் நாட்டை விடுவிக்கும் முயற்சியில் உயிர் துறப்பதே மேலானது என்ற எண்ணம் ஏற்பட்டது.

''என்னிடம் பொக்கிஷம் எதுவும் இல்லை; நீங்கள் சம்பளமின்றியே உங்கள் கடமையைச் செய்ய வேண்டும்'' என்றார் சக்கரவர்த்தி. ''பொக்கிஷம் இல்லையே என்ற கவலை வேண்டாம்; நம் தேசத்திலுள்ள வெள்ளையர்களின் கஜானாக்களை யெல்லாம் உங்கள் காலடியில் கொண்டுவந்து குவிக்கின்றோம்'' என்று தேச பக்தர்கள் கர்ஜித்தனர். தாம் தலைமை வகித்துச் சுதந்தரப் போரை நடத்துவதாகச் சக்கரவர்த்தி இறுதியில் வாக்களிக்கவே, அரண்மனையில் கூடியிருந்த ஜன சமுத்திரத்திலிருந்து பேரிடி முழக்கம்போன்ற கரகோஷமும் சந்தோஷ ஆரவாரமும் வானளாவின!

அரண்மனையில் நிலைமை இவ்வாறிருக்க, வெளியே நகரெங்கும் பயங்கரமான குழப்பம் தாண்டவமாடியது. ஆயிரக்கணக்கான டில்லி நகர வாசிகள், கைக்குக் கிடைத்த ஆயுதங்களுடன் தேசீய வீரர்களோடு சேர்ந்துகொண்டு வெள்ளையர்களை வேட்டையாட ஆரம்பித்தார்கள். சுமார் பன்னிரண்டு மணிக்கு டில்லி பாங்கி முற்றுகையிடப்பட்டது. அந்தப் பாங்கி மானேஜரான பெர்ஸ்போர்டும், அவன் குடும்பத்தினரும் வஞ்ச தேவிக்குப் பலியாயினர். பாங்கிக் கட்டிடம் இடித்துத் தகர்க்கப்பட்டது.

ஆவேசம் கொண்ட ஜன சமூகம் அங்கிருந்து 'டில்லி கெஜட்' என்ற பத்திரிகையின் அச்சுக் கூடத்தை நோக்கிச் சென்றது. அவ்வமயம் மீரத்திலிருந்து வந்த செய்தியை, 'கம்பாஸிட்டர்கள்' வெகு பரபரப்புடன் அச்சுக் கோத்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று வெளியே ஜனங்களின் ஆவேச ஆரவாரம் கேட்டது. அவ்வளவுதான்! உள்ளே இருந்த வெள்ளையர்கள் யாவரும் சிறிது நேரத்தில் வீரர்களின் வாள்களுக்கு இரையாயினர். அச்செழுத்துக்களெல்லாம் சின்ன பின்னமாக்கப்பட்டன. யந்திரங்களெல்லாம் தூளாயின. பின்னர் ஜன சமூக வெள்ளமானது அப்பாலிருந்த ஒரு கிறிஸ்துவ ஆலயத்தை நோக்கி ஓடியது. அங்கே பிரார்த்தனை செய்யச் சென்ற ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் அவர்கள்

செய்யும் மகா பாவங்கள் ஒரு தடவையாவது சுட்டிக் காட்டப் பட்டனவா? இல்லை, இல்லை! ஆகையால் ஜனங்களின் ஆக்கிரகத் துக்கு அதுவும் இரையாகியது.

அதே சமயம் நகரின் மற்றொரு புறத்தில் மிகவும் கோர மான ஒரு நாடகம் நடக்கலாயிற்று. அரண்மனைக்கு அருகில் ஆங்கிலப் படைகளின் பிரம்மாண்ட ஆயுதசாலை ஒன்று இருந்தது. அதில் ஏராளமான வெடி மருந்துடன், ஒன்பது லட்சம் தோட்டாக்கள், பத்தாயிரம் துப்பாக்கிகள், பீரங்கிகள், முற்றுகைத் தளவாடங்கள் முதலியனவும் வைக்கப்பட்டிருந்தன. அந்த ஆயுதசாலையைக் கைப்பற்ற வேண்டுமென்று தேச பக்தர்கள் தீர்மானித்தனர். எனினும் அது எளிதான காரிய மல்ல. ஏனெனில், ஆயுதசாலையிலுள்ள ஆங்கிலேயர்கள் அதைத் தாக்குவோர் சகலரையும், ஒரு நெருப்புக் குச்சியைப் பற்ற வைப்பதன் மூலம் நொடிப்பொழுதில் கொன்றுவிட முடியும். ஆகவே, ஆயுதசாலையைக் கைப்பற்றுவது மிகவும் ஆபத்தான காரியமாகும். எனினும் அதைக் கைப்பற்ருவிடில், சுதந்தரப் போருக்கு எந்த க்ஷணத்திலும் ஆபத்து ஏற்படக் கூடும். ஆதலால், அதைக் கைப்பற்ற ஆயிரக் கணக்கான சிப்பாய்கள் உறுதி கொண்டனர்.

ஆயுதசாலையைத் தங்களிடம் ஒப்பித்துவிட்டுச் சரணடை யும்படி சிப்பாய்களின் தலைவர்கள், சக்கரவர்த்தியின் பெயரால், ஆயுதசாலை அதிகாரிகளுக்கு ஒரு செய்தி அனுப்பினர்கள். எனினும் அத்தகைய காகிதச் செய்திகளால் ஒரு போதும் ராஜ்யங்கள் பிடிக்கப்பட்டதில்லை அல்லவா? ஆயுதசாலையில் இருந்த லெப்டினன்ட் வில்லபி அந்தச் செய்திக்குப் பதில் கூட அனுப்பவில்லை. அந்த அவமதிப்பினுல் அதிக ஆத்திர மடைந்த சிப்பாய்கள் ஆயுதசாலைச் சுவர்களின்மீது ஏறினர்கள். உள்ளே ஒன்பது ஆங்கிலேயர்களும் சில இந்தியர்களும் இருந் தனர். டில்லிக் கோட்டையில் சக்கரவர்த்தியின் கொடி பறப் பதைக் கண்டதும், அங்கிருந்த இந்தியர்களும் தேசீய வீரர்க ளுடன் சேர்ந்துகொண்டார்கள். போரிடுவதைத் தவிர வெள்ளை யர்களுக்கு வேறொரு வழியும் இல்லை. சிப்பாய்கள் ஆயுத சாலையை வெகு உக்கிரமாகத் தாக்க ஆரம்பித்தார்கள். ஆங்கி லேயர்கள் அதிக நேரம் எதிர்த்து நிற்க முடியாது என்பது தெரிந்துவிட்டது. இங்கிலாந்தின் நன்மைக்காக ஆயுதசாலையைப் பாதுகாக்க முடியாவிடில் அதற்குத் தீ வைத்து விடுவதென்று முதலிலேயே வெள்ளையர்கள் தீர்மானித்துவிட்டனர். ஏனெனில், ஆயுதசாலையைச் சிப்பாய்களிடம் ஒப்பித்துவிட்டாலுங்கூடத் தாங்கள் தப்புவது நிச்சயமில்லை என்று அவர்கள் கருதினர்.

ஆயுதசாலைக்கு வெள்ளையர்கள் தீ வைத்து விடுவார்களா யின் தங்களிடையே மிகுந்த உயிர்ச்சேதம் ஏற்படும் என்பதைச் சிப்பாய்களும் நன்கு அறிவர். அப்படியிருந்தும் அவர்கள் உக்கிரமான தாக்குதலைத் தொடர்ந்தனர். நூற்றுக்கணக்கான டில்லி நகர ஜனங்களும் அவர்களுக்கு உதவியாக வந்தார்கள். இரு சாராரும் ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்து வந்த

பேரிடி முழக்கம் கேட்டது. ஏக காலத்தில் ஆயிரம் பீரங்கிகளால் சுட்டது போன்ற கோர சப்தம் வானைப் பிளந்தது. பயங்கரமான புகை மண்டலங்கள் வானத்தைச் சூழ்ந்து கொண்டன. தீ வைத்த ஆங்கிலேயர்கள் உள்பட உள்ளேயிருந்த சகலரும் சிதல் சிதலாயினர்.

தேசபக்தர்களின் பக்கத்திலும் இருபத்தைந்து சிப்பாய்களும், தெருக்களில் இருந்த ஜனங்களில் முந்நூறு பேரும் சின்ன பின்னமாயினர்!

எனினும் சிப்பாய்களின் துணிச்சலும் ஏராளமான தேசபக்தர்களின் உயிர்த் தியாகமும் வீண் போகவில்லை. அவ் வீரர்களுக்கு ஆயுதசாலையிலிருந்து ஏராளமான ஆயுதங்கள் கிடைத்தன. ஆயுதசாலை, ஆங்கிலேயரிடம் இருந்தவரையில், டில்லியில் இருந்த இந்தியச் சிப்பாய்கள் எல்லோரும் ஆங்கில ராணுவ அதிகாரிகளின் கீழ் இருந்தனர். அந்தச் சிப்பாய்கள் தங்களுடைய சகோதரர்களை எதிர்க்க மறுத்து விட்டார்களெனினும், ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகவும் எழவில்லை. மாலை நான்கு மணிக்கு ஆயுதசாலை வெடித்த சப்தத்தினால் டில்லி நகரமே அதிர்ந்து ஆடியது! அந்தச் சப்தத்தைக் கேட்டதும் டில்லி ராணுவ ஸ்தலச் சிப்பாய்களும் தேசபக்தர்களுடன் சேர்ந்து வெள்ளையர்களை வேட்டையாடும் புனிதக் கடமையை நிறைவேற்றலாயினர். கார்டன், ஸ்மித், ரெவ்லி முதலிய அதிகாரிகளை அவர்கள் மறு உலகிற்கு அனுப்பினார்கள்.

நூறு வருஷங்களுக்குப் பின் விழித்தெழுந்த வஞ்ச தேவதைக்கு ஆங்கில ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள், ஆங்கிலேயரின் சம்பந்தமுள்ள வீடுகள், கற்கள், கடிகாரங்கள், மேஜைகள், நாற்காலிகள் முதலிய எல்லாம் பலியாயின! இறுதியில் சக்கரவர்த்தியின் கண்டிப்பான உத்தரவின் பயனாக, ஐம்பது வெள்ளையர்கள் உயிர் தப்பிச் சிறையில் அடைபட்டனர். எனினும் அந்தக் கொடியவர்களையும் தங்களிடம் ஒப்பிக்க வேண்டுமென்று தேசபக்தர்கள் மன்றாடவே, நாலு அல்லது ஐந்து நாட்கள் கழித்துச் சக்கரவர்த்தி அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்குவதைத் தவிர வேறு வழி இல்லாமற் போயிற்று.

சிப்பாய்கள், மே மாதம் 10-ஆம் தேதி ஐம்பது ஆங்கிலேயர்களையும் ஒரு பொது மைதானத்துக்குக் கொண்டு வந்தார்கள். அக்காட்சியைப் பார்ப்பதற்காகக் கூடியிருந்த ஆயிரக்கணக்கான ஜனங்களும் ஆங்கில ஆட்சியையும், ஆங்கிலேயர்களின் துரோகத்தையும் சபித்து ஆர்ப்பரித்தனர். தலைவர்களிடமிருந்து உத்தரவு கிடைத்த நொடிப்பொழுதில் அந்த வெள்ளையர்கள் சகலருடைய தலைகளும் தரையில் உருண்டன. தங்கள் மீது இரக்கம் காட்ட வேண்டுமென்று அவர்களில் சிலர் கெஞ்சிக் கேட்டுக்கொண்டபோது, ‘நம் சகோதரர்களைக் கைவிலங்கிட்டதற்கு வஞ்சம் தீருங்கள்; கோடிக் கணக்கான நம் தேச மக்களை அடிமைத்தனத்தில் ஆழ்த்திய அரக்கர்கள்மீது

வஞ்சம் தீருங்கள்!', 'ஆயுதசாலைக்குத் தீ வைத்து நூற்றுக் கணக்கான நம் சகோதரர்களைப் பலி வாங்கிய பாதகர்கள் மீது வஞ்சம் தீருங்கள்!' என்ற கோஷங்கள் மக்களிடமிருந்து கிளம்பியதால், வீரர்களின் வாள்கள் சிறிதும் தயங்காமல் அவற்றின் வேலையைச் செய்து முடித்தன.

11-ஆம் தேதி ஆரம்பமான வெள்ளையர் வேட்டை 16-ஆம் தேதி முடிவடைந்தது. இதன் மத்தியில் நூற்றுக்கணக்கான ஆங்கிலேயர்கள் டில்லியிலிருந்து ஓட்டம் பிடித்தனர்; சிலர் தங்களுடைய முகங்களில் கரியைப் பூசிக்கொண்டனர்; இந்தியர் களை இழிவாக நினைத்த அவர்கள், உயிர் தப்புவதற்காக அவ்வாறு மாறுவேடம் தரிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட் டது! சிலர் காடுகளின் வழியாக ஓடுகையில் அதிக உஷ்ணம் காரணமாக உயிர் துறந்தனர். மற்றும் சிலர் சந்நியாசிகள்போல் வேடம் பூண்டு கிராமங்களின் வழியாக உயிர் தப்பிச் செல்ல முயன்றனர். ஆனால், அவர்கள் தந்திரம் வெளியானதும் கிராமவாசிகள் அவர்களைப் பலியிடச் சிறிதும் தயங்கவில்லை. சிலர் மாத்திரம், இரக்க சித்தமுள்ள சில கிராமவாசிகளின் உதவியால் மீரத்திலுள்ள ஆங்கிலேயரின் முகாமுக்கு ஓடி உயிர் தப்ப முடிந்தது.

தங்கள் எல்லையை மிதிக்க இனி ஒரு வெள்ளையரைக்கூட அநுமதிப்பதில்லை என்று ஆயிரக்கணக்கான கிராமவாசிகள் சபதம் செய்துகொண்டார்கள். தேச ஆவேசம் கொண்ட வீரர் கள் ஆங்கிலேயர்களைப் பலி கொடுத்தனரேயன்றி ஓர் ஆங்கிலப் பெண்ணைக்கூட மானபங்கம் செய்யவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். 'வெள்ளையரின் ரத்தம் ஆறாக ஓடியது எனினும், அவர்கள் மிகுந்த கொடுமைக்கு உள்ளாயினர் எனினும், ஆங் கிலப் பெண் யாரும் மானபங்கப் படுத்தப்படவில்லை' என்று ரகசியப் போலீஸ் இலாகாத் தலைவனான சர் வில்லியம் மூர் குறிப்பிட் டிருக்கிறான்.

அவ்வளவு குழப்பமும் கோர நிலைமையும் தாண்டவ மாடிய சமயத்தில்கூடத் தேசீய வீரர்கள் ஆங்கிலப் பெண்களை அவமதிக்க முற்படவில்லை. அதிலிருந்து அவர்களின் உயர்ந்த லட்சியத்தையும் ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் உலகம் அறிந்துகொள்ளும். இந்த உண்மையை ஆங்கில சரித்திராசிரி யர்களும் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள்.

அவ்விதம் இருந்தும், அவ்வமயம் இங்கிலாந்தில் ஆங்கிலப் பாதிரிமார்கள் இந்திய தேசபக்தர்கள்மீது அபாண்டமான பழிகளைச் சுமத்தத் தயங்கவில்லை. சத்தியத்தைக் கடைப் பிடிக்க வேண்டிய பாதிரிமார்கள், மிகவும் இழிவாகவும் கொடூர மாகவும் இந்திய தேசபக்தர்கள்மீது குற்றச் சாட்டுக்களை ஜோடிக்க முற்பட்டார்கள்! டில்லித் தெருக்களில் ஆங்கிலப் பெண்கள் நிர்வாணமாக நடக்கும்படி வற்புறுத்தப் பட்டார் களாம். அவர்களும் வெள்ளைச் சிறுமிகளுங்கூடப் பகிரங்கமாக மானபங்கப்படுத்தப் பட்டார்களாம். ஆங்கிலப் பெண்களின்

ஏற்பட இருக்கும் மாபெரும் ஆபத்தைக் குறித்து ஆங்கிலேயர்களுக்கு முன்னெச்சரிக்கையாக அமைந்தது. அதனால் தாங்கள் செய்த தவறுகளை யெல்லாம் சீர்ப்படுத்திக் கொள்ளவும் அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது. திடீரென்று அவர்கள் டில்லியைத் தாக்குவதன் மூலம், சக்கரவர்த்தியிடமிருந்து இரண்டே நாட்களில் மீண்டும் டில்லி சிம்மாசனத்தைக் கைப்பற்றிவிட முடியும் அல்லவா?

ஆனால், ஏற்கனவே தலைவர்கள் நிர்ணயித்திருந்தபடி, மே மாதம் 31-ஆம் தேதி ஏக காலத்தில் நாடெங்கும் புரட்சி ஏற்பட்டிருக்குமானால், ஒரே நாளில் தேசபக்தர்களுக்குப் பூரண வெற்றி கிடைத்திருக்கும். மீரத்தில் திடீரென்று மூண்ட புரட்சியின் விளைவாக, தலைவர்களின் திட்டம் சீர் குலைந்த தென்றாலும், டில்லியைத் தேசபக்தர்கள் கைப்பற்றியதன் மூலம் புரட்சிப் போர் தேசீயமயமாகி, ஹிந்துஸ்தானம் முழுவதும் மக்களிடையே மகத்தான விழிப்பு உண்டாயிற்று. அவ்விழிப்பைச் சாதகமாகக் கொண்டு உடனே தேசமெங்கும் சுதந்தரப் போரை ஆரம்பிப்பதா? அல்லது ஏற்கனவே நிர்ணயித்தபடி 31-ஆம் தேதி வரையில் காத்திருப்பதா என்ற கேள்வி அப்போது எழுந்தது.

ரகசிய ஸ்தாபனத்தைச் சேர்ந்த முக்கியக் கிளைகளின் திட்டங்கள் என்ன? மற்றவர்களைக் கலந்து ஆலோசிக்காமல் போரை ஆரம்பித்தால், மீரத் எழுச்சியால் ஏற்பட்டது போன்ற குழப்பம் உண்டாகாதா? இவைபோன்ற சந்தேகங்களைக் கிளப்பிக்கொண்டு, மற்ற இடங்களிலுள்ள புரட்சித் தலைவர்கள் தங்களுடைய அரிய நேரத்தை வீணாக்கினர்.

எந்தப் புரட்சியாயினும், அதைக் கொல்லுவதற்குத் தடுமாற்றத்தைக் காட்டிலும் கொடிய கருவி வேறு எதுவும் இல்லை. புரட்சியில் திடீரென்றும் துரிதமாகவும் தீர்மானம் செய்வோரே வெற்றிபெற முடியும். முதல் முதலாகப் புரட்சியை ஆரம்பித்தபின் தாமதமே கூடாது. தாமதம் செய்து, பகைவர்களுக்கு மூச்சுவிட அவகாசம் அளித்தால் உஷாராகி, தகுந்த முன்னேற்பாடுகளைக் கைக்கொண்டு விடுவார்கள். முதலில் புரட்சியை ஆரம்பித்தவர்களோ வெனில், தங்களுடன் யாரும் சேராததால் நம்பிக்கை இழந்துவிடுவர். பகைவர்களுக்கும் அந்த அநுபவம் ஒரு படிப்பினையாகி, அதன் பின் புரட்சி செய்வோருக்கு முட்டுக் கட்டையாக அவர்கள் பல தடைகளை ஏற்படுத்த முற்படுவார்கள். எனவே, புரட்சி ஆரம்பமாவதற்கும் அது பரவுவதற்கும் இடையே விரோதிகளுக்கு அவகாசம் அளிப்பது ஆபத்தாக முடியும்.

துரதிருஷ்ட வசமாக 1857-இல் பகைவர்களுக்கு அத்தகைய அவகாசம் அளிக்கப்பட்டதே அநர்த்தமாக முடிந்தது. தலைவர்கள் வகுத்திருந்த திட்டத்துக்கு முரணாகத் திடீரென்று புரட்சி மூண்டது, அவர்களுக்குக் குழப்பத்தை உண்டு பண்ணி விட்டது. எனவே, அவர்களால் குறித்த காலம் வரையில்

காத்திருக்கவும் முடியவில்லை: புரட்சியில் உடனே கலந்து கொள்ளவும் முடியவில்லை.

புரட்சித் தலைவர்களின் அத்தகைய தடுமாற்றமே ஆங்கிலேயர்களுக்கு மிகவும் சாதகமாகியது. ஹிந்துஸ்தானத்தில் காலடி வைத்ததிலிருந்து ஆங்கிலேயர்களுக்கு அவ்விதப் பயங்கரமான செய்தி கிடைத்தது, அதுதான் முதல் தடவையாகும். எந்தச் சிப்பாயின் வாள்களால் இந்தியாவில் ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் பரவி நிலை நிறுத்தப்பட்டதோ, அதே வாள்கள் இப்போது வெள்ளையர்களை வீழ்த்த முற்பட்டன. மீரத்திலிருந்து தொலைந்த ஆங்கில ஆதிபத்தியம் டில்லிக்குச் சென்றது. அங்கும் அதைத் தலை காட்டவிடாமல், சக்கரவர்த்தி அதன் கழுத்தை நெரித்து, அதன் கிரீடத்தையும் கைப்பற்றிக் கொண்டார். கடைசியாக அது படுகாயங்களுடனும், மீரத் பெண்களால் காறி உமிழப்பட்டும், ரத்தம் வழிய, தலைவிரி கோலமாக, பிரலாபித்துக்கொண்டு கல்கத்தாவுக்குச் சென்றது!

இந்தியாவில் ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் சிறிதளவும் இயற்கைப் பலத்தை ஆதாரமாகக் கொண்டதல்ல. அப்போது பரத்புரியிலிருந்து ஆக்ரா வரையில் எழுநூற்றைம்பது மைல் தூரத்துக்கு, ஆங்கிலேயர்களின் பட்டாளம் ஒன்றுதான் இருந்தது. எனவே, தலைவர்களின் திட்டத்திற்கு இணங்க ஏககாலத்தில் புரட்சி மூண்டிருக்குமாயின், ஒன்றல்ல, பத்து இங்கிலாந்துகள் சேர்ந்துகொண்டிருந்தாலுங்கூட, ஹிந்துஸ்தானத்தில் வெள்ளையரின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தியிருக்க முடியாது.

அந்த ஆங்கிலப் பட்டாளம் அப்போது தானபுரில் இருந்தது. பாஞ்சால எல்லைப்புறத்திலும் ஏராளமான வெள்ளைத் துருப்புகள் இருந்தன. அவற்றை அங்கே வைத்திருக்க வேண்டியது ஆங்கிலேயர்களுக்கு அவசியமாக இருந்தது. இந்த நிலையில் முதல் முதலாக எத்தனை வெள்ளைத் துருப்புகளை ஒன்று சேர்க்க முடியுமோ, அத்தனை துருப்புகளை ஒன்று சேர்ப்பதில் லார்டு கானிங் முனைந்தான். அவ்வமயம் ஆங்கிலோ-பாரஸிக யுத்தம் முடிந்தது, ஆங்கிலேயர்களுக்கு நன்மையாகியது. அந்தப் போர்முனையில் இருந்த படைகளுக்கு, உடனே இந்தியாவுக்குத் திரும்பும்படி உத்தரவு அனுப்பப்பட்டது. பாரசிக யுத்தம் முடிந்ததும் ஆங்கிலேயர்களுக்குச் சீனுவுடன் சண்டை மூண்டதால், பாரசிகப் போர்முனையில் இருந்த துருப்புகளைச் சீனுவுக்குச் செல்லும்படி ஆங்கில அதிகாரிகள் கட்டளை யிட்டிருந்தனர். எனினும் அந்தத் துருப்புகளை வழியில் நிறுத்தி, இந்தியாவுக்குத் திரும்பி வரும்படி உத்தரவிடக் கானிங் தீர்மானித்தான். அவைகளைத் தவிர, ரங்கூனுக்குச் செல்லவிருந்த இரு ஆங்கிலப் படைப் பிரிவுகளும் கல்கத்தாவிலேயே நிறுத்தி வைக்கப் பட்டன. சென்னையிலிருந்து 43-ஆவது பிரிவுக் காலாட் படைகளையும் தயாராக வைத்திருக்கும்படியும் சென்னைக் கவர்னருக்குச் செய்தி அனுப்பினார்கள்.

இவ்வாறாகப் பல திசைகளிலிருந்தும் ஆங்கிலத் துருப்புகள் கல்கத்தாவை நோக்கிச் சென்றுகொண்டிருக்கையில், சிப்பாய்

களைச் சாந்தப்படுத்த, கானிங் ஒரு தந்திரம் செய்து பார்த்தான். அதாவது ஒரு பிரகடனம் விடுத்து, ஒவ்வொரு நகரிலும் கிராமத்திலும் அதை ஒட்டி விளம்பரப்படுத்தும்படி செய்தான். அது அவர்களுடைய வழக்கமான தொனியில் இருந்தது: 'உங்கள் ஜாதி, மத விஷயங்களில் தலையிடும் உத்தேசம் எங்களுக்கு இல்லை. எங்களுக்கு உங்களுடைய மதத்தை அவமதிக்க வேண்டுமென்ற நோக்கம் சிறிதும் இல்லை. நீங்கள் விரும்பினால் உங்கள் கைகளினாலேயே தோட்டாக்களைச் செய்துகொள்ளலாம். கம்பெனியின் உப்பைத் தின்றுள்ள நீங்கள் அதற்கு விரோதமாகப் புரட்சி செய்வது பாவமாகும்.' இதுதான் கானிங் விடுத்த பிரகடனமாகும்.

ஆனால் இத்தகைய பகட்டுப் பிரகடனங்களை இனி யார் சட்டை செய்யப் போகிறார்கள்? இந்தியாவில் பிரகடனங்கள் வெளியிட ஆங்கிலேயர்களுக்கு என்ன உரிமை இருக்கிறதென்று ஜனங்கள் போரில் ஈடுபட்டிருக்கையில், புதிய பிரகடனமொன்றை வெளியிடுவது அவர்களின் ஆத்திரத்தை அதிகப்படுத்துமேயல்லாது அவர்களைச் சாந்தப்படுத்துமா? மற்றும் இந்திய மக்களுக்கு அப்போது வெள்ளையர்களின் பிரகடனங்களைப் படித்துக்கொண்டிருக்க நேரமும் இல்லை! ஏனெனில் எல்லோருடைய கவனமும் டில்லியிலிருந்து வெளியான அற்புதப் பிரகடனத்தை நோக்கிச் சென்றது. டில்லியிலிருந்து விடுதலைப் பிரகடனமும், கல்கத்தாவிலிருந்து அடிமைப் பிரகடனமும் ஒரே சமயத்தில் வெளியானது ஒரு விசித்திரமான காட்சியாக இருந்தது. ஆனால் டில்லியிலிருந்து வெளியான பிரகடனத்தையே ஹிந்துஸ்தானம் முழுவதும் வரவேற்றது. எனவே, கானிங், பேனாவைக் கீழே வைத்துவிட்டு, டில்லியை நோக்கி உடனே பீரங்கிகளைத் திருப்பும்படி பிரதம தளபதிக்கு உத்தரவிட்டான்.

டில்லி சுதந்தரம் பெற்றுவிட்டது என்ற திடுக்கிடும் செய்தி கிடைத்தபோது, பிரதம தளபதி ஆன்ஸன் சிம்லாவில் இருந்தான். என்ன செய்வதென்று அவன் யோசித்துக்கொண்டிருக்கையில், உடனே டில்லியைத் தாக்கும்படி கானிங்கிடமிருந்து கட்டளை பிறந்தது. அதிலிருந்து புரட்சியின் பலத்தைப்பற்றி ஆங்கிலேயர்களின் அறியாமையைத் தெரிந்துகொள்ளலாம். ஒரு வாரத்தில் டில்லியைக் கைப்பற்றி விடலாமென்றும், ஒரு மாதத்திற்குள் புரட்சியை அடக்கிவிடலாமென்றும் அவர்கள் முழு நம்பிக்கையுடன் இருந்தனர். பாஞ்சாலப் பிரதம அதிகாரி சர் ஜான் லாரென்ஸும், டில்லியைக் கைப்பற்றும்படி ஆன்ஸனுக்கு அவசரச் செய்திகள் அனுப்பினான். எனினும் டில்லியை மீண்டும் கைப்பற்றுவதில் எவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை. லாரென்ஸையும் கானிங்கையும் காட்டிலும் ஆன்ஸன் நன்கு அறிவான். எனவே, போருக்குப் போதிய முஸ்தீபுகளெல்லாம் செய்யும் வரையில் காத்திருப்பதென்று தீர்மானித்தான்.

சிம்லா மலையுச்சியை விட்டு ஆன்ஸன் அம்பாலாவிலுள்ள ராணுவத் தலைமைக் காரியாலயத்துக்கு வந்ததுதான் தாமதம்,

சிம்லாவில் பெரும் கூக்குரலும் குழப்பமும் திகிலும் உண்டாயின. கூர்க்க நாஸிரிப் பட்டாளமும் ஆங்கிலேயர்களுக்கு விரோத மாகக் கிளம்பிவிட்டதென்ற வதந்தியே திகிலுக்குக் காரண மாகும். அதைக் கேட்டதும் சிம்லாவில் இருந்த வெள்ளையர்கள் எல்லோரும் தைரியம் இழந்து நடுங்கத் தொடங்கினர். அந்த வருஷம் சிம்லாவில்கூட வெள்ளையர்களால் உஷ்ணம் சகிக்க முடியவில்லை! குளிர்ச்சியான பங்களாக்களிலும் அழகிய சிங்கார நந்தவனங்களிலும் வெகு காலமாக ஆங்கிலேயர்கள் ராஜ போகங்களை அநுபவித்து வந்ததற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டதுபோல் தோன்றி யது!

கூர்க்கப் படைகள் வந்துகொண் டிருக்கின்றன என்ற வதந்தியைக் கேட்டதும் ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் ஓட்டம் பிடித்தனர். ஆடவர்களும் அவசர அவசரமாகக் கட்டிய மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு ஓடலாயினர். ஆடவர்கள் பாரங்களைச் சுமந்து சென்றனராயினும், அந்தப் பந்தயத்தில் பெண்களையும் குழந்தைகளையும் வெகு தூரம் பின் தங்கும்படி செய்துவிட்டார்கள்! அந்த ஓட்டப் பந்தயம் இரண்டு நாட்கள் வரையில் நடந்ததால் ஆங்கிலேயர்களின் கோழைத்தனம் உலகம் அறிய அம்பலமாயிற்று. கூர்க்கப் படைகள் வரவில்லை என்பது தெரிந்த பின்தான், அவர்கள் ஓட்டம் நின்றது.

அதே சமயம் கல்கத்தாவிலும் அதுபோன்ற சம்பவங்கள் நிகழலாயின. அங்கும் பாரக்புரியிலுள்ள இந்தியப் படைகள் வெள்ளையர்களுக்கு விரோதமாகப் போர் தொடுத்திருக்கின்றன என்று ஒரு வதந்தி கிளம்பியது. உடனே ஆங்கில ஆடவர் களும் பெண்களும் குழந்தைகளும் கோட்டையை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள். பலர் இங்கிலாந்துக்குச் செல்ல டிக்கெட்டு கள் வாங்கினர்; பலர் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு எந்த விநாடியிலும் கோட்டைக்கு ஓட ஆயத்தமாயிருந்தனர்; பலர் தங்கள் தங்கள் காரியாலயங்களில் ஒளிந்துகொண்டனர். மீரத்திலும் டில்லியிலும் நிகழ்ந்த சம்பவங்கள் வெள்ளையர் களின் மனத்தில் அவ்வளவு திகிலை உண்டாக்கி விட்டன.

ஆன்ஸன் அம்பாலாவுக்கு வந்ததும், டில்லியை முற்றுகை யிடுவதற்காகப் பீரங்கிகளைச் சேகரிக்க முற்பட்டான். இந்தியா விலுள்ள ஆங்கிலேயர்களுக்கு இதற்குமுன் இத்தகைய மாபெரும் ஆபத்து ஒருபோதும் ஏற்பட்டதில்லை. இப்போதுதான் அவர்களுடைய உண்மையான பலவீனம் வெளியாயிற்று. அவர் கள் நிலைமை மிகவும் பரிதாபமாக இருந்தது. முற்றுகை முஸ்தீபுகளைத் துரிதமாகச் செய்ய ஆன்ஸனால் முடியவில்லை! இந்தியர்களைத் தங்கள் விருப்பப்படி அதிகாரம் செய்ய முடிய வில்லை. தங்களுடைய சொந்தச் சிப்பாய்களிடங்கூட வெள்ளையர் களின் அதிகாரம் செல்லவில்லை. தங்களுடைய திமிரையும் ஆடம்பரமான பழக்க வழக்கங்களையும் வெள்ளைச் சிப்பாய்கள் கைவிட விரும்புவார்களா? எனவே ஆங்கில அதிகாரிகளின் பாடு திண்டாட்டமாகியது.

அப்போது இந்தியர்களுடைய உதவியை நாடுவது என்ற பேச்சே எழ இடமில்லை. வண்டிகள், தொழிலாளர்கள், பண்டங்கள், காயமடைந்தவர்களைத் தூக்க 'டோலி'கள் முதலியன எதுவும் வெள்ளையர்களுக்குக் கிடைக்கவில்லை. ராணுவ அதிகாரிகள், வைத்திய அதிகாரிகள் முதலிய் சகலரும் தங்களுக்குத் தேவையான சாதனங்களைச் சேகரிக்க முடியாமல் திகைத்துப் போய்த் திண்டாடினார்கள்.

அச்சில்லாத தேருக்கும், இந்தியாவில் இந்தியர்களின் உதவியற்ற ஆங்கிலேயர்களின் அதிகாரத்துக்கும் வேற்றுமை எதுவும் இல்லை என்ற உண்மை அப்போது வெளியாயிற்று. இந்தியர்கள் விழித்து எழுந்துவிட்டதால், ஆங்கிலேயர்கள் எதுவுமே செய்ய முடியவில்லை. அம்பாலாவிலிருந்து டில்லிக்குப் புறப்பட்டுச் செல்லக்கூட அவர்களால் முடியாமல் போயிற்று! அவர்களால் இழிவாகக் கருதப்பட்ட 'சுதேசி'களோ, அவர்களின் நிலையை வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தனர். பெரிய முதலாளிகள் முதல் பரம ஏழைகள் வரையில் ஒருவராவது, இரண்டொரு நாட்களில் மறையப்போகும் ஆங்கில ஆதிபத்தியத்துக்கு உதவி அளிக்க முன்வரவில்லை. அவ்விதம் இந்தியர்கள் ஆங்கிலேயர்களுக்கு உதவி அளிக்காமல் நிரந்தரமாக ஒதுங்கி நின்றிருப்பார்களாயின், கேய் என்ற பிரபல சரித்திராசிரியர் குறிப்பிட்டிருப்பதுபோல் இந்தியாவில் ஆங்கில ஆதிபத்தியம் இரண்டொரு நாட்களில் அடியோடு மறைந்திருக்கும் என்பது நிச்சயம்.

ஆனால் துரதிருஷ்டவசமாக 1857-இல் அத்தகைய சுபதினம் வரவில்லை. நீண்ட காலத் தூக்கத்துக்குப் பின் ஜனங்கள் அவ் வருஷந்தான் விழித்தெழத் தொடங்கினர். சுப தினம் வரப் போகிறதென்று நினைத்தவர்கள் விழித்துக்கொண்டு படுக்கையை விட்டு எழுந்தார்கள். ஆனால் மற்றவர்களோ, அடிமைத்தனமாகிற போர்வையை அகற்ற மனமின்றி இழுத்து மூடிக் கொண்டு மறுபடியும் தூங்கலாயினர்.

அத்தகைய தூக்கத்தில் பாடியாலா, நாபா, ஜிந்த் இம் மூன்று சம்ஸ்தானங்களும் தீவிரமாகப் போட்டி போட்டன. சுதந்தரப் போர் வெற்றியடையும்படி செய்வதோ அல்லது தோல்வியுறும்படி செய்வதோ, அந்தச் சம்ஸ்தானங்களின் கையில் இருந்தது. அவை அம்பாலாவுக்கும் டில்லிக்கும் மத்தியில் இருப்பதால் அந்தச் சம்ஸ்தானங்களின் உதவியின்றி ஆங்கிலேயர்கள் தங்களுடைய சேனைகளின் பின்னணியைப் பாதுகாப்பதென்பது முடியாத காரியம். அவை நடுநிலைமை வகித்திருந்தாலுங்கூட, சுதந்தரப் போர் வெற்றி பெறச் சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கும்.

ஆனால் அந்த மூன்று சம்ஸ்தானங்களும், ஆங்கிலேயர்களைக் காட்டிலும் அதிகக் கொடுமையாகச் சுதந்தர எழுச்சியை அடக்க முற்பட்டன. எனவே, டில்லிக்கும் பாஞ்சாலத்துக்கும் இருந்த இணைப்புச் சங்கிலி அறுபட்டு, பாஞ்சால-டில்லிச் சாலை அடைபட்டு விட்டது. டில்லிச் சக்கரவர்த்தி அனுப்பியிருந்த அழைப்பை

அந்தச் சமஸ்தானங்கள் வெறுத்ததுடன் அந்தச் செய்தியைக் கொண்டு வந்த குதிரை வீரர்களையும் கொன்றன; மற்றும் தம் கஜானுக்களிலிருந்து வெள்ளையர்களுக்குப் பணத்தை அள்ளிக் கொடுத்தன; ஆங்கிலத் துருப்புகளுக்கு ஆபத்து ஏற்படாமல் அவை வரும் வழியையும் காவல் புரிந்த பின்னர். டில்லியிலுள்ள தேசியக் கொடியைப் பாதுகாப்பதற்காகப் பாஞ்சால தேசபக்தர்கள் புறப்பட்டுவருகையில், இவை ஆங்கிலத் துருப்புகளுடன் சேர்ந்துகொண்டு அவர்களைச் சித்திரவதையும் படுகொலையும் புரிந்தன.

பாடியாலா, நாபா, ஜிந்த் சமஸ்தானங்களின் உதவி, தங்களுக்கு நிச்சயம் கிடைக்கும் என்பது தெரிந்ததும், வெள்ளையர்கள் இழந்த தைரியத்தை மீண்டும் பெறலாயினர். பாடியாலா ராஜா, சிப்பாய்களுடனும் பீரங்கிப் படைகளுடனும் தம் சகோதரனை அனுப்பி, தானேசுவர ரஸ்தாவைக் காவல் புரிய உத்தரவிட்டான். ஜிந்த் ராஜனோ, பலமான முஸ்தீபுகளுடன் பானிபட்டுக்கு வந்து சேர்ந்தான். மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த அந்த இரு பிரதேசங்களும் பலமாகப் பாதுகாக்கப் படவே, டில்லியிலிருந்து அம்பாலா செல்லும் பாதைகளை ஆங்கிலேயர்கள் தங்கள் விருப்பப்படி உபயோகித்துக்கொள்வது சாத்தியமாயிற்று. பாஞ்சாலத்துடன் யாதொரு தடையுமின்றிச் செய்திப் போக்குவரத்துச் செய்வதும் எளிதாயிற்று.

எனவே, பிரதம தளபதி ஆன்ஸன் மே மாதம் 25-ஆம் தேதி அம்பாலாவிலிருந்து டில்லிக்குப் புறப்பட்டான். ஆயினும் டில்லி விடுதலை அடைந்த செய்தியால் ஏற்கனவே ஆன்ஸனுக்கு ஏற்பட்ட பயங்கர அதிர்ச்சி தீரவில்லை. போதாக் குறைக்குச் சிம்லா மலையுச்சியில் சொகுசாக இருந்த அவனது நிலைமை, டில்லி செல்லும் வழியில் வெட்டவெளியிலும் கடும் வெயிலிலும் கஷ்டப்பட வேண்டுமே என்ற பீதியால் பின்னும் அதிக மோசமாகியது. எனவே, அவன் மனம் உடைந்து தேகம் இளைத்து, 27-ஆம் தேதி கர்னல் என்ற இடத்துக்கு வருகையில் வாந்திபேதியால் மாண்டான். அன்றைத் தினமே சர் ஹென்ரி பர்னார்ட் பிரதம தளபதிப் பதவியை ஏற்றுக்கொண்டான்.

ஆங்கிலத் துருப்புகள் பழைய தளபதியைப் புதைத்துவிட்டு, புதிய தளபதியின்கீழ் டில்லிக்குப் புறப்பட்டன. டில்லியில் தங்களுக்கு வெற்றி கிடைக்கப் போவது நிச்சயம் என்று ஆங்கிலேயர்கள் முழு நம்பிக்கையுடன் இருந்தனர். காலையில் யுத்தத்தைத் தொடங்கி மாலையில் டில்லியிலுள்ள விரோதிகளின் உதிரத்தை உறிஞ்சிவிடுவோம் என்று அவர்கள் பெருமை அடித்துக்கொண்டு சென்றார்கள்.

அவர்கள் அம்பாலாவிலிருந்து டில்லிக்குச் சென்றபோது, வெள்ளைத் துருப்புகளின் இருதயத்திலுள்ள கரும் விஷத்தை உலகம் அறிந்துகொண்டது. இந்திய மக்களைக் கொடிய அடிமைத்தனத்தில் ஆழ்த்திய அந்தப் பாதகர்கள், மீரத் சிப்பாய்களுக்கு நாஸ்திகர்கள் என்று பட்டம் சூட்டினார்கள். இந்தியாவும் இந்திய மதங்களும் காட்டுமிராண்டித்தனமானவை

என்று பிரகடனம் செய்தார்கள். அதனால்தான் மீரத்திலும் டில்லியிலும் நிரபராதிகளான ஆங்கிலேயர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள் என்றும் வாய் கூசாது பிரசாரம் செய்தார்கள். அந்த அரக்கர்கள், அம்பாலாவிலிருந்து டில்லி வரையில் ஆயிரக் கணக்கான கிராமங்களில் தங்கள் கைக்குக் கிடைத்தவர்களை யெல்லாம் பிடித்து, வரிசை வரிசையாக நிற்க வைத்து, அவர்களுக்குத் தூக்குத் தண்டனை விதித்தார்கள். பிறகு அவர்களை யெல்லாம் சித்திரவதை செய்து கொன்றார்கள்.

மீரத்தில் இந்தியர்கள் ஆங்கிலேயர்களைக் கொன்றது உண்மையே. எனினும் அவர்கள் ஆங்கிலேயர்களை மிருகத்தனமாகவோ, காட்டுமிராண்டித்தனமாகவோ சித்திரவதை செய்ய வில்லை. சுதந்தரத்தையும் மதங்களையும் நசுக்கிய அந்நியர்களின் கழுத்துக்களை வாள்களால் ஒரே வீச்சில் வெட்டி வீழ்த்திவிட்டார்கள். ஆனால் ஆங்கிலேயர்களோ, நூற்றுக்கணக்கான, நிரபராதிகளான தேசபக்தர்களுக்கு நொடிப்பொழுதில் தூக்குத் தண்டனை விதித்து, தூக்கு மரங்கள் நாட்டப்படுவதற்குள் அவர்களை யெல்லாம் - உலக சரித்திரத்திலேயே கண்டும் கேட்டுமிராத முறையில் சித்திரவதை செய்தார்கள். இந்தியர்களின் தலையிலுள்ள கேசங்கள் கொத்துக் கொத்தாகப் பறிக்கப்பட்டன; அவர்களின் உடல்கள், துப்பாக்கிக் கத்திகளால் சல்லடைக் கண்கள் போல் துளைக்கப்பட்டன. சித்திரவதையையும் மரணத்தையும் காட்டிலும் அவர்கள் எதைச் சகிக்க முடியாதோ, அதையும் செய்ய வெள்ளையர்கள் தயங்கவில்லை. அதாவது ஆங்கிலேயர்கள் துப்பாக்கிச் சனியன்களிலும் ஈட்டி முனைகளிலும் பசு, பன்றி மாமிசங்களைக் குத்தி யெடுத்து, அவற்றை நிரபராதிகளான ஏழைக் கிராமவாசிகளின் வாய்களில் திணித்தனர்.

அந்தக் கிராம வாசிகளுக்குத் தண்டனை விதித்த ராணுவ சபையைப்பற்றியும் வாசகர்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். நிரபராதிகளான கிராமவாசிகளை மாட்டு மந்தையைப்போல ஓரிடத்தில் கூட்டி அவர்களுக்கு 'நீதி' வழங்கப்பட்டது. நெதர்லண்ட்ஸில் நடந்த புரட்சியின்போது புரட்சிக்காரர்களை விசாரிப்பதற்காக ஒரு ராணுவக் கோர்ட் நியமிக்கப்பட்டது. அந்தக் கோர்ட்டில் விசாரணை நடந்துகொண் டிருக்கையில் நீதிபதி தூங்கிவிடுவார். தண்டனை விதிக்க வேண்டிய நேரம் வந்ததும் விழித்தெழுந்து, 'இந்தக் கைதிகள் எல்லோரையும் தூக்கிலிடுங்கள்' என்று நிதானமாக யோசித்துத் தீர்ப்புக் கூறுபவர்போல் சொல்லிவிடுவார்!

ஆனால் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் நடத்திய ராணுவ சபையோ அதையும் காட்டிலும் படுமோசமாக இருந்தது. நெதர்லண்ட்ஸ் நீதிபதியைப்போல் ஆங்கில நீதிபதிகள் தூங்குவதில்லை. தூங்காமலே, எல்லோருக்கும் - அவர்கள் குற்றவாளிகளாயினும் அல்லது நிரபராதிகளாயினும் - தூக்குத் தண்டனை விதித்தனர்! மற்றும் அந்த நீதிபதிகள் சபைக்கு வருமுன், 'இன்று எல்லோருக்கும் தூக்குத் தண்டனை விதித்தே தீரவேண்டும்' என்று பிரமாணம் எடுத்துக்கொண்டும் வருவார்கள்!

இந்த உண்மைகளையும், தூக்குத் தண்டனை அடைந்த நிரபராதிகளை ஆங்கிலச் சிப்பாய்கள் சித்திரவதை செய்த கொடுமையையும், ஹோம்ஸ் என்ற ஆங்கில சரித்திராசிரியர் விவரித்திருக்கிறார்.

டில்லியிலும் மீரத்திலும் சில ஆங்கிலேயர்கள் கொல்லப்பட்டார்கள் என்பதற்காக ஆங்கில அரக்கர்கள் இவ்விதம் வழி நெடுக ஆயிரக்கணக்கான இந்தியர்கள்மீது வஞ்சம் தீர்த்துக் கொண்டு வந்தார்கள். பிரதம தளபதியான பர்னார்ட் டில்லிக்குச் செல்லுமுன் மீரத்திலிருந்த ஆங்கிலத் துருப்புகளையும் தன்னுடன் சேர்த்துக்கொள்ள விரும்பினான். மீரத்தில் ஏராளமான ஆங்கிலத் துருப்புகள் இருந்தன என்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவை மீரத்திலிருந்து அம்பாலாவுக்குச் சென்றுகொண் டிருந்தன.

அம்பாலாத் துருப்புகளுடன் அவை சேருவதற்குள் மீரத் துருப்புக்களை எதிர்த்துப் போராடுவதற்காக டில்லியிலிருந்து படைகள் புறப்பட்டு வந்தன. அவ்விரு துருப்புகளும் 30-ஆம் தேதியன்று மோதிக்கொண்டன. இந்திய தேசீயப் படைகளின் வலது புறம் மிகவும் சக்தி பொருந்திய பீரங்கிகளால் பாதுகாக்கப்பட்டதால், அங்கே விரோதிகள் எதுவும் செய்ய முடியவில்லை. ஆனால் தேசீயப் படைகளின் இடது புறம் அவ்வளவு பலமாக இராததால், அந்தத் துருப்புக்களிடையே குழப்பம் ஏற்பட்டது. இறுதியில் அவர்கள் போர்க்களத்தில் ஐந்து பீரங்கிகளை விட்டு, டில்லிக்குப் பின்வாங்கும்படி நேர்ந்தது.

எனினும், அந்தப் பீரங்கிகளை ஆங்கிலேயர்கள் எடுத்துக் கொள்ளுமுன், 11-ஆவது பிரிவைச் சேர்ந்த ஒரு தேசீய வீரர் போர் முனையிலிருந்து பின் வாங்குவதைக் காட்டிலும் மரணத்தை வரவேற்பதே உத்தமம் என்று உறுதிகொண்டார். மற்றவர்கள் தங்களுடைய கடமையைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், தாம் இறப்பதற்குள் தமது தேசத்துக்காக ஏதாவது தொண்டு செய்தே தீருவதென்று அவர் திட சங்கல்பம் செய்துகொண்டார். அத்தகைய புனித லட்சியத்தால் தூண்டப்பட்ட அவ்வீரர், அந்தப் பீரங்கிகள் வெள்ளையர்களின் வசமாகி விடும் என்பதை அறிந்து, அவற்றைச் சுற்றி ஆங்கிலேயர்கள் கூடியவுடனே, வெடிமருந்துக் குவியலை நோக்கித் துப்பாக்கியால் சுட்டார்.

உடனே பயங்கரமான ஒரு வெடிச் சப்தம் ஏற்பட்டது. அருகில் இருந்த காப்டன் ஆண்ட்ரூஸும், மற்றும் பலரும் எரிந்து மாண்டனர். ஏராளமான ஆங்கிலேயர்களுக்குக் காயம் ஏற்பட்டது. சுட்ட வீரரும் அதனால் மாண்டார். இவ்வாறாக அந்த வீரர், ஹிந்தன் நதிக்கரையிலே தாயின் பாதத்தில் பல பகைவர்களையும் பலி கொடுத்துவிட்டுத் தாமும் தாயின் மடியில் சாய்ந்தார்!

டில்லி ஆயுத சாலைக்குத் தீ வைத்த காப்டன் வில்லபியை ஆங்கில சரித்திராசிரியர்கள் இடைவிடாது புகழ்வதுபோல், தாய் நாட்டுக்காக உத்தமத் தொண்டும் உயிர்த் தியாகமும் புரிந்த அந்த வீரரை நாமும் என்றென்றும் போற்றிப் புகழ்

வோமாக! ஆனல், அந்தோ, அவரது பெயர் யாருக்கும் தெரிய வில்லை. அவ்வீரரைப்பற்றி ஆங்கில சரித்திராசிரியரான கேய் குறிப்பிட்டிருப்பதாவது: 'புரட்சிக்காரர்களுள், தாய் நாட்டுக் காக மரணத்தையும் அன்புடன் வரவேற்கும் பல வீரத் தியாகி கள் இருந்தனர் என்பதை அந்த வீரரின் செய்கை நமக்கு உணர்த்துகிறது.'

இவ்வாறு முதல் யுத்தத்தில் ஆங்கிலேயர்கள் பூரண வெற்றி பெற்றதால், இரண்டொரு நாட்களில் டில்லி வீழ்ச்சி அடைந்துவிடும் என்று மற்ற இடங்களிலிருந்த ஆங்கிலேயர் கள் எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். தபால் வரும்போதெல் லாம், 'டில்லியைப் , பிடித்தாகி விட்டதா?' என்று கேட்ட வண்ணமாக இருந்தனர்! ஆனல் டில்லியிலோ நிலைமை முற்றும் வேறு விதமாக இருந்தது. திடீரென்று புரட்சி ஜ்வாலை மூண்ட தும், அதைச் சரியான வழியில் செலுத்திப் பகைவர்களைத் தகிக் கும்படி செய்யும் ஆற்றலும் ஆண்மையும் டில்லித் தலைவர் களுக்கு உடனே ஏற்படவில்லை. எனினும், தாய் நாடு விடுதலை பெற்றால் ஒழிய, கடவுள் அளித்த உயிர் இருக்கும் வரையில் வாளா இருப்பதில்லை என்ற ஆழ்ந்த உறுதியும் ஆர்வமும் டில்லியிலுள்ள ஒவ்வோர் இந்தியரின் இருதயத்திலும் பொங் கிக்கொண் டிருந்தன.

ஹிந்தன் நதிக்கரையில் அடைந்த தோல்விக்காக, நம் சிப்பாய்களை 30-ஆம் தேதி இரவு முழுதும் டில்லி மகா ஜனங் கள் கடிந்துகொண்டார்கள். எனவே சிப்பாய்கள், முதல் நாள் தாங்கள் செய்த பிழைக்குப் பரிகாரமாக 31-ஆம் தேதி மீண்டும் போருக்குப் புறப்பட்டார்கள். தேசீய வீரர்களின் பீரங்கிகளும் ஆங்கிலேயர்களின் பீரங்கிகளும் மோதிக்கொண்டன. தேச பக்தர்களின் பீரங்கிகள் சிறிதும் குறி தவருது வேலையைச் செய் தன. எவரும் பிரமிக்கத் தக்க தைரியத்துடன் அவர்கள் போர் புரிந்தனர். அதனல் ஆங்கிலத் துருப்புகளுக்கு மிகுந்த சேதம் ஏற்பட்டது. தேச பக்தர்களின் பீரங்கிகளுக்குத் தப்பியவர்கள் கோடைக் காலச் சூரியனின் உக்கிரமான தாக்குதலால் அவஸ் தைப் பட்டார்கள். வெள்ளையர்கள் முதல் நாள் செய்த தந்தி ரங்கள் அன்று பலிக்கவில்லை.

எனவே, அவர்கள் மாலையில் ஏகோபித்த முறையில் தாக்கு வதற்கான முஸ்தீபுகளைச் செய்யலாயினர். தேச பக்தர்களோ வெனில், வெள்ளைத் துருப்புகள்மீது பீரங்கி குண்டுகளைச் சர மாரியாகப் பொழிந்துவிட்டு, சிதறிய விரோதிகள் தங்களைச் சீர்ப்படுத்திக்கொண்டு வருவதற்குள், ஒழுங்காகப் போர்க் களத்திலிருந்து சென்றுவிட்டார்கள். அந்த ஒரு நாள் போரில் இந்தியச் சிப்பாய்களின் இணையற்ற வீரத்தைக் கண்டு வெள்ளையர்கள் திகிலடைந்து விட்டார்கள்.

ஜூன் மாதம் 1-ஆம் தேதி ஏராளமான இந்தியத் துருப்பு கள் ஆங்கிலப் படைகளின் பின்னணிப் பக்கமாக வந்துகொண் டிருந்தன. அவற்றைக் கண்ட ஆங்கிலேயர்கள் நடுநடுங்கி, தங்களுடைய நிலைமை இருதலைக் கொள்ளி எறும்புபோல் ஆகி

விட்டதென்று தவிக்க ஆரம்பித்தார்கள். எனினும் அவை தேச பக்தர்கள் அடங்கிய துருப்புகள் அல்ல என்பதும், மேஜர் ரீடின் தலைமையில் தங்களுக்கு உதவி புரிய வரும் கூர்க்கப் படைகள் என்பதும் தெரிந்த பின்தான் அவர்களுக்கு உயிர் வந்தது!

இவ்வாறாக, அம்பாலாவிலிருந்தும் மீரத்திலிருந்தும் வந்த ஆங்கிலத் துருப்புகளுக்குத் தேசத் துரோகிகளின் உதவி கிடைத்தது. ஜூன் மாதம் 7-ஆம் தேதி அவ்விரு ஆங்கிலச் சேனைகளும் ஒன்று சேர்ந்தன. நாபா ராஜாவின் உதவியால் ஆங்கிலேயர்களுக்குக் கிடைத்த முற்றுகைக்கான சகல தளவாடங்களும் அதே சமயம் பத்திரமாக வந்து சேர்ந்தன. அந்தத் தளவாடங்கள் அம்பாலாவுக்கு வந்ததும் அவைகளைக் கைப்பற்றும்படி இந்தியச் சிப்பாய்களின் 5-ஆவது படை எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக்கொண்டும், அதற்கு இணங்கக் கூர்க்கப் படைகள் மறுத்துவிட்டன. எனவே, அவை டில்லி வந்து சேர்ந்ததுடன், ஆங்கிலேயர்களின் படைகள் யாதொரு சேதமுமின்றி டில்லிக்கு அருகிலுள்ள அலிப்பூரை அடைந்தன.

ஆங்கிலத் துருப்புகள் அலிப்பூருக்கு வந்திருக்கின்றன என்ற செய்தியைக் கேள்வியுற்ற தேசபக்தர்கள் மீண்டும் டில்லியிலிருந்து புறப்பட்டு, பத்லீ-கீ-ஸராய் என்ற இடத்தில் ஆங்கிலப் படைகளைச் சந்தித்தன. அப்போது ஆங்கிலப் படைகள் முழு பலத்துடன் இருந்தன. தேவையான பீரங்கிப் படைகள், ஏராளமான போர்ச் சாதனங்கள், சிறந்த தளபதிகள், ஏராளமான சிப்பாய்கள், கேந்திர ஸ்தானம் முதலிய எல்லாவித வசதிகளும் வெள்ளையர்களுக்கு வாய்த்திருந்தன.

ஆனால் தேசபக்தர்களுக்கோ, அவர்களுடைய லட்சியத்தின் உயர்வைத் தவிர வேறு எவ்வித ஆதரவும் இல்லை. அவர்களின் தலைவரோ, தமது வாழ்க்கையில் ஒரு போர்க்களத்தைக்கூடப் பார்த்திராத மன்னர். பயிற்சி பெற்ற சிப்பாய்களைக் காட்டிலும் தேச பக்தியினால் தூண்டப்பட்ட சாதாரண மக்களே ஏராளமாக அவர்கள் பக்கத்தில் இருந்தனர். தவிர, தங்கள் தேச சகோதரர்களிலேயே பலர் விரோதிகளுக்கு உதவி புரிய முன் வந்தது, தேச பக்தர்களுக்கு மிகுந்த மனச் சோர்வை உண்டுபண்ணியது. தங்களுடைய பலத்தையும் தேசபக்தர்களின் பலவீனத்தையும் அறிந்த ஆங்கிலேயர்கள், டில்லியில் நடக்கப்போகும் யுத்தம் தங்களுக்கு ஒரு வேடிக்கைக் காட்சியாக இருக்குமென்று எண்ணி இறுமாந்திருந்தனர்.

தேசபக்தர்களோ பல இடையூறுகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அப்படியிருந்தும் சுயராஜ்யம் என்ற மகோந்நத லட்சியம் அவர்களுக்குப் புதிய உத்வேகத்தையும் துணிச்சலையும் அளித்தது. அந்த யுத்தம் ஒரு வேடிக்கைக் காட்சியாக இருக்கப் போகிறதென்று நினைத்த வெள்ளையர்கள், தேசபக்தர்களின் அஞ்சா நெஞ்சத்தையும் ஆவேசத்தையும் கண்டு பிரமித்துப் போனார்கள். தங்களிடம் எவ்வளவு ஆயுத பலம் இருந்தாலும் தேசபக்தர்களை எளிதில் ஜயித்துவிட முடியாது என்-

பதையும், மிகவும் பயங்கரமான யுத்தம் செய்தே முடிவு காண வேண்டியிருக்கும் என்பதையும் உணர்ந்துகொண்டார்கள்.

டில்லிப் பீரங்கிகள் மிகுந்த சக்தி வாய்ந்தனவாக இருந்தன. எனவே, ஆங்கிலேயர்களின் பீரங்கிகளால் அவற்றை எதிர்த்து நிற்க முடியவில்லை. நேரம் செல்லச் செல்ல ஆங்கிலப் பீரங்கிப் படைகளும், அதிகாரிகளும் ஈசல்களைப்போல் வீழ்ச்சியடைந்தனர். தேசபக்தர்களுடைய பீரங்கிப் படைகளின் எதிர்ப்பு நிமிஷத்துக்கு நிமிஷம் அதிக உக்கிரமாகி வந்தது. அதைக் கண்ட பகைவர்கள் கலங்கி, சுவர்போல் முன் சென்று டில்லி பீரங்கிப் படைகளைத் தாக்கும்படி தங்களுடைய காலாட் படைகளுக்கு உத்தரவிட்டார்கள். வெள்ளைக் காலாட் படைகளும் அவ்விதமே சென்று தாக்கின.

புனிதக் கொள்கைகளான சுயராஜ்யத்துக்காகவும் சுதர்மத்துக்காகவும் போராடிய தேசபக்தர்களான தீரர்கள், பகைவர்களின் துப்பாக்கி ஈட்டிகளால் கிழிக்கப்பட்டுக் கீழே சாயும் வரையில் இருந்த இடத்தை விட்டு ஓர் அங்குலங்கூடப் பின் வாங்கவில்லை. ஒவ்வொரு வீரரும் இறக்கும் வரையில் தமது கடமையை வழுவின்றி நிறைவேற்றினர். ஆனால் மகா தைரியசாலியான அந்த வீரர்களை நடத்திச் செல்வதற்கோ, அவர்களுக்கு உற்சாகம் அளிப்பதற்கோ உற்ற தலைவர் துரதிருஷ்ட வசமாக அங்கே யாரும் இல்லை. தேசீய வீரர்கள் ஆங்கிலேயரின் துப்பாக்கி ஈட்டிகளால் கிழிக்கப்பட்டுத் தங்களுடைய தேசத்துக்காகவும் மதத்துக்காகவும் அணுவளவும் பின்வாங்காது உயிர் துறந்து வருகையில், அவர்களுடைய பிரதம தளபதி, முதல் பீரங்கி வேட்டுக் கேட்டவுடனே டில்லியை நோக்கி ஓடி விட்டார்.

அதே சமயம் ஆங்கில பீரங்கிப் படைகள் தேசீயப் படைகளின் இடது புறத்தைத் தாக்கின. ஹோப் கிரான்ட், தன் குதிரை, பீரங்கிப் படைகளுடன் பின்புறமாகத் தாக்கினான். ஒரே சமயத்தில் தங்கள் தேச சகோதரர்களாலும் அந்நியர்களாலும் தாக்கப்பட்ட தேசீயப் படைகள் பகல் முழுதும் உக்கிரமாகப் போராடினவெனினும், இறுதியில் சீர்குலைந்து டில்லிக்குப் பின்வாங்கின. அன்றைப் போரில் வெற்றி பெற்ற ஜெனரல் பர்னர்ட், மேற்கொண்டு முன்னேறிச் செல்லுமாறு தன் துருப்புகளுக்கு உத்தரவிட்டான். எனவே, வெள்ளைத் துருப்புகள் அன்று மாலை டில்லியின் எல்லைக்கு வந்து சேர்ந்தன.

அந்தப் போரில் தேச பக்தர்கள் டில்லியைச் சுற்றியுள்ள பிரதேசங்களை இழந்தனர். டில்லிக் கோட்டையை நெருங்கித் தாக்குவதற்கு உற்ற வசதிகள் விரோதிகளுக்குக் கிடைத்தன. அன்றைய யுத்தத்தில் ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றதற்குத் துரோகிகளான இந்தியப் படைகளின் உதவியே காரணமாகும். அதனால்தான் அந்தப் படையினரின் வீரத்தை ஆங்கில சரித்திராசிரியர்கள் பிரமாதமாகப் புகழ்ந்துள்ளனர்!

பத்லீ-கீ-ஸராய் யுத்தத்தில் இந்தியத் துருப்புகளின் உதவியால் வெள்ளையர்கள் வெற்றி பெற்றனர். எனினும் அந்த யுத்தம் ஆங்கிலேயர்கள் குடித்து வந்த மனப்பாலில் மண் விழும்படி செய்துவிட்டது. அன்றிரவைத் தாங்கள் டில்லியில் கழிக்கலாமென்றும், டில்லியிலுள்ள தேச பக்தர்களின் ரத்தத்தைக் குடித்துத் தங்களுடைய ராக்ஷச வெறியைத் தணித்துக் கொள்ளலாமென்றும் நினைத்து வந்த அவர்களுக்கு, டில்லியைக் கைப்பற்றுவது அவ்வளவு எளிதான காரியமல்ல என்பதை அன்றைய யுத்தம் சந்தேகமற உணர்த்தியது.

தங்களுக்கு நீதி கிடைக்க வேண்டும்; தங்களுடைய சுதந்தரத்தைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காக 'ஒன்று வெற்றி அல்லது மரணம்' என்ற உறுதியுடன் போராடும் தேச பக்தர்களைக் கண்டு ஆங்கிலேயர்கள் கலங்கினர். அந்த யுத்தத்தில் வெள்ளையர்கள், நூற்றுக்கணக்கான அதிகாரிகளையும் ஏராளமான சிப்பாய்களையும் இழந்தனர். முக்கிய ராணுவ அதிகாரியான கர்னல் செஸ்டர், போரில் மாண்டது ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த துக்கத்தை உண்டுபண்ணியது.

ஆங்கிலப் படை ஜூன் மாதம் 8-ஆம் தேதி மாலை, டில்லிச் சுவர்களுக்கு வெளியில் தன் முகாமை அமைத்துக்கொண்டது. ஆங்கிலேயர்கள் அம்பாலாவிலிருந்தும் மீரத்திலிருந்தும் டில்லிக்குத் தங்களுடைய படைகளைப் பத்திரமாகக் கொண்டு வருவது முற்றும் பாஞ்சால நிலைமையையே பொறுத்திருந்தது.

மீரத் எழுச்சி காரணமாகப் பாஞ்சாலத்தில் ஏற்பட்ட பலாபலன்கள் என்ன? அங்கே தேச பக்தர்கள் என்ன செய்தார்கள்? அவர்களுக்குத் துரோகமாக வெள்ளையர்கள் செய்த சூழ்ச்சிகள் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றன? இவற்றையெல்லாம் இங்கே பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும்.

சீக்கியர்கள் சாம்ராஜ்யம் முறிந்து பாஞ்சாலமும் வீழ்ச்சியுற்றது. அதை ஆங்கிலேயர் கைப்பற்றியதும், அங்கே டல்ஹௌஸி ஒரு கொடிய ஆட்சி முறையைக் கைக்கொள்ள முற்பட்டான். சீக்கியர்களின் உத்தம குணங்களான சுதந்தர ஆர்வத்தையும் வீரத்தையும் நசுக்கி ஒழித்துவிட வேண்டும் என்பதே அவனுடைய நோக்கமாகும்.

பாஞ்சால மாகாணம், சர் ஹென்ரி லாரென்ஸ், சர் ஜேம்ஸ் லாரென்ஸ் இவ்விரு அதிகாரிகளின் நிர்வாகத்துக்கு வந்ததும், அவர்கள் அந்த மாகாண மக்களை முற்றும் நிராயுதபாணிகள் ஆக்கிவிட்டார்கள்; பெரும்பாலான சிப்பாய்களையும் ஆங்கிலப் படையில் சேர்த்துக்கொண்டார்கள்; வட இந்தியாவில் இருந்த வெள்ளைப் படைகளின் பெரும்பகுதியையும் பாஞ்சாலத்துக்குக் கொண்டு வந்தார்கள்; மற்றும் ஜனங்கள் தங்களுடைய வயிற்றுப் பிழைப்புக்கு முக்கியமாக விவசாயத்தைத் தவிர வேறு எத்துறையிலும் கவனம் செலுத்த முடியாமல் இருப்பதற்குற்ற சூழ்ச்சிகளையும் கைக்கொண்டார்கள்.

வெறும் விவசாயிகளாக மாத்திரம் இருக்கும் மக்கள் போர்க் குணங்களை இழந்து, சமாதானப் பிரியர்கள் ஆகிவிடுவது வழக்கம். பின்னால் அவர்கள், தங்களுடைய விவசாயத்தில் தலையிடும் எவ்விதப் புரட்சித் திட்டத்துக்கும் லகுவில் இசைய மாட்டார்கள். ஆழ்ந்த துரோகத்தை அடிப்படையாகக் கொண்ட ஆங்கிலேயரின் அந்தத் தந்திரம் பாஞ்சாலத்தில் வெற்றி யடைந்தது. பாஞ்சால சாம்ராஜ்யமும், மகான் குரு கோவிந்த சிங்கால் போதிக்கப்பட்ட மத, சுதந்தர உணர்ச்சியும் அழிந்ததிலிருந்து பத்து வருஷ காலத்துக்குள், அந்த மாகாண மக்களில் பெரும்பாலோரும் வாள்களை வீசி எறிந்துவிட்டுக் கலப்பைகளைக் கையில் எடுத்துக்கொண்டார்கள். வாள்களைக் கையில் வைத்துக்கொண் டிருந்த சிலரும், ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொண்டு, தங்கள் தேச சகோதரர்களையே அடக்கி ஒடுக்குவதில் முனைந்தனர்.

எனவே, அந்த மாகாணத்தில் தங்களுக்கு எவ்வித இடையூறும் ஏற்படாதென்று பிரதம அதிகாரியான ஜான் லாரென்ஸ் உறுதிகொண்டான். மற்ற ஆங்கில அதிகாரிகளைப்போல் அவனும், தங்களுக்குப் பெரும் ஆபத்து நேரப்போகிறது என்பதை அறிந்து கொள்ளவில்லை. எனவே அவன் குளிர்ச்சியான மர்ரி மலைக்குச் சென்று கோடைக்காலத்தை உல்லாசமாகக் கழிக்க உத்தேசித் திருந்தான். அப்போதுதான், மீரத்திலும் டில்லியிலும் மூண்ட சுதந்தரப் போரைப்பற்றிய செய்தி பாஞ்சாலமெங்கும் மின் சாரம்போல் பரவியது. தந்திரசாலியான அவன் உடனே அந்தச் செய்தியின் ஆழ்ந்த கருத்தை நன்கு உணர்ந்துகொண்டான். ஆங்கில சாம்ராஜ்யத்தை வீழ்த்த முயல்வோரை எதிர்த்துப் போராடுவதற்காக லாகூரிலேயே தங்கியிருக்கத் தீர்மானித்து, மலைவாச யாத்திரையை ரத்துச் செய்தான்.

பாஞ்சாலப் படைகளின் பெரும்பகுதியும் அவ்வமயம் மியான் மீர் என்ற இடத்தில் இருந்தது. அது லாகூருக்கு வெகு சமீபமாதலின், லாகூர்க் கோட்டையில் இந்தியச் சிப்பாய்கள் மாத்திரமே வைக்கப்பட்டிருந்தனர். மியான் மீர் முகாமிலும் ஆங்கிலச் சிப்பாய்களின் தொகையைக் காட்டிலும் இந்தியச் சிப் பாய்களின் தொகை நான்கு மடங்கு அதிகம் இருந்தது. அப் படியிருந்தும் மீரத் எழுச்சியைப்பற்றிய செய்தி கிடைக்கும் வரையிலும் அவர்கள்மீது ஆங்கில அதிகாரிகளுக்கு எவ்விதச் சந்தேகமும் ஏற்படவில்லை. மீரத்திலிருந்து செய்தி கிடைத் ததும், மியான் மீர் சிப்பாய்கள் மீரத் சிப்பாய்களுடன் ரகசிய மாகச் செய்திப் போக்கு வரத்து நடத்தி வருகின்றார்களா, இல்லையா என்பதை ஆங்கிலேயர்களால் நிர்ணயமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

அவ்வமயம் ராபர்ட் மாண்ட்கமெரி லாகூர்ப் படைகளின் தலைமை அதிகாரியாக இருந்தான். இந்த ராபர்ட் மாண்ட்க மெரியும், ஜான் லாரென்ஸும் டல்ஹௌசியின் பள்ளியில் பயிற்சி பெற்றவர்கள் - அதாவது சூழ்ச்சியிலும் துரோகத்திலும் கைதேர்ந்தவர்கள். எதிர்பாராத பெரும் கஷ்டங்கள் நேர்ந்த

விடத்தும் சமயோசிதமாகவும் நிதானமாகவும் பொறுமை யுடனும் தைரியத்துடன் நடந்துகொள்ளும் ஆற்றல் படைத்தவர் கள். பாஞ்சாலத்திலுள்ள சிப்பாய்களிடையே தேசீய சுதந்தர உணர்ச்சி எவ்வளவு தூரம் ஊடுருவி இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவர்களுக்கு அவசிய மாகியது.

எனவே சிப்பாய்களின் மனப்போக்கை அறிந்து வருவதற் காக ஓர் இந்திய உளவாளி நியமிக்கப்பட்டான். பொன்னுசை பிடித்த அந்தப் பாதகனும் தன் துரோக வேலையை மிகவும் நன் ருகச் செய்து முடித்தான்! 'துரையவர்களே, இங்குள்ள சிப்பாய் கள் புரட்சியில் வேரூன்றி யிருக்கிருர்கள்; அவர்களுடைய கழுத்துவரை புரட்சி உணர்ச்சி ததும்பி நிற்கின்றது' என்று மாண்ட்கமெரியிடம் வர்ணித்தான் அந்தத் துரோகி.

அவ்வளவுதான்; மாண்ட்கமெரி, லாரென்ஸ் இவ்விருவ ருடைய கண்களையும் மறைத்திருந்த திரை விலகியது. சுதந் தரப் போர்த் திட்டம் வட இந்தியாவில் மாத்திரம் உரு வாக்கப் படவில்லை; அந்த அனல் பாஞ்சாலத்திலும் உள்ளூறக் குமுறிக்கொண் டிருக்கிறது; உற்ற சமயம் வந்ததும் அது குபீ ரென்று ஜ்வாலையைக் கக்கப்போகின்றது.—இந்த உண்மைகளை அவர்கள் ஐயமின்றி அறிந்துகொண்டனர். மீரத்தில் மூண்ட அகாலப் புரட்சி தங்களுக்குச் சாதகமானதைக் குறித்து அவர் கள் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தார்கள். இல்லாவிடில் அவர்கள் மேலே குறிப்பிட்ட பயங்கர உண்மையை அறிந்துகொண் டிருக்க முடியாது அல்லவா?

அதன்பின் அவர்கள் ஒரு விநாடியும் தாமதிக்கவில்லை. உடனே சிப்பாய்களை யெல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கிவிடும் படி மாண்ட்கமெரி கட்டளை பிறப்பித்தான். மே மாதம் 13-ஆம் தேதி காலை மியான் மீரில் ராணுவ அணிவகுப்பு நடத்தப் பட்டது. அவ் விஷயமாகச் சிப்பாய்களுக்கு அணுவளவும் சந் தேகம் உண்டாகாமல் இருப்பதற்காக ஆங்கில அதிகாரிகள் ஒரு நடனக் காட்சிக்கும் ஏற்பாடு செய்தனர். ஆங்கிலேயர்களுக் குத் திடீரென்று உண்டான 'குஷி'யின் மர்மத்தை இந்தியச் சிப் பாய்கள் அறிந்துகொள்ளுமுன், ஆங்கில பீரங்கிப் படைகளும், குதிரைப் படைகளும் அணிவகுப்பின்போது அவர்களைச் சூழ்ந்து கொண்டன. பீரங்கிப் படைகள் தங்களைச் சுடுவதற்கு ஆயத்த மாக இருப்பதைக் கண்டு இந்தியச் சிப்பாய்கள் ஒன்றும் தோன்ரு மல் திகைத்து நின்ருர்கள். அப்போது அவர்களெல்லோரும் ஆயுதங்களைக் கீழே வைத்துவிடும்படி உத்தரவிடப்பட்டனர். வெள்ளையர்களின் வஞ்சகத்தையும் தங்களுக்கு ஏற்பட்ட அவ மதிப்பையும் கண்டு சிப்பாய்கள் ஆத்திரமடைந்தார்கள். எனி னும் தங்களைச் சூழ்ந்து பீரங்கிப் படைகள் நின்றுகொண் டிருக் கையில் தாங்கள் ஏதும் செய்ய முடியாது என்பதை உணர்ந் தார்கள். பிறகு ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் வாய்பேசாமல் ஆயுதங்களைக் கீழே எறிந்துவிட்டுத் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்ருர்கள்.

ஆப்கானிஸ்தானத்தில் ஆண்மையுடன் போராடி ஆயிரக் கணக்கான ஆங்கிலேயர்களின் உயிர்களைக் காப்பாற்றிய அந்தச் சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்கும் சடங்கு மியான் மீரில் நடந்துகொண் டிருக்கையில், ஆங்கிலத் துருப்புகள் அடங்கிய ஒரு பட்டாளம் லாகூர்க் கோட்டைக்கு அனுப்பப்பட்டது. கோட்டையில் இருந்த ஆங்கில பீரங்கிப் படைகளுடைய உதவி யுடன் அந்தப் பட்டாளம், இந்தியச் சிப்பாய்களை யெல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கிக் கோட்டைக்கு வெளியே துரத்தி விட்டது.

ஆங்கில அதிகாரிகள் இத்தகைய முறைகளைக் கைக்கொள்ளு வதில் சிறிது தாமதமோ தயக்கமோ ஏற்பட்டிருந்தாலும், இரண்டு வாரங்களுக்குள் பாஞ்சாலம் முழுதும் சுதந்தரத் தீ பற்றிக்கொண் டிருக்கும். ஏனெனில், மியான் மீரிலுள்ள சிப்பாய் கள் லாகூர்க் கோட்டையை எப்போது தாக்கப்போகிறார்கள் என்று, பிஷாவர், அமிருதசரஸ், பில்ஹூர், ஜலந்தர் முதலிய இடங்களிலிருந்த பல்வேறு தேசீயப்படைப் பிரிவினரும் ஆர்வத் துடன் எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். ஆனால் மியான் மீரிலுள்ள சிப்பாய்களை ஆங்கிலேயர்கள் நிராயுதபாணிகள் ஆக்கி விட்டதுடன், லாகூர்க் கோட்டையையும் பிடித்துக்கொண்டு விட்டார்கள் என்ற செய்தி, பாஞ்சாலத்தில் ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த மதிப்பு ஏற்படும்படி செய்துவிட்டது.

'லார்டு லாரென்ஸின் வாழ்க்கை வரலாறு' என்ற புத் தகத்தில் பாஞ்சால சம்பவத்தை ஒட்டி ஆங்கில சரித்திராசிரியர் குறிப்பிட்டிருப்பதாவது: 'பாஞ்சாலத்தை அப்போது நாம் இழந்திருந்தால், இந்தியாவில் நமது பூண்டே அழிந்திருக்கும். அங்கே உதவிக்கு ஆங்கிலத் துருப்புகள் வருமுன், அங்கிருந்த எல்லா ஆங்கிலேயர்களின் எலும்புகளும் வெயிலில் காய்ந்து கொண்டிருக்கும். அத்தகைய கோர ஆபத்திலிருந்து இங்கி லாந்து ஒருபோதும் மீண்டிருக்க முடியாது என்பதுடன், கீழ்த் திசையில் அது தன் ஆதிக்கத்தை மறுபடி நிலைநிறுத்த முடியாம லும் போயிருக்கும்.'

அமிருதசரஸிற்கு அருகிலுள்ள கோவிந்த கர் என்ற பிர தேசம் லாகூர்க் கோட்டையையும்விட அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. அது சீக்கியர்களின் புண்ணிய ஸ்தலமாகும். அங்கே சீக்கியர்களிடையே எழுச்சியை உண்டுபண்ணுவது மிக வும் எளிது. எனவே, தேசபக்தர்களின் கண்ணோட்டம் எப் போதும் அதன்மீது இருந்து வந்தது. மியான் மீரில் நிராயுத பாணிகள் ஆக்கப்பட்ட சிப்பாய்கள், அந்த ஸ்தலத்தைக் கைப் பற்றுவதற்காக அமிருதசரஸை நோக்கிச் சென்றுகொண் டிருக் கிறார்கள் என்ற ஒரு வதந்தி உலவ ஆரம்பித்ததால், அந்த ஆபத்தை ஆங்கிலேயர்கள் உணர்ந்து, அமிருதசரஸைப் 'பாது காக்கும்படி' அங்குள்ள மக்களைக் கேட்டுக்கொண்டார்கள். ஆங்கிலேயர்களின் சூழ்ச்சி வலையில் அந்த ஜனங்கள் வீழ்ந்ததன் விளைவாக லாகூர்க் கோட்டையைப்போல் அமிருதசரஸ் கோட்டையையும் வெள்ளையர்கள் வெகு எளிதாகக் கைப்பற்

றிக் கொண்டார்கள். மே மாதம் 15-ஆம் தேதிக்குள் லாகூர், அமிருதசரஸ் இவ்விரு முக்கிய நகரங்களும், தாற்காலிகமாக வாவது புரட்சியில் சேராமல் 'பாதுகாக்க'ப் பட்டன.

இவ்வாறாகப் பாஞ்சாலத்தில் தகுந்த பாதுகாப்பு முறை களைக் கைக்கொள்ளுவதில் வெற்றி பெற்ற ஜேம்ஸ் லாரென்ஸ், மற்ற மாகாணங்களிலும் தன் கவனத்தைச் செலுத்த ஆரம்பித் தான். டில்லியிலிருந்து அவனுக்குச் செய்தி கிடைத்ததும், அங்கே ஏற்பட்டுள்ள கொந்தளிப்பு வெறும் கலகம் அல்லவென் றும், அது ஒரு தேசீயப் புரட்சியே என்றும் அவன் கூறினான். கூடிய சீக்கிரம் டில்லியைக் கைப்பற்றிவிட்டால், பின்னால் வேறு ஓரிடத்திலும் கொந்தளிப்பு ஏற்படாதென்றும் அவன் மனப் பால் குடித்து வந்தான். அந்த நம்பிக்கையுடன் அவன் ஜூன் மாதத்துக்குள் டில்லியைக் கைப்பற்றி விடும்படி ஜெனரல் ஆன் ஸனுக்குக் கடிதத்துக்கு மேல் கடிதம் எழுதி வந்தான்; அதே சமயத்தில் அம்பாலாவிலிருந்த துருப்புகளுக்குத் துணையாகப் பாஞ்சாலத்திலிருந்து படைகளும் அனுப்ப முற்பட்டான்.

முதல் தவணையாக, டேலியின் தலைமையில் பாஞ்சாலத்தி லிருந்து அம்பாலாவுக்கு ஒரு பிரிவுப்படை சென்றது. டேலி மகா தைரியசாலி என்ற நம்பிக்கை ஜான் லாரென்ஸுக்கு இருந்ததாலேயே, டில்லி செல்லும் துருப்புகளுக்குத் தலைமை வகிக்க அவனைத் தேர்ந்தெடுத்தான். டேலியும் தன் துருப்புக ளுடன் அதிவேகமாகச் சென்று, யுத்தம் ஆரம்பித்த மறுநாளே, பத்லீ - கீ - ஸராயில் இருந்த ஆங்கிலப் படைகளுடன் சேர்ந்து கொண்டான். பகைவர்கள் டில்லியை முற்றுகையிட்டபோது பீட் தலைமையில் ஓர் இந்தியப் பட்டாளமும், டேலி தலைமையில் ஓர் இந்தியப் பட்டாளமும் இருந்தன. துரோகிகள் அடங்கிய அந் தப் படைகளால் ஆங்கிலேயர்களுக்குத் தங்களுடைய வெற்றி யில் மிகுந்த நம்பிக்கை ஏற்பட்டது. டேலியின் படைகள் டில்லியை நோக்கிச் சென்றுகொண் டிருக்கையில், பாஞ்சால அரசியல் நிலைமையை ஜான் லாரென்ஸ் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தான்.

அந்தப் பிரதேசத்தில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சீக்கியர் களும் அடிக்கடி சச்சரவிட்டுக்கொண் டிருந்தார்கள். ஹிந்துக் களிடையேயும் முஸ்லிம்களிடையேயும் அப்போது ஏற்பட்டிருந்த தேசீய விழிப்பு, பஞ்சாபியர்களிடையே ஏற்படவில்லை. அவர் கள் தங்களுடைய சுதந்தரத்தை இழந்து பத்து ஆண்டுகள் கூடப் பூர்த்தியாகவில்லை. அப்படியிருந்தும் 1849-இல் ஆங்கி லேயர்களின் தலைகளைச் சீவுவதையே தங்கள் கடமையாகக் கொண்டிருந்த சீக்கியர்கள், 1857-இல் ஆங்கிலேயர்களை ஆலிங் கனம் செய்துகொள்ள முற்பட்டார்கள்!

அத்தகைய விசித்திர நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம் என்ன? பாஞ்சால மக்கள் சுதந்தரத்தை இழந்த கையோடு 1857-ஆம் வருஷத்திய போர் ஆரம்பமாகியதே அந்த நிலைமைக் குக் காரணமாகும். மகத்தான தைரியமும் சுதந்தர ஆர்வமும் உள்ள கால்ஸாவின் சீடர்கள், தங்களை முஸ்லிம்கள் அடிமைக

ளாக்க முயன்றதை எதிர்த்து நூறு ஆண்டுகள் வரையில் இடைவிடாது போர் புரிந்து பாஞ்சாலம் சுதந்தரம் பெறும்படி செய்தார்கள். அத்தகைய வீரர்கள் அப்போது ஆங்கில ஆட்சியின் தன்மையை உணர்ந்துகொண் டிருப்பார்களாயின், அவர்களின் கீழ் அடிமைகளாக வாழ்வதை ஒருபோதும் சகித்திருக்க மாட்டார்கள். ஆனால் ஆங்கிலேயரின் ஆட்சி உண்மையில் அடிமைத் தனந்தான் என்பதைச் சாதுக்களான பாஞ்சாலச் சிப்பாய்கள் அறிந்துகொள்ளுமுன், அந்த உண்மையை அறிந்துகொள்ளுவதற்குற்ற அவகாசம் அவர்களுக்குக் கிடைக்குமுன், 1857-ஆம் வருஷத்திய சுதந்தரப் போர் மூண்டுவிட்டது.

இந்திய அரசியலில் ஒரு மகத்தான புரட்சி உருவாகி வந்த போதுதான், இந்தியாவில் ஆங்கில ஆதிக்கம் ஏற்பட்டது. பல நூற்றாண்டுகளாகத் தனித்தனியாகச் சென்றுகொண் டிருந்த பல்வேறு சிறிய பிரிவுகளும், தங்களைப் பிரித்துள்ள அணைகளை உடைத்தெறிந்து ஒரு பிரம்மாண்ட நதியாக ஐக்கியமடைய முயன்றுகொண் டிருந்தன. இந்திய தேசீய ஐக்கியம் என்பதே அந்த மகா நதியாகும்.

இன்று உலகில் ஐக்கியத்துடனும் ஒற்றுமையுடனும் உறுதியுடனும் நிலைபெற்றுள்ள பெரிய நாடுகள் எல்லாம் அவ்விதம் ஐக்கியம் அடையுமுன், - அவ்வித ஐக்கிய நிலையை அடைவதற்காகவுங்கூட - சீர்குலைவு, உள் நாட்டுப் பகை, ஒழுங்கீனம், மதத் துவேஷம், வஞ்சபுத்தி, மிருகத்தனம் போன்ற தவிர்க்க முடியாத மத்திய கால இடுக்கண்களைக் கடந்தே இன்றைய உயர்ந்த நிலையை அடைந்திருக்கின்றன.

சரித்திரபூர்வமான அத்தகைய மறுமலர்ச்சியே இந்தியாவிலும் தோன்றலாயிற்று. பாரத பூமி, அதில் வசிக்கும் பல்வேறு பிரிவினரையும் ஐக்கியப்படுத்தி, ஒரு மகத்தான தேசத்தை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தது. ஆங்கில ஆட்சியாகிற அடிமைத்தன இரும்பு உருளை, வட இந்தியர்களிடையே நிலவிய வேற்றுமைகளை யெல்லாம் நசுக்கி, அவர்களை ஒன்றுபடுத்திவிட்டது. அவர்களும் அந்த இரும்பு உருளையை உடைத்தெறியும் சக்தி பெற்றுவிட்டார்கள்.

எனினும், ஆங்கில ஆட்சியின் தன்மையையும், அடிமைத்தனத்தின் அலங்கோலத்தையும் பாஞ்சால மக்கள் உணர்ந்து கொள்ளப் பத்து ஆண்டுகள் போதவில்லை. லாரென்ஸ் எழுதிய கடிதம் ஒன்றில் அந்த உண்மையை ஒப்புக்கொண் டிருக்கிறான்: "நமக்கு விரோதமாக எழுந்த புரட்சியில் பாஞ்சால மக்களும் சேர்ந்துகொண் டிருப்பார்களாயின், யாராலும் நம்மைக் காப்பாற்றியிருக்க முடியாது. தங்களுடைய தேசீய சுதந்தரம் பறி போனதற்குப் பிரதியாக ஆங்கிலேயர்கள்மீது வஞ்சம் தீர்க்க வேண்டுமென்ற ஆத்திரத்தைப் பாஞ்சால ஜனங்கள் அடக்கிக் கொண்டிருக்க மாட்டார்கள்."

இவ்வாறாகச் சக்தி பொருந்திய சுதந்தரப் போர்ச் சங்கிலியின் வளையங்களில் ஒன்று பலமற்றிருந்தது. அந்த உண்மையைப்



பீல்டு மார்ஷல் எர்ல் ராபர்ட்ஸ்



லார்டு லாரென்ஸ்



நானா சாஹிப்



தாதியா டோபே

பாஞ்சாலத்திலிருந்த ஆங்கில அதிகாரிகள் அறிந்து, அதைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக்கொண்டார்கள். உடனே அவர்கள், சீக்கியர்களுக்கும் மற்றவர்களுக்கும் முஸ்லிம்கள்மீது துவேஷம் அதிகமாவதற்கான சூழ்ச்சியைக் கைக்கொண்டார்கள். சீக்கியர்களிடையே நிலவி வந்த துருப்பிடித்துப் போன ஒரு புராதன தீர்க்கதரிசனத்துக்கு ஆங்கிலேயர்கள் புத்துயிர் அளித்தனர்! 'ஒரு காலத்தில் சீக்கியர்களின் குருவை முஸ்லிம் சக்கரவர்த்தி எந்த இடத்தில் கொன்ருரோ, அந்த இடந்தான் டில்லியாகும். எனவே, டில்லிக்குக் கால்ஸா ஒரு நாள் படையெடுத்துச் சென்று, அந்த நகரத்தைத் தரைமட்டம் ஆக்கிவிடப் போகிருர்' என்பதுதான் அந்தத் 'தீர்க்கதரிசனம்' ஆகும்.

அதை நிறைவேற்ற வேண்டிய காலம் வந்துவிட்டதென்று ஆங்கிலேயர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். எனினும் அதன்படி கால்ஸா சாகிப் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ருல், வெள்ளையர்களுக்கு என்ன பலன் கிடைக்க முடியும்? பகதூர் ஷாவுக்குப் பதிலாக ஒரு ரஞ்சித் சிங் டில்லியை ஆட்சி புரிய நேரும். ஆனுல் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள் எல்லோரையும் வீழ்த்திவிட்டு, இந்தியாவின் சிம்மாசனத்தில் தாங்கள் வீற்றிருக்க வேண்டும் என்ற துராசை பிடித்த வெள்ளையர்கள் அந்தத் தீர்க்கதரிசனத்தைத் தங்களுக்குச் சாதகமாகத் திரித்துக்கொண்டனர்! அதாவது கால்ஸாவும் (சீக்கியர்கள்) கம்பெனியும் சேர்ந்து டில்லி மாநகரைத் தரை மட்டமாக்க வேண்டும் என்பதுதான் வெள்ளையர்களின் கூற்று! அந்தக் கூற்றைப் பாஞ்சால ஜனங்கள் நம்பியதுதான் பரிதாபமாகும்.

டில்லிமீது சீக்கியர்களுக்கு இன்னும் அதிக ஆத்திரம் உண்டாவதற்காக வெள்ளையர்கள் மற்ருெரு சூழ்ச்சியும் செய்தனர். டில்லி சுதந்தரம் பெற்றவுடன் சக்கரவர்த்தி பகதூர் ஷா விடுத்த முதல் பிரகடனம் என்னவெனில், அங்குள்ள எல்லாச் சீக்கியர்களையும் படுகொலை செய்துவிட வேண்டும் என்பதுதான் என்று வெள்ளையர்கள் ஒரு போலி அறிக்கை தயாரித்து அதை விளம்பரப்படுத்தினர். ஆனுல், அதே சமயம் டில்லிச் சக்கரவர்த்தி, 'இப்போது நாம் ஆரம்பித்துள்ள யுத்தம் அந்நியர்களை அழிப்பதற்கே ஆகும்; ஆகையால் எவரும் ஓர் இந்தியருடைய கேசத்துக்கும் ஆபத்து ஏற்படும்படி செய்யக்கூடாது' என்று தாமே நேரில் டில்லித் தெருக்களின் வழியாகச் சென்று ஜனங்களுக்கு வலியுறுத்தி வந்தார் என்று மெட்காப் என்ற ஆங்கில சரித்திராசிரியரே குறிப்பிட்டிருக்கிருர்.

சீக்கியர்களைத் தங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ளத் தேச பக்தர்கள் எவ்வளவோ முயன்றும் பலன் ஏற்படவில்லை. வெள்ளையர்களின் வார்த்தைகளை நம்பிச் சீக்கியர்கள் மோசம் போனுர்கள். பாஞ்சாலத்தில் சீக்கியர்களைத் தவிர மற்றச் சமூகத்தினரும் அடங்கிய படைப் பிரிவுகள் பல இருந்தன. அவர்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரா

டியே தீருவதென்று திடசங்கல்பம் செய்துகொண்டு, தலைவர்களின் கட்டளைக்காகக் காத்துக்கொண் டிருந்தனர். தாங்கள் சுதந்தரம் பெற்றுத் தீருவதென்று சிப்பாய்கள் மாத்திரம் பிரதிக்ஞை செய்துகொள்ளவில்லை; ராணுவத்தைச் சேராத சகல ஜனங்களுங்கூட எங்கும் புரட்சி விதையை விதைத்து வந்தார்கள்.

மியான் மீர் சிப்பாய்களை நிராயுதபாணிகளாக்கி விட்டதால், இனித் தாங்கள் கவலையற்றிருக்கலாம் என்று எண்ணி வந்த வெள்ளையர்கள் வெகு விரைவில் தங்களுடைய தப்பை உணர்ந்து கொண்டனர். லாகூர், அமிருதசரஸ் கோட்டைகள் அவர்களுடைய வசமாகி விட்டனவாயினும், பிரோஸ்புரியிலுள்ள அவர்களின் ஆயுதசாலை, பாதுகாப்பு எதுவும் இல்லாமல் இருந்தது. அங்கிருந்த சிப்பாய்களின் மனநிலையை அறிந்து கொள்ளுவதற்காக மே மாதம் 13-ஆம் தேதி ஆங்கிலேயர்கள் ஓர் அணிவகுப்பை நடத்தி அவர்களைக் கூர்ந்து கவனித்தனர். ஆயினும் சிப்பாய்கள், தங்களுடைய இருதயங்களைக் கிழித்துக்கொண் டிருக்கும் உணர்ச்சிப் பெருக்கை வெளியில் காட்டாமல் மிகமிகச் சாந்தமாக நடந்துகொண்டார்கள்! அவர்கள் மீது ஆங்கிலேயருக்குச் சிறிதும் சந்தேகம் உண்டாகவில்லை. ஏனவே, அவர்களை நிராயுதபாணிகள் ஆக்கவேண்டும் என்ற எண்ணமும் வெள்ளையர்களுக்கு ஏற்படவில்லை!

அந்தப் படைப் பிரிவுகளில் ஒன்று கடைத் தெரு வழியாக அணிவகுத்துச் சென்றபோது, அதைச் சேர்ந்த சிப்பாய்களும் கடைத்தெருவில் இருந்த ஜனங்களும் ஒருவருக்கொருவர் என்ன சமிக்ஞைகள் செய்துகொண்டனர் என்பதை ஆங்கிலேயர்கள் அறியார்! அவற்றின் பயனாகச் சிப்பாய்களின் சஞ்சலம் அறவே ஒழிந்து, அவர்களிடையே சுதந்தர உணர்ச்சி பன்மடங்கு பெருகியது.

திடீரென்று அவர்களிடையே எழுந்த சுதந்தர கோஷங்கள் வானைப் பிளந்தன. தேசாவேசத் தீ பற்றிக்கொண்டது! ஆயுதசாலையைக் காப்பாற்ற முடியாது என்பதை உணர்ந்த ஆங்கிலேயர்கள் அதற்குத் தீ வைத்துவிட்டார்கள். தேசபக்தர்களான சிப்பாய்களோ, டில்லியிலிருந்து தங்களை அழைக்கும் கொடியின் கீழ் நின்று அந்நியர்களை எதிர்த்துப் போராடுவதற்காகத் தாமதமின்றி டில்லிக்குப் பயணமாயினர்.

அதே சமயம் பிரோஸ்புரி மக்கள் எல்லோரும் ஆவேசம் கொண்டு எழுந்தார்கள். ஆங்கிலேயர்களின் பங்களாக்கள், கூடாரங்கள், ஹோட்டல்கள், கோவில்கள் எல்லாம் எரிந்து தரைமட்டமாயின. வெள்ளையர்களை வேட்டையாட ஜனங்கள் வீறுகொண்டு புறப்பட்டனர். எனினும் மீரத் கொந்தளிப்புக்குப் பின், தந்திச் செய்திகளின் மூலம் ஆங்கிலேயர்கள் யாவரும் எச்சரிக்கப்பட் டிருந்தனராதலால், அவர்கள் தங்களுடைய ராணுவக் கூடங்களுக்குச் சென்று பதுங்கிக்கொண்டார்கள். சிப்பாய்களை எதிர்த்துப் போராடுவதற்காகப் பின்னால் வந்த ஆங்கிலப் படைகள், தங்கள் கைக்குக் கிடைத்த

இந்தியர்களை யெல்லாம் சித்திரவதையும் படுகொலையும் செய்து விட்டுப் பெருமை யடித்துக்கொண்டு திரும்பிச் சென்றன.

இந்திய தேசீய வீரர்களைப்போல் ஆப்கன் மலைவாசிகளையும் கண்டு ஆங்கிலேயர்கள் திகிலடைந்து வந்தனர். 1857-ஆம் வருஷத்திய சுதந்தரப் போரை ஒட்டி ரகசியப் பிரசாரம் நடந்துகொண்டிருந்தபோது, லக்ஷ்மணபுரி ரகசியச் சங்கம், அந்தப் போரில் தங்களுக்கு உதவி அளிக்க முடியுமா என்று காபூல் அமீரைக் கேட்டுக்கொண்டிருந்தது. பார்ஸித் என்பவன் கைப்பற்றிய ஒரு கடிதத்திலிருந்து, அமீர் தோஸ்த் முகமதுடன் லக்ஷ்மணபுரி முஸ்லிம்கள் ரகசியமாகக் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார்கள் என்பது தெரிந்தது.

பிஷாவரில் இருந்த நிக்கல்சன், எட்வர்ட்ஸ், சேம்பர்ஸ், பாஞ்சாலத்தில் இருந்த ஜான் லாரென்ஸ் இவர்களின் துரோகத்தினாலும் சூழ்ச்சியினாலும் பிஷாவரில் ஆங்கிலேயருக்கு இருந்து வந்த ஆபத்து, தவிர்க்கப்பட்டது. அவர்கள் மிகுந்த தந்திரசாலிகளானதால், எல்லைப்புறத்தில் இருந்த மலைவாசிகளான முஸ்லிம்களைத் தங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ளச் சூழ்ச்சி செய்தனர். பல துரோகிகளையும் லஞ்சம் கொடுத்து மலைவாசிகளிடையே துஷ்ப்பிரசாரம் செய்ய அனுப்பினர். வெள்ளையர்களின் சூழ்ச்சியை அறிந்துகொள்ளாத மலைவாசிகளும் அவர்களின் மாய வலையில் சிக்கினார்கள். உடனே ஜான் லாரென்ஸ், பாஞ்சாலம் முழுவதும் குமுறிக்கொண்டிருந்த புரட்சி அனலை அணைப்பதற்காக ஒரு படைப் பிரிவை அனுப்பினான். அந்தப் பிரிவில் ஆங்கிலச் சிப்பாய்களும் வெள்ளையர்களின் பூரண நம்பிக்கைக்குப் பாத்திரர்களான துரோகிகளும் இருந்தார்கள்.

மியான் மீர் சிப்பாய்கள் யாவரும் நிராயுதபாணிகள் ஆக்கப்பட்டு விட்டனர் ,என்ற செய்தி பிஷாவரில் இருந்த இந்தியச் சிப்பாய்களிடையே மிகுந்த கிளர்ச்சியை உண்டாக்கியது. பிஷாவரில் இருந்த ஆங்கில அதிகாரிகள் மிகுந்த துணிச்சலுடன் முதல் அடி கொடுக்க ஆயத்தமாயினர். அங்கிருந்த சிப்பாய்களையெல்லாம் உடனே நிராயுதபாணிகள் ஆக்கிவிட வேண்டும் என்பதே அவர்கள் திட்டமாகும். எனினும் ஆங்கிலத் தளபதிகளும் ராணுவ அதிகாரிகளும் தங்கள் தங்கள் பிரிவைச் சேர்ந்த சிப்பாய்களுக்கு நேரப்போகும் அவமதிப்பைக் குறித்து வருந்தினர். சுதந்தரப் போர்த் திட்டம் மிக மிக ரகசியமாக உருவாகி வந்ததால், தங்களுடைய சிப்பாய்கள் அதில் கலந்துகொண்டிருக்கின்றனர் என்பதை ஆங்கில அதிகாரிகள் நம்பவே இல்லை.

காட்டனும் நிக்கல்ஸனும் மே மாதம் 21-ஆம் தேதி திடீரென்று வெள்ளைத் துருப்புகளுடன் சென்று இந்தியச் சிப்பாய்களைச் சூழ்ந்துகொண்டு, ஆயுதங்களையெல்லாம் கீழே போட்டுவிட்டுச் செல்லும்படி உத்தரவிட்டனர். எதிர்பாராத விதமாக ஏற்பட்ட அவ்விபரீதத்தைச் சமாளிப்பது முடியாத காரியம் என்பதை உணர்ந்த சிப்பாய்கள் எல்லோரும் ஆயுதங்களைக்

கீழே எறிந்தனர், அவர்களுக்கு ஏற்பட்ட அவமதிப்பைக் கண்டு வெள்ளையர்களான அவர்களின் அதிகாரிகளும் தங்கள் தங்களுடைய ஆயுதங்களையும் பதக்கங்களையும் கீழே எறிந்து விட்டுக் கம்பெனியைத் தூற்றுவதில் சிப்பாய்களுடன் சேர்ந்து கொண்டார்கள்!

பிஷாவரில் இருந்த சிப்பாய்கள் நிராயுதபாணிகள் ஆக்கப் பட்டு வருகையில், ஹோதிமர்த்தன் என்ற இடத்தில் இருந்த சிப் பாய்கள் அடங்கிய 55-ஆவது பிரிவினிடம் ஆங்கிலேயர்கள் கவனம் செலுத்தலாயினர். அந்தப் பிரிவினரும் புரட்சிக்காரர் களே என்பதுதான் பாஞ்சாலச் சர்க்காரின் நிச்சயமான அபிப்பி ராயம். ஆனால் அங்கிருந்த சிப்பாய்களின் பிரதம அதிகாரியான ஸ்பாட்டிஸ்வுட், சர்க்காரின் சந்தேகத்தை ஒப்புக்கொள்ள வில்லை. தன் சிப்பாய்கள் ஆங்கிலேயருக்கு விரோத மாக ஒரு காலத்திலும் புரட்சியில் இறங்கமாட்டார்கள் என்று அவன் சர்க்கார்த் தலைவர்களிடம் இடைவிடாது வற்புறுத்திக் கூறிவந்தான்.

ஆனால் சர்க்காரோ அந்தச் சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்கியே தீரப்போவதாகக் கூறிவிட்டனர். அதனால் கர்னல் ஸ்பாட்டிஸ்வுட் மனம் நொந்தான். சிப்பாய்த் தலைவர்கள் அவனிடம் சென்று, தங்களை எதிர்ப்பதற்காகப் பிஷாவரிலிருந்து ஆங்கிலத் துருப்புகள் வந்துகொண் டிருக்கின்றன என்ற வதந்தி உண்மையா என்று கேட்டனர். அதற்கு அவன் சரியான பதில் கூறாமல் மழுப்பவே, சிப்பாய்கள் அதிருப்தியுடன் திரும்பினர்.

அந்த வதந்தி உண்மையே. அந்தச் சிப்பாய்களையும் நிராயுதபாணிகள் ஆக்குவதற்காக அப்போது பிஷாவரிலிருந்து ஆங்கிலத் துருப்புகள் வந்துகொண் டிருந்தன. நொடிய, வெறுக்கத்தக்க அந்தக் கோலத்தைக் காண விரும்பாத கர்னல் ஸ்பாட்டிஸ்வுட் தன் அறைக்குச் சென்று தற்கொலை செய்து கொண்டான்! இந்தச் செய்தி சிப்பாய்களுக்கு எட்டவே, 55- ஆவது பிரிவைச் சேர்ந்த எல்லோரும் தங்களுடைய ஆயுதங் களுடனும், தேசீயக் கொடிகளுடனும் சென்று கஜானாவைக் கொள்ளையிட்டு, அடிமைத்தனத்தை உதறி எறிந்துவிட்டு, டில்லிக்குப் பயணமாயினர்.

ஆயினும் டில்லி சமீபத்தில் இருக்கிறதா? ஆங்கிலச் சிப்பாய் கள் நிறைந்த பாஞ்சாலம் முழுவதையும் கடந்தல்லவா அவர்கள் டில்லிக்குச் செல்ல வேண்டும்? போதாக் குறைக்கு ஆங்கிலப் படை ஒன்றும் அவர்களை எதிர்க்க வந்துகொண் டிருந்தது. அந்த நிலையில் தாங்கள் வெற்றி பெறுவது மிகக் கடினம் என் பதைச் சிப்பாய்கள் உணர்ந்தனர். பிஷாவரில் தங்களுடைய தோழர்கள் செய்ததுபோல் தாங்களும் ஆங்கிலேயர்களிடம் அமைதியாக ஆயுதங்களை ஒப்பித்துவிடுவது புத்திசாலித்தனம் அல்லவா என்ற எண்ணமும் அவர்களுக்கு ஏற்பட்டது. எனினும் அவ்வாறு செய்ய அந்த வீரர்களின் மனம் இடம் கொடுக்கவில்லை.

காலைச் சுற்றியுள்ள அடிமைச் சங்கிலியைக் காட்டிலும் கழுத்தைச் சுற்றியுள்ள தூக்கு மரக் கயிறு சிறந்ததென்று அவர்கள் கருதினர்; 'அந்நியர்களிடம் பணிவதைக் காட்டிலும் போர் செய்து மடிவோம்!' என்று உறுதிகொண்டனர்.

உண்மையில் நடந்ததும் அதுதான்! 55-ஆவது பிரிவைச் சேர்ந்த எல்லாச் சிப்பாய்களும் மிகுந்த வீரத்துடன் போர் புரிந்தவண்ணம் வீர சுவர்க்கம் அடைந்தனர்! உயிர் தப்பிக் காஷ்மீரத்துக்குச் சென்ற சிலரும் காஷ்மீர் மண்டலாதிபதியாக இருந்த குலாப் சிங் என்ற துரோகியால் இரக்கமின்றிப் படுகொலை செய்யப்பட்டனர். ஆங்கிலேயரின் ஒரு துளி ரத்தத்தையும் சிந்தாத ஆயிரக்கணக்கான அந்தச் சிப்பாய்களை வெள்ளையர்கள் தூக்கிலிட்டும், பீரங்கிகளின் வாயில் வைத்தும் வதைத்தனர். இறக்கும் தறுவாயில்கூட அவ்வீரர்கள் சிறிதும் கலங்கவில்லை என்பதையும், தூக்கில் மாய்வதைக் காட்டிலும் பீரங்கியால் சுடப்பட்டு இறப்பதையே தாங்கள் விரும்புவதாகக் கூறினர் என்பதையும் சரித்திராசிரியர் கேய் குறிப்பிட்டிருக்கிறார். 'நாங்கள் வீரர்களைப்போல் பீரங்கி வாயில் இறக்க விரும்புகிறோமே அல்லாது நாய்களைப்போல் தூக்கு மரத்தில் தொங்க விரும்பவில்லை!' என்றார்களாம் அந்தப் புனித வீரர்கள்!

இந்தியச் சிப்பாய்களின் பலாத்காரமான செயல்களை எல்லாம் தங்களுடைய கற்பனையை உபயோகித்து மிகைப்படுத்தி வர்ணித்துள்ள ஆங்கில சரித்திராசிரியர்கள், சிப்பாய்கள் விஷயத்தில் வெள்ளையர்கள் இழைத்த கொடுமைகளில் சிலவற்றை மாத்திரம் வெகு சுருக்கமாகக் குறிப்பிட்டு மழுப்பியிருக்கிறார்கள். வெள்ளையர்கள் செய்த பல அக்கிரமங்களையும் அவர்கள் அறவே மறைத்துவிட்டார்கள்.

மானிடவர்க்கத்தின் நிரந்தரமான நன்மையை உத்தேசித்து ஆங்கிலேயர்கள் தாற்காலிகமாக மிருகத்தனமான பல அட்டூழியங்களையும் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதென்று அந்தச் சரித்திராசிரியர்கள் சமாதானம் கூறியிருக்கிறார்கள்! கேய் கூறுவதாவது: 'ஆங்கில அதிகாரிகள் செய்த பயங்கரமான, கொடிய சித்திரவதைகளை விவரித்து என்னிடம் ஏராளமான கடிதங்கள் இருக்கின்றன. எனினும் அவற்றைப்பற்றி நான் ஒரு வார்த்தைகூடக் கூறாததற்குக் காரணம் என்னவெனில், அவற்றை உலகம் மறந்துவிட வேண்டும் என்பதற்காகத்தான்.' பாரபட்சமற்ற ஒரு சரித்திராசிரியரின் தர்மம் இதுதானோ!

பிஷாவருக்கு அருகில் இத்தகைய மிருகத்தனமான அட்டூழியங்கள் நடந்துகொண்டிருக்கையில், ஜலந்தரிலும் புரட்சி அனல் ஜ்வாலை வீசத் தொடங்கியது. பாஞ்சாலம் முழுவதும் சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்கும் கைங்கரியத்தில் ஜான் லாரென்ஸ் தீவிரமாக ஈடுபட ஆரம்பித்தான். பில்ஹூர் சிப்பாய்கள், எவரும் ஆச்சரியப்படத் தக்கவாறு சாந்தமாகவும் புத்திசாலித்தனமாகவும் கட்டுக் கோப்பாகவும் நடந்து

கொண்டனர். இன்றேல், ஜலந்தரிலும் பில்ஹூரிலும் முன்னமேயே அவர்கள் தங்களுடைய ஆயுதங்களையெல்லாம் இழக்கும்படி நேர்ந்திருக்கும். பாஞ்சாலத்திலுள்ள தோழர்களைப்போல் ஜலந்தர் சிப்பாய்களும் சுதந்தரப் போருக்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்து, ஏக காலத்தில் வெள்ளையர்களை எதிர்த்து வாளெடுக்கத் தீர்மானித்தனர். அவர்கள் வகுத்திருந்த திட்டம் இதுதான்: ஜலந்தர் ராணுவ அதிகாரிகள் ஹோஷியார்புரிக்கு ஒரு படையை அனுப்பும்போது, 31-ஆவது காலாட் படையினர் பில்ஹூருக்குப் படையெடுத்துச் செல்ல வேண்டும்; அவர்கள் அங்கே சென்றவுடன், பில்ஹூரிலுள்ள 3-ஆவது படையும் எழ வேண்டும்; பின்னர் எல்லோருமாகச் சேர்ந்து டில்லிக்குப் புறப்படவேண்டும்.

மற்ற இடங்களிலும் அது போலவே திட்டங்கள் வகுக்கப் பட்டிருந்தன. எனினும் அவை அமலுக்கு வருமுன், எப்படியோ அந்த ரகசியம் வெளியாகி விட்டதால், ஆங்கிலேயர்கள் முன்னெச்சரிக்கையுடன் இருக்க முற்பட்டார்கள். சிப்பாய்கள் மாத்திரம் இறுதி வரையில் பரம ரகசியமாக நடந்துகொண்டனர். முற்றுகைப் பீரங்கிகளும் தளவாடங்களும் டில்லிக்குக் கொண்டுபோகப் பட்டபோது, அவர்கள் அவற்றை எளிதில் சின்னபின்னம் ஆக்கியிருக்கக் கூடும்; ஆயினும் பொதுவான திட்டத்துக்கு எவ்விதக் குந்தகமும் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காகவே அவர்கள் உற்ற நேரம் வரும் வரையில் வெளிப் பார்வைக்கு மிகவும் அமைதியாக இருந்தனர்.

கடைசியாக, ஏற்கனவே தீர்மானித்திருந்தபடி ஜூன் மீ 9-ஆம் தேதி போரை ஆரம்பிக்கலாம் என்பதற்கு அறிகுறியாக ராணிப் படையின் தளபதியினுடைய பங்களாவுக்குத் தீ வைத்தார்கள். அந்தச் சமிக்ஞையைக் கண்டதும் ஜலந்தர் சிப்பாய்கள் எல்லோரும் நடு நிசிக்குப் புரட்சியை ஆரம்பித்தார்கள். அவ்வமயம் ஆங்கிலத் துருப்புகளும் பீரங்கிப் படைகளும் அங்கே தான் இருந்தன. எனினும் இந்தியச் சிப்பாய்கள் திடீரென்று ஏகோபித்துக் கொதித்து எழுந்ததால் ஆங்கிலேயர் திடுக்கிட்டுச் செயலற்றுப் போயினர்.

சிப்பாய்களின் பயங்கர கோஷங்கள் வெள்ளையர்களுக்கு இன்னும் அதிக திகிலை உண்டுபண்ணின. ஆங்கில ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் பாதுகாப்பான இடங்களை நோக்கி ஓடினர். ஜலந்தர் சிப்பாய்களோ அங்கிருந்த ஆங்கிலேயர்களைப் படுகொலை புரிய விரும்பவில்லை. டில்லியில் சுதந்தரக் கொடியைக் குறி வைத்துக்கொண் டிருந்த ஆங்கிலேயர்களின் பீரங்கிகளைத் தகர்ப்பதே தங்களுடைய முதல் வேலையென்று சிப்பாய்கள் கருதினர். அவர்களுடைய திட்டத்தில் அநாவசியமாகத் தலையிட முயன்ற பக்ஷா என்ற ஓர் அதிகாரியை ஓர் இந்தியக் குதிரை வீரர் சுட்டு வீழ்த்தினார். அங்கிருந்த ஆங்கில ராணுவ அதிகாரிகள் கடைசி வரையில் சிப்பாய்கள்மீது சந்தேகம் கொள்ளவில்லை. அவர்கள்மீது உண்மையில் நம்பிக்கை வைத்திருந்த அதிகாரிகள் சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்க

வேண்டிய அவசியம் இல்லை என்றும் மேலதிகாரிகளுக்கு அறிவித்திருந்தனர்!

அங்கிருந்த ஆங்கில அதிகாரிகளை மாத்திரம் அல்ல, மற்ற வெள்ளையர்களையும் சிப்பாய்கள் கொல்லாததற்கு அதுதான் காரணம். அந்த அதிகாரிகள் சிப்பாய்களிடம் நம்பிக்கை வைத்ததால்தான் அவர்களுக்கு உயிர்ப்பிச்சை கிடைத்தது. தங்களிடம் நம்பிக்கை வைத்த அதிகாரிகளுக்குச் சிப்பாய்கள் அன்புடன் உயிர்ப்பிச்சை கொடுத்தார்கள். எனினும், தங்களுடைய தேசீய லட்சியத்திலிருந்து அவர்கள் வழுவவில்லை. தங்களுடைய தேகத்தையும் ஆத்மாவையும் தேசத்துக்காக அர்ப்பணம் செய்துள்ள அவர்கள், சொந்த விருப்பு அல்லது வெறுப்புக் காரணமாக, சுதந்தர சங்க நாதத்துக்குச் செவி சாய்க்கா திருப்பார்களா?

அவர்கள் நடு நிசிக்குப் புரட்சியை ஆரம்பிக்கு முன்னமே, அவ்விஷயத்தை பில்ஹௌர் தோழர்களுக்கு அறிவிப்பதற்காக ஒரு குதிரை வீரரை அனுப்பியிருந்தனர். ஜலந்தரிலிருந்து அந்தத் தூதர் அங்கே சென்றவுடன் பில்ஹௌர் சிப்பாய்களும் சுதந்தரப் போருக்கு எழுந்தார்கள். ஜலந்தர் சிப்பாய்கள் பில்ஹௌருக்குச் செல்லுவது சுலபமான காரியம் அல்ல. அவர்கள் ஆங்கிலேயர்களின் பீரங்கிப் படைகளுக்கோ குதிரைப் படைகளுக்கோ எதிர்ப்படாமல் செல்ல வேண்டும். எனினும் ஆங்கிலேயர்கள் மிகவும் குழம்பிக் கிடந்ததாலும், தேசபக்தர்கள் தங்களுடைய திட்டத்தை அணுவளவும் சந்தேகமின்றி வகுத்திருந்ததாலும் அவர்கள் யாவரும் ஒழுங்காகப் பில்ஹௌர் வந்து சேர்ந்தனர்.

தங்களுடன் சேர்ந்துகொள்வதற்காக ஆயிரக்கணக்கான சகோதரர்கள் வருவதைக் கண்ட பில்ஹௌர் சிப்பாய்கள் அவர்களை எதிர்கொண்டு அழைப்பதற்காக அணிவகுத்துச் சென்றார்கள். இரு சாராரும் இருதய பூர்வமாகப் பரஸ்பரம் தழுவிக்கொண்ட பின், ஜமேதார்கள், சுபேதார்கள் முதலியோரின் தலைமையில் அந்த மாபெரும் படை டில்லியை நோக்கிப் புறப்பட்டது. அந்தப் படையினர் வழியில் ஸத்லெஜ் நதியைக் கடந்து செல்ல வேண்டும். அந்த நதிக்கு அப்பால்தான் லூதியானா நகரம் இருக்கிறது. தேசபக்தர்களான அந்த வீரர்களை வணங்கி அவர்களுக்குப் பூரண ஆதரவளிக்க லூதியானா நகர ஜனங்கள் ஆவலுடன் காத்துக்கொண் டிருந்தார்கள்.

ஆனால் லூதியானாவில் இருந்த ஆங்கில அதிகாரிகளுக்கு ஜலந்தர் எழுச்சியைப்பற்றி அன்று காலையிலேயே தந்தி கிடைத்து விட்டது. எனினும் அதிகாரிகளுக்குத் தந்தி கிடைக்குமுன்பே, ஜலந்தர் சகோதரர்கள் புறப்பட்டு விட்டார்கள் என்ற செய்தி லூதியானா சிப்பாய்களுக்கு எட்டிவிட்டது. எனவே தங்களுடைய சிப்பாய்களை அடக்க முடியும் என்ற நம்பிக்கை ஆங்கில அதிகாரிகளுக்கு இல்லை. அந்த நிலையில் அவர்கள், பில்ஹௌரிலிருந்து வரும் துருப்புகளை ஸத்லெஜ் நதிக்கரையில் எதிர்த்துத் தடுப்பதென்று தீர்மானித்தார்கள்.

அதற்கிணங்க நதியின் பாலம் நொறுக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள், சீக்கியர்கள், நாபா மகாராஜாவின் துருப்புகள் முதலியோர் நதிக்கரையைப் பாதுகாத்துக்கொண்டு நின்றனர். அந்தச் செய்தி தேசபக்தர்களுக்கு எட்டவே, அவர்கள் நதிக்கு மேற்கே நான்கு மைல்களுக்கு அப்பால் சென்று, இரவில் அதைக் கடந்து செல்ல ஆரம்பித்தனர். அவர்களில் சிலர் படகுகளில் அப்போது தான் அக்கரை சென்றனர்; மற்றும் சிலர் படகுகளிலே நதியின் மத்தியில் சென்றுகொண்டிருந்தனர்; எஞ்சியவர்கள் நதியைக் கடந்து செல்லுவதற்கு ஆயத்தமாக இக்கரையில் இருந்தார்கள்.

அந்த நிலையில் ஆங்கிலேயர்களும் இந்தியத் துரோகிகளும் அடங்கிய படைகள் தேசபக்தர்கள்மீது பீரங்கிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தன. அப்போது இரவு பத்து மணி இருக்கும். ஆங்கிலத் துருப்புகளின் நடமாட்டங்களையும் அவர்கள் எந்தப் பக்கத்திலிருந்து பீரங்கிப் பிரயோகம் செய்கின்றனர் என்பதையும் தேசபக்தர்களால், இருள் காரணமாக, கண்டு பிடிக்க முடியவில்லை. அவ்வமயம் தேசபக்தர்களின் பீரங்கிகளும் அக்கரைக்குக் கொண்டுபோகப் படவில்லை.

அவர்களின் சங்கடமான நிலையைப் பகைவர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக்கொண்டு, சரமாரியாகப் பீரங்கிக் குண்டுகளைப் பிரயோகித்தனர். அந்த உக்கிரமான தாக்குதலைக் கண்டு தேசபக்தர்கள் அதிர்ச்சி யடைந்தார்கள். ஆயினும் அவர்கள் இருந்த இடத்தை விட்டு ஓர் அங்குலங்கூட நகராமல் பகைவர்கள் இருக்கக்கூடிய திசையைக் குறித்து இடைவிடாது சுட்டுக்கொண்டே இருந்தார்கள். பகைவர்கள் திடீரென்று தாக்கியதால் தேசபக்தர்களிடையே முதலில் குழப்பம் ஏற்பட்டது. ஆனல், சிறிது நேரத்தில் அவர்கள் தங்கள் நிலைமையைச் சீர்ப்படுத்திக்கொண்டு, அணுவளவும் பின் வாங்காது சுமார் இரண்டு மணி நேரம் வரையில் உக்கிரமாகப் போர் புரிந்தனர். அப்போது ஒரு தேச பக்தரின் தோட்டா, ஆங்கிலத் தளபதி வில்லியம்ஸின் மார்பில் பாய்ந்ததால், அவன் கீழே விழுந்து மாண்டான்.

சிறிது நேரத்தில் சந்திரன் உதயமாகி இருளும் அகன்றது. சுதந்தர தேவியின் பக்தர்களுக்குக் குளிர்ந்த சந்திரிகை புதிய பலம் அளித்தது. ஆங்கிலேயர்களின் தந்திரத்தையும் அவர்கள் எங்கிருந்து போர் புரிகின்றார்கள் என்பதையும் நிலவு வெளிச்சத்தில் தேசபக்தர்கள் நன்கு அறிந்துகொண்டதும், முன்சென்று வீராவேசத்துடன் போர் புரிந்தனர். அதுவரை இருளில் நின்று தாக்கிய பகைவர்களால் அதன்பின் நேர்முகமாக எதிர்த்து நின்று போர் புரிய முடியவில்லை. எனவே ஆங்கிலப் படைகளும் துரோகிகள் அடங்கிய படைகளும் புறமுதுகு காட்டி ஓட ஆரம்பித்தன. அவ்விரு படைகளையும் ஏக காலத்தில் அடித்து விரட்டி வெற்றி பெற்றதால், தேசபக்தர்கள் மத்தியான்னம் பெருமையுடன் லூதியானு நகருக்குள் பிரவேசித்தனர்.

அப்போது லூதியானு நகரில் ஒரு மௌல்வி இருந்தார். அடிமைச் சங்கிலியைத் தகர்த்தெறிந்து சுயராஜ்யத்தை ஸ்தா

பிக்க வேண்டுமென்று அவர் ஜனங்களுக்கு இடைவிடாமல் போதித்து வந்ததன் பயனாக, பாஞ்சாலத்திலேயே லூதியானா தேச ஆவேசங் கொண்ட வீரர்களின் கோட்டையாக விளங்கியது. எனவே, அடிமைச் சங்கிலியை இறுதியாக உடைத்தெறிய வேண்டிய நேரம் வந்துவிட்டது என்ற சமிக்ஞை கிடைத்ததும், அந்த நகரம் முழுவதும் தேசீய கோஷங்களுடன் வீறுகொண்டு எழுந்தது.

உடனே சர்க்கார்ப் பண்டகசாலைகள் யாவும் சூறையாடப் பட்டன; ஆங்கிலேயர்களின் வீடுகள், அச்சுக்கூடங்கள் முதலிய எல்லா இடங்களுக்கும் தீ வைக்கப்பட்டது; ஆங்கிலேயர்களின் வீடுகளையும், குறிப்பாக வெள்ளையர்களிடம் வாலையாட்டி வயிறு பிழைக்கும் துரோகிகளின் வீடுகளையும் சிப்பாய்களுக்குச் சுட்டிக் காட்டுவதில் ஜனங்கள் போட்டி போட்டனர். சிறைக்கூடக் கதவுகள் உடைத்தெறியப்பட்டன. ஆங்கிலேயர்களுக்கும் ஆங் கில அரசாங்கத்துக்கும் சொந்தமானவையெல்லாம் தகன மாயின; தீக்குத் தப்பிய இடங்கள் இடிக்கப்பட்டுத் தரைமட் டம் ஆயின. இவ்வாறாக லூதியானாவிலும் புரட்சித் தீ பற்றிக் கொண்டது!

எனினும் டில்லிக்குச் செல்ல வேண்டும் என்பதே தேசீய வீரர்களின் ஆர்வமாகும். பாஞ்சாலத்துக்கே இருதயம் போன்றிருந்த லூதியானா கோட்டையைச் சிப்பாய்கள் கைவிடாதிருப்பார்களாயின், மகத்தான நன்மை ஏற்பட் டிருக்கும். டில்லியைப்போல் லூதியானாவும் தேசீயப் புரட்சி வீரர்களின் முக்கிய ஸ்தானமாக இருந்திருந்தால், அது ஆங்கில ஆதிக்கத்துக்குச் சாவுமணி அடித்ததுபோல் ஆகி யிருக்கும். இந்த உண்மையைத் தேசபக்தர்களும் அறிவர். எனினும் அப்போதிருந்த நிலைமையில் அவர்கள் லூதியானா வில் தங்கியிருப்பது சாத்தியம் இல்லாமல் இருந்தது. அங்கே அவர்களுக்கு உற்ற தலைவர் யாரும் இல்லை. அவர்களிடம் போதிய அளவு வெடி மருந்தும் இல்லை.

அந்த நெருக்கடியான சமயத்தில் அங்கே ஒரு நானா சாஹிபோ, ஒரு கான் பகதூர் கானோ, அல்லது ஒரு மௌல்வி அகமது ஷாவோ இருந்திருப்பாராயின், அவ்வீரர்கள் லூதி யானாவை விட்டு ஒருபோதும் சென்றிருக்க மாட்டார்கள். ஆனால் மேற்கூறிய நிலையில் அவர்கள் டில்லிக்குச் செல்லு வதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லாமற் போய்விட்டது. அடிமை வாழ்வா அல்லது சுயராஜ்யமா என்பதை டில்லி வாயிலில் தாங்கள் தீர்த்துக் கொள்ளப் போவதாகச் சிப் பாய்கள் சபதம் செய்துகொண்டு, அந்த நகரை நோக்கிப் புறப் பட்டனர். அவ்வமயம் ஆங்கிலேயர்கள் நடுநடுங்கிச் சீர் குலைந்து கிடந்ததால், சிப்பாய்களைத் துரத்திக்கொண்டு செல்ல அவர்கள் துணியவில்லை.

ஆயினும் மீரத் எழுச்சிக்குப் பின் தேச பக்தர்கள் மூன்று வாரங்கள் வரையில் வாளா இருந்துவிட்டதால், அந்த இடைக்-

காலத்தைப் பாஞ்சாலத்தில் இருந்த ஆங்கிலேயர்கள் முற்றும் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொண்டனர். அப்போது பாஞ்சாலத்தில் ஏராளமான ஆங்கிலத் துருப்புகள் இருந்தன. சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்குவதோ, அவர்கள் தங்களுக்குச் சாதகமான இடம், நேரம் எதையும் கவனியாமல் அவசரப்பட்டுப் புரட்சியில் ஈடுபடும்படி செய்து அவர்களை அழித்துவிடுவதோ ஆங்கிலேயருக்கு எளிதாயிற்று.

ஆங்கிலேயர்கள் அங்கே பிரித்தாளும் முறையையும் வெகு தீவிரமாகக் கைக்கொள்ள ஆரம்பித்தனர். அறியாமையால் ஆங்கிலேயர் பக்கம் சேர்ந்துகொண்ட சீக்கிய மன்னர்களும் மக்களும் நிரந்தரமாகவே தங்களை ஆதரிக்கும்படி செய்வதற்காக, அம் மாகாணத்தில் இருந்த ஹிந்துக்களையெல்லாம் நாடு கடத்திச் சீக்கியர்களுக்குச் சலுகை அளிப்பதுபோல் காட்டிக்கொண்டனர். சுதந்தர யுத்தத்துக்கு உயிர்நாடியான ஒற்றுமை, மக்களிடையே சீர்குலையவே, அந்தப் பிரதேசத்தில் தேசியப் புரட்சியின் முளையை வெள்ளையர்களால் வெகு சுலபமாக வேரறுத்து விட முடிந்தது.

அந்தச் சமயம் சீக்கியர்கள் அல்லாத சிப்பாய்கள் மாத்திரமல்ல, நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள சாதுக்களும் செல்வர்களுமான ஆயிரக் கணக்கான மற்றவர்களுங்கூட நாடு கடத்தப்பட்டனர். அவ்வாறு ஆங்கிலேயர்கள் பாஞ்சாலத்தை முற்றும் தங்கள் வசப் படுத்திக்கொண்டபின், டில்லிக்கு ஏராளமான வெள்ளைப்படைகளை அனுப்ப முற்பட்டார்கள். பாஞ்சாலத்தில் சில துரோகிகளுடைய ஆதரவு ஆங்கிலேயர்களுக்குக் கிடைக்காதிருக்குமாயின், அவர்கள் ஒரு நாள்கூடப் பாஞ்சாலத்தைத் தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்துக்கொண்டிருந்திருக்க முடியாது.

அப்போது பாஞ்சாலத்தின் பரிதாபமான நிலையைப்பற்றி டில்லி சக்கரவர்த்தியின் அந்தரங்க ஊழியரான தாஜுதீன், சக்கரவர்த்திக்கு அனுப்பிய குறிப்பொன்றில் கூறியிருந்ததாவது: ''பாஞ்சாலத்திலுள்ள சீக்கிய சர்தார்கள் வெள்ளையர்களின் வலையில் வீழ்ந்துவிட்டார்கள். இனி அவர்கள் சுதந்தரப் போரில் கலந்துகொள்வார்கள் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அவர்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களின் கைப்பொம்மைகள் ஆகிவிட்டார்கள். அவர்களை நான் ரகசியமாகக் கண்டு பேசினேன்; மன்றாடிக் கேட்டுக்கொண்டேன். 'அந்நியர்களுடன் சேர்ந்து ஏன் தேசத்துரோகிகள் ஆகின்றீர்கள்? சுயராஜ்யத்தின் கீழ் உங்கள் நிலைமை மேன்மையாக இராதா? உங்கள் சுயநலத்தை உத்தேசித்தாவது, நீங்கள் டில்லி சக்கரவர்த்தியுடன் சேர்ந்துகொள்ளுவதுதான் சிறந்ததாகும்' என்று அவர்களிடம் கூறினேன். 'நாங்களெல்லோரும் சந்தர்ப்பம் எப்போது நேரும் என்று காத்துக்கொண்டிருக்கிறோம். சக்கரவர்த்தியின் கட்டளை கிடைத்தவுடனே நாங்கள் இந்த மதத் துரோகிகள் எல்லோரையும் ஒரே நாளில் கொன்றுவிடுகிறோம்'

என்று அவர்கள் பதிலளித்தனர். எனினும் அவர்களை நம்புவதற்கில்லை.''

சுதந்தர யுத்தத்தில் சேரும்படி டில்லி சக்கரவர்த்தியிடமிருந்து செய்தி கொண்டுவந்த குதிரை வீரர்கள் சீக்கிய மன்னர்களால் கொல்லப்பட்டனர். சீக்கிய மன்னர்களின் உதவியின்றிப் பாஞ்சாலத்திலிருந்து ஆங்கிலேயர்களை விரட்டுவது தேச பக்தர்களுக்கு அசாத்தியமான காரியம் அல்ல. தேசபக்தர்கள் தாங்கள் வகுத்திருந்த திட்டத்திற்கு இணங்க ஏக காலத்தில் சுதந்தரப் போரை ஆரம்பித்திருக்க வேண்டும்; அல்லது அவசரப்பட்டு ஆரம்பித்த புரட்சியையாவது ஆங்கிலேயர்களுக்கு மூச்சு விடவும் சந்தர்ப்பம் கொடுக்காமல் தொடர்ந்து நடத்திச் சென்றிருக்க வேண்டும். அவ்வாறு செய்திருந்தால் துரோகிகள் பயந்துகொண்டு தேசபக்தர்களின் கட்சியில் சேர்ந்திருப்பார்கள்.

ஒரு வேளை அவ்விதம் சேராவிட்டாலுங்கூட, துரோகிகளிடையே பிளவு ஏற்பட்டிருக்கும். அதன் பயனாக, ஆயிரக்கணக்கான சிப்பாய்களை நிராயுதபாணிகள் ஆக்க ஆங்கிலேயர்களால் முடியாமல் போயிருக்கும். அவ்வமயம் பாஞ்சால மக்களுக்குச் சுதந்தர ஆர்வம் இல்லை என்று கூறுவது சரியல்ல. ஏனெனில் தானேசுவரப் பிராம்மணர்கள், லூதியானா மௌல்விகள், பிரோஸ்புரி வியாபாரிகள், பிஷாவர் முஸ்லிம்கள் முதலிய சகலரும் புனிதமான சுதந்தரப் போரை ஆரம்பிக்க வேண்டுமென்று பல்வேறு இடங்களுக்கும் சென்று பிரசாரம் செய்த வண்ணமாக இருந்தார்கள்.

பாஞ்சால மக்களுக்கு டில்லி சக்கரவர்த்தியிடம் அநுதாபம் இருந்துங்கூட, தேச பக்தர்கள் அதைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ள முடியவில்லை. டில்லி விடுதலை அடைந்த பின்னர் மூன்று வாரங்கள் வரையில் சுதந்தரப் போர் ஸ்தம்பித்து நின்றுவிட்டதே அதற்குக் காரணமாகும். முதலில் வகுக்கப்பட்ட திட்டத்தின்படி ஒரே சமயத்தில் புரட்சி மூண்டிருக்குமாயின், ஆங்கிலேயர் எவ்விடத்துக்கும் சென்றிருக்க முடியாது. ஆதரவற்ற ஆங்கிலத் துருப்புகள் பாஞ்சாலத்தில் தேசீய வீரர்களை எல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கியிருக்கவும் முடியாது. சுதந்தரப் போரும் நாளுக்கு நாள் பலமடைந்து நாடெங்கும் பரவி யிருக்கும். அதில் சேருவதா வேண்டாமா என்று தயங்கிக்கொண் டிருந்தவர்களும் சுதந்தரப் போரில் குதிக்கும்படி நேர்ந்திருக்கும். சுதந்தர இயக்கத்தில் அநுதாபம் கொண்டும், ஆனால் அதில் கலந்துகொள்ளத் தைரியம் இல்லாமலும் தயங்கிக்கொண் டிருந்தவர்களும் தேசபக்தர்களின் மகத்தான ஆரம்ப வெற்றியினால் உற்சாகமடைந்து போரில் ஈடுபட்டிருப்பார்கள். இந்தியாவும் விடுதலை பெற்றிருக்கும்.

சுருங்கக் கூறுமிடத்து, துரோகிகளின் அடாத செய்கையினாலும் மீரத்தில் எழுந்த அகாலப் புரட்சியினாலும் பாஞ்சாலத்தில் தேசீயப் புரட்சியின் வேர்கள் பறித்தெறியப்பட்டன.

பாஞ்சாலம் டில்லியின் முதுகெலும்பு போன்றது. எனவே பாஞ்சாலத்திலிருந்து வந்த செய்தி டில்லியில் இருந்த தேச பக்தர்களுக்கு மிகுந்த சோர்வை உண்டுபண்ணியது. ஆங்கிலேயர்களோ, தேச பக்தர்கள் சோர்வடைந்திருந்த மூன்று வாரங்களில், அவர்களை எதிர்ப்பதற்கான எல்லா முன்னேற்பாடுகளையும் செய்துவிட்டார்கள்.

வெள்ளையர்கள் அடங்கிய ஏராளமான படைகள் கல்கத்தாவிலிருந்து அலாகாபாத்துக்குச் சாரிசாரியாக அனுப்பப்பட்டு வந்தன. பம்பாய், சென்னை, ராஜபுதனம், சிந்து முதலிய இடங்களிலெல்லாம் தேசீய வீரர்களிடம் அநுதாபத்துடன் இருந்து வருவோரைப்பற்றி ஆங்கிலேயர்கள் விவரமாக விசாரிக்கலாயினர். பாஞ்சாலத்தில் எழுந்த புரட்சியை முளையிலேயே கிள்ளி எறிந்ததுபோல், அந்த மாகாணங்களிலும் அதைக் கிள்ளி எறிய அவர்கள் பெருமுயற்சி செய்தார்கள். அகாலத்தில் ஏற்பட்ட புரட்சி அவர்களுக்கு ஒரு சரியான முன் எச்சரிக்கை ஆயிற்று. பல இடங்களிலும் புரட்சித் தீயை அணைத்துவிட்டதாக ஆங்கிலேயர்கள் நம்பிக்கொண் டிருந்தனர். சுதந்தர எழுச்சியை அடியோடு நசுக்க அவர்கள் தீவிரமான முறைகளைக் கைக்கொண்டு வருகையில் தேச பக்தர்கள் வெளிக்கு மிகவும் அமைதியாகவே இருந்தார்கள். அந்த மூன்று வாரங்களில் சிற்சில இடங்களில் உண்டான அற்ப எழுச்சிகளைத் தவிர வேறு எதுவும் நிகழவில்லை. மே மாதம் 30-ஆம் தேதி இரு சாராருடைய நிலைமையும் அவ்விதம் இருந்தது.

அந்த நிலைமை எவ்வாறு மாறியது? வெள்ளையர்களின் நம்பிக்கை பாழானது எப்படி? மூன்று வார காலம் வரையில் தேசபக்தர்கள் மகத்தான கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகியுங்கூட, எரிமலை மீண்டும் வெடித்து எவ்வாறு முன்னரைக் காட்டிலும் மிகுந்த பயங்கரமான ஜ்வாலையைக் கக்கியது?—இவற்றையெல்லாம் இனி நாம் கவனிக்க முற்படுவோம்.

## 14

## தூக்கு மேடையிலிருந்து தீப் பொறி

வடமேற்கு இந்தியா முழுவதையும் கலக்கிக்கொண்டிருந்த அதிர்ச்சி அலைகள் மற்ற இடங்களுக்கும் பரவத் தொடங்கின. அவ்வமயம் அலிகடில் 9-ஆவது சுதேசிக் காலாட்படை என்ற பிரிவு இருந்தது. அந்தப் பிரிவைச் சேர்ந்த சில சிப்பாய்கள் மைன்புரி, இடாவா, புலந்த் முதலிய இடங்களில் வைக்கப்பட்டிருந்தார்கள். 9-ஆவது பிரிவினிடம் சர்க்கார் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தனர். இந்தியா முழுவதும் உள்ள சிப்பாய்கள் தங்களுக்கு விரோதமாக எழுந்தாலுங்கூட அவர்களுடன்

9-ஆவது பிரிவினர் சேர மாட்டார்கள் என்பது ஆங்கிலேயர் களின் உறுதியான எண்ணமாகும். எனவே, புலந்தில் ரகசியப் புரட்சிச் சங்கம் மும்முரமாக வேலை செய்து வருகிறது என்ற வதந்தியை அவர்கள் சிறிதும் நம்பாமல் தூங்கிக்கொண் டிருந்த னர்.

புலந்துக்கு அருகிலுள்ள தேசபக்தர்கள் மிகவும் மதிப்பு வாய்ந்தவரும், நம்பிக்கைக்குப் பாத்திரமானவரும், சுதந்தரப் பிரியருமான ஒரு பிராம்மணரை மே மாதம் புலந்த் நகருக்கு அனுப்பினார்கள். அங்குள்ள சிப்பாய்கள் யாவரையும் சுதந்தரப் போரில் கலந்துகொள்ளும்படி செய்யவேண்டும் என்பதே அவ ருக்கு இடப்பட்டிருந்த கட்டளையாகும். 'அடிமைத்தனத்தி லிருந்து நம் தாய்நாட்டை விடுவிப்பதற்காகவும் மதத்தைப் பாதுகாப்பதற்காகவும் நடக்கப் போகும் போரில் புலந்த் சிப் பாய்கள் கலந்துகொள்ளுவார்களா? மகோன்னதமான சுதந்தர வாழ்வை அவர்கள் விரும்புவார்களா, அல்லது என்றென்றும் அடிமைத்தனத்தில் உழன்றுகொண் டிருக்கவேண்டும் என்பது அவர்களுடைய ஆசையா? கொடிய அந்நிய ஆட்சியை வீழ்த்த அவர்கள் தங்களுடைய வாள்களை உபயோகிப்பார்களா, அல்லது அவைகளால் தங்களுடைய தேச சகோதரர்களையே எதிர்க்க முற்படுவார்களா? என்மீது அன்பு காட்டுவார்களோ, அல்லது அவர்களுடைய தூக்கத்தைக் கலைத்து, சுதந்தர உத யத்தைச் சுட்டிக் காட்டியதற்காக என்மீது ஆத்திரப்படு வார்களா?'

அந்தத் தேச பக்தர் இத்தகைய மனப் போராட்டத்தோடு புலந்த் நகரை அடைந்தார். அங்கே அவர் மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். அவருடைய கோரிக்கைக்கும் அங்கே ஆதரவு இருந்தது. ஒரு பெரிய கல்யாண ஊர்வலச் சந்தடியி னிடையே திடீரெனப் புரட்சியை ஆரம்பித்து, ஆங்கிலேயர்களை யெல்லாம் துவம்சம் செய்துவிட்டு, டில்லிக்குச் செல்லவேண்டும் என்று அவர் யோசனை கூறினார். ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஒழிய வேண்டும் என்பதை அங்கே யாரும் ஆட்சேபிக்கவில்லை. எனினும் கல்யாண ஊர்வலச் சந்தடியில் புரட்சியை ஆரம்பிக்க லாமா என்பதுபற்றி விவாதம் எழுந்தது.

அப்போது அந்தப் படைப் பிரிவைச் சேர்ந்த மூன்று துரோகி கள் ஆங்கில அதிகாரிகளிடம் சென்று அந்த விவரங்களைத் தெரி வித்துவிட்டனர். உடனே அந்தப் பிராம்மணர் கைது செய்யப் பட்டார். பின்னர் அவரை ஆங்கிலேயர் படைகளின் தலைமை ஸ்தலமான அலிகடுக்குக் கொண்டு சென்று, அவருக்குத் தூக்குத் தண்டனை விதித்தார்கள். அவ்வமயம் அலிகட் சிப் பாய்கள் எல்லோரும் அங்கே கூடி யிருந்தனர். புலந்தில் அவ ரைக் காட்டிக் கொடுத்த மூன்று துரோகிகளையும் ஜனங்கள் தூற்றி அவர்கள்மீது காறி உமிழ்ந்தனர். புலந்திலுள்ள சகல சிப்பாய்களும் அந்தத் துரோகிகளுக்குச் சாபம் கொடுத்துக் கொண்டு, தங்களுடைய அதிகாரிகளின் அநுமதியின்றியே அலி சென்றனர்.

தேசபக்தரான பிராம்மணரை மே மாதம் 20-ஆம் தேதி மாலை தூக்கிலிட ஆங்கிலேயர்கள் நிச்சயித்திருந்தனர். அந்தக் கோலத்தைப் பார்க்க எல்லாச் சிப்பாய்களும் வரவேண்டும் என்றும் உத்தரவு இடப்பட்டிருந்தது.

அவரது ஆத்மா பிரிந்து உடல் தூக்கு மரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. ஊசலாடிக்கொண் டிருந்த அந்த உடல், வெள்ளையர்கள்மீது வஞ்சம் தீர்க்கும்படி தம் சகோதரர்களுக் கெல்லாம் கட்டளையிடுவதுபோல் இருந்தது. அவரது சரீரத்தி லிருந்து சொரிந்துகொண் டிருந்த ரத்தமாரி பிரசங்கமாரி போல் இருந்தது. அவர் உயிருடன் இருந்திருந்தால்கூடச் சிப்பாய்களிடையே அத்தகைய ஆவேசம் ஏற்பட்டிராது. ஒரு வார்த்தைகூடப் பேசாத அந்த உடல், சிப்பாய்களை உடனே போருக்கு எழும்படி தூண்டிவிட்டது!

வரிசையாக நின்றுகொண் டிருந்த சிப்பாய்களில் ஒருவர் முன்வந்து, தமது வாளால் அந்த உடலைச் சுட்டிக்காட்டி, 'நண்பர்களே, இந்தத் தியாகி உதிரத்தில் ஸ்நானம் செய்கிறார். இவரைக் கொன்ற பாதகர்களும் ரத்த வெள்ளத்தில் மூழ்க வேண்டாமா?' என்று கர்ஜித்தார். அவர் வார்த்தைகள், மருந்துக் குவியலில் தீப்பொறி தெறித்ததுபோல் ஆயிரக் கணக்கான சிப்பாய்களின் இருதயத்தில் குபீரென்று ஆவேசத் தீயை உண்டு பண்ணின. உடனே அவர்கள் எல்லோரும் வாள்களை உருவினர்; 'அந்நியர் ஆட்சி ஒழிக!' என்று கர்ஜித்துக்கொண்டு தங்கள் கடமையைச் செய்யத் துவங்கினர்!

இந்தக் காட்சியைக் கண்ட வெள்ளை அதிகாரிகள் மேலே என்ன செய்வதென்று தோன்றாமல் அறிவிழந்ததில் ஆச்சரிய மில்லை. மிகவும் விசுவாசத்துடன் இருந்து வந்த 9-ஆவது பிரிவுப் படைகள் புரட்சி செய்ய முற்பட்டவுடனே, ஆங்கிலேயர்கள் தங்களுடைய உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமாயின், அலிகடை விட்டு உடனே ஓடிவிட வேண்டுமென்றும் பட்டவர்த் தனமாகக் கூறிவிட்டனர். வெள்ளையர்களும், பெருந்தன்மை யுள்ள தேசபக்தர்களின் எச்சரிக்கையைச் சிரமேற்கொண்டு தங் கள் பெண்டு பிள்ளைகளுடன் அலிகடிலிருந்து ஓட்டம் பிடித்தார் கள்!

அன்று நடு நசிக்குள் அலிகடில் ஆங்கில ஆட்சியின் அறி குறியே இல்லாமல் மறைந்துவிட்டது! அலிகட் விடுதலையடைந்த செய்தி மே மாதம் 22-ஆம் தேதி மைன்புரி ஜனங்களுக்கு எட்டி யது. 9-ஆவது படையின் ஒரு பகுதி மைன்புரியில் இருந்து வந்தது என்பது ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிற தல்லவா? அப் பகுதியைச் சேர்ந்த சிப்பாய்களுக்கு, அலிகடில் தங்களுடைய சகோதரர்களின் செய்கை எத்தகைய எண்ணங்களை எழுப்பி யிருக்கும் என்பதை எவரும் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம்.

மீரத்தில் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போர் புரிந்த ராஜா நாத சிங், ஜீவந்தி என்ற இடத்திற்குச் சென்றிருப்பதாக அதி காரிகளுக்குச் செய்தி கிடைக்கவே, அவரைக் கைது செய்வதற்

காக அவர்கள் சில சிப்பாய்களை ஜீவந்திக்கு அனுப்பியிருந்தனர். அந்தச் சிப்பாய்களோ, கைது செய்வதற்குப் பதிலாக அவரைப் பத்திரமாக வேறோரிடத்தில் கொண்டுபோய் விட்டு, அந்தப் பெயர் கொண்ட எவருமே ஜீவந்தியில் இல்லை என்று அதிகாரி களிடம் வந்து கூறி விட்டார்கள்!

அதிகாரிகளிடம் கீழ்ப்படியவில்லை என்ற குற்றத்துக்காக ராம்தீன் சிங் என்ற ஒரு சிப்பாய் காவலுடன் அலிகடுக்கு அனுப்பப்பட்டார். ஆனால் பாதுகாப்புக்காகச் சென்ற சிப்பாய் களோ அவரை நடுவழியில் விடுவித்து, அவரது விலங்குகளை உடைத்து எறிந்துவிட்டு அமைதியாக மைன்புரிக்குத் திரும்பி வந்துவிட்டார்கள்.

தேச பக்தி ததும்பும் மைன்புரி சிப்பாய்கள், மற்ற இடங்களி லிருந்த சகோதரர்களின் சமிக்ஞைக்காகக் காத்துக்கொண் டிருந் தார்கள். எனினும் ஏககாலத்தில் எல்லோரும் சேர்ந்து எழுமுன் தங்களைப் பகைவர்கள் அடக்கி ஒடுக்கிவிடாமல் இருப்பதற்காக, 9-ஆவது படையினர் ஆங்கிலேயர்களிடம் மிகுந்த விசுவாசம் உள்ளவர்கள்போல் நடித்து வந்தனர். இந்தியாவிலேயே அந்தப் படையினர்தாம் தங்களிடம் எல்லையற்ற விசுவாசம் கொண்ட வர்கள் என்று வெள்ளையர்களும் நினைத்து வந்தார்கள்.

எனினும் தூக்கில் மாண்ட தேச பக்தர் கொண்டுவந்த செய்தி அலிகட் சிப்பாய்களுக்கு மாத்திரம் அல்ல, மக்களுக்கும் ஆவேசத்தை உண்டுபண்ணி விட்டது. அலிகட் ஜில்லாவில் ஏற் பட்டிருந்த குழப்பத்தையும் அமைதியின்மையையும் அடக்கு வதற்காக 9-ஆவது படையின் மைன்புரிப் பகுதியினர் அனுப்பப் பட்டிருந்தனர். அவர்கள் அலிகடுக்குத் திரும்பி வந்ததும், மக்கள் யாவரும், 'நீங்கள் எப்போது பறங்கியர்களை ஒழிக்கப் போகின்றீர்கள்?', 'சுதந்தரத்துக்காக எப்போது போரில் இறங் கப் போகிறீர்கள்?' என்றெல்லாம் கேள்விகள் கேட்க ஆரம் பித்து விட்டனர். அந்த நிலையில் புரட்சியை ஒத்தி வைக்கச் சிப்பாய்களுக்கு மனமில்லை.

அந்தச் சமயத்தில்தான் அலிகடிலிருந்தும் செய்தி வந்தது: அலிகடில் தங்களுடைய தோழர்கள் சுதந்தரப் போரை ஆரம் பித்து விட்டார்கள் என்பதை அறிந்ததும், சிப்பாய்கள் அதற்கு மேல் தாங்கள் காத்துக்கொண் டிருப்பது வெட்கக் கேடாகும் என்று நினைத்து, அன்றே போரைத் தொடங்கி விட்டார்கள். அலிகட் சகோதரர்களைப்போல் அவர்களும் தங்கள் கைகளில் சிக்கிய வெள்ளையர்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கத் தவற வில்லை. பின்னர் அவ்வீரர்கள் ஆயுதசாலையிலிருந்து ஏராளமான ஆயுதங்களையும் மருந்துகளையும் சேகரித்து ஒட்டகங்களில் ஏற்றிக்கொண்டு 23-ஆம் தேதி டில்லிக்குப் புறப்பட்டார்கள்.

அதே சமயம் இடாவாவிலும் சிப்பாய்களிடையே புரட்சி ஜ்வாலை கிளம்பியது. இடாவா பிரதம மாஜிஸ்திரேட்டும் கலெக் டருமான ஆலன் ஓ ஹ்யூம், மீரத்திலிருந்து வந்த செய்தியைக் கேட்டதும் குறிப்பிட்ட சில சிப்பாய்களையும் உதவி மாஜிஸ்தி

ரேட் டானியலையும் கூட்டிச் சென்று இடாவாவைச் சுற்றி யுள்ள சாலைகளையெல்லாம் காவல் புரிய ஏற்பாடு செய்தான்.

ஒரு பிரிவினர், மீரத்திலிருந்து வந்துகொண் டிருந்த சிப் பாய்களை 19-ஆம் தேதி யன்று சந்தித்தனர். உடனே அந்தச் சிப்பாய்களைச் சரண் புகும்படியும் ஆயுதங்களை யெல்லாம் கீழே வைக்கும்படியும் அதிகாரிகள் உத்தரவிட்டார்கள். அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படிவதுபோல் மீரத் சிப்பாய்கள் பாசாங்கு செய்ததால், வெள்ளை அதிகாரிகளுக்கு அந்தச் சிப்பாய்கள் சம் பந்தப்பட்ட வரையில் யாதொரு விபரீதமும் ஏற்படாது என்ற நம்பிக்கை உண்டாயிற்று. எனினும், மீரத் சிப்பாய்கள் திடீரென்று ஆயுதங்களை யெல்லாம் மீண்டும் கையிலெடுத்துத் தங் களை நிராயுதபாணிகள் ஆக்க வந்த ஆங்கிலேயர்களைச் சுட்டு வீழ்த்தினர்.

இந்தச் செய்தி நகரில் பரவுமுன், சிப்பாய்கள் ஆயுதங்க ளுடன் அருகிலிருந்த ஒரு கோவிலுக்குள் சென்று ஒளிந்து கொண்டுவிட்டார்கள். ஹ்யூம் இதைக் கேள்வியுற்றதும் டானிய லுடன் சில இந்தியச் சிப்பாய்களையும் அழைத்துக்கொண்டு கோயிலைத் தாக்குவதற்காகச் சென்றான். அவன், தாங்கள் அங்கே செல்லுவதற்குள் மீரத் சிப்பாய்களை மக்கள் தாக்கிக் கொன்றிருப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் இருந்தான். எனி னும் அவர்கள் கோவிலுக்கு அருகில் சென்று பார்த்தபோது, ஜனங்கள் அந்தச் சிப்பாய்களுக்கு உணவு முதலியன கொடுத்து அவர்களை உபசரித்துக்கொண்டும், அவர்களுடைய தேசபக்தி யைப் புகழ்ந்துகொண்டும் இருந்தனர்!

பொது மக்கள் அவ்வாறு இருப்பினும் தங்களுடைய சிப் பாய்களும் போலீசாரும் நிச்சயமாகத் தங்கள் பக்கத்தில் உறுதி யுடன் நிற்பார்கள் என்று டானியல் எண்ணினான். உடனே, கோவிலில் உள்ளவர்களைத் தாக்கும்படி உத்தரவிட்டுத் தானும் அதிவேகமாகப் பாய்ந்து முன்சென்றான். ஆனால், அடிமைப் புத்தி படைத்த ஒரே ஒரு சிப்பாயைத் தவிர வேறு எவரும் டானியலைப் பின் தொடர்ந்து செல்லவில்லை. கோவிலுக்குள் இருந்த சிப்பாய்களிடமிருந்து பறந்து வந்த தோட்டாக் கள் டானியலையும் அவனது வாலைப் பிடித்துக்கொண்டு சென்ற துரோகியையும் நொடிப்பொழுதில் விண்ணுலகுக்கு அனுப்பி விட்டன. இதைக் கண்ட ஹ்யூம், சிப்பாய்களை அவர்கள் விருப்பப்படி விட்டு ஓட்டம் பிடித்தான்!

அன்று இடாவாவிலுள்ள படையும் புரட்சியை ஆரம்பிக்கப் போகிறதென்ற வதந்தி எங்கும் பரவியது. ஆயினும் தேச பக்தர்களின் தலைமைக் காரியாலயம் அலிகடில் இருந்தாலும், போரை ஆரம்பிக்க வேண்டுமென்று அங்கிருந்து உத்தரவு கிடைக்காததாலும், இடாவா சிப்பாய்கள் அமைதியாகவே இருந்தனர். புலந்துக்குத் தூது சென்ற தேசபக்தரை வெள்ளை யர்கள் தூக்கில் இட்டார்கள் என்ற செய்தி புரட்சி ஜ்வாலையைத் தூண்டியிராவிடில், இடாவா சிப்பாய்கள் மே மாதம் 31-ஆம்

தேதி வரையிலும் அமைதியாகவே இருந்திருப்பார்கள். ஆனால் அலிகட் சிப்பாய்கள் போருக்கு எழுந்துவிட்டனர் என்ற செய்தி 22-ஆம் தேதி கிடைக்கவே, இடாவா சிப்பாய்களும் 23-ஆம் தேதியன்று போரை ஆரம்பித்துவிட்டார்கள்.

அங்கிருந்த சகல வீரர்களும் தேசீய கோஷங்களுடனும், ஒரு கையில் கத்தி, மற்றொரு கையில் தீவட்டியுடனும் சென்று ஆங்கிலேயர்களின் முகாம்களைத் தாக்கினர்; கஜானாவைக் கொள்ளையடித்தனர்; சிறைகளையும் தகர்த்தனர். அந்த நகரை விட்டு உடனே ஓடிவிடவேண்டும்; இல்லாவிட்டால் ஆங்கிலேயர்கள் யாவரும் பலியிடப்படுவார்கள் என்று தேசபக்தர்கள் விடுத்த எச்சரிக்கையைக் கண்டு நடுங்கி, வெள்ளையர்கள் தங்களுடைய மனைவிகள், குழந்தைகள், உறவினர் எல்லோரையும் அழைத்துக் கொண்டு நாலா பக்கங்களிலும் ஓடினர். சிப்பாய்களின் பெருந் தன்மையால் பலன் அடைய எண்ணிய ஹ்யூம் ஓர் இந்தியப் பெண்ணைப்போல் மாறுவேடம் பூண்டு ஓட்டம் பிடித்தான்!

ஹ்யூம் ஓடியபின், இடாவா சுதந்தரம் பெற்றுவிட்டது என்று பறை சாற்றப்பட்டது. டில்லி செல்லும் முக்கியப் படைப் பிரிவுடன் சேர்ந்துகொள்வதற்காகச் சிப்பாய்களும் புறப் பட்டார்கள். அலிகட், புலந்த், மைன்புரி, இடாவா முதலிய இடங்களில் தேசபக்தர்களின் திட்டம் அதியற்புதமாக நிறை வேறியது. கஜானாக்களைச் சூறையாடுவது, சுதந்தரப் பிரகட னம் செய்வது, தங்கள் காலடியில் வீழ்ந்து கிடக்கும் வெள்ளை யர்களை வாள்களுக்கு இரையாக்காமல் அவர்களுக்கு உயிர்ப் பிச்சை கொடுப்பது, போதிய யுத்த தளவாடங்களையும் உண வுப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு டில்லிக்குப் புறப்படுவது —இவைதாம் தேசபக்தர்களின் திட்டமாகும். தங்களுக்கு விரோதமாக ஒரு காலத்திலும் சுதந்தரப் போரில் இறங்கா தென்று எண்ணிக்கொண் டிருந்த 9-ஆவது பிரிவுப்படை பீறிட் டெழுந்ததைக் கண்டதும், வெள்ளையர்கள் தங்களையும் தங்கள் ஆட்சியையும் யமன் அணுகிவிட்டதாகவே கருதினர்!

அஜ்மீரிலிருந்து சுமார் 12 மைல் தூரத்தில் நாஸிரா பாத் என்ற ஒரு சிறிய நகரம் இருக்கிறது. அங்கே வெள்ளைத் துருப்புகள் அடங்கிய ஒரு பிரிவும், 30-ஆவது இந்தியக் காலாட் படையும், ஆங்கில பீரங்கிப் படையும் இருந்தன. மற்றும், பம்பாய் 1-ஆவது ஈட்டிப் பட்டாளமும், மீரத்திலிருந்து வந் திருந்த 15-ஆவது படையும் அங்கு இருந்தன. பம்பாய் ஈட்டிப் பட்டாளத்தைச் சேர்ந்த சிலரைத் தவிர மற்றச் சிப்பாய்கள் யாவரும் சுதந்தரப் போர் ஆரம்பமாக வேண்டும் என்பதை ஏக மனதாக அங்கீகரித்ததுடன், உற்ற சந்தர்ப்பத்தை எதிர்பார்த் துக்கொண் டிருப்பதென்றும் தீர்மானித்தனர்.

28-ஆம் தேதி அவர்களுக்கு அந்தச் சந்தர்ப்பம் கிடைத் தது. அன்று ஆங்கிலப் பீரங்கிப்படை ஒழுங்கின்றித் தூங்கிக் கொண் டிருந்தது. எனவே குறிப்பிட்ட சமிக்ஞை கிடைத்ததும் 15-ஆவது படை ஆங்கிலேயர்களின் பீரங்கிகளையெல்லாம் ஆக்கிர

மித்துக்கொண்டது. அவற்றை மீண்டும் கைப்பற்றுவதற்காகப் பம்பாய் ஈட்டிப் பட்டாளங்களுடன் ஆங்கில அதிகாரிகள் வந்த போது, பீரங்கிகள் வெகு மும்முரமாக வேலை செய்யவே, ஈட்டிப் பட்டாளங்கள் மேற்கொண்டு முன்வராமல் புத்திசாலித் தனமாகப் பின்வாங்கிவிட்டன!

சிறிது நேரத்தில் ஆங்கில அதிகாரிகள் எல்லாரும் பீரங்கிகளுக்குப் பலியாயினர். நியூபெரி, கர்னல் பென்னி, ஸ்பாட்டிஸ்வுட் முதலிய பலரும் பீரங்கிக் குண்டுகள் பாய்ந்து சின்ன பின்னமாயினர். இனி நகரைக் கைப்பற்ற முடியாதென்று அறிந்த ஆங்கிலேயர்கள் பியாவ் என்ற நகரை நோக்கி ஓடலாயினர்.

தேசபக்தர்கள் நாஸிராபாத்திலிருந்த கஜானாவைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அவர்களால் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தளபதி, டில்லி சக்கரவர்த்தியின் பெயரால் அவர்களுக்குச் சம்மானங்கள் வழங்கினார். வெள்ளையர்களின் வீடுகளெல்லாம் தீ வைக்கப்பட்ட பின், ஆயிரக்கணக்கான சிப்பாய்கள் அடங்கிய அந்தப் பெரும் படை, வீரம் செறியும் கீதங்களைப் பாடிக்கொண்டு ஆயுதபாணியாக டில்லிக்குப் புறப்பட்டது!

## 15

## அரை நாளில் அழிந்த ஆட்சி

ரோஹில்கண்ட் மாகாணத்துக்குப் பரேலி தலைநகராக இருந்து வந்தது. அம் மாகாணத்தை ஆட்சி புரிந்துகொண்டிருந்த ரோஹில்லா, பட்டாணியர்களிடமிருந்து ஆங்கிலேயர்கள் அந்த ராஜ்யத்தை அக்கிரமமாகக் கைப்பற்றியிருந்தனர். தைரியசாலிகளும் திடகாத்திரர்களும் தேச ஆவேசம் கொண்டவர்களுமான அங்குள்ள முஸ்லிம்கள், ஆங்கிலேயர்கள் இழைத்த அந்த அவமதிப்புக்காக வஞ்சம் தீர்க்கச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். தேசபக்தர்களின் பிரசாரமும் அங்கே பரவியிருந்தது. அவ்வமயம் பரேலியில் 8-ஆவது குதிரைப் படை, 18, 68-ஆவது காலாட் படைகள், இந்திய பீரங்கிப் படை முதலியவை வைக்கப்பட்டிருந்தன. பிரிகேடியர் ஸிப்பால்டு அந்தப் படைகளின் பிரதம அதிகாரியாக இருந்தான். ஏப்ரல் மாதம் சில சிப்பாய்கள் தோட்டாக்கள் விஷயமாக ஆங்கில அதிகாரிகளிடம் தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்துக்கொண்டனர். அதிகாரிகளோ, சிப்பாய்களின் அபிப்பிராயத்தை லட்சியம் செய்யாமல், அந்தத் தோட்டாக்களை அங்கீகரிக்கும்படி வற்புறுத்தினார்கள். மறுபடியும் இரண்டொரு தடவைகளில்

சிப்பாய்களிடையே குழப்பமும் அதிருப்தியும் ஏற்பட்டன. அப்போதுகூட ஆங்கில அதிகாரிகள் தங்களுக்கு வரப்போகும் ஆபத்தை அறிந்துகொள்ளவில்லை.

மீரத் எழுச்சியைப்பற்றிய செய்தி, மே மாதம் 14-ஆம் தேதி பரேலிக்கு எட்டியது. உடனே அங்கிருந்த ஆங்கிலேயர்கள் தங்களுடைய குடும்பங்களை நைனிதாலுக்கு அனுப்பிவிட்டுப் போருக்கு ஆயத்தமாகும்படி குதிரைப்படைகளுக்குக் கட்டளையிட்டார்கள். அப்படையினர் இந்தியர்களேயாயினும் அவர்கள் மீது வெள்ளையர்களுக்குப் பூரண நம்பிக்கை இருந்து வந்தது. குதிரைப் படையினர் உள்பட எல்லாச் சிப்பாய்களும் அடங்கிய அணிவகுப்பு 15-ஆம் தேதி நடந்தபோது, விசுவாசம், நன்னடத்தை இவற்றின் அவசியத்தைப்பற்றிப் பிரதம அதிகாரி அவர்களுக்கு உபதேசம் செய்தான். புதிய தோட்டாக்கள் கொடுப்பதை இனி நிறுத்தி விடுவார்களென்றும், ஆகையால் சிப்பாய்கள் பழைய தோட்டாக்களையே உபயோகிக்கலாமென்றும், இனிப் புதிய தோட்டாக்களைத் தான் பார்த்தால் அவைகளைக் காலால் மிதித்துக் குப்பையில் வீசி எறிந்து விடுவதாயும் கூறி, அந்த விஷயமாகச் சிப்பாய்களுக்கு இருந்த பீதியை அகற்ற முயன்றான்.

அவன் அவ்வமயம் தோட்டாக்களைப்பற்றிக் குறிப்பிட வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில், புதிய தோட்டாக்களை இனி இந்தியாவில் எவ்விடத்திலும் உபயோகிக்கக் கூடாதென்று ஏற்கனவே பிரதம தளபதி உத்தரவிட்டிருந்தான். புதிய தோட்டாக்களைச் சிப்பாய்கள் எல்லாரும் உபயோகித்துத்தான் தீர வேண்டும் என்று மே மாதத்துக்கு முன் வீறுப்புடன் வற்புறுத்திய ஆங்கில அரசாங்கம், அவைகளைச் சிப்பாய்கள் உபயோகிக்க வேண்டியதில்லையென மீரத் எழுச்சிக்குப் பின் தானாகவே உத்தரவிட்டதிலிருந்து வெள்ளையர்களின் பீதியையும் பலவீனத்தையும் எல்லாரும் அறிந்துகொண்டனர்.

இந்தியச் சிப்பாய்களின் புரட்சிக்கு ஆட்சேபகரமான தோட்டாக்கள்தாம் காரணம் என்று கூறுவது சுத்தத் தவறு என்பதை, பரேலி நிகழ்ச்சி தெளிவாக்கியது. ஆட்சேபகரமான தோட்டாக்களை இனித் தான் கண்டால் உடைத்து எறிந்து விடுவதாகப் பரேலி சிப்பாய்களின் தலைவன் கூறிய உறுதி மொழிகள் சிப்பாய்களைச் சாந்தப்படுத்தவில்லை. இந்தியாவில் ஆங்கிலேயர்களுக்கு எவ்விதக் கட்டளையும் பிறப்பிக்க உரிமை இல்லையென்று இந்தியர்கள் போருக்கு எழுந்திருக்கையில் மேற்கொண்டு கட்டளையிடுவது அவர்களின் ஆத்திரத்தை இன்னும் அதிகப்படுத்துமே அல்லாது தணிக்குமா? இந்த நிலையில் நல்ல தோட்டாக்களையோ அல்லது கெட்ட தோட்டாக்களையோ பற்றி ஆங்கிலேயர்கள் பிரசங்கம் செய்தது மன்னிக்க முடியாத ஒரு மழுப்பும் தந்திரம் அல்லவா?

இந்திய சுதந்தரக் கொடியைக் கம்பீரமாகப் பிடித்துக் கொள்ளும்படி டில்லி சக்கரவர்த்தியிடமிருந்து ரோஹில்கண்ட் மக்களுக்கு ஓர் அவசர அழைப்பு வந்தது. அதை அவர்கள் அலட்சியம் செய்ய முடியுமா? அந்த அழைப்பின் விவரமாவது: 'சகோ

தரர்களே, டில்லியில் ஆங்கிலேயர்களை எதிர்த்து யுத்தம் நடந்து கொண் டிருக்கிறது. இப்போது அவர்கள் அடைந்த முதல் தோல்வியிலேயே அவர்கள் ஏதோ பத்துத் தடவை தோல்வி யடைந்தவர்கள்போல் சீரழிந்து விட்டனர். இது கடவுள் கிருபையே ஆகும். எண்ணிக்கையற்ற தேசீய வீரர்கள் டில் லியை நோக்கி வந்துகொண் டிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில், நீங்கள் அங்கே சாப்பிட்டுக்கொண் டிருந்தாலும் கைகளை அலம்புவதற்கு இங்கே வந்து சேருங்கள். ராஜாதி ராஜரான டில்லி சக்கரவர்த்தி உங்களுக்கு மகத்தான வரவேற்பளித்து, உங்களுடைய • தொண்டுக்குத் தகுந்த சம்மானங்களும் வழங்கு வார். உங்கள் பீரங்கிகளின் சப்தத்தைக் கேட்க எங்க ளுடைய செவிகளும், உங்களைக் கண்டு களிப்பதற்காக எங்க ளுடைய கண்களும் ஆர்வத்துடன் துடித்துக்கொண் டிருக்கின் றன. வாருங்கள், உடனே வந்து சேருங்கள்! சகோதரர்களே, வசந்த காலத்தில் அல்லாமல் ரோஜாச் செடி மலருமா? பால் இல்லாமல் குழந்தை ஜீவிக்குமா?'

இத்தகைய அழைப்பைத் தேச பக்தர்கள் நிராகரிக்க முடியுமா? இந்த அழைப்பு பரேலிக்கு வந்துகொண் டிருக்கை யிலேயே, சுதந்தர ரோஹில்லாவின் கடைசி அதிபராக இருந்த ஹபீஸ் ரஹ்மத்தினுடைய சந்ததியான கான் பகதூர்கான் ரகசிய ஸ்தாபன வலைகளை வீசி வந்தார். ஆங்கிலேயர்களிட மிருந்து கான் பகதூர் கான், ஹபீஸ் ரஹ்மத்தின் சந்ததி என்ற ஹோதாவில் ஓர் உதவித் தொகையும், ஆங்கிலேயர்களின் கீழ் ஒரு நீதிபதி என்ற ஹோதாவில் மற்ருேர் உதவித் தொகையும் பெற்று வந்தார். அவரை 'ஆங்கிலேயரின் அபிமான புத்திரர்' என்று அந்த மாகாணத்தில் உள்ளோர் கருதி வந்தனர். ஆங்கில அரசாங்கம் அவர்மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருந்

ஆனல் அதே சமயம் அவர், பரேலி ரகசிய ஸ்தாபனங் களின் உயிர்நாடியாக இருந்து வந்தார்! டில்லியிலிருந்து வந்த அழைப்பில், பரேலி தேச பக்தர்கள் உடனே புறப்பட்டுவர வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தது. எனினும் அவர்கள் முதலில் வகுத்திருந்த திட்டத்திற்கு இணங்க 31-ஆம் தேதி வரையில் காத்திருக்கத் தீர்மானித்தனர். எல்லாச் சிப்பாய்க ளும் ஆங்கில அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து தங்கள் வேலைகளைச் சிறிதும் வழுவின்றிச் செய்து வந்தனர். சில நாட்களுக்கு முன் மீரத்திலிருந்து வந்த நூறு சிப்பாய்கள் ரகசியமாகப் பரேலி சிப்பாய்களுடன் தங்கியிருந்து, மீரத்தில் நிகழ்ந்த சம்பவங்களை விவரித்துக் கூறி, அவர்களிடையே கொதிப்பை உண்டாக்கி யிருந்தனர்.

அப்படியிருந்தும் பரேலி சிப்பாய்கள் வெளித் தோற்றத் துக்கு அமைதியாகவே இருந்தார்கள். வெள்ளையர்களின் குடும் பங்களை யெல்லாம் மீண்டும் திருப்பி அழைத்து வரும்படியும் சுபேதார்கள் ஆங்கில அதிகாரிகளைக் கேட்டுக்கொண்டனர்! அந்தக் 'கோரிக்கை'யை நிறைவேற்றுமுன், ஒரு வதந்தி வெள்ளை

யர்களின் செவிகளுக்கு எட்டியது. அதாவது 29-ஆம் தேதி மத்தியான்னம் இரண்டு மணிக்கு ஆங்கிலேயர்களை யெல்லாம் படுகொலை செய்வதாகச் சிப்பாய்கள் காலையில் நதியில் ஸ்நானம் செய்தபோது பிரதிக்ஞை எடுத்துக்கொண்டனர் என்பதே அந்த வதந்தியாகும்.

உடனே ஆங்கிலேயர்கள் தங்களிடம் விசுவாசமுள்ள குதிரைப் படையைத் தயாரிக்கும்படி செய்தனர். குதிரைப்படையினரும் எவ்வித முணுமுணுப்புமின்றி வெள்ளையர்கள் சொன்னபடி அணிவகுத்துத் தயாராக இருந்தனர். அன்றைத் தினம் கழிந்தது. ஆனால் சிப்பாய்கள் புரட்சி எதுவும் செய்யவில்லை. அந்த வதந்தி உண்மையல்ல எனினும், குதிரைப் படைமீது தாங்கள் நம்பிக்கை வைக்கலாம் என்பது தற்செயலாக ருஜுவானதுபற்றி ஆங்கிலேயர்கள் சந்தோஷமடைந்து இரவு நிம்மதியாகத் தங்கள் தங்கள் விடுதிகளுக்குப் படுக்கச் சென்றார்கள்.

அதே சமயம் அவர்களுக்குச் சந்தேகத்துக்கு இடமில்லாத நிச்சயமான செய்தி ஒன்று கிடைத்தது. குதிரைப் படையினர் தங்களுடைய தோழர்களுக்கு விரோதமாகவோ அல்லது ஆங்கிலேயர்களுக்கு உதவியாகவோ, ஒருபோதும் வாள் எடுப்பதில்லை என்று வெகு காலத்துக்கு முன்னரே பிரமாணம் செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதே அந்தச் செய்தியாகும். இந்த நிலைமையில் வெள்ளையர்கள் எந்தச் செய்தியை நம்புவது என்று தெரியாமல் விழித்தனர். 29-ஆம் தேதியும், 30-ஆம் தேதியும் யாதோர் அசம்பாவிதமும் இன்றிக் கழிந்தன. 30-ஆம் தேதியன்று சிப்பாய்கள் ஆங்கிலேயர்களிடம் மிகுந்த அன்புடன் நடந்துகொண்டதால், தங்களுக்கு நேரவிருந்த ஆபத்துத் தீர்ந்துவிட்டதென்றும், இனிப் பீதியடையக் காரணம் எதுவும் இல்லை என்றும் வெள்ளையர்கள் ஆறுதலும் திருப்தியும் அடைந்தனர்.

மே மாதம் 31-ஆம் தேதி உதயமாயிற்று. விடியற்காலம் காப்டன் பிரௌன்லோவின் பங்களா பற்றி எரிந்துகொண்டிருந்தது. அப்போதும் ஆங்கிலேயர்கள் அதை ஓர் அற்ப சம்பவமென்று நினைத்து, திகிலடையக் காரணம் இல்லையென்று வாளா இருந்தனர். அன்று ஞாயிற்றுக்கிழமை. அன்றைய ராணுவ அணிவகுப்பு எவ்விதத் தகராறுமின்றி அமைதியாக நடந்தேறியது. சிப்பாய்கள் வழக்கமாக இருப்பதைக் காட்டிலும் அன்று அதிக அமைதியுடன் இருந்தது, ஆங்கில அதிகாரிகளின் அற்ப பீதியையும் அகற்றிவிட்டது. வெள்ளையர்கள் வழக்கம்போல் தங்களுடைய கோவில்களில் பிரார்த்தனை செய்தனர். புரட்சி ஏற்படலாம் என்று அறிகுறி சிறிதுகூட ஓரிடத்திலாவது தென்படவில்லை.

மணி பதினொன்று அடித்தது. அதே சமயம் சிப்பாய்களின் விடுதியிலிருந்து ஒரு துப்பாக்கி வேட்டுக் கிளம்பியது. அதன் எதிரொலி அடங்குவதற்குள், துப்பாக்கிகளின் ஓசையும் வீரர்களின் கோஷங்களும் வானைப் பிளந்தன. பரேலி எழுச்சித் திட்டம் மிகவும் ஜாக்கிரதையாக வகுக்கப்பட்டிருந்ததால்,

எந்த ஆங்கிலேயரை யார் கொல்லுவது என்பதுகூட நிர்ணய மாகியிருந்தது. மணி பதினொன்று அடித்ததும் 68-ஆவது படை யினர், தங்கள் முகாம்களுக்கு அருகிலுள்ள ஆங்கிலேயர்களை யெல்லாம் தாக்க ஆரம்பித்தனர். அந்தச் சிப்பாய்கள் சிறு சிறு கோஷ்டியாகப் பிரிந்து சென்று வெள்ளையர்களின் பங்க ளாக்களுக்கும் வீடுகளுக்கும் தீ வைத்தனர்.

அந்த அமளியையும் சப்தத்தையும் கேட்ட வெள்ளையர்கள் நடுநடுங்கிக் குதிரைப் படைகள் இருக்கும் இடத்தை நோக்கி ஓடினர். சிவில் ராணுவ அதிகாரிகள் யாவரும் அந்தப் படை யினரிடம் வந்து அடைக்கலம் புகத் தீர்மானித்தனர். அவர்கள் அங்கே வந்ததும், புரட்சிக்காரர்களின்மீது படை யெடுக்கும்படி குதிரைப் படையினருக்குக் கட்டளை இட்டார்கள். அப்படையின் தலைவரான முகமது ஷாபி ஒரு புரட்சிக்காரர் என்பது ஆங்கிலே யர்களுக்கு எப்படித் தெரியும்! எனவே குதிரைப் படைத் தலைவர், புரட்சிக்காரர்கள் பக்கம் சென்று மற்றவர்களையும் தம்மைப் பின் தொடர்ந்து வரும்படி கட்டளை இட்டார். அவர்கள், 'மதத் துக்காக உயிர்த் தியாகம் செய்யுங்கள்! நம் தேசியக் கொடி நம்மை அழைக்கின்றது' என்று கோஷம் செய்துகொண்டு தலை வரைப் பின் தொடர்ந்தனர். வெள்ளையர்கள் அங்கே மீதி யிருந்த சிலரை ஒன்று சேர்த்துக்கொண்டு ராணுவ மைதானத் துக்கு அருகில் வர முயன்றனர். ஆனால் தேசிய வீரர்களுடைய உக்கிரமான தாக்குதலின் முன் அவர்களால் நிற்க முடியவில்லை. எனவே வேறு வழியின்றி நைனிதாலை நோக்கி ஓட்டம் பிடித்தார் கள்.

பரேலியில் சுதந்தரப் போர் ஆரம்பமானதுமே பிரி கேடியர் ஸிப்பால்டு மாண்டான். மற்றும் காப்டன் கர்பி, லெப்டி னன்ட் பிரேஸர், சார்ஜன்ட் வால்டன், கர்னல் ட்ரூப், காப் டன் ராபர்ட்ஸன் முதலிய பல அதிகாரிகளும் போரில் பலி யாயினர். முப்பத்திரண்டு அதிகாரிகள் மாத்திரமே உயிர்தப்பி நைனிதாலுக்குச் செல்ல முடிந்தது. இவ்வாறாகப் பரேலியில் ஆங்கிலேயரின் அதிகாரம் ஆறே மணி நேரத்தில் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது!

அங்கே ஆங்கிலேயர் கொடி இறங்கி, தேசியக் கொடி ஏறிய பின், பீரங்கிப் படையின் சுபேதாரான பகத் கான் பரேலி யிலுள்ள சகல படைகளுக்கும் தளபதியாக இருக்க வேண் டுமென்ற கோரிக்கையை ஏற்றுக்கொண்டார். அவர் மிகுந்த நாவன்மை படைத்தவர்; சிறந்த தேச பக்தர். விடுதலை பெற்ற பின் சிப்பாய்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும், புதிதாக அமைக்கப்பெற்றுள்ள சுயராஜ்யத்தை நிலைநிறுத்த அவர்கள் செய்ய வேண்டிய கடமைகள் என்ன என்பதையும் அவர் உருக்கமாகவும் உற்சாகத்துடனும் எடுத் துரைத்தார்.

பிறகு பகத் கான் ஏற்கனவே ஆங்கில தளபதிக்குச் சொந்த மாக இருந்த வண்டியில் ஏறிக்கொண்டு நகரைச் சுற்றிப் பார்வை யிட்டார். புதிதாக நியமிக்கப்பட்ட மற்ற இந்திய

ராணுவ அதிகாரிகளும் அவருக்குப்பின் சென்றனர். சக்கர வர்த்தியின் சுபேதார் என்ற முறையில் கான் பகதூர்கான் ரோஹில்கண்ட் அதிபராகக் கரகோஷத்துடனும் சந்தோஷ ஆரவாரத்துடனும் அங்கீகரிக்கப்பட்டார்.

பரேலியில் இருந்த சகல ஆங்கிலேயர்களின் வீடுகளும் சூறை யாடப்பட்டுத் தீக்கு இரையானபின் சிறைப்பட்டிருந்த ஆறு வெள்ளையர்களைத் தம் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தும் படி கான் பகதூர்கான் கட்டளை இட்டார். ஆங்கில ஆட்சியில் அவர் நீதிபதியாக இருந்தவர். சட்ட நுட்பங்களை நன்கு அறிந்தவர். எனவே அந்தக் குற்றவாளிகளை விசாரிப்பதற்காக அவர் நீதி சபை ஒன்றை நியமித்தார். குற்றவாளிகளுள் வடமேற்கு மாகாண கவர்னரின் மாப்பிள்ளை, பரேலி சர்க்கார் கல்லூரித் தலைவர், பரேலி ஜில்லா நீதிபதி முதலியோரும் இருந்தனர்.

இரண்டு தினங்களுக்கு முன் கான் பகதூர்கான், நண்பர் என்ற முறையில் ஆங்கிலேயர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். ஆனால் இன்றோ ஒருவர் சிம்மாசனத்திலும் மற்றவர் கைதிக் கூண்டிலும் இருந்தனர். ஜூரிகளும் வழக்கம்போல் பிரமாணம் எடுத்துக்கொண்டு தங்கள் ஆசனங் களில் அமர்ந்தார்கள். இந்தியாவுக்குத் துரோகம் செய்த குற்றத்துக்காக ஆறு ஆங்கிலேயர்களுக்கும் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. ரோஹில்கண்ட் கமிஷனர் உயிர் தப்பி ஓடி விட்டான் அல்லவா? அவன் தலைமறைவாக இருந்து வருவ தாயும், அவனை உயிருடனோ அல்லது அவனது பிரேதத்தையோ கொண்டு வருவோருக்கு ஆயிரம் ரூபாய் வெகுமதி அளிக்கப்படும் என்றும் கான் பகதூர்கான் ஒரு பிரகடனம் விடுத்தார்.

ஆங்கிலேயரின் ரத்தத்தால் தமது அதிகாரத்தை உறுதிப் படுத்திக்கொண்டபின், அவர் ரோஹில்கண்ட் விடுதலை பெற்று விட்டதென்று டில்லிக்குச் செய்தி அனுப்பினார். ரோஹில்கண்டில் அன்று காலை பதினொரு மணிக்குச் சுதந்தரப் போர் ஆரம்பமா யிற்று. ரோஹில்கண்ட் விடுதலை பெற்றதென்ற செய்தியுடன் ஒரு தூதர் சூரிய அஸ்தமனத்துக்கு முன்பே டில்லிக்குப் புறப் பட்டுவிட்டார்!

ரோஹில்கண்ட் மாகாணம் முழுவதும் விடுதலை பெற்று விட்டது என்ற அறிக்கை வெறும் பகட்டல்ல. பரேலியில் பீரங் கிப் படைகள் ஆங்கில ஆதிக்கத்தைத் தகர்த்து வருகையிலேயே, ஷாஜஹான்புரியில் வெள்ளையரின் குருதி வெள்ளம் ஓடத் தொடங்கிவிட்டது. ஷாஜஹான்புரி, பரேலியிலிருந்து சுமார் நாற்பத்தேழு மைல் தூரத்தில் இருக்கிறது. அது 28-ஆவது காலாட்படையின் தலைமை ஸ்தானமாக இருந்தது. மீரத் எழுச்சி பற்றிய செய்தி 15-ஆம் தேதி ஷாஜஹான்புரிக்கு எட்டியுங்கூட அங்கிருந்த சிப்பாய்கள் தங்கள் உணர்ச்சிப் பெருக்கை வெளி யில் காட்டிக்கொள்ளாமல் அமைதியாக இருந்தனர்.

31-ஆம் தேதி உதயமாயிற்று. எங்கும் அமைதியும் ஆனந்தமும் தாண்டவமாடின. அன்று ஞாயிற்றுக்கிழமை யான

தால் வெள்ளையர்கள் எல்லோரும் கிறிஸ்துவ ஆலயத்தில் இருந்தனர். இந்தியாவில் தங்களுடைய கொடுங்கோல் ஆட்சி நிரந்தரமாக இருந்துவர வேண்டுமென்ற அவர்களுடைய பிரார்த்தனை முடியுமுன், சிப்பாய்கள் கோவிலுக்கு ஓடினார்கள். வெளியே உண்டான பெரும் அமளிக்குக் காரணத்தை அறிந்து கொள்வதற்காகக் கோவில் பாதிரி வெளியில் வரவே, ஒரு வீரரின் வாள் அதன் வேலையைச் செய்து முடித்தது. அந்த நகர மாஜிஸ்திரேட்டான ரிக்கெட்ஸ், லபாடூர் முதலியோரும் சிப்பாய்களின் வாட்களுக்குப் பலியாயினர்.

இதன் மத்தியில் சிப்பாய்கள் அடங்கிய மற்றொரு கோஷ்டியினர் ஆங்கிலேயர்கள் வசிக்கும் இடத்துக்குச் சென்று தாக்க ஆரம்பித்தனர். அப்போது நகர உதவி மாஜிஸ்திரேட் மாண்டான். டாக்டர் பௌலிங் என்பவன் சிப்பாய்களை நோக்கிச் சில வார்த்தைகள் கூற முற்பட்டான். அவன் பேசுவதைச் சிப்பாய்களும் செவி கொடுத்துக் கேட்கலாயினர். ஆனால் துரதிருஷ்டவசமாக அவன், சிப்பாய்களின் நடவடிக்கை ‘துரோகம்’ என்று குறிப்பிடவே, ஒரு தோட்டா பறந்து வந்து அவன்மீது பாய்ந்தது. அவன் அங்கேயே வீழ்ந்து மாண்டான்.

சில வெள்ளையர்கள், தங்களுடைய இந்திய சமையற்காரர்கள், வேலையாட்கள் முதலியோருடைய உதவியால் தங்களுடைய பெண்டு பிள்ளைகளை அழைத்துக்கொண்டு சமீபத்தில் இருந்த ஒரு ராஜாவின் வீட்டுக்கு ஓடினார்கள். எனினும் அவர்களுக்கு எவ்வித உதவியும் செய்யக்கூடிய நிலைமையில் தாம் இல்லையென அந்த ராஜா கையை விரித்துவிட்டார். பிறகு வேறு வழியின்றி அவர்கள் மாமடி என்ற இடத்தை நோக்கி ஓடலாயினர். இவ்வாறாக 31-ஆம் தேதி மாலைக்குள் ஷாஜஹான்புரியும் விடுதலை அடைந்தது.

பரேலிக்கு வடமேற்கே சுமார் நாற்பத்தெட்டு மைல் தூரத்தில் முராதாபாத் என்ற ஒரு நகரம் இருக்கிறது. அங்கே 29-ஆவது காலாட்படையும் சில பீரங்கிப் படைகளும் வைக்கப்பட்டிருந்தன. மீரத் எழுச்சிபற்றிய செய்தி கிடைத்ததும், முராதாபாத் படைகளின் விசுவாசத்தைப் பரிசோதனை செய்து பார்க்க ஆங்கிலேயர்களுக்குச் சிறந்த சந்தர்ப்பம் கிடைத்தது. மீரத் சிப்பாய்களில் சிலர் முராதாபாத்திற்கு அருகில் முகாம் போட்டிருக்கின்றனர் என்ற செய்தி 18-ஆம் தேதி ஆங்கில அதிகாரிகளுக்குக் கிடைத்தது. எனவே இரவில் அவர்களைத் தாக்கும்படி 29-ஆவது பிரிவுத் துருப்புகளுக்கு அதிகாரிகள் உத்தரவிட்டனர். அந்த உத்தரவுக்கு இணங்க முராதாபாத் சிப்பாய்கள் திடீரென்று சென்று, உக்கிரமாகத் தாக்கியுங்கூட ஒருவரைத் தவிர மற்றெல்லா மீரத் சிப்பாய்களும் தப்பி ஓடிவிட்டார்கள்.

அன்று நள்ளிருள் ஆதலால் மீரத் சிப்பாய்கள் தப்பியோட முடிந்ததென்று ஆங்கில அதிகாரிகள் கருதினர். ஆனால் உண்மை பின்னால்தான் வெளியாயிற்று. முராதாபாத் சிப்பாய்கள் ஆங்கில அதிகாரிகளைத் திருப்தி செய்யவே வெறும் பகட்டுத் தாக்குதலில்

ஈடுபட்டார்கள். அவர்கள் உண்மையிலேயே தாக்கியிருந்தால், மீரத் சிப்பாய்களில் ஒருவர்கூட உயிர் தப்பியிருக்க முடியாது. மற்றும் தப்பி ஓடிவிட்டதாக ஆங்கிலேயர்கள் கருதிய மீரத் சிப்பாய்களில் பலர் அன்று உண்மையில் முராதாபாத் சிப்பாய்களின் வீடுகளிலேயே தூங்கிக்கொண் டிருந்தார்கள்! எனினும் இரவில் முராதாபாத் சிப்பாய்கள் வெகு மும்முரமாகச் சுட்டதால், வெள்ளையர்களுக்கு அவர்கள்மீது பூரண நம்பிக்கை உண்டாயிற்று!

31-ஆம் தேதி காலையில் எல்லாச் சிப்பாய்களும் அணிவகுப்பு மைதானத்துக்கு வர ஆரம்பித்தனர். தங்களுடைய அநுமதியின்றி அவர்கள் மைதானத்துக்கு ஏன் வந்தார்கள் என்று ஆங்கில அதிகாரிகள் கேட்கப்போகும் தறுவாயில், சிப்பாய்கள் இவ்வாறு கர்ஜிக்கலாயினர்: 'கம்பெனி ஆட்சி ஒழிந்துவிட்டது. ஆகையால் நீங்கள் இந்த நாட்டை விட்டு உடனே ஓடிவிடவேண்டும். இல்லாவிட்டால் நீங்கள் எல்லாரும் பலியாகும்படி நேரும். நீங்கள் உடனே போக முடியாவிடில், மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு புறப்பட இரண்டு மணி நேரம் அவகாசம் கொடுக்கிறோம். அதற்குமேல் நீங்கள் ஒரு நிமிஷமும் இந் நகரில் இருக்கக்கூடாது!'

இனி வெள்ளையர்களின் கட்டளைகளுக்குத் தாங்கள் கீழ்ப்படிய முடியாதென்று போலீசாரும் அறிவித்துவிட்டனர். சிப்பாய்களுக்கும் போலீசாருக்கும் மக்கள் முழு ஆதரவளித்து அவர்களுக்குப் பக்க பலமாக நின்றனர். சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி அதிகாரிகளுக்கு எச்சரிக்கை கிடைக்கவே, நீதிபதி, கலெக்டர், மாஜிஸ்திரேட், ஸர்ஜன் முதலிய அதிகாரிகளும் மற்ற வெள்ளையர்களும் தாமதமின்றித் தங்கள் குடும்பங்களுடன் முராதாபாத்திலிருந்து ஓட முற்பட்டார்கள். தேச பக்தர்கள் குறிப்பிட்ட கால கெடுவுக்குப் பின் முராதாபாத்தில் இருந்த வெள்ளையர்கள் எல்லோரும் கொல்லப்பட்டனர். கமிஷனர் பவெலும் மற்றவர்களும் முஸ்லிம்களாக மாறித் தங்களைக் காப்பாற்றிக்கொண்டனர். பின்னல் சிப்பாய்கள் சர்க்கார்க் கஜானாவையும் சொத்துக்களையும் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். இவ்விதமாகச் சூரியன் மறைவதற்குள் முராதாபாத்திலும் தேசீயக் கொடி பறக்கலாயிற்று.

பரேலிக்கும் ஷாஜஹான்புரிக்கும் மத்தியில் பதாவுன் என்ற ஒரு நகரம் உள்ளது. எட்வர்ட்ஸ் அந்த ஜில்லாவில் கலெக்டராகவும் மாஜிஸ்திரேட்டாகவும் இருந்தான். ரோஹில்கண்டில் ஆங்கில அரசாங்கம் முளைத்ததிலிருந்து, பழைய ஜமீன்தரர்கள் எல்லாரும் தாங்க முடியாத வரிப் பளுவுக்கும், மற்றும் பலவிதக் கொடுமைகளுக்கும் உள்ளாக நேர்ந்தது. எனவே ஆங்கில ஆட்சியின்மீது ஜமீன்தார்களுக்கும் குடிகளுக்கும் மிகுந்த வெறுப்பும் அதிருப்தியும் ஏற்பட்டிருந்தன. பதாவுனில் நிலவரி சகிக்க முடியாததாக இருந்ததால் அங்கிருந்து ஆங்கிலேயர்களை விரட்ட எப்போது சந்தர்ப்பம் கிடைக்குமென்று பதாவுன் ஜனங்கள் காத்துக்கொண் டிருக்கிறார்கள் என்பதை எட்வர்ட்

ஸூம் அறிந்திருந்தான். நெருக்கடி ஏதாவது ஏற்பட்டால் அதைச் சமாளிப்பதற்காக அவன் பரேலியிலிருந்து இராணுவ உதவியை நாடியிருந்தான். ஆனால் பரேலியோ பதாவுனுக்கு உதவியாகப் படையை அனுப்பக்கூடிய நிலையில் இல்லை!

எனினும் ஜூன் மாதம் 1-ஆம் தேதி ஐரோப்பிய அதிகாரிகளின் கீழ், துருப்புகள் அனுப்பப்படும் என்று பரேலியிலிருந்து அவனுக்கு ஒரு செய்தி வந்தது. அந்தச் செய்தி எட்வர்ட்ஸூக்குத் திருப்தியைக் கொடுத்தது. அவனும் ஜூன் மாதம் 1-ஆம் தேதி பரேலியிலிருந்து வரும் வழியையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். கடைசியில் பதாவுனை நோக்கி அரசாங்க வேலையாள் ஒருவன் குதிரைமீது வேகமாக வருவதைக் கண்டதும் அவனுக்கு நம்பிக்கை உண்டாயிற்று. தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் உதவிக்கு முன்னோடியாக அந்த ஆள் வருவதாக நினைத்த எட்வர்ட்ஸ் அவனை அவசரம் அவசரமாக விசாரித்தான்.

ஆனால் அந்த ஆள் அளித்த பதில் என்ன? பரேலிக்கு ஆபத்து வந்துவிட்டது என்பதும், அங்கே ஆங்கிலேயர் ஆட்சி முடிந்துவிட்டது என்பதுந்தான்! பரேலியிலிருந்து உதவியை எதிர்பார்த்துக்கொண்டிருந்த எட்வர்ட்ஸூக்கு, அது சுதந்தரம் பெற்றுவிட்டது என்று செய்தி இடி இடித்ததுபோல் இருந்தது. அப்போது பதாவுனிலுள்ள கஜானாவை இந்தியச் சிப்பாய்களே காவல் புரிந்துகொண்டிருந்தனர். 'பரேலி சுயேச்சை பெற்றுவிட்டது; பதாவுன் நிலைமை என்ன?' என்று எட்வர்ட்ஸ் மிகக் கலக்கத்துடன் அந்தச் சிப்பாய்களின் தலைவனைக் கேட்கவே, சிப்பாய்கள் மிகவும் விசுவாசம் உள்ளவர்கள் என்றும், அவர்களைப்பற்றிக் கவலை வேண்டாம் என்றும் தலைவன் பதிலளித்தான்.

ஆனால் அன்று மாலை பதாவுனிலும் புரட்சித் தீப் பற்றிக்கொண்டது. கஜானாவைக் காவல் புரிந்துகொண்டிருந்த சிப்பாய்களும் போலீசாரும் பிரமுகர்களும், அங்கே ஆங்கிலேயர் ஆட்சி முடிந்துவிட்டதென்று பறைசாற்றினர். இவ்வாறாக, அந்த ஜில்லா மக்கள் யாவரும் கான் பகதூர்கானுடைய ஆட்சியின் கீழ் இருக்க மனப்பூர்வமாக இசைந்தனர்.

பின்னால் சிப்பாய்கள் கஜானாவில் இருந்த திரவியங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு டில்லிக்குப் புறப்பட்டனர். பதாவுனில் இருந்த ஆங்கில அதிகாரிகளோ இரவில் காடுகளை நோக்கி ஓடலாயினர். அவர்கள் பல நாட்கள் வரையில் உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றி, குதிரை லாயங்களிலும் பாழடைந்த வீடுகளிலும் ஒளிந்துகொண்டிருந்தனர். பல வெள்ளையர்கள் தங்கள் உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ள, அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தனர். அவர்களில் சிலர் கொல்லப்பட்டனர்; சிலர் கஷ்டம் தாங்காமல் மாண்டனர்; மற்றும் சிலர் அன்பும் இரக்கமும் உள்ள 'சுதேசி'களால் காப்பாற்றப்பட்டனர்.

மேலே குறிப்பிட்டவாறு, ரோஹில்கண்ட் முழுவதும் ஒரே நாளில் பொங்கி எழுந்தது. பரேலி, ஷாஜஹான்புரி, முராதாபாத், பதாவுன் முதலிய மற்ற நகரங்களிலும் தேசபக்தர்கள் பிரகடனங்கள் விடுத்து, சில மணி நேரத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் அடியோடு மறைந்து ஒழியும்படி செய்துவிட்டனர். ஆங்கிலேயரின் அதிகாரம் ஒழிந்து அந்த ஸ்தானத்தில் சுயாட்சி இடம் பெற்றது. பிரிட்டிஷ் கொடிகள் கிழித்தெறியப்பட்டு, அரசாங்க ஸ்தலங்கள், போலீஸ் ஸ்டேஷன்கள், காரியாலயங்கள் முதலிய பல இடங்களிலும் தேசியக் கொடிகளான பச்சைக் கொடிகள் கம்பீரமாகப் பறந்தன.

இந்தியா சிம்மாசனம் ஏறியது; இங்கிலாந்து கைதிக் கூண்டில் நிறுத்தப்பட்டது! சில மணி நேரத்தில் ஒரு மாகாணம் முழுவதும் அத்தகைய ஆச்சரியமான மாறுதல் ஏற்பட்டுவிட்டது! இதில் ஒரு விசேஷம் என்னவெனில், ரோஹில்கண்ட் முழுதும் விடுதலை பெற ஓர் இந்தியரின் ரத்தங்கூடச் சிந்தப்படாதது தான்! 'ரோஹில்கண்ட் அடிமையாக இருக்கிறது' என்பதற்குப் பதிலாக, 'ரோஹில்கண்ட் சுதந்தரத்துடன் இருக்கிறது' என்று ஜனங்கள் சொன்னார்கள். அவ்வளவுதான்! அந்த மாகாணம் விடுதலை பெற்றுவிட்டது!

சிப்பாய்கள், போலீசார், ஜனங்கள் எல்லாரும் ஒரே நாளில் ஏக காலத்தில் எழுந்தார்கள். அந்த அந்த நகரங்களில் இருந்த சில அதிகாரிகளை விரட்டினார்கள். ரோஹில்கண்ட் விடுதலை பெற இதைக் காட்டிலும் அவர்கள் வேறு எவ்விதச் சிரமமும் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படவில்லை! ரகசிய ஸ்தாபனங்கள் பலமான அஸ்திவாரத்தின்மீது அமைக்கப்பட்டிருந்தன. அவற்றால் வகுக்கப்பட்டிருந்த திட்டம் அதி சீக்கிரமாகவும் திறமையுடனும் நிறைவேற்றப்பட்டது. ஆதலால் அந்த மாகாணத்தில் அரை நாளில் ஆங்கில ஆட்சி ஒழிந்து, கான் பகதூர்கானின் ஆட்சி, அதாவது சுயாட்சி ஏற்பட்டுவிட்டது!

பிறகு எல்லாச் சிப்பாய்களும், பரேலி பீரங்கிப் படையின் தலைவரான பகத் கானின் தலைமையில் டில்லிக்குப் புறப்பட்டார்கள். ரோஹில்கண்ட் மாகாணத்திலும் தலை நகரிலும் அமைதிக்கும் ஒழுங்குக்கும் இடையூறு ஏற்படாமல் இருப்பதற்காகக் கான் பகதூர்கான் ஒரு புதிய படையை உருவாக்கினார். சிவில் இலாகாக்களெல்லாம் சீர்படுத்தப்பட்டன. ஏற்கனவே அரசாங்கத்தில் இருந்த எல்லா அதிகாரிகளும் ஊழியர்களும் அவரவர் வேலையில் ஸ்திரமாக்கப்பட்டார்கள். வெள்ளையர்கள் இருந்துவந்த முக்கியப் பதவிகளில் எல்லாம் இந்தியர்கள் நியமிக்கப்பட்டார்கள். சக்கரவர்த்தியின் பெயரால் நிலவரியும் விதிக்கப்பட்டது. நீதி மன்றங்களில் முன்னிருந்த இந்திய நீதிபதிகளே மீண்டும் இடம் பெற்றார்கள். முன்னர் ஆங்கிலேயர்கள் முக்கிய அதிகாரிகளாக இருந்தனர்; இப்போது இந்திய அதிகாரிகள் முக்கிய அதிகாரிகள் ஆயினர்.

'இதைத் தவிர, சுதந்தரப் போர் காரணமாகச் சர்க்கார் இலாகா வேலை எதுவும் நின்றுவிடவில்லை. தமது மாகாணத்தில் தாம் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளை விவரித்து, கான் பகதூர்கான் சக்கரவர்த்திக்குத் தமது கையாலேயே ஓர் அறிக்கை எழுதி அனுப்பினுர். ரோஹில்கண்டிலுள்ள எல்லா இடங்களிலும் கீழ்வரும் பிரகடனம் ஒட்டப்பட்டது: 'இந்திய மகாஜனங்களே! வெகு காலமாக நாம் எதிர்பார்த்து வந்த சுய ராஜ்யம் கிடைத்துவிட்டது. இதை நீங்கள் ஏற்றுக்கொள்ளப் போகிறீர்களா? அல்லது நிராகரிக்கப்போகிறீர்களா? இந்த மகத்தான சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக்கொள்ளப் போகிறீர்களா அல்லது நழுவ விட்டுவிடப் போகிறீர்களா?

'இந்து, முஸ்லிம் சகோதரர்களே! ஆங்கிலேயர்களை இந்தியாவில் இருக்க அநுமதிப்போமாயின், அவர்கள் உங்களையெல்லாம் படுகொலை செய்துவிட்டு, உங்களுடைய மதத்தையும் அழித்துவிடுவார்கள். இந்திய மக்கள் இதுவரை ஆங்கிலேயர்களால் ஏமாற்றப்பட்டு, தங்களுடைய கத்திகளினுலேயே தங்கள் கழுத்துக்களை வெட்டிக்கொண்டு வந்திருக்கிருர்கள். வெள்ளையர்கள் அவர்களுடைய பழைய வஞ்சக வேலையை மீண்டும் ஆரம்பிப்பார்கள். முஸ்லிம்களுக்கு விரோதமாக ஹிந்துக்களையும், ஹிந்துக்களுக்கு விரோதமாக முஸ்லிம்களையும் தூண்டிவிடுவார்கள். ஆனுல், சகோதரர்களே, அவர்களுடைய வலையில் விழாதீர்கள்.

'ஆங்கிலேயர் தங்களுடைய வாக்குறுதிகளை ஒருபோதும் காப்பாற்ற மாட்டார்கள் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. தந்திரம், சூழ்ச்சி, வஞ்சகம், பிறரை ஏமாற்றுவது போன்ற 'கலை'களில் அவர்கள் கை தேர்ந்தவர்கள். தங்கள் சொந்த மதத்தைத் தவிர, உலகிலுள்ள மற்ற எல்லா மதங்களையும் வேருடன் பறித்து எறிய அவர்கள் எப்போதும் முயன்று வருகிருர்கள். 'சுவீகாரக் குழந்தைகளின் உரிமைகளை அவர்கள் புறக்கணித்து விடவில்லையா? நம் மன்னர்களின் ராஜ்யங்களை யெல்லாம் அவர்கள் விழுங்கிவிடவில்லையா? நாகபுரி ராஜ்யத்தை அபகரித்தவர்கள் யார்? லக்ஷ்மணபுரி ராஜ்யத்தைக் கைப்பற்றியவர்கள் யார்? ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் காலால் மிதித்து நசுக்கியவர்கள் யார்?

'முஸ்லிம்களே, நீங்கள் குரான்மீது பக்தி உடையவர்களாயின் -ஹிந்துக்களே, நீங்கள் காமதேனுவைப் பூஜிப்பவர்களாயின்- உங்களிடையே இருக்கும் சில்லறை வேற்றுமைகளையெல்லாம் இன்றே மறந்துவிடுங்கள். இந்தப் புனித யுத்தத்தில் ஒன்று சேருங்கள். ஒரே கொடியின் கீழ்நின்று யுத்தம் செய்யப் போர்க்களத்தில் பாயுங்கள்.

'இந்தியாவிலிருந்து ஆங்கிலேயர்களின் பெயர் ரத்த வெள்ளத்தில் மூழ்கி மறையும்படி செய்யுங்கள். இந்த யுத்தத்தில் ஹிந்துக்கள் முஸ்லிம்களுடன் சேர்ந்துகொள்வார்களாயின், அவர்களுக்கு (ஹிந்துக்களுக்கு) வெகுமதியாகப் பசுவதை நிறுத்தப்படும். இந்தப் புனித யுத்தத்தில் யார் யார் போர்

புரிகின்றார்களோ, போர் புரிவோருக்கு யார் யார் உதவி செய்கின்றார்களோ, அவர்கள் சுதந்தரம் பெற்று இவ்வுலக சுகத்தையும் ஆத்மார்த்த சுகத்தையும் அடைவார்கள். இந்தச் சுதந்தர யுத்தத்தை எதிர்ப்பவர்கள் தங்கள் தலையில் தாங்களே மண்ணை வாரிப் போட்டுகொண்டு, தற்கொலை செய்துகொள்ளும் பாவத்துக்கு ஆளாவார்கள்.'

மீண்டும் பெற்ற சுயராஜ்யத்தைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்துவரும் ரோஹில்கண்டைத் தாற்காலிகமாக விட்டு, காசியிலும் அலாகாபாத்திலும் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதைப் பார்ப்பதற்காக அங்கே செல்லுவோம்.

## 16

## நீலன் சிருஷ்டித்த நரகம்

புண்ணிய நதியான கங்கா தீரத்தில், புராதனப் பெருமையுடனும் சரித்திர மகத்துவத்துடனும் விளங்குவது காசிமா நகர். அந்த ஸ்தலம் கல்கத்தாவிலிருந்து சுமார் நானூற்று அறுபது மைல் தூரத்தில் இருக்கிறது. குளிர்ச்சியும் தூய்மையும் வாய்ந்த புனித பாகீரதி தீர்த்தத்தின் கரையில் நிர்மாணிக்கப் பெற்றுள்ள நகரங்களுக்கெல்லாம் காசிதான் ராணி என்பதில் சந்தேகமில்லை. கங்கை நதிக்கரையிலிருந்து வரிசை வரிசையாக அமைக்கப்பட்டுள்ள பிரம்மாண்டமான வீடுகளும், சூரிய வெளிச்சத்தில் ஜகஜ்ஜோதியாக மின்னும் தங்க ஸ்தூபிகளுடன் கூடிய உயர்ந்த கோபுரங்களின் உன்னத சிகரங்களும், கம்பீரமாக வானமளாவி நிற்கும் அடர்ந்த மரங்களின் வரிசைகளும், கோவில்களில் அடிக்கும் எண்ணிக்கையற்ற மணிகளின் இணையில்லாத இன்ப நாதமும், எல்லாவற்றையும் விடச் சிறந்து விளங்கும் விசுவேசுவரர் ஆலயமும் காசிமா நகருக்குத் தனிப் பெருமையையும் அழகையும் ஒளியையும் கொடுத்திருக்கின்றன.

சுகவாசிகள் உல்லாச வாழ்க்கைக்காகவும், பக்தர்கள் பிரார்த்தனைக்காகவும், சந்நியாசிகள் தவத்திற்காகவும், முனிவர்கள் மோட்சத்திற்காகவும் அங்கே செல்லுகின்றனர். உலக சுகபோகங்களைப் பூர்ணமாகப் பருகித் திருப்தி யடைந்தவர்கள் துறவு பூண்டு ஏகாந்த வாழ்க்கை நடத்துவதற்குப் புனித காசி நகர்தான் உற்ற இடமாக அமைந்திருக்கிறது. கொடியர்களும் துஷ்டர்களுமான பிரகிருதிகளின் பொறாமையால் இவ்வுலகில் நம்பிக்கையும் சந்தோஷ வாழ்க்கையும் பாழாகிய துர்ப்பாக்கிய சாலிகளுக்கும் கங்கையின் குளிர்ந்த காற்றுத்தான் மன அமைதியைக் கொடுக்கிறது.

ஆங்கிலேயர்களின் கொடுமைகளுக்கு இலக்காகி, 1857-இல் அங்கே வந்து அடைக்கலம் புகுந்த துர்ப்பாக்கியசாலிகளின் தொகைக்குக் குறைவில்லை. தங்களுடைய கஷ்ட வாழ்வுக்கு முடிவு காண அங்கே ஏராளமானவர்கள் வந்தனர். டில்லி அரண்மனைகள் மூடப்பட்டதால் நிர்க்கதியாகிக் காசிமா நகர் வந்த பல ஹிந்து, முஸ்லிம் பிரபுக்களும், வெள்ளையர்களால் கொள்ளையடிக்கப்பட்ட சீக்கிய, மகாராஷ்டிர ராஜ குடும்பங்களைச் சேர்ந்தவர்களும், காசியிலுள்ள ஒவ்வொரு கோவிலிலும் ஒவ்வொரு மசூதியிலும் தங்கள் துன்பங்களை முறையிட்டுக் கதறினர். இந்தியர்களின் சுதர்மமும் சுயராஜ்யமும் அழிக்கப்பட்டதைக் குறித்து, தெய்விகமான அந்த நகரில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மனக் கொதிப்புடன் விவாதிக்கலாயினர்.

அப்போது அலாகாபாத்திலிருந்து சிறிது தூரத்திலுள்ள சிக்ரோலி நகர் அம் மாகாணத்தின் ராணுவ ஸ்தலமாக இருந்தது. அங்கே 37-ஆவது காலாட்படை, லூதியாறு சீக்கியர் படை, ஒரு குதிரைப் படை முதலியவை இருந்தன. பீரங்கிப் படையை மாத்திரம் ஆங்கிலேயர்கள் தங்கள் வசமே வைத்துக்கொண்டிருந்தார்கள். தலைவர்கள் பல வழிகளிலும் பிரசாரம் செய்து வந்ததன் பயனாக, சுதர்மத்துக்காகவும், சுயராஜ்யத்துக்காகவும் போரில் இறங்க வேண்டுமென்ற ஆர்வம் சிப்பாய்களிடையே பொங்கிக்கொண்டிருந்தது.

1857-ஆம் ஆண்டு நெருங்க நெருங்க, காசியிலுள்ள மக்களிடையே இருந்து வந்த மகத்தான குமுறலின் அறிகுறிகள் தெளிவாகத் தென்பட்டன. அந்த நகர்க் கமிஷனரான டக்கர், நீதிபதி கப்பின்ஸ், மாஜிஸ்திரேட் லிண்ட் முதலிய மற்றச் சிவில் அதிகாரிகளும், காப்டன் ஆல்பர்ட்ஸ், கர்னல் கார்டன் முதலிய ராணுவ அதிகாரிகளும் காசியிலுள்ள ஆங்கிலேயர்களின் பாதுகாப்புக்காக ஆரம்பத்திலிருந்தே பிரமாதமான முன்னேற்பாடுகளைச் செய்திருந்தனர்.

ஏனெனில் அந்த நகரில் மாத்திரம் பொதுமக்களின் மனநிலைமை பல சமயங்களிலும் பகிரங்கமாக வெளிப்பட்டது. 'ஆண்டவனே, அந்நியர்களின் ஆட்சியிலிருந்து எங்களை விடுதலை செய்!' என்று பலரும் கோவில்களில் பிரார்த்தனை செய்தனர். மற்ற இடங்களில் இயக்கத்துக்கு எவ்வளவு பலம் ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிவதற்காக ரகசியச் சங்கங்கள் அமைக்கப்பட்டன. மே மாதம் ஆரம்பமானதும், சிப்பாய்களின் முகாமுக்கு ஏராளமான முஸ்லிம் போதகர்கள் வந்து உபதேசிக்கலாயினர்; சுதந்தரப் போரில் இறங்கும்படி ஜனங்களைக் கேட்டுக்கொண்டு பொது இடங்களிலும் சுவர்களிலும் பிரகடனங்கள் ஒட்டப்பட்டன. சுயராஜ்யப் போரில் ஆங்கிலேயர்கள் அழிந்து, தாங்கள் வெற்றி பெற வேண்டுமென்று குருக்கள்மாரும் மக்களும் கோவில்களில் பூஜையும் பிரார்த்தனையும் செய்தனர்.

அதே சமயம் தானியங்களின் விலைகளெல்லாம் அதிகமாயின. அவ்விதம் விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போனால் இறுதி

யில் தானிய வியாபாரிகள்தாம் நஷ்டமடைய வேண்டியிருக்கும் என்ற அரசியல் பொருளாதார சாஸ்திர 'நுட்ப'த்தை வெள்ளையர்கள் விளக்கிக் கூற முற்பட்டார்கள். ஆனால் அந்தக் கூற்றுக்கு மக்கள் உற்ற பதில் அளித்துவிட்டனர். அவர்கள் துணிச்சலுடன், 'எங்கள் தேசத்தில் விலைகளெல்லாம் உயரும்படி செய்தவர்கள் நீங்களே; அப்படியிருக்க இப்போது நீங்கள் எங்களுக்குப் பிரசங்கம் செய்ய வந்துவிட்டீர்களோ!' என்று முகத்தில் அறைந்தாற்போல் சொல்லவே ஆங்கிலேயர்கள் பொது மக்களிடை பொங்கிக்கொண்டிருக்கும் ஆத்திரத்தைக் கண்டு நடுங்கிவிட்டனர்.

அதன் காரணமாக, ஆங்கிலேயர்களெல்லாம் அந்த நகரிலிருந்து வெளியேறிவிட வேண்டுமென்று காப்டன் ஆல்பர்ட்ஸ், காப்டன் வாட்ஸன் போன்ற அதிகாரிகளே வற்புறுத்த ஆரம்பித்து விட்டார்கள். எனினும் தங்களுக்கு ஆபத்து எதுவும் ஏற்படாதென்றும், ஆகையால் நகரை விட்டுக் காலி செய்யும்படி வற்புறுத்த வேண்டாமென்றும் நீதிபதி கப்பின்ஸ் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட பிறகுதான், ராணுவ அதிகாரிகள் திட்டமிட்ட வெளியேறும் படலம் தாற்காலிகமாக ஒத்திவைக்கப்பட்டது.

ஆம், அவர்கள் ஏன் காசிமா நகரை விட்டுச் செல்லவேண்டும்? ஆங்கிலேயர்களுக்குப் பாதுகாப்பளிப்பதற்காகச் சீக்கியப் பிரபுக்கள் தொண்டர் படை ஒன்றை ஏற்படுத்தவில்லையா? கொடிய பாவியான வாரன் ஹேஸ்டிங்ஸால் மிதித்து நசுக்கப்பட்ட சேத்சிங்கின் சந்ததிகள் ஆங்கிலேயர் பக்கம் சேர்ந்து கொள்ளவில்லையா? அவ்விதம் பலரும் விசுவாசத்துடன் இருந்து வருகையில் ஆங்கிலேயர்கள் ஏன் அந்த நகரிலிருந்து வெளியேற வேண்டும்?

காசி நகரிலிருந்து வெளியேறும் யோசனையை வெள்ளையர்கள் கைவிட்டு வருகையில், அஸிம்கடிலிருந்து பயங்கரமான செய்திகள் வரத் தொடங்கின. அஸிம்கட் காசியிலிருந்து சுமார் அறுபது மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கே 17-ஆவது சுதேசிப் படை வைக்கப்பட்டிருந்தது. மே மாதம் 31-ஆம் தேதியிலிருந்து அந்தப் படையினரிடையே பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. அந்தச் சிப்பாய்களைச் சமாதானப்படுத்த மாஜிஸ்திரேட் ஹார்ன் தேனொழுகப் பிரசங்கங்கள் செய்துகொண்டிருந்தான். வெறும் பேச்சுக்களால் சிப்பாய்களைச் சாந்தப்படுத்திய காலம் மலையேறிவிட்டது என்பதை அவன் உணரவில்லை. மே மாதம் 31-ஆம் தேதி உதயமாயிற்று. காசியிலுள்ள ராணுவ முகாம்கள் தீ வைக்கப்பட்டன. அந்த மாகாணத்தில் மற்றச் சிப்பாய்களும் எழுவதற்காக நிர்ணயிக்கப்பட்டிருந்த சமிக்ஞை அதுதான். ஜூன் மாதம் முதல் வாரத்தில் சுதந்தரப் போரை ஆரம்பித்துவிட வேண்டும் என்பதை அந்தச் சமிக்ஞை சிப்பாய்களுக்கு உணர்த்தியது.

அன்று ஜூன் மாதம் 3-ஆம் தேதி. கோரக்புரி அஸிம்கட் கஜானாக்களில் இருந்த பணமெல்லாம் - மொத்தம் ஏழு லட்சம்

ரூபாய் - அதிகாரிகளால் அனுப்பப்பட்டு, காசிக்குச் சென்று கொண்டிருந்தது. அதைவிடச் சிறந்த சந்தர்ப்பம் சிப்பாய்களுக்குக் கிடைக்க முடியுமா? அன்றிரவு அஸிம்கடில் இருந்த ஆங்கில அதிகாரிகள் எல்லாரும் அவர்களுடைய கிளப்பில் உல்லாசமாகச் சாப்பிட்டுக்கொண் டிருந்தனர். சிறிது தூரத்தில் பெண்களும் குழந்தைகளும் குதூகலமாகப் பேசிக்கொண்டும் விளையாடிக் கொண்டும் இருந்தார்கள்.

அந்தச் சமயம் திடீரென்று பயங்கரமான சப்தம் கேட்டது. ஏற்கனவே பல நகரங்களிலும் நிகழ்ந்த சம்பவங்களிலிருந்து திடீரென்று ஏற்படும் அத்தகைய சப்தத்தின் அர்த்தத்தை ஆங்கிலேயர்கள் அறிந்துகொண் டிருந்தார்கள். குதூகலமாக ஆரவாரம் செய்துகொண் டிருந்த அவர்களிடையே உடனே நிச்சப்தம் நிலவியது. ஒருவரை ஒருவர் பீதியுடன் பார்த்தனர். சிப்பாய்கள் போரில் இறங்கிவிட்டார்கள் என்று அவர்களுடைய கண்கள் பரஸ்பரம் சொல்லிக்கொண்டன. அந்தப் பயங்கரமான சப்தத்துக்குப்பின் சிப்பாய்களின் போர் வாத்திய முழக்கம் தொடர்ந்து கேட்டது. மீரத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் வெள்ளையர்களின் மனக்கண் முன் நின்றன!

உடனே தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்காக அவர்கள் அங்குமிங்கும் ஓடினர். அதிகாரிகளும் பெண்களும் குழந்தைகளும் தங்களுக்கு இவ்வுலக வாழ்க்கை முடிந்துவிட்டதென்றே கருதினார்கள். மரணத்தைக் காட்டிலும் கொடிய வேதனையை அநுபவிக்கும் அவர்களைப் பார்த்த சிப்பாய்கள் அவர்கள்மீது இரக்கம் கொண்டு, வஞ்சம் தீர்க்கும் எண்ணத்தைக் கைவிட்டனர். சிப்பாய்களில் எவராலும் ஆங்கிலேயர்களுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாமல் இருப்பதற்காக அவர்களுக்குச் சிப்பாய்கள் தாங்களே பாதுகாப்பாக இருந்து, உடனே அவர்கள் அஸிம்கடை விட்டுச் சென்றுவிட வேண்டுமென்று கட்டளையிட்டார்கள்.

ஆயினும், அன்று ஆங்கிலேயரின் ரத்தத்தைச் சிந்தியே தீருவதென்று பிரதிக்ஞை செய்துகொண் டிருந்த சில சிப்பாய்கள் லெப்டினன்ட் அச்சின்ஸன், ஸார்ஜன்ட் லூயிஸ் இவ்விருவரை மாத்திரம் சுட்டுக் கொன்று தங்களுடைய பிரதிக்ஞையை நிறைவேற்றி, மீதியுள்ளவர்கள் உயிர்தப்பி ஓட அநுமதித்தனர். ஆங்கிலப் பெண்கள், குழந்தைகள் முதலியோர் வண்டிகளில் செல்லவும் சிப்பாய்கள் அநுமதித்து, அவர்களுக்கு வண்டிகளும் கொடுத்தனர். அவர்களுக்கு வழியில் எவ்விதக் கஷ்டநஷ்டங்களும் ஏற்படாமல் இருப்பதற்காகக் காவலர்களையும் அனுப்பினர்.

இவ்வாறு அஸிம்கடிலிருந்து சிறிது நேரத்தில் ஆங்கிலேயரின் ஆட்சி அறவே ஒழிந்தது. அதிகாரிகளால் காசிக்கு அனுப்பப்பட்ட ஏழு லட்சம் ரூபாய், வெள்ளையர்களின் ஆயுதங்கள் முதலியவை தேசபக்தர்களின் வசமாயின. இந்த வேலைகளை எல்லாம் நிறைவேற்ற முதன்மையாக இருந்தவர்கள் யாரெனில் ஆங்கிலேயர்களின் பூர்ண நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக

இருந்த இந்தியப் போலீசாரே! சிப்பாய்களைப்போல் போலீசா ரும் கடைசி நாள் வரையில் பறங்கியர்களிடம் பாசம் கொண்ட வர்கள்போல் நடித்து வந்தனர். குறிப்பிட்ட நேரம் வந்ததும் சிறைகளிலும் வெள்ளையர்களின் வீடுகளிலும் தேசீயக் கொடியை ஏற்றியவர்களும் போலீசாரே! காசிக்குச் சென்ற வண்டிகளில் இடம் இல்லாததால், பல ஆங்கிலேயர்களும் அன்றிரவே காசிபுரிக்கு ஓட்டம் பிடித்தனர். வெற்றியடைந்த சிப்பாய் களோ, மறுநாள் ராணுவ கீதங்களுடன் தேசீயக் கொடி யைச் சுற்றி நின்று சந்தோஷ ஆரவாரங்கள் செய்துகொண்டு நகரைச் சுற்றி ஊர்வலம் வந்தார்கள். அந்த ஊர்வலத்தில் ஏராளமான மக்களும் கலந்துகொண்டனர்.

அஸிம்கட் விடுதலை பெற்ற செய்தி வந்துங்கூட, காசிக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாதென்று அங்கிருந்த ஆங்கிலேயர்கள் நம்பிக்கொண் டிருந்தார்கள். மீரத் எழுச்சி யைப்பற்றிய செய்தி கிடைத்ததிலிருந்து, பாஞ்சாலத்தில் இருந்த ஜான் லாரென்ஸும் கல்கத்தாவில் இருந்த லார்டு கானிங்கும் புரட்சி மூண்ட முக்கிய இடங்களுக்கு வெள்ளைத் துருப்புகளை அனுப்பப் பெருமுயற்சி செய்து வந்தனர். வடக்கேயிருந்து வந்த துருப்புகள் டில்லியை முற்றுகை இட்டுக்கொண் டிருந்த தால், டில்லிக்குத் தெற்கேயுள்ள பிரதேசங்களெல்லாம் நிர்க்கதி யான நிலைமையில் இருந்தன.

'ஐயோ! எங்களுக்கு உதவியாக ஐரோப்பியத் துருப்புகளை அனுப்புங்கள்!' என்று அவ்விடங்களிலுள்ள ஆங்கில அதிகாரி களிடமிருந்து கல்கத்தாவுக்குப் பரிதாபமான விண்ணப்பங் கள் வந்த வண்ணமாக இருந்தன.

பம்பாய், சென்னை, ரங்கூன் முதலிய இடங்களிலிருந்து லார்டு கானிங் ஐரோப்பியத் துருப்புகளை அழைத்திருந்ததும், சீனுமீது படையெடுக்கும் யோசனை கைவிடப்பட்டு அங்கே செல்லவிருந்த படைகள் இந்தியாவிலேயே நிறுத்தி வைக்கப்பட்ட தும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஜெனரல் நீலனின் தலைமையில் சென்னைத் துப்பாக்கிப் படை ஒன்று அவ்வமயம் காசிக்கு வந்து சேர்ந்தது. தர்மத்துக்கு அஞ்சாத துணிச்சலும் திறமையும், ராக்ஷசத்தனமும் பொருந்திய நீலன் தலைமையில் வெள்ளைத் துருப்புகள் உதவிக்கு வந்தது, காசியிலுள்ள ஆங்கி லேயர்களுக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணியது. அடுத்தபடியாகத் தனபுரியிலிருந்த ஆங்கிலப் படையும் காசிக்கு வந்து சேர்ந்தது. காசியில் அமைதியின்மை தாண்டவமாடியது. சிப்பாய்கள் புரட்சிப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட் டிருக்கிறார்கள் என்பது தெளிவாயிற்று. எனவே, வெள்ளையர் கள் அங்கே புரட்சியைக் கருவிலேயே அறுத்துவிடத் தீர்மானித் தனர்.

ஜெனரல் நீலனின் துருப்புகள், துரோகிகள், பீரங்கிப் படை முதலியவற்றின் ஏகோபித்த உதவியால் அவ்விதம் செய் வது மிகவும் எளிதான காரியம் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு இருந்தது. அஸிம்கட் விடுதலை பெற்ற செய்தி ஜூன் மாதம்

4-ஆம் தேதி காசிக்கு எட்டியது. மறுநாள் உதயமாவதற்குள் சிப்பாய்களை எல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கிவிட வேண்டு மென்று நீண்ட நேர விவாதத்துக்குப்பின் வெள்ளையர்கள் தீர்மானித்தனர்.

உடனே அன்று மாலை நடக்கப் போகும் ராணுவ அணிவகுப்புக்கு வரும்படி சிப்பாய்களுக்குக் கட்டளை பிறந்தது. அந்த உத்தரவு கிடைத்ததும் மேற்கொண்டு நடக்கப்போகும் விஷயங்களை எல்லாம் சிப்பாய்கள் ஊகித்துக்கொண்டு விட்டார் கள். ஆங்கிலேயர்கள் பீரங்கிப் படைகளைத் தயாராக வைத் திருக்கிறார்கள் என்ற ரகசியச் செய்தியும் அவர்களுக்குக் கிடைத் தது. சிப்பாய்கள் யாவரும் அணிவகுப்பு மைதானத்துக்கு வந்தவுடன், ஆயுதங்களைக் கீழே வைக்கும்படி ஆங்கில அதி காரிகள் அவர்களுக்கு உத்தரவிட்டனர். தாம் முதலில் நிராயுதபாணிகள் ஆக்கப்பட்டு, பின்பு பீரங்கிகளால் சின்ன பின்னமாக்கப்படுவோம் என்பது தேசீய வீரர்களுக்குச் சந் தேகமின்றித் தெரிந்துவிட்டது.

எனவே, ஆங்கிலேயர்களிடம் அடிபணிந்து ஆயுதங்களை இழந்துவிடச் சிப்பாய்கள் விரும்பவில்லை. அந்த நிலையில் போர் புரிந்து மடிவதே மேல் என்று கருதினார்கள். உடனே அவர்கள் சமீ பத்திலிருந்த ஆயுதசாலையைத் தாக்கியதோடு, ஆவேசங்கொண்டு தேசீய கோஷங்களுடன் ஆங்கில அதிகாரிகள்மீதும் பாய்ந்த னர். அவ்வமயந்தான் வெள்ளையர்களுக்கு உதவியாக ஒரு சீக்கியப் படை வந்து சேர்ந்தது. அந்தப் படையின் தளபதியான கய்ஸ் என்பவனை ஒரு தேசீய வீரர் நொடிப் பொழுதில் விண் ணுலகிற்கு அனுப்பிவிட்டார்.

அவனது ஸ்தானத்துக்கு டாட்ஜ்ஸன் வந்ததும், ஒரு சீக்கியச் சிப்பாய் வெள்ளையர்களுக்கு உதவியாக வந்த படையைச் சேர்ந்த வராயிருந்தும், திடீரென்று எழுந்த தேசபக்தியால் அவனைச் சுட்டு வீழ்த்தினார். எனினும் ஆங்கிலேயர்களுக்கு அடிபணியும் சில துரோகிகள் அந்தத் தேசபக்தரை அவ்விடத்திலேயே சின்ன பின்னமாகக் கிழித்தெறிந்துவிட்டனர்! அந்தத் துரோகிகளுக்கு உடனே தகுந்த வெகுமதியும் கிடைத்தது. அப்போது ஏற்பட்ட குழப்பத்தில் வெள்ளையர்கள் தங்களுக்கு உதவியாக வந்த துரோகிகள் படையையும் சேர்த்து எல்லா இந்தியச் சிப்பாய்கள் மீதும் கண்மூடித்தனமாகப் பீரங்கிப் பிரயோகம் செய்ய ஆரம் பித்தார்கள்.

துரோகிகள் படையில் இருந்த ஒருவர் டாட்ஜ்ஸனைச் சுட்டு வீழ்த்தியதால், அந்தப் படை முழுவதும் உண்மையில் புரட்சிப் படைதான் என்று ஆங்கிலேயர்கள் சந்தேகங் கொண்டதே அதற்குக் காரணம். அதனால் சீக்கியப் படைகளும் வெள்ளையர் களை எதிர்த்துப் போர் புரியவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது! இவ்விதமாக எல்லா இந்தியத் துருப்புகளும் சேர்ந்து ஆங்கில பீரங்கிப் படையை மூன்று முறை தாக்கின. ஹிந்துக்கள்,

களைத் தாக்கியது இந்திய சரித்திரத்திலேயே அந்த ஒரு தடவை தான்.

ஆங்கிலேயர்களுக்கும் இந்தியச் சிப்பாய்களுக்கும் ராணுவ முகாமிற்கு அருகில் மேற்கூறிய விதம் கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் எங்கே நகர ஜனங்களும் போருக்கு எழுந்து விடுவார்களோ என்று திகிலடைந்து, ஆங்கில அதிகாரிகள், பெண்கள், குழந்தைகள் முதலியோர் தெருக்களில் அங்குமிங்கும் ஓடிக்கொண் டிருந்தனர். அப்போது சர்தார் சுரத்சிங் அவர் களுக்கெல்லாம் பாதுகாப்பளிப்பதற்காகத் தன் படைகளுடன் விரைந்து சென்றான். அவ்வமயம் காசி கஜானாவில் லட்சக்கணக் கான ரூபாய் மாத்திரம் அல்ல, சீக்கிய மகாராணியிடமிருந்து வெள்ளையர்கள் கொள்ளையிட்ட மிக விலையுயர்ந்த ஆபரணங் களும் வைக்கப்பட்டிருந்தன. அவைகளை எல்லாம் சீக்கியச் சிப் பாய்களே காவல் புரிந்துகொண் டிருந்தனர். ஆங்கிலேயர்களால் நாடு கடத்தப்பட்ட தங்களுடைய ராணியின் நகைகளையும், கஜா னாவில் இருந்த திரவியங்களையும் கைப்பற்ற வேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் அங்கிருந்த சீக்கிய வீரர்களுக்கு ஏற்பட்டிருக் கும். ஆயினும் ஆங்கிலேயர்களின் பக்தனான சுரத்சிங், கஜானா வில் இருந்த எதையும் தொடக்கூடாது என்று தன் சிப்பாய் களுக்கு உத்தரவிட்டான். சிறிது நேரத்தில் கஜானா முழுவதும் ஆங்கிலத் துருப்புகளின் காவலில் விடப்பட்டது. அவ்வமயம் கோகுல் சந்த் என்ற ஒரு பண்டிதனும் வெள்ளையர்களுடன் சேர்ந்துகொண்டான். போதாக் குறைக்குக் காசிராஜாவும் தன் செல்வம், செல்வாக்கு, அதிகாரம் எல்லாவற்றையும் தன் 'தெய்வத்தின்' பாதங்களில் - காசி விசுவேசுவரரின் பாத கமலங்களில் அல்ல; ஆங்கிலேயர்களின் பாதங்களில் - சமர்ப் பித்துப் பணிந்து நின்றான். அன்று ஆங்கில பீரங்கிப் படை மிகக் கடுமையாகப் போர் புரிந்துங்கூட, சிப்பாய்கள் மாத்திரம் இறுதி வரையில் சரண் புகாது யுத்தம் செய்துகொண்டே போர்க் களத்தை விட்டு அகன்றனர். பிறகு, பரவி நின்று வெள்ளை யர்களை எதிர்ப்பதற்காக அந்த மாகாணத்திலுள்ள பல இடங் களுக்கும் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து சென்றனர்.

பாஞ்சாலத்தில் ஜான் லாரென்ஸ் வகுத்திருந்த திட்டத் தைப் பின்பற்றிக் காசியிலும் ஆங்கில அதிகாரிகள் புரட்சிப் போரைக் கருவிலேயே அறுத்துவிட்டார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆயினும் காசியில் சுதந்தரப் போர் ஆரம்பம் ஆகிவிட் டது என்ற செய்தி, வட இந்தியா முழுவதும் மின்னல் வேகத்தில் பரவியது. காசியை எதிர்பார்த்துக்கொண் டிருந்த பல்வேறு புரட்சி ஸ்தாபனங்களும் உடனே அந்த அந்த நகரில் போருக்கு எழுந்துவிட்டன.

ஜூன் மாதம் 7-ஆம் தேதி ஜவுன்புரி மக்கள் போரை ஆரம் பித்தனர். காசியிலிருந்து ஜவுன்புரிக்குச் சிப்பாய்கள் வந்து கொண்டிருக்கின்றனர் என்ற செய்தி கிடைத்ததும், ஜவுன்புரி அதிகாரிகள் அங்கிருந்த சீக்கியச் சிப்பாய்களையெல்லாம் கூட்டி, [illegible] அவர்களுக்குப் பிரசங்கங்கள்

4-ஆம் தேதி காசிக்கு எட்டியது. மறுநாள் உதயமாவதற்குள் சிப்பாய்களை எல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கிவிட வேண்டு மென்று நீண்ட நேர விவாதத்துக்குப்பின் வெள்ளையர்கள் தீர்மானித்தனர்.

உடனே அன்று மாலை நடக்கப் போகும் ராணுவ அணிவகுப்புக்கு வரும்படி சிப்பாய்களுக்குக் கட்டளை பிறந்தது. அந்த உத்தரவு கிடைத்ததும் மேற்கொண்டு நடக்கப்போகும் விஷயங்களை எல்லாம் சிப்பாய்கள் ஊகித்துக்கொண்டு விட்டார் கள். ஆங்கிலேயர்கள் பீரங்கிப் படைகளைத் தயாராக வைத் திருக்கிறார்கள் என்ற ரகசியச் செய்தியும் அவர்களுக்குக் கிடைத் தது. சிப்பாய்கள் யாவரும் அணிவகுப்பு மைதானத்துக்கு வந்தவுடன், ஆயுதங்களைக் கீழே வைக்கும்படி ஆங்கில அதி காரிகள் அவர்களுக்கு உத்தரவிட்டனர். தாம் முதலில் நிராயுதபாணிகள் ஆக்கப்பட்டு, பின்பு பீரங்கிகளால் சின்ன பின்னமாக்கப்படுவோம் என்பது தேசீய வீரர்களுக்குச் சந் தேகமின்றித் தெரிந்துவிட்டது.

எனவே, ஆங்கிலேயர்களிடம் அடிபணிந்து ஆயுதங்களை இழந்துவிடச் சிப்பாய்கள் விரும்பவில்லை. அந்த நிலையில் போர் புரிந்து மடிவதே மேல் என்று கருதினார்கள். உடனே அவர்கள் சமீ பத்திலிருந்த ஆயுதசாலையைத் தாக்கியதோடு, ஆவேசங்கொண்டு தேசீய கோஷங்களுடன் ஆங்கில அதிகாரிகள்மீதும் பாய்ந்த னர். அவ்வமயந்தான் வெள்ளையர்களுக்கு உதவியாக ஒரு சீக்கியப் படை வந்து சேர்ந்தது. அந்தப் படையின் தளபதியான கய்ஸ் என்பவனை ஒரு தேசீய வீரர் நொடிப் பொழுதில் விண் ணுலகிற்கு அனுப்பிவிட்டார்.

அவனது ஸ்தானத்துக்கு டாட்ஜ்ஸன் வந்ததும், ஒரு சீக்கியச் சிப்பாய் வெள்ளையர்களுக்கு உதவியாக வந்த படையைச் சேர்ந்த வராயிருந்தும், திடீரென்று எழுந்த தேசபக்தியால் அவனைச் சுட்டு வீழ்த்தினார். எனினும் ஆங்கிலேயர்களுக்கு அடிபணியும் சில துரோகிகள் அந்தத் தேசபக்தரை அவ்விடத்திலேயே சின்ன பின்னமாகக் கிழித்தெறிந்துவிட்டனர்! அந்தத் துரோகிகளுக்கு உடனே தகுந்த வெகுமதியும் கிடைத்தது. அப்போது ஏற்பட்ட குழப்பத்தில் வெள்ளையர்கள் தங்களுக்கு உதவியாக வந்த துரோகிகள் படையையும் சேர்த்து எல்லா இந்தியச் சிப்பாய்கள் மீதும் கண்மூடித்தனமாகப் பீரங்கிப் பிரயோகம் செய்ய ஆரம் பித்தார்கள்.

துரோகிகள் படையில் இருந்த ஒருவர் டாட்ஜ்ஸனைச் சுட்டு வீழ்த்தியதால், அந்தப் படை முழுவதும் உண்மையில் புரட்சிப் படைதான் என்று ஆங்கிலேயர்கள் சந்தேகங் கொண்டதே அதற்குக் காரணம். அதனால் சீக்கியப் படைகளும் வெள்ளையர் களை எதிர்த்துப் போர் புரியவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது! இவ்விதமாக எல்லா இந்தியத் துருப்புகளும் சேர்ந்து ஆங்கில பீரங்கிப் படையை மூன்று முறை தாக்கின. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள் எல்லோருமாகச் சேர்ந்து வெள்ளையர்

களைக் தாக்கியது இந்திய சரித்திரத்திலேயே அந்த ஒரு தடவை தான்.

ஆங்கிலேயர்களுக்கும் இந்தியச் சிப்பாய்களுக்கும் ராணுவ முகாமிற்கு அருகில் மேற்கூறிய விதம் கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் எங்கே நகர ஜனங்களும் போருக்கு எழுந்து விடுவார்களோ என்று திகிலடைந்து, ஆங்கில அதிகாரிகள், பெண்கள், குழந்தைகள் முதலியோர் தெருக்களில் அங்குமிங்கும் ஓடிக்கொண் டிருந்தனர். அப்போது சர்தார் சுரத்சிங் அவர் களுக்கெல்லாம் பாதுகாப்பளிப்பதற்காகத் தன் படைகளுடன் விரைந்து சென்றான். அவ்வமயம் காசி கஜானாவில் லட்சக்கணக் கான ரூபாய் மாத்திரம் அல்ல, சீக்கிய மகாராணியிடமிருந்து வெள்ளையர்கள் கொள்ளையிட்ட மிக விலையுயர்ந்த ஆபரணங் களும் வைக்கப்பட்டிருந்தன. அவைகளை எல்லாம் சீக்கியச் சிப் பாய்களே காவல் புரிந்துகொண் டிருந்தனர். ஆங்கிலேயர்களால் நாடு கடத்தப்பட்ட தங்களுடைய ராணியின் நகைகளையும், கஜா னாவில் இருந்த திரவியங்களையும் கைப்பற்ற வேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் அங்கிருந்த சீக்கிய வீரர்களுக்கு ஏற்பட்டிருக் கும். ஆயினும் ஆங்கிலேயர்களின் பக்தனான சுரத்சிங், கஜானா வில் இருந்த எதையும் தொடக்கூடாது என்று தன் சிப்பாய் களுக்கு உத்தரவிட்டான். சிறிது நேரத்தில் கஜானா முழுவதும் ஆங்கிலத் துருப்புகளின் காவலில் விடப்பட்டது. அவ்வமயம் கோகுல் சந்த் என்ற ஒரு பண்டிதனும் வெள்ளையர்களுடன் சேர்ந்துகொண்டான். போதாக் குறைக்குக் காசிராஜாவும் தன் செல்வம், செல்வாக்கு, அதிகாரம் எல்லாவற்றையும் தன் 'தெய்வத்தின்' பாதங்களில் - காசி விசுவேசுவரரின் பாத கமலங்களில் அல்ல; ஆங்கிலேயர்களின் பாதங்களில் - சமர்ப் பித்துப் பணிந்து நின்றான். அன்று ஆங்கில பீரங்கிப் படை மிகக் கடுமையாகப் போர் புரிந்துங்கூட, சிப்பாய்கள் மாத்திரம் இறுதி வரையில் சரண் புகாது யுத்தம் செய்துகொண்டே போர்க் களத்தை விட்டு அகன்றனர். பிறகு, பரவி நின்று வெள்ளை யர்களை எதிர்ப்பதற்காக அந்த மாகாணத்திலுள்ள பல இடங் களுக்கும் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து சென்றனர்.

பாஞ்சாலத்தில் ஜான் லாரென்ஸ் வகுத்திருந்த திட்டத் தைப் பின்பற்றிக் காசியிலும் ஆங்கில அதிகாரிகள் புரட்சிப் போரைக் கருவிலேயே அறுத்துவிட்டார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆயினும் காசியில் சுதந்தரப் போர் ஆரம்பம் ஆகிவிட் டது என்ற செய்தி, வட இந்தியா முழுவதும் மின்னல் வேகத்தில் பரவியது. காசியை எதிர்பார்த்துக்கொண் டிருந்த பல்வேறு புரட்சி ஸ்தாபனங்களும் உடனே அந்த அந்த நகரில் போருக்கு எழுந்துவிட்டன.

ஜூன் மாதம் 7-ஆம் தேதி ஜவுன்புரி மக்கள் போரை ஆரம் பித்தனர். காசியிலிருந்து ஜவுன்புரிக்குச் சிப்பாய்கள் வந்து கொண்டிருக்கின்றனர் என்ற செய்தி கிடைத்ததும், ஜவுன்புரி அதிகாரிகள் அங்கிருந்த சீக்கியச் சிப்பாய்களையெல்லாம் கூட்டி, ராஜபக்தியின் மகிமையைப்பற்றி அவர்களுக்குப் பிரசங்கங்கள்

செய்யலாயினர்! எனினும் அவர்களுடைய பிரசங்கங்கள் முடிவடையுமுன், வெகு வேகமாக வரும் காசிச் சிப்பாய்களுடைய காலடிகளின் சப்தம் கேட்டது. அவ்வளவுதான்! சீக்கியத் துருப்புகள் யாவரும் தேசீய வீரர்களுடன் சேர்ந்துகொண்டன. புரட்சி ஜ்வாலை நகரையே சூழ்ந்துகொண்டது!

அதைக் கண்டதும் அந்த நகர் மாஜிஸ்திரேட் கப்பேஜ், சிப்பாய்களுக்கு உபதேசம் செய்வதற்காக மீண்டும் எழுந்தான். உடனே சிப்பாய்களிடையிலிருந்து கரகோஷம் எழுவதற்குப் பதிலாக ஒரு தோட்டா பறந்து வந்து அவனது மார்பில் பாய, அவன் அங்கேயே உயிரை விட்டான். மாரா என்ற ராணுவ அதிகாரிக்கும் அதே கதி நேர்ந்தது.

அதன் பின் தேச பக்தர்கள் கஜானாவைத் தாக்கியதுடன், ஜவுன்புரியை விட்டு எல்லா ஆங்கிலேயர்களும் வெளியேறிவிட வேண்டும் என்று கட்டளை யிட்டார்கள். அதே சமயம் காசிக் குதிரைப் படையினரும் அங்கே வந்து சேர்ந்தனர். சிப்பாய்கள் வீராவேசத்துடன் இருந்துங்கூட, ஆயுதங்களைத் தங்களிடம் ஒப்பித்துவிட்டுச் சரண் புகுந்த ஆங்கிலேயர்கள் எல்லோருக்கும் உயிர்ப் பிச்சை அளித்தனர். அதன் பயனாக ஏராளமான ஆங்கிலேயர்கள் உயிருடன் ஜவுன்புரியை விட்டுச் செல்ல முடிந்தது.

எனினும் இந்தியாவை அடிமைத்தனத்தில் ஆழ்த்திய ஆங்கிலேயர்கள்மீது வஞ்சம் தீர்ப்பதற்காக ஜவுன்புரி மக்கள் கஜானாவைக் கைப்பற்றி, அவர்கள் வீடுகளுக்கும் தீ வைத்து, ஆங்கில ஆட்சியின் அறிகுறியே அடியோடு மறையும்படி செய்துவிட்டனர். பிறகு அவர்கள் தாங்கள் கைப்பற்றிய பொக்கிஷங்களில் சுமக்கக்கூடிய அளவை எடுத்துக்கொண்டு, அயோத்திக்குப் புறப்பட்டார்கள். மீதியிருந்த தொகைகளை எல்லாம், தங்களுடைய ஆயுளில் முழு ரூபாயையே கண்டிராத ஏழைகளை எடுத்துக்கொள்ளும்படி கூறினர். உடனே ஆயிரக்கணக்கான ஏழைகள் சுயராஜ்யத்துக்கும் டில்லி சக்கரவர்த்திக்கும் மனப் பூர்வமாக வாழ்த்துக் கூறி, அந்தத் தொகையைப் பங்கிட்டுக்கொண்டார்கள்.

ஜூன் மாதம் 3-ஆம் தேதி அஸிம்கடும், 4 -ஆம் தேதி காசியும், 5-ஆம் தேதி ஜவுன்புரியும் எழுந்ததன் பயனாக, காசி மாகாணம் முழுவதும் புரட்சி ஜ்வாலை வீசத் தொடங்கியது.

ஒரு மாகாணத்தின் முக்கிய நகர் பகைவரிடம் வீழ்ச்சியடைந்தால், அம் மாகாணத்தில் புரட்சியின் பலம் குன்றுவது வழக்கமாக இருந்து வருகிறது. புரட்சி யுத்த தந்திரத்துக்கு அது முற்றும் முரணாகும். ஏனெனில், புரட்சிக் காலத்தில் ஒரு மாகாணம் முழுவதும் தலைநகரை நம்பிக்கொண் டிருப்பது மகத்தான ஆபத்தாகும். 'எங்கே நமது கொடி பறக்கிறதோ, அதுதான் நமது தலைநகர்' என்பது மாஜினியின் சித்தாந்தமாகும். தலைநகர்தான் புரட்சியைப் பின் பற்ற வேண்டுமே அன்றி, புரட்சி தலைநகரைப் பின்பற்றுவதாக இருக்கக்கூடாது. புரட்சித் திட்டம் எவ்வளவு திறமையுடனும் ஒழுங்காகவும் உருவாக்கப் பெற்றிருப்பினும், அதன்படி சகல சம்பவங்களும் அணுப் பிசகாமல் நடைபெறுவது என்பது சாத்தியமல்ல. ஆகையால், அது தலைநக

ரில் தோல்வியுற்றாலும், மாகாணம் ஒரு போதும் அதைக் கை விட்டுவிடக்கூடாது.

இந்தத் தத்துவத்துக்குக் காசி நகர் சிறிதும் சந்தேகமின்றிச் சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தது. மாகாணத்தின் தலைநகரான காசி, வெள்ளையர்களிடம் சிக்கிக்கொண்டாலும், புரட்சிப் புயல் உடனே மற்ற இடங்களிலெல்லாம் பரவி அம் மாகாணம் முழுவதையும் கவிந்துகொண்டது. ஜமீன்தார்கள், விவசாயிகள், சிப்பாய்கள் முதலிய யாவரும் ஆங்கில ஆட்சியை மாத்திரம் அல்ல, ஆங்கிலேயர்கள் சம்பந்தமுள்ள எதையும், . எவரையும் அறவே வெறுத்தனர். தங்கள் எல்லையில் எவனாவது ஓர் ஆங்கிலேயன் வந்திருக்கிறானென்று கிராமவாசிகள் கேள்விப்பட்டாலுங்கூட, அவர்கள் அவனைத் தங்கள் எல்லைக்கப்பால் அடித்து விரட்டிய பின்தான் வேறு வேலையைக் கவனிக்க முற்பட்டார்கள்.

தந்திக் கம்பிகளெல்லாம் அறுபட்டன. ரெயில் பாதைகளும் பறித்தெறியப்பட்டன. அப்படியிருந்தும், விடுதலை பெற முயன்ற காசிமா நகர், துரோகிகளால் வஞ்சிக்கப்பட்டது. எனவே அங்கே சுதந்தரப் போரை ஆரம்பித்த சிப்பாய்கள் அயோத்திக்குப் புறப்பட்டுச் சென்றனர். 4-ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்ட புரட்சி அங்கே தோல்வியுற்றதும், வெள்ளையர்கள் கூட்டங் கூட்டமாக ஏராளமானவர்களைக் கைது செய்தார்கள்.

அப்போது மிகவும் முக்கியமான ஓர் உண்மை வெளியாயிற்று. ரகசிய ஸ்தாபனம் எவ்வளவு அற்புதமான முறையில் வேலை செய்தது என்பதை அத்தகைய அகஸ்மாத்தான சம்பவங்களிலிருந்தே அறிவது சாத்தியமாயிற்று. அவ்வமயம் காசியில் மூன்று தீவிர தேசபக்தர்களும், ஒரு கோடீசுவரரும் கைதியாயினர். அவர்களுடைய வீடுகள் சோதனை செய்யப்பட்டபோது, அங்கிருந்த சில கடிதங்கள் ஆங்கிலேயர்களின் கையில் சிக்கின. அவை ரகசிய பாஷையில் எழுதப் பெற்றிருந்தன.

'காசி ஜனங்கள் உடனே கொதித்தெழுந்து, கப்பின்ஸ், லின்ட் முதலிய ஆங்கிலேய அதிகாரிகளையெல்லாம் பலியிட வேண்டும். தொண்டர்களின் செலவுக்குத் தேவையான தொகையைக் கோடீசுவரர் கொடுப்பார்'—இதுதான் அந்தக் கடிதங்களின் சாரம்! அந்தக் கோடீசுவரரின் வீட்டைச் சோதனை செய்தபோது, அங்கிருந்து இருநூறு பட்டாக்கத்திகளும் துப்பாக்கிகளும் ஆங்கிலேயர்களுக்குக் கிடைத்தன.

காசி மாகாண எழுச்சியைப்பற்றிய சுருக்கமான விவரங்கள் இவைதாம். மீரத்திலும் டில்லியிலும் வெள்ளையர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள் அல்லவா? அதுபோல் காசியில் எதுவும் நடைபெறவில்லை. காசி மாகாணத்தில் ஓர் ஆங்கிலப் பெண்கூடத் தேசீய வஞ்ச தேவதைக்குப் பலியாகவில்லை. ஆங்கிலேயர்கள் மக்களின் ஆத்திரத்துக்கு ஆளாகிவிடாமல் இருப்பதற்காக, தேச பக்தர்களே அவர்கள் வெளியேற உதவி புரிந்தனர். வண்டிகளில் புறப்பட்டுச் செல்லவும் ஏராளமானவர்களுக்கு வசதிகள் செய்து கொடுத்தனர். ஜனங்கள் தேச ஆவே

சங் கொண்ட சமயத்திலும், ஆங்கில அரக்கர்கள் விஷயத்தில் அநுதாபம் கொண்டு அவர்களுக்கு உயிர்ப் பிச்சை அளித்தார்கள். ஆனால் அவர்களிடம் ஆங்கிலேயர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதைக் கவனிப்போம்.

சுயராஜ்யம் பெற முயன்ற பாவத்துக்காகக் காசிமீது ஆங்கிலேயர்கள் அநுதாபம் காட்டியிருக்க வேண்டுமென்று நாம் கூறவில்லை. ஆனால் அந்த மாகாணத்தில் அவர்கள் செய்த அட்டூழியங்கள் மிருகத்தனமானவை என்றும், உலகம் என்றென்றும் வெறுக்கக் கூடியவை என்றுமே ஆணித்தரமாகக் கூறுகின்றோம். தாங்கள் புரிந்த நீசத்தனமான நாசகாரியங்கள் நியாயமானவை என்று ஆங்கிலேயர் ஒரு காலத்திலும் ஸ்தாபிக்க முடியாது. சுதந்தரத்துக்காகப் புரட்சி செய்த புனித தேசபக்தர்கள் மீது அயோக்கியத்தனமான பொய்ப்புகார்களைக் கூறவும், அபாண்டமான பழிகளைச் சுமத்தவும் வெள்ளையர்கள் எக்காலத்லும் பின்வாங்கியதில்லை.

இந்தியர்களை, 'நாகரிகமற்ற கொடியர்கள்' என்று வர்ணித்திருக்கும் ஆங்கிலேயர்கள், காசி மாகாணத்தில் 'நாகரிக' ஆங்கிலேயர்களின் தளபதி என்ன செய்தான் என்பதைக் கவனிக்கட்டும். அவனுடைய நடவடிக்கைகளை ஆங்கிலேயர்களே விவரித்திருக்கின்றார்களாதலின் அவ்விஷயமாக நாம் மேற்கொண்டு எதுவும் கூறுவது அநாவசியம். ஆங்கில சரித்திராசிரியர்கள் கூறியுள்ள விவரங்களிலிருந்தே, பாரபட்சமற்ற உலகம் உண்மையை அறிந்துகொள்ளட்டும்.

காசி எழுச்சிக்குப் பின், அங்கும் சுற்று வட்டக் கிராமங்களிலும் 'ஒழுங்கை' நிலைநிறுத்துவதற்காக வெள்ளையர்களும் சீக்கியர்களும் அடங்கிய படைகளை நீலன் உருவாக்கினான். அந்தப் படைகள் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து சென்று, யாதொரு பாதுகாப்பும் அற்ற சாதுக்களான விவசாயிகள் வசிக்கும் கிராமங்களில் புகுந்து, தங்களுடைய கண்களில் தென்பட்டவர்களை, ஒன்று வெட்டி வீழ்த்துவது அல்லது தூக்கில் இடுவது என்ற கைங்கரியத்தில் ஈடுபட்டன. தூக்கிலிட வேண்டியவர்களின் தொகை மிகவும் அதிகமாகிவிட்டதால், ஒரு தூக்குமரம் இராப்பகலாக வேலை செய்துங்கூடப் போதவில்லை!

ஆகவே ஓரிடத்தில் நிரந்தரமான பல தூக்கு மேடைகள் வரிசையாக நிர்மாணிக்கப்பட்டன! அந்தத் தூக்குமரங்களெல்லாம் இடைவிடாது வெகு வேகமாக வேலை செய்ததால், அவைகளிலிருந்து குற்றுயிரும் குலையுயிருமாகக்கூடப் பலர் அப்பால் இழுத்தெறியப்பட்டனர். அப்படியிருந்தும் காத்துக்கொண்டிருக்கும் 'அபேட்சகர்'களின் தொகை அதிகமாகியே வந்தது! எனவே மரங்களை வெட்டித் தூக்கு மேடை அமைப்பதால் வீண்காலம் செலவழிவதை உன்னி ஆங்கிலேயர்கள் ஆங்காங்கே நின்ற மரங்களிலேயே தேசபக்தர்களைத் தூக்கிலிட ஆரம்பித்தனர். ஒரு மரத்தில் பல்வேறு அளவு உயரத்தில் பல கிளைகள் இருப்பதால், ஒரே மரத்தில் பலரையும் தூக்கிலிட வசதி ஏற்பட்டது.

பல மரங்களிலும் அவ்விதம் பிரேதங்கள் தொங்கிய காட்சி நாகரிக ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவர்களின் அந்தக் கிறிஸ்துவ தர்மம் இடைவிடாது இராப்பகலாக நடந்து வந்ததால் வெள்ளையர்களுக்கே சலிப்பு உண்டாகி விட்டது. எனவே அவர்கள் வேடிக்கையான ஒரு புது மாறுதலைக் கைக்கொண்டனர். அதாவது பலரையும் யானைகள் மீதேற்றி மரத்தடியில் கொண்டுபோய் நிறுத்துவது; பின்னல் அவர்களுடைய கழுத்தைக் கயிற்றினல் இறுகச் சுருக்கிட்டு யானைகளை அப்பால் கொண்டு போய்விடுவது; இதுதான் அவர்கள் புதிதாகக் கண்டுபிடித்த முறை!

சில நாட்களுக்குப் பின் இந்த முறையும் அவர்களுக்குச் சலித்துவிட்டது. பின்னல் மற்ெருரு 'தமாஷான' முறையைக் கைக்கொண்டார்கள். '8', '9' போன்ற எண்களின் உருவத்தில் பலரையும் மரக்கிளைகளில் தூக்கிலிட்டுச் சித்திரக் கலையில் தங்களுக்குள்ள தேர்ச்சியையும் காட்டினர்! அவ்விதமெல்லாம் ஏராளமானவர்களைத் தூக்கிலிட்டுங்கூட, அதற்குப் பிறகும் ஆயிரக்கணக்கான 'கறுப்பு மனிதர்'கள் இருந்தது ஆங்கிலேயர்களுக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணியது. அவ்வளவு பேர்களையும் தூக்கில் இடுவதற்குப் போதிய கயிறு அவர்களுக்குக் கிடைக்காததால் வேறொரு புதிய யுக்தியைக் கண்டுபிடித்தனர். புதிய பரிசோதனை பூரண வெற்றியைக் கொடுத்ததால், தூக்கில் இடுவதை நிறுத்திவிட்டார்கள்!

அந்தப் புதிய முறை என்ன? ஏக காலத்தில் யாதொரு சிரமமுமின்றிக் கிராமங்களையும் கிராம ஜனங்களையும் சுலபமாக அழிப்பதுதான்! கிராமத்தைச் சுற்றிலும் தீ வைத்து, ஜனங்கள் தப்பி வெளியே ஓடாமல் பயமுறுத்த ஊரைச் சுற்றிப் பீரங்கிகளையும் வைத்துவிட்டால், ஆயிரக்கணக்கான 'சுதேசி'களை அழிக்க எவ்வளவு நேரமாகும்! கிராமங்களும் கிராம மக்களும் எரிந்து சாம்பலான காட்சிகளை வேடிக்கையாகவும் விவரமாகவும் வர்ணித்து, அப்போது பல ஆங்கிலேயர்கள் இங்கிலாந்துக்குக் கடிதங்கள் எழுதினர்!

வெகு துரிதமாகவும் திறமையுடனும் கிராமங்களுக்குத் தீ வைக்கப்பட்டதால், ஒரு கிராமவாசிகூடத் தப்பியோட முடியவில்லை! ஏழை விவசாயிகள், மேதாவிகளான பிராம்மணர்கள், எவ்விதத் தீங்கும் செய்யாத முஸ்லிம்கள், பள்ளிக்கூடக் குழந்தைகள், யுவதிகள், கிழவர்கள், குருடர்கள், அங்கஹீனர்கள், கைக்குழந்தைகளுடன் தாய்மார்கள் எல்லோரும் அந்தத் தீயில் எரிந்து மாண்டனர். நகர முடியாத கிழவர், கிழவிகள், பச்சைக் குழந்தைகள் முதலியோரும் ஆங்கிலேயர் மூட்டிய நரகத் தீயில் நாசமாயினர்.

கேய், மாலிஸன் முதலிய ஆங்கில சரித்திராசிரியர்களே இந்த விவரங்களை யெல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அந்த 'வேடிக்கையை'ப் பற்றி ஓர் ஆங்கிலேயர் தமது உறவினருக்கு எழுதிய கடிதமொன்றில் கூறியதாவது: 'ஏராள

மான ஜனங்கள் இருந்த ஒரு கிராமத்துக்கு நாங்கள் தீ வைத்து விட்டுத் துப்பாக்கிகளுடன் அதைச் சூழ்ந்துகொண்டோம். தீயி லிருந்து தப்பியோட முயன்றவர்களைச் சுட்டு வீழ்த்தினோம்.' (சார்லஸ் பால் எழுதியுள்ள சரித்திரத்தில் இந்த விவரம் குறிப் பிடப்பட்டிருக்கிறது).

இவ்விதம் ஒன்றல்ல, இரண்டல்ல, எத்தனையோ கிராமங் கள் தீ வைக்கப்பட்டன. பல கிராமங்களையும் எரிப்பதற்காக ஆங்கிலேயர்கள் துருப்புகளைக் கோஷ்டி கோஷ்டியாக வெவ் வேறு திசைகளுக்கும் அனுப்பினர். அந்தக் கோஷ்டிகளில் ஒன் றின் தலைவனான அதிகாரி எழுதிய கடிதத்தில், தம்முடைய கோஷ்டியினர் மாத்திரம் இருபது கிராமங்களை எரித்துத் தரை மட்டமாக்கியதாக மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் பெரு மையுடனும் குறிப்பிட்டிருந்தான்!

ஆங்கில சரித்திராசிரியர்கள் அரை மனத்துடன் குறிப்பிட் டுள்ள சிற்சில உண்மைகளின் சுருக்கமான வரலாறுதான் மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது! ஜெனரல் நீலன் தீர்த்த வஞ்சத்தின் கொடுமைபற்றி எதுவும் எழுதாமல் விட்டுவிடுவதே சிறந்தது என்று வெள்ளைச் சரித்திராசிரியர்கள் உலகமறிய, பகிரங்க மாகக் கூறியிருக்கிறார்கள்.

ஆகையால் சுவர்க்க லோகம்போல் இருந்த காசி க்ஷேத்தி ரத்தை ஒரு கொடிய நரகமாக மாற்றிய நீலனின் திருவிளை யாடல்களைப்பற்றி இதைக் காட்டிலும் நாம் ஒரு வார்த்தைகூட அதிகம் கூற வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?

## 17

## ரத்த வெறியின் உச்ச நிலை

நீலன் சிருஷ்டித்த நரகத்தின் பயங்கரக் காட்சிகளைக் கண்ட நமது கண்களை, பாகீரதி, காளிந்தி நதிகள் அன்புடன் தழுவும் புண்ணிய ஸ்தலமான பிரயாகையின் பக்கம் திருப்புவோம். ஆதி யந்தமற்று அந்தச் சங்கம தீர்த்தத்தால் குளிர்ந்திருக்கும் அலாகா பாத் நகர் காசியிலிருந்து சுமார் எழுபது மைல் தூரத்தில் இருக் கிறது. அக்பர் ஆண்ட காலத்தில் அங்கே நிர்மாணம் செய்யப் பட்ட கோட்டை, புனிதப் பிரயாகை க்ஷேத்திரத்துக்கு இன்னும் அதிக அழகைக் கொடுக்கிறது. கல்கத்தாவிலிருந்து பாஞ்சாலத் துக்கும் டில்லிக்கும் செல்லும் எல்லா முக்கிய ரஸ்தாக்களுக்கும் இருதய ஸ்தானம் அலாகாபாத்தான். அந்த மாகாணத்துக்கே அலாகாபாத் கோட்டைதான் உயிர்நாடியாக விளங்கியது.

எனவே மிக மிக முக்கியமான அந்தக் கோட்டையைக் கைப் பற்றவும், அதைத் தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்துக்கொள்




• 1857-ம் ஆண்டில்
சுதந்தரப் போர் நிகழ்ந்த
முக்கியமான இடங்கள்.

ளவும், இரு சாராரும் பெரு முயற்சி செய்து வந்தனர். அலாகாபாத்திலுள்ள சிப்பாய்கள், மக்கள் எல்லோரும் ஏக காலத்தில் எழவேண்டும் என்பதே தலைவர்களின் திட்டமாகும். அதை நிறைவேற்றுவதற்காக அங்கே ரகசிய ஸ்தாபனம் வெகு தீவிரமாக வேலை செய்து வந்தது. பிரயாகைப் பிராம்மணர்கள் அதற்கு மகத்தான உதவி புரிந்து வந்தனர். அலாகாபாத்தில் மாத்திரம் அல்ல, அந்த மாகாணம் முழுவதும் அவர்கள் புரட்சி விதையை விதைத்து வந்ததுடன், சுயராஜ்யத்தின் புனித நோக்கங்களையும் ஜனங்களிடையே மிகத் திறமையுடன் பிரசாரம் செய்து வந்தார்கள். அவர்கள், பிரார்த்தனைகளின் மூலமும், புரட்சி இயக்கத்தில் மக்கள் ஆழ்ந்த கவனம் செலுத்தும்படி செய்தனர்.

முஸ்லிம்களிடையே முல்லாக்கள் தீவிரப் பிரசாரம் செய்து வந்தனர். தேசத்துக்காகவும் மதத்துக்காகவும் நடக்கப் போகும் போரில் தங்களுடைய ரத்தத்தைச் சிந்தி வெற்றிபெற ஆயிரக்கணக்கான முஸ்லிம்கள் உறுதிகொண்டு, தலைவர்களின் சமிக்ஞையை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள். முஸ்லிம்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களைத் தங்களுடைய கொடிய பகைவர்களாகக் கருதினார்கள் என்று ஆங்கில சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். குறிப்பாக, அலாகாபாத் ரகசியச் சங்க நிர்வாகத்தில் ஹிந்துக்களைக் காட்டிலும் முஸ்லிம்களே அதிகப் பங்கெடுத்துக் கொண்டனர். தேச விடுதலை இயக்கத்தில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள் என்ற வேற்றுமை எதுவும் இன்றி எல்லோரும் சேர்ந்துகொண்டார்கள். அந்த நகர் நீதிபதிகள், முனிசீப்புகள் முதலியோருங்கூட அதில் கலந்துகொண்டார்கள்.

அலாகாபாத், மாகாணத்தின் முக்கியப் பிரதேசமானதால் அங்குள்ள கோட்டையைப் பாதுகாக்க ஆங்கிலேயர்கள் பிரமாதமான முன்னேற்பாடுகளைச் செய்திருக்க வேண்டும். ஆனால் நாடு முழுவதும் புரட்சித் தீ உள்ளூறக் குமுறி வருகிறது என்பதை மே மாத ஆரம்பம்வரையில் ஆங்கிலேயர்கள் அறியார். ஆதலின் அலாகாபாத்தில் அவர்கள் செய்திருந்த ராணுவ ஏற்பாடுகளெல்லாம் படுமோசமாக இருந்தன. அங்கே புரட்சி அலுவல்கள் மிகத் திறமையுடனும் பரம ரகசியமாகவும் நடந்து வந்ததால், வெள்ளையர்கள் அந்த நகரில் ஓர் ஆங்கிலச் சிப்பாய்கூட வைத்துக்கொள்ளவில்லை!

மீரத்திலிருந்து செய்தி வந்தபொழுது, அலாகாபாத்தில் 6-ஆவது சிப்பாய்ப் படையும் பிரோஸ்புரியிலிருந்து வந்த இருநூறு பேர்கள் அடங்கிய சீக்கியப் படையும் மாத்திரமே இருந்தன. பிறகுதான் அயோத்தியில் இருந்த குதிரைப் படைகள் அங்கே கொண்டுவரப்பட்டன. கோட்டையும் அதிலிருந்த ஏராளமான வெடிமருந்து, ஆயுதங்கள் முதலியனவும் முற்றும் இந்தியச் சிப்பாய்களின் காவலில் விடப்பட்டன. அந்தச் சிப்பாய்களின் அதிகாரிகளோ, தங்களுடைய சிப்பாய்கள் ராஜபக்தியே உருவெடுத்து வந்தவர்கள் என்று நினைத்துக்கொண் டிருந்தார்கள். சிப்பாய்களும் தங்கள் தேசபக்தியை வெளியில் காட்டாமல்,

வெள்ளையர்களிடம் மிகுந்த விசுவாசம் உடையவர்கள்போல் நடித்து வந்தனர்.

சிப்பாய்களின் மன நிலையைப் பரிசோதனை செய்வதற்காக ஆங்கிலேயர்கள் ஜூன் மாதம் 6-ஆம் தேதி அவர்கள் இடத்துக்குச் சென்றபோது, சிப்பாய்கள் வெள்ளையர்களுக்கு எள்ளளவும் சந்தேகம் ஏற்படா வண்ணம் தங்களுடைய அபரிமிதமான 'விசுவாசத்'தைக் காட்டினர். சிலர் ஆங்கிலேய அதிகாரிகளை ஆலிங்கனம் செய்து, தங்கள் அன்பைத் தெரிவித்தனர். எனினும் அதே சிப்பாய்கள்தாம் அன்றிரவே கையில் வாள்களுடன், 'பறங்கியர்களைக் கொல்லுங்கள்!' என்று கோஷம் செய்து கொண்டு சுதந்தரப் போரை ஆரம்பித்தார்கள்.

தங்களுடைய திட்டத்துக்கு யாதொரு குந்தகமும் ஏற்படாமல் இருக்கவும், காசியில் செய்ததுபோல் தங்களையும் ஆங்கிலேயர்கள் நிராயுதபாணிகள் ஆக்கிவிடாமல் இருக்கவும் சிப்பாய்கள் பல தந்திர முறைகளைக் கைக்கொண்டனர். அதே சமயம் வெள்ளையர்களும் வாளா இருக்கவில்லை. அவர்கள் தங்களுடைய குடும்பங்களையெல்லாம், கோட்டையில் இருந்த சீக்கியச் சிப்பாய்களிடமும் குதிரைப் படையினரிடமும் பாதுகாப்புக்காக ஒப்பித்தனர்.

காசி நிகழ்ச்சிகளைப்பற்றி 5-ஆம் தேதி அலாகாபாத்துக்குச் செய்தி கிடைத்தது. அன்று அலாகாபாத்தில் நிலைமை மிகவும் கொந்தளிப்பாக இருந்ததால், கோட்டைக் கதவுகளையெல்லாம் மூடிவிட்டு, காசி செல்லும் ரஸ்தாவிலுள்ள பாலத்தை நோக்கி ஆங்கிலேயர்கள் தங்களுடைய பீரங்கிகளையெல்லாம் தயாராக வைத்தனர். அன்றிரவு ஆங்கில அதிகாரிகளெல்லாம் சாப்பாட்டு விடுதியில் கூடியபோது சிறிது தூரத்தில் பயங்கரமான சங்கநாதம் கேட்கத் தொடங்கியது! 6-ஆவது படை போருக்கு எழுந்துவிட்டது என்பதை அந்தச் சங்கநாதம் சிறிதும் சந்தேகமின்றி ஆங்கிலேயர்களுக்கு அறிவித்தது.

காசிப் பக்கமாக வைக்கப்பட்டிருந்த பீரங்கிகளைக் கோட்டைக்குள் கொண்டு செல்லும்படி அன்று மாலை ஆங்கிலேயர்கள் சிப்பாய்களுக்குக் கட்டளையிட்டார்கள். ஆனால் சிப்பாய்கள் அதற்குக் கீழ்ப்படியவில்லை. ஆங்கிலேயர்களின் ஆக்ஞைகளுக்கெல்லாம் ஆட்சேபமின்றி ஆடிவந்த அந்த வீரர்களின் விசுவாசம் திடீரென்று இருந்த இடம் தெரியாமல் மறைந்தது! அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படியச் சிப்பாய்கள் மறுத்ததுடன் நில்லாமல், அந்தப் பீரங்கிகளைக் கோட்டைக்குக் கொண்டுபோவதற்குப் பதிலாக ராணுவ முகாமுக்குக் கொண்டுபோகும்படி எதிர் உத்தரவும் பிறப்பித்தனர்!

சிப்பாய்கள் தங்களுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியாததைக் கண்டு ஆத்திரமடைந்த ஆங்கில அதிகாரிகள், அவர்களைத் தண்டிக்கும்படி அயோத்திக் குதிரைப் படையை ஏவினர். உடனே லெப்டினன்ட் அலெக்ஸாண்டர், லெப்டினன்ட் ஹார்வர்டு அதிகாரிகளும் சிப்பாய்கள் இருக்கும் இடத்துக்குக் குதி

ரைப் படையைக் கொண்டு சென்றார்கள். அங்கே சென்றதும் அவ்விருவரும், சிப்பாய்களைத் தாக்கும்படி குதிரைப் படைக்கு உத்தரவிட்டனர். தாங்கள் உத்தரவிட்டதும் அந்தப் படை வீரர்கள் சிப்பாய்கள்மீது பாய்ந்துவிடுவார்கள் என்றும், குதிரை களின் கால்களால் மிதியுண்டு மாய்வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி எதுவும் இராதென்றும் அந்த அதிகாரிகள் கருதினர்.

ஆனால் குதிரைகளோ ஓர் அங்குலங் கூட முன் செல்ல வில்லை. அவைகளின் மீதிருந்த வீரர்கள் தங்கள் தேச சகோதரர் களுக்கு விரோதமாகத் தங்களுடைய வாள்களை உருவ மறுத்து விட்டார்கள். சிப்பாய்களின் மகத்தான கரகோஷமும் சந் தோஷ ஆரவாரமும் வானளாவின. அதே சமயம் லெப்டி னன்ட் அலெக்ஸாண்டர், மார்பில் அடிபட்டுக் கீழே சாய்ந்து மாண்டான். பின்னால் குதிரை வீரர்களும் சிப்பாய்களும் பரஸ் பரம் ஆலிங்கனம் செய்துகொண்டு அணிவகுப்பு மைதானத்துக் குச் சென்றனர். அந்த மைதானத்தில் தென்பட்ட காட்சி யை வர்ணிப்பதென்பது இயலாத காரியம். ஓர் ஆங்கில அதிகாரி ஏதாவது உத்தரவிட்டால் உடனே எங்கிருந்தாவது ஒரு தோட்டா பறந்து வந்து அவரை வீழ்த்திவிடும்! இவ்வாறாக பிளங்கெட், ஸ்டீவர்ட், ஹாவஸ், பிரிங்கிள், மன்றோ, பர்ச், இன்ஸ் முதலிய அதிகாரிகள் வீழ்ந்து மாண்டனர். அதன்பின் தேசபக்தர்களும் ஆவேசங்கொண்ட மக்களும் வெள்ளையர்களின் வீடுகளுக்குத் தீ வைத்தார்கள்.

அந்த மாகாணத்தில் அலாகாபாத் கோட்டை மிக மிக முக்கியமான ஓர் இடம் என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். கோட்டைக்குள்தான் ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் ஏராளமான வெடிமருந்தும் வைக்கப்பட்டிருந்தன. அது முற்றும் சீக்கியர்களின் காவலிலேயே இருந்தது. ஏற்கனவே ஏற்பாடு செய்திருந்தபடி புரட்சி ஆரம்பம் ஆகிவிட்டது என்பதற்கு அறி குறியாகக் கோட்டையிலுள்ள சீக்கியர்களும் மற்றச் சிப்பாய் களும் குண்டு போடுவார்கள் என்று தேசபக்தர்கள் எதிர்பார்த் துக்கொண் டிருந்தனர். ஆனால் கோட்டைக்குள் இருந்த துரோகி கள் அங்கிருந்த வெள்ளையர் கொடியை அகற்றாததுடன், உள்ளே இருந்த சில தேசபக்தர்களை நிராயுதபாணிகள் ஆக்கி வெளியே துரத்தவும் ஆங்கிலேயர்களுக்கு உதவி செய்தனர்.

தேசம் முழுவதும் சுதந்தரப் போரில் ஈடுபட்டிருக்கையில், சில துரோகிகள் தங்களுக்கு உதவி புரிந்ததன் கருத்தை இன் றுங்கூட ஆங்கிலேயர்கள் அறிந்துகொள்ள முடியாமல் ஆச்சரியம் அடைகின்றனர். அந்தத் துரோகிகள் வெள்ளையர்களுக்கு உதவி செய்திராவிடில், அலாகாபாத் கோட்டை அரை மணி நேரத்தில் வீழ்ச்சியடைந்து, அங்கே தேசபக்தர்களின் ஆதிக்கம் ஏற்பட்டி ருக்கும்; அரை மணி நேரத்தில் ஆங்கில ஆட்சியின் முதுகெலும்பு நொறுங்கியிருக்கும். ஆனால் ஆங்கிலேயர்களுக்கு இந்தியத் துரோகிகளின் உதவி கிடைத்ததால், அவர்களுக்குக் கோட்டை யைப் பாதுகாத்துக்கொள்வது சாத்தியமாகிவிட்டது.

அவ்வமயம் கோட்டைக்குள் இருந்த நானூறு பேர்களைத் தவிர, நகர ஜனங்கள் உட்பட வெளியிலிருந்த எல்லோரும் சுதந்தரப் போரில் ஈடுபட்டார்கள். ஆங்கிலேயர்களின் வீடுகளை யெல்லாம் துவம்சம் செய்தபின், சிப்பாய்களும் ஜனங்களும் சேர்ந்து சிறையைத் தகர்த்தனர். அங்கிருந்து விடுதலை யடைந்த நூற்றுக்கணக்கான கைதிகளும் மிகுந்த ஆத்திரத்துடன் வெள்ளையர்களை வேட்டையாடப் புறப்பட்டார்கள். ரெயில் பாதைகளையும் தந்திக் கம்பிகளையும் தேசபக்தர்கள் மறந்துவிட வில்லை! ரெயில்வே அதிகாரிகள் உள்பட ரெயில் பாதைகள், தந்திக் கம்பங்கள், கம்பிகள், எஞ்சின்கள் எல்லாம் தவிடுபொடி யாயின!

இந்தியர்களை அலட்சியமாக நினைத்து வந்த அரை ஆங்கிலே யர்களான துரோகிகளையும் தேசபக்தர்கள் நையப் புடைத்து, அவர்களுடைய வீடுகளையும் பலமாகத் தாக்கினர். அத்தகைய அரை ஆங்கிலேயர்களில், 'டில்லி சக்கரவர்த்தியிடம் நாங்கள் விசவாசத்துடன் இருப்பதோடு, ஆங்கிலேயர்களை எதிர்த்தும் போராடுவோம்' என்று பிரமாணம் எடுத்துக்கொண்டவர்கள் மாத்திரமே தேசபக்தர்களின் ஆத்திரத்துக்கு உள்ளாகாமல் தப்ப முடிந்தது.

17-ஆம் தேதியன்று புரட்சி வீரர்கள் சுமார் முப்பது லட் சம் ரூபாய் அடங்கிய கஜானைவைக் கைப்பற்றினர். பிறகு மாலை யில் அவர்கள் எல்லோரும் ஒரு பிரம்மாண்டமான தேசீயக் கொடி யுடன் ஊர்வலம் சென்று, அதைப் போலீஸ் ஸ்டேஷனில் வான ளாவப் பறக்கவிட்டு, அதற்கு வணக்கம் செய்தனர்.

அதேசமயம் அலாகாபாத் மாகாணம் முழுவதும் ஒரே மனி தர் போன்று ஏக காலத்தில் பொங்கியெழுந்தது. வெகு சீக்கிரத் தில் நிலைமை அடியோடு மாறி, ஆங்கிலேயர் ஆட்சி அங்கிருந்த அடையாளமே தெரியாமல் மறைந்துவிட்டது. ஒவ்வொரு கிரா மத்திலும் தேசீயக் கொடி பறக்க ஆரம்பித்தது. அடிமைத் தன மரம் இயற்கைக்கு முரணான சிருஷ்டியானதால், எத்தனை நூற்றாண்டுகள் ஆயினும் அது வேரூன்ற முடியாது என்ற உண் மையை மாகாண மக்கள் உலகிற்கு நிரூபித்துக் காட்டினர்.

அலாகாபாத் மாகாணத்தைச் சேர்ந்த தாலுக்தார்களில் பெரும்பாலோரும் முஸ்லிம்களாவர். அவர்களின் குடிகளோ ஹிந் துக்கள். எனவே அவ்விரு சாராரும் ஒன்று சேர்வது என்பது அசாத்தியமான காரியம் என்று ஆங்கிலேயர்கள் எண்ணி வந்த னர். ஆனால் இந்தியர்கள் ஒரு காலத்திலும் மறக்க முடியாத அந்த ஜூன் மாதம் முதல் வாரத்தில் அசாத்தியமான காரியங்களெல் லாம் சாத்தியமாயின!

அலாகாபாத் நகர ஜனங்கள் சுதந்தரப் போரை ஆரம்பித்து விட்டார்கள் என்ற செய்தி கிடைக்கும் வரையில்கூடக் காத்தி ருக்க விரும்பாமல், அந்த மாகாணத்தைச் சேர்ந்த எல்லாக் கிரா மங்களிலும் மக்கள் கர்ஜித்தெழுந்து தங்களுடைய சுதந்தரத் தைப் பிரகடனம் செய்தனர். ஒரே தாயான இந்தியாவின்

புதல்வர்களாகிய ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஆங்கில ஆட்சியை ஒழிப்பதற்காக வீறுகொண்டு எழுந்தனர். சிறந்த தேகாரோக்கியமும் திடகாத்திரமும் பொருந்திய சிப்பாய்கள் மட்டும் அல்ல, ராணுவத்திலிருந்து உதவிச் சம்பளம் பெற்று விலகிய கிழவர்கள்கூடத் தேசீயத் தொண்டர்களாகத் தங்களைப் பதிவு செய்துகொண்டார்கள். ராணுவத்தில் மீண்டும் சேர முடியாத தொண்டு கிழவர்கள், இளைஞர்களுக்கு ராணுவ தந்திரங்களைக் கற்றுக் கொடுத்தார்கள். வியாபாரிகள், மார்வாரிகள், வணிகர்கள் முதலிய யாவரும் பொதுஜனக் கிளர்ச்சியில் மிகவும் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டார்கள்.

'புரட்சிக்காரர்களைத் தவிர, பிரபல வியாபாரிகளுக்கும் மற்றவர்களுக்குங்கூட நம்மீது ஆத்திரம் பொங்கிக்கொண் டிருக்கிறது. அவர்களிலும் பலர் நமக்கு விரோதமான இயக்கத்தில் தீவிரப் பங்கு கொண்டு வருகின்றனர்' என்று ஜெனரல் நீலனின் பிரலாபம் அடங்கிய ஓர் அறிக்கை கூறுகின்றது. எனினும் பாமரர்களான விவசாயிகள், தங்கள் பக்கமே சேருவார்கள் என்று ஆங்கிலேயர்கள் நம்பிக்கொண் டிருந்தனர். ஆனால் அலாகாபாத் நிகழ்ச்சிகள் அவர்களுடைய அந்தக் கனவிலும் மண்ணைப் போட்டுவிட்டன.

1857-ஆம் வருஷத்துக்கு முன்னர் விவசாயிகள் எந்த அரசியல் கிளர்ச்சிகளிலும் கலந்துகொள்ளவில்லை என்பது உண்மையே. ஆனால் அவ்வருஷம் நடந்த சுதந்தரப் போரில் விவசாயிகளும் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டார்கள். வெள்ளையர்களால் விலக்கப்பட்ட பழைய தாலூக்தார்களின் தலைமையில் விவசாயிகள் கலப்பைகளை யெல்லாம் அப்பால் எறிந்துவிட்டு, கத்திகளை ஏந்திச் சுதந்தரப் போரில் ஈடுபட்டார்கள். இந்திய மன்னர்களின் ஆட்சிக்கும் அந்நியர் ஆட்சிக்கும் உள்ள வேற்றுமையை அவர்கள் நேரில் அறிந்துகொண்டதே, அவர்களிடையே ஏற்பட்ட அத்தகைய மாறுதலுக்குக் காரணமாகும்.

அப்போது குழந்தைகள்கூட அடிமைத்தனத்தையும் அந்நிய ஆட்சியையும் வெறுத்தன. பத்துப் பன்னிரண்டு வயதான சிறுவர்கள் அழகிய தேசீயக்கொடியை எடுத்துக்கொண்டு ஆரவாரத்துடன் தெருக்களில் ஊர்வலம் சென்றனர். சிறுவர்களின் தேசபக்தியும் துணிச்சலும் ஆங்கிலேயர்களுக்கு ஆத்திர வெறியை உண்டுபண்ணின. எனவே, சிறுவர்களையெல்லாம் கைது செய்து அவர்கள் எல்லோருக்கும் வெள்ளையர்கள் தூக்குத் தண்டனை விதித்தனர்!

எல்லோராலும் பாராட்டப்பட வேண்டிய அந்தப் பாலகர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட் டதைக் கண்டு வெட்கமும் துக்கமும் அடைந்த ஓர் ஆங்கில அதிகாரி கண்ணீர் பெருகப் பிரதம தளபதியிடம் சென்று, குழந்தைகளை விடுதலை செய்யும்படி வேண்டிக்கொண்டார். ஆனால் அந்த இரண்டு கால் மிருகம் அந்த வேண்டுகோளை நிராகரித்துவிட்டது. சுதந்தரக் கொடியைத் தாங்கிச் சென்ற பாவத்திற்காக அந்தச் சிறுவர்கள் எல்லோரும் பகிரங்கமாகத் தூக்கில் இடப்பட்டனர்.

அந்தச் சிறிய தேவர்களைப் படுகொலை செய்த பாதகர்களான ஆங்கில அசுரர்கள்மீது காலதேவதை வஞ்சம் தீர்க்கும் நாள் வராமல் போகுமா? அந்த அடாத செய்கை அந்த மாகாணம் முழுவதும் மகத்தான அதிர்ச்சியை உண்டுபண்ணியது. 'அடிமைச் சங்கிலியை வெட்டி வீழ்த்துங்கள்!' என்று கர்ஜித்துக் கொண்டு ஜனங்கள் எல்லோரும் போருக்குக் கிளம்பினர். அந்தப் போரில் மக்கள் வெற்றிபெற வேண்டுமென்று பிரயாகையிலுள்ள பிராம்மணர்களும் முல்லாக்களும் ஏகோபித்து ஆண்டவனைப் பிரார்த்தனை செய்தார்கள்.

இவ்வளவு ஆவேசத்துடனும் வேகமாகவும் பயங்கரமாகவும் இந்தியா எங்கும் பரவிநின்ற புரட்சிக்கு இந்திய சரித்திரத்திலேயே வேறு உவமை இல்லை. இந்தியாவின் ஜனசக்தி திடீரென்று பீரிட்டெழுவதும், வானம் பேரிடி முழக்கத்துடன் பெருமழையைச் சொரிவதுபோல் ஜனங்கள் தேச விடுதலைக்காகச் சங்கநாதப் பேரொலியுடன் ரத்த மாரி சொரிவதும் இந்தியாவில் அதற்கு முன் கேள்விப்படாத விஷயமாகும். அதிலும் குறிப்பாக, தாய் நாட்டின் விடுதலைக்காக ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தோளோடு தோள் நின்று போரிட்டது, மனத்தை உருக்கித் தேச பக்தியை ஊட்டும் அற்புதமான காட்சியாக இருந்தது.

அத்தகைய பயங்கரமான சூறுவளியை உண்டாக்கிய ஹிந்துஸ்தானம் அதைக் கட்டுப்படுத்தியும் சரியான பாதையில் செலுத்தியும் வெற்றிபெற முடியாததைக் குறித்து நாம் வியப்படைவதற்கில்லை. ஆனல், அவ்விதச் சூறுவளியை உண்டாக்கும் சக்தி இந்தியாவுக்கு ஏற்பட்டதுதான் வியப்பாகும்.

உலகில் எந்த நாடும் ஒரு புரட்சியைத் திடீரென்று அடக்கி நடத்தும் சக்தி பெற்றதில்லை. எந்தப் புரட்சியிலும், அராஜகம், குழப்பம், கொடுமை, சுயநலம், கொள்ளை முதலியன தவிர்க்க முடியாத விபரீதங்களாகும். எனினும் பிரெஞ்சுப் புரட்சியுடன் ஒப்பிடும்போது, 1857-இல் நம் நாட்டில் நிகழ்ந்த விபரீதங்கள் மிக மிகக் குறைவானவை என்றே சொல்லவேண்டும். தவிர, முதலாவது சுதந்தர யுத்தம் இந்தியா செய்ய முற்பட்ட ஒரு மகத்தான பரிசோதனை. ஆகையால், அந்தப் பரிசோதனை மிகவும் வெற்றிகரமாக நடந்த அலாகாபாத்தில்கூடச் சில தவறுகளும் குழப்பமும் நேர்ந்ததைக் குறித்து நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஜமீன்தார்களின் பரம்பரையான தீராப் பகைகள், நீண்டகால அடிமை வாழ்வின் விளைவாகத் தாண்டவமாடிய சகிக்க முடியாத வறுமை, ஹிந்து-முஸ்லிம் துவேஷம் முதலியவற்றினிடையே ஏற்பட்ட புரட்சியின் முதல் அதிர்ச்சியில் சிறிது காலம் அராஜகம் தாண்டமாடியே தீரும். சிருஷ்டியில் பிரளயத்தைத் தடுக்கும் சக்தி பரமாத்மாவுக்கும் இல்லை. எனவே புரட்சியை நாடுவோர் அதை நிறைவேற்றும்போது ஏற்படும் தவிர்க்க முடியாத கஷ்டங்களையெல்லாம் சமாளிக்கத் தயாராக இருக்க வேண்டும்.

அலாகாபாத்தில் ஒரு வாரம் வரையில் கொள்ளைகளும் தகனங்களும் நடந்தபின், அராஜக ஆபத்துகளெல்லாம் மறைந்து, புரட்சி, கட்டுக்கோப்பான முறையில் உருவாகத் தொடங்கியது. புரட்சி மூண்ட மற்ற இடங்களைப்போல் அங்கும் தகுந்த தலைவர்கள் கிடைப்பதில் கஷ்டம் ஏற்பட்டது. எனினும் அந்த நகரில் அந்தக் கஷ்டம் அதி சீக்கிரத்தில் நிவர்த்தியாகிவிட்டது. தீவிர சுதந்தரப் பிரியரான லியாகத் அலி என்பவர் தலைமை வகித்துப் புரட்சியை நடத்த முன்வந்தார்.

நெசவுத் தொழிலாளர்களிடையே அவர் ஒரு மத போதகராகவும், பள்ளிக்கூட உபாத்தியாயராகவும் இருந்துவந்தார் என்பதைத் தவிர, விசேஷ மகத்துவம் பொருந்திய அவரைப்பற்றி வேறு ஏதும் தெரியவில்லை. அவர் பரிசுத்தமான வாழ்க்கை நடத்தி வந்ததால் எல்லோரும் அவரிடத்தில் மிகுந்த அன்பும் மரியாதையும் கொண்டிருந்தனர். அலாகாபாத் மாகாணம் விடுதலை பெற்றதும் சில ஜமீன்தார்கள் தங்கள் பகுதியில் இருந்த அவரை அலாகாபாத்துக்கு அழைத்துவந்து, அந்த மாகாணத்தின் பிரதம அதிகாரியாக நியமித்தார்கள். அவர் டில்லிச் சக்கரவர்த்தியின் பிரதிநிதி என்று பிரகடனம் செய்வதற்காக மாபெரும் விழா ஒன்றும் நடந்தது.

மதில்களால் சூழப்பட்ட 'குஸ்ரு பாக்' என்ற பாதுகாப்பான ஒரு தோட்டத்துக்குள் அவர் தம் தலைமைக் காரியாலயத்தை ஸ்தாபித்துக்கொண்டு, அந்த மாகாணத்தில் புரட்சியை உருவாக்கும் வேலையை வெகு தீவிரமாகக் கவனிக்கலானார். அவர் அரசாங்க அலுவல்களையெல்லாம் அதி சீக்கிரத்தில் வெகு ஒழுங்காகச் சீர்ப்படுத்தினார். தம்மைச் சக்கரவர்த்தியின் சுபேதாரென்று வாயளவில் சொல்லிக்கொள்வதுடன் தமது கடமை முடிந்துவிட்டதாகக் கருதாது, அலாகாபாத் நிலைமைபற்றி டில்லிச் சக்கரவர்த்திக்கு இறுதிவரையில் விவரமான அறிக்கைகள் அனுப்பிவந்தார்.

மௌல்வி லியாகத் அலி பதவி ஏற்றுக்கொண்டதும் அலாகாபாத் கோட்டையைக் கைப்பற்றுவதே தமது முதல் வேலையென்று கருதினார். அதற்காகப் பலமான படை சேர்க்க அவர் முயற்சிகள் எடுத்துக்கொண்டு வருகையில், காசியிலிருந்து ஜெனரல் நீலன் அலாகாபாத்தை நோக்கிப் படையெடுத்து வருவதாகச் செய்தி கிடைத்தது. அப்போதுகூட, கோட்டைக்குள் இருந்த நானூறு துரோகிகளும் மயக்கம் தெளிந்திருப்பார்களாயின், துப்பாக்கியால் ஒரு தடவைகூடச் சுடாமல் கோட்டையையும், அதில் இருந்த துப்பாக்கிகள், ஆயுதங்கள், வெடி மருந்துகள் முதலியவற்றையும் தேச பக்தர்கள் கைப்பற்றியிருக்க முடியும். நீலனும், அவ்விதம் நேர்ந்துவிடுமோ என்று இராப் பகலாக நடுங்கிக்கொண்டுதான் வெள்ளைத் துருப்புகளுடன் அவசரம் அவசரமாக ஜூன் 11-ஆம் தேதி அலாகாபாத்துக்கு வந்து சேர்ந்தான்.

கோட்டைக்குள் இருந்த சீக்கியர்கள் கோட்டையையும், உள்ளே இருந்த ஆங்கிலேயர்களையும், தான் வரும்வரையில் பாதுகாத்துக்கொண்டிருப்பார்களென்று நீலன் நம்பவேயில்லை;

எனவே, தான் வரும்போது கோட்டையில் வெள்ளையர் கொடி பறந்துகொண் டிருப்பதைக் கண்டு அவனுக்கு அளவு கடந்த ஆனந்தம் உண்டாயிற்று. உடனே அவன், கோட்டையைக் காவல் புரியும்படி ஆங்கிலத் துருப்புகளுக்கு உத்தரவிட்டு, புரட்சிக்காரர்களை எதிர்த்துப் போர் புரிவதற்காகச் சீக்கியர்களையெல்லாம் கோட்டைக்கு வெளியே அனுப்பினான்.

அதிலிருந்து அவர்களிடங்கூட நீலனுக்கு நம்பிக்கை இல்லை என்பது நிதரிசனமாகத் தெரிகிறது. கோட்டையைப் பாதுகாத்து ஆங்கிலேயர்களுக்கு மகத்தான உதவி புரிந்த சீக்கியர்கள் மீது நீலனுக்கு நம்பிக்கை இல்லை என்றாலும், அவன்மீது அவர்களுக்குப் பூரண நம்பிக்கை இருந்தது! ஆங்கிலேயர்களால் அவ்வாறு அவமதிக்கப்பட்ட பின்னருங்கூட அந்தத் துரோகிகள் தங்களுடைய சகோதரர்களான தேசபக்தர்களின் பக்கம் சேரவில்லை. அது மாத்திரம் அல்ல! ஆங்கிலேயர்களின் கட்டளையைச் சிரமேற்கொண்டு அவர்கள் சுற்றுவட்டத்தில் உள்ள கிராமங்களுக்குத் தீ வைக்கவும் இசைந்தனர்.

17-ஆம் தேதி ஆங்கிலப்படை, நகருக்குள் பிரவேசிக்க ஆரம்பித்தது. அலாகாபாத் மௌல்வி, அச்சம்பவங்களைப்பற்றிச் சக்கரவர்த்திக்கு அனுப்பிய அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது: 'பகைவர்களுடன் சேர்ந்துகொண்ட துரோகிகளான பாவிகளில் சிலர், நகர் முழுவதையும் ஆங்கிலேயர்கள் வெடி வைத்துத் தகர்த்துவிடப் போகிறார்கள் என்ற ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள். அந்த வதந்தியை ஜனங்கள் நம்பும்படி செய்வதற்காக, அவர்கள் தங்களுடைய உயிர்களைக் காப்பாற்றிக்கொள்ள நகரை விட்டுச் செல்வதாக அறிவித்துத் தங்களுடைய வீடுகளையும் காலி செய்துவிட்டுச் சென்றிருக்கின்றனர். ஜனங்களுக்குப் பாதுகாப்பளிப்பதாக நாங்கள் எவ்வளவோ உறுதி கூறியும் பயனில்லை. ஜனங்கள் எல்லோரும் திகிலடைந்து நகரைக் காலி செய்து வருகிறார்கள்.'

மௌல்வி அனுப்பிய அந்த அறிக்கை டில்லி செல்லுமுன்னமே, ஆங்கிலேயர்கள் 'குஸ்ரு பாக்'கைத் தாக்க ஆரம்பித்தனர். தேச பக்தர்கள் அவர்களை எதிர்த்து அன்று அவ்விடத்தைப் பாதுகாத்தனராயினும், கோட்டை பகைவர் வசம் இருந்து வருகையில், பாழடைந்த ஒரு தோட்டத்திற்குள்ளிருந்து அலாகாபாத்தைப் பாதுகாக்க முற்படுவது பைத்தியக்காரத்தனம் என்பதை லியாகத் அலி உணர்ந்து, 17-ஆம் தேதி இரவே தம் சகாக்களுடன் கான்பூருக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டார். மறுநாள் ஆங்கிலேயர்கள், துரோகிகளான இந்தியத் துருப்புகளுடன் அலாகாபாத் நகருக்குள் மீண்டும் பிரவேசித்தனர்.

காசியைப் பின்பற்றி அலாகாபாத்தும் பகைவர்களிடம் வீழ்ச்சி யடைந்தது. எனினும், தேச பக்தர்கள் தைரியத்தை இழக்கவில்லை. பகைவர்கள் பலமான கோட்டைக்குள் பாதுகாப்புடன் இருந்தது, ஜனங்களுக்கு இன்னும் அதிக ஆத்திரத்தையே உண்டுபண்ணியது. எனவே பகைவர்களை எதிர்த்துப் போராடுவ

தற்குற்ற அரண்களை ஒவ்வொரு கிராம ஜனங்களும் அமைத்துக் கொண்டனர்.

அத்தகைய திடசங்கல்பம் கொண்ட மக்களை லஞ்சம் கொடுத்து மயக்கிய காலம் மலையேறிவிட்டது. அந்த யுத்தம் ஓர் உயர்ந்த லட்சியத்துக்காக ஆரம்பிக்கப்பட்டதாதலின், நீலனின் தந்திரம் எதுவும் பலிக்கவில்லை. தலைவர்களின் தலைகளைக் கொண்டு வருவோருக்கு ஆயிரக்கணக்கான ரூபாய் அவன் வெகுமதி அளிப்பதாகப் பறைசாற்றினான். ஆனால், வறுமையால் வாடும் விவசாயிகள்கூட அவனுக்கு உதவி புரிய முன்வரவில்லை!

உயர்ந்த லட்சியத்துக்காகப் பரம ஏழைகளும் பணத்தைத் துச்சமாகக் கருதிப் பெருந்தன்மையுடன் நடந்துகொண்டதைக் கண்டு ஆங்கில அதிகாரிகள் ஆச்சரியமடைந்தனர். ஒரு கிராமத்தில் நிகழ்ந்த சம்பவத்தைப்பற்றி ஆங்கில அதிகாரி ஒருவன் எழுதுவதாவது: 'கலகக்காரர்களின் தலைவனை உயிருடனோ அல்லது அவனது பிரேதத்தையோ கொண்டு வருவோருக்கு ஆயிரம் ரூபாய் இனாம் அளிப்பதாக ஒரு மாஜிஸ்திரேட் விளம்பரம் செய்தார். அந்தக் கிராமவாசிகள் மனம் வைத்தால் அவனை நொடிப்பொழுதில் அதிகாரிகளிடம் கொண்டுவந்து ஒப்பித்துவிட முடியும். அப்படியிருந்தும் ஒருவர்கூட அந்தத் தலைவனைக் காட்டிக் கொடுக்க முன்வரவில்லை. அதற்குக் காரணம் என்னவெனில் ஜனங்களுக்கு நம்மீது ஏற்பட்டுள்ள எல்லையற்ற வெறுப்பேயாகும்.'

ஆங்கிலேயர்களுக்கு எந்தப் பண்டமும் விற்கக்கூடாது என்றும், அவ்விதம் விற்பது மகா பாவமென்றும் மக்கள் கருதிவருகையில், பணத்துக்காக அவர்கள், தலைவர்களுக்குத் துரோகம் செய்வார்கள் என்பது கனவிலும் கருத முடியாத விஷயம் அல்லவா? ஆங்கிலேயர்களுக்குச் சாமான்களை விற்ற சிலர், தேசபக்தர்களால் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர்.

சரித்திராசிரியரான சார்லஸ் பால் எழுதுவதாவது: 'ஐரோப்பியர்களுக்காக வேலை செய்தவர்கள் புரட்சிக்காரர்களால் கொல்லப்பட்டனர். ஒரு ரொட்டிக் கடைக்காரன் ஆங்கிலேயர்களுக்கு ரொட்டி விற்றான் என்பதற்காக அவனது கையை வெட்டிவிட்டனர்.'

இவ்வாறாக, வெள்ளையர்களுக்கு விரோதமாகப் பகிஷ்காரம் தீவிரமாக இருந்தது. அதனால் வெள்ளையர்கள் தங்களுக்குத் தேவையான சாதனம் எதுவும் அகப்படாமல் திண்டாட நேர்ந்தது. அலாகாபாத் கோட்டை அவர்களுடைய கைவசம் இருந்தது. உண்மையே. ஆயினும் அவர்கள் கோட்டையை விட்டு ஓர் அடி கூட முன்பின் செல்ல முடியவில்லை. அவர்களுக்கு மாடுகளோ வண்டிகளோ மருந்துகளோ எதுவும் கிடைக்கவில்லை. நோயாளிகளின் 'டோலி' களைத் தூக்கவும் ஆள் கிடைக்கவில்லை. பல இடங்களிலும் ஆங்கில நோயாளிகள் அவதிப்பட்டுக்கொண்டிருந்தார்கள். நோயாளிகளின் பயங்கரமான கூச்சல்களை இடைவிடாது கேட்டதன் விளைவாகச் சில ஆங்கிலப் பெண்கள் மாண்டனர்!

ஜூன் மாதம் புரட்சியை ஆரம்பித்தால், தாங்க முடியாத வெயிலே பல வெள்ளையர்களையும் பலி கொண்டுவிடும் என்று தேசபக்தர்கள் ஏற்கனவே கூறிவந்தது உண்மையாகியது. வெயில் தாங்க முடியாமல் வெள்ளையர்கள் அடிக்கடி தலையில் குளிர்ந்த தண்ணீரைக் கொட்டிக்கொண் டிருந்தனர்! அந்த நிலையில் உண வுப் பொருள்களும் குறைந்து வந்தன. ஆங்கிலேயர்களுக்கு ஒரு சோளக் கொண்டையை விற்கக்கூட யாரும் விரும்பவில்லை. 'போதிய உணவு கிடைக்கவில்லை; நேற்று நான் சாப்பிட்ட உணவை நாய்கூடத் தொடாது' என்று ஒவ்வொரு வெள்ளைய னும் புலம்பலானான். உஷ்ணத்தினாலும் பட்டினியினாலும் வெள் ளையர்கள் சீதபேதி கண்டு அவஸ்தைப்பட்டார்கள்.

கஷ்டம் தாங்க முடியாமல் ஆங்கிலத் துருப்புகள் எல்லை மீறிக் குடிக்கவும் ஆரம்பித்ததால், அவர்களிடையே ஒழுங்கு என் பதே அடியோடு மறைந்தது. அவர்கள் நீலனின் உத்தரவுகளுக் கும் கீழ்ப்படிய மறுத்தனர். நிலைமை படுமோசம் ஆகியதால் 'நம் துருப்புகளில் சிலரைத் தூக்கில் இட்டாலன்றி அவர்கள ிடையே இனி ஒழுங்கு ஏற்பட முடியாது' என்று நீலன் கானிங் குக்குக் கடிதம் எழுதினான். அலாகாபாத்தை விட்டு அவர்கள் வெளிச் செல்லவும் முடியவில்லை. உதவிக்கு வரும்படி கான்பூர் வெள்ளையர்களிடமிருந்து அடிக்கடி வேண்டுகோள்கள் வந்தும் கூட, நீலனால் எதுவும் செய்ய முடியவில்லை.

நீலனும் அவனுடைய துப்பாக்கித் துருப்புகளும் சென்னையில் இருந்து வந்தன என்பது முக்கியமான விஷயமாகும். அச் சம யம் சென்னையில் அற்பப் புரட்சி ஏற்பட்டிருந்தாலும், அதை ஆங்கிலேயர்களால் ஒரு நாள்கூடச் சமாளித்து நிற்க முடி திராது. அலாகாபாத் இந்தியர்கள் ஆங்கிலேயர்களைக் கோட்டை யில் அடைபட்டுக் கிடக்கும்படி செய்தது மிகவும் சாமர்த் தியமான ஒரு காரியம் எனினும், ஆங்கிலேயர்கள் உண்மையில் மனச்சோர்வடையக் காரணமில்லை. ஏனெனில் சென்னை, ப பாய், ராஜபுதனம், பாஞ்சாலம், நேபாளம் முதலிய மற்றும் சில பிரதேசங்கள், தேசீய இயக்கத்தின் கழுத்தில் தொங்கிக்கொண் டிருக்கும் ஒரு கருங்கல்லைப்போல் அதற்கு முட்டுக்கட்டையா இருந்து வந்தன. அவைகளில் சில பின்னர், தங்கள் தேச ம க்களையே தாக்கவும் முன்வந்தன.

காசியில் வெள்ளையர்களுக்கு உதவியவர்கள் யார்? இந்திய களிடையே முளைத்த புல்லுருவிகள் அல்லவா? எனினும் பிரய கையிலிருந்த பிராம்மணப் புரோகிதர்கள், முல்லாக்கள், தாலு தார்கள், விவசாயிகள், உபாத்தியாயர்கள், மாணவர்கள், விய பாரிகள் முதலிய சகலரும், எத்தனையோ கஷ்டங்களுக் கிடையி தேசீய வீரர்களுக்கே ஆதரவளித்தனர். தகுந்த படைத் தலைவ இல்லாததால் ஏற்பட்ட விபரீதம், தோல்வி, சோர்வு, அராஜக முதலிய கஷ்டங்களுக்கு இடையிலும் அவர்கள் அடிமை தனத்தை எப்படியாவது குழிதோண்டிப் புதைத்துவிட அரும்பா பட்டார்கள். அடிமை வாழ்வை அகற்றி, விடுதலையும் சுயராஜ் மும் பெறுவதற்காக அந்த உத்தமர்கள் உயிரையும் அர்ப்பண

செய்ததைச் சரித்திரம் என்றென்றும் பெருமையுடன் குறிப்பிடும் என்பதில் ஐயமும் உண்டோ!

ஆங்கிலேயர்களின் அடிமைச் சங்கிலியைத் தகர்த்தெறி வதற்காக அந்தத் தேசபக்தர்கள் பட்ட பாடு கொஞ்சநஞ்சம் அல்ல. காசி, அலாகாபாத் மாகாணங்களில் நீலன் இழைத்த மிரு கத்தனமான கொடுமைகளுக்கு, நரமாமிசம் உண்ணும் காட்டு மிராண்டிகளின் சரித்திரத்திலும் உவமை காண்பது அரிது! சொல் அலங்காரத்துக்காக நாம் இவ்விதம் எழுதவில்லை. இதெல்லாம் ஆதாரமற்ற விஷயமும் அல்ல. ஆங்கில சரித்திராசிரியர்களே அரைமனத்துடன் ஒப்புக்கொண்டுள்ள உண்மை. நீலனின் அட் டூழியங்களை அவர்களால் மழுப்ப முடிந்ததே யன்றி, மறைக்க முடியவில்லை. காசியில் வெள்ளையர்கள் செய்த மிருகத்தனமான கொடுமைகளைப்பற்றிச் சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளோம்.

அலாகாபாத்தில் ஆங்கிலேயர்கள் புரிந்த 'சாகசங்களை'ப் பற்றி ஒரு வெள்ளையன் எழுதிய கடிதத்தைச் சரித்திராசிரியரான சார்லஸ் பால் வெளியிட்டிருக்கிறார். அதன் விவரம்: 'ஒரு தடவை நான் செய்த பிரயாணம் எனக்கு அளவற்ற ஆனந்தத் தைக் கொடுத்தது. நாங்கள் நதியின் வழியாகத் துப்பாக்கிகளு டன் கப்பலில் சென்றபோது இரு கரைகளையும் நோக்கிச் சரமாரி யாகச் சுட்டுக்கொண்டே சென்றோம். சீக்கியர்களும் துப்பாக்கிப் படையினரும் நகருக்குள் பிரவேசித்துச் சுட்டனர். நாங்கள் கரையில் இறங்கியதும் தென்பட்டவர்களை யெல்லாம் சுட்டோம். நான் மாத்திரம் பல கறுப்பு மனிதர்களைச் சுட்டு வீழ்த்தினேன். அப்படியும் என் வஞ்சதாகம் தீரவில்லை. எனவே நாங்கள் மேலும் சரமாரியாகச் சுட்டுக்கொண்டு செல்லவே, பல இடங்களும் தீப் பிடித்துக்கொண்டன. அவ்வமயம் காற்றும் உதவியாக இருந்த தால் ஜ்வாலை ஆகாயம் அளாவியது. ஆங்கிலேயர்கள் வஞ்சம் தீர்க் கும் நாள் வந்துவிட்டது என்பதைத் துரோகிகளான அயோக்கியர் களுக்கு அந்த ஜ்வாலை அறிவிப்பதுபோல் இருந்தது. அவ்விதமே ஒவ்வொரு நாளும் நாங்கள் சென்று பல கிராமங்களைத் தகனம் செய்தோம். சர்க்காருக்கும் அதிகாரிகளுக்கும் விரோதமாகக் குற்றம் சாட்டப்பட்ட சுதேசிகளை விசாரிக்கும் கமிஷனுக்கு நான் தலைவனாக நியமிக்கப் பெற்றேன். தினசரி பதினெட்டுப் பேர் களாவது தூக்கில் பலியாகும்படி செய்தோம். சுதேசிகளின் உயிர் கள் எங்களுடைய கையில் இருந்தன. ஆனால் நாங்கள் ஒருவருக் குக்கூட உயிர்ப்பிச்சை கொடுக்கவில்லை. விசாரணை நொடிப்பொழு தில் நடந்துவிடும். குற்றவாளியின் கழுத்தில் கயிற்றால் சுருக் கிட்டு ஒரு வண்டியின் மீதேற்றி மரக்கிளை யொன்றில் கயிற்றைக் கட்டிவிட்டு, வண்டியை அப்பால் ஓட்டிச் சென்றுவிடுவோம். குற்றவாளி தொங்கி மாண்டு போவான்.'

கிழவர்கள், யுவர்கள், சிறுவர்கள், கைக் குழந்தைகள், தொட்டில்களில் தூங்கிக்கொண் டிருந்த குழந்தைகள், தாயிடம் பால் குடித்துக்கொண் டிருந்த குழந்தைகள் எல்லோரையும் நீலன் உயிருடன் எரித்தான். அவ்விதம் ஆயிரக்கணக்கான இந்தி யர்கள் நீலனால் உயிருடன் தகனம் செய்யப்பட்டனர் என்பதை

ஆங்கில சரித்திராசிரியரான கேய் ஒப்புக்கொண் டிருக்கிறார். ஆயி ரக்கணக்கான பெண்களும் உயிருடன் எரிக்கப்பட்டனர். இந்த வாக்குமூலத்தை நாம் ஆண்டவனின் முன்னிலையிலும், மானிட வர்க்கத்தின் முன்னிலையிலும் சமர்ப்பிக்கின்றோம். ஆதார பூர்வ மாக இதை மறுக்கத் தைரியம் உள்ளவர்கள் கடவுள் முன்னிலை யிலும், உலகத்தின் முன்னிலையிலும் அவ்விதம் செய் யட்டும்!

உயிருடன் தீயில் தகனமாகும்படியாக அவர்கள் செய்த குற்றம் என்ன? தங்களுடைய தாய்நாட்டின் விடுதலைக்காக எத் தகைய கஷ்டங்களையும் ஏற்கத் தாங்கள் தயங்கவில்லை என்று உலகம் அறிய நிரூபித்ததுதான்!

முதலாவது சுதந்தர யுத்தத்தில் ஆங்கில ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளுமாக இந்தியா முழுவதும் எத்தனை பேர் கள் மாண்டனரோ, அவர்களைக் காட்டிலும் அதிகப் பேர்களை அலாகாபாத்தில் மாத்திரம் நீலன் படுகொலை செய்தானெனில் ஆங்கிலேயர்களின் ரத்த வெறியை ஒருவாறு கற்பனை செய்து கொள்ளலாம். அதுமாத்திரம் அல்ல; அச்சமயம் இந்தியாவெங் கும் நூற்றுக்கணக்கான இடங்களில் பல நீலன்கள் படுகொலைப் படலத்தில் ஈடுபட்டனர்!

நீலனின் படுகொலைப் படலம்பற்றி ஆங்கில சரித்திராசிரி யர்கள் என்ன சொல்கின்றனர்? பொதுவாக அவர்கள் அதை மழுப்பி இருக்கின்றனர். அதைப்பற்றி அவர்கள் சிற்சில விவரங் களைக் குறிப்பிட்டுள்ள இடங்களிலும், நீலனின் துணிச்சலையும் உறுதியையும் புகழ்ந்திருக்கிறார்கள். காலம் கடத்தாமல் அவன் கொடிய முறைகளைக் கைக்கொண்டது, மானிட வர்க்கத்தின்மீது அவனுக்குள்ள கருணையைக் காட்டுகின்றதாம்! மற்றும் கேய், சார்லஸ் பால் முதலிய சரித்திராசிரியர்கள் நீலனின் கொடுமை களைக் கண்டிக்காததுடன் அவனை எல்லையின்றிப் புகழ்ந்தும் இருக் கிறார்கள்! சுதேசிகளின் இறுமாப்பு, பிரிட்டிஷாருக்குள்ள மிருகத் தன்மையைத் தூண்டிவிட்டதாகக் கேய் சமாதானம் கூறி, அவ் விஷயத்தைக் கடவுளின் தீர்ப்புக்கு விடுவதாகவும் குறிப்பிட் டிருக்கிறார். எனினும் இணையற்ற தேசீய வீரரான நானா சாஹி பைப்பற்றி எழுதும்போது மாத்திரம் அவரது பேனா பொய்களை யும் கற்பனைகளையும் அபாண்டமான குற்றச்சாட்டுகளையும் எல்லை யின்றி அள்ளி வீசியிருக்கின்றது!

தன் சாகசத்தைப்பற்றி நீலன் சொல்லியிருப்பதைப் பாருங் கள்: 'நான் மிகக் கடுமையான முறைகளைக் கைக்கொண்டேன் என்பதை அறிவேன். எனினும் அந்த நிலையில் அவ்விதம் கடுமை யாக நடந்துகொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை. அதற்காக ஆண்டவன் என்னை மன்னிப்பார் என்று நம்புகிறேன். என் தேசத் தின் நன்மைக்காகவே அவ்விதமெல்லாம் செய்தேன். மிருகத் தனமான கொடிய கலகத்தை நசுக்கி என் தேசத்தின் கௌரவத் தையும் அதிகாரத்தையும் மீண்டும் ஸ்தாபிக்கவே நான் கடுமை யான முறைகளைக் கைக்கொள்ள வேண்டியிருந்தது.'

சைத்தான் வேதம் ஓதுவதற்கொப்ப நீலன் தன் தேச பக்தியைப் புகழ்ந்துகொண் டிருக்கின்றான். தேசபக்தி என்பது பிரிட்டிஷாருக்கு ஏகபோக பாத்தியமான சொத்துப் போலும்! அதில் 'சுதேசி'களுக்கு உரிமை எதுவும் இல்லை!

மற்றொரு சரித்திராசிரியரான ஹோம்ஸ் கூறுவதாவது: 'கிழவர்கள் நமக்கு எவ்விதத் தீங்கும் செய்யவில்லை. பச்சைக் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண் டிருந்த நிர்க்கதியான பெண்களும் கொடிய கலகக்காரர்களைப்போல் நமது வஞ்சத்திற்கு ஆளாக நேர்ந்தது. எனினும் அதற்காக நாம் நீலன்மீது அணுவளவும் குற்றங்கூற இடமில்லை. அத்தகைய கொடுந் தண்டனைகளை விதித்தது அவருக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை; ஆனால் அது பயங்கரமான கடமையாகியது.'

கொள்ளைப் புத்தியினால் ஆங்கில அரக்கர்கள் புரிந்த அட்டூழியங்களைக் காட்டிலும் தேசபக்தி மேலீட்டால் இந்திய வீரர்கள் இட்ட பலிகளைப் பாரபட்சமற்ற சரித்திராசிரியர்களும், உண்மையான கடவுளும்—நீலனின் கடவுளல்ல!—அநுதாபத்துடன் நோக்கி மன்னிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. தேச விடுதலைக்காகப் போர் புரிந்து பலியிடுவது நியாயமா, அல்லவா? இந்தக் கேள்விக்குத் தெய்வந்தான் பதில் கூறவேண்டும்.

'நான் இப்போது என்ன செய்கின்றேனோ அதற்காக ஆண்டவன் என்னை மன்னிப்பாராக. என் தேசத்தின் இயற்கையான சுயாட்சி உரிமையைப் பெறவே நான் இவ்விதம் செய்யும்படி நேர்ந்திருக்கின்றது' என்ற வாக்கியமானது நானாவுக்குத்தான் பொருந்துமே அல்லாது, நீலனுக்குச் சிறிதும் பொருந்தாது. தங்கள் தேசத்தின் நியாயமான உரிமையைப் பெற இந்தியர்கள் தாம் போரில் இறங்கினரே யன்றி, நீலன் அல்ல. நீலனுடைய தேசத்தின் நியாயமான உரிமை இந்தியாவில் எதுவும் இல்லை. தேச பக்தர்கள் தங்களுடைய தர்ம நியாயமான கடமையைச் செய்து தீரவேண்டி யிருந்தது. ஆனால் நீலனும் அவன் இனத்தாரும் சம்பந்தப்பட்ட வரையில் 'கடமை' என்ற பேச்சுக்கே இடமில்லை. நூறு வருஷங்களாகத் தங்கள் தாய்நாடு பட்ட துன்பங்களுக்காகத் தேச பக்தர்களுக்குத்தான் வஞ்சம் தீர்க்கும்படியான தவிர்க்க முடியாத நிர்ப்பந்தம் ஏற்பட்டதேயன்றி, இந்தியாவை அடிமைத்தனத்தில் ஆழ்த்திய ஆங்கிலேயர்கள், தாம் வஞ்சம் தீர்க்க வேண்டியதாகக் கூறுவது மனிதக் கலப்பற்ற ராக்ஷசத்தனமேயாகும்.

எனினும் இந்த வேதாந்தமெல்லாம் இப்போது எதற்கு? அலாகாபாத்தில் நீலன், கொடுமை பயங்கரம் இவற்றின் விதைகளை விதைத்தான். அவை செழுமையாக வளர்ந்து, கான்பூரில் மிகுந்த பலனைக் கொடுத்தன! எனவே கான்பூரில் அந்தக் காட்சியைக் காண நாம் செல்லுவோம்!

## 18

## தேச பக்தர்களின் மகத்தான வெற்றி

ஆழம் கண்டு பிடிக்க முடியாத அடிமைத்தனப் படுகுழியி லிருந்து இந்தியர்களைக் கரையேற்றி ரட்சிக்க வேண்டும் என்ற புனிதமான ஆர்வத்துடன், வட இந்தியாவில் புரட்சிக் கங்கையின் குருதி வெள்ளம் பிரமாதமாக ஓடி வருகையில், ஹரித் துவாரத்தில் நிகழ்ந்து வரும் சம்பவங்களைச் சிறிது கவனிப்போம்.

மீரத் கொதித்தெழுந்த சமயத்தில், பாரேலியிலும் லக்ஷ் மணபுரி டில்லி அரண்மனைகளிலும் இருந்த தலைவர்களைக் காட்டி லும் நானு சாஹிபின் அரண்மனையிலேயே அதிகம் பேர் கூடியிருந் தனர். 1857-ஆம் வருஷம் மூண்ட முதலாவது சுதந்தர யுத்தம் பிரம்மாவர்த்த அரண்மனையில்தான் கருத் தரித்தது. அந்தக் கரு உருவானதும் அங்கேதான். ஆனால் அதன் ஜனனமும் பிரம்மா வர்த்தத்திலேயே நிகழ்ந்திருந்தால், அதன் கதி அற்பாயுளாக ஆகியிராது. கருவில், புரட்சிக் குழந்தை பூரண வளர்ச்சி அடையு முன் துரதிருஷ்டவசமாக மீரத்தில் உண்டான இடியோசையினால், அகாலத்தில் பிறந்துவிட்டது. எனினும் அதன் தலையெழுத்துப் படி நடக்கட்டுமென்று யாரும் அந்தக் குழந்தையைக் கைவிட்டு விடவில்லை. அந்த நிலையிலும் அதைப் போஷித்து எப்பாடு பட்டா வது காப்பாற்றிவிட வேண்டுமென்று தேச பக்தர்கள் பகீரதப் பிரயத்தனம் செய்தனர்.

தர்பார் மண்டபத்தில் அக்கிராசனத்தில், சுதந்தர தேவனே உருவெடுத்தாற்போல் நானுசாஹிப் கம்பீரமாக வீற் றிருந்தார். அவருடைய சகோதரர்களான பாபா சாஹிப், பாலா சாஹிப், மருமானான ராவ் சாஹிப் முதலியோரும் அங்கு இருந்தனர். தங்களுடைய தலைவரின் உயர்ந்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக, தங்கள் உயிர், சொத்து, சுகம் எல்லா வற்றையும் தியாகம் செய்ய அவர்கள் துடித்துக்கொண் டிருந் தனர்.

அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு மேதாவி உட்கார்ந்திருந் தார். அவர் ஓர் இளைஞரே. கீழ்த்தர வேலைக்காரராக இருந்த அவர் தம்முடைய சுறுசுறுப்பினாலும் உழைப்பினாலும் திறமை யினாலும் தம் எஜமானருடைய அன்பைப் பெற்று உயர் பத விக்கு வந்தவர்; அரசியல் சாஸ்திரத்தையும் ஐரோப்பிய ராணுவ தந்திர முறைகளையும் நன்கு ஆராய்ச்சி செய்தவர்; அந்த அறிவை, அடிமைத்தனத்திலிருந்து தமது தேசத்தை விடுதலை செய்ய வேண்டிய புனித யுத்தத்தில் பூரணமாக உபயோகிக்க வேண்டும் என்ற உறுதி கொண்டவர்; எல்லோருக்கும் முன்னமே அந்த மகத்தான புரட்சியின் முழு உருவையும் தமது மனக்கண் முன் னிலையில் கற்பனை செய்துகொண்டவர்; தாம் ஒரு முஸ்லிமாயி னும் தம் தாய் நாட்டின் விடுதலைக்காக, புனித லட்சியமுள்ள ஒரு ஹிந்து மன்னரிடம் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர். 'நமக்குள் சண்டை வந்தால் அவர்கள் நூறு பேர், நாம் ஐவர்; அந்நியர் வந்தால் அவர்களை எதிர்க்க நூற்றைந்து பேருமாக

ஒன்று சேருவோம்' என்ற மகாபாரத வாக்கியத்தின் உயர்ந்த கருத்தை உணர்ந்தவர்; சுதர்மம், சுயராஜ்யம், சுதந்தரம் என்ற உயர்ந்த லட்சியங்களுக்காகத் தமது உழைப்பு, திறமை, சாணக்கிய தந்திரம் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்தவர்; ஆழ்ந்த தேச பக்தி உடையவர்; அடிமைத்தனத்தை அறவே வெறுப்பவர். இவ்வளவு பெருமை வாய்ந்தவர் யார்? வேறு யாரும் இல்லை; அஸிமுல்லா கான்தான்!

மற்றும் ஜான்ஸி மின்னல் கொடியான ராணியும் அந்தச் சபையில் வீற்றிருந்தார். அவரது புத்திக்கூர்மையும் தேசபக்தியும் மற்ற எல்லாருக்கும் மிகுந்த உத்வேகத்தையும் உற்சாகத்தையும் கொடுத்தன.

சரித்திரப் பிரசித்தி பெற்ற அந்தச் சபை நடந்துகொண்டிருக்கையில், அதோ ஆயுதசாலைப் பக்கம் தமது பட்டாக் கத்தியைத் தீட்டிக்கொண்டிருக்கும் போர்வீரர் யார்? அவர்தாம் மிகப் பிரசித்தி பெற்ற மகாராஷ்டிர வீரரான தாதியா டோபே. சிவாஜியின் அடிச்சுவடுகளைப் பின்பற்றிய கடைசி மகாராஷ்டிர வீரர் அவர்தாம்.

தைரியம் வாய்ந்த எத்தனையோ வீரர்கள் இருக்கின்றனர். ஆனால் தாதியா டோபேயின் சௌரியமோ, தன் விடுதலைக்காகப் பாரததேவி தன் கையினாலேயே சிருஷ்டித்த வாளின் உருவாகவே விளங்கியது.

தாதியா டோபே 1814-ஆம் ஆண்டு ஜனனமானார். அவருடைய தந்தையான பாண்டுரங்க பட்டருக்கு எட்டுப் புதல்வர்கள் இருந்தனர். அவர்களில் இரண்டாவது குமாரரான ரகுநாத், ஹிந்துஸ்தான் விடுதலை வீரர்களின் கூட்டத்தில் இன்னும் ஒளி குன்றாத நட்சத்திரமாக விளங்கிவருகிறார். பிராம்மண வகுப்பைச் சேர்ந்த பாண்டுரங்க ராவ் டோபே, பிரம்மாவர்த்தத்தில் காலஞ் சென்ற பாஜி ராவ் பேஷ்வாவினிடம் தர்ம கைங்கரிய இலாகாவுக்குத் தலைவராக இருந்தார்.

அவ்வமயம் பிரம்மாவர்த்தம் மிகுந்த பாக்கியம் செய்திருந்ததென்றே கூற வேண்டும். ஏனெனில் நானா சாஹிப், ஜான்ஸி ராணி, தாதியா டோபே முதலியோர் குழந்தைகளாக இருந்த போது பிரம்மாவர்த்த அரண்மனையின் தாழ்வரையில்தான் விளையாடிக்கொண்டிருந்தார்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே நானா சாஹிபும் தாதியா டோபேயும் அந்தரங்க நண்பர்கள் ஆயினர். பிற்கால வாழ்க்கையில் மகத்தான வீர சாகசங்கள் புரிவதற்கு உற்றவாறு அவர்களை உருவாக்கிய ஒரே இடத்திலேயே இருவரும் கல்வி கற்று வந்தனர். இருவரும் சேர்ந்தே ராமாயணம், மகாபாரதம் முதலிய இதிகாசங்களையும் மகாராஷ்டிர வீரர்களின் சரித்திரங்களையும் படித்து வந்தனர். நம் புராதன வீரர்களின் அருஞ் செயல்களெல்லாம் அவ்விருவருக்கும் இளமையிலேயே வீர உணர்ச்சியையும் உயர்ந்த எண்ணங்களையும் தூண்டியதால், அவர்களைப்போல் தாங்களும் வீர சாகசங்கள்

புரிய வேண்டுமென்று அவ்விருவருடைய இளங் கரங்களும் துடித்தன.

நாஞு, தாதியா, ராவ், ராணி இவர்களைப் போன்றவர்கள் சேர்ந்து வாசித்து, சிரித்து, விளையாடும்படியான ஒரு வித்தியா சாலை ஒவ்வொரு நூற்றாண்டிலும் ஏற்படுவதில்லை. அத்தகைய மகிமை பொருந்திய குழந்தைகள் சேர்ந்தாற்போல் போர்க்களத்தில் தங்களுடைய வீர வாழ்க்கையை எழுதும் சோதனை உலகிலுள்ள ஒவ்வோர் தேசத்திலும் நடைபெறுவதும் இல்லை. இவ்வாறாக ஓர் அபூர்வமான வித்தியாசாலையையும் சோதனையையும் நடத்திய பெருமையும் புகழும் பிரம்மாவர்த்தத்திலுள்ள அரண்மனைக்குக் கிடைத்தன.

ரகசிய ஸ்தாபனத்தின் அலுவல்களையெல்லாம் ஐக்கியப் படுத்துவதற்காக நாஞு சாஹிபும் அஸிமுல்லா கானும் ஏப்ரல் மாதக் கடைசியில் வட இந்தியாவிலுள்ள முக்கிய நகரங்களுக்கெல்லாம் சென்று வந்தனர். அவர்கள் முன்னேற்பாடுகளையெல்லாம் முடித்துச் சுதந்தரப்போரை ஆரம்பிப்பதற்காகக் குறிப்பிட்ட தினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது தான் மே மாதம் 15-ஆம் தேதி திடீரென்று ஏற்பட்ட மீரத் எழுச்சி, டில்லி விடுதலை பற்றிய செய்திகள் கான்பூருக்கு எட்டின.

மீரத்தில் எழுந்த அகாலப் புரட்சியைப்பற்றிய செய்தி பிரம்மாவர்த்த அரண்மனையில் சிறிதும் மனக் கலக்கத்தை உண்டு பண்ணவில்லை. ஒரு புரட்சியில் வெவ்வேறான ஆயிரக்கணக்கான அம்சங்கள் கலந்திருக்கின்றன. அவற்றில் சில அதி துரிதமாகவும் சில மிக மிக மெதுவாகவும் இயங்குவது தவிர்க்க முடியாதது. புரட்சிக்காரர்களில் சிலர், குறிப்பிட்ட சமிக்ஞை காட்டப்பட்ட பின்புதான் செய்கையில் ஈடுபடுவார்கள். சிலரோ திடீரென்று ஏற்பட்ட ஆத்திரத்தினாலும் உணர்ச்சிப் பெருக்காலும் குறிப்பிட்ட காலத்துக்கு முன் புரட்சியை ஆரம்பித்துவிடுவது உண்டு.

இதையெல்லாம் பிரம்மாவர்த்தத் தலைவர்கள் நன்கு உணர்ந்து, மீரத் எழுச்சியைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக்கொள்ளத் தீர்மானித்தார்கள். அதை அநுசரித்து, 'டில்லியைப் பின்பற்றுவதா? அல்லது முதலில் வகுத்த திட்டப்படி ஜூன் மாதம் முதல் வாரம் வரையில் காத்திருப்பதா?' என்ற கேள்வி எழுந்தது. இறுதியில் இரண்டாவது யோசனையே சிறந்த தென்று தோன்றியதால், பிரம்மாவர்த்தத்திலுள்ள புரட்சி யந்திரம் ரகசியமாகத் தன் வேலையைத் தொடர்ந்து நடத்தியது!

கான்பூர் வெகு காலமாகவே ஆங்கிலேயர்களின் முக்கிய ராணுவ ஸ்தலமாக இருந்து வந்தது. அங்கே 1—53—56-ஆவது காலாட் படைகளும் ஒரு குதிரைப் படையுமாக மொத்தம் மூவாயிரம் இந்தியச் சிப்பாய்கள் இருந்தனர். குதிரைப்படை முற்றும் வெள்ளையர்களின் நிர்வாகத்திலேயே இருந்தது. அதைத் தவிரச் சுமார் நூறு ஆங்கிலச் சிப்பாய்களும் அங்கு இருந்தனர். சர் ஹ்யூ வீலர் அங்கே படைகளின் பிரதம அதிகாரியாக இருந்து

வந்தான். அவன் ராணுவத்தில் பல ஆண்டுகளாக அநுபவம் பெற்றவன்; சிப்பாய்களிடையேயும் செல்வாக்குள்ளவன்; சீக்கிய, ஆப்கன் போர்களில் ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த தொண்டாற்றியவன். அவனிடம் சிப்பாய்களுக்கு மிகவும் அன்பு உண்டு என்பதைச் சர்க்காரும் அறிவர். எனவே, கான்பூரிலுள்ள சிப்பாய்களிடையே ரகசியச் சங்கங்கள் வேலை செய்து வருகின்றன என்ற சந்தேகம் யாருக்கும் உண்டாகவில்லை.

இப்படியிருக்க மே 15-ஆம் தேதி கான்பூர் நகர் முழுவதும் ஒருவித விசித்திரமான கொந்தளிப்புத் தென்பட்டது. மீரத் சிப்பாய்களின் நடவடிக்கைகளைக் கேட்டதும் கான்பூர் தோழர்களிடையே வழக்கமான நிதான புத்தி மறைந்து கலக்கம் ஏற்பட்டது. ஆனால் மீரத் எழுச்சிபற்றிய செய்தி 18-ஆம் தேதிதான் ஆங்கிலேயர்களுக்கு எட்டியது. தந்திக் கம்பிகள் வெட்டப்பட்டதன் விளைவாக டில்லிக்குச் செய்திப் போக்கு வரத்துத் தடைப்பட்டு விட்டதால், அங்கே ஜனங்களின் அதிருப்தி எவ்வளவு தூரம் பரவியிருக்கிறது என்பதை அறிந்து வருவதற்காக ஹ்யூ வீலர் ஒற்றர்களை அனுப்பினான். டில்லியிலிருந்து வந்த ஒரு சிப்பாயை அந்த ஒற்றர்கள் வழியில் சந்தித்தனரெனினும், பறங்கியர்களுக்குத் தாம் எவ்விதத் தகவலும் கூறமுடியாது என்று சிப்பாய் கண்டிப்பாக மறுத்துவிட்டார்.

தந்தி வசதிகளுள்ள ஆங்கில அதிகாரிகள் அறிந்துகொள்ள முடியாத விஷயங்களை இந்தியச் சிப்பாய்கள் வெகு தொலைவில் இருந்துங்கூட உடனுக்குடனே எவ்வாறு அறிந்துகொண்டார்கள் என்பது ஆங்கிலேயர்களுக்குப் பெரும் மர்மமாக இருந்தது. மீரத் எழுச்சிக்குப் பின்புதான் அதுபற்றிய செய்தியை மற்ற இடங்களிலுள்ள தேசபக்தர்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதில்லை. அதற்கு ஒரு நாள் முந்தியே அதுபற்றிய விவரங்கள் அடங்கிய செய்தி மனித உருவத்தில் சிப்பாய்கள் இருக்கும் இடங்களுக்கெல்லாம் சென்றுவிட்டது! வெகு தூரத்திலுள்ள ஒவ்வோர் இடத்திலும் தேசபக்தர்கள் கைக்கொண்ட நடவடிக்கைகளை எல்லா இடங்களிலும் உள்ள இந்தியச் சிப்பாய்களும் நிச்சயமாகவும் தாமதமின்றியும் அறிந்துகொண்டது, 'கலகத்தின் விசேஷ அம்சங்களில் ஒன்று' என்று ஆங்கில சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

1857-இல் தேசபக்தர்களின் மனித வடிவமான தந்தி அவ்வளவு அற்புதமாக வேலை செய்தது! கான்பூர்ச் சிப்பாய்களிடையே நிலவிய ரகசியக் கொந்தளிப்பு, ஆங்கிலேயர்களுக்கு மீரத் எழுச்சி பற்றிய செய்தி கிடைத்தபின்தான் கலக்கத்தைக் கொடுக்க ஆரம்பித்தது. மீரத்தில் ஏற்பட்ட அசாதாரண சம்பவத்தைப்பற்றிய செய்தியைக் கேட்ட காரணத்தினால் ஜனங்களிடையே கொந்தளிப்பு உண்டாகியிருக்கிறதென்றும், அது கொஞ்சங் கொஞ்சமாகத் தணிந்துவிடும் என்றும் ஹ்யூ வீலர் நம்பிக்கையுடன் இருந்தான்.

எனினும் கான்பூரில் ஆங்கில ஆட்சியின் காலம் முடிந்துவிட்டது என்பதை ஒவ்வொருவரும் தெளிவாக உணர்ந்துகொண்ட

னர். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பிரம்மாண்டமான கூட்டங்களைக் கூட்டினார்கள்; சிப்பாய்களின் ரகசிய மகாநாடுகளும் நடந்தன; ஜனங்களின் எழுச்சியைப்பற்றி உபாத்தியாயர்களும் மாணவர்களும் விவாதித்தனர்; கடைத் தெருவிலுள்ள ஜனங்கள்கூடப் புரட்சித் திட்டங்களைப்பற்றி ஆலோசிக்க ஆரம்பித்தனர்.

அதுவரையில் மக்களிடையே உள்ளூறக் குமுறிக்கொண்டிருந்த தேச ஆவேசத் தீ, பகிரங்கமாகக் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. வெள்ளையர்களை விரட்டும் விஷயமாக ஜனங்கள் தெருக்களில் பகிரங்கமாகவே விவாதிக்கலாயினர். இந்திய அதிகாரிகளைத் தவிர வேறு எவருடைய உத்தரவுக்கும் தாங்கள் கீழ்ப்படிய முடியாதென்று சிப்பாய்கள் கண்டிப்பாக அறிவித்துவிட்டார்கள். அப்போது ஒரு வெள்ளைப் பெண், ஆங்கிலேயர்களுக்கு வழக்கமாயுள்ள இறுமாப்புடனும் மமதையுடனும் கடைத்தெருவுக்குச் சாமான்கள் வாங்கச் சென்றபோது ஒரு வழிப்போக்கர் அவளை அணுகி, 'இந்த இறுமாப்பெல்லாம் இனிச் செல்லாது, அம்மா! இனி நீயும் உன் இனத்தாரும் கடைத்தெருப் பக்கமே வர முடியப்போவதில்லை' என்று ஆத்திரத்துடன் கூறியது, ஆங்கிலேயர்களைத் தூக்கி வாரிப் போட்டுத் தூக்கத்திலிருந்து எழுப்பியது.

அந்த நிலையில் வாளா இருப்பது மடத்தனம் என்பதை உணர்ந்த ஹ்யூ வீலர் வெள்ளையர்களின் தற்காப்புக்கான முஸ்தீபுகளைச் செய்ய முற்பட்டான். ஆபத்து ஏற்பட்டால் ஆங்கிலேயர்கள் அடைக்கலம் புகுவதற்காக, கங்கை நதிக்குத் தெற்கே சிப்பாய்கள் இருக்கும் இடத்திற்கு அருகில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தான்: அதை அரண்களால் பலப்படுத்தினான்; பீரங்கிகளை வைக்க மேடைகளும் கட்டினான்; அங்கே போதிய உணவு முதலிய சாதனங்களையும் சேகரித்து வைக்க உத்தரவிட்டான்.

சிப்பாய்கள் போருக்கு எழுந்தாலும், தாங்கள் அமைத்துள்ள 'கோட்டை', தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்குமென்று வீலரும் மற்ற ஆங்கில அதிகாரிகளும் நம்பினர். மற்ற இடங்களில் உள்ள அவர்களுடைய தோழர்களைப் பின்பற்றிச் சிப்பாய்கள் டில்லிக்குச் சென்றுவிடுவார்கள் என்றும், பின்பு தாங்கள் கங்கை வழியாக அமைதியாகச் சென்று அலகாபாத்திலுள்ள படைகளுடன் சேர்ந்துகொள்ளலாமென்றும் ஆங்கிலேயர்கள் கருதினர்.

வீலர், மேலே குறிப்பிட்ட பாதுகாப்பு முறைகளுடன் சமாதானம் அடையவில்லை. உதவிக்கு மேற்கொண்டு துருப்புகள் அனுப்பும்படி லக்ஷ்மணபுரியில் இருந்த சர் ஹென்றி லாரென்ஸுக்கு அவசரக் கடிதங்கள் எழுதிய வண்ணமாக இருந்தான். தங்களுக்கு உதவியாக மேற்கொண்டு துருப்புகள் அனுப்பும்படி லாரென்ஸே கதறி வருகையில், அவன் வீலரின் கோரிக்கையை எவ்விதம் நிறைவேற்ற முடியும்?

இருந்தாலும் அவன் மிகவும் கஷ்டப்பட்டு, கான்பூருக்கு எண்பத்துநான்கு ஆங்கில சிப்பாய்கள், லெப்டினன்ட் ஆஷ் தலைமையில்

ஒரு பீரங்கிப் படை, ஒரு குதிரைப்படை முதலியவற்றை அனுப்பினான். வீலர் கைக்கொண்ட மேற்கூறிய தற்காப்பு முறைகளில் குறிப்பிடத் தக்க விசேஷம் எதுவும் இல்லை. ஆனால் அவன் கைக்கொண்ட மற்றொரு முறைதான் மிகமிக ஆச்சரியமானதாகும். அதிலிருந்து நாம் அப்போதைய ரகசிய ஸ்தாபனத்தின் ஒப்பற்ற திறமையை அறிந்துகொள்ளலாம். அதாவது கான்பூரைப் பாதுகாக்கும்படி வீலர், பிரம்மாவர்த்த ராஜாவுக்கு வேண்டுகோள் அனுப்பினான்!

மீரத் எழுச்சி பற்றிய செய்தி கான்பூர்ச் சிப்பாய்களிடையேயும் ஜனங்களிடையேயும் கொந்தளிப்பை உண்டாக்கி இருந்ததெனினும், பிரம்மாவர்த்தக் கடல் முன் போலவே அமைதியாகவும் சாந்தமாகவும் சிறிதும் கொந்தளிப்பின்றியும் இருந்தது! பிரம்மாவர்த்தத்தில் உள்ளூறக் குமுறிக்கொண்டிருந்த பிரமாதமான கொந்தளிப்பை வெளிப்படுத்தக்கூடிய ஒரு சிற்றலைகூட அங்கே தென்படவில்லை! கான்பூர்ச் சிப்பாய்களிடையே உண்டான அமைதியின்மையை அறிந்த விலர், முன் ஜாக்கிரதையாக இருந்தான் எனினும், பிரம்மாவர்த்த ராஜா, தனக்கு விரோதமாக இருப்பார் என்ற சந்தேகம் அவனுக்கு எள்ளளவும் ஏற்படவில்லை.

சிறிது காலத்துக்கு முன் யாருடைய கிரீடத்தை ஆங்கிலேயர்கள் காலால் மிதித்தார்களோ, எந்தச் சர்ப்பத்தின் முடிமீது வேண்டுமென்றே காலை வைத்து அதற்கு ஆத்திரத்தை உண்டாக்கினார்களோ, அதே மனிதரின் உதவியை அவர்கள் தங்களுக்குத் தேவையாக இருந்த இந்தச் சமயத்தில் நாடினார்கள்!

நானா 'சாந்த மூர்த்தி'; தமக்கு இழைக்கப்பட்ட தீங்கை என்றும் மறவாது வஞ்சம் தீர்க்கும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண் டிருக்கும் 'சர்ப்பம்' அல்ல. தங்களை உதைத்த ஆங்கிலேயர்களின் காலை முத்தமிடும் கோழைகளும் பேடிகளும் இந்தியாவில் இல்லையா? அவர்களில் நானாவும் ஒருவர் என்று நினைத்துக் கொண்டு வீலர் நல்ல பாம்பின் புற்றுக்குள் கையை விட்டான்!

நானாவுக்கு அதைக்காட்டிலும் சிறந்த சந்தர்ப்பம் கிடைக்க முடியாதல்லவா? எனவே அவரும் சில பீரங்கிகள், முந்நூறு சிப்பாய்கள், காலாட் படை, குதிரைப் படை முதலியவைகளுடன் 22-ஆம் தேதி கான்பூர் நகருக்குள் பிரவேசித்தார். அப்போது கான்பூரில் சிவில் அதிகாரிகளும் ராணுவ அதிகாரிகளுமாக ஏராளமான ஆங்கிலேயர்கள் இருந்தனர். அவர்களுக்கு மத்தியில் நானா தமது முகாமை அமைத்துக்கொண்டார்.

கான்பூரில் கலகம் ஏற்படுமாயின் கஜானா தாக்கப்படுவது நிச்சயம். ஆனால் அதை எவ்விதம் பாதுகாப்பது? அதை நானாவிடம் ஒப்படைப்பதுதான் சிறந்ததென்று வெள்ளையர்கள் தீர்மானித்தனர். நானாவின் இருநூறு சிப்பாய்களுடைய காவலில் கஜானா ஒப்பிக்கப்பட்டது. அந்த உதவிக்காகக் கலெக்டர் ஹில்லர்ஸ்டன் நானாவுக்கும் தாதியா டோபேக்கும் மிகவும் வந்தனம் அளித்தார்.

அது மாத்திரமல்ல; ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் தங்களுடைய பாதுகாப்புக்காக, அவசியமாயின் பிரம்மாவர்த்த அரண்மனைக்குச் செல்லலாமென்றும் ஓர் யோசனை கூறப் பட்டது! இது நானா சாஹிபின் இணையற்ற ராஜதந்திரத்தையே காட்டுகின்றது. ஆங்கிலேயர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும், சுதந்தரத்துக்காகப் போராடும் தேச பக்தர்களை எதிர்க்கவும் நானா தம் துருப்புகளுடன் கான்பூருக்கு அழைக்கப்பட்டதும், ஆங்கிலேயரின் முகாம்களுக்கு இடையில் அவர் தமது தலைமைக் காரியாலயத்தை அமைத்துக்கொண்டதும், லட்சக் கணக்கான தொகை அடங்கிய கஜானாவை வெள்ளையர்கள் அவரிடம் ஒப்ப டைத்ததும், அவரது உதவிக்காக ஆங்கிலேயர்கள் அவருக்கு வந்தனம் அளித்ததும் நானா சாஹிபின் சிறந்த ராஜதந்திரத்தின் பலனே ஆகும்.

துரோகிகளான ஆங்கிலேயர்களை, அவர்களுடைய ஆயுத மான துரோகத்தைக் கொண்டே வீழ்த்தவேண்டும் என்று நானா உறுதி கொண்டார். மகத்தான புரட்சி ஆரம்பமாவதற்கு ஒரு வாரத்துக்கு முன்கூட ஆங்கிலேயர்கள் நானாவிடம் வைத்திருந்த அளவற்ற நம்பிக்கையிலிருந்து, புரட்சி எவ்வளவு ரகசியமாக உருவாகி வந்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக்கொள்ள லாம்.

சுதந்தரந்தான் தங்களுடைய உயர்ந்த லட்சியம் என்பதை யும், அதை அடைவதற்கான வழி போர்தான் என்பதையும் ஒவ்வொருவரும் தெளிவாக அறிந்துகொள்ளும்படி தலைவர்கள் பிரசாரம் செய்திருந்தனர். எனினும் புரட்சிக்குத் தலைவர்கள் யார்? என்றைக்குப் புரட்சி ஆரம்பிக்கப்படும்? அந்த இயக்கத்தின் முக்கிய இடங்கள் எவை? இவையெல்லாம்பற்றிய விவரங்கள் புரட்சிச் சங்கங்களைச் சேர்ந்தவர்களுக்குக்கூடத் தெரியா! குறிப் பிட்ட தலைவர்களுக்கும் மிகுந்த நம்பிக்கைக்குப் பாத்திரர்க ளான ஊழியர்களுக்கும் மாத்திரமே சுதந்தரப் போரைப்பற்றிய விவரங்கள் தெரிந்திருந்தன.

காசியில் ஆங்கிலேயர்கள் கைப்பற்றிய கடிதத்தில்கூட, 'ஒரு பெரிய தலைவரிடமிருந்து' என்றே கையெழுத்து இடப்பட்டிருந் தது. சுதந்தரப் போர் ஆரம்பமாவதற்கு முதல் நாள்கூடச் சக்கரவர்த்தி பகதூர் ஷா, நானா சர்ஹிப், ஜான்ஸி ராணி முதலி யோரின் திட்டம்பற்றி ஆங்கிலேயர்களுக்கு எதுவுமே தெரியாது! சுதந்தரப் போர்த் திட்டம் பிரம்மாவர்த்த அரண்மனையில் அவ்வளவு ரகசியமாக உருவாகிவந்தது. அதனால்தான், 'மகா ராஷ்டிர ராஜ்யத்தை ஸ்தாபித்த சிவாஜியின் சரித்திரத்தை நானா அக்கறையுடன் தெரிந்துகொண்டது வீணாகவில்லை' என்று ஆங்கில சரித்திராசிரியரான கேய் நானாவைப் புகழ்ந்திருக்கிறார்!

சுபேதார் டீக்காசிங்கின் வீடுதான் கான்பூர் ரகசியச் சங்கங் களைச் சேர்ந்தவர்கள் கூடும் முக்கிய இடமாக இருந்தது. சிப்பாய்களின் தலைவரான ஷம்ஸுதீன் கானின் வீட்டிலும் அவர்கள் கூடுவது உண்டு. பிரம்மாவர்த்த அரண்மனையைச் சேர்ந்தவர்களும் மிகுந்த நம்பிக்கைக்குப் பாத்திரர்களுமான

ஜ்வாலாப் பிரசாத், முகமது அலி ஆகிய இரு ஊழியர்களும் நாஞ சாஹிபின் சார்பில் அந்த ரகசியக் கூட்டங்களுக்கு வருவார்கள்.

சுபேதார் டீக்காசிங்கும் ஜ்வாலாப் பிரசாதும் மிகவும் தைரியசாலிகள், சுதந்தரப் பிரியர்கள், அந்தரங்க சுத்தியுள்ள அதி தீவிர தேச பக்தர்கள். அந்தக் கூட்டங்களில் அவர்கள் எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்ததனுல், அவர்களுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகச் சிப்பாய்கள் யாவரும் ஒருமித்து விசுவாசப் பிரமாணம் செய்திருந்தனர்.

எனவே, சுபேதார் டீக்காசிங் கூறும் வார்த்தை ராணுவம் முழுவதும் கூறும் வார்த்தை ஆகிய்து! அத்தகைய தலைவரும் நாஞ சாஹிபும் பல முக்கிய விஷயங்களைப்பற்றி நேரில் கலந்து ஆலோசிக்க வேண்டியது மிக அவசியம் அல்லவா? தவிர ஏற்கனவே வகுத்திருந்த திட்டம் மீரத் எழுச்சியின் விளைவாகப் பயனற்றதாகிவிட்டதால், புதிதாக எழுந்த நிலைமைக்குத் தகுந்தவாறு புரட்சித் திட்டத்தை மாற்ற வேண்டியதும் அவசியமாயிற்று. ஆகையால் நாஞவும் டீக்காசிங்கும் சந்தித்துப் பேச வேண்டும் என்று தீர்மானமாயிற்று.

அவர்கள் முதல் முதலாகச் சந்தித்தபோது, அவர்களுக்குள் நீண்ட நேரம் ஆலோசனை நடந்தது. சுதர்மத்துக்காகவும் சுய ராஜ்யத்துக்காகவும் ஹிந்துக்கள் முஸ்லிம்கள் யாவரும் ஏககாலத்தில் போருக்கு எழ ஆயத்தமாக' இருந்துவருவதையும், நாஞவின் உத்தரவுக்காகவே அவர்கள் காத்துக்கொண் டிருப்பதையும் அவருக்குச் சுபேதார் கூறினர். மற்ற விவரங்களையெல்லாம் நீண்ட நேரம் ஆலோசித்து ஒரு முடிவு செய்வதற்காக மற்ருெரு கூட்டம் நடைபெற வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. பின்பு சுபேதார் தமது இருப்பிடத்துக்குத் திரும்பி வந்தார்.

ஜூன் மாதம் 1-ஆம் தேதி மாலை நாஞ சாஹிப், தம் சகோதரரான பாலா சாஹிப், மந்திரியான அஸிமுல்லாகான் முதலியோருடன் புனித கங்கையின் கரைக்கு வந்தார். சுபேதார் டீக்காசிங்கும், ரகசியச் சங்கத்தின் தலைவர்களும் நாஞவுக்காக அங்கே காத்துக்கொண் டிருந்தார்கள். பின்னர் அவர்கள் எல்லாரும் ஒரு படகில் ஏறிக்கொண்டு புனித கங்கா நதியில் சென்றனர். படகில் இருந்த ஒவ்வொருவரும் மந்திராலோசனை ஆரம்பமாகுமுன், தமது நாட்டின் விடுதலைக்காக நடக்கப்போகும் பயங்கர யுத்தத்தில் தாம் கலந்துகொள்ளுவதாகக் கங்கைத் தண்ணீரைக் கையில் ஏந்திக்கொண்டு பிரதிக்ஞை செய்தார்.

அதன்பின் இரண்டு மணி நேரம் வரையில் மந்திராலோசனை நடந்தது. எதிர்காலத் திட்டங்களை யெல்லாம் முற்றும் நிர்ணயித்த பின்புதான் அவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடத்துக்குத் திரும்பிச் சென்ருர்கள். அவர்களுடைய ரகசிய ஆலோசனையும் முடிவும் புனித கங்காதேவிக்கு மாத்திரமே தெரியும். அந்த ரகசியத்தை அவள் ஒரு காலத்திலும் வெளியிட மாட்டாள்!

ஆனுல் ஷம்ஸுதீன் மறுநாள் தம்முடைய ஆருயிர்க் காதலியான அஸீஸாஞின் வீட்டுக்குச் சென்றபோது, இரண்டு நாட்க

ளுள் ஆங்கிலேயர்கள் அழிக்கப்பட்டு விடுவார்களென்றும், இந்தியா விடுதலை பெற்றுவிடுமென்றும் சொன்னுர் என்பது பின்னர் நிச்சயமாகத் தெரியவந்தது. அவர் அவ்விஷயத்தை வீண் ஐம்பத்துக்காக அவளிடம் சொல்லவில்லை. வீரனுன அவளுடைய காதலனைப் போலவே அந்தக் கட்டழகியின் இருதயமும் இந்தியா சுதந்தரம் பெறும் காலம் எப்போதென்று ஏங்கிக் கொண்டிருந்தது.

அஸீஸான் ஒரு தாசிப் பெண். சிப்பாய்களுக்கு அவளிடம் மிகுந்த மதிப்பு உண்டு. எனினும் அவள் சந்தையில் தன் காதலை விற்றுப் பணம் சம்பாதிக்கும் கோஷ்டியைச் சேர்ந்தவள் அல்ல. அவள் அன்பு சுதந்தரப் போர்க்களத்தில் தேச சேவைக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டிருந்தது. அந்த அழகிய வதனத்தில் தோன்றும் மனேரம்மியமான முறுவல், போர்வீரர்களை எவ்வாறு உற்சாகப்படுத்தியது! கறுத்த வில்போன்ற புருவங்களை அவள் கோபத்தால் நெளித்தது, போர்க்களத்திலிருந்து ஓடி வந்த அத்தனை கோழைகளுக்கும் ரோஷத்தை உண்டுபண்ணி, மீண்டும் போர்க்களம் சென்று உக்கிரப்போர் புரியும்படி அவர்களைத் தூண்டியது. இந்த விவரமெல்லாம் பின்னுல் தெரியவரும்!

தேச பக்தர்களுடைய திட்டங்கள் பக்குவம் அடைந்து வருகையில், ஆங்கிலேயர்களின் விடுதிகளில் ஏற்பட்ட திகிலுக்கு எல்லையே இல்லை. லக்ஷ்மணபுரியிலிருந்து உதவிக்குத் துருப்புகள் வந்த பின்னரும், கஜானுவும் ஆயுதசாலையும் நானு சாஹிபிடம் ஒப்பிக்கப்பட்ட பின்னருந்தான் ஹென்ரி வீலருக்கு உயிர் வந்தது. எனினும் ஆங்கிலேயர்கள் எல்லாரும் தைரியத்தை அடியோடு இழந்து நடுங்கிக்கொண் டிருந்தனர்.

மே மாதம் 24-ஆம் தேதி ஈத் பண்டிகை யானதால், அன்று ஜனங்கள் எல்லாரும் புரட்சியில் ஈடுபடுவார்களோ என்று ஒவ்வொரு நகரிலும் வெள்ளையர்கள் பீதி அடைந்திருந்தனர். எனினும் எல்லாரும் ஊகித்துக்கொள்ளக் கூடிய அத்தகைய முக்கிய தினத்தில் புரட்சியை ஆரம்பிக்க, இந்தியத் தலைவர்கள் என்ன, புத்தி யற்றவர்களா? என்றைக்கு எழுச்சி ஆரம்பமாகலாம் என்று பகைவர்கள் எதிர்பார்க்கின்றுர்களோ அன்று மிகவும் அமைதியாக இருந்துவிட்டு, அவர்கள் சிறிதும் எதிர்பாராத சமயத்தில் திடீரென்று அதை ஆரம்பிப்பதுதான் புரட்சி வெற்றி பெறுவதற்கு முக்கிய வழிகளில் ஒன்றுகும். ஆகையால் கான்பூரில் ஈத் பண்டிகையன்று அமைதிக்கு எள்ளளவும் பங்கம் ஏற்படவில்லை.

இருந்தாலும் ஆங்கிலேயர்களுக்கு உண்டாகியிருந்த திகில் மாத்திரம் தீரவில்லை! இன்று நிச்சயமாகப் புரட்சி ஏற்பட்டே தீரும் என்று வீலர் அன்று காலை லக்ஷ்மணபுரிக்குத் தந்தி கொடுத்திருந்தான். எனினும் அன்று முஸ்லிம்கள் வழக்கம்போல் ஈத் பண்டிகையை அமைதியாகக் கொண்டாடியதால் வீலருக்குத் திகில் தணிந்து ஆறுதல் ஏற்பட்டது. பின்னர் விக்டோரியா ராணி பிறந்த தினத்தன்று வழக்கமாக மரியாதைக் குண்டுகள்கூடப் போடவில்லை. அந்தச் சப்தத்தால் சிப்பாய்களுக்கு அநாவசிய

மாகக் கலக்கம் ஏற்படக் கூடுமென்று ஆங்கிலேயர்கள் குண்டு கள் போடத் துணியவில்லை! அன்று குண்டுகள் போட முடியாமற் போனது ஆங்கில அதிகாரிகளுக்கு மிகுந்த வருத்தத்தை உண்டுபண்ணியது. ஆயினும், பாவம், அவர்கள் வேறு என்ன செய்வார்கள்!

புரட்சி மூண்டால் தாங்கள் அடைக்கலம் புகுவதற்காக ஆங் கிலேயர்கள் பாதுகாப்பிடம் ஒன்றை நிர்மாணித்திருந்தார்கள். அதிலிருந்தே அப்போது அவர்களின் நிலைமை எவ்வளவு நிர்க்கதியாக இருந்தது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்! அந்த நிலையில், 'ஓநாய் வருகிறது' என்ற கதைக்கொப்ப, சிப்பாய்கள் போரை ஆரம்பித்துவிட்டார்கள் என்று யாராவது வேண்டுமென்றே பொய் வதந்தியைக் கட்டிவிடுவார்கள். உடனே ஆங்கிலேயர்கள், அடைக்கலம் புகும் இடத்திற்குக் கூட்டங் கூட்டமாக ஓடும் கோலம் பரிதாபமாக இருக்கும்.

ஆங்கில உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், பெண்கள், குழந்தைகள் முதலிய சகலரும் அவ்விதம் ஓடியதைக் குறித்து ஓர் ஆங்கில அதிகாரி கூறியதாவது: 'புரட்சி ஏற்பட்டால் அதற்கு நாம்தான் காரணமாவோம். ஏனெனில் நம்மை எவ்வளவு எளிதில் பயமுறுத்திவிட முடியும் என்பதையும், பீதியடைந்த நாம் எவ்வாறு நிர்க்கதியாகத் தவிக்கிறோம் என்பதையும் நாமே சுதேசிகளுக்குக் காட்டிக்கொண்டுள்ளோம்!'

அப்போது ஆங்கிலேயர்களின் கோழைத்தனத்தை மக்கள் முற்றும் அறிந்துகொண்டனர். ஆங்கிலேயர்கள் அடைக்கலம் புகுவதற்காக மேலே குறிப்பிட்ட இடத்தை நிர்மாணித்த போது அஸிமுல்லாகான், தம் வழக்கமான இனிய குரலில், 'நல்லது சாஹிப், இங்கே நீங்கள் நிர்மாணித்து வரும் புதிய கட்டிடத்துக்கு என்ன பெயர் வைக்கப்போகிறீர்கள்?' என்று ஒரு வெள்ளை ராணுவ அதிகாரியைக் கிண்டலாகக் கேட்கவே, 'உண்மையில் நான் அதைப்பற்றி யோசிக்கவே இல்லை' என்று அவர் பதில் அளித்தார். சமயோசிதமாகப் பேசும் திறமை வாய்ந்த அஸிமுல்லா உடனே, 'தவிப்புக் கோட்டை என்று பெயரிடுங்கள்' என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டே கூறினர்!

அப்படியிருக்க, ஒரு நாள் மாலை இளைஞனை ஓர் ஆங்கிலேயன் குடித்துவிட்டு இந்தியச் சிப்பாய் ஒருவரை நோக்கிச் சுட்டான். நல்ல வேளையாகக் குறி தவறிவிட்டதெனினும், சிப்பாய் அந்த ஆங்கிலேயன்மீது வழக்குத் தொடர்ந்தார். ஆங்கிலேயர்களின் ஆட்சியில், வெள்ளையர்மீது இந்தியர் கொண்டுவரும் வழக்கு வெற்றி பெறுமா? அந்த வழக்கத்தை அநுசரித்து, அந்த ஆங்கிலேயன் குற்றவாளி அல்லவென்று விடுதலை செய்யப்பட்டான். எதிரி, போதையில் இருந்தபோது துப்பாக்கி தானகு வெடித்துவிட்டது என்பதே தீர்ப்பாகும்!

அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கு இல்லை யெனினும், காலம் மாறிவிட்டதல்லவா? அத்தகைய அக்கிரமங்களை இந்தியர்கள் எவ்வளவு காலந்தான் சகித்துக்கொண் டிருக்க முடியும்?

அந்தத் தீர்ப்பு, சிப்பாய்களிடையே மிகுந்த மனக் கொதிப்பை உண்டாக்கியது. 'சரி, இனி நம்முடைய துப்பாக்கிகளும் தாமாக வெடிக்கத் தொடங்கிவிடும்' என்று அவர்கள் முணு முணுத்தனர். சிப்பாய்கள் சந்தித்தால், 'நம்முடைய துப்பாக்கி கள் தாமாக வெடிக்கும் சமயம் வந்துவிட்ட தல்லவா?' என்று ஒருவரை ஒருவர் கேட்பது வழக்கமாயிற்று! எனினும் சிப்பாய் கள், மீரத் சகோதரர்களைப்போல் அவசரப்பட்டுவிடக் கூடா தென்று எண்ணித் தங்களுடைய கோபாவேசத்தை அடக்கிக் கொண்டனர்.

மேலே கூறிய அநீதியான தீர்ப்பைக் குறித்து ட்ரெவெலியன் என்ற ஆங்கில சரித்திராசிரியர் எழுதியிருப்பதாவது: 'கீழ்த்தர ஐரோப்பியர்களின் மிருகத்தனமும் ராணுவ நீதிபதிகளின் தான் தோன்றித்தனமும் சிப்பாய்கள் அறிந்ததே. சாதாரண கால மாயின், சிப்பாயைச் சுட்ட அக்கிரமத்தையோ அல்லது சுட்ட வர் விடுதலை செய்யப்பட்டதையோ குறித்து மற்றச் சிப்பாய்கள் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டார்கள். ஆனால் அவ்வமயம் அவர் களுடைய ரத்தம் கொதித்துக்கொண் டிருந்தது. மேலும் அவர் களுக்குச் சுயமதிப்பு உணர்ச்சியும் ஏற்பட்டிருந்தது. ஆங்கி லேயர்களுக்கு இந்தியாவில் விசேஷ உரிமைகளோ ராணுவ நீதிச் சபைக்குப் பாரபட்சமற்ற தன்மையோ, திறமையோ, நியாய புத்தியோ இல்லை என்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டிருந்தனர்.'

அவ்வமயம் ஓர் ஆங்கிலேயனின் பிரேதமும், அவனுடைய மனைவியின் பிரேதமும் கங்கையின் வழியாகக் கான்பூருக்கு வந்தன. கங்கை நதிக்கரையிலுள்ள மற்றோர் இடத்தில் புரட்சி ஆரம்பமாகிவிட்டது என்ற செய்தியை அந்தப் பிரே தங்கள் கான்பூர் மக்களுக்கு அறிவித்தன! 'ஓநாய் வரு கிறது, ஓநாய் வருகிறது' என்ற கூக்குரல் வெறும் பொய் என்ற எண்ணம் வெள்ளையர்களுக்கு ஏற்பட்டிருந்ததால், உண்மையிலேயே ஓநாய் வந்தபோது அவர்கள் தூங்கிக்கொண் டிருந்தனர்!

'அமைதியின்மைக்கும் பீதிக்கும் இனி இடமில்லை. கான்பூ ருக்கு இனி எவ்வித ஆபத்தும் நேராது. எனவே, நான் கூடிய சீக்கிரம் லக்ஷ்மணபுரிக்கு உதவித் துருப்புகள் அனுப் பத் தீர்மானித்துள்ளேன்' என்று ஹ்யூ வீலர் ஜூன் மாதம் 1-ஆம் தேதி கானிங் பிரபுவுக்குக் கடிதம் எழுதினான். அலாகா பாத்திலிருந்து வந்திருந்த வெள்ளைத் துருப்புகளும் ஜூன் மாதம் 3-ஆம் தேதி உண்மையில் லக்ஷ்மணபுரிக்குப் புறப்பட்டன. மூவாயிரம் சிப்பாய்களும், தாசிப் பெண்கள் உட்படக் கான்பூர் நகர மக்கள் யாவரும் கலந்துகொண் டிருந்த ஒரு புரட்சித் திட்டத்தைப்பற்றி ஆங்கிலேயர்களுக்கோ, அவர்கள் சொன்ன படி ஆடிய உளவாளிகளும் துரோகிகளுமான நானக் சந்த் போன்றவர்களுக்கோ சிறிதும் தெரியாதது பெரிய ஆச்சரியம் அல்லவா?

இவ்வாறு புரட்சித் திட்டத்தைப் பலமாக மூடிக்கொண் டிருந்த முத்திரை ஜூன் 4-ஆம் தேதி இரவு இறுதியாக

உடைக்கப்பட்டது, அதற்கிணங்க, நடுநிசியில் மூன்று துப்பாக்கி வேட்டுகள் கேட்டன. உடனே ஆங்கிலேயர்களின் கட்டிடங்கள் எல்லாம் பற்றி எரிந்தன. இந்த அறிகுறிகள் புரட்சி ஆரம்பமாகி விட்டது என்பதைப் பிரகடனப்படுத்தின.

முதலில் டீக்காசிங்கின் குதிரை பாய்ந்து சென்றது. ஆயிரக்கணக்கான வீரர்கள் அதைப் பின்தொடர்ந்தனர். வெள்ளையர்களின் வீடுகளுக்கும் குதிரை லாயங்களுக்கும் சிலர் தீ வைத்தனர். மற்றப் படைப் பிரிவுகளை அழைத்து வருவதற்காக மற்றும் சிலரும், ராணுவக் கொடிகளைக் கைப்பற்றுவதற்காக வேறு சிலரும் சென்றனர். அந்தக் கொடிகள் ஓர் இந்திய சுபேதாரிடம் இருந்தன. அவற்றைக் கொடுக்கும் விஷயமாக அவன் தேசபக்தர்களிடம் விவாதிக்க ஆரம்பிக்கவே, ஒரு வீரரின் வாள் அதே விநாடியில் அவனைப் பிணமாக்கியது.

சுபேதார் டீக்காசிங்கிடமிருந்து கட்டளை வந்ததும், 1-ஆவது காலாட் படையினர் தேசீய கோஷங்களுடன் போரில் குதித்தனர். அதைக் கண்டதும் அவர்களுடைய அதிகாரியான கர்னல் எவார்ட், 'ஓ என் குழந்தைகளா, இது என்ன? உங்களுடைய விசுவாச குணத்துக்கு இது இழிவல்லவா? பொறுங்கள், பொறுங்கள்' என்று கூக்குரலிட்டான். ஆனால் சிப்பாய்கள் அவன் கூறுவதைக் கேட்பதில் தங்களுடைய நேரத்தை வீணாக்கவில்லை.

உடனே காலாட் படை, குதிரைப் படை முதலியவற்றைச் சேர்ந்த எல்லா வீரர்களும் நவாப்கஞ்ஜிலுள்ள நானாவின் முகாமுக்கு யுத்த கீதங்களுடன் அணிவகுத்துச் சென்றார்கள். நவாப்கஞ்ஜ் கஜானாவில் நானாவின் சிப்பாய்கள் தயாராக இருந்தனர். அதில் இருந்த ஏராளமான தொகையும் பெரிய ஆயுதசாலையும் தேசபக்தர்களின் வசமாயின. நவாப்கஞ்சில் நிலைமை இவ்வாறு இருந்து வருகையில், கான்பூரில் பாக்கி இரண்டு படைப் பிரிவுகள் இருந்தன. அவையாவது தங்கள் வசமிருந்து நழுவிவிடாமல் இருக்கட்டும் என்ற உத்தேசத்துடன், ஆங்கில அதிகாரிகள் அந்தத் துருப்புகளை உடனே அணிவகுப்பு மைதானத்துக்கு அழைத்தனர்.

பீரங்கிப்படை வெள்ளையர்களின் நிர்வாகத்தில் இருந்ததால், இந்தியச் சிப்பாய்கள் இரவு முழுவதும் ஆயுதங்களுடன் அந்த மைதானத்திலேயே நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் புரட்சியில் சேர்ந்தவர்கள் அல்லவென்ற திருப்தி, வெள்ளையர்களுக்கு விடியற்காலைதான் ஏற்பட்டது! அதன் பிறகுதான் அவர்கள் எல்லோரையும் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்குச் செல்ல ஆங்கில அதிகாரிகள் அநுமதித்து, தாங்களும் தங்கள் முகாம்களுக்குப் புறப்பட்டனர்.

சிறிது தூரம் சென்றதும் இரண்டு இந்திய அதிகாரிகள் ஒருவருக்கு ஒருவர் ஏதோ ரகசியமாகச் சொல்லிக்கொண்டார்கள். உடனே அவர்களில் ஒருவர் அப்பால் பாய்ந்து, "கடவுள் சத்தியத்தின் பக்கம் இருக்கிறார். சகோதரர்களே,

எழுங்கள், என்று கோஷம் செய்யவே, சிப்பாய்கள் எல்லோரும் ஏககாலத்தில் தங்களுடைய வாள்களை உருவினர். புரட்சி மூண்டுவிட்டதைக் கண்ட ஆங்கிலேயர்கள் பீரங்கிகளால் சுட ஆரம்பித்தனர் எனினும், அதற்குள் சிப்பாய்கள் பீரங்கிகள் சுடக்கூடிய எல்லையைக் கடந்து சென்றுவிட்டார்கள்.

அவ்வமயம் சிப்பாய்கள் மனம் வைத்திருந்தால், எல்லா ஆங்கில அதிகாரிகளையும் பலியிட்டிருக்க முடியும். ஆனால் அவர்கள் அவ்விதம் செய்யவில்லை. நேராகத் தங்களுடைய தோழர்கள் இருக்கும் இடத்துக்குப் புறப்பட்டனர். ஏற்கனவே புரட்சியை ஆரம்பித்த மூவாயிரம் சிப்பாய்களும், ஜூன் மாதம் 5-ஆம் தேதியன்று நானா சாஹிபின் ஜாகைக்கு அருகில் முகாம் போட்டுக்கொண் டிருந்தார்கள். அணிவகுப்பு மைதானத்துக்கு அருகில் ஓர் ஆங்கிலேயர்கூடக் கொல்லப்படாததைக் குறித்து வீலர் மிகுந்த திருப்தி அடைந்ததுடன், மற்ற இடங்களில் நிகழ்ந்ததுபோல் சிப்பாய்கள் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றுவிடுவார்கள் என்றும், கான்பூருக்கு நேர இருந்த ஆபத்துத் தீர்ந்துவிட்டது என்றும் ஆறுதல் அடைந்தான்.

கான்பூரில் அவ்வமயம் சிறந்த தலைவர்கள் இருந்திராவிடில், மற்ற இடங்களில் செய்ததுபோலவே கான்பூர்ச் சிப்பாய்களும், வீலர் நினைத்ததுபோல் டில்லிக்குச் சென்றிருப்பார்கள். ஆனால் அப்போது நவாப்கஞ்சில் திறமையும் தைரியமும் வாய்ந்த பல தலைவர்கள் இருந்தனர். நானா சாஹிப் அவருடைய சகோதரர்களான பாலா சாஹிப், பாபா சாஹிப், ராவ் சாஹிப் முதலியோர் அங்கு இருந்தனர். தாதியா டோபே, அஸிமுல்லா கான் முதலிய திலகங்களும் இருந்தனர். அவர்கள் எல்லோரும் அங்கு இருக்கையில், சிப்பாய்கள் ஒரு தலைவரை நாடுவதற்காக டில்லி செல்ல வேண்டிய அவசியம் என்ன? எல்லா வீரர்களும் டில்லிக்குச் செல்வதால் என்ன நன்மை ஏற்பட முடியும்? பல இடங்களிலிருந்தும் வெள்ளையர்களுக்குத் தொல்லையைக் கொடுப்பதே வெற்றிகரமான திட்டமாகும்.

தவிர, பாஞ்சாலம்-டில்லி-கல்கத்தாப் போக்குவரத்துக்குக் கான்பூர் கேந்திர ஸ்தானமாக விளங்கியது. ஆகையால் தேசபக்தர்கள் அதைக் கைப்பற்ற வேண்டியது மிக அவசியமாகும். இவ் விவரங்களெல்லாம் சிப்பாய்களுக்குத் தெளிவாகக் கூறப்பட்டதும், கான்பூருக்குத் திரும்பிச் செல்லுவதென்று எல்லோரும் ஏக மனதாகத் தீர்மானம் செய்தனர். மூவாயிரம் சிப்பாய்களும் நானா சாஹிபைத் தங்களுடைய மன்னராகத் தேர்ந்தெடுத்து, அவரைத் தரிசிக்கவும் விரும்பினார்கள். பின்னர் நானா சாஹிப் அவர்களின் முன்னிலையில் வந்தபோது எல்லோரும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்து பலத்த ஆரவாரம் செய்ததுடன், அவருக்கு ராஜ மரியாதைகளும் செய்தனர். மன்னர் தேர்ந்தெடுக்கப்பட்ட பின், அவருடைய சம்மதத்தின்மீது சிப்பாய்கள் உயர்தர அதிகாரிகளையும் தேர்ந்தெடுத்தனர்.

கான்பூரில் புரட்சி இயக்கத்தின் உயிர்நாடியாக விளங்கிய சுபேதார் டீக்காசிங் குதிரைப் படையின் பிரதம தளபதி யாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவருக்கு 'ஜெனரல்' பட்டமும் அளிக்கப்பட்டது. புதிய ராணுவ விதிகள் வெளி யிடப்பட்டன. ஜமேதார் தளகஞ்ஜன் சிங் 53-ஆவது படை யின் தலைவராகவும், சுபேதார் கங்கா தீன் 56-ஆவது படையின் தலைவராகவும் நியமிக்கப் பெற்றனர். யானைமீது சுதந்தரக் கொடியை வைத்துப் பிரம்மாண்டமான ஊர்வலம் நடை பெற்றது. நாஞ சாஹிபின் ஆட்சி ஆரம்பம் ஆகிவிட்டது என் பதைத் தண்டோரா மூலம் அறிவித்தனர்.

அதன் பின் நாஞ ஒரு விநாடிகூட வீண் போக்கவில்லை. டில்லிக்குச் சென்ற சிப்பாய்கள் வழியில் திரும்பிவிட்டார்கள் என்ற செய்தி கிடைத்ததும், ஆங்கிலேயர்கள் தங்களுடைய புதிய கோட்டையைப் பலப்படுத்திக்கொண்டு, பீரங்கிகளையும் தயாராக வைத்தனர். ஆடவர்களும் பெண்களும் குழந்தை களுமாகக் கோட்டைக்குள் சுமார் ஆயிரம் வெள்ளையர்கள் இருந்தார்கள். அந்தக் கோட்டையைக் கைப்பற்ற வேண்டியது மிக அவசியமாதலால், அங்கே படையெடுத்துச் செல்லும்படி நாஞ தம் படைகளுக்குக் கட்டளையிட்டார். எனினும் தேச பக்தர்கள் கோட்டையைத் தாக்குவார்களா என்பது ஆங்கிலேயர்களுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை.

ஆனல் 6-ஆம் தேதி காலை வீலருக்கு நாஞவிடமிருந்து ஒரு சீட்டு வந்து சேர்ந்தது. 'நாங்கள் கோட்டையைத் தாக்கப் போகிறேம். அதையொட்டி உங்களை எச்சரிக்க விரும்புவதா லேயே இந்த முன்னறிக்கையை அனுப்பியுள்ளோம்' என்று அதில் குறிப்பிட்டிருந்தது. போருக்கு வரும்படி வீலருக்கு அந்த அழைப்பு வந்தபோது, அதிகாரிகள், துருப்புகள், பீரங்கித் துருப்புகள் முதலிய எல்லோரையும் ஆயத்தமா யிருக்கும்படி அவன் உத்தரவிட்டு, போருக்கான ஏற்பாடுகளை யெல்லாம் செய்துகொண் டிருந்தான்.

நாஞ சாஹிப் அவ்வாறு முன்னறிக்கை விடுக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. அப்படியிருந்தும் போர் ஆரம்பமாகு முன் அவர் அதைப்பற்றி முன்னதாகவே ஆங்கிலேயர்களுக்குத் தெரிவித்து எழுத்துமூலம் ஓர் குறிப்பு அனுப்பியது மிகவும் முக்கியமான விஷயமாகும். நாஞ சாஹிபின் பெயரை இழிவு படுத்தி அவரது உயர்வை மறைக்க முயன்று வரும் அற்பர்கள் மேலே குறிப்பிட்ட அவரது இயற்கையான பெருந்தன்மையைக் கண்டு வெட்கித் தலைகுனிய வேண்டும்.

இந்த உண்மைகளையும்—அதாவது புரட்சி ஏற்பட்ட சமயத்தில் தேச பக்தர்கள் ஆங்கில அதிகாரிகளின் உயிர்களுக்கு உலை வைக்காமல் இருந்ததையும், பன்னிரண்டு மணி நேரத் துக்கு முன்னதாகவே நாஞ ஆங்கிலேயர்களுக்கு எச்சரிக்கை அனுப்பியதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, பின்னல் நிகழ்ந்த காட்சிகளைக் கவனித்தால்தான், கான்பூரின்

அப்போதைய உண்மையான நிலையை நாம் அறிந்துகொள்ள முடியும்.

ஆங்கிலேயர்களுக்கு முன்னறிக்கை விடுத்த பின் ஜெனரல் டீக்காசிங் ஆயுதசாலைக்குச் சென்று காலை முழுவதும் ஆயுதங்களைச் சீர்ப்படுத்துவதிலும், தாக்கும் இடத்துக்கு அவைகளை அனுப்புவதிலும் மும்முரமாக ஈடுபட்டார். நதியின் பக்கத்திலிருந்தும் கரையின் பக்கத்திலிருந்தும் கோட்டையை நோக்கிப் பீரங்கிகள் அமைக்கப்பட்டன. சிறந்த ராணுவ தந்திரத்துடனும் திறமையுடனும் போர்த் திட்டம் வகுக்கப்பெற் றிருந்தது:

அதே சமயம் கான்பூர் நகரமெங்கும் கொந்தளிப்பு ஏற்பட்டுவிட்டது. சாதாரண மக்கள்கூடக் கைக்குக் கிடைத்த ஆயுதத்தை எடுத்துக்கொண்டு, வெள்ளையர்களை வேட்டையாடப் புறப்பட்டனர். வெள்ளையர்களின் காரியாலயங்கள், கோர்ட்டுகள், தஸ்தாவேஜுகள் எல்லாம் தீக்கு இரையாயின. மத்தியான்னம் ஒரு மணிக்கு முற்றுகை ஆரம்பமாயிற்று. மாலையில் பீரங்கிகள் இடிமுழக்கம் செய்யத் தொடங்கின. அதன் பயனாக, கோட்டைக்குள் இருந்த வெள்ளையர்களின் வீடுகள் தவிடுபொடி ஆயின.

ஜூன் 7-ஆம் தேதி தேசபக்தர்களின் பீரங்கிப் படைகள் தங்களுடைய பயங்கரமான வேலையை ஆரம்பித்ததும், கோட்டைக்குள் இருந்த ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் திகிலடைந்து கூக்குரல் இட்டுக்கொண்டு அங்கும் இங்கும் ஓடினர்.

தாக்குதல் ஆரம்பமாகி இரண்டு நாட்கள்தாம் சென்றன. அதற்குள் கோட்டையில் குடி தண்ணீர் மிகவும் குறைந்துவிட்டது. கோட்டைக்குள்ளே இருந்த ஒரே ஒரு கிணற்றில் ஆங்கிலேயர்களைக் காட்டிலும் தேசீய வீரர்களே அதிகக் கண்ணோட்டம் செலுத்திவந்தனர்! சூரிய வெப்பம் சகிக்க முடியாமல் ஆங்கிலச் சிப்பாய்களில் சிலர் பலியாயினர். எல்லோருடைய மனமும் கல்லாகியது. ஆண், பெண் என்ற வித்தியாசமும் கூச்சமும் மறைந்தன. பாலில்லாமல் குழந்தைகள் மரித்தன. அந்தத் துக்கத்தினால் தாய்மார்களும் மாண்டனர். மாண்டவர்களைப் புதைக்க முடியாமல் போனது ஒரு புறம் இருக்க, யார் இறந்தார்கள், யார் இருக்கிறார்கள் என்பதையே அறிந்து கொள்வது கஷ்டமாகிவிட்டது. உயிருடன் இருப்பவர்களின் ஜாப்தாவைத் தயாரித்துக்கொண் டிருக்கையிலேயே சிலருடைய பெயர்களை அடித்துவிடும்படி நேரும்!

அப்போது காப்டன் தாமஸ், தான் பெற்ற அநுபவத்தைப் பற்றி இவ்வாறு விவரித்திருக்கிறான்: 'ஆம்ஸ்டிராங் காயமடைந்து கீழே விழுந்து கிடந்தபோது, அவனைப் பார்ப்பதற்காக லெப்டினன்ட் ப்ரோல் வந்தான். அவன் ஆம்ஸ்டிராங்கிற்கு ஆறுதலாக இரண்டொரு வார்த்தைகள் கூறியதும், அவனுடைய (ப்ரோலினுடைய) துடையில் ஒரு தோட்டா பாய்ந்ததால், அவனும் கீழே விழுந்தான். அவனை நான் மெது

வாகத் தூக்கி நடத்திச் செல்லுகையில், எங்கிருந்தோ ஒரு தோட்டா பறந்து வந்து என் தோளில் பாய்ந்தது. உடனே நாங்கள் இருவரும் கீழே விழுந்தோம். இதைப் பார்த்த கில்பர்ட் பக்ஸ் எங்களுக்கு உதவி செய்வதற்காக ஓடி வந்தான். அவன் எங்கள் அருகில் வருமுன் அவன்மீதும் ஒரு தோட்டா பாய்ந்து அவனது தேகத்தைத் துளைத்துக்கொண்டு சென்றுவிட்டதால், அவன் கீழே சாய்ந்து மாண்டான்.'

சிறிது நேரத்தில் நடந்த இந்தச் சம்பவங்களைப் போலவே அந்த இருபத்தொரு நாட்களிலும் நிகழ்ந்து வந்தன! வீலரின் மகன் காயமடைந்து கிடந்தபோது, மற்றொரு குண்டு அவனது தலையை அப்பால் கொண்டுபோய் எறிந்துவிட்டது. மாஜிஸ்திரேட் ஹில்லர்ஸ்டன் தன் வீட்டுத் தாழ்வாரத்தில் நின்று மனைவியுடன் பேசிக்கொண் டிருந்தபோது, இருபது பவுண்டு குண்டு ஒன்று அவன் தலையில் விழுந்து அவனைச் சின்னபின்னம் ஆக்கிவிட்டது. சில நாட்களுக்குப்பின் அவ்விடத்தில் இருந்த சுவரில் அவன் மனைவி சாய்ந்துகொண் டிருந்தபோது அது இடிந்து விழுந்துவிட்டதால் அவளும் மாண்டாள்.

கோட்டைக்கு அருகிலுள்ள ஒரு பள்ளத்தில் ஏழு ஆங்கிலப் பெண்கள் பதுங்கிக்கொண் டிருந்தனர். அங்கே ஒரு குண்டு விழுந்து வெடித்ததில் அவர்கள் மாண்டதுடன், ஏற்கனவே குடி வெறியில் ஓர் இந்தியரைச் சுட்டும் குற்றவாளி அல்லவென்று விடுதலை செய்யப்பட்ட வெள்ளைச் சிப்பாயும் பலியானான். இனிக் குடி வெறியில்கூட ஆங்கிலேயர்கள் மறக்க முடியாதவாறு அவ்வளவு அற்புதமாக இந்திய வீரர்களின் துப்பாக்கிகள் வேலை செய்தன!

பயங்கரமான அத்தகைய முற்றுகை நடந்துகொண் டிருந்த சமயத்திலுங்கூட, மடையர்களான சில இந்தியர்கள், ஆங்கிலேயர்களிடம் விசுவாசத்துடன் இருப்பதுதான் தங்களுடைய கடமை என்று கருதி, மரணத்தையும் பொருட்படுத்தாது அவர்களுக்கு உதவி புரிந்தனர்! வெள்ளையர்களிடம் வேலை பார்த்துக்கொண் டிருந்த ஓர் இந்தியத் தாதி, குண்டு வெடித்ததில் தன் இரு கைகளையும் இழந்தாள். தங்களுடைய எஜமானர்களுக்கு உணவு கொடுப்பதற்காக அங்கும் இங்கும் ஓடிக்கொண் டிருந்த பட்லர்களிலும் பலர் குண்டுகளுக்கு இரையாயினர். இந்திய வேலைக்காரர்களில் பலர் தங்களுடைய உயிரையும் லட்சியம் செய்யாமல் ஆங்கிலேயர்களுக்குக் குடி தண்ணீர் கொண்டுபோய்க் கொடுத்தனர்.

வாந்திபேதி, வயிற்றுக் கடுப்பு, விஷஜுரம் முதலியனவும் வெள்ளையர்கள்மீது வஞ்சம் தீர்க்கத் தவறவில்லை! ஜார்ஜ் பார்க்கர், கர்னல் வில்லியம்ஸ், லெப்டினன்ட் ரூனி முதலிய அதிகாரிகள் நோயால் மாண்டனர். குண்டுகளுக்கோ நோய்களுக்கோ இரையாகாதவர்கள், பிணக்குவியல்கள் கிடக்கும் அந்தக் 'கல்லறை'யில் வசிப்பதால் ஏற்பட்ட சகிக்க முடியாத பீதியால் சித்த சுவாதீனம் இழந்து திரியலாயினர். அப்போது கோட்டைக்குள் நிலவிய அலங்கோலத்தை வர்ணிப்பது முடி

யாத காரியம். நூறு ஆண்டுகளாக ஆங்கிலேயர்கள் இழைத்து வந்த அநீதிகளுக்கெல்லாம் பழி வாங்க வஞ்ச தேவதையே அங்கே வந்து, இருபத்தொரு நாட்கள் வரையில் தன் கையில் அகப்படுவோரை யெல்லாம் பட்சித்து, பயங்கரமான புன்னகை யுடன் நர்த்தனம் ஆடினுள்!

கோட்டைக்குள் நிலைமை இவ்விதம் இருந்தாலும் வெளிப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த வெள்ளையர்களின் பீரங்கிகள் வெகு மும்முரமாக வேலை செய்தன. பீரங்கிப் படையின் முக்கியத் தலைவர்களான ஆஷ், காப்டன் மூர், காப்டன் தாமஸ் முதலியோரும், மற்றவர்களும் தேசபக்தர்களை எதிர்த்து, வெகு உக்கிரமாகப் போர் புரிந்தனர். லக்ஷ்மணபுரியிலிருந்தோ அலாகா பாத்திலிருந்தோ விரைவில் தங்களுக்கு உதவித் துருப்புகள் வரும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்து வந்தது. ஆயினும் தேச பக்தர்கள் மிகவும் விழிப்புடன் இருந்ததால், ஆங்கிலேயர் களால் கோட்டைக்கு வெளியே கடிதம் எதுவும் அனுப்ப முடியவில்லை.

அப்படியிருந்தும், ஓர் இந்தியத் தூதன் வீலர் எழுதிய கடிதம் ஒன்றை ஒரு பறவையின் சிறகுக்குள் வைத்து மறைத்து, எப்படியோ லக்ஷ்மணபுரி வரையில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டான். அந்தக் கடிதத்தில் சில வார்த்தைகள் லத்தீன் பாஷையிலும், சில பிரெஞ்சிலும், மற்றும் சில ஆங்கிலத்திலும் தந்திரமாக எழுதப்பட்டிருந்தன. மேலும் அதில் மூன்றே வரிகள்தாம் இருந்தன. அவையாவன: 'உதவி செய்யுங்கள், உதவி செய்யுங்கள், உதவி செய்யுங்கள். நீங்கள் உதவித் துருப்பு கள் அனுப்பாவிடில் நாங்கள் யாவரும் மடிந்துபோவோம். எங்களுக்கு உதவி கிடைத்தால், நாங்கள் பின்னுல் அங்கே வந்து லக்ஷ்மணபுரியைக் காப்பாற்றுவோம்.'

தேச பக்தர்கள் கண்கொட்டாமல் இருந்ததால் ஆங்கிலே யரின் முகாமிலிருந்து வெளியே சென்ற தூதர் ஒருவராவது அங்கே திரும்பிப் பத்திரமாகப் போய்ச்சேர முடியவில்லை. தேச பக்தர்களிடையே யாராவது துரோகிகள் இருந்தால் அவர் களுக்கு லட்சம் ரூபாய் தருவதாக உறுதி கூறும்படி வெள்ளையர் கள் ஒற்றர்களை அனுப்பினர். ஆனுல் அந்த ஒற்றர்களின் கதி என்னவாயிற்று என்பது ஆங்கிலேயர்களுக்குத் தெரியாது.

ஆங்கிலேயர் அனுப்பிய ஒற்றர்களில் ஒருவர் கூறியிருப் பதைப் பாருங்கள்: 'ஷெப்பர்ட் என்பவனின் மனைவியும் மக ளும் மாண்டதும், அவன் புரட்சிக்காரர்களிடமிருந்து தகவல் களை அறிந்து வருவதற்காகவும், அவர்களிடையே பிளவை உண்டு பண்ணுவதற்காகவும் இந்தியச் சமையற்காரன் போல் மாறு வேடம் பூண்டு வெளியே சென்முன். எனினும் அவன் சிறிது தூரம் செல்லுவதற்குள்ளேயே தேசபக்தர்கள் அவனைக் கைது செய்து, நானு சாஹிபின் முன்னிலையில் கொண்டு வந்தனர். கோட்டைக்குள் ஆங்கிலேயர்களின் நிலைமையைப்பற்றி அவனைக் கேட்டபோது, ஏற்கனவே அவனும் அவனுடைய சகாக்களும் முடிவு செய்திருந்ததற்கு இணங்க, அவன் பொய்த் தகவல்களைக்

கூறியதுடன், அங்கே நிலைமை மிகவும் திருப்திகரமாக இருந்து வருவதாகவும் வர்ணித்தான். எனினும் அவனுக்கு முன் கைது செய்யப்பட்ட இரண்டு பெண்கள், கோட்டைக்குள் ஆங்கிலேயர்கள் பட்டுவரும் பாடுகளைப்பற்றிய உண்மையை ஒளிக்காது கூறியிருந்ததால், ஷெப்பர்டின் நிலைமை மிகவும் சங்கடமாகியது. பின்னுல் அவனைச் சிறையில் வைத்து ஜூலை மாதம் 12-ஆம் தேதி கோர்ட்டார் முன்னிலையில் கொண்டுவந்தபோது அவன் மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டான்.'

கடுமையான போர் நடந்துகொண் டிருந்த சமயத்திலும், நீதி பரிபாலனத்தில் நாஞ சாஹிபின் அக்கறையையும் ஆர்வத்தையும் மேற்கண்ட சம்பவத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். வெள்ளையர்களின் ஒற்றர்கள் தங்களுடைய தந்திரம் எதுவும் பலிக்காமல் ஏமாந்தனர். தேசபக்தர்களின் ஒற்றர்களோ அதற்கு நேர்மாருகத் தங்களுடைய வேலைகளை வெகு திறமையுடன் செய்து முடித்தனர்.

தண்ணீர் கொண்டு செல்லும் வேலைக்காரன் ஒருவன் ஒரு நாள், ஆங்கிலேயர்களின் கோட்டைக்கு அருகிலுள்ள உயரமான இடத்தில் நின்றுகொண்டு உரக்கக் கூறத் தொடங்கினுன்: 'எனக்கு ஆங்கிலேயர்களிடம் மிகுந்த விசுவாசம் உண்டு. அதனுல்தான் மரணத்தையும் லட்சியம் செய்யவில்லை. உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும் ஒரு செய்தியைக் கூறவே நான் இங்கே வந்திருக்கிறேன். ஆங்கிலப் படை ஒன்று ஆயுதங்களுடன் கங்கைக்கு அக்கரையில் வந்திருக்கிறது. உங்களுடைய கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காக அது நாளை இங்கே வந்து சேரும். இந்தச் செய்தி அயோக்கியர்களான கலகக்காரர்களிடையே கதிகலக்கத்தை உண்டுபண்ணி யிருக்கிறது ஆங்கில விசுவாசிகளான நாங்கள் உங்களுடன் சேர்ந்துகொள்ளத் தயாராக இருக்கிறோம்' என்று அவ் வேலைக்காரன் கூக்குரலிட்டான்.

இதைக் கேட்டதும் ஆங்கிலேயர்களுக்கு உண்டான ஆனந்தத்துக்கு அளவில்லை. தாங்கள் அனுப்பிய ஒற்றர்கள் புரட்சிக்காரர்களிடையே பிளவை உண்டுபண்ணுவதில் வெற்றிபெற்றுவிட்டார்களென்றும், லக்ஷ்மணபுரியிலிருந்தே ஆங்கிலப் படை வந்திருக்க வேண்டுமென்றும் அவர்கள் கருதினர். அதே வேலையாள் மறுநாளும் அவ்விடத்தில் வந்து, 'ஆங்கிலேயர்களுக்குத்தான் வெற்றி! கங்கையில் வெள்ளம் வந்திருப்பதால் ஆங்கிலப் படை வந்து சேருவதில் தாமதம் ஏற்பட்டிருக்கிறது; எனினும் இப்போது எல்லாம் சீர்ப்பட்டுவிட்டது; ஆங்கிலேயர்கள் வந்துகொண்டிருக்கிருர்கள்; இன்று மாலைக்குள் என் எஜமானர்கள் வெற்றி பெறுவார்கள்' என்று கூச்சலிட்டான்.

அன்றைத் தினமும் மறு நாளும் கழிந்தன. ஆங்கிலேயர்கள் கண் கொட்டாமல் கங்கைப் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். உதவிக்கு ஆங்கிலப் படை வரக் காணவில்லை. கூக்குரலிட்டவனையும் காணவில்லை! கோட்டைக்குள் இருப்பவர்களின் பரிதாபமான நிலைமையை அஸிமுல்லா

நன்கு அறிவாராதலால், அவர் அதற்குமேல் அந்த ஆளை அனுப்பி, அவனுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படும்படி செய்ய விரும்பவில்லை! மேலே கூறியவாறு புரட்சித் தலைவர்கள் பல ஒற்றர்களை அனுப்பி ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த நம்பிக்கை உண்டாக்கும்படி செய்தனர். பின்னால் அவர்களுடைய நம்பிக்கையெல்லாம் பாழானதால் ஏற்பட்ட ஏமாற்றமே அவர்கள் உயிரில் பாதியை வாங்கிவிட்டது!

கோட்டையை முற்றுகையிடப் போவதாக நானா சாஹிப் ஆங்கிலேயர்களுக்கு முன்னறிக்கை விடுத்தபின் ஜெனரல் டீக்கா சிங்கின் முகாமுக்கு அருகில் தம் முகாமை அமைத்துக்கொண்டார். கான்பூர் விடுதலை அடைந்ததும், மாகாணம் முழுவதும் புரட்சி வெள்ளம் பெருக ஆரம்பித்தது. ஜமீன்தார்கள், மன்னர்கள் முதலியோர் தங்களுடைய பரிவாரங்களுடனும் படைகளுடனும் நானா சாஹிபின் கட்சியில் சேர்ந்து வந்தார்கள். அவ்வமயம் நானாவிடம் நாலாயிரம் சிப்பாய்கள் இருந்தனர். அவர்களில் பீரங்கித் துருப்புகள்தாம் அப்போது வெகு தீவிரமாகத் தங்கள் கடமையைச் செய்துவந்தனர். அங்கே பச்சைக்கொடி பறந்துகொண்டிருந்த சிறந்த கூடாரம் ஒன்றில் நன்ஹி நவாப் இராப்பகலாக உட்கார்ந்து போரைக் கவனித்து வந்தார்.

புரட்சி ஆரம்பமானதும் நன்ஹி நவாபின் மாளிகையையும் சொத்துக்களையும் பறிமுதல் செய்யும்படி புரட்சித் தலைவர்கள் கட்டளையிட்டார்கள். எனினும் பின்பு சமரசம் ஏற்படவே, அந்த உத்தரவு ரத்துச் செய்யப்பட்டது. அந்தப் புனித சுதந்தர யுத்தத்தில் நன்ஹி நவாப் மிகுந்த புகழுரைக்குப் பாத்திரரானார். குறி தவறாமல் சுடும் முதல்தர நிபுணர்கள், ராணுவத்தில் மிகுந்த அநுபவம் பெற்று உபகாரச் சம்பளம் வாங்கி வருவோர் முதலியோரின் நிர்வாகத்திலேயே நானாவின் பீரங்கிகள் இருந்தன. ஆங்கிலேயர்களின் கட்டிடங்களுக்கெல்லாம் தீ வைக்கப் புரட்சிக்காரர்கள் முயன்றுவருகையில், பீரங்கிப் படையைச் சேர்ந்த ஓர் இளைஞர் புதிய வெடியொன்றைக் கண்டுபிடித்தார். முதல் பரிசோதனையிலேயே அந்த வெடி ஆச்சரியமான வெற்றியைக் கொடுத்தது. ஆங்கிலேயர்களுக்கு இன்றியமையாத ராணுவ விடுதிகளின்மீது அந்த வெடி எறியப்பட்டதில் அவையெல்லாம் தீப்பிடித்து மிக விரைவில் சாம்பலாயின.

பீரங்கிகளைச் சுடுவதில் தேசபக்தர்களுக்குள் மிகுந்த போட்டியும் ஏற்பட்டது. அவற்றைச் சுடுவதில் பெண்களும் கிழவர்களுங்கூட உதவி செய்தனர்.

ஆடவர்களும் சரி, பெண்களும் சரி, தேசத்துக்காகப் போரிடாமல் சோம்பேறித்தனமாக உட்கார்ந்திருப்பது வெட்கக்கேடான காரியமென்று கருதப்பட்டது. எனவே கான்பூரிலுள்ள பெண்கள் தங்களுடைய அந்தப்புரங்களை விட்டுப் போர்க்களத்தில் குதித்தனர்.

எனினும் நட்சத்திரம்போல் மின்னும் அழகு பொருந்திய ஒரு யுவதியின் முன்னிலையில் மற்ற வீரர்கள், வீரப் பெண்மணி

கள் முதலியோரின் பெருமை பிரகாசிக்க முடியவில்லை: அந்தப் பெண்ணின் வீர தீரத்தைக் கண்டு அனைவரும் வெட்கினர். இவள் யார்? வேறு யாரும் அல்ல! நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள அஸிஸான்தான்! தாசிப் பெண்ணான அஸிஸான் அப்போது ஒரு போர் வீரனைப்போல் உடை தரித்திருந்தாள். ரோஜா மலர் போன்ற சிவந்த கன்னங்களையும், புன்முறுவல் பூத்த அழகிய உதடுகளையும் கொண்ட அவள், ஆயுதங்களுடன் குதிரை மீதேறி வந்தாள். அவளைக் கண்டதும், பீரங்கிப் படை வீரர்கள் தங்களுடைய களைப்பையும் மறந்தனர்.

நானக் சந்த் தன் தினசரிக் குறிப்பில் அஸிஸானைப்பற்றி எழுதியிருப்பதாவது: 'ஆயுதம் தரித்த அஸிஸான் மின்னலைப் போல் போர்க்களமெங்கும் தோன்றுகிறாள். களைப்படைந்த சிப்பாய்களுக்கும் காயமடைந்தவர்களுக்கும் அவள் அடிக்கடி பாலும் இனிய பட்சணங்களும் கொடுத்து உற்சாகம் ஊட்டுகிறாள்.'

இவ்வாறாக ஒரு புறம் போர் நடந்துகொண் டிருக்கையிலேயே, மற்றொரு புறம் அரசாங்க நிர்வாகத்திற்கு உரிய எல்லா ஏற்பாடுகளையும் நானா சாஹிப் செய்துவந்தார். புரட்சியைப் போன்ற நெருக்கடியான சமயத்தில் நீதி, போலீஸ் இலாகாக்கள் இரண்டையும் ஒழுங்கான முறையில் அமைப்பது மிகவும் கஷ்டமான காரியம். நானா சாகிப், முதல் முதலாக ஜனங்களுக்குப் பாதுகாப்பளித்து நீதி வழங்குவதற்கான முறைகளைக் கைக்கொண்டார். கான்பூரிலிருந்து பிரமுகர்களையெல்லாம் அழைத்து, பிரதம மாஜிஸ்திரேட் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்தார். அவர்களில் பெரும்பாலோர் ஹுலாஸ்ய சிங் என்பவரை அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுத்தனர்.

ஒழுங்கு தவறிய சிப்பாய்களிடமிருந்தும், கொள்ளைக்காரர்களிடமிருந்தும் ஜனங்களைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு ஹுலாஸ்ய சிங்கைச் சார்ந்ததென்று நானா சாஹிப் கண்டிப்பாக உத்தரவிட்டார். படைகளுக்குத் தேவையான உணவுப் பொருள்களையும் மற்றச் சாதனங்களையும் விநியோகம் செய்யும் பொறுப்பு முல்லா என்பவரிடம் ஒப்படைக்கப் பட்டது.

சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரிப்பதற்காக ஒரு நீதி சபையும் நியமிக்கப் பெற்றது. அதில் ஜ்வாலாப் பிரசாத், அஸி முல்லாகான முதலிய மற்றப் பிரமுகர்கள் நீதிபதிப் பதவிகளை ஏற்றுக்கொண்டனர். பாபா சாஹிப் அந்தச் சபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த நீதி சபையின் தஸ்தாவேஜுகளில் சில இன்னும் இருந்து வருகின்றன. அவைகளிலிருந்து, மக்களை இம்சித்தும் அமைதிக்குப் பங்கம் விளைவித்தும் குற்றம் செய்தவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர் என்பதும், அமைதியையும் ஒழுங்கையும் நிலைநிறுத்தும் விஷயமாக மிகுந்த சிரத்தை எடுத்துக்கொள்ளப்பட்டது என்பதும்

பிரெஞ்சுப் புரட்சியின்போது நியமிக்கப்பட்ட ஜனப் பாது காப்புக் கமிட்டியைப்போலவே இந்த நீதி சபையும் மற்ற இலா காக்களின் நிர்வாகத்தையும் சரிவரப் பரிசீலனை செய்ய முற்பட் டது. வெடி மருந்துகள் குறையாமல் தருவித்துக் கொடுப்பது, சிப்பாய்களுக்கு உடைகள் விநியோகம் செய்வது, கைதியான ஆங்கில ஒற்றர்கள் மீதுள்ள வழக்குகளை விசாரித்து முடிவு செய்வது, தப்பியோட முயலும் திருடர்களுக்குத் தண்டனை விதிப்பது—இவைபோன்ற பல விஷயங்களையும் இந்த நீதி சபையே கவனித்து வந்தது. திருட்டுத்தனமாகப் பதுங்கிக் கொண்டிருந்த ஆங்கிலேயர்களைக் கண்டுபிடித்தவர்களுக்கு இந்தச் சபை வெகுமதிகளும் கொடுத்துவந்தது.

பொதுவான தாக்குதல்களில் ஈடுபட்டு, ஆங்கிலேயர்களின் கோட்டையைத் தகர்த்துக் கைப்பற்ற வேண்டும் என்பது தலை வர்களின் திட்டம் அல்ல. ஆனால் பீரங்கிகளினால் நான்கு புறத் திலும் தாக்கி வெள்ளையர்களைக் கலங்கவைத்து அடிபணியும்படி செய்யவேண்டும் என்பதே அவர்களின் நோக்கம். இருந் தாலும் எப்போதாவது பொதுவான தாக்குதலும் நடைபெறும். இரு சாராரும் சிலரை இழந்தபின் தேசபக்தர்கள் பின்வாங்கிச் சென்றுவிடுவர். பீரங்கிப்படையைப் போல் குதிரைப் படை யும் காலாட்படையும் அவ்வளவு தீவிரமாகவும் வீர பராக்கிரமத் துடனும் போர் புரியவில்லை.

டில்லியிலும் லட்சுமணபுரியிலும் நடந்த முற்றுகைகளில் கூட இதே தவறுதான் நடந்தது. கான்பூர் முற்றுகையிலும் துருப்புகள் நேருக்கு நேராகப் போர் புரிவதைக் காட்டிலும் பீரங்கி யுத்தத்தையே அதிக முக்கியமாகக் கருதினார்கள். அது பற்றிச் சிப்பாய்கள்மீது எவ்விதக் குறையும் கூறுவதற்கு இல்லை; பின்னர் ஜூன் மாதம் 18-ஆம் தேதி கோட்டையைத் தாக்கிய போது சிப்பாய்கள் காட்டிய தைரியமும் அஞ்சா நெஞ்சமும் ...ய சரித்திரத்திற்கே அணிகலனாக அமைந்துள்ளன.

அன்று அவர்கள் எதிரிகளின் பீரங்கிகளைச் சிறிதும் லட்சி யம் செய்யாமல், சுவர்களின் மீதேறி அம்புகள்போல் பகைவர் களுடைய முகாம்களின்மீது பாய்ந்தனர். ஆங்கிலேயர்களின் பீரங்கி ஒன்றைக் கைப்பற்றி அவர்கள் பக்கமாகத் திருப்பிச் சுட ஆரம்பித்தனர். அன்று அவர்களின் வீரச் செயல்கள், இனிமேல் சந்திரசூரியர் உள்ள அளவும் இந்தியச் சுதந்தரக் கொடிக்கு யாதோர் ஆபத்தும் ஏற்படப் போவதில்லையென எல்லாரும் எண்ணும்படி செய்தன.

இத்தகைய மகத்தான தைரியம் வாய்ந்த சிப்பாய்களுக்கு மேற்கொண்டு உதவி அளிக்காமல், சிலர் யாதொரு காரணமும் இன்றிச் சிப்பாய்களிடையே அமைதியின்மையையும் குழப்பத்தை யும் உண்டுபண்ணினர். இந்தப் பலவீனந்தான் தேசபக்தர் களின் படை பின்வாங்கும்படி செய்துவிட்டது.

அயோத்தியிலுள்ள தைரியசாலிகளான சிப்பாய்களைப்போல் கான்பூரிலும் அந்தரங்க சுத்தியும், அபாரத் திறமையும்,

ஆண்மையும், பராக்கிரமமும் வாய்ந்த பலரும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்தனர். பிறர் என்ன செய்தாலும் தாங்கள் தங்கள் கடமையிலிருந்து அணுவளவும் வழுவக் கூடாது என்பதே அத்தகைய சீலர்களின் உறுதியாக இருந்தது. உதாரணமாக, ஒரு நாள் சிப்பாய்கள் பின்வாங்குகையில் ஒரு சிப்பாய் மாத்திரம் மாண்டவரைப்போல் பாசாங்கு செய்து பூமியில் அசைவற்றுக் கிடந்தார். ஆங்கிலேயர்களில் மிகுந்த தைரியமும் போர்த் திறமையும் வாய்ந்த காப்டன் ஜெங்கின்ஸ் குதிரைமீது அந்தப் பக்கமாக வந்துகொண்டிருக்கையில், அந்தச் சிப்பாய் திடீரென்று பாய்ந்தெழுந்து அவன் கழுத்தை நோக்கிச் சுட்டதால், ஜெங்கின்ஸ் அதே க்ஷணத்தில் கீழே விழுந்து மாண்டான்.

ஜூன் 28-ஆம் தேதி வந்தது. நூறு வருஷங்களுக்கு முன் அதே தினத்தில்தான் வெள்ளையர்கள் பிளாஸிப் போர்க்களத்தில் தங்களுடைய சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரத்தை அமைத்தனர். அன்றுதான் ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில் மகத்தான வெற்றி கிடைத்தது. இந்தியத் தாய் தன் சுதந்தரத்தை இழந்த தினம் அதுதான். இந்தியாவின் பரிதாபமான புலம்பல் ஆரம்பமான நாளும் அதுதான். அந்தத் துரதிருஷ்ட நாளில் அடைந்த அவமதிப்பு ஹிந்துஸ்தானத்தின் இருதயத்தில் கொதித்துக் கொண்டிருந்தது. அந்தப் பாவ தினமும் அதைப்பற்றிய ஞாபகமும் இந்தியர்களின் மனத்தில் பசுமரத்து ஆணிபோல் பதிந்து கிடந்தன.

அடிமைத்தனமாகிய பயங்கரமான காயம், நூறு ஆண்டுகளுக்குப் பின்னுலுங்கூட ஆறவில்லை! அதைக் குணப்படுத்தக் கூடிய அருமருந்து அப்போதுங்கூடக் கண்டுபிடிக்கப்படவில்லை. குற்றம் செய்தவர்களை மன்னிக்கும் குணமும் சாந்தமும் பொருந்திய இந்தியாவின் இருதயத்தில்கூட ஆங்கிலேயர்களின் மீது துவேஷம் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது! பிளாஸியில் ஆங்கிலேயர்கள் செய்த அட்டூழியங்களுக்காக வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற தாகம் ஒரு நூற்றாண்டு கடந்துங்கூடத் தணியவில்லை! இறக்கும் ஒவ்வொரு தலைமுறையின் இறுதி மூச்சிலும், பிறக்கும் ஒவ்வொரு தலைமுறையின் முதல் மூச்சிலும் இந்தியத் தாய், ஆங்கிலேயர்கள் பிளாஸியில் செய்த பாவத்துக்காக வஞ்ச உணர்ச்சியை ஊட்டி வந்தாள். நூறு வருஷங்களாக உருவான வஞ்சம் 1857-ஆம் வருஷம் ஜூன் மாதம் 23-ஆம் தேதி உதயமாயிற்று. வஞ்சம் தீர்க்கப்பட வேண்டிய நாள் அதுதான் என்று ஜோஸ்யர்கள் கூறியிருந்தனர். அந்த ஜோஸ்யம் நிறைவேறுவது கடவுள் கையில் இருப்பினும், அந்த லட்சியத்தை அடையும் முயற்சியில் வீரச் சிப்பாய்கள் தங்கள் கடமையைச் செய்து தீர வேண்டும் அல்லவா?

அந்தச் சுப தினத்தை, அத்தகைய அரிய சந்தர்ப்பத்தை இழக்கத் தேசபக்தர்கள் விரும்பவில்லை. அன்று நானா சாஹிபின் முகாமில் பெரும் கொந்தளிப்பு உண்டாயிற்று. அதற்கு முன் நடைபெற்றிராத கோரமான தாக்குதலை நடத்த, ராணுவத்தின்

எல்லாப் பிரிவுகளும் ஆயத்தமாக இருந்தன. பீரங்கிப் படை, குதிரைப் படை, காலாட்படை முதலிய எல்லாப் படைகளையும் சேர்ந்த வீரர்கள், சரித்திரப் பிரசித்தி பெற்ற அந்தத் தினத்தின் ஞாபகத்தால் ஆவேசம் கொண்டு போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தனர். அன்றைத் தினம் சுதந்தரம் பெற வேண்டும், அல்லது இறுதி வரையில் போரிட்டு வீரசுவர்க்கம் அடைய வேண்டும் என்று ஹிந்துக்கள் பரிசுத்தமான கங்கைத் தீர்த்தத்தையும் முஸ்லிம்கள் புனிதமான குரானையும் வைத்துக்கொண்டு சபதம் செய்தனர்.

எதிரிகளின் பீரங்கிகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் குதிரை வீரர்கள் முன்னே பாய்ந்து, கோட்டையின் சுவர்களுக்கு அருகில் சென்றார்கள். காலாட்படை வீரர்களோ பஞ்சு மூட்டைகளைத் தங்களுக்குப் பாதுகாப்பாக முன்னே வைத்துக்கொண்டு மற்றொரு புறத்திலிருந்து கோட்டையை நோக்கித் தோட்டாக்களைச் சரமாரியாகப் பொழிந்தன. விடுதலைப் போரில் கலந்து கொள்ள, சுற்றுவட்டக் கிராமங்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்து சேர்ந்தார்கள்.

கோட்டைக்குள் இருந்த வெள்ளையரின் துப்பாக்கிகளும் பீரங்கிகளும் இடைவிடாது நெருப்பைக் கக்கிக்கொண் டிருந்தன. ஆனாலும் தேச பக்தர்களின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போட முடியவில்லை. ஆயினும் அவர்கள் கோட்டையைத் தகர்த்துக்கொண்டு உள்ளே வர முடியாமல் ஆங்கிலேயர்கள் தடுத்துவிட்டார்கள். சில மணி நேரத்தில் யுத்தத்தின் உக்கிரம் தணிந்தது; பிளாஸியில் செய்யப்பட்ட பாதகங்களுக்காகப் பாதி வஞ்சம் தீர்த்தாகிவிட்டது. தேச பக்தர்களும் போர்க்களத்திலிருந்து திரும்பிச் சென்றார்கள்.

கான்பூரில் நடந்த தேசபக்தர்களின் இறுதியான அந்தத் தாக்குதல் வீணாகிவிடவில்லை. அன்றைய யுத்தத்துக்குப் பின், ஆங்கிலேயர்கள் அடியோடு நம்பிக்கை இழந்துவிட்டனர். அவர்களுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. அதற்கு மேல் நானா சாஹிபை எதிர்த்து நின்று கோட்டையைக் காப்பாற்ற முடியாது என்பது அவர்களுக்கு நிச்சயமாகத் தெரிந்துவிட்டது.

எனவே ஜூன் 25-ஆம் தேதி அவர்கள் கோட்டைச் சுவரில் சமாதானக் கொடியைப் பறக்க விட்டனர். அந்தக் கொடியைக் கண்டதும், யுத்தத்தை நிறுத்தும்படி நானா சாஹிப் தம் படைகளுக்குக் கட்டளையிட்டார். கைதியாகியிருந்த ஓர் ஆங்கிலப் பெண்ணின் மூலம் ஜெனரல் வீலருக்குக் கடிதமும் அனுப்பினார்.

நானா சாஹிபின் உத்தரவுக்கு இணங்க அஸிமுல்லா கான் எழுதிய அந்தக் கடிதத்தின் விவரம் இதுதான்: 'விக்டோரியா ராணியின் பிரஜைகளுக்கு: டல்ஹௌஸியின் அரசியல் கொள்கையில் சம்பந்தம் இராதவர்களும், ஆயுதங்களை யெல்லாம் கீழே வைத்துவிட்டுச் சரணடைவோரும் அலாகாபாத்துக்குப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்க்கப்படுவர்.'

கடிதம் கிடைத்ததும் வீலர், அதைப்பற்றி ஆலோசித்து முடிவு செய்ய, காப்டன் மூர், ஒயிடிங் என்ற இருவருக்கும் அதிகாரம் அளித்தான். அவ்விரு அதிகாரிகளும், நானு சாஹிபிடம் சரண் அடைவதே சிறந்தது என்ற முடிவுக்கு வந்தனர்.

26-ஆம் தேதியன்று, நானு சாஹிபின் சார்பில் ஜ்வாலாப் பிரசாதும் அஸிமுல்லா கானும், ஆங்கிலேயர்களின் சார்பில் மூர், ஒயிடிங், ரோச் என்ற மூவரும் கோட்டைச் சுவர் களுக்கு அருகில் சந்தித்தனர். முதலில் ஆங்கில மொழியிலேயே சம்பாஷணை ஆரம்பமாயிற்று, அம் மூவருக்கும் இந்திய தேசீய பாஷையான ஹிந்துஸ்தானி தெரியுமாதலால், அதில்தான் பேச வேண்டும் என்று ஜ்வாலாவும் அஸிமும் வற்புறுத்தினர். எனவே, மேற்கொண்டு அவர்களுக்குள் ஹிந்துஸ்தானியிலேயே சம்பாஷணை நடைபெற்றது.

பீரங்கிகள், துப்பாக்கிகள், வெடி மருந்துகள், கஜானு முத லியவற்றை யெல்லாம் ஆங்கிலேயர்கள் நானு சாஹிபிடம் ஒப்பிக்க வேண்டும். ஆங்கிலேயர்கள் எல்லோரும் அலாகாபாத் செல்லுவதற்கான வசதிகளைச் செய்து கொடுக்க நானு சாஹிப் ஏற்பாடு செய்ய வேண்டும் - சமாதான ஒப்பந்தத்தின் நிபந் தனைகள் இவைதாம்.

இவ்வாறு எழுதப்பட்ட ஒப்பந்தப் பத்திரத்தில் நானு சாஹிப் கையெழுத்திடுவதற்காக, அதை அஸிமுல்லாகானும் மற்றவர்களும் அவரது முகாமுக்குக் கொண்டுவந்தனர். ஆங்கி லேயர்கள் அன்று இரவே புறப்பட்டுவிட வேண்டுமா அல்லது மறுநாள் காலையில் புறப்படலாமா என்பதுபற்றி அன்று மாலை சிறிது அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. எனினும் அன்று இரவு அவர்கள் எல்லாரும் நானு சாஹிபின் பாதுகாப்பில் இருப்ப தென்றும், மறுநாள் விடியற்காலை புறப்பட்டுச் செல்லுவ தென்றும் இறுதியில் முடிவாயிற்று.

இரு கட்சியினராலும் அங்கீகரிக்கப்பட்ட உடன்படிக்கை யின் நகலுடன் டாட் (ஏற்கனவே நானுவின் அரண்மனையில் ஆங்கிலப் பத்திரிகைகள் வாசிப்பவராக இருந்தவர்) நானு சாஹிபிடம் வந்தார். நானு அவரை மிகுந்த அன்புடன் உப சரித்து, அவரது உடல்நிலை முதலிய சொந்த விஷயங்களைப் பற்றியும் விசாரித்தார்.

அன்று மாலை ஆங்கிலேயர்கள் ஆயுதங்களை யெல்லாம் கீழே வைத்தனர். துப்பாக்கிகளெல்லாம் நானு சாஹிபிடம் ஒப்பிக்கப்பட்டன. ஜ்வாலாப் பிரசாதும் மற்றும் இருவரும் கோட்டைக்குள் சென்று அங்கேயே தங்கள் விடுதிகளை ஏற் படுத்திக்கொண்டனர். கான்பூர் மாஜிஸ்திரேட்டான ஹாலாஸ்ய சிங்கும் தாதியா டோபேயும், அன்றிரவே நாற்பது படகு களைத் தயாராக வைத்திருக்கும்படி படகுக்காரர்களுக்கு உத் தரவிட்டனர். அவ்விருவரையும் பார்ப்பதற்காக யானைமீது வந்த ஆங்கில அதிகாரிகள் படகுகள் கரடு முரடாகவும்,

வசதிகள் அற்றும் இருக்கின்றன என்று புகார் கூறவே, அவற்றைச் சீர்ப்படுத்துவதற்காக உடனே நூறு தொழி லாளர்கள் நியமிக்கப்பட்டனர். வெயிலாலோ மழையினுலோ அசௌகரியம் ஏற்படாமல் இருப்பதற்காகப் படகுகளில் கொட்டகைகள் போடப்பட்டன; வசதியான ஆசனங்களும் அமைக்கப்பட்டன; உணவும் மற்றப் பொருள்களும் ஏராளமாக வைக்கப்பட்டன.

கான்பூரை விட்டுச் செல்ல ஆங்கிலேயர்கள் ஆயத்தமா யினர். அந்தச் சந்தர்ப்பத்தில் கான்பூருக்கு யார் யார் வந்து கொண்டிருந்தார்கள் என்பதையும் நாம் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம். அப்போது கான்பூருக்கு வந்துகொண் டிருந்தவர்களையும் அங்கிருந்து புறப்பட்டுக்கொண் டிருந் தவர்களையும் கவனித்து வந்தால்தான், பின்னல் நிகழ்ந்த சம்பவங்களின் காரணத்தை நாம் அறிந்துகொள்ள முடியும். கான்பூரில் நானு சுதந்தரக் கொடியை ஏற்றியிருக்கிருர் என்ற செய்தி எங்கும் பரவியது. மகிழ்ச்சியூட்டும் அந்தச் செய்தி யைக் கேட்டதும், வெளியிடங்களிலிருந்து கான்பூருக்குத் தேசீய வீரர்கள் கூட்டங் கூட்டமாக வரலாயினர். இளைஞர் களான தேசீயத் தொண்டர்களும் கான்பூரை நோக்கி வந்த வண்ணமாக இருந்தார்கள். வீரர்களை அனுப்ப முடியாத நகரங்கள் ஏராளமான தொகைகளை அனுப்பி வந்தன. ஆனுல் துரதிருஷ்ட வசமாக, மேலே குறிப்பிடப்பட்டவர்கள் மாத்திரம் கான்பூருக்கு வந்து குவியவில்லை; தங்களுடைய புரட்சி முயற்சியில் தோல்வி அடைந்தவர்களும், அடிமை வாழ்வைச் சகிக்க முடியாதவர்களும், நிராதரவானவர்களுமான மக்களும் இரவும் பகலும் கூட்டங் கூட்டமாக வந்துகொண் டிருந் தனர்.

தங்களுடைய மனைவிமாரையும், குழந்தைகளையும், தோழர் களையும், உற்ருர் உறவினரையும் ஆங்கிலேயர்கள் ராக்ஷசத் தனமாகப் படுகொலை செய்துவிட்டார்கள் என்ற பயங்கரச் செய்தியுடன், அதற்கு முந்திய வாரந்தான் அலாகாபாத்திலிருந் தும் காசியிலிருந்தும் ஆயிரக் கணக்கான சிப்பாய்கள் வந் தனர். '8', '9' போன்ற எண்களின் வடிவத்தில் தங்களுடைய தந்தையர் மரக் கிளைகளில் தூக்கிலிடப்பட்டனர் என்ற செய்தியுடன் நூற்றுக்கணக்கான இளம் இந்தியப் புதல்வர்கள் வந்தனர். நீலனுல் எரிக்கப்பட்டுத் தங்களுடைய மனைவி களையும், தொட்டில் குழந்தைகளையும் இழந்த துரதிருஷ்ட சாலிகளும் அங்கு வந்து சேர்ந்தார்கள். தங்களுடைய அரு மைப் புதல்விகளின் அழகிய தலைமுடிக்கும், உடைகளுக்கும் தீ வைத்ததுடன் அந்தக் கோலத்தைக் கண்டு ஆங்கிலச் சிப்பாய்கள் கைகொட்டி ஆரவாரம் செய்த அட்டூழியங்களை நேரில் கண்டு நரக வேதனைக்கு உள்ளான தந்தைமாரும் கான்பூருக்கே வந்து கூடினர். கிராமங்களில் நீலன் நடத்திய தகனப்படலத்தில் தங்கள் சொத்துக்களை இழந்தவர்கள், ஆங்கிலேயர்களால் மிதியுண்ட மதங்களை உடையவர்கள் முதலிய பலரும் விடுதலை பெற்ற கான்பூருக்கு வந்து, 'வெள்ளை

யர்கள் மீது வஞ்சம் தீருங்கள்', 'வெள்ளையர்கள் மீது வஞ்சம் தீருங்கள்!' என்று கதறித் துடித்தனர்.

அந்த நிலையில், வெற்றி கிடைத்த பின்னரும், ஆங்கிலேயர்களை எல்லாம் அலாகாபாத்துக்குப் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்ப்பதாக நானா சாஹிப் உறுதி கூறியது, சிப்பாய்களுக்கும் மக்களுக்கும் மிகுந்த ஏமாற்றத்தை உண்டு பண்ணியது. அவர்கள் உரத்த குரலில் முணுமுணுக்க ஆரம்பித்தனர். படகுகளெல்லாம் தயாராக இருக்கின்றனவா என்பதைப் பார்த்துவிட்டுச் செல்லுவதற்காக வந்த ஆங்கில அதிகாரிகளின் செவிகளில், கங்கைக் கரையில் அங்குமிங்கும் நடமாடிக்கொண்டிருந்த சிப்பாய்கள் 'கத்தல், கத்தல்' (படுகொலை) என்று முணுமுணுத்தது தெளிவாக விழுந்தது. ஒரு தேசத்தைத் துரோகம் செய்து அதை அடிமைப்படுத்தியவர்களைச் சிரச்சேதம் செய்வது, மத விதிகளின்படி பாவம் இல்லையென்று அரண்மனைப் பண்டிதர் ஒருவர் சிப்பாய்களுக்கு உபதேசம் செய்திருந்தார்!

குழம்பிக் கிடந்த அந்நிலையில் 27-ஆம் தேதி சூரியன் உதயமானான். ஸதிசௌரா கட்டத்தில்தான் ஆங்கிலேயர்களைப் படகுகளில் அனுப்ப ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தக் கட்டத்தைச் சுற்றிக் குதிரைப் படையும் காலாட்படையும் நின்றுகொண்டிருந்தன. பீரங்கிகளும் தயாராக வைக்கப்பட்டிருந்தன.

அந்தக் கட்டத்துக்கு அருகில் இருந்த ஒரு கோயிலின் உப்பரிகையில் அஸிமுல்லாகான், பாலா சாஹிப், தாதியா டோபே இம் மூவரும் நின்றுகொண்டிருந்தனர். அந்தக் கோயிலின் பெயரும் அந்தச் சந்தர்ப்பத்துக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. ஆலயத்துக்குள் ஹரதேவரின் விக்கிரகம் இருந்தது. அப்போது அந்தப் பிரதேசம் முழுவதும் சம்ஹார மூர்த்தியான சிவபெருமானின் கையில் இருப்பதுபோல் தோன்றியது!

ஆங்கிலேயர்களைக் கோட்டையிலிருந்து கங்கைக் கரைக்கு அழைத்துச் செல்வதற்காக, நானா சாஹிப் சிறந்த வாகனங்களை அனுப்பியிருந்தார். வீலரை அழைத்துச் செல்லுவதற்காக, மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்ட நானா சாஹிபின் சொந்த யானையே மாவுத்தனுடன் கோட்டை வாசலில் வந்து நின்றது. எனினும் அத்தகைய துக்ககரமான ஓர் ஊர்வலத்தில் யானையின் மீது செல்ல வீலர் விரும்பவில்லை. அவன் தன் குடும்பத்தினரை அதன்மீது ஏறிக்கொள்ளும்படி கூறிவிட்டு, தான் ஒரு பல்லக்கில் உட்கார்ந்துகொண்டான். ஆங்கிலப் பெண்களும் பல்லக்குகளில் ஏறிக்கொண்டனர். ஊர்வலமும் செல்லத் தொடங்கியது.

தேச பக்தர்கள் கோட்டையில் இருந்த ஆங்கிலக் கொடியை இழுத்து அப்பால் எறிந்துவிட்டு அந்த இடத்தில் சுதந்தரக் கொடியை ஏற்றினர். தங்களுடைய கௌரவத்துக்கு நேர்ந்த இந்த அவமதிப்புக்காக மனம் கொதிக்க வேண்டிய ஆங்கிலேயர்

கள், எப்படியாவது தாங்கள் உயிர் தப்பியதைக் குறித்து மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். ஒவ்வொருவரும் தாங்கள் புனர்ஜன்மம் பெற்றதாக எண்ணினர்.

கோட்டையிலிருந்து கங்கையின் கட்டத்துக்கு ஒன்றரை மைல் தூரம் உண்டு. ஊர்வலம் கங்கைக் கரை போய்ச் சேர்ந்ததும், எல்லோரும் தங்கள் வாகனங்களிலிருந்து கீழே இறங்கினர். அணிவகுத்து நின்ற இந்தியச் சிப்பாய்கள் நெருங்கி அவர்கள் செல்லும் வழியைப் பாதுகாத்துக்கொண் டிருந்தார் கள். யானைகளிலிருந்தும் பல்லக்குகளிலிருந்தும் ஆங்கிலேயர்கள் கீழே இறங்கியபோது அவர்களுக்கு உதவி புரிந்த சிப்பாய்கள், அவர்கள் பிடித்துக்கொண்டு இறங்குவதற்காகத் தங்களுடைய பட்டாக் கத்திகளை நீட்டினார்களேயன்றிக் கைகளைக் கொடுக்க வில்லை!

காயமடைந்த கர்னல் எவார்ட்டை ஒரு 'டோலி'யில் தூக்கிக்கொண்டு வந்தார்கள். வழியில் ஒரு சிப்பாய் அந்த 'டோலி'யை நிறுத்தி, 'நல்லது, கர்னல் சாஹிப், இந்த ஊர் வலம் எப்படி இருக்கிறது? உங்கள் ராணுவ உடைகளின் கதி என்ன ஆயிற்று?' என்று ஆத்திரத்துடன் கூறி அவனைக் கீழே இழுத்து வெட்டி வீழ்த்தினார். அருகில் இருந்த அவன் மனைவி யைப் பார்த்துச் சிலர், 'நீ பெண்ணானதால் உனக்கு நாங்கள் உயிர்ப்பிச்சை கொடுக்கிறோம்' என்றனர். எனினும் அப்பால் இருந்த ஓர் இளைஞன் ஆத்திரத்துடன், 'ஆங்கில அரக்கர்களில் ஆண் என்றும் பெண் என்றும் வித்தியாசம் ஏது? அவளைக் கண்ட துண்டமாக வெட்டுங்கள்' என்றான். அதே விநாடியில் அந்த இளைஞன் கூறியபடி காரியம் நடந்துவிட்டது!

கங்கைக் கரையில் காத்துக்கொண் டிருந்த படகுகளிலெல் லாம் ஏராளமான உணவுப் பொருள்கள் வைக்கப்பட்டிருந் தன என்பதை, ஆங்கிலேயர்கள் அடங்கிய விசாரணைக் கமிட் டியே பின்னர் ஒப்புக்கொண்டுள்ளது. வெள்ளையர்கள் யாவரும் படகுகளில் உட்கார்ந்தனர். சண்டமாருதத்துக்கு முன் நிலவும் அமைதிபோல் எங்கும் நிச்சப்தமாக இருந்தது. படகுகளி லெல்லாம் வெள்ளையர்கள் நிறைந்திருந்தனர்; படகுக்காரர் களும் துடுப்புகளுடன் தயாராக இருந்தார்கள். இறுதியாக, படகுகள் புறப்படலாம் என்பதற்கு அடையாளமாக, தாதியா டோபே கையை முன்னும் பின்னும் வீசினார்.

அவ்வமயம் திடீரென்று ஒரு மூலையிலிருந்து யாரோ குழ லூதும் சப்தம் கேட்டது. ஊதுகுழலின் கீச்சுக் குரலைக் கேட்ட தும் அங்கே கூடியிருந்தவர்களிடையே பெரும் சந்தடி ஏற் பட்டது. எல்லோரும் துப்பாக்கிகளையும் பட்டாக் கத்திகளை யும் ஈட்டித் துப்பாக்கிகளையும் எடுத்தனர். படகுக்காரர்களோ தண்ணீரில் குதித்துக் கரை வந்து சேர்ந்தனர். சிப்பாய்களோ தண்ணீரில் குதித்தார்கள்.

'பறங்கியர்களைக் கொல்லுங்கள்!' என்ற கூக்குரலைத் தவிர வேறு எவ்விதச் சந்தடியும் அப்போது கேட்கவில்லை. சில

நிமிஷ நேரத்தில் படகுகள் யாவும் பற்றி எரிந்தன. ஆங்கில ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோரும் தண்ணீரில் குதித்தனர். சிலர் நீந்திச் சென்றனர்; மற்றும் சிலர் மூழ்கி மாண்டனர்; சிலர் எரிந்து இறந்தனர்; பெரும்பாலோரும் உடனேயோ அல்லது சிறிது நேரத்திலோ சிப்பாய்களின் தோட்டாக்களுக்கு இரையாயினர். அவ்விடத்தில் கங்கைத் தண்ணீர் சிவப்பு நிறமாக மாறியது! மாமிச பிண்டங்களும், உடைந்த மண்டைகளும், வெட்டுண்ட கைகளும் கால்களும், ரத்த வெள்ளமும் காட்சியளித்தன. தண்ணீரில் மூழ்கிய ஆங்கிலேயர் தலையைத் தூக்கினால், உடனே ஒரு தோட்டா அவரை மறு உலகிற்கு அனுப்பிவிடும். தண்ணீருக்குள்ளேயே அவர் இருந்தால் மூழ்கி இறப்பார். பிளாஸி யுத்தத்தின் நூறாவது வருஷ தினம் இவ்விதம் கொண்டாடப்பட்டது!

அப்போது காலை பத்து மணி இருக்கும். நானா சாஹிப் தமது மாளிகையில் உள்ள மண்டபத்தில் சாந்தமாக அங்கும் இங்கும் உலாவிக்கொண்டிருந்தார். எனினும் அவருடைய மனம் நிம்மதியாக இல்லை. நூறு ஆண்டுகளாக ஆங்கிலேயர்கள் இழைத்த அட்டூழியங்களை ஒட்டி, கங்கையில் கணக்குத் தீர்க்கப்பட்டு வரும்போது, அவருடைய மனம் எவ்விதம் நிம்மதியாக இருக்க முடியும்?

சரித்திரத்திலேயே அந்த நிமிஷங்கள்தாம் மிகவும் முக்கியமானவை. பழையன கழிந்து புதியன புகும் சந்தர்ப்பங்கள் அவையே. ஒரு சகாப்தத்தின் இறுதிப் படலத்தையே அவை குறிக்கின்றன.

நானா இவ்விதம் அங்கும் இங்கும் உலாவிக்கொண்டிருந்தபோது, அவருடைய மனத்தில் எழுந்த எண்ணங்களை ஈசனே அறிவார்! எனினும் அதிக நேரம் யோசனையில் ஆழ்ந்திருக்க நேரம் இல்லை. ஏனெனில் அவ்வமயம் ஒரு குதிரை வீரர் வெகு வேகமாக வந்து, ஸதிசௌரா கட்டத்தில் சிப்பாய்கள் ஆங்கிலேயர்களைக் கொன்று வருகிறார்கள் என்று பரபரப்புடன் தெரிவித்தார். அதைக் கேட்டதும் நானா சாஹிப், பெண்களையும் குழந்தைகளையும் கொல்ல வேண்டிய அவசியமில்லை என்று கூறி, 'ஆங்கில ஆடவர்களைக் கொல்லுங்கள்; ஆனால் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் எவ்விதத் தீங்கும் செய்யாதீர்கள்' என்ற கண்டிப்பான உத்தரவுடன், சிறிதும் தாமதமின்றி அதிவேகமாகத் திரும்பிச் செல்லும்படி அந்த வீரருக்குக் கட்டளையிட்டார்.

நீலன் விடுத்த உத்தரவுக்கும் நானா இட்ட கட்டளைக்கும் உள்ள வேற்றுமையை நாம் இந்தச் சந்தர்ப்பத்தில் கவனிக்க வேண்டியது அவசியமாகும். பெண்கள், குழந்தைகள், கிழவர்கள் உட்பட எல்லோரையும் சேர்த்துக் கிராமம் கிராமமாகத் தகனம் செய்த நீலனுக்கும், கொடிய வஞ்சம் தீர்க்கப்பட வேண்டிய ஆங்கிலேயர்களிடத்திலும் இரக்கம் காட்டிய நானாவுக்கும் எவ்வளவோ வேற்றுமை உண்டு.

நாஞ சாஹிபின் உத்தரவுடன் சென்ற குதிரைவீரர் கங்கைக் கரையை அடைந்தபோது, சிப்பாய்கள் தங்களுடைய பயங்கரமான கடமையைச் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது சில வெள்ளையர்கள் படகுகளுடன் எரிந்துகொண்டிருந்தனர்! சிலர் தண்ணீரில் நீந்தி அக்கரைக்குச் செல்ல முயன்றுகொண்டிருந்தனர். ஆவேசம் கொண்ட சிப்பாய்கள் தண்ணீரில் குதித்து அவர்களைத் துரத்திக்கொண்டு சென்றார்கள். சிப்பாய்கள், தங்களுடைய பட்டாக்கத்திகளைப் பற்களில் இடுக்கிக்கொண்டும், சுழல் துப்பாக்கிகளைக் கையில் வைத்துக்கொண்டும் தண்ணீரில் பயங்கர வேட்டையை நடத்தினார்கள்.

முதலிலேயே வீலர் பலியாகிவிட்டான்; பின்னர் ஹெண்டர்ஸனும் மாய்ந்தான். மாண்டவர்களின் தொகை மிகவும் அதிகமாதலால், அவர்களுடைய ஜாபிதாவைக் காட்டிலும் உயிர் தப்பியவர்களின் ஜாபிதாவைக் கொடுப்பதுதான் எளிதாகும். நாஞ சாஹிபின் உத்தரவு கிடைத்ததும், சிப்பாய்களின் வேட்டை நின்றது. பெண்களும் குழந்தைகளுமாக நூற்றிருபத்தைந்து பேர்கள் தண்ணீரிலிருந்து கரை சேர்க்கப்பட்டார்கள். பின்னர் அவர்களெல்லோரும் கைதியானார்கள். பாக்கியிருந்த ஆங்கில ஆடவர்கள் எல்லோரையும் வரிசையாக நிறுத்தி, சிரச்சேத உத்தரவை அவர்களுக்குப் படித்துக் காட்டினர். அவர்களில் ஒருவர் தம் தோழர்களுக்குப் பைபிளிலிருந்து சில வாக்கியங்களைப் படித்துக் காட்ட அநுமதிக்க வேண்டுமென்று கேட்கவே, அவ்வேண்டுகோளுக்கு அதிகாரிகள் இசைந்தனர். அவர்களின் பிரார்த்தனை முடிந்ததும், சிப்பாய்கள் தங்களுடைய வாட்களால் அவர்களைச் சிரச்சேதம் செய்தனர்.

ஆங்கிலேயர்கள் நிறைந்திருந்த நாற்பது படகுகளில் ஒன்றுதான் தப்பியது. அதில் இருந்தவர்களிலும் கிராமவாசிகளின் தாக்குதலிலிருந்து மூன்று அல்லது நாலு பேர்களே உயிர் தப்ப முடிந்தது. துர்விஜய சிங் என்ற ஒரு ஜமீன்தார் அவர்கள்மீது இரக்கங்கொண்டு கிராமவாசிகளிடமிருந்து அவர்களைக் காப்பாற்றினார். இறக்கும் தறுவாயில் இருந்த அவர்களை அந்த ஜமீன்தார் ஒரு மாதம் வரையில் தம்மிடமே வைத்துப் போஷித்துப் பின்னர் அலாகாபாத்துக்கு அனுப்பினார்.

ஜூன் மாதம் 7-ஆம் தேதி கான்பூரில் ஆயிரம் ஆங்கிலேயர்கள் இருந்தனர். 30-ஆம் தேதி உயிரோடு இருந்தவர்கள் நான்கு ஆடவர்களும், நூற்றிருபத்தைந்து பெண்களும் குழந்தைகளுந்தாம்! பெண்களும் குழந்தைகளும் சிறையில் இருந்தார்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஆங்கில சரித்திராசிரியர்களின் பொய்க் கூற்றுகளைப் பற்றிக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். அப்போது சிறையில் இருந்த ஆங்கிலப் பெண்கள் கற்பழிக்கப் பட்டார்களாம். அவர்களுக்கு மானபங்கம் ஏற்பட்டதாம். நாஞ சாஹிபே அவர்களைக் கற்பழிக்க முயன்றாராம்! இவைபோன்ற இன்னும் பல ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளை ஆங்கில சரித்திராசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இந்த

அயோக்கியத்தனமான, அக்கிரமமான பொய்க் கூற்றுகளை இங்கிலாந்து கண்மூடித்தனமாக நம்பியதுதான் இன்னும் படுமோசமாகும்.

இந்த விபரீதத்திலும் ஒரு வேடிக்கை என்னவெனில், அந்தச் சம்பவங்களையெல்லாம் விசாரிப்பதற்காக வெள்ளையர்களால் நியமிக்கப்பட்ட விசேஷக் கமிஷன் அந்தக் குற்றச்சாட்டுகளெல்லாம் பொய்க் கூற்றுகளென்று தெளிவாகவும் பட்டவர்த்தனமாகவும் கூறியிருப்பதை ஆங்கில சரித்திராசிரியர்களும், அரசாங்க அறிக்கைகளும் குறிப்பிட்டிருப்பதுதான். நானா சாஹிப் படுகொலையினின்றும் ஆங்கிலப் பெண்களைக் காப்பாற்றியதன் மூலம், நீலன், ரெய்னால்ட், ஹாவ்லாக் முதலிய கொடியர்கள் வெட்கித் தலைகுனியும்படி செய்தார். இதுபோன்ற நிலைமையிலும் ஆத்திரமூட்டப்பட்ட சந்தர்ப்பங்களிலும், இங்கிலாந்து இந்தியாவுக்கும், ஆஸ்திரியா இத்தாலிக்கும், ஸ்பெயின் மூர் ஜாதியினருக்கும், கிரீஸ் துருக்கியருக்கும் இழைத்த சகிக்க முடியாத கொடுமைகளில் நூற்றில் ஒரு பங்குகூடத் தங்களையும் தங்கள் நாட்டையும் தங்கள் மதத்தையும் அழித்த துரோகிகளான பகைவர்களுக்கு நானா இழைக்கவில்லை! இதை ஆங்கில சரித்திரங்களே நிரூபிக்கின்றன.

கான்பூரில் ஆங்கிலேயர்கள் பலியிடப்பட்டு, குழப்பம் மிகவும் அதிகமாக இருந்தபோது, சில குதிரை வீரர்கள் நான்கு ஆங்கிலப் பெண்களையும் சில ஆங்கிலோ - இந்தியப் பெண்களையும் தூக்கிக்கொண்டு சென்றனர்; ஆனால் அந்தச் செய்தி நானாவுக்குக் கிடைத்ததும் அவர் சிப்பாய்களை விட்டு அவர்களையெல்லாம் கைது செய்து வரும்படி உத்தரவிட்டார். அவர்கள் வந்ததும் அவர்களை அவமானப்படுத்தியதுடன் அவர்களுக்குத் தண்டனையும் விதித்தார். சிறையில் பெண்களுக்கு இறைச்சி முதலிய ஆகாரம் கொடுக்கப்பட்டது. சிறையில் அவர்கள் கடுமையான வேலை எதுவும் செய்யும்படி நிர்ப்பந்திக்கப்படவில்லை. சிறைப்பட்டிருந்த குழந்தைகளுக்குப் பால் கொடுக்கப்பட்டது. அவர்களுக்கெல்லாம் தலைமைக் காவலாளியாக கௌரவம் பொருந்திய ஒரு பேகம் நியமிக்கப்பட்டாள். அங்கே வாந்திபேதியும் வயிற்றுக் கடுப்பும் கடுமையாக இருந்தபோது, நல்ல காற்றுக்காக எல்லோரும் தினசரி மூன்று தடவை வெளியே அழைத்துச் செல்லப்பட்டார்கள். இவ்விவரங்கள் எல்லாம் ஆங்கிலேயர் எழுதியுள்ள சரித்திரங்களிலும், நீலன் அனுப்பிய அறிக்கையிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

சிறையில் இருந்த ஆங்கிலப் பெண்களில் சிலர் தினசரி சோளம் அரைத்ததற்காக, ரொட்டி செய்வதற்கு அவர்கள் ஒவ்வொருவருக்கும் கொஞ்சம் மாவு கூலியாகக் கொடுக்கப்பட்டது. தம் கையால் உழைத்து ஜீவனம் செய்வது எப்படி என்பதை அவர்கள் தெரிந்துகொண்டனர்! அவர்களுடைய சிறை வாழ்க்கை எவ்வாறு முடிவுற்றது? அவ்வாறு முடிவதற்குக் காரணம் என்ன? இவையெல்லாம் உற்ற சமயத்தில் விவரிக்கப்படும்.

கான்பூரிலிருந்து ஆங்கில ஆட்சியின் அடையாளங்களெல்லாம் அடியோடு துடைத்து ஒழிக்கப்பட்டபின் நானா சாஹிப், 28-ஆம் தேதி மாலை ஐந்து மணிக்கு ஒரு பெரிய தர்பார் நடத்தினார். அப்போது ராணுவம் முழுவதும் அணிவகுத்து நின்று மரியாதை செய்தது. காலாட் படைகளும் பீரங்கிப் படைகளும் போரில் பங்கெடுத்துக்கொள்வதற்காகத் தேசீயக் கொடிகளுடன் பல இடங்களிலிருந்தும் வந்திருந்த ஏராளமான புரட்சிக்காரர்கள் முதலியோர் பிரசன்னமாகி யிருந்தார்கள். கான்பூரைக் கைப்பற்றுவதில் பீரங்கிப் படைவீரர்களே முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டதால், அவர்களுக்குக் கௌரவமான இடம் அளிக்கப்பட்டிருந்தது.

பாலா சாஹிப் ராணுவத்தில் செல்வாக்குடையவராதலின், அவர் சபைக்கு வந்தபோது எல்லோரும் பலத்த கரகோஷம் செய்தனர். முதலில் டில்லி சக்கரவர்த்திக்கு மரியாதையாக 101 குண்டுகள் போடப்பட்டன. இதிலிருந்து அப்போது நிலவிய ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையைத் தெரிந்துகொள்ளலாம். அடுத்தபடியாக, நானா சாஹிப் தர்பாருக்கு வந்தபோது, பலத்த கரகோஷத்துடனும் சந்தோஷ ஆரவாரத்துடனும் அவரை வரவேற்றார்கள். அவருக்கு மரியாதையாக 21 குண்டுகள் போடப்பட்டன. கான்பூரில் 21 நாட்கள் வரை முற்றுகை நடந்ததாலேயே 21 குண்டுகள் போடப்பட்டன என்று சிலர் கூறினர்!

தமக்கு மகத்தான கௌரவம் அளித்ததற்காக நானா சாஹிப் படைகளுக்கு வந்தனம்செலுத்தினார். 'இந்த வெற்றி நம் எல்லோரையும் சேர்ந்தது. நம்மில் ஒவ்வொருவருக்கும் இதில் சமமான பங்கும் பெருமையும் உண்டு' என்று குறிப்பிட்டார்.

பிறகு, வெற்றி பெற்ற படைகளுக்கு வெகுமதியாக ஒரு லக்ஷம் ரூபாய் கொடுக்கும்படி நானா சாஹிப் விடுத்த உத்தரவு அறிவிக்கப்பட்டது. ராணுவத்தின் அணிவகுப்பைப் பார்வையிட அவர் வந்தபோது, அவருக்கு மரியாதையாக மீண்டும் 21 குண்டுகள் போடப்பட்டன. ராவ் சாஹிப், பாபா சாஹிப், பாலா சாஹிப் இவர்கள் ஒவ்வொருவருக்கும் மரியாதையாக 17 குண்டுகளும், ராணுவத் தலைவரான ஜ்வாலாப் பிரசாத், தளபதி தாதியா டோபே இவர்கள் ஒவ்வொருவருக்கும் 11 குண்டுகளும் போடப்பட்டன. இவ்வாறாக, பீரங்கி முழக்கமாகிற சுதந்தர கீதத்தைக் கேட்டுக்கொண்டே கதிரவன் மறைந்தான். படைகளும் முகாமுக்குத் திரும்பிச் சென்றன.

பிறகு நானா சாஹிப், தமது சகோதரரான பாலா சாஹிபுடன் பிரம்மாவர்த்தத்திலுள்ள பிரசித்திபெற்ற அரண்மனைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

ஜூலை மாதம் 1-ஆம் தேதியன்று முடிசூட்டு விழா நிர்ணயமாகியிருந்தது. அன்று அரண்மனை மிகச் சிறப்புடனும் பிரகாசத்துடனும் விளங்கியது. பிரசித்தி பெற்ற பேஷ்வாக்களின் பழைய சிம்மாசனத்தைப் பிரமாதமான சந்தோஷ ஆரவாரத்துடன் கொலு மண்டபத்துக்குக் கொண்டு வந்தார்கள். நெற்றி

யில் ராஜதிலகத்துடன் விளங்கிய நாஞ சாஹிப், பீரங்கிகள் முழங்க, ஆயிரக்கணக்கான மக்களின் கரகோஷம் வானளாவ, சிம்மாசனம் ஏறிஞர்.

சுதந்தரம் வாய்ந்ததும், தமது சொந்த முயற்சியால் அடையப்பட்டதும், ஜனங்களின் ஆதரவையும் மதத்தின் ஆசியையும் பெற்றதுமான சிம்மாசனத்தின்மீது அவர் ஏறிய அந்தச் சுபதினத்திலே கான்பூரிலிருந்து அவருக்கு நூற்றுக்கணக்கான பரிசுகள் வந்தன. அன்று முதல் ராம ராஜ்யம் ஏற்பட்டு விட்டதென்று ஜனங்கள் ஆனந்தம் அடைந்தார்கள். நீண்ட காலத்துக்குப்பின் அன்றுதான் சுதர்மம், சுயராஜ்யம் இவற்றின் மணம் எங்கும் வீசி, எல்லோருக்கும் இன்பம் அளித்தது. ராய்கடிலிருந்து வெள்ளையர்களால் தூக்கி எறியப்பட்ட மகாராஷ்டிரர்களின் சிம்மாசனம், ஆங்கிலேயர்களின் ரத்த வெள்ளத்திலிருந்து மீண்டும் பிரம்மாவர்த்தத்தில் வெளிக் கிளம்பியது! பிரம்மாவர்த்த அரண்மனையில் உள்ள ஓர் அறையில் இரண்டு வருஷங்களுக்கு முன் விதைக்கப்பட்ட புரட்சி விதை பிரம்மாண்டமான மரமாக வளர்ந்து சுயராஜ்யமென்னும் பயனைக்கொடுக்க ஆரம்பித்தது!

# 19

## ஜான்ஸி யுத்தம்

வெள்ளையர்களால் கொள்ளையிடப்பட்ட கிரீடத்தை மீண்டும் கைப்பற்ற நாஞ சாஹிப் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகையில், பிரம்மாவர்த்தத்தில் குதிரை ஏற்றத்திலும் யானை ஏற்றத்திலும் குழந்தைப்பருவத்தில் அவருக்குப் போட்டியாக இருந்து வந்த ராணி லக்ஷ்மி பாய் தூங்கிக்கொண் டிருக்கவில்லை. கான்பூரில் நாஞ சாஹிப், பேஷ்வா என்று பிரகடனம் செய்யப் பட்டதும், தாமும் ஜான்ஸி ராணி என்று பிரகடனம் செய்யும் வரையில் வாளா இருப்பதில்லை என்று உறுதி கொண்டார். தம் சகோதரர் கான்பூரில் சுதந்தரப் போரை ஆரம்பித்தது போலவே, தாமும் ஜான்ஸியில் சுதந்தரப் போரை ஆரம்பிக்கத் திடசங்கல்பமும் கொண்டார். கான்பூரைச் சுதந்தரப் போராகிற சண்டமாருதம் சூழ்ந்துகொண்ட அதே நாளில் ஜான்ஸி ராணியும் திடீரென்று போரை ஆரம்பித்துவிட்டார்.

ஜூன் மாதம் 4-ஆம் தேதி ஜான்ஸியும் கொதித்தெழுந்தது. அங்கே புரட்சி ஏற்படுமுன், ஜான்ஸியில் இருந்த ஆங்கிலக் கமிஷனருக்குச் சில கடிதங்கள் வந்தன. ஜான்ஸி ராணியிடம் லக்ஷ்மண ராவ் என்பவர் உத்தியோகம் பார்த்து வருவதாகவும், அவர் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகப் புரட்சியை உருவாக்கி

வருவதாகவும், புரட்சிக்குப் பூர்வாங்கமாக ராணுவத்திலுள்ள எல்லா ஆங்கில அதிகாரிகளும் செல்லத் தீர்மானித்திருக்கிறார்கள் என்றும் அந்தக் கடிதங்களில் கண்டிருந்தது. தங்களுடைய பாதுகாப்புக்காக எத்தகைய முன்னேற்பாடுகளைக் கைக்கொள்ளுவதென்று ஆங்கிலேயர்கள் ஆலோசித்து வருகையில், தேச பக்தர்கள் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டார்கள். உடனே வெள்ளையர்கள் தங்கள் பாதுகாப்புக்காக நகரக் கோட்டைக்குச் சென்றார்கள். ஆனால் தேசபக்தர்கள் அதையும் தாக்கித் தங்கள் வசப்படுத்திக்கொண்டு விட்டனர்.

ரிஸால்தார் காலா கான், தாசில்தார் முகமது ஹுசேன் முதலிய வீரர்களின் தலைமையில் சிப்பாய்கள் ஜான்ஸிக் கோட்டையைத் தாக்கித் தங்கள் வசப்படுத்திக்கொண்டு அங்கே சுதந்தரக் கொடியையும் ஏற்றுவித்தனர். ஆங்கிலேயர்களோ வெள்ளைக் கொடியைக் காட்டிச் சமாதானம் கோரினர். அவர்கள் எல்லோரும் யாதொரு நிபந்தனையும் இன்றி ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுச் சரணடைந்தால், அவர்களுக்கு உயிர்ப் பிச்சை அளிப்பதாக ஜான்ஸியிலுள்ள பிரமுகரான ஹக்கீம் ஸலாய் முகமது உறுதி கூறினர்.

ஆங்கிலேயர்களும் அவ்விதமே செய்து கோட்டைக்கு வெளியே வருகையில், 'பறங்கியர்களைக் கொல்லுங்கள்' என்று சிப்பாய்கள் கோஷம் செய்தார்கள். 8-ஆம் தேதி நகர் நெடுக ஓர் ஊர்வலம் சென்றது. யுத்தக் கைதிகளான ஆங்கிலேயர்களையே ஊர்வலமாகக் கொண்டு சென்றனர். ஒரு வாரத்துக்கு முன் ஜான்ஸியில் சர்வாதிகாரம் செலுத்தி வந்த அதே ஆங்கிலேயர்கள் அன்று கைதிகளாகத் தெருக்களின் வழியே தலை குனிந்து சென்றார்கள்.

அவர்கள் ஜோகன்பாக்கிற்கு அருகில் வந்துகொண் டிருக்கையில், 'ரிஸால்தார் சாஹிப், மேற்கொண்டு என்ன உத்தரவோ?' என்று, சிப்பாய்கள் தங்கள் தலைவரை வணக்கத்துடன் கேட்டார்கள். ராணியைச் சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தி, அவருடைய நாட்டையும் ஆக்கிரமித்துக்கொண்டு துரோகம் செய்த அந்நியர்களை உயிருடன் விடக் கூடாதென்று அவர் கூறவே, ஜான்ஸியில் இருந்த சுமார் நூறு பேருக்கு மேற்பட்ட ஆங்கிலேயர்கள் சிரச்சேதம் அடைந்தனர். ஜான்ஸி ராணியின் சுவீகார உரிமையை அங்கீகரிக்க மறுத்த பாவி டல்ஹௌஸியின் கொள்கை இவ்வாறாக அவர்களுடைய தலைகளுக்கு உலை வைத்தது.

ஆனால் ஜான்ஸியில் ஆங்கிலேயர்கள் பலியுண்டது ராணி லக்ஷ்மி பாய்க்குத் தெரியாது. ஆத்திரம் அடைந்த ராணுவ அதிகாரிகள் அவ்வாறு செய்துவிட்டார்கள். இது சரித்திர பூர்வமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. சுவீகார புத்திரரான தாமோதர ராவின் மேற்பார்வையாளர் என்ற முறையில் ஜான்ஸி ராஜ்யம் மீண்டும் ராணி லக்ஷ்மி பாய்க்கே சொந்தமாகியது. 'இந்தப் பூமி இறைவனுக்குச் சொந்தம்; இந்த நாடு சக்கரவர்த்

திக்குச் சொந்தம்; இந்த ராஜ்யம் ராணி லக்ஷ்மி பாயின் அதிகாரத்துக்கு உட்பட்டது' என்று தேசீய வீரர்கள் பிரகடனம் செய்தார்கள்.

# 20

## ராவண ராஜ்ய முடிவு

டல்ஹௌஸி, அயோத்தியை ஆக்கிரமித்துக் கொண்டதிலிருந்து அந்த மாகாண ஜனங்கள் நாளுக்கு நாள் அதிக வறுமையிலும் துன்பத்திலும் ஆழ்ந்து வந்தார்கள். அயோத்தி, சுதந்தரத்தை இழந்த பின், கௌரவப் பதவிகள், அதிகாரம், நவாப் ராஜ்யத்தின் செல்வம் முதலியன யாவும் ஆங்கிலேயர்களுக்கே கொடுக்கப்பட்டன. இந்தியர்கள் எல்லாவற்றையும் இழந்தனர். நவாபின் ராணுவமும் கலைக்கப்பட்டது. அவரைச் சேர்ந்த பிரபுக்கள் வறுமையால் வாடினர். அவர்களின் மந்திரிகளும் மற்ற உயர்தர அதிகாரிகளும் தினசரி ஜீவனத்துக்காக நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைக்க நேர்ந்தது.

தங்களுடைய தேசத்தைச் சீர்குலைத்து அடிமைத்தனத்தில் ஆழ்த்தி, தங்களையும் அத்தகைய நிலைக்குக் கொண்டுவந்த காதகர்கள்மீது எல்லோருக்கும் எல்லையற்ற வெறுப்பு ஏற்பட்டது. அடிமைத்தனத்தின் விஷக் கொடுக்கினால் தலைநகரில் உள்ளவர்களும் அரண்மனை அதிகாரிகளும் மாத்திரம் அவஸ்தைப்படவில்லை. பெரிய ஜமீன்தார்கள், ராஜாக்கள் முதலியோரின் பரம்பரையான சொத்துரிமைகள், இனும்கள் முதலியனவும் ஆங்கிலேயர்களால் பறிமுதல் செய்யப்பட்டன. பொன்னரசாயினும் அந்நிய ஆட்சியைக் காட்டிலும், தன்னரசுதான் எத்தனை குறைகள் இருப்பினும்-கோடி மடங்கு உயர்வானது என்பதையும் இன்பமானது என்பதையும் ஜமீன்தார்கள், ராஜாக்கள் உட்பட எல்லோரும் அறிந்துகொண்டார்கள். நிலவரி உயர்வால் விவசாயிகளிடையே மிகுந்த அதிருப்தி ஏற்பட்டது.

ஆங்கிலேயரின் ராணுவத்தில் இருந்த பெரும்பாலான சிப்பாய்கள் அயோத்தியைச் சேர்ந்தவர்கள் ஆதலால், தங்கள் ஜனன பூமியில் தாண்டவமாடும் துக்ககரமான நிலைமையும் வறுமையும் அவர்களுக்கு ஆங்கிலேயர்களின்மீது அளவற்ற அதிருப்தியையும் ஆத்திரத்தையும் உண்டுபண்ணின. ஆங்கிலேயர்கள் எவ்வாறு தங்களுடைய துரோகத்தினாலும் வஞ்சனையினாலும் நவாப் வாஜித் அலி ஷாவை அழித்தார்கள் என்பதைச் சிப்பாய்கள் எண்ணி, ஆத்திரத்தினால் பற்களைக் கடித்துக்கொண்டனர். தம்மை அறியாமலே அவர்களுடைய கைகள் வாட்களை நாடின. அயோத்தியைச் சேர்ந்த பெரிய ஜமீன்தார்கள் எல்லோரும் கௌரவம், தைரியம், பெருந்தன்மை, நன்றி முதலிய குணாதிச

யங்களுக்கு உதாரண புருஷர்கள் ஆவர். அவர்கள் யாவரும் ராஜபுத்திர வீரர்களின் சந்ததிகள். தங்களுடைய மன்னருக்கு ஆங்கிலேயர்கள் இழைத்த கொடுமையையும் துரோகத்தையும் கேள்வியுற்றபோது அவர்கள் மனம் துடித்தது. அயோத்தியைக் கைப்பற்றிய பின் ஆங்கிலேயர்கள், புதிய ஆட்சியில் உத்தியோகம் ஏற்றுக்கொள்ளும்படி அவர்களைக் கேட்டனர். சுதந்தரப் பிரியர்களும், வீர புருஷர்களுமான நூற்றுக்கணக்கானவர்கள், 'சுயராஜ்ய அமுதத்தைப் பருகியுள்ள நாங்கள் அந்நிய ஆட்சி விஷத்தை ஏறெடுத்துப் பாரோம்!' என்று கூறி விட்டார்கள்.

ஹென்ரி லாரென்ஸ், புதிய அயோத்தி மாகாணத்தின் பிரதம அதிகாரியானான். அவன் பாஞ்சாலத்தில் புரட்சி விதை வேரூன்றுமுன் அதைப் பறித்து அழித்த ஜான் லாரென்ஸின் அண்ணன். பாஞ்சாலத்தை அவன் தம்பி 'காப்பாற்றியது' போலவே அவனும் அயோத்தியைப் 'பாதுகாப்பதற்கான' ஏற்பாடுகளை ஆரம்பித்தான். இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரம் நிரந்தரமாக அமைவதற்குப் பெரிதும் உதவியளித்த பெருமை லாரென்ஸ் குடும்பத்தையே சார்ந்ததாகும்!

ஹென்ரி லாரென்ஸ், அயோத்தியில் காலடி வைத்ததும், அங்கிருந்த உண்மையான நிலையை ஊருடுவி அறிந்துகொண்டான். மற்ற எந்த ஆங்கிலேயரும் ஊகிப்பதற்கு வெகு காலத்துக்கு முன்பே, அயோத்தியில் புரட்சி உண்டாகலாம் என்ற பீதி அவனுக்கு ஏற்பட்டுவிட்டது. லக்ஷ்மணபுரி, அயோத்தி மாகாணத்தின் தலைநகரானதால், அங்கேயே அவன் தன் தலைமைக் காரியாலயத்தை அமைத்துக்கொண்டான். அதிருப்தி அடைந்த ஜமீன்தார்களை இனிய பேச்சுக்களால் சாந்தப்படுத்தும் கொள்கையை ஆரம்பித்தான். ஜனங்கள் தங்களுடைய பழைய சுயாட்சியை மறக்கும்படி செய்வதற்காக, மிகுந்த முயற்சியும் சிரமமும் எடுத்துக்கொண்டான். அதற்காக அவன் லக்ஷ்மணபுரியில் ஒரு தர்பாரை நடத்தியதுடன் ஜனங்களுக்குப் பலவிதமான கௌரவப் பட்டங்கள், வெகுமதிகள் முதலியனவும் அளித்தான்.

அவன் மிகவும் தந்திரசாலி ஆனதால், சமாதான முறைகளைக் கைக்கொள்வதுடன் திருப்தி அடைந்துவிடவில்லை. பொது ஜனங்கள் புரட்சியை ஆரம்பித்தால் அதை எதிர்ப்பதற்கான பல்வேறு திட்டங்களையும் ஆலோசிக்கலானான். அதற்குமுன் இருந்தவர்களைப்போல் ஹென்ரி லாரென்ஸ் அவ்வளவு மோசமானவன் அல்ல. எனினும் நல்லதாயினும் கெட்டதாயினும், ஆங்கில ஆட்சியை அயோத்தி மக்கள் அறவே வெறுத்தனர். மீண்டும் சுயராஜ்யத்தை ஸ்தாபித்து, வாஜித் அலி ஷாவைச் சிம்மாசனத்தில் ஏற்றினாலன்றி அவர்களைத் திருப்திப்படுத்த முடியாது.

ஆங்கிலேயர்கள் போட்டுள்ள அடிமை விலங்கைத் தகர்த்தெறிய வேண்டும்; மீண்டும் ஹிந்துஸ்தானம் சுதந்தர நாடாக விளங்க வேண்டும்; இதைத் தவிர வேறு எதுவும் மக்களுக்குத்

திருப்தியை அளிக்காது. நேற்று அவர்களின் மதம் சுதந்தர மக்களின் மதமாக இருந்தது; அரசாங்கத்தின் மதமாகவும், மன்னனின் மதமாகவும் இருந்தது. ஆனால் இன்றோ அது கீழ்த் தர நிலைக்கு வீழ்ச்சி அடைந்துவிட்டது. இதற்குப் பரிகாரம் என்ன? ஆங்கிலேயரின் நல்ல ஆட்சியல்ல, ஆங்கில ஆட்சி யையே அடியோடு ஒழிப்பதுதான். மான சிம்மனைப் போன்ற சக்தி பொருந்திய ஹிந்து மண்டலாதிபதிகளும், மௌல்வி அக மதுஷாவைப்போன்ற முஸ்லிம் தலைவர்களும், ஹிந்து, இஸ்லாம் மதங்களுக்காகவும் சுதந்தர யுத்தத்துக்காகவும் தங்களுடைய அனைத்தையும் தியாகம் செய்ய உறுதி கொண்டார்கள். ஆயிரக் கணக்கான மௌல்விகளும் பண்டிதர்களும் அயோத்தி முழுவதும் சென்று புனித யுத்தத்துக்கு எல்லோரும் எழ வேண்டுமென்று ரகசியமாகவும் பகிரங்கமாகவும் பிரசாரம் செய்தார்கள். படைகள், போலீசார், ஜமீன்தார்கள் முதலிய யாவரும் விசுவா சப்பிரமாணம் எடுத்துக்கொண்டனர். சுதந்தர யுத்தத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்ற ஜனங்களின் ஆர்வமும் கிளர்ச் சியும் எங்கும் பரவின.

உள்ளூற எரிந்துகொண் டிருந்த புரட்சித் தீயின் பொறி கள் அடிக்கடி தற்செயலாக வெளிக் கிளம்பி விடுவது உண்டு. அவற்றின் விளைவாக மௌல்வி அகமது ஷா, ராஜத் துரோகக் குற்றத்துக்காக மரண தண்டனை விதிக்கப்பட்டார். எனினும் அந்தத் தண்டனை பின்னால் குறைக்கப்பட்டது. அடுத்தபடி யாக ஏழாவது படை கலைக்கப்பட்டது. சிப்பாய்கள் தன் ஆதிக்கத்திலிருந்து மீறிவிடாமல் சாத்தியமான வரையில் பாதுகாப்பதற்காக, ஹென்ரி லாரென்ஸ் மே மாதம் 12-ஆம் தேதி ஒரு பெரிய தர்பார் நடத்தினான். அவ்வமயம் அவன் கேட்போர் மயங்கும்படி ஹிந்துஸ்தானியில் ஒரு பிரசங்கம் செய்தான்.

ஆங்கிலேயர்களிடத்தில் விசுவாசத்துடன் இருக்க வேண்டிய அவசியம், இஸ்லாம் மதத்துக்கு ரஞ்சித சிம்மனால் இழைக்கப் பட்ட அவமதிப்புகள், ஹிந்து மதத்துக்கு ஔரங்கசீப் இழைத்த கொடுமைகள், ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பரஸ்பரம் அடித்துக் கொண்டு அல்லலுறாமல் வெள்ளையர்கள் இரு சமூகத்தினருக் கும் அளித்துவரும் பாதுகாப்பு முதலியவற்றையெல்லாம் பற்றி ஓர் அத்தியாயம் பிரசங்கமாரி பொழிந்தான். தங்களுடைய விசுவாசத்தைக் காட்டிய சிப்பாய்களுக்கு வாட்கள், சால்வைகள், தலைப்பாகைகள் முதலிய மற்றும் பல வெகுமதிகளையும் தானே நேரில் அளித்தான். அதற்கு மாறாக நடந்துகொண்ட ஏழாவது படையை நிராயுதபாணியாக்கிக் கலைத்தான். ஆயினும் ஆங்கி லேய விசுவாசத்திற்காக எந்தச் சிப்பாய்களுக்கு அவன் வெகுமதி அளித்தானோ, அதே சிப்பாய்கள்தாம் சில நாட்களுக்குள், புரட்சிக்காரர்களுடன் சம்பந்தம் வைத்துக்கொண் டிருந்ததாகத் தூக்குத் தண்டனை அடைந்தனர்!

லாரென்ஸின் 'ஆங்கில விசுவாச தர்பார்' 12-ஆம் தேதி நடந்தது. 13-ஆம் தேதி மீரத் எழுச்சிபற்றிய செய்தி வந்தது.

டில்லி, தேச பக்தர்களின் வசமாகி, அங்கே இந்தியாவின் சுதந்தரப் பிரகடனம் வெளியாகியிருக்கிறது என்ற சந்தோஷச் செய்தியை 14-ஆம் தேதியன்று அயோத்தி ஜனங்கள் கேட்டனர்.

ஹென்ரி லாரென்ஸ் உடனே லக்ஷ்மணபுரி நகருக்கு அருகிலுள்ள மச்சிபவனம் என்ற இடத்தையும், 'ரெஸிடென்ஸி'யையும் தேர்ந்தெடுத்து, ஆபத்து நேர்ந்தால், ஆங்கிலேயர்கள் அடைக்கலம் புகுவதற்காக அவற்றைப் பலப்படுத்த ஆரம்பித்தான். ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் அவ்விடங்களுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். குமாஸ்தாக்கள், அதிகாரிகள், வியாபாரிகள் முதலிய எல்லா ஆங்கிலேயர்களுக்கும் ராணுவப் பயிற்சி அளிக்கப்பட்டது. மீரத்தில்கூடப் புரட்சி மூண்ட பின்னர் அவ்விதமே சகல ஆங்கிலேயர்களும் பத்து நாட்களில் பயிற்சி பெற்றனர். ஹென்ரி லாரென்ஸ் மாகாணத்தின் பிரதம ராணுவ அதிகாரி ஆனுன். நேபாளம் அயோத்திக்கு அருகே இருப்பதால், அங்கிருந்து உதவி கோரி அவன் நேபாளத்துக்கு ஒரு தூது கோஷ்டியை அனுப்பினுன். படைகளுடன் அயோத்திக்கு வரும்படி அவன் ஜங்பகதூரைக் கேட்டுக்கொண்டிருந்தான்.

இவ்வாருக, அவன் முன்னேற்பாடுகளையெல்லாம் செய்து வருகையில் அன்று நிச்சயமாகப் புரட்சி ஏற்படப்போகிறதென்று அவனுக்குத் தினசரி 'ஆதார பூர்வமான' தகவல் கிடைக்கும். அந்தச் செய்தி கிடைத்ததும் அவன் ஒவ்வொரு நாளும் விசேஷ ஏற்பாடுகளைச் செய்துகொண்டு போருக்கு ஆயத்தமாக இருப்பான். ஆனுல் அன்று புரட்சி ஏற்படாது. இவ்விதமாகப் பல நாட்கள் வரையில் அவன் ஏமாற்றப்பட்டு வந்தான்.

மே மாதம் 30-ஆம் தேதியன்றும் ஓர் அதிகாரி அவனிடம் வந்து, 'இன்று இரவு 9 மணிக்குப் புரட்சி ஆரம்பமாகப் போகிறது' என்று கூறினுன். அன்று சூரியாஸ்தமனம் ஆயிற்று. ஹென்ரி லாரென்ஸ் தனக்குக் கீழுள்ள அதிகாரிகளுடன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். 9 மணிக்கு வழக்கமான குண்டும் போடப்பட்டது. புரட்சியைப்பற்றி இம் முறை தகவல் கொண்டு வந்த அதிகாரி ஏற்கனவே ஒரு தடவை கூறிய தகவலும் பொய்த்துவிட்டதால், லாரென்ஸ் அவன் பக்கம் திரும்பி, 'உன் நண்பர்கள் குறிப்பிட்ட நேரத்தில் அலுவல்களைச் செய்வதே இல்லை' என்று ஏளனமாகக் கூறினுன்.

அவன் அவ்விதம் சொல்லி வாய் மூடுமுன் 'டுமீர் டுமீர்' என்று வேட்டுச் சத்தம் கேட்டது. 71-ஆவது படை புரட்சியை ஆரம்பித்துவிட்டது என்பதை அது அறிவித்தது. ஏற்கனவே அந்தப் படையினர் தீர்மானித்திருந்ததற்கு இணங்க, ஒன்பது மணி குண்டு போட்டதும் அவர்களில் ஒரு கோஷ்டியினர் ஆங்கிலேயர்களின் பங்களாக்களைத் தாக்க ஆரம்பித்தனர். 71-ஆவது படையினரின் சாப்பாட்டு விடுதிக்குத் தீ வைக்கப்பட்டதுடன் ஆங்கிலேயர்களும் சுடப்பட்டனர். லெப்டினன்ட் கிரான்ட் ஒரு கட்டிலின் கீழ் ஒளிந்துகொண்டிருந்தான். அந்தத் தகவலை ஒருவர் சிப்பாய்களுக்கு அறிவிக்கவே, அவர்கள் அங்கே வந்து

அவனை வெளியே இழுத்துக் கொன்றனர். தன் குதிரைப் படையுடன் சில தெருக்களைக் காவல் புரிந்துகொண் டிருந்த லெப்டினட் ஹார்டிஞ்ச், ஒரு சிப்பாயின் வாளால் காயமடைந் தான். ராணுவ விடுதிகளெல்லாம் தீக்கு இரையாயின. ராணுவத் தலைவனான ஹாண்ட்ஸ் கூம்பும் கொல்லப்பட்டான்.

இரவு முழுவதும் ஆயுதங்களுடன் ஆங்கிலக் கொடியைக் காவல் புரிந்துகொண் டிருந்த வெள்ளைத் துருப்புகளும், துரோகி களான சில சிப்பாய்களும், புரட்சியைப் பரவ விடாமல் தடுக்கத் தங்களால் இயன்ற வரையில் முயன்றனர். 31-ஆம் தேதி காலையில் ஹென்ரி லாரென்ஸ் ஆங்கிலத் துருப்புகளுடனும், அப் போதுகூடத் தங்களிடம் விசுவாசத்துடன் இருந்த சில இந்தியச் சிப்பாய்களுடனும் புரட்சிக்காரர்களை எதிர்க்கப் புறப்பட் டான். ஆனால், அதுவரையில் அவனுக்கு ஆதரவாக இருந்த 7-ஆவது குதிரைப் படையும் வழியில் புரட்சியை ஆரம்பித்து விட்டது! எனவே அந்தப் படையையும் புரட்சிக்காரர்களுடன் சேரும்படி விட்டுத் திரும்புவதைத் தவிர, அவனுக்கு வேறு வழி இல்லை. அப்பொழுது ஆங்கிலேயரின் பீரங்கிப் படைகளும், 32-ஆவது படையும் லக்ஷ்மணபுரியிலேயே இருந்துங்கூட, தேச பக்தர்கள் அடங்கிய 71-ஆவது, 48-ஆவது காலாட் படைகள், 7-ஆவது குதிரைப் படை முதலியன அன்று மாலை நேரத்துக்கு முன்பே அங்கே சுதந்தரக் கொடியை ஏற்றிவிட்டன!

லக்ஷ்மணபுரிக்கு வடமேற்கே ஐம்பத்தொரு மைல் தூரத் தில் சீதாபுரி என்ற நகரம் இருக்கிறது. அங்கே அப்போது 41, 9, 10-ஆவது படைகள் வைக்கப்பட்டிருந்தன. அந்த மாகாணக் கமிஷனரும் மற்ற உயர்தர அதிகாரிகளும் அங்கே தான் இருந்தார்கள். அங்குள்ள சில ஆங்கிலேயர்களின் வீடு களுக்கு மே மாதம் 27-ஆம் தேதி தீ வைக்கப்பட்டது. அவ் விஷயமாக அதற்கு முன் ஆங்கிலேயர்களுக்கு அநுபவம் இல்லாத தால், அத்தகைய தீ விபத்துக்கள் வரப்போகும் புரட்சியின் பூர்வாங்க அறிகுறிகள் என்பதை அவர்கள் அறிந்துகொள்ள வில்லை. எனவே அவர்கள் அவ்விபத்துக்களை ஒட்டி விசேஷ கவனம் செலுத்தவில்லை. அது மாத்திரம் அல்ல, தீயை அணைக் கும் முயற்சியில் சிப்பாய்களும் கலந்துகொண்டதனால், ஆங்கில அதிகாரிகளுக்குச் சந்தேகம் ஏதும் உண்டாகவில்லை.

அந்தத் தீ விபத்துக்கள் தேச பக்தர்களின் இரண்டு நோக் கங்களை நிறைவேற்றின. முதலாவதாக, புரட்சியை ஆரம்பிக்க நேரம் வந்துவிட்டது என்பதை ரகசியச் சங்க அங்கத்தினர்கள் அறிந்துகொண்டனர். இரண்டாவதாக, ஆங்கிலேயர்களுக்குப் புரட்சியைப்பற்றிய சந்தேகம் சிறிதும் இல்லை என்பதும் வெளியாயிற்று.

இப்படியிருக்க, ஜூன் மாதம் 2-ஆம் தேதி சில விசித்திர சம்பவங்கள் நிகழலாயின. தங்களுக்கு அளிக்கப்பட்ட மாவு மூட்டைகளில் எலும்புத்தூள்கள் கலந்திருப்பதாகச் சிப்பாய்கள் புகார் கூறி, அதை எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார்கள்; அந்த மூட்டைகளை யெல்லாம் உடனே கங்கையில் கொட்டி

விடவேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். ஆங்கிலேயர்களும் பதில் பேசாமல் அவற்றை நதியில் கொட்டிவிட்டார்கள்! அன்று மாலை சிப்பாய்கள் எல்லாரும் திடீரென்று ஆங்கிலேயர்களின் தோட்டங்களில் புகுந்து அங்குள்ள பல வகையான பழவர்க்கங்களைத் தங்கள் விருப்பப்படி வேண்டிய மட்டும் சாப்பிடத் தொடங்கினர். அவர்களுடைய நடவடிக்கையை ஆங்கில அதிகாரிகள் கடுமையாகக் கண்டித்துக் கூக்குரல் இட்டார்கள். ஆனால் சிப்பாய்கள் அதற்குச் சிறிதும் செவி சாய்க்காமல் தங்களுடைய சிற்றுண்டியிலேயே அதிக கவனம் செலுத்தலாயினர்.

அந்த மகத்தான விருந்துக்குப் பின் தேசீய வீரர்கள் எல்லாரும் அது ஜீரணமாவதற்காக மகத்தான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். 3-ஆம் தேதி ஒரு கோஷ்டியினர் கஜானாவைக் கைப்பற்றினர். மற்றொரு கோஷ்டியினர் பிரதம கமிஷனர் இருக்கும் இடத்துக்குச் சென்று அவர் வீட்டைத் தாக்கினார்கள். அங்கே செல்லும் வழியில், கர்னல் பர்ச், லெப்டினண்ட் கிரேவ்ஸ் இருவரும் அவர்களின் வாளுக்கு இரையாயினர். 9-ஆவது படையைச் சேர்ந்த சிப்பாய்கள் தங்களுடைய அதிகாரிகளை யெல்லாம் வெட்டி வீழ்த்தினர். சிப்பாய்கள், 'பறங்கியர் ஆட்சி முடிந்துவிட்டது' என்று கோஷம் செய்துகொண்டே ஆங்கிலேயர்மீது பாய்ந்தனர்.

கமிஷனரும், அவர் மனைவியும் நதியை நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர். பின்னர் அவர்களும் ஒரு பையனும் நதியைக் கடந்து செல்லுகையில் சிப்பாய்களின் தோட்டாக்களுக்குப் பலியாயினர். தார்ன்ஹில்லுக்கும் அவன் மனைவிக்கும் அதே கதி நேர்ந்தது. இவ்விதமாக இருபத்துநான்கு ஆங்கிலேயர்கள், சிப்பாய்களின் கோபாவேசத்துக்குப் பலியாயினர். பலர் ராம்கோட் ஜமீன்தார், மிடவுலி ஜமீன்தார் முதலிய பல்வேறு ஜமீன்தார்களும் இருக்கும் இடத்துக்கு ஓடிவிட்டார்கள். பத்து மாத காலம் வரையில் அவர்கள் அந்த ஜமீன்தார்களின் பராமரிப்பிலேயே சுகமாக இருந்துவிட்டுப் பின்னால்தான் லக்ஷ்மணபுரிக்குப் பத்திரமாகத் திரும்பிச் சென்றனர்.

சீதாபுரியிலிருந்து ஆங்கிலேயர்களை யெல்லாம் விரட்டிய பின் எல்லாச் சிப்பாய்களும் பரூகாபாத்துக்குச் சென்றார்கள். அங்குள்ள கோட்டைக்குள் வெள்ளையர்கள் அடைக்கலம் புகுந்திருந்ததால், கடுமையான போராட்டத்துக்குப் பின்னரே தேச பக்தர்கள் அந்தக் கோட்டையைக் கைப்பற்ற முடிந்தது. அந்த யுத்தத்தில் ஆங்கிலேயர் அனைவரும் பலியாயினர். வெள்ளையர்களால் சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தப்பட்ட நவாப் துபுஸர் ஹுசேன்கான் தேசபக்தர்களால் மீண்டும் சிம்மாசனத்தில் அமர்த்தப்பட்டார்.

சீதாபுரிக்கு வடக்கே சுமார் நாற்பத்துநான்கு மைல் தூரத்தில் உள்ள மாலன் என்ற நகரில் இருந்த வெள்ளையர்கள், சிப்பாய்களும் ஜனங்களும் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகப் பல இடங்களிலும் புரட்சியை ஆரம்பித்துவிட்டார்கள் என்பதை

அறிந்துகொண்டனர். சீதாபுரி எழுச்சிபற்றிய செய்தியும் அவர்களுக்குக் கிடைத்ததால், அவர்கள் எல்லாரும் குதிரைகளின் மீது ஏறி ஓட்டம் பிடித்தார்கள். எனவே துளி ரத்தமும் சிந்தாமல் அந்த ஜில்லா முழுவதும் விடுதலை பெற்றுவிட்டது.

மாமதி ஜில்லாவிலும் புரட்சி ஏற்படலாம் என்ற எண்ணத்துடன் ஆங்கிலேயர்கள், தங்கள் குடும்பங்களையெல்லாம் மிடவுலி ராஜா இருக்கும் இடத்திற்கு அனுப்பியிருந்தார்கள். ஆனால், அவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் சக்தி தமக்கு இல்லையென்றும், அவர்கள் தமக்குச் சொந்தமான காடுகளில் ரகசியமாக வசிப்பதுதான் மேலானதென்றும் அவர் கூறிவிட்டார். வெள்ளை அதிகாரிகளோ தங்களுடைய மனைவிமாரை, பாதுகாப்புக்காக ராஜாவிடம் அனுப்பிவிட்டுத் தாங்கள் கோட்டைக்குள் புகுந்துகொண்டனர்.

ரோஹில்கண்டைச் சேர்ந்த ஷாஜஹான்புரியிலிருந்தும் ஏராளமான ஆங்கிலேயர்கள் மாமதிக்கு வந்து சேர்ந்தார்கள். எனினும் மாமதியில் அவர்களுக்கு எந்த விநாடியிலும் ஆபத்து ஏற்படக் கூடுமாதலால், நிர்க்கதியாக வந்துள்ள அவர்கள் எல்லோருக்கும் துருப்புகளை அனுப்பி உதவிபுரியும்படி ஆங்கில அதிகாரிகள் சீதாபுரிக்குச் செய்தி அனுப்பினார்கள். அப்போது சீதாபுரியில் புரட்சி ஆரம்பம் ஆகவில்லை ஆதலின், மாமதியில் அடைக்கலம் புகுந்த ஆங்கிலேயர்களைத் திருப்பி அழைத்து வருவதற்காகச் சில சிப்பாய்கள் அனுப்பப்பட்டனர்.

ஆனால் சீதாபுரி சிப்பாய்களோ மாமதிக்கு வரும்போதே தங்களுடன் புரட்சியையும் கொண்டு வந்துவிட்டார்கள்! மாமதியில் இருந்த ஆங்கிலேயர்களை எல்லாம் அந்தச் சிப்பாய்கள் வண்டிகளில் ஏற்றிக்கொண்டார்கள். ஆனால், சீதாபுரிக்குச் செல்லும் வழியில், இந்தியாவை அடிமைத்தனத்தில் ஆழ்த்திய அந்தப் பாதகர்கள்மீது ஆத்திரம் கொண்டு அவர்கள் எல்லோரையும் வெட்டி வீழ்த்திவிட்டார்கள். மாமதியில் மீதியிருந்த ஆங்கில அதிகாரிகளும் அதைக் கேட்டவுடன் அந்த நகரை விட்டு ஓட்டம் பிடித்தார்கள். எனவே ஜூன் மாதம் 4-ஆம் தேதி அந்த ஜில்லா முழுவதும் ஆங்கில ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றது.

சீதாபுரிக்கு அருகில் பர்ஹைச் என்று மற்றொரு ஜில்லா இருக்கிறது. அங்கே விங்பீல்ட் பிரதம கமிஷனராக இருந்தான். நிர்வாகத்துக்கு வசதியாக அந்த ஜில்லா சிக்ரோரா, கோண்டா, பர்ஹைச், மேளபுரி என்ற நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சிக்ரோராவில் 2-வது காலாட்படையும், பீரங்கிப் படையின் ஒரு பிரிவும் இருந்தன. அங்கே புரட்சிக்கான அறிகுறி தென்பட்டவுடன், அங்கிருந்த ஆங்கிலப் பெண்களும் குழந்தைகளும் லக்ஷ்மணபுரிக்கு அனுப்பப்பட்டனர். 9-ஆம் தேதி காலையில் பல ஆங்கில அதிகாரிகளும் அடைக்கலம் புகுவதற்காக பலராம்புரி ராஜா இருக்குமிடத்துக்குச் சென்றார்கள்.

பீரங்கிப் படையின் தலைவனை பான்ஹாம் மாத்திரம் தன் சிப்பாய்களின்மீது நம்பிக்கை வைத்து, தன் இருப்பிடத்தை விட்டுச் செல்லவில்லை. ஆனால் அன்று மாலை சிப்பாய்கள் அவனிடம் தங்களுடைய நிலைமையை ஒளிவு மறைவின்றித் தெரிவித்துவிட்டனர். 'உனக்கு எவ்விதத் தீங்கும் செய்ய நாங்கள் விரும்பவில்லை. எனினும் ஆங்கிலேயர்களுக்காக எங்கள் தேச சகோதரர்களை நாங்கள் எதிர்த்துப் போராட மாட்டோம். ஏனெனில் இந்த நாட்டில் ஆங்கிலேயரின் ஆட்சி முடிந்துவிட்டது' என்று அவர்கள் அவனிடம் சொன்னார்கள். இதைக் கேட்ட பான்ஹாமுக்கு அந்த நகரை விட்டு வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை. அவன் பத்திரமாகச் செல்லுவதற்குற்ற மார்க்கத்தைச் சிப்பாய்கள் காட்டியதால், யாதொரு விபத்துமின்றி அவன் லக்ஷ்மணபுரி போய்ச் சேர்ந்தான்.

சிக்ரோரா சுதந்தரம் பெற்ற செய்தி, கோண்டாவுக்கு எட்டியது. உடனே அந்நகர ஜனங்களும் சுதந்தரம் பெற உறுதி கொண்டார்கள். எனவே கமிஷனர் விங்பீல்டு மற்ற எல்லா ஆங்கிலேயர்களுடனும் பலராம்புரி ராஜாவிடம் அடைக்கலம் புகுந்தான். அந்த ராஜாவும் தம்மிடம் அடைக்கலம் புகுந்த இருபத்தைந்து ஆங்கிலேயர்களுக்கும் பாதுகாப்பளித்து, உற்ற சமயத்தில் அவர்களை ஆங்கிலேயர்களின் முகாம் ஒன்றுக்கு அனுப்பிவைத்தார்.

சிக்ரோராவும் கோண்டாவும் சுதந்தரம் பெற்ற செய்தி அதி சீக்கிரத்தில் பர்ஹைச் மக்களுக்கு எட்டியது. அங்கிருந்த ஆங்கில அதிகாரிகள் ஜனங்கள் புரட்சியை ஆரம்பிக்கும் வரையில் காத்திராமல் 10-ஆம் தேதியே அங்கிருந்து புறப்பட்டு லக்ஷ்மண புரிக்கு ஓட முயன்றனர். தேச பக்தர்கள், அயோத்தி மாகாணம் முழுவதும் பரவித் தங்கள் அலுவல்களைக் கவனித்து வந்ததால், அந்த ஆங்கில அதிகாரிகள் இந்தியர்களைப்போல் மாறுவேடம் பூண்டு படகுகளில் கோக்ரா நதியைக் கடக்க முயன்றார்கள்.

முதலில் அவர்களை யாரும் கவனிக்கவில்லை. ஆனால் படகுகள் நதியில் பாதிதூரம் சென்றதும், 'பறங்கியர்', 'பறங்கியர்' என்று திடீரென்று கூக்குரல் உண்டாயிற்று. அவ்வளவுதான்! படகுக்காரர்கள் தண்ணீரில் குதித்துவிட்டனர். அவைகளில் இருந்த தேச பக்தர்கள் அந்த அதிகாரிகளை யெல்லாம் ஆற்றிலேயே பலி கொடுத்துவிட்டார்கள். அந்த அதிகாரிகள் மறைந்ததுடன், பர்ஹைச்சிலிருந்த ஆங்கில அதிகாரமும் அடியோடு மறைந்தது.

மேளபுரி, ராணுவ ஸ்தலம் அல்லவாயினும், அங்கே பொது மக்கள் கிளர்ச்சி செய்ததால், ஆங்கில அதிகாரிகள் எல்லாரும் அந்தப் பிரதேசத்தை விட்டு ஓடும்படி யாயிற்று. அவர்கள் ஓடி மறைந்துகொள்ள ஒரு ராஜா அவர்களுக்கு இயன்றவரையில் உதவி செய்தார். எனினும், இறுதியில் அவர்களில் பலர் மிகவும் கண்காணிப்புடன் இருந்த தேச பக்தர்களின் வாள்களுக்கு

இரையாக நேர்ந்தது. தப்பி ஓடியவர்கள் காடுகளில் கஷ்டத்துக்கு உள்ளாகி மாண்டனர்.

பைஜாபாத் என்பது கிழக்கு அயோத்தியின் பிரதான நகர மாகும். அம்மாகாணக் கமிஷனரான கோல்ட்னி அந்நகரில்தான் இருந்தான். பைஜாபாத் பிரதேசம் சுல்தான்புரி, ஸலோனி, பைஜாபாத் என்று மூன்று ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பைஜாபாத்தில் அவ்வமயம் 22-ஆவது காலாட்படை, 6-ஆவது காலாட் படை, சில குதிரைப் படைகள், சில பீரங்கிப் படைகள் முதலியவை வைக்கப்பட்டிருந்தன. அவைகளுக்கெல்லாம் கர்னல் லெனுக்ஸ் தலைமை அதிகாரியாக இருந்தான்.

பைஜாபாத் ஜில்லாவில்தான் ஆங்கிலேயர்களின் கொடுங்கோல் தன் சுய ரூபத்துடன் வெறி நடனம் புரிந்து வந்தது. ஹென்ரி லாரென்ஸ் எழுதிய கடிதம் ஒன்றே அதை நிரூபிக்கப் போதுமானது. 'பைஜாபாத்தில் உள்ள சகல தாலுக்தார்களும் மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறார்கள். அங்கே அவர்களில் பலர் தங்களுடைய கிராமங்களில் பலவற்றையும் இழந்துவிட்டனர். மற்றும் பலர் எல்லாக் கிராமங்களையுமே இழந்துவிட்டனர்' என்று லாரென்ஸின் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மீரத் எழுச்சிபற்றிய செய்தி கிடைத்ததும், பைஜாபாத்தில் தாங்கள் செய்துள்ள கொடுமைகளுக்குக் கூடிய சீக்கிரம் தங்கள்மீது தேசபக்தர்கள் வஞ்சம் தீர்க்கத் தயங்கமாட்டார்கள் என்று ஆங்கில அதிகாரிகள் அஞ்சினர். எனவே தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்ற கவலை அவர்களின் மனத்தை ஆட்கொண்டது. லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் பாதை, தேச*பக்தர்களால் வெகு ஜாக்கிரதையாகக் கண்காணிக்கப்பட்டு வந்ததால், ஆங்கிலேயர்கள் தங்களுடைய குடும்பங்களை அங்கே அனுப்ப முடியவில்லை. பைஜாபாத்தில் அவர்கள் போருக்கு ஆயத்தமாவதென்பதும் முடியாத காரியம். ஏனெனில் அங்குள்ள படை முழுவதும் இந்தியமயமாக இருந்தது. இந்தச் சங்கடமான நிலைமையில் அவர்களுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. இறுதியாக அவர்கள் ராஜா மானசிம்மனின் பாதுகாப்பை நாடினர்.

மானசிம்மன் அயோத்தி மாகாணத்தில் உள்ள ஹிந்துக்களின் தலைவர். தம் தேசத்தையும் மதத்தையும் பாதுகாக்க அவரது வீரவாள் எப்போதும் தயாராக இருப்பது வழக்கம். சீரும் சிறப்பும் வாய்ந்த அந்த ராஜாவை ஆங்கிலேயர்கள் ஏதோ நிலவரித் தகராறு காரணமாக 1857-ஆம் வருஷம் மே மாதம் சிறைப்படுத்திவிட்டனர். எனினும் மீரத் எழுச்சியால் ஆங்கிலேயரின் அதிகாரம் ஆட்டம் கண்டதும், அவர்கள் சிறையில் இருந்த மானசிம்மனை விடுவித்து, அவரைத் தங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ளுவதற்காக அவருடன் நட்புக் கொண்டாட ஆரம்பித்தார்கள்.

ஆங்கிலேயர்களுக்கு அபயம் அளிக்க அவர் சிறிதும் விரும்பவில்லை. எனினும் அவர்கள் மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதன் மீது, பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் மாத்திரம் தம் அரண்மனையில் அடைக்கலம் புக இடமளித்தார். அதே சமயம் தமது நடவடிக்கை, மக்களுக்கு அதிருப்தியைக் கொடுக்கும் என்பதையும், தமது அரண்மனையை ஜனங்கள் தாக்கத் தயங்கமாட்டார்கள் என்பதையும் அவர்களுக்குச் சுட்டிக்காட்டினார். ஜூன் மாதம் 1-ஆம் தேதி ஆங்கில அதிகாரிகள் தங்களுடைய குடும்பங்களை ராஜா மானசிம்மனின் ஷாகஞ்ஜ் மாளிகையில் கொண்டு வந்து சேர்த்தார்கள். இத்தகைய முன்னேற்பாடுகளை யெல்லாம் ஆங்கிலேயர்கள் செய்து வருகையிலேயே, பைஜாபாத்தில் புரட்சித் தீ மூண்டு, அதிகப் பிரகாசத்துடன் எரியலாயிற்று.

இந்திய சரித்திரத்தில் அழியாப் புகழ் பெற்றுள்ள மௌல்வி அகமது ஷாவும், ஆங்கிலேயர்களின் கொடுங்கோன்மைக்கு ஆளான பைஜாபாத் தாலுக்தார்களில் ஒருவர். மற்றவர்களைப் போலவே அவரும் தம் சொத்துக்களை ஆங்கிலேயர்களிடம் பறி கொடுத்தார். இந்தியாவில் அவதரித்த இணையற்ற தியாக வீரர்களிலும் தேச பக்தர்களிலும் அவரும் ஒருவர். ஆங்கிலேயர் அபகரித்துக்கொண்ட தமது தாலுக்தாரியை மீண்டும் பெற்றே தீருவதென்று மாத்திரம் அல்ல, தமது தேசத்தையும் அவர்களின் ஆதிக்கத்திலிருந்து விடுவித்தே தீருவதென்று பிரதிக்ஞை செய்துகொண்டு, அந்நியர்களைத் தமது நாட்டிலிருந்து விரட்டுவதற்காக வாளை உருவினார்.

அயோத்தியை ஆங்கிலேயர்கள் ஆக்கிரமித்துக் கொண்டதிலிருந்து அகமது ஷா தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தேசத்துக்காகவும் மதத்துக்காகவும் அர்ப்பணம் செய்வதென்று உறுதிகொண்டார். பின்னால் அவர் மௌல்வியாகி, புரட்சிப் பிரசாரத்துக்காக ஹிந்துஸ்தானம் முழுவதும் யாத்திரை செய்யப் புறப்பட்டார். இந்த அரசியல் துறவி சென்ற இடமெல்லாம் மக்களிடையே அதற்கு முன் இராத மகத்தான விழிப்பு ஏற்படத் தொடங்கியது. புரட்சிக் கட்சியின் அரும்பெருந் தலைவர்களையும் அவர் நேரில் கண்டு பேசி வந்தார்.

அயோத்தி ராஜ குடும்பத்தில் அவர் வைத்ததுதான் சட்டம்! ஆக்ராவில் ரகசியச் சங்கத்தின் கிளை ஸ்தாபனம் ஒன்றையும் அமைத்தார். ஆங்கில ஆதிக்கத்தை அழிக்க வேண்டிய அவசியம் பற்றி லக்ஷ்மணபுரியில் பகிரங்கமாக உபதேசித்தார். அயோத்தி ஜனங்களுக்கு அவர் கண்ணாக இருந்து வந்தார். அவர் தமது உடல், மனம், பேச்சு, புத்தி எல்லாவற்றையும் தேசத்துக்கு அர்ப்பணம் செய்து சதா உழைத்து வந்ததுடன், ஜனங்களுக்குச் சுதந்தர உபதேசம் செய்து, புரட்சி வலையையும் ஒழுங்காகப் பின்னி முடித்தார்.

பிறகு அவர் தேசத் தொண்டில் தமது எழுத்து வன்மையையும் உபயோகிக்கலானார். ஏராளமாகப் புரட்சிப் பிரசுரங்களைத் தயாரித்து, அவற்றை அயோத்தி மாகாணம் முழுவதும் விநியோகம் செய்தார். ஒரு கையில் வாளையும் மற்

ஞெரு கையில் பேனுவையும் ஏந்தி அந்த வீரத் தியாகி புரிந்த தொண்டுக்கு இணையே இல்லை. அவரது சலியா உழைப்பின் பயனுகச் சுயராஜ்ய தீபம் மங்காத ஒளியுடன் எரியத் தொடங்கியது.

இதையெல்லாம் கண்டு ஆங்கிலேயர்கள் கோபமும் திகிலும் கொண்டு அவரைக் கைது செய்யும்படி உத்தரவிட்டார்கள். எனினும் அவ்வளவு சீரும் சிறப்பும் செல்வாக்கும் பொருந்திய தலைவரைக் கைது செய்யப் போலீசார், ஆங்கில அதிகாரிகளுக்கு உதவிபுரிய முன்வரவில்லை. எனவே அவரைக் கைது செய்வதற்காக ஆங்கிலேயர்கள் படைகளை அனுப்பும்படி நேர்ந்தது! பின்னுல் அவர்மீது நடந்த ராஜத்துரோக வழக்கில், கொடிய ஆங்கில அதிகாரிகள் அவருக்குத் தூக்குத் தண்டனை விதித்துச் சிறிது காலம் வரையில் அவரைப் பைஜாபாத் சிறையில் வைத்திருந்தார்கள்.

மௌல்வி அகமது ஷாவின் திறமையைப்பற்றி ஆங்கில சரித்திராசிரியர்கள் புகழ்ந்து கூறியிருக்கிருர்கள். அகமது ஷா, சென்னையில் ஒரு பிரபல குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று கப்பின்ஸ் குறிப்பிட்டிருக்கிருர்.

ஆங்கில அதிகார அரக்கனும் மௌல்வியும் ஒருவரை ஒருவர் தூக்கில் இடுவதற்காகப் போட்டி போட்டனர்! ஆங்கில அதிகாரத்தைத் தூக்கிலிட மௌல்வி முயன்று வருகையில், மௌல்வியைத் தூக்கில் இடுவதற்காக ஆங்கிலேயர்கள் வெகு அவசரமாகத் தூக்கு மேடையை அமைத்தனர். ஆயினும் ஆங்கிலேயர்கள் ஒன்று நினைக்க ஆண்டவன் ஒன்று நினைத்துவிட்டான்! ஆங்கிலேயர்கள் தங்களுடைய அவசரத்தில் மௌல்வியைப் பைஜாபாத் சிறையிலேயே இருக்கும்படி விட்டு, தங்களுக்குத் தாங்களே தூக்குமரங்களை நாட்டிக்கொண்டார்கள்!

ஏனெனில் பைஜாபாத்தில் இருந்த புரட்சி மருந்துக் குவியலுக்கு, அகமது ஷா சிறைப்பட்டது ஒரு தீப்பொறிபோல் ஆகியது. அந்தப் பொறி தெறித்ததால், பேரிடி முழக்கத்துடன் புரட்சி மருந்துக் குவியல் பற்றிக்கொண்டது. உடனே படைகள் உட்பட அந் நகர மக்கள் யாவரும் போர் முழக்கத்துடன் பொங்கி எழுந்தனர். சிப்பாய்களை ஒழுங்காக அணிவகுத்து நிற்கும்படி செய்வதற்காக ஆங்கில அதிகாரிகள் அணிவகுப்பு மைதானத்துக்குச் சென்றபோது, இனித் தாங்கள் அந்நியர்களின் உத்தரவுக்குக் கீழ்ப்படிய முடியாது என்றும், தங்களுக்குக் கட்டளையிட இந்திய அதிகாரிக்கு மாத்திரமே உரிமை உண்டு என்றும், சுபேதார் திலீப் சிங்தான் தங்களுடைய தலைவர் என்றும் சிப்பாய்கள் தைரியமாகவும் தெளிவாகவும் கூறிவிட்டார்கள்.

பின்னுல் சுபேதார் திலீப் சிங் ஆங்கில அதிகாரிகளையெல்லாம் சிறைப்படுத்தினுர். மக்களும் சிப்பாய்களும் பொதுஜன வீரரால் புனிதமடைந்துள்ள சிறைக்குச் சென்றனர். சிறைக் கதவுகள் உடைத்து எறியப்பட்டன. ஜனங்களின் சந்தோஷ ஆரவாரத்தினிடையே மௌல்வி அகமது ஷாவின் விலங்குகள் தூள் தூளாயின. மௌல்வி புனர்ஜன்மம் அடைந்ததைக் கண்டு

ஜனங்கள் ஆனந்தக் கூத்தாடினர். அவரைத் தூக்கில் இடத் தயாராக இருந்த ஆங்கில அதிகாரம் இறுதியில் அவரால் தூக்கில் இடப்பட்டது!

அகமது ஷா பைஜாபாத்தில் புரட்சி இயக்கத்துக்குத் தலைமை வகிக்க இசைந்தார். அவர் விடுதலை அடைந்ததும் செய்த முதல் காரியம் என்னவெனில், தமக்குத் தூக்குத் தண்டனை விதித்தவன் மீது வஞ்சம் தீர்த்ததுதான். ஆனால் அவர் தீர்த்த வஞ்சம் மிகவும் விசித்திரமானது. அதாவது சிறையில் இருந்த போது தாம் 'ஹுக்கா' பிடிக்க அநுமதித்ததற்காகக் கர்னல் லெனக்ஸிற்கு வந்தனம் அளித்து ஒரு செய்தி அனுப்பினார்! அப்போது சிறையில் இருந்த லெனக்ஸிற்கு அந்தச் செய்தி அறிவிக்கப்பட்டது. மற்றும் தம்மைத் தூக்கில் இடுவதற்காகத் தூக்குமேடை அமைத்த ஆங்கில அதிகாரிகளைப் பலியிடும்படி அவர் உத்தரவிடவில்லை. கம்பீரமும் பெருந்தன்மையும் வாய்ந்த அகமது ஷா, பைஜாபாத்திலிருந்து உடனே ஓடிவிடுமாறு ஆங்கில அதிகாரிகளையெல்லாம் எச்சரித்தார்.

ஏற்கனவே சில இடங்களில் நடந்ததுபோல் பைஜாபாத்தி லும் கொள்ளை, குழப்பம் முதலியன நடவாமல் காவல் புரிவதற் காகச் சிப்பாய்கள் கோஷ்டி கோஷ்டியாகப் பல இடங்களுக்கு அனுப்பப்பட்டனர். ஆயுதசாலைகளையும் மற்ற அரசாங்கக் கட்டிடங்களையும் சிப்பாய்கள் பாதுகாத்து வந்தார்கள். 15-ஆவது படையைச் சேர்ந்த சிப்பாய்கள் தேர்ந்தெடுத்த யுத்தக் கமிட்டி, ஆங்கில அதிகாரிகள் எல்லாரும் கொல்லப்பட வேண்டும் என்று தீர்மானித்தது. எனினும், முதலில் அளிக்கப்பட்ட வாக்குறு தியை மீறக்கூடாதென்று முக்கிய இந்திய அதிகாரிகள் வற்புறுத் தவே எல்லா வெள்ளையர்களையும் உயிருடன் விடுதலை செய்து விட்டார்கள்.

மேலும், ஆங்கிலேயர்கள் தங்களுடைய சொந்தச் சொத்துக் களை எடுத்துச் செல்லவும் அநுமதிக்கப்பட்டனர். ஆங்கிலேயர் களுக்காகத் தேச பக்தர்களே படகுகளுக்கு ஏற்பாடு செய்து, செலவுக்காக அவர்களுக்குப் பணமும் கொடுத்தார்கள். பின் னல் ஆங்கிலேயர், படகுகளில் கோக்ரா நதி வழியாகச் சென்ற னர். பைஜாபாத் சுயேச்சை பெற்றுவிட்டதென்றும், அங்கே ஆங்கிலேயர் ஆட்சி முடிந்து வாஜித் அலி ஷாவின் ஆட்சி ஆரம்பம் ஆகியிருக்கிறதென்றும் ஜூன் மாதம் 9-ஆம் தேதி காலை ஒரு பிரகடனம் விடுக்கப்பட்டது.

ஆங்கிலேயர்களின் விதி அத்துடன் விடவில்லை. அவர்கள் படகுகளில் செல்லுவதை 17-ஆவது படையைச் சேர்ந்த சிப் பாய்கள் பார்த்துவிட்டனர். பைஜாபாத்திலிருந்து படகுகளில் செல்லும் எல்லா ஆங்கிலேயர்களையும் பலியிட்டுவிடுமாறு அங் குள்ள சிப்பாய்களிடமிருந்து 17-ஆவது படையினருக்கு ஒரு கடிதமும் வந்து சேர்ந்ததால், அதற்கு இணங்க வேட்டையும் ஆரம்பமாயிற்று. அப்போது பிரதம கமிஷனரான கோல்ட்னி, லெப்டினன்ட் தாமஸ், ரிச்சி, மில், எட்வர்ட்ஸ் கர்ரி முதலிய பலரும் பலியாயினர். யாதோர் ஆபத்தும் இன்றி மொகதாபாத்

போய்ச் சேர்ந்த சில வெள்ளையர்களைப் போலீசாரே கொன்று விட்டார்கள். ஒரு படகில் இருந்தவர்கள் மாத்திரம் இறுதி வரையில் தேசபக்தர்களிடம் அகப்படாமல் தப்பிச் சென்று படகுக்காரர்களின் உதவியால் பத்திரமாக வெள்ளையர்களின் முகாம் போய்ச் சேர்ந்தார்கள்.

ஏற்கனவே தம் மாளிகையிலுள்ள ஆங்கிலப் பெண்களை யும் குழந்தைகளையும் எவ்விதம் பத்திரமாகப் பாதுகாப்ப தென்று ராஜா மானசிம்மன் கவலைப்பட்டுக்கொண் டிருக்கையில் அங்கே அடைக்கலம் புகுவதற்காக மேற்கொண்டு பல ஆங்கில ஆடவர்கள் வந்து சேர்ந்தனர். மானசிம்மன் அவ்வமயம் அயோத்தி நகரில் இருந்தார். தேச பக்தர்களுடன் தாம் ஓர் ஒப்பந்தம் செய்துகொண் டிருப்பதாயும், அதன்படி ஆங்கிலப் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் மாத்திரம் தமது மாளிகை யில் இடம் கொடுக்க அவர்கள் இசைந்துள்ளனரெனினும் ஆட வர்கள் அடைக்கலம் புகத் தாம் அனுமதிக்கவே கூடாது என்பது அவர்களுடைய நிபந்தனை என்றும், அந்த நிபந்தனை சரிவர அநுஷ்டிக்கப்படுகிறதா என்பதைப் பார்ப்பதற்காக அவர்கள் அரண்மனையைச் சோதனை செய்ய வருவார்கள் என்றும் மான சிம்மன் தம் குடும்பத்தினருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

ஆகையால் அவரது கோட்டையில் இருந்த ஆங்கிலேயர்கள் யாவரும் தங்கள் குடும்பங்களுடன் அவ்விடத்தை விட்டு வெளி யேறினர். வழியில் அவர்கள் எத்தனையோ ஆபத்துக்களுக்கும் கஷ்டங்களுக்கும் உள்ளாக நேர்ந்தது. அவர்களில் உயிர் தப்பி வந்த இருபத்தொன்பது பேர் கோபாலபுரி ராஜாவின் மாளிகைக்குப் பத்திரமாக வந்து சேர்ந்தனர். அந்த ராஜா அவர்களையெல்லாம் அன்புடன் வரவேற்றுப் பல நாட்கள் வரை யில் தமது மாளிகையில் வைத்து உபசரித்தார். இறுதியில் யாதோர் ஆபத்தும் இன்றி அவர்களை ஆங்கிலேயர்களின் முகா முக்கு அனுப்பி வைத்தார்.

1857-ஆம் வருஷத்திய சோதனையிலிருந்து உயிர் தப்பிய ஆங்கிலேயர்களில் பெரும்பாலோர் தங்களுடைய அநுபவங்களைப் பற்றி விவரமாக எழுதியிருக்கிறார்கள். அவை யெல்லாம் அப் போது நிகழ்ந்த பல சம்பவங்களையும் தெளிவாக விளக்குவதுடன் நம் தேச மக்களின் பெருமைக்கும் பெருந்தன்மைக்கும் நோக்கங்களுக்கும் என்றும் அழியாத ஞாபகச் சின்னங்களாக வும் இருந்துவருகின்றன. ஆங்கிலேயர்களுக்கு விரோத மாக அயோத்தி முழுவதும் துவேஷம் பொங்கிக்கொண் டிருந்த சமயத்தில்கூட, புரட்சி இயக்கத்தில் பூரணப் பங்கெடுத்துக் கொண்டு வெள்ளையர்களை எதிர்த்துப் போராடிய ராஜாக்கள் தங்களிடம் சரண் புகுந்தவர்களை அன்புடன் உபசரித்து அவர் களுக்கு எவ்விதத் தீங்கும் நேராமல் காப்பாற்றினார்கள்.

புஷர் என்பவன் தான் பெற்ற அநுபவத்தைப்பற்றி எழுதி இருப்பதைப் பாருங்கள்: 'அப்போது நான் மாத்திரந்தான் பாக்கி இருந்தேன். நான் ஓரிடத்திலும் நிற்காமல் ஓடினேன். கடைசி யாக ஒரு கிராமத்துக்கு வந்து சேர்ந்தேன். ஓடி வந்த களைப்பால்

சோர்ந்து போய், குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று அங்கே தென்பட்ட ஓர் இந்தியரைக் கேட்டேன். என் நிலைமையைப் பார்த்த அவர் என்மீது இரக்கங் கொண்டு தண்ணீர் கொடுத்த துடன், உயிருக்குப் பயப்பட வேண்டாம் என்றும் அந்தக் கிராம வாசிகள் எனக்கு எவ்விதத் துன்பமும் விளைவிக்க மாட்டார் கள் என்றும் கூறினார். என்னை விரட்டிக்கொண்டு வந்த பூல் சிங்கும் அச்சமயம் அங்கே வந்து சேர, நான் மீண்டும் ஓட ஆரம்பித்தேன். அப்போது ஒரு கிழவி அருகில் இருந்த குடிசை யைச் சுட்டிக் காட்டவே அதற்குள் ஓடி, அங்கிருந்த வைக்கோல் போரில் மறைந்துகொண்டேன். சிறிது நேரத்தில் பூல்சிங்கின் ஆட்கள் அங்கே வந்து தங்களுடைய வாட்களின் முனையால் வைக்கோல் போரில் குத்திப் பார்த்தனர். கடைசியில் அவர்கள் என்னைக் கண்டுபிடித்து என் மயிரைப் பிடித்து வெளியே இழுத்தனர். என்னைப் பார்த்ததும் கிராம ஜனங்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களைச் சபிக்கத் தொடங்கினார்கள். பூல் சிங் என்னை வேறோர் இடத்துக்குக் கொண்டு சென்றான். என் னைச் சிரச்சேதம் செய்வது ஒவ்வொரு நாளும் ஒத்திவைக்கப்பட்டு வந்தது. நான் புரட்சிக்காரர்களின் காலில் விழுந்து என் னிடம் இரக்கம் காட்டும்படி வேண்டினேன். கடைசியாக என் னைப் பூல்சிங்கின் வீட்டுக்குக் கொண்டு சென்றார்கள். பிறகு பல நாட்கள் சென்று புரட்சித் தலைவர்கள் எனக்கு யாதோர் இம்சை யும் செய்யாமல் என்னை ஆங்கிலேயர்களின் முகாமுக்கு அனுப்பி விட்டனர்.'

கர்னல் லெனுக்ஸ் எழுதுவதாவது: 'நாங்கள் ஓடிக்கொண் டிருந்தபோது நாஸிம் ஹுசேன் கானின் ஆட்கள் எங்களைப் பிடித்தனர். அவர்களில் ஒருவன் தன் சுழல் துப்பாக்கியை எடுத்து, 'பறங்கியர்களை ஒரே விநாடியில் கொன்றுவிட வேண்டும் என்று என் கை துடிக்கிறது. ஆனால் அவ்விதம் செய் யத் தலைவர் உத்தரவு கிடைக்கவில்லை' என்று மிகுந்த ஆத் திரத்துடன் பற்களைக் கடித்துக்கொண்டு கூறினான். பிறகு எங் களை நாஸிம் இருக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றார்கள். அவர் தம் தர்பாரில் ஒரு திண்டில் சாய்ந்துகொண்டு உட்கார்ந் திருந்தார். கொஞ்சம் ஷர்பத் குடிக்கும்படியும் பயப்படாமல் இருக்கும்படியும் எங்களைக் கேட்டுக்கொண்டார். எங்களை எந்த இடத்தில் கொண்டுபோய் வைப்பது என்ற பிரச்னை எழுந்தபோது ஒரு வேலைக்காரன் கோபத்துடன், ''குதிரை லாயத்தில் கொண்டு போய் வைக்கலாம்'' என்றான். நாஸிம் அவனைக் கடிந்துகொண்ட அதே சமயத்தில், ''ஏன் இந்தக் கஷ்டமெல்லாம்? இந்தப் பறங்கி நாய்களை நான் கொன்றுவிடுகிறேனே'' என்றான் மற்றொருவன். உடனே நாஸிம், ''யாரும் பேசக்கூடாது'' என்று இடி முழக்கம் போல் கர்ஜனை செய்துவிட்டு, எங்கள் எல்லோருக்கும் உயிர்ப் பிச்சை அளிப்பதாக உறுதி கூறினார். கலகக்காரர்களுக்குப் பயந்து நாங்கள் கோஷாப் பெண்களின் அந்தப்புரத்துக்கு அரு கில் ஒளிந்துகொண் டிருந்தோம். எங்களுக்கு வேண்டிய உடை, உணவெல்லாம் கிடைத்தன. பின்னர் நாஸிம் எங்களை இந்தியர் கள் போல் மாறுவேஷம் தரிக்கச் செய்து, பத்திரமாக ஆங்கிலே யர் முகாமுக்கு அனுப்பி வைத்தார்.'

ஆங்கில அதிகாரிகள் பைஜாபாத் நகரை விட்டுச் சென்றவுடனே, அம் மாகாணத்திலுள்ள மற்ற ஜில்லாக்களும் சுதந்தரக் கொடியை ஏற்றிவிட்டன. ஜூன் மாதம் 9-ஆம் தேதி சுல்தான்புரியும், அதற்கு மறுநாள் ஸலோனியும் சுதந்தரம் அடைந்தன. ஸலோனி சுயேச்சை பெற்றதும், அங்கிருந்த ஆங்கில அதிகாரிகள் உயிருக்குப் பயந்து ஓட்டம் எடுத்தார்கள். அவர்களில் சிலரைச் சர்தார் ருஸ்தம்ஷாவும் மற்றும் சிலரை ராஜா ஹநுமந்த சிங்கும் காப்பாற்றினர். தைரியமும் பெருந்தன்மையும் பொருந்திய அயோத்தி மன்னர்கள் சரணடைந்த ஆங்கிலேயர்களின் உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் அபயம் அளித்ததுடன், பல நாட்கள் வரையில் அவர்களைத் தங்களுடைய மாளிகையில் வைத்துப் போஷித்தும் வந்தார்கள். ஆனால் அந்த ஜமீன்தார்கள் எல்லாரும் ஏற்கனவே ஆங்கிலேயர்களால் மகத்தான கஷ்ட நஷ்டங்களுக்கும் அவமதிப்புக்கும் ஆளானவர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

அவர்களுக்கு ஆங்கிலேயர்கள்மீது திடீரென்று அன்பு சுரந்து அவ்வாறு அபயம் அளிக்கவில்லை. தங்களுடைய சுயராஜ்யத்தையும் மதங்களையும் ஆங்கிலேயர்கள் காலால் மிதித்து நசுக்கியதை ஜமீன்தார்கள் மறக்கவும் இல்லை. அவர்கள் தங்களுடைய சிப்பாய்களுடன் வெள்ளையர்களை எதிர்த்துப் பகிரங்கமாகப் போர் புரிந்து வந்தார்கள். ஆங்கிலேயர்களை நாட்டிலிருந்து விரட்டும் வரையில் தாங்கள் வாளா இருக்கப் போவதில்லை என்று அவர்களில் பலர் சபதமும் செய்துகொண் டிருந்தனர். ஆயினும் அவர்களுடைய இருதயத்தில் வீரமும் தேச பக்தியும் சுதந்தர ஆர்வமும் ததும்பியது போலவே, பெருந்தன்மையும் கருணையும் அடைக்கலம் புகும் அரக்கர்களையும் மன்னித்து உயிர்ப்பிச்சை அளிக்கும் உத்தம குணமும் இடம் பெற்றிருந்தன. ஆங்கிலேயர்களின் அட்டூழியங்களால் ஆத்திரம் அடைந்த ஜனங்கள் அவர்கள்மீது வஞ்சம் தீர்ப்பதற்காக அவர்களைப் பலியிட்டு வந்த சமயத்திலும், ஆங்கிலப் பெண்களிடமும் குழந்தைகளிடமும் அன்பும் இரக்கமும் காட்டினர். நேற்று வரையில் கொடுங்கோன்மை செலுத்தித் தங்களைத் துன்புறுத்திய ஆங்கில அதிகாரிகளுக்குக்கூட, அவர்கள் சரணம் என்று வந்தபோது உயிர்ப்பிச்சை அளித்தனர். அதிகாரிகளை உயிருடன் விடுவது விரும்பத்தக்கது அல்லவென்றும் அவர்கள் பின்னால் தங்களையே எதிர்த்துப் போராட வருவார்கள் என்றும் மக்கள் எவ்வளவோ வற்புறுத்திக் கூறியும், புரட்சித் தலைவர்கள் ஆங்கிலேயர்களுக்குக் கருணை காட்டத் தயங்கவில்லை! உயிர்ப்பிச்சை பெற்ற அதிகாரிகள் சுதந்தரப் போரின் பிற்பகுதியில், ஜனங்கள் கூறியதுபோலவே நன்றி மறந்த கொடூரத் துரோகிகளாக மாறிவிட்டனர். மகத்தான புரட்சி மூண்ட சமயத்திலும், இந்தியாவைத் தவிர உலகில் வேறு எந்த நாடு, கொடிய பகைவர்களிடம் இரக்கம் காட்டி அவர்களுக்கு உயிர்ப்பிச்சை அளித்திருக்கிறது?

தம் தேசத்தின் சுதந்தரத்துக்காகப் போர் புரிய வேண்டும் என்பதில் ராஜா ஹநுமந்த சிங் வேறு எவருக்கும் பின்வாங்கிய

வர் அல்ல. அப்படி இருந்தும் அவரது பெருந்தன்மையை விரோதிகளும் பாராட்டி யிருக்கின்றனர். மாலிசன் கூறியிருப் பதைப் பாருங்கள்: 'பெருந்தன்மை பொருந்திய இந்த ராஜ புத்திரர் (ராஜா ஹநுமந்த சிங்), ஆங்கில அதிகாரிகளின் புதிய நில வரி முறையால் தம் சொத்துகளில் பெரும் பகுதியை இழந்து விட்டார். அதிகாரிகள் இழைத்த கொடுமையும் அவமதிப்பும் அவர் மனம் துடிக்கும்படி செய்தன. அப்படி யிருந்தும், தமது வாழ்க்கையையும் சொத்துக்களையும் உரிமைகளையும் பாழ்படுத்தி யவர்கள் அடைக்கலம் என்று வந்தபோது, அந்தத் தீர புருஷர் அவர்கள் இழைத்த கொடுமைகளை யெல்லாம் மறந்து, கஷ்டப் படும் அவர்கள்மீது இரக்கங் கொண்டார். அவர்களுக்கு உதவி புரிந்து, தமது சொந்தக் கோட்டையில் அவர்கள் பத்திரமாக இருக்கவும் இடம் அளித்தார்.

பின்னர் அவர்கள் அவரிடம் விடை பெற்றுச் சென்ற போது, புரட்சியை நசுக்க அவர் உதவி அளிப்பாரென்று நம்புவ தாகக் காப்டன் பாரோ கூறினான். உடனே ஹநுமந்த சிங் கம்பீர மாக நிமிர்ந்து நின்றார். 'சாஹப், உங்கள் தேசத்தினர் இந்த நாட்டிற்குள் புகுந்து, எங்களுடைய மன்னர்களையெல்லாம் விரட்டிவிட்டார்கள். நீங்கள் உங்கள் அதிகாரிகளை இங்கெல்லாம் அனுப்பி ஜமீன்களின் உரிமைப் பத்திரங்களைச் சோதனை செய்யும் படி உத்தரவிட்டீர்கள். தலைமுறை தலைமுறையாக எங்கள் குடும்பம் அநுபவித்துவந்த நிலங்களையெல்லாம் ஒரே நாளில் பறி முதல் செய்துவிட்டீர்கள். அதற்கெல்லாம் நான் உட்பட்டேன். திடீரென்று உங்களுக்குக் கஷ்டகாலம் வந்தது. உங்களால் கொள்ளையிடப்பட்ட என்னிடமே அடைக்கலம் புக வந்தீர்கள்! நான் உங்களுக்குப் பாதுகாப்பு அளித்தேன். ஆனால் இப்போது உங்கள் எல்லோரையும் இந்தத் தேசத்திலிருந்து விரட்ட முயல் வதற்காக என் சிப்பாய்களின் தலைமையில் லக்ஷ்மணபுரிக்குச் செல்லுகிறேன்!' என்று கர்ஜித்தார்.

அயோத்தி ஜனங்களின் இந்தப் பெருந்தன்மை அவர்களு டைய பலவீனத்தைக் காட்டவில்லை. பிரம்மாண்டமான ஒரு யந்திரம் திடீரென்று வேலை செய்ய ஆரம்பிப்பதுபோல் மே மாதம் 31-ஆம் தேதியிலிருந்து ஜூன் முதல் வாரம் முடிவதற்குள் அந்த மாகாணமெங்கும் புரட்சி பொங்கி எழுந்துவிட்டது. அங் குள்ள ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள், ராஜாக்கள், ஆங்கிலேய ரின் கீழிருந்த ஆயிரக்கணக்கான சிப்பாய்கள், காலாட் படை, குதிரைப் படை, பீரங்கிப் படை, அரசாங்க இலாகா சிப்பந்திகள், விவசாயிகள், வியாபாரிகள், மாணவர்கள், ஹிந்துக்கள், முஸ்லிம் கள் முதலிய யாவரும் தேசத்தை விடுவிப்பதற்காக ஏகோபித்து எழுந்தனர். தேசாபிமான வெள்ளத்தில் சொந்த மாச்சரியம், சாதி, மத, பதவி வேற்றுமைகள் எல்லாம் மூழ்கி மறைந்தன. தர்ம யுத்தத்துக்காகப் போர்க்களத்தில் குதிக்கிறோம் என்ற உணர்ச்சியே ஒவ்வொருவருடைய இருதயத்திலும் பெருகியது. பத்து நாட்களில் ஜனங்கள் வாஜித் அலி ஷாவை மீண்டும் சிம்மா சனத்தில் அமரச் செய்தனர். ஜனங்களின் நன்மைக்காகவே வாஜித் அலி ஷாவைச் சிம்மாசனத்தினின்று விலக்குவதாக டல்

ஹௌஸி அடித்த கூத்துக்கு அதே ஜனங்கள் எவ்வளவு அற்புத மாகவும் ராஜதந்திர ரீதியாகவும் பதில் அளித்துவிட்டார்கள்! ஜூன் மாதம் முதல் வாரம் முடிவதற்குள், ஆங்கிலேயரின் கொடியைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து, கொடிய டல்ஹௌஸிக்கு உற்ற பதில் அளிக்காத கிராமம் அயோத்தி மாகாணத்தில் ஒன்றுகூட இல்லை!

அப்போது அயோத்தியின் நிலைமையைப் பிரபல சரித்திர ஆராய்ச்சியாளரான பாரஸ்ட் கீழ்வருமாறு சித்திரிக்கிறார்: 'ஆங்கிலேயர்களின் நிர்வாகம் அயோத்தியில் ஒரு கனவு போலப் பத்தே நாளில் மறைந்துவிட்டது. சிதறுண்டுபோன அந்த அதிகாரத்தின் ஓர் அணுவைக்கூட அங்கே காண முடியவில்லை. துருப்புகள் ஆங்கிலேயர்களை எதிர்த்துக் கலகம் செய்தனர். மக்கள் ஆங்கில அதிகாரத்தை உதறித் தள்ளினர். எனினும் அவர்கள் பழி வாங்கவில்லை. கொடுமை ஏதும் புரியவில்லை. வெகு சிலரைத் தவிரத் தைரியசாலிகளும் கொதிப்படைந்தவர்களுமான மக்கள் யாவரும் தங்களிடம் அடைக்கலம் புகுந்த அந்நியர்களை அன்புடனேயே நடத்தினர். அதிகாரத்தில் இருந்த போது தங்களுக்குப் பல அநீதிகளை இழைத்திருந்தும், வீழ்ச்சியடைந்த அதே எஜமானர்களிடம் அயோத்தி ஜனங்கள் மிகப் பெருந்தன்மையுடனும் கண்ணியமாகவும் நடந்துகொண்டது பெரிதும் போற்றத்தக்கது.'

அநுபவம் வாய்ந்தவர்களும் சூழ்ச்சிக்காரர்களுமான ஆங்கில அதிகாரிகளை அயோத்தி மக்கள் பெருந்தன்மையுடன் விடுதலை செய்திராவிடில், அயோத்தியை ஆங்கிலேயர்கள் மீண்டும் எளிதில் கைப்பற்றியிருக்க முடியாது. ஜூன் 10-ஆம் தேதி அயோத்தி மாகாணம் முழுவதும் சுதந்தரம் பெற்றுவிட்டதால், சிப்பாய்கள், தேசீயத் தொண்டர்கள் யாவரும் லக்ஷ்மணபுரியை நோக்கிப் புறப்பட்டார்கள். அங்கே மறைந்துகொண்டிருந்த ஆங்கில ஆதிகாரத்துக்கு மீண்டும் உயிர் கொடுப்பதற்காக ஹென்ரி லாரென்ஸ் பிரமாதமாக முயன்று வந்தான். மாகாணம் முழுவதையும் இழந்துவிட்டாலும், தலைநகரில் தனக்குள்ள பிடியை அவன் நழுவ விடவில்லை. ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதுபோல், புரட்சி ஏற்படக்கூடும் என்பதை அவன் வெகு காலத்துக்கு முன்பே உணர்ந்து, மச்சி பவனம், 'ரெஸிடென்ஸி' ஆகிய இரண்டு இடங்களையும் கோட்டைபோல் பலப்படுத்தி வைத்திருந்தான்.

மே 31-ஆம் தேதி சிப்பாய்கள் புரட்சியை ஆரம்பித்ததும், சீக்கியர்களும் ஆங்கிலேயர்களும் 'பக்தர்களும்' அடங்கிய பலமான படை ஒன்றை லாரென்ஸ் உருவாக்கினான். பழைய சிப்பாய்கள் அடங்கிய படையில் பாக்கியிருந்தவர்களும் 12-ஆம் தேதிக்கு முன் புரட்சியில் ஈடுபட்டுவிட்டார்கள். அவ்விதம் அவர்கள் கலகம் செய்துவிட்டுச் சென்றதும் ஹென்ரிக்கு ஒருவிதத்தில் மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனெனில் அதன்பின் சிப்பாய்களின் விசுவாசத்தைக் குறித்துச் சந்தேகிக்க வேண்டிய அவசியம் இல்லை அல்லவா? அப்போது அவனிடம் ஆங்கிலத் துருப்புகள் அடங்கிய

வர் அல்ல. அப்படி இருந்தும் அவரது பெருந்தன்மையை விரோதிகளும் பாராட்டி யிருக்கின்றனர். மாலிசன் கூறியிருப் பதைப் பாருங்கள்: 'பெருந்தன்மை பொருந்திய இந்த ராஜ புத்திரர் (ராஜா ஹநுமந்த சிங்), ஆங்கில அதிகாரிகளின் புதிய நில வரி முறையால் தம் சொத்துகளில் பெரும் பகுதியை இழந்து விட்டார். அதிகாரிகள் இழைத்த கொடுமையும் அவமதிப்பும் அவர் மனம் துடிக்கும்படி செய்தன. அப்படி யிருந்தும், தமது வாழ்க்கையையும் சொத்துக்களையும் உரிமைகளையும் பாழ்படுத்தி யவர்கள் அடைக்கலம் என்று வந்தபோது, அந்தத் தீர புருஷர் அவர்கள் இழைத்த கொடுமைகளை யெல்லாம் மறந்து, கஷ்டப் படும் அவர்கள்மீது இரக்கங் கொண்டார். அவர்களுக்கு உதவி புரிந்து, தமது சொந்தக் கோட்டையில் அவர்கள் பத்திரமாக இருக்கவும் இடம் அளித்தார்.

பின்னர் அவர்கள் அவரிடம் விடை பெற்றுச் சென்ற போது, புரட்சியை நசுக்க அவர் உதவி அளிப்பாரென்று நம்புவ தாகக் காப்டன் பாரோ கூறினுன். உடனே ஹநுமந்த சிங் கம்பீர மாக நிமிர்ந்து நின்றூர். 'சாஹப், உங்கள் தேசத்தினர் இந்த நாட்டிற்குள் புகுந்து, எங்களுடைய மன்னர்களையெல்லாம் விரட்டிவிட்டார்கள். நீங்கள் உங்கள் அதிகாரிகளை இங்கெல்லாம் அனுப்பி ஜமீன்களின் உரிமைப் பத்திரங்களைச் சோதனை செய்யும் படி உத்தரவிட்டீர்கள். தலைமுறை தலைமுறையாக எங்கள் குடும்பம் அநுபவித்துவந்த நிலங்களையெல்லாம் ஒரே நாளில் பறி முதல் செய்துவிட்டீர்கள். அதற்கெல்லாம் நான் உட்பட்டேன். திடீரென்று உங்களுக்குக் கஷ்டகாலம் வந்தது. உங்களால் கொள்ளையிடப்பட்ட என்னிடமே அடைக்கலம் புக வந்தீர்கள்! நான் உங்களுக்குப் பாதுகாப்பு அளித்தேன். ஆனுல் இப்போது உங்கள் எல்லோரையும் இந்தத் தேசத்திலிருந்து விரட்ட முயல் வதற்காக என் சிப்பாய்களின் தலைமையில் லக்ஷ்மணபுரிக்குச் செல்லுகிறேன்!' என்று கர்ஜித்தார்.

அயோத்தி ஜனங்களின் இந்தப் பெருந்தன்மை அவர்களு டைய பலவீனத்தைக் காட்டவில்லை. பிரம்மாண்டமான ஒரு யந்திரம் திடீரென்று வேலை செய்ய ஆரம்பிப்பதுபோல் மே மாதம் 31-ஆம் தேதியிலிருந்து ஜூன் முதல் வாரம் முடிவதற்குள் அந்த மாகாணமெங்கும் புரட்சி பொங்கி எழுந்துவிட்டது. அங் குள்ள ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள், ராஜாக்கள், ஆங்கிலேய ரின் கீழிருந்த ஆயிரக்கணக்கான சிப்பாய்கள், காலாட் படை, குதிரைப் படை, பீரங்கிப் படை, அரசாங்க இலாகா சிப்பந்திகள், விவசாயிகள், வியாபாரிகள், மாணவர்கள், ஹிந்துக்கள், முஸ்லிம் கள் முதலிய யாவரும் தேசத்தை விடுவிப்பதற்காக ஏகோபித்து எழுந்தனர். தேசாபிமான வெள்ளத்தில் சொந்த மாச்சரியம், சாதி, மத, பதவி வேற்றுமைகள் எல்லாம் மூழ்கி மறைந்தன. தர்ம யுத்தத்துக்காகப் போர்க்களத்தில் குதிக்கிறேூம் என்ற உணர்ச்சியே ஒவ்வொருவருடைய இருதயத்திலும் பெருகியது. பத்து நாட்களில் ஜனங்கள் வாஜித் அலி ஷாவை மீண்டும் சிம்மா சனத்தில் அமரச் செய்தனர். ஜனங்களின் நன்மைக்காகவே வாஜித் அலி ஷாவைச் சிம்மாசனத்தினின்று விலக்குவதாக டல்

டல்ஹௌஸி அடித்த கூத்துக்கு அதே ஜனங்கள் எவ்வளவு அற்புதமாகவும் ராஜதந்திர ரீதியாகவும் பதில் அளித்துவிட்டார்கள்! ஜூன் மாதம் முதல் வாரம் முடிவதற்குள், ஆங்கிலேயரின் கொடியைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து, கொடிய டல்ஹௌஸிக்கு உற்ற பதில் அளிக்காத கிராமம் அயோத்தி மாகாணத்தில் ஒன்றுகூட இல்லை!

அப்போது அயோத்தியின் நிலைமையைப் பிரபல சரித்திர ஆராய்ச்சியாளரான பாரஸ்ட் கீழ்வருமாறு சித்திரிக்கிறார்: 'ஆங்கிலேயர்களின் நிர்வாகம் அயோத்தியில் ஒரு கனவு போலப் பத்தே நாளில் மறைந்துவிட்டது. சிதறுண்டுபோன அந்த அதிகாரத்தின் ஓர் அணுவைக்கூட அங்கே காண முடியவில்லை. துருப்புகள் ஆங்கிலேயர்களை எதிர்த்துக் கலகம் செய்தனர். மக்கள் ஆங்கில அதிகாரத்தை உதறித் தள்ளினர். எனினும் அவர்கள் பழி வாங்கவில்லை. கொடுமை ஏதும் புரியவில்லை. வெகு சிலரைத் தவிரத் தைரியசாலிகளும் கொதிப்படைந்தவர்களுமான மக்கள் யாவரும் தங்களிடம் அடைக்கலம் புகுந்த அந்நியர்களை அன்புடனேயே நடத்தினர். அதிகாரத்தில் இருந்தபோது தங்களுக்குப் பல அநீதிகளை இழைத்திருந்தும், வீழ்ச்சியடைந்த அதே எஜமானர்களிடம் அயோத்தி ஜனங்கள் மிகப் பெருந்தன்மையுடனும் கண்ணியமாகவும் நடந்துகொண்டது பெரிதும் போற்றத்தக்கது.'

அநுபவம் வாய்ந்தவர்களும் சூழ்ச்சிக்காரர்களுமான ஆங்கில அதிகாரிகளை அயோத்தி மக்கள் பெருந்தன்மையுடன் விடுதலை செய்திராவிடில், அயோத்தியை ஆங்கிலேயர்கள் மீண்டும் எளிதில் கைப்பற்றியிருக்க முடியாது. ஜூன் 10-ஆம் தேதி அயோத்தி மாகாணம் முழுவதும் சுதந்தரம் பெற்றுவிட்டதால், சிப்பாய்கள், தேசீயத் தொண்டர்கள் யாவரும் லக்ஷ்மணபுரியை நோக்கிப் புறப்பட்டார்கள். அங்கே மறைந்துகொண்டிருந்த ஆங்கில ஆதிகாரத்துக்கு மீண்டும் உயிர் கொடுப்பதற்காக ஹென்ரி லாரென்ஸ் பிரமாதமாக முயன்று வந்தான். மாகாணம் முழுவதையும் இழந்துவிட்டாலும், தலைநகரில் தனக்குள்ள பிடியை அவன் நழுவ விடவில்லை. ஏற்கனவே குறிப்பிட்டிருப்பதுபோல், புரட்சி ஏற்படக்கூடும் என்பதை அவன் வெகு காலத்துக்கு முன்பே உணர்ந்து, மச்சி பவனம், 'ரெஸிடென்ஸி' ஆகிய இரண்டு இடங்களையும் கோட்டைபோல் பலப்படுத்தி வைத்திருந்தான்.

மே 31-ஆம் தேதி சிப்பாய்கள் புரட்சியை ஆரம்பித்ததும் சீக்கியர்களும் ஆங்கிலேயர்களும் 'பக்தர்களும்' அடங்கிய பலமான படை ஒன்றை லாரென்ஸ் உருவாக்கினான். பழைய சிப்பாய்கள் அடங்கிய படையில் பாக்கியிருந்தவர்களும் 12-ஆம் தேதிக்கு முன் புரட்சியில் ஈடுபட்டுவிட்டார்கள். அவ்விதம் அவர்கள் கலகம் செய்துவிட்டுச் சென்றதும் ஹென்ரிக்கு ஒருவிதத்தில் மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனெனில் அதன்பின் சிப்பாய்களின் விசுவாசத்தைக் குறித்துச் சந்தேகிக்க வேண்டிய அவசியம் இல்லை அல்லவா? அப்போது அவனிடம் ஆங்கிலத் துருப்புகள் அடங்கிய

ஒரு படை, ஆங்கில பீரங்கிப் படை, மகத்தான சோதனைக் காலங்களிலும் வெள்ளையர்களுக்குத் தங்களுடைய விசுவாசத்தை நிரூபித்துள்ள சீக்கியர்களும் மற்ற இந்தியர்களும் அடங்கிய இரு படைகள் முதலியவை இருந்தன. அந்தப் படைகளைக் கொண்டு போர் புரிய ஹென்ரி உற்ற சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

அயோத்தி மாகாணத்தைச் சேர்ந்த சிப்பாய்களும் இளம் வீரர்களும் லக்ஷ்மணபுரியைச் சுற்றிப் படைகளைச் சேகரித்துத் தங்களுடைய நிலைமையைப் பலப்படுத்திக் கொண்டார்கள். அப்போது கான்பூர் முற்றுகை வெகு உக்கிரமாக நடைபெற்று வந்தது. கான்பூரிலிருந்து இறுதியான செய்தி கிடைக்கும்வரையில் லக்ஷ்மணபுரியில் இருந்த ஆங்கிலேயர்களோ, அந்த நகரைச் சூழ்ந்துகொண்டிருந்த தேசபக்தர்களோ போரை ஆரம்பிக்க விரும்பவில்லை. ஒவ்வொரு கட்சியினரும் கான்பூரில் ஏற்படும் முடிவிலேயே நம்பிக்கை வைத்திருந்தனர்.

'கான்பூர் புரட்சிக்காரர்களிடம் வீழ்ச்சி அடையாவிட்டால், லக்ஷ்மணபுரி அவர்களால் முற்றுகை இடப்படுமா என்பது சந்தேகந்தான்' என்று ஹென்ரி, ஜூன் 23-ஆம் தேதி கானிங்கிற்கு எழுதிய கடிதம் ஒன்றில் நம்பிக்கையுடன் குறிப்பிட்டிருந்தான். இறுதியாகக் கான்பூரில் ஓர் ஆங்கிலேயன்கூட உயிர் தப்பவில்லை என்ற செய்தி 28-ஆம் தேதி லக்ஷ்மணபுரிக்கு எட்டியது! அந்த வெற்றியால் பரவசமடைந்த தேசபக்தர்கள், ஆங்கிலேயர்களைத் தாக்குவதற்காகச் சின்ஹாத் வரையில் முன்னேறிச் சென்றார்கள்.

கான்பூரில் ஆங்கிலேயர்கள் அடைந்த பயங்கரமான படுதோல்வி இந்தியா முழுவதும் அவர்களுடைய மதிப்பைச் சிதைத்துவிட்டது. அந்தத் தோல்விக்குப் பரிகாரமாக ஏதாவது செய்தாலொழிய லக்ஷ்மணபுரியிலுள்ள ரெஸிடென்ஸியை மாத்திரம் அல்ல, கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட்டையைக்கூடப் பாதுகாக்க முடியாது என்று லாரென்ஸ் கருதினான். கான்பூரில் ஏற்பட்ட அவமானத்தை, தேசபக்தர்களின் ரத்தத்தால் துடைப்பதென்று உறுதிகொண்டான்.

அதற்கிணங்க, ஜூன் 29-ஆம் தேதி ஆங்கிலப் படை இரும்புப் பாலத்துக்கு அருகில் கூடியது. பத்துப் பீரங்கிகள், நானூறு ஆங்கிலத் துருப்புகள், துரோகிகளான நானூறு சிப்பாய்கள் இவர்களுடன் ஹென்ரி லக்ஷ்மணபுரியிலிருந்து புறப்பட்டான். வெகுதூரம் செல்லும்வரையில் அவர்களுக்குத் தேசீயப் படைகளின் அறிகுறி எதுவுமே தென்படவில்லை. கடைசியில் தேசபக்தர்களின் முன்னணித் துருப்புகள் இருப்பது அவனுக்குத் தெரிந்தது. உடனே வலது பக்கத்தில் உள்ள மிகவும் முக்கியமான ஒரு கிராமத்தைக் கைப்பற்றும்படி அவன் தன் துருப்புகளுக்கு உத்தரவிட்டான். அவர்கள் அந்தக் கிராமத்தைத் தாக்கி ஆக்கிரமித்துக்கொண்டனர். இடது புறத்தில் உள்ள இஸ்மெயில்கஞ்ஜ் என்ற கிராமத்தையும் ஆங்கிலத் துருப்புகள் கைப்பற்றின. துரோகிகளான இந்தியர்களும் ஆங்கிலேயர்களும் வெகு உக்கிரமாகவும் சரமாரியாகவும் பீரங்கிப் பிரயோகம்

செய்ததில் தேசபக்தர்களின் பீரங்கிகளெல்லாம் சின்னபின்ன மாயின.

அன்று ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள் என்றே தோன்றியது. எனினும் தேசபக்தர்களின் துருப்புகளில் பலர் இடது புறம் இருக்கும் கிராமத்துக்குள் யாருக்கும் தெரியாமல் பின்புறமாகப் பிரவேசித்துத் திடீரென்று மிகவும் உக்கிரமாகத் தாக்கியதால் ஆங்கிலத் துருப்புகள் திக்பிரமை அடைந்து ஓடும் படி நேர்ந்தது. தேசபக்தர்கள் அந்தக் கிராமத்தை ஆக்கிரமித் துக்கொண்டு மேன்மேலும் பகைவர்களைத் தாக்கினர். பின்வாங் கிச் சென்ற பகைவர்களை அவர்கள் இடைவிடாது விரட்டிச் சென்றனர். அதனால் ஆங்கிலத் துருப்புகளிடையே குழப்பம் ஏற்பட்டுவிட்டது. அதற்குமேல் எதிர்த்து நின்றால் தன் படை களெல்லாம் அடியோடு அழிந்துவிடும் என்பதை உணர்ந்த ஹென்ரி, வேகமாகப் பின்வாங்கிச் சென்றுவிடும்படி தன் படை களுக்கு உத்தரவிட்டான்.

அப்போது பகைவர்கள் பட்ட கஷ்டம் அற்ப சொற்பம் அல்ல. ஏனெனில் சின்ஹத்தில் பெற்ற வெற்றியுடன் தேச பக்தர்கள் திருப்தியடையவில்லை; மேலும், பகைவர்களை விரட் டிச் சென்றனர். ஆங்கில பீரங்கிப் படைகளும் சோர்வடைந் தன. எனினும் பின்வாங்கிச் சென்ற பகைவர்களுக்குப் பாது காப்பாகத் துரோகிகளான இந்தியக் குதிரைப்படையும் பீரங்கிப் படையும் போர் புரிந்தன! அதன் விளைவாகத் தேசபக்தர்கள் தங்களுடைய முழுச் சக்தியையும் உபயோகிக்கலாயினர். எனவே பகைவர்கள் இறுதியில் சிதறியோடும்படி நேர்ந்தது. அவர்கள் லக்ஷ்மணபுரியை நோக்கி ஓட ஆரம்பித்தனர். நானூறு ஆங்கிலத் துருப்புகளில் நூற்றைம்பது பேர் அன்றைய யுத் தத்தில் மாண்டனர். இந்தியத் துரோகிகளில் எத்தனை பேர் மாண்டனர் என்பதை நாம் கூறவேண்டிய அவசியமில்லை! ஆங்கிலேயர்கள் நான்கு பெரிய பீரங்கிகளைப் போர்க்களத்தி லேயே விட்டு ஓடிவிட்டார்கள்.

கான்பூரில் தங்களுக்கு ஏற்பட்ட அவமதிப்பை, தேசபக்தர் களின் ரத்த வெள்ளத்தால் துடைத்து ஒழிக்க வேண்டும் என்ற ஹென்ரியின் எண்ணத்தில் மண் விழுந்தது. தோல்வியுற்ற ஹென்ரி, லக்ஷ்மணபுரியிலுள்ள 'ரெஸிடென்ஸி கோட்டை'க்கு மீண்டும் போய்ச் சேர்ந்தான். ஆங்கிலேயர்களும் துரோகிகளும் அந்தக் கோட்டைக்கு வந்து பீரங்கிகளின் பாதுகாப்பை நாடிய பின்புதான் சின்ஹத் போர் முடிவடைந்தது. ஆயினும் அங்கே அவர்கள் அமைதியாக இருந்துகொண்டு மீண்டும் போருக்கான முஸ்தீபுகளைச் செய்ய விடாமல், தேசபக்தர்கள் மச்சி பவனத்தை யும் ரெஸிடென்ஸியையும் சூழ்ந்துகொள்ள ஆரம்பித்தார்கள். ஆகையால், ரெஸிடென்ஸிக் கோட்டையைப் பாதுகாப்பதில் தன் முழுக் கவனத்தையும் செலுத்துவதற்காக ஹென்ரி, மச்சி பவனத்தைக் காலி செய்யத் தீர்மானித்தான்.

அதற்கிணங்க, அங்கிருந்த பெரிய ஆயுதசாலைக்குத் தீ வைக் கப்பட்டது. எல்லா ஆங்கிலேயர்களும் ரெஸிடென்ஸிக்கு வந்து

சேர்ந்தார்கள். ரெஸிடென்ஸியைச் சமாளித்து நிற்பதற்குப் போதிய உணவுப் பொருள்களும், ஆயுதங்களும், வெடி மருந்து களும் அங்கே சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அப்போது அவ்விடத்தில் சுமார் ஆயிரம் ஆங்கிலத் துருப்புகளும் எண்ணூறு இந்தியச் சிப்பாய்களும் இருந்தார்கள். தற்காப்புக்கான ஏற்பாடு களை அவர்கள் எல்லோரும் வெகு மும்முரமாகச் செய்து வந்த னர். ஆங்கிலேயர்களின் பிரமாதமான தற்காப்பு முறைகளைப் பார்த்த தேசபக்தர்களும் மகத்தான முறையில் முற்றுகையை ஆரம்பித்தார்கள். அடிமைத்தனத்தையும் அந்நியர் ஆதிக்கத் தையும் கண்டு ஆத்திரமடைந்த ஆயிரக்கணக்கான தேசீய வீரர் கள் அந்தக் கோட்டையைச் சூழ்ந்துகொண்டார்கள். ஆவேசம் கொண்ட அயோத்தி இவ்வாறாக ஆங்கிலேயர்களை லக்ஷ்மண புரியில் இருந்த ஒரு சிறு கட்டிடத்துக்குள் சிறைப்படுத்தியது!

## 21

## மன்னர்களின் மடமை

ஹிந்துஸ்தானத்தில் அந்நியரின் ஆதிக்கம் இருந்து வரும் வரையில் செத்துப் போன (அந்நியர் ஆதிக்கத்திற்கு உள்ளான) சம்ஸ்தானங்களைப் போல உயிருள்ள (அந்நியர் ஆதிக்கம் ஏற் படாத) சம்ஸ்தானங்களும் பயனற்றவை என்பதை 1857-இல் இந்திய மகாஜனங்கள் சிறிதும் சந்தேகமின்றி அறிந்துகொண் டனர். அந்தப் புனித ஆண்டிலே இந்திய ஜன மகா சமுத்திரம் பொங்கியது. அதன் விளைவாக எழுந்த மகோன்னதமான சுதந் தர அலைகள் வானளாவி அடித்தன. எதற்காக? இந்த மன்ன ருக்காகவோ அல்லது அந்த வாரிசுக்காகவோ அல்ல. தனி நபர் கள், - விவசாயிகளாயினும் சரி, வீர மன்னர்களாயினும் சரி - இருக்கலாம் அல்லது இறக்கலாம். ஆனால் தேசம் இறக்கக் கூடாது; என்றென்றும் இருந்துதான் தீர வேண்டும் அல்லவா?

பயங்கரமான அடிமைச் சங்கிலிகளை உடைத்தெறிந்து தேசத் தின் சுதந்தரத்தை மீண்டும் ஸ்தாபிக்க வேண்டும் என்பதுதான் அப்போது ஹிந்துஸ்தானத்து மக்களின் புனித லட்சியமாக இருந் தது. சீரிய அந்த லட்சியம் நிறைவேறுவதற்காகவே அவ்வம யம் இந்தியா முழுவதும் கொதித்தெழுந்து ஒரு மகா யுத்தத்தை ஆரம்பித்தது. அந்த யுத்தத்தை வெற்றிகரமாக நடத்த, சிறு மண் குடிசைகளும் சிறப்பு வாய்ந்த மாளிகைகளும் சீரிய சிம்மா சனங்களும் சாம்பலாகும்படி நேரினும் தாங்கள் தயங்குவதில்லை என்று இந்திய வீரர்கள் உறுதி கொண்டனர்.

அடிமைத்தனத்திலிருந்தும், அந்நிய ஆதிக்கத்திலிருந்தும் தன் நாட்டை விடுவிப்பவனே மன்னன்; மற்ற மன்னர்கள் எல் லோரும் நடைப்பிணங்களே ஆவர். அடிமை விஷப் புல்லுருவி

களால் தேசத்தின் கற்பக விருக்ஷம் காய்ந்து வருகையில் அந்த மரத்தில் தோன்றும் வாடிய மலரால் என்ன பயன்? மற்ற அழகிய மலர்கள் எல்லாம் புல்லுருவிகளால் பாழாகி விட்டனவே என்ற துயரத்தைத்தான் அந்த வாடிய மலர் கிளறும். அது போலவே அழகிய மலர்களான மண்டலாதிபதிகள் அந்நிய அரக்கர்களால் கசக்கி எறியப்பட்டனர்.

தங்களுடைய சுதந்தரத்தை அறவே இழந்த பிரதேசங்களைப் போலவே, குவாலியர், இந்தூர், ராஜபுதனம், பரதபுரி முதலிய மற்றச் சம்ஸ்தானங்களிலுள்ள ஜனங்களும் புரட்சிப் போரில் ஈடுபடத் துடித்துக்கொண்டிருந்தார்கள். தன் சொந்தச் சம்ஸ்தானம் பத்திரமாக இருக்கிறது என்பதற்காக, கஷ்டங்களிலிருந்தும் ஆபத்துக்களிலிருந்தும் தந்திரமாக ஒதுங்கி நிற்கும் இழிகுணம் அப்போது எவருக்கும் ஏற்படவில்லை. தங்களுடைய சிறிய சம்ஸ்தானந்தான் தேசம் என்ற கண்மூடித்தனமான எண்ணமும் எவருக்கும் இல்லை. அதற்கு மாறாக, நாட்டின் எந்த மூலையில் கஷ்டம் ஏற்பட்டாலும், அதைத் தங்களுக்கு நேர்ந்த கஷ்டமாகவே அவர்கள் கருதினர். ஒரு தாயின் வயிற்றில் பிறந்த புதல்வர்களுக்குள், அவர்கள் வேறு, தாம் வேறு என்ற எண்ணம் எவ்வாறு எழ முடியும்? 1857-இல் அந்த எண்ணம் இந்தியாவில் இல்லை. இந்தியா முழுவதும் ஒன்று, இந்தியாவின் உயிர் ஒன்று, இந்தியாவின் விதி ஒன்று என்றே எல்லோரும் கருதினர்.

ஆனால் இந்தியாவின் துர்ப்பாக்கியம் காரணமாக, இங்கொருவரும் அங்கொருவருமாகச் சில துரோகிகளும் பேடிகளும் இருந்தனர். குவாலியர் மண்டலாதிபதியான சிந்தியாவின் நிலைமை என்ன? வெள்ளையர்களை எதிர்த்துப் போராட உத்தரவு கொடுக்கும்படியும், சுதந்தரப் போரில் தங்களுக்குத் தலைமை வகிக்கும்படியும் மக்கள் சிந்தியாவைக் கேட்டுக் கொண்டனர்.

'சிந்தியாவுக்கு ஜே' என்று கோஷம் செய்தனர். 'ஆங்கிலேயர்கள் ஆக்ராவை இழந்துவிட்டார்கள்; டில்லி விடுதலை பெற்றுவிட்டது; தட்சிணம் பேரிடி முழக்கத்துடன் எழுந்துள்ளது; தேசத்திலிருந்து அந்நியர்கள் விரட்டப்பட்டு வருகிறார்கள்; நாடு விடுதலை பெற்றுவிட்டது; இந்தப் புனித கைங்கரியத்தில் தாங்களும் முக்கியப் பங்கு எடுத்துக் கொள்ளுங்கள்; கோடிக்கணக்கான ஜனங்களின் உயிர் நீங்கள் கூறும் வார்த்தையையே பொறுத்திருக்கிறது; இத்தகைய சந்தர்ப்பம் இதற்கு முன் சரித்திரத்திலேயே ஏற்பட்டதில்லை.' இவ்விதமெல்லாம் ஜனங்கள் கதறினர்.

ஆனால் சிந்தியாவின் வாய் முதலில் அசையவே _ பிறகு அது அசைந்தபோது, 'போர்' என்று கூறுவதற்குப் பதிலாக 'நட்பு' என்று கூறியது! சிந்தியா நட்பையே நாடினார். தமது நாட்டு மக்களின் நட்பை அல்ல, வெள்ளையர்களின் நட்பை நாடினார்! அதைக் கேட்டதும் ஜனங்களுக்கு ஆத்திரம் பொங்கியது. 'ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடச் சிந்தியா விரும்பவில்லையெனில், நாங்கள் போராடுகிறோம். தாய்நாட்டைப்

பாதுகாக்க நீங்கள் செல்லாவிடில், நீங்கள் இன்றியே தாய் நாட்டை விடுவிப்போம்' என்று முழங்கினர் மக்கள்.

அன்று ஜூன் மாதம் 11-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை. சிந்தியாவுக்காகவே ஜனங்கள் அதுவரை காத்திருந்தனர். வண்டிகளில் சென்ற ஆங்கில ராணுவ அதிகாரிகளுக்குச் சிப்பாய்கள் சலாம் செய்யவில்லை. அவர்களைப் பார்த்த குவாலியர் சிப்பாய்கள் சலாம் செய்யாமல் கம்பீரமாக நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். 'ஒரு காகம் அரண்மனைச் சிகரத்தின்மீது உட்கார்ந்தால் அது கழுகு ஆகிவிடுமா? அது போலவே ராணுவ அதிகாரிகள் என்பதற்காகப் பறங்கியர்களுக்குத் தனிப்பெருமை ஏற்பட்டுவிடுமா?' என்றனர் சிப்பாய்கள்!

அன்று சூரியன் மேற்கே மறைந்தபோது, ஒரு பறங்கியரின் பங்களா பற்றி எரிந்தது. புரட்சியை ஆரம்பிக்கலாம் என்பதற்கு அதுதான் சமிக்ஞை! உடனே வெள்ளையர் வேட்டை ஆரம்பமாயிற்று. ஆங்கிலப் பெண்களுக்கு மாத்திரம் தேச பக்தர்கள் உயிர்ப்பிச்சை அளித்தனர். குவாலியரில் ஓர் ஆங்கிலேயர்கூட இருக்கக்கூடாது; சிந்தியா அரண்மனையிலும் ஓர் ஆங்கிலேயர்கூட இருக்கக்கூடாது என்பதே தேசபக்தர்களின் கட்டளை! சிந்தியாவின் ராஜ்யத்திலிருந்து ஆக்ரா வரையில் ஆங்கிலேயர்கள் விரட்டப்பட்டார்கள். வெள்ளைப் பெண்கள் எல்லாரும் சிறையில் வைக்கப்பட்டனர். ஓர் ஆங்கிலப் பெண் வெயிலில் தவித்துக்கொண் டிருந்தாள். ஒரு தேசபக்தர் அவளை அணுகி, 'இங்கு வெயில் மிகவும் கடுமையாக இருக்கிறதோ? பாவம், நீ உன் குளிர்ந்த தேசத்திலேயே இருந்திருந்தால், உனக்கு இந்தக் கஷ்டமெல்லாம் நேர்ந்திராதல்லவா?' என்றார்!

ஆங்கிலேயர்களிடம் நட்புக் கொண்டாட விரும்பிய சிந்தியா எவ்வித அதிகாரமும் அற்ற பொம்மைபோல் ஆனார். அவர் வார்த்தையைக் கேட்பார் யாரும் இல்லை! குவாலியர் சிப்பாய்கள் ஆங்கில அதிகாரிகளைப் பலியிட்டனர்; ஆங்கிலப் பெண்களை அந்த ராஜ்யத்திலிருந்து விரட்டினர்; ஆங்கிலக் கொடிகளைக் கிழித்து எறிந்தனர்; ஆங்கில அதிகாரம் இருந்த இடமே தெரியாமல் செய்துவிட்டனர். சிந்தியாவின் உத்தரவின்றியே இவையெல்லாம் நடந்துவிட்டன!

பின்பு தேசபக்தர்கள் சிந்தியாவுக்கு இவ்வாறு கட்டளையிட்டனர்: 'எங்களுக்குத் தலைவராக இருங்கள்; ஹிந்துஸ்தானத்தை விடுவிப்பதற்காக இங்குள்ள சகல படைகளுடனும், ஆக்ரா, கான்பூர், டில்லி முதலிய இடங்களுக்குப் புறப்படுங்கள்.'

தேசீய வீரர்களை ஏமாற்றுவதற்காக, அவ்விதமே செய்வதாகச் சிந்தியா வாக்களித்தார் எனினும், அதை நிறைவேற்றாது காலங் கடத்தி வந்தார். இறுதியில் தாதியா டோபே ரகசியமாகக் குவாலியருக்கு வந்து தேசீய வீரர்களை நடத்திச் செல்லும்படி ஆயிற்று.

சிந்தியாவின் தடுமாற்றம் காரணமாக, ஆக்ராவில் இருந்த ஆங்கிலேயர்களுக்குச் சிறிது நம்பிக்கை இருந்து வந்தது. எனினும், அவ்வமயம் ஆக்ராவில் இருந்த வடமேற்கு மாகாண கவர்னரான கால்வின், சிப்பாய்கள் எங்கே புரட்சியை ஆரம்பித்துவிடுவார்களோ என்று ஒவ்வொரு நிமிஷமும் நடுங்கிக்கொண்டிருந்ததுடன், மீரத் செய்தியால் உத்வேகம் ஊட்டப்பட்ட சிப்பாய்களுக்கு 'விசுவாச'த்தின்' உயர்வைப்பற்றிப் பிரசங்கம் செய்து அவர்களை ஏமாற்ற முயன்றான். புரட்சியில் கலந்துகொண்டிருப்பதாக ஒப்புக்கொள்ளுவோரை மன்னித்து விடுவதாகவும் பிரகடனம் செய்தான்.

ஆனால் அவனிடம் சென்று மன்னிப்புக் கோரும் பேடி, சிப்பாய்களிடையே ஒருவர்கூட இல்லை. அதற்கு மாறாகச் சிப்பாய்கள் ஜூலை மாதம் 5-ஆம் தேதி புரட்சியை ஆரம்பித்ததன் மூலம் அவனது பிரகடனத்துக்குப் பதில் அளித்துவிட்டார்கள்! அன்று அவர்கள் ஆக்ராவைத் தாக்கினர். புரட்சியில் ஈடுபட்ட நாஸிராபாத், நீமச் படைகளை எதிர்ப்பதற்காகப் பிடவுலி, பரதபுரி சம்ஸ்தானங்களிலிருந்து ஆங்கில விசுவாசிகளான துருப்புகள் அனுப்பப்பட்டனர். ஆங்கிலேயர்களை எதிர்க்கக் கூடாதென்று தங்களுடைய மன்னர்கள் உத்தரவிட்டிருப்பதால், தாங்கள் அதை மீற விரும்பவில்லையென்றும், ஆயினும் தங்களுடைய தேச சகோதரர்களுக்கு எதிராகத் தாங்கள் வாளை உருவ முடியாதென்றும் அந்தச் சம்ஸ்தானங்களின் சிப்பாய்கள் மாத்திரம் அல்ல, மக்களும் கூறிவிட்டார்கள்! இதைக் கேட்ட ஆங்கிலேயர்கள் பெரிதும் ஏமாற்றமடைந்து வருந்தினர்.

பின்னர் பிரிகேடியர் பால்வெல் ஆக்ராவைத் தாக்க வரும் புரட்சி வீரர்களை எதிர்த்துப் போர் புரிவதற்காக ஆங்கிலத் துருப்புகளை மாத்திரம் அழைத்துக்கொண்டு புறப்பட்டான். ஸஸையா என்ற இடத்துக்கு அருகில் இரு துருப்புகளும் சந்தித்தன. அன்று முழுவதும் யுத்தம் நடந்தது. இறுதியில் தேசீய வீரர்களின் எதிர்ப்பைத் தாங்க முடியாமல் ஆங்கிலேயர்கள் பின்வாங்கிச் சென்றனர். வெற்றி பெற்ற உற்சாகத்தினால் தேச பக்தர்கள் பகைவர்களை மேற்கொண்டும் விரட்டிச் சென்றார்கள். ஆங்கிலத் துருப்புகள் ஆக்ராவிற்குள் செல்லவே, தேச பக்தர்களும் வெற்றி கோஷம் செய்துகொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

வெகுகாலமாக ஆக்ரா மக்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்த சந்தர்ப்பம் அன்று, அதாவது ஜூலை 6-ஆம் தேதி கிடைத்தது. போலீசாரின் தலைமையில் நகர ஜனங்கள் எல்லாரும் புரட்சியை ஆரம்பித்தனர்! போலீசாரும், ஹிந்து, முஸ்லிம் மதத் தலைவர்களும் சேர்ந்து, தேசீய வீரர்கள் அடங்கிய பிரம்மாண்டமான ஊர்வலம் நடத்தினர். கொத்தவாலும் மற்றப் போலீஸ் அதிகாரிகளும் ஊர்வலத்தின் முன்னணியில் சென்றார்கள். அவர்களின் வெற்றி கோஷங்கள் வானளாவின. ஆங்கில ஆட்சி முடிவடைந்துவிட்டது என்றும், ஆட்சி அதிகாரம் டில்லிச் சக்கரவர்த்தியிடம் மாற்றப்பட்டிருக்கிறது என்றும் அவர்கள் பிரகடனம் செய்தனர்.

ஆக்ரா விடுதலை அடைந்ததும், கால்வின் மற்ற ஆங்கிலேயர்களுடன் ஆக்ரா கோட்டைக்குள் அடைக்கலம் புகுந்தான். தோல்வி அடைந்ததால் உண்டான வெட்கமும், எதிர்காலத்தைப் பற்றிய கவலையும் அவனை ஒருங்கே வாட்டின. அவனுக்கு அப்போது ஒரு பெரும் பீதி இருந்து வந்தது. சிந்தியா புரட்சிக்காரர்களின் பக்கம் சேர்ந்துவிடுவாரோ என்பதே அந்தப் பீதிக்குக் காரணம். சிந்தியா, புரட்சிக்காரர்களுடன் சேர்ந்துகொண்டுவிட்டார் என்ற செய்தி கிடைத்த மாத்திரத்திலேயே, தகர்க்க முடியாத அந்தக் கோட்டையை விட்டுக் கால்வின் தேசபக்தர்களிடம் சரண் புகுந்திருப்பான். எனினும், சிந்தியா அவனைக் கைவிடவில்லை!

ஆங்கிலேயர்களிடம் தம் விசுவாசத்தைத் தெரிவித்தும், அவர்களுக்கு உதவி புரிவதாயும் அவர் அவனுக்குக் கடிதங்கள் எழுதினார். ஆக்ராவில் செத்துப்போன ஆங்கிலேயரின் கொடிக்கு, அதனால் மீண்டும் உயிர் வருவதுபோல் தோன்றியது. எனினும் கால்வின் மனக்கவலையால் செப்டம்பர் மாதம் 9-ஆம் தேதி மாண்டான். அவன் மரணம் இந்தியாவில் ஆங்கில சர்க்காருக்கு மகத்தான துயரத்தை உண்டுபண்ணியது.

குவாலியரில் ஜனங்களிடையிலும் சிப்பாய்களிடையிலும் பீறிட்டு எழுந்ததுபோலவே, இந்தூரிலும் எல்லோருடைய மனத்திலும் புரட்சி உணர்ச்சி பொங்கி எழுந்தது. எல்லா இடங்களிலும் இருந்த சிப்பாய்களிடையே ரகசியமாகக் கடிதப் போக்குவரத்து நடந்து வந்ததால், இந்தூர் மண்டலாதிபதியான ஹோல்கரின் துருப்புகளும் புரட்சியை ஆரம்பிப்பதென்று தீர்மானித்திருந்தன. இந்தூர் அரண்மனை உத்தியோகஸ்தரும் முஸ்லிம் பிரமுகருமான ஸாதத் கான், ரெஸிடென்ஸியில் இருந்த ஆங்கிலேயர்களைத் தாக்கும்படி ஜூலை 1-ஆம் தேதி துருப்புகளுக்கு உத்தரவிட்டார். ஹோல்கர் மகாராஜாவே தமக்கு அவ்விதம் கட்டளை இட்டிருப்பதாகவும் அவர் அறிவித்தார்.

எனினும், இந்தியத் துருப்புகள் சம்பந்தப்பட்ட வரையில், ஆங்கிலேயர்களை எதிர்த்து எழும்படி யாரும் உத்தரவிட வேண்டிய அவசியமே இல்லை! ஸாதத் கான் அவ்விதம் கூறியவுடனே தேசீய வீரர்கள் சுதந்தரக் கொடியைப் பிடித்துக்கொண்டு பீரங்கிகளுடன் ரெஸிடென்ஸி மீது படையெடுத்தனர். ரெஸிடென்ஸியில் இருந்த இந்தியச் சிப்பாய்களோ, படையெடுத்து வந்த தங்கள் தேச சகோதரர்கள்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ய மறுத்துவிட்டார்கள்! எனவே, ஆங்கிலேயர்கள் அடியோடு நம்பிக்கை இழந்து, தங்களுடைய மூட்டைகளைக் கட்டிக்கொண்டு இந்தூரிலிருந்து ஓட்டம் பிடித்தார்கள். ஆயினும் ரெஸிடென்ஸியில் இருந்த இந்தியச் சிப்பாய்கள் அங்கிருந்த ஆங்கிலேயர்களின் உயிர்களுக்கு உத்தரவாதம் அளித்து, அவர்களுக்கு ஆபத்து ஏதும் ஏற்படாமல் இறுதி வரையில் காப்பாற்றினார்கள்!

ஹோல்கர் மகாராஜா ஆங்கிலேயர்களிடம் அநுதாபம் கொண்டாரா, அல்லது புரட்சி வீரர்களிடம் அநுதாபம் கொண்

டாரா என்பதைக் கண்டுபிடிக்க ஆங்கில நூலாசிரியர்கள் பெரு முயற்சி செய்திருக்கிறார்கள். ஆனால் 1857-ஆம் வருஷத்திய நிலைமையையும் சரித்திரத்தையும் நுணுக்கமாக ஆராய்ச்சி செய்வோர், அப்போது நடந்த சுதந்தரப் போரில் பெரும்பாலான சம்ஸ்தான அதிபதிகளும் வேண்டுமென்றே நிச்சயமற்ற கொள்கையைக் கையாண்டு வந்தனர் என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

மனிதன் பிறக்கும்போதே, அவனுடன் சுதந்தர ஆர்வமும் பிறந்துவிடுகிறது. புரட்சி அநேகமாக வெற்றி அடையக்கூடும் என்று தெரிந்தவுடன் பெரும்பாலான சம்ஸ்தான அதிபதிகளும் சுதந்தரக் கொடியை ஏற்ற உத்தேசித்தனர். புரட்சி, தோல்வியடைவதை விரும்பாததாலேயே, அவர்கள் ஆங்கிலேயர்களுடன் சேரவில்லை. அதே சமயம் அவர்கள் புரட்சிக்காரர்களுக்குத் தீவிரமாக உதவி புரியவும் துணியவில்லை. ஏனெனில், புரட்சிக்காரர்களை எதிர்த்து ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றுவிட்டால், தங்களுடைய சம்ஸ்தானங்களை அவர்கள் பறிமுதல் செய்துவிடுவார்கள் என்று பயந்தே சம்ஸ்தான மன்னர்கள் தேச பக்தர்களுக்கு உறுதியுடன் உதவி புரிய முன்வரவில்லை.

ஆனால் அவர்களின் அத்தகைய விபரீதமான நிலையே, அப்போது ஆங்கிலேயர்கள் வெற்றிபெறக் காரணமாயிற்று. தாங்கள் புரட்சிக்காரர்களுடன் சேர்ந்து, சுதந்தர யுத்தத்தை முழு பலத்துடனும் உறுதியுடனும் நடத்தியிருந்தால் ஆங்கிலேயர்கள் ஒரு காலத்திலும் வெற்றி அடைய முடியாது என்பதையும், தாங்கள் நடுநிலைமை வகிக்கும் பட்சத்தில் தேச பக்தர்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள் என்பதையும் அறிந்துகொள்ளாமல் மடையர்களான மண்டலாதிபதிகள் மதிமோசம் போயினர். முதலாவது சுதந்தர யுத்தத்தின்போது பெரும்பாலான இந்திய மன்னர்களின் தயக்கத்துக்கும் நிச்சயமற்ற நிலைமைக்கும் இதுதான் உண்மையான காரணம்.

மக்களும் துருப்புகளும் ரெஸிடென்ஸியிலிருந்து ஆங்கிலேயர்களை விரட்டியபோது இந்திய மன்னர்கள் அதில் தலையிடவில்லை. அவ்விதம் விரட்டினால் சம்ஸ்தானங்கள் சுதந்தரம் பெற்றுவிடும் என்றே அவர்கள் வாளா இருந்தனர். அதே சமயம் அந்த மண்டலாதிபதிகள், ஆங்கிலேயர்களிடம் தங்களுடைய நட்பையும் தெரிவித்து வந்தார்கள்! ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றால், எங்கே தங்களுடைய ராஜ்யங்களை இழந்துவிட நேருமோ என்பதற்காகவே அவ்விதம் தந்திரமாக நடந்துகொண்டனர். கச், குவாலியர், இந்தூர், புந்தேலா, ராஜபுதனம் முதலிய பல சம்ஸ்தான அதிபதிகளும் அந்த முறையையே பின்பற்றி வந்தார்கள்.

அவர்களின் அத்தகைய சுயநலப் போக்கே இறுதியில் புரட்சி இயக்கத்தின் கழுத்தை நெருக்கி அதைக் கொன்றுவிட்டது. 'விடுதலை அல்லது மரணம்' என்று கோஷம் செய்துகொண்டு அவர்கள் தைரியமாக முன்வந் திருப்பார்களாயின், நிச்சயமாக

வெற்றி கிடைத்திருக்கும். ஆனால் அவர்கள் அற்பத்தனமான சுயநலத்தினால் மதில் மேல் பூனையாக நடந்துகொண்டதே பெரும் அனர்த்தமாக முடிந்தது. அவர்களின் அந்தரங்க நோக்கம் போற்றத்தக்கதாக இருந்தும், கோழைத்தனத்தினால் அவர்கள் மகத்தான ஒரு சந்தர்ப்பத்தை இழந்துவிட்டனர். அவர்களுக்கு அவ்வித நடவடிக்கைகளால் எவ்வித நன்மையும் ஏற்படவில்லை; அதற்கு மாறாக அவர்களின் இழிகுணத்தைத்தான் உலகம் அறிந்துகொண்டது. பாவிகளான பாடியாலா மகாராஜா முதலிய சில மன்னர்களைப்போல் அவர்கள் பட்டவர்த்தனமாகவும், துணிச்சலுடனும் வேண்டுமென்று நாட்டைக் காட்டிக் கொடுக்கவில்லையென்றாலும், அவர்கள் மறைமுகமாகத் துரோகிகள் ஆயினர் என்றே கூற வேண்டும். தாய்நாடு சுதந்தரம் பெற வேண்டும் என்ற உயர்ந்த அபிலாஷை அவர்களுக்கு இருந்துங்கூட, இழிவான சுயநலத்துக்கு அவர்கள் இடங் கொடுத்துவிட்டார்கள். அந்த மகா பாவத்திற்கு அவர்கள் பரிகாரம் செய்வது எக்காலமோ?

தேசீய வீரர்களை எதிர்த்துப் போராடும்படி ஆங்கிலேயரின் பக்தர்களான ஜயபுர், ஜோத்புர் ராஜாக்கள் கட்டளையிட்ட போதும் தங்கள் தேச சகோதரர்களில் ஒருவரைக்கூடத் தாக்க மாட்டோம் என்று அவர்களின் சிப்பாய்கள் கண்டிப்பாக மறுத்து விட்டனர். இந்திய மன்னர்களின் இருதயத்தைத்தான் பாழும் சுயநலம் ஆட்கொண்டதே அன்றி, இந்தியச் சிப்பாய்களையும் மகா ஜனங்களையும் அது அணுகவும் முடியவில்லை. தேசம் முழுவதும் பரவியிருந்த அடிமைத்தனமாகிய சாபக்கேட்டை அடியோடு துடைத்து ஒழிப்பதற்காக அவர்கள் வீறுகொண்டு எழுந்தனர். பிஷாவரிலிருந்து கல்கத்தா வரையில் ஆங்கில அதிகாரத்தைச் சின்னபின்னமாக்கினர். அவர்களுடைய ஒற்றுமையினாலும் பலத்தினாலும் சுயநலமற்ற யுத்தத்தினாலுமே இந்தியாவில் ஆங்கிலேயரின் அதிகாரம் சிறிது காலமாவது மண்ணோடு மண்ணாக மறைந்தது.

## 22

## எரிமலை வெடித்தது

இந்தப் பயங்கரமான பூகம்பத்தின் தன்மையை அப்போது கல்கத்தாவில் இருந்த ஆங்கிலேயர்களோ இங்கிலாந்தில் உள்ளவர்களோ உணரவில்லை. மீரத் புரட்சிக்கு முன் எங்கும் பூரண அமைதி நிலவி வந்ததென்றும், எனவே அந்தப் புரட்சி திடீரென்று ஏற்பட்ட கொந்தளிப்பு என்றும் ஆங்கில அரசாங்கம் கருதியது. மீரத் புரட்சிக்குப் பின் டில்லியிலிருந்து சுதந்தரப் பிரகடனம் வெளியான போதுங்கூட, கல்கத்தாவிலுள்ள ஆங்கில



மேஜர் ஜெனரல் ஸர் ஹெர்பெர்ட் பி. எட்வர்ட்ஸ்



லெப்டினென்ட் ஜெனரல் ஸர் ஜேம்ஸ் அவுட் ராம்

அதிகார வர்க்கம் அதன் உண்மையான பொருளை அறிந்து கொள்ள முடியவில்லை. மே மாதம் 10-ஆம் தேதியிலிருந்து 30-ஆம் தேதி வரையில் எவ்விதக் கொந்தளிப்பும் இல்லாததால், இந்தியாவில் தாங்கள் கவலைப்படக் காரணம் எதுவும் இல்லை என்று அதிகார வர்க்கம் திருப்தியடைந்தது. 'கல் கத்தாவிலிருந்து அறுநூறு மைல் சுற்றளவுக்கு எங்கும் பூரண அமைதி நிலவி வருகிறது. தாற்காலிகமாக ஏற்பட்ட ஆபத்துத் தீர்ந்துவிட்டது. இன்னும் சில நாட்களில் முற்றும் அமைதியும் பாதுகாப்பும் ஏற்பட்டுவிடும்' என்று மே 25-ஆம் தேதி பிரிட்டிஷ் உள்நாட்டு மந்திரி பார்லிமென்டில் பகிரங்கமாகக் கூறினார்.

அவர் கூறியபடி 'சில நாட்கள்' சென்றன. மே 31-ஆம் தேதி கதிரவன் உதயமானான். எங்கும் 'அமைதியும் பாதுகாப்பும்' தாண்டவமாடின! லக்ஷ்மணபுரி ரெஸிடென்ஸி கோட்டையைச் சுற்றியும், கான்பூர் மைதானத்திலும், ஜான்ஸியிலுள்ள ஜோகன் பாக்கிலும், அலாகாபாத் கடைத் தெருக்களிலும், காசிக் கட்டங் களிலும், எங்கும் 'அமைதி' நிலவியது! தந்திக் கம்பிகள் அறுத் தெறியப்பட்டன; ரெயில் பாதைகளும் இரும்புப் பாலங்களும் தகர்க்கப்பட்டன; ஆறுகளில் ஆங்கிலேயர்களின் பிணங்கள் மிதந்தன; தெருக்களில் ரத்த வெள்ளம் ஓடியது;—இவ்விதமாக எங்கும் 'அமைதியும் பாதுகாப்பும்' ஏற்பட்டன!

கல்கத்தாவிலுள்ள அதிகார வர்க்கத்தின் கண்களை மறைத் திருந்த மூடுபனி அதன் பின்புதான் விலகியது! அங்கிருந்த எல்லா ஆங்கிலேயர்களும் ஜூன் 12-ஆம் தேதி தொண்டர் படை ஒன்றை அமைக்க ஆரம்பித்தார்கள். ஆங்கில வியாபாரிகள், குமாஸ்தாக்கள், உத்தியோகஸ்தர்கள் முதலிய யாவரும் அவசர அவசரமாக ராணுவ ஜாபிதாவில் பதிவு செய்துகொள்ளப்பட்ட னர். அவர்களுக்கு உடற் பயிற்சியும் துப்பாக்கிப் பயிற்சியும் அளிக்கப்பட்டன. அங்கே வெகு துரிதமாக அலுவல்கள் நடை பெற்றனவாதலால், மூன்று வாரங்களில், புதிதாகப் பயிற்சி பெற்ற தொண்டர்கள் அடங்கிய படைப் பிரிவொன்று உருவாகி விட்டது. அதில் குதிரைப் படைகள், காலாட் படைகள், பீரங் கிப் படைகள் முதலியனவும் இருந்தன. அவர்களால் கல்கத் தாவைப் பாதுகாக்க முடியுமென்று கருதப்பட்டதால், அந்தப் பொறுப்பை அவர்களிடம் ஒப்பித்தனர். எனவே புரட்சி வெகு கடுமையாக மூண்டுள்ள இடங்களுக்கு அநுபவம் பெற்ற சிறந்த துருப்புகளை அனுப்புவது சர்க்காரால் சாத்தியமாயிற்று.

ஜூன் 13-ஆம் தேதியன்று கானிங் பிரபு சட்ட சபையைக் கூட்டிப் பத்திரிகைகளுக்கு எதிராக ஒரு சட்டம் நிறைவேற்ற ஏற்பாடு செய்தான். ஏனெனில், புரட்சி ஆரம்பமானவுடன், வங்காளத்தில் இருந்த இந்தியப் பத்திரிகைகளெல்லாம் தேச பக் தர்களிடம் அநுதாபம் காட்டியும், அவர்களுக்கு உற்சாகம் அளித் தும் பல கட்டுரைகள் எழுதின.

14-ஆம் தேதி கல்கத்தாவில் 'அமைதி' விழாக் கொண்டாடப் பட்டது. அன்றைக் காட்சிகளை ஓர் ஆங்கில சரித்திராசிரியர் இவ்வாறு வர்ணித்துள்ளார்:' நகர் எங்கும் திகிலும் ஒழுங்கீனமும்

குழப்பமும் கலக்கமும் தாண்டவமாடின. எங்கும் ஆதார மற்ற வதந்திகள் நிலவின. பாரக்புரி படைகள் கல்கத்தா மீது படையெடுத்து வருகின்றன; சுற்று வட்டமுள்ள ஜனங்கள் எல்லாரும் புரட்சியை ஆரம்பித்துவிட்டார்கள்; அயோத்தி மன்னர், தம் கோஷ்டியினருடன் ஆங்கிலேயர்களின் கஜானுக்களைக் கொள்ளையிட்டு வருகிறார்;—இவ்வாறாக எழுந்த பற்பல வதந்திகளையும் கேட்டு, முதலில் உயர்தர அதிகாரிகள் ஓட ஆரம்பித்தனர். சட்ட சபை அங்கத்தினர்கள் எல்லோரும் தங்களுடைய துப்பாக்கிகளில் தோட்டாக்களை நிரப்பிக்கொண்டு, தங்கள் வீடு வாசல்களையெல்லாம் விட்டுக் கப்பலில் ஏறுவதற்காக ஓடினர். அவர்களுடைய உதாரணத்தைப் பின்பற்றிக் கீழ்த்தர அதிகாரிகளும் தங்களிடம் இருந்த விலையுயர்ந்த சாமான்களையெல்லாம் அவசர அவசரமாக மூட்டை கட்டிக்கொண்டு கோட்டைக்கு ஓடினர். திகிலடைந்த ஆங்கிலேயர்கள் குதிரைகள், வண்டிகள், பல்லக்குகள் முதலிய பல்வேறு வாகனங்களிலும் ஏறிக்கொண்டு கண்ணுக்குத் தெரியாத புரட்சிக்காரர்களின் கையில் அகப்படாமல் ஓட முயன்றனர்! சுற்று வட்டங்களிலுள்ள ஒரு வீட்டிலாவது ஆங்கிலேயர்கள் இல்லை. அன்று அரை டஜன் புரட்சிக்காரர்கள் மனம் வைத்திருந்தாலும் நகரில் பெரும் பகுதியையும் எரித்துச் சாம்பலாக்கி இருக்க முடியும்.'

ஆங்கில அரசாங்கத்தின் தலைநகரில் வெறும் திண்ணை வதந்திகளால் இவ்வளவு 'அலங்கோலம் ஏற்பட்டது! அது வெறும் வதந்தி என்று தெரிந்துங்கூட, ஆங்கிலேயர்கள் பாரக்புரிச் சிப்பாய்களையும் அயோத்தி நவாபையும் ஒழித்துவிடத் தீர்மானித்தனர். சிப்பாய்கள் 14-ஆம் தேதி புரட்சியை ஆரம்பிக்கப் போகிறார்கள் என்று வெள்ளையர்களுக்குத் தகவல் கிடைத்ததால், உடனே அவர்களையெல்லாம் ஆங்கிலப் பீரங்கிப் படையின் முன்னிலையில் கொண்டு வந்து நிராயுதபாணிகள் ஆக்கிவிட்டனர். 'ராஜ்யத்தின் பாதுகாப்புக்காக' ஆங்கிலேயர்கள் அயோத்தி நவாபையும் அவரது மந்திரியையும் 15-ஆம் தேதியன்று கைது செய்தார்கள். அந்தப்புரம் உட்பட அவர்களுடைய வீடுகள் முற்றும் பரிசோதனை செய்யப்பட்டன. அவர்கள்மீது சந்தேகப்படக் கூடிய எதுவும் அங்கிருந்து அகப்படவில்லை. எனினும், ஆங்கிலேயர்கள் அவ்விருவரையும் கல்கத்தாக் கோட்டையில் சிறைப்படுத்தினர். கல்கத்தாவில் சேகரமாகி வந்த மருந்துக் குவியல், தீப் பொறி தெறிப்பதற்குச் சற்று முன்பு, அவ்வாறு காலி செய்யப்பட்டுவிட்டது.

அயோத்தி நவாபின் மந்திரியான அலி நக்ஹி கான் கல்கத்தாவிலுள்ள ஒரு தோட்ட வீட்டில் மிகவும் சாதுவாக வசித்து வந்தார். எனினும் வங்காளம் முழுவதும் ரகசியப் புரட்சி இயக்க மாளிகையை நிர்மாணித்தவரும், தம் எஜமானரை மீண்டும் சிம்மாசனத்தில் ஏற்றுவதற்காக ஆங்கிலேயர்களை அடக்கியொடுக்கப் பயங்கரமான வலையைப் பின்னி வந்தவரும் அவர்தாம். கல்கத்தாக் கோட்டையில் அவர் சிறைப்பட்டதால், புரட்சி இயக்கம் தன் தலைவரை இழந்தது. கோட்டையில் இருந்த ஆங்கிலேயர்கள் புரட்சிக்காரர்களைத் தூஷித்துச் சபித்துக்கொண்

டிருந்தபோது, அங்கிருந்த அலி நக்ஹி கான் நிர்ப்பயமாகத் தமது மனத்தில் உள்ளதை அவர்களிடம் கூறலானார்: 'இந்தியாவில் உருவாகியுள்ள இந்தப் புரட்சி மிகவும் தர்ம நியாயமானதாகும். அயோத்தியை நீங்கள் கைப்பற்றிக்கொண்டதற்காக இந்தியர்கள் உங்கள்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள முயல்வதில் தவறென்ன? யாராலும் ஆட்சேபிக்க முடியாத நீதி மார்க்கத்தை நீங்கள் விட்டு, வஞ்சனையும் துரோகமும் சுயநலமும் நிறைந்த முள்பாதையில் பிரவேசித்திருக்கிறீர்கள். இந்த நிலைமையில் உங்களுடைய கால்களில் முட்கள் கிழித்து ரத்தம் பெருகுவதில் ஆச்சரியம் என்ன? வஞ்ச விதைகளை நீங்கள் விதைத்தபோது சிரித்துக்கொண் டிருந்தீர்கள். அதே விதைகள் இப்போது வளர்ந்து பயனைக் கொடுக்க ஆரம்பித்திருக்கின்றன. இந்த நிலையில் நீங்கள் மக்கள்மீது ஏன் குற்றம் சாட்டுகிறீர்கள்?'

புரட்சி இயக்கத்தின் தன்மையையும் பலத்தையும் கல்கத்தாவில் இருந்த ஆங்கில அதிகாரிகளே அறிந்துகொள்ளவில்லை. அப்படியிருக்க, இந்தியாவிலிருந்து செல்லும் கடிதங்களின்மூலம் இங்குள்ள நிலைமையை நிர்ணயிக்க வேண்டிய இங்கிலாந்து, முதலில் பெரும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாலும், பின்னால் திடீரென்று கேட்ட இடி முழக்கத்தினால் திகிலடைந்து வெறி கொண்டவனைப்போல் நடந்துகொண்டதில் ஆச்சரியம் எதுவுமில்லை. பாரக்புரி, பர்ஹாம்பூர், தம்தம் முதலிய இடங்களிலிருந்து புரட்சிபற்றிய செய்திகள் இங்கிலாந்துக்கு வந்ததும், எல்லாருடைய கவனமும் இந்தியாவை நோக்கிச் சென்றது. எனினும், அதி சீக்கிரத்தில் அமைதி ஏற்பட்டுவிட்டது; இனிக் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை என்று எல்லாரும் கருதினார்கள்.

ஜூன் 11-ஆம் தேதி பார்லிமென்டில் எழுந்த ஒரு கேள்விக்குப் பிரிட்டிஷ் வர்த்தக மந்திரி அளித்த பதிலில், 'சில நாட்களுக்கு முன் வங்காளத்தில் ஏற்பட்ட அமைதியின்மை சம்பந்தமாக இனிக் கவலைக்கு இடமில்லை. ஏனெனில், ராணுவத்தில் விதைக்கப்பட்டிருந்த புரட்சி விதைகள், கௌரவமும் மதிப்பும் வாய்ந்த என் நண்பரான லார்டு கானிங்கின் திறமையினாலும் உறுதியினாலும் சிறிதும் தாமதமின்றி வேருடன் பறித்தெறியப் பட்டன' என்று பெருமையுடன் குறிப்பிட்டார்.

பார்லிமென்டில் அவர் அவ்வாறு கூறிய அதே தினத்தில் இந்தியாவில் மொத்தம் குதிரைப் படைகளின் பதினொரு பிரிவுகளும், பீரங்கிப் படைகளின் ஐந்து பிரிவுகளும், காலாட்படைகளின் ஐம்பது பிரிவுகளும், மற்றும் ஏராளமான துருப்புகளும் பிரமாதமான புரட்சியை ஆரம்பித்துவிட்டன. அன்று அயோத்தி முழுவதும் தேச பக்தர்களின் வசம் இருந்தது. கான்பூரும் லக்ஷ்மணபுரியும் முற்றுகையிடப்பட்டன. சர்க்கார் கஜானாக்களிலிருந்து தேசீய வீரர்கள் ஒரு கோடி ரூபாய்க்குமேல் கைப்பற்றினர். 'கானிங் தன் திறமையினாலும் உறுதியினாலும் புரட்சி விதைகளை வேருடன் பறித்து எறிந்த' பின்னர் இந்தியாவில் அவ்விதமெல்லாம் நிகழ்ந்துகொண் டிருந்தன!

புரட்சி விதைகள் மீண்டும் திடீரென்று முளைத்துவிட்டன என்ற செய்தி மறுபடியும் இங்கிலாந்தின் தூக்கத்தைக் கலைத்தது. கான்பூரில் ஆங்கிலேயர்கள் எல்லாரும் பலியான செய்தி எப்படியோ 14-ஆம் தேதி இங்கிலாந்துக்கு எட்டியது. அதைக் கேட்ட பிரிட்டிஷ் மக்கள் பரபரப்பும் திகிலும் அடைந்ததன் விளைவாக, ‘கான்பூரைப்பற்றி நிலவும் வதந்தி உண்மையா?’ என்று லார்டு சபையில் ஓர் அங்கத்தினர் கேள்வி கேட்டார். அதற்கு எர்ல் கிரான்வில் அளித்த பதில் இதுதான்: ‘கான்பூரில் ஆங்கிலேயர்கள் பலியிடப்பட்டனர் என்ற வதந்தி கலப்பற்ற பொய் என்றும், அது கீழ்த்தரமான விஷமிகளின் ஜோடனை என்றும் ஜெனரல் பாட்ரிக் கிராண்டிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் கிடைத்திருக்கிறது. அந்த வதந்தியைக் கிளப்பிவிட்ட சிப்பாயை அதிகாரிகள் கைது செய்து தூக்கில் இட்டுவிட்டார்கள்.’

இந்தப் பதில் இங்கிலாந்து ஜனங்களுக்குத் திருப்தியை அளித்தது. அவர்கள் மீண்டும் தூங்க ஆரம்பித்தனர். ஆனால் சில நாட்களில், கான்பூர் நிகழ்ச்சிகளைப்பற்றிய உண்மைகள் மனிதர்களின் வடிவில் இங்கிலாந்துக் கடற்கரையில் வந்து இறங்கின! அந்த உண்மைகளைக் கேட்டதும் இங்கிலாந்து முழுவதும் கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் வெறி கொண்டது. தங்களுடைய கௌரவம் சிதைந்துவிட்டதாகப் பிரிட்டிஷ் மக்கள் துடித்தனர். இங்கிலாந்தில் அன்று ஆரம்பமான வெறி நடனம் நீண்ட நாட்கள் வரையில் ஓயவில்லை. கான்பூரில் புரட்சிக்காரர்கள் வெள்ளையர்களைக் கொன்றது கொடுமையிலும் கொடுமை என்றும், ராக்ஷசத்தனமானது என்றும், மானிட வர்க்கத்தின் நற்பெயருக்கே அது களங்கம் என்றும் இங்கிலாந்து சரித்திரங்கள் இன்றும் பிரமாதமாகக் கூக்குரலிட்டு வருகின்றன.

ஆனால், இந்தியாவில் உண்மையான கொடியர்கள் யார்? உண்மையான ராக்ஷசர்கள் யார்? புனித மானிட வர்க்கத்துக்கே என்றென்றும் களங்கமாக இருந்து வருவோர் யார்? அன்றும் இன்றும் நிர்க்கதியான மக்களை ரத்த வெறி பிடித்துப் படுகொலை செய்து வருவோர் யார்? இதையெல்லாம் உலகம் அறிந்துகொள்ளாமற் போகுமா?

அன்றும் இன்றும் புரட்சிக்காரர்கள் நிரபராதிகளை எதுவும் செய்யவில்லை. கண்ணினும் இனிய சுதந்தரத்தை அபகரித்து, தங்கள் தேசத்தையே அடிமைத்தனத்தில் ஆழ்த்திய ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகவே மக்கள் கொதித்தெழுந்தனர். தங்களுடைய தேசத் துரோகிகளின்மீதும், மதத் துரோகிகளின்மீதும் வஞ்சம் தீர்க்க முற்பட்டனரே யன்றி, ரத்த வெறி பிடித்துப் பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் எல்லாரையும் பலியிட

ஆட்சியில் செங்கோல், கொடுங்கோல் என்று இருப்பது போல் புரட்சியிலும் நீதியானதென்றும் அநீதியானதென்றும் உண்டு. அடிமைத்தனம், அந்நியர் ஆட்சி, கொடுங்கோல் இந்த மூன்று விஷப்பூண்டுகளையும் நாட்டிலிருந்து அறவே களைந்தெறிய இந்திய தேச பக்தர்கள் முற்றும் நீதியை அடிப்படை

யாகக் கொண்ட புரட்சியை, அதாவது சுதந்தரப் போரை ஆரம்பித்தனர். அநீதியை ஒழித்து நீதியை மூலாதாரமாகக் கொண்ட ஒரு சகாப்தத்தை ஏற்படுத்தப் புரட்சி, ரத்தக் களரி, வஞ்சம் முதலியன இயற்கையால் சிருஷ்டிக்கப்பட்ட கருவிகளாகும். நீதி தேவதை, தன்னைப் பாதுகாத்துக்கொள்ளு வதற்காக அந்தப் பயங்கரமான கருவிகளை உபயோகிக்கும் போது, நீதி தேவதையைக் குறை கூறுவது மடமை அல்லவா?

ஆனால் அவ்விதம் நேருவதற்குக் கொடிய அநீதி அசுரனே காரணமாவான். கொலையாளிக்கு மரண தண்டனை விதிக்கும் நீதியைக் குறை கூற முடியுமா? அவன் தூக்குமேடை செல்லு வதற்கு அவன் புரிந்த அநீதியே பொறுப்பல்லவா? ஸீஸரைக் கொன்ற புரூடஸின் வாள் புனிதமானது! அநீதியை ஒழித்த சிவாஜி யின் வாள் புனிதமானது! இத்தாலியப் புரட்சியில் ஓடிய ரத்த வெள்ளம் அதற்கு நல்ல புகழையே தேடிக் கொடுத்தது! முதலா வது சார்லஸ் மன்னரைச் சிரச்சேதம் செய்தது நியாயமானதே! கொடிய அநீதி புரிந்தவர்கள் பலியிடப்பட்டால், அதற்கு அவர் கள் செய்த பாவந்தான் பொறுப்பேயன்றி அவர்களைப் பலியிட்ட நீதி பொறுப்பல்ல.

மற்றும் புரட்சி, ரத்தக் களரி, வஞ்சம் முதலியன ஏற்படும் என்ற பீதி உலகில் இல்லாவிட்டால், அடக்க முடியாத கொள்ளை, கொடுங்கோன்மை முதலியவற்றின் பைசாச தாண்டவம் உலகையே ஆட்கொண்டுவிடும்! என்றைக்காவது இயற்கை தம் மீது வஞ்சம் தீர்க்கும் என்ற பீதி, கொடுங்கோலர்களுக்கு இல்லா விட்டால், உலகில் சத்தியத்துக்கும் செங்கோலுக்கும் இடம் இராது! ஒவ்வொரு ஹிரண்யகசிபுவுக்கும் ஒரு நரசிம்மன் அவ தரித்தே தீருவார்! ஒவ்வொரு துச்சாதனனையும் ஒழிக்க இயற்கைத் தேவி ஒரு பீமசேனனைச் சிருஷ்டித்தே தீருவாள்! கொடியர்கள் என்றைக்காவது வஞ்சம் தீர்க்கப்படுவார்கள் என்பது நிச்சயம்! அநீதி என்றைக்காவது தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வது நிச்சயம்! நிரந்தரமான இந்த உண்மை தான், உலகில் அநீதி நிலைக்காது என்ற நம்பிக்கையை என்றென் றும் நிலைத்திருக்கச் செய்கிறது.

அத்தகைய தெய்விகமான வஞ்ச உணர்ச்சித் தீயே, 1857-இல் பாரத மாதாவின் புதல்வர்கள் எல்லாருடைய இருதயத்தி லும் எரிந்துகொண் டிருந்தது. அவர்களுடைய சிம்மாசனங்கள் உடைத்தெறியப்பட்டன; அவர்களுடைய கிரீடங்கள் தகர்க்கப் பட்டுத் தூளாயின; அவர்களுடைய நாடு அபகரிக்கப்பட்டது; மதங்கள் அந்நியர்களின் கால்களால் மிதியுண்டன; நிலங்கள் பறிமுதலாயின; சொத்துக்கள் கொள்ளையிடப்பட்டன; நீதியை யும் தர்மத்தையும் ஆதாரமாகக் கொண்ட அவர்களின் சட்டங் கள் வெறுத்துத் தள்ளப்பட்டன; அவர்களுக்கு அளிக்கப்பட்ட உறுதி மொழிகள் மீறப்பட்டன; அவர்கள் சகிக்க முடியாத அவமதிப்புகளுக்கும் அநியாயங்களுக்கும் கொடுமைகளுக்கும் ஆளாயினர்; தங்களுடைய கௌரவம் சீர்குலைந்து விட்டதால், வாழ்க்கையையே வெறுத்தனர்; அவர்களுடைய வேண்டுகோள்

கள், விண்ணப்பங்கள், புகார்கள், பிரலாபங்கள், கூக்குரல்கள் எல்லாம் செவிடன் காதில் சங்கு ஊதியது போல் வீணுயின.

எனவே கொடுங்கோலின் விளைவாக 'வஞ்சம்' 'வஞ்சம்' என்ற முணுமுணுப்பு எங்கும் கேட்கத் தொடங்கியது இயற்கையே. தனக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளில் ஒன்றே ஒன்றுக்காக இந்தியா வஞ்சம் தீர்த்திருந்தாலுங்கூட அது நியாயமானதாகவே கருதப்படும். இந்தியாவோ எண்ணிக்கையற்ற கொடுமைகளுக்கு உள்ளாகி வந்திருக்கிறது. அதற்குப் பின்னருங்கூட இந்தியாவில் புரட்சி உண்டாகாதிருந்திருக்குமாயின், இந்தியா செத்துவிட்டது என்றே நாம் கூற வேண்டியிருக்கும். ஆகையால், இந்தியா தீர்த்த வஞ்சம், அநீதி, கொடுங்கோன்மை முதலியவற்றின் தவிர்க்க முடியாத விளைவே ஆகும். அநீதிகளையும் அட்டூழியங்களையும் அழித்து ஒழிப்பதற்காக ஆவேசங் கொண்டு எழுந்த ஒரு தேசம் முழுவதும் ஒவ்வோரிடத்திலும் இரக்கமற்ற படுகொலைகளில் ஈடுபடாததுதான் ஆச்சரியமே அன்றி, இரண்டோர் இடங்களில் மட்டும் பலிகள் நடந்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

ஏனெனில், முற்றும் நீதிக்கு விரோதமான பலாத்காரத்தை, பலாத்காரத்திஞல்தான் அடக்கி ஒடுக்க வேண்டும். அவ்விதமே ஒடுக்க இந்திய மகா ஜனங்கள் எழுந்தது முற்றும் நியாயமேயாகும். காளி நதி யுத்தத்தில் கைது செய்யப்பட்ட இந்தியச் சிப்பாய்கள் தூக்குமேடை ஏறியபோது, 'எங்களுடைய பெண்களையும் குழந்தைகளையுங்கூட நீங்கள் ஏன் கொன்றீர்கள்?' என்று அவர்களை ஆங்கில அதிகாரிகள் கேட்டனர். உடனே அந்தச் சிப்பாய்கள் ஒரே வாக்காக அவர்களுக்கு அளித்த பதில் இதுதான்: 'கருநாகத்தைக் கொல்லுவோர் அதன் குட்டிகளை உயிருடன் விடுவார்களா?'

மூர் ஜாதியினரிடமிருந்து ஸ்பானியர்கள் தங்கள் சுயேச்சையை மீண்டும் பெற்றபோது, அவர்கள் (மூர் ஜாதியினர்) எக்கதிக்கு ஆளாயினர்? ஸ்பானியர்கள் இந்தியர்களும் அல்ல, ஆசியர்களும் அல்ல. சற்று ஏறக்குறைய ஐந்து நூற்றாண்டுகளாக ஸ்பெயினில் வாழ்ந்துவந்த மூர் ஜாதியினரை-ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் உட்பட அவர்களுடைய குடும்பங்களை-ஸ்பானியர்கள் ஏன் பூண்டோடு வேரறுத்தனர்? ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளுமாக இருபத்தோராயிரம் துருக்கி விவசாயிகளை, 1821-ஆம் ஆண்டில் கிரீஸ் நாட்டினர் ஏன் படுகொலை செய்தனர்? 'கிரீஸிலுள்ள துருக்கி ஜனத்தொகை குறைவானதால், அதை இந்த நாட்டிலேயே வைத்திருப்பதற்கில்லை. எனினும், அத்தனை பேர்களையும் வெளியேற்றுவது என்பதும் சாத்தியம் அல்லவாதலின், அவர்கள் எல்லாரையும் கொன்றுவிடுவதுதான் அவசியமான, புத்திசாலித்தனமான முறையாகும்!' என்று அதற்குக் கிரீஸ் நாட்டினர் சமாதானம் கூறிவிடவில்லையா?

'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையின் பிரபல நிருபரான டபிள்யூ. ரஸ்ஸெல் கூறியிருப்பதாவது: 'கான்பூரில் நிகழ்ந்த

வற்றைக் காட்டிலும் மிகக் கொடூரமான செயல்களும் அத்து மீறிய காரியங்களும், சித்திரவதைகளும் மத்திய கால ஐரோப்பிய சரித்திரத்தில் மலிந்து கிடக்கின்றன. நாகரிகம் முதிர்ச்சி பெற்றுள்ள நவீன காலத்திலும் மிகுந்த நாகரிகம் வாய்ந்த நாடுகளில் அவை போன்ற சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. கான்பூரில் நடந்த படுகொலைகள் அடிமைத்தனத்தில் ஆழ்ந்த ஒரு சமூகத்தினரால் புரியப்பட்டவை. அது மத, வர்ணப் பிரச்னைகளையும், வஞ்ச நோக்கத்தையும், நம்பிக்கையையும், அந்நிய ஆதிக்கத்தை உதறித் தள்ளி, சுதேச மன்னர்களையும் சுதேச மதங்களையும் மீண்டும் ஸ்தாபிக்க வேண்டும் என்ற உறுதியையும் அடிப்படையாகக் கொண்ட ஓர் யுத்தமாகும்.'

ஒவ்வொரு தேசத்தின் வாழ்விலும் அநீதிகள் சகிக்க முடியாத ஒரு நிலையை அடையும்போது, மானிடரின் மனத்தில் வஞ்ச உணர்ச்சி அடக்க முடியாதவாறு பொங்கிப் பீரிடுவதும், அதன் விளைவாகப் படுகொலைகளும் பாதகங்களும் நடைபெறுவதும் இயல்பு என்பதைச் சரித்திரம் நிரூபிக்கின்றது. எனினும் இந்தியாவில் மகத்தான புரட்சி ஏற்பட்டபோது, நான்கு அல்லது ஐந்து இடங்களைத் தவிர வேறு எந்த இடத்திலும் கொடிய பகைவர்கள்மீது ஜனங்கள் வஞ்சம் தீர்க்க முற்படாததுதான் ஆச்சரியம். ஆங்கிலேயர்களின் கொடிய அடக்கு முறைத் தீ ஹிந்துஸ்தானத்தின் எலும்பையே உருக்கிவிட்டது. அப்படி இருந்தும் ஹிந்துஸ்தானம் அவர்களுக்கு உற்ற தண்டனை விதிக்காமல் அவர்கள்மீது இரக்கம் காட்டியது.

கிராம்வெலின் தலைமையில் இங்கிலாந்து, அயர்லாந்தில் புரிந்த படுகொலைகளுடன் ஒப்பிடும்போது, இந்தியாவில் ஆங்கிலேயர்கள் பலியிடப்பட்ட சம்பவம் ஒரு கொசுக்கடிக்கே ஒப்பாகும். ஐரிஷ் மக்களின் மகத்தான தேச பக்தி காரணமாக அவர்கள்மீது கிராம்வெல் எவ்வளவு ஆத்திரம் கொண்டான்? அங்கே சுதந்தரப் போருக்கு எழுந்தவர்களை மாத்திரம் அல்ல, நிர்க்கதியான, நிரபராதிகளான, வறுமையால் வாடிய பரம ஏழைகளான ஜனங்களையும் அவனது வாள் எவ்வாறு கண்ட துண்டங்களாக வெட்டி வீழ்த்தியது? துர்ப்பாக்கியமான அந்த நாட்டில் எவ்வாறு ரத்த ஆறுகள் ஓடின? பச்சைக் குழந்தைகளுடன் தாய்மார்கள் எவ்வாறு சித்திரவதை செய்யப்பட்டார்கள்? அயர்லாந்தை வென்று அதை அடிபணியும்படி செய்வதற்காகக் கிராம்வெல் இன்னும் எத்தனை எத்தனை கொடுமைகளையெல்லாம் செய்தான்? இதையெல்லாம் சரித்திரம் விவரமாகப் பதிவு செய்திருக்கின்றது.

1857-ஆம் ஆண்டில் இந்தியாவில் நடந்த தர்மநியாயமான புரட்சியிலோ, நானா சாஹிபும் அயோத்தி பேகமும் பகதூர் ஷாவும் லக்ஷ்மிபாயும் சிப்பாய்கள் மிகுந்த ஆத்திரத்துடன் இருந்துங்கூட, இறுதி வரையில் ஆங்கிலப் பெண்களையும் குழந்தைகளையும் பாதுகாக்கவே முயன்றனர். ஆனால் கான்பூரில் எந்த ஆங்கிலப் பெண்களை நானா சாஹிப் காப்பாற்றினரோ, அதே ஆங்கிலப் பெண்கள்தாம் பின்னர் ஒற்றர்களாக இருந்து அவ

ருக்கு விரோதமாகச் சதி செய்தார்கள். ஆங்கில அதிகாரிகள் தங்களுக்கு உயிர்ப்பிச்சை அளித்த இந்தியர்களிடம் நன்றி காட்டிய விதம் எப்படி? இந்தியர்கள் தங்கள்மீது கொடிய வஞ்சம் தீர்த்ததாகப் பொய்க் கதைகளை ஜோடித்து ஆங்கிலத் துருப்புகளின் மனத்தில் விஷத்தைப் புகுத்தி ஆத்திரம் ஏற்படும்படி செய்தும், இந்தியர்கள்மீது படையெடுத்தும், அவர்களைத் துரோகம் செய்தும், தங்களுக்கு உயிர்ப்பிச்சை அளித்தவர்களையே சித்திரவதை செய்தும் தங்களுடைய 'நன்றி'யைக் காட்டியதாகச் சரித்திரம் வெட்கத்துடன் குறிப்பிட்டிருக்கிறது.

ஆங்கிலேயர்களின் நன்றி கெட்ட தன்மைகூட இந்தியர்களின் பிறவிக் குணமான பெருந்தன்மையை மறைக்காததுதான் மிகமிக விசித்திரமாகும். தேச ஆவேசங் கொண்ட சிப்பாய்களால் வேட்டையாடப்பட்ட எத்தனை ஆங்கிலேயர்களை, ஏழை விவசாயிகள் தங்கள் வீடுகளில் இடம் கொடுத்து உயிர் தப்பும்படி செய்தனர்? எத்தனை ஆங்கிலப் பெண்களையும் குழந்தைகளையும் இந்தியக் கிராமவாசிகளான பெண்கள் தங்கள் கையால் உணவு, பால் முதலியன கொடுத்துக் காப்பாற்றினர்? இரவு பகலாக ஓடியதால், களைத்து ரஸ்தா ஓரத்தில் குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்த எத்தனை ஆங்கில இளைஞர்கள் இந்தியர்களால் காப்பாற்றிப் போஷிக்கப்பட்டனர்? இதை எல்லாம் விவரமாக அறிந்துகொள்ள வேண்டுமாயின், பாரஸ்ட் எழுதியுள்ள சரித்திரத்தைப் படித்துப் பாருங்கள்!

அயோத்தியின் சரீரத்தில் கொடுங்கோன்மையாகிற கத்தி சிறிதும் இரக்கமின்றிப் பாய்ச்சப்பட்டிருந்துங்கூட, ஆங்கிலேயர்கள் எவ்விதப் பாதுகாப்புமின்றி உயிருக்குப் பயந்து ஓடிய போது, அயோத்தி மக்கள் அவர்களை இணையற்ற பெருந்தன்மையுடன் நடத்தினார்கள் என்பதை, பாரஸ்ட் ஒப்புக் கொண்டிருக்கிறார். 'தாய்நாட்டைப் பாழ்படுத்திய வெள்ளையர்களை வஞ்சம் தீர்க்காது விடோம்!' என்று சிப்பாய்கள் துடித்த போது, குழந்தைகளையும் பெண்களையும் பலியிட்டால் தங்கள் புனித லட்சியம் வெற்றி பெறாது என்று புரட்சித் தலைவர்கள் பல இடங்களிலும் அடிக்கடி பிரகடனங்கள் விடுத்துச் சிப்பாய்களை எச்சரித்து வரவில்லையா? நீமச், நாஸிராபாத் 'கலகக்காரர்கள்', ஆங்கிலேயர்களுக்கு உயிர்ப் பிச்சை அளிக்கவில்லையா?

ஓர் இடத்தில் சில வெள்ளையர்கள் உயிருக்குப் பயந்து ஓடியபோது, 'பறங்கியர்களைக் கொல்லுங்கள்' என்று சிலர் கோஷம் செய்தனர். அப்போது ஓர் இந்தியக் குடும்பத்தினர் முன்வந்து, 'அவர்கள் இரக்கமற்ற பகைவர்களாயினும், ஓடும் அவர்களைக் கொல்லுவது ராஜபுத்திர வீரர்களுக்கு அழகல்ல' என்று கூறவில்லையா? இயற்கையாக மிருகங்களிடத்தில்கூட அன்பும் கருணையும் காட்டும் இந்தியர்களில் சிலர், 1857-இல் ஆவேசங்கொண்டு வெள்ளையர்களைப் பலியிட்டார்களெனில், ஆங்கில ஆட்சி எவ்வளவு பயங்கரமாகவும் கொடுமையாகவும் இருந்திருக்க வேண்டும் என்பது தெரியவில்லையா?

மற்றும் இந்தியர்கள் புரிந்ததாகக் கூறப்படும் 'குற்றங்களை' ஒட்டித் தீர்ப்புக் கூறும் உரிமை இவ்வுலகில் யாருக்கு இருக்கிறது? ஆங்கிலேயர்களுக்கா? இந்தப் பரந்த உலகில் இந்தியப் புரட்சி வீரர்களைப்பற்றி வாய் திறக்கவும் யோக்கியதையற்றவர்கள் ஆங்கிலேயர்கள்தாம். கொடிய ராக்ஷசனுன நீலனை உற்பத்தி செய்த இங்கிலாந்து, பெண்களும் குழந்தைகளும் அடங்கிய ஏராளமான கிராமங்களையே அடியோடு சாம்பலாக்கிய இங்கிலாந்து, தேசபக்தி கொண்ட பாவத்திற்காகப் பாண்டேயைப் போன்ற இளம் வீர சிங்கங்களைத் தூக்கில் இட்ட இங்கிலாந்து, நிரபராதிகளைத் தூக்கில் இட்டதுடன் நில்லாமல் தேச பக்தர்களும் மத பக்தர்களுமான களங்கமற்ற ஜனங்களின் வாய்களில் பசுக்களின் மாமிசத்தையும் பன்றிகளின் மாமிசத்தையும் துப்பாக்கி ஈட்டிகளால் குத்தித் திணித்த படுபாவிகளை உற்பத்தி செய்த இங்கிலாந்து, பரூகாபாத் நவாபைத் தூக்கில் இடுவதற்கு முன் அவர் தேகம் முழுவதும் பன்றியின் கொழுப்பைப் பூசும்படி உத்தரவிட்ட வெறியர்கள் அடங்கிய இங்கிலாந்து, இஸ்லாம் மத பக்தர்களைப் பன்றியின் தோலால் சுற்றிக் கொன்ற இங்கிலாந்து, இந்திய தேசபக்தர்கள்மீது குற்றங்கள் சாட்டித் தீர்ப்புக் கூறுவதா?

அப்போது தங்களுடைய நாடு பட்ட பாட்டைக் கண்டு உள்ளம் உருகாத இந்தியர் உண்டா? தங்கள் தாய், கொடுங்கோன்மையால் அல்லல் உறுவதைக் கண்டு ஆவேசங்கொண்ட இந்தியர்கள்; ஹிந்து - முஸ்லிம், பண்டிதர் - மௌல்வி, அரசன் - ஆண்டி, சிப்பாய் - போலீஸ்காரர், நகரவாசி - கிராமவாசி, வியாபாரி - விவசாயி முதலிய எவ்விதப் பாகுபாடும், சாதி, மத வேற்றுமையும் இன்றி வெள்ளை அரக்கர்மீது வஞ்சம் தீர்க்க உறுதி கொண்டனர். அந்நியர் ஆதிக்கத்தால் பயனடைந்த இந்திய அதிகாரிகள்கூடத் தேச பக்தர்களின் பக்கம் சேர்ந்தார்கள் எனில், ஆங்கிலேயர்களுடைய கொடுங்கோன்மையின் தன்மையை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்.

உள்ளூறக் குமுறிக்கொண்டிருந்த எரிமலை அதனுலேயே பயங்கரமாக வெடிக்கும் தறுவாய்க்கு வந்தது. எரிமலையோ வெளித் தோற்றத்துக்கு அமைதியாகவும் பசுமையாகவும் மிருதுவாகவும் இருந்தது! கொடுங்கோன்மையாகிய அரக்கன், எல்லாம் அமைதியாக இருக்கிறது என்ற திருப்தியுடன் அதன் மீது உட்கார்ந்திருந்தான். அவ்வளவுதான்! உற்ற சமயம் வந்தது. எரிமலை மின்னலையும் பயங்கரமான ஜ்வாலைகளையும் இடி முழக்கத்துடன் கக்கத் தொடங்கியது. அக்கினி ஊற்றுக்கள் பொங்கி வழிந்தன! பூமியில் ரத்த மாரி பெய்தது! பட்டாக் கத்திகள் உராய்ந்தன. அந்தச் சப்தத்துடன் காதைத் துளைக்கும் பிரலாபங்களும் கலந்தன! வீரர்கள் கர்ஜனை புரிந்தனர்! எரிமலையிலிருந்து ஆயிரம் இடங்களில் பீறிட்டுக்கொண்டு கிளம்பிய அக்கினி ஜ்வாலை ஆகாயம் அளாவியது!

காட்டியாவாடிலுள்ள சில இடங்களில் 'விதாரு' என்ற விசித்திரமான ஓர் ஓடை இருக்கிறது. அதன் மேற்பக்கம் கெட்

டித்த மணற்பாங்கான இடமாகத் தோன்றும். அதை அறியாத அயலூர்வாசிகள் அதன்மீது நடக்க ஆரம்பிப்பார்கள். மேலே இருக்கும் மணல் சிறிது அகலும். காலடி வைத்தவர் ஊன்றி நடக்க ஆரம்பித்தவுடனே மிகவும் ஆழமான தண்ணீருக்குள் மூழ்கிவிடுவர்! இதைப்போலவே புரட்சி ஓடை இந்தியா முழுவதும் பரவியிருந்தது. அதை வெறும் மணற்பாங்கான இடமென்று நினைத்துக் கொடுங்கோன்மை அரக்கன் அதன்மீது திமிருடன் காலடி வைத்தான். அவ்வளவுதான்! எரிமலை வெடித்து அதிலிருந்து ஊழித் தீயும், உதிர அலைகளும் பீரிட்டுக்கொண்டு பொங்கி எழுந்தன.

## 23

## டில்லி யுத்தம்

டில்லிமாநகர், 1857-ஆம் ஆண்டு மே மாதம் 11-ஆம் தேதி சுதந்தரப் பிரகடனம் செய்தபின், தேச பக்தர்களின் மகத்தான துணிச்சலால் ஏற்பட்ட சண்டமாருதத்தைக் கட்டுக் கோப்பான ஒரு புரட்சியாக உருவாக்குவதில் மும்முரமாக ஈடுபட்டது. டில்லி சக்கரவர்த்தியான பகதூர் ஷாவை மீண்டும் சிம்மாசனத்தில் ஏற்றியதன் மூலம் டில்லி நகர வாசிகள் தங்களுடைய சக்தியை, அதாவது தேசத்தின் விடுதலைக்காகப் போராடி வெற்றி பெறுவதில் தங்களுக்குள்ள ஆற்றலை வெளியிட்டனர். பகதூர் ஷா சிம்மாசனம் ஏறியதன் மூலம் புராதன மொகலாய ஆட்சி ஸ்தாபிக்கப்படவில்லை. ஹிந்துக்கள், முஸ்லிம்கள் எல்லாரும் ஒப்புக்கொள்ளக்கூடிய சுயாட்சியே ஸ்தாபிக்கப் பெற்றது. மொகலாய ஆட்சி ஏற்பட்டிருக்குமாயின், பிருதுவி ராஜன் மரணம் அடைந்ததிலிருந்து ஔரங்கசீப் மரணம் அடைந்தது வரையில் இடைவிடாது நடந்து வந்த போராட்டம் வீணாகியிருக்கும். நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டுகள் வரையில் ஹிந்து வீரர்கள் வடித்த இரத்த வெள்ளமும் பயனற்றதாகியிருக்கும். பகதூர் ஷா மீண்டும் டில்லி சிம்மாசனத்தில் ஸ்தாபிக்கப் பெற்றதன் மூலம் அந்நியரின் ஆதிக்கமும் அடிமை வாழ்வும் ஒழிந்து சுயாட்சி உருவாயிற்றேயன்றி, குறிப்பிட்ட எந்தப் பிரிவினருடைய ஆட்சியும் ஆதிக்கமும் ஏற்பட்டு விட

பகதூர் ஷா சிம்மாசனம் ஏறியது, ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் நீண்ட காலமாக இருந்து வந்த போராட்டம் தீர்ந்துவிட்டது என்பதையும் காட்டியது. இரு சமூகத்தினரும் சேர்ந்தே ஏகமனதாக அவரை மன்னர் பதவிக்குத் தேர்ந்தெடுத்தனர். டில்லிச் சக்கரவர்த்திக்குத் தங்கள் வணக்கத்தையும் விசுவாசத்தையும் தெரிவித்து, பற்பல ராஜாக்களிடமிருந்

தும், பல படைப் பிரிவுகளிடமிருந்தும், பல முக்கிய நகரங்களி லிருந்தும் செய்திகள் வந்து குவிந்தன.

பாஞ்சாலம், அயோத்தி, நீமச், ரோஹில்கண்ட் முதலிய மற்றும் பல இடங்களிலும் புரட்சியை ஆரம்பித்த படைகள் தேசீயக் கொடிகளுடனும் விருதுகளுடனும் டில்லிக்கு வந்து பெரியாரான பகதூர் ஷாவைப் புரட்சியின் தலைவராக ஒப்புக் கொண்டு, அவர் இட்ட கட்டளைகளை நிறைவேற்றத் தயாராக இருப்பதாகவும் அறிவித்தன. பல இடங்களிலிருந்தும் வந்த துருப்பினர், தாங்கள் வெள்ளையர்களின் கஜானாக்களிலிருந்து கைப்பற்றிய பொக்கிஷங்களை யெல்லாம் பகதூர் ஷாவினிடம் கொண்டு வந்து ஒப்பித்தார்கள். அந்நியரின் ஆட்சியும் ஆதிக்கமும் ஒழிந்து, நாடு முழுவதும் விடுதலையும் சுதந்தரமும் பெற்று விட்டதாக ஹிந்துஸ்தானம் எங்கும் பிரகடனம் செய்யப்பட்டது.

அயோத்தியிலும் டில்லியிலும் பல்வேறு சமயங்களில் விடுக்கப்பட்ட பிரகடனங்களின் சாரம் இதுதான்: 'இப்போது ஆரம்பிக்கப்பட்டுள்ள புரட்சி எதிர்காலத்தில் நிச்சயம் வெற்றிபெறுவதற்கான அறிகுறிகள் புலப்படுகின்றன. ஆகையால், அது பூரண வெற்றி பெறும்படி செய்வதற்காக இந்திய மக்கள் யாவரும் ஒரே மனிதர்போல எழ வேண்டும். சகலரும் சுயநலத்தை அறவே மறந்து, ஆத்துமார்த்த உத்தேசத்துடனும், தெய்விகமான ஒரு கடமையைச் செய்கிறோம் என்ற உணர்ச்சியுடனும் இந்தப் போரில் ஈடுபட வேண்டும். தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக மாத்திரமே இந்தப் போர் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது என்ற உண்மையைத் தவிர, நாங்கள் ஜனங்களுக்கு ஆசை வார்த்தை எதுவும் கூற முடியாது. இறைவனால் மனோபலமும் உறுதியும் அளிக்கப்பட்டுள்ள சகலரும் சொத்தின்மீதோ உயிரின்மீதோ பாசம் வைக்காமல் உயர்ந்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக எங்களுடன் சேர்ந்துகொள்ளுவார்களாக! பொதுநலத்திற்காக ஜனங்கள் தங்களுடைய சுயநலத்தைத் தியாகம் செய்வார்களாயின், ஆங்கிலேயர்களை நம் நாட்டிலிருந்து அறவே ஒழித்துவிடலாம். உலகில் தன் விதி முடியாமல் எவரும் இறப்பதில்லை. யாராயினும், அவருக்கு மரண காலம் வந்துவிட்டால், பின்னால் அவரை யாரும் எதுவும் காப்பாற்ற முடியாது. வாந்திபேதி முதலிய பல நோய்களுக்கும் ஆயிரக்கணக்கானவர்கள் இரையாகிறார்கள். ஆனால் தர்ம யுத்தத்தில் கொல்லப்படுவோர் தியாகிகள் என்ற கீர்த்தியுடன் வீர சுவர்க்கம் அடைவர். இந்தியாவில் உள்ள ஒவ்வோர் ஆங்கிலேயனையும் கொல்லுவதோ, இந்தியாவிலிருந்து அவனை விரட்டுவதோ ஒவ்வோர் ஆடவரும் பெண்ணும் செய்யவேண்டிய கடமையாகும். சுதந்தரத்தையும் மதத்தையும் பாதுகாக்க எழுவோர் இந்த உலகத்திலுங்கூடச் சுகத்தை அடைகின்றார்கள். எனினும், எங்களுடன் இந்தத் தர்ம யுத்தத்தில் ஈடுபடுவோர் உலக சம்பந்தமான அற்ப ஆசைகளை யெல்லாம் விட்டு, மத சம்பந்தமான கடமை என்ற உத்வேகத்துடன் முன்வர வேண்டும்.'

அவ்வமயம் டில்லி சக்கரவர்த்தியால் விடுக்கப்பட்ட ஒரு பிரகடனம் இந்தியாவெங்கும் விளம்பரப்படுத்தப்பட்டது.

அதன் விவரமாவது: 'எல்லா ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இதனால் அறிவிக்கப்படுவது என்னவெனில், மத சம்பந்தமான கடமையைச் செய்து தீர வேண்டும் என்பதற்காகவே நாம் ஜனங்களுடன் சேர்ந்துகொண்டு போருக்கு எழுந்துள்ளோம். இந்த நெருக்கடியான சமயத்தில் கோழைகளாக நடந்துகொள்வோருக்கும், ஆங்கில மோசக்காரர்களிடம் நம்பிக்கை வைப்போருக்கும் லக்ஷ்மணபுரி மண்டலாதிபதிகளுக்குக் கிடைத்த வெகுமதிதான் கிடைக்கும்! அவர்களிடம் நம்பிக்கை வைத்த அந்த மண்டலாதிபதிகள் மோசம் போனதுபோலவே மற்றவர்களும் மோசம் போகும்படி நேரும். ஆகையால், எல்லா ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இந்தப் போராட்டத்தில் ஒற்றுமையுடன் ஈடுபட்டுத் தலைவர்களின் கட்டளைகளைப் பின்பற்றுவதன் மூலம் தாங்கள் சீரும் சிறப்பும் அடையலாம்! நாட்டில் அமைதி ஏற்பட்டு ஏழைகளுக்கும் நன்மை உண்டாகும்.'

ஆங்கிலேயர்களின்மீது யுத்தப் பிரகடனம் செய்தவுடனே டில்லியிலுள்ள தேச பக்தர்கள் போரைத் தொடர்ந்து நடத்துவதற்கு அவசியமான ஆயுதங்களையும், வெடி மருந்துகளையும் உற்பத்தி செய்யத் தொடங்கிவிட்டனர். பீரங்கிகள், பெரிய துப்பாக்கிகள், சிறிய துப்பாக்கிகள் முதலியன உற்பத்தி செய்யக்கூடிய பெரும் தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. அவற்றின் உற்பத்தியை மேற்பார்வை இடுவதற்காகச் சில பிரெஞ்சுக்காரர்கள் நியமிக்கப் பெற்றனர். இரண்டு மூன்று பெரிய மருந்துச் சாலைகளும் திறக்கப்பட்டன. தொழிலாளர்கள் இராப்பகலாக வேலை செய்து, மணங்குக் கணக்கில் வெடி மருந்தைத் தயாரித்தனர். ஹிந்துக்களிடம் தங்களுடைய சகோதரப் பான்மையைத் தெரிவித்துக்கொள்ளுவதற்காக, தேசத்தில் ஓரிடத்தில்கூடப் பசுவதை செய்யக் கூடாது என்று பொதுவான உத்தரவொன்று பிறப்பிக்கப்பட்டது. வயோதிகரான சக்கரவர்த்தி யானைமேல் ஏறிக்கொண்டு உயர்தர அதிகாரிகளுடன் நகர் முழுவதும் ஊர்வலம் சென்று அந்த உத்தரவைப் பிரகடனம் செய்தார். பசுவதை செய்வோருக்கு மரண தண்டனை உள்படக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்படுமென்றும் பறை சாற்றப்பட்டது. பல்வேறு படைப் பிரிவுகளுக்கு, டில்லியை ஆட்சி புரிந்த பல்வேறு மன்னர்களின் பெயர்கள் இடப்பட்டன.

பத்லீ - கீ - ஸராய் போருக்குப் பின் ஆங்கில அதிகாரிகள் ஆக்கிரமித்துக்கொண்ட இடம், அவர்களின் ராணுவ நடவடிக்கைகளுக்கு மிகவும் தகுதியாக இருந்தது. நீண்ட தூரம் வரையில் அணைபோல் அமைந்திருந்த குன்றுகளில் அவர்கள் தங்களுடைய நிலையைப் பலப்படுத்திக்கொண் டிருந்தனர். ஓர் இடத்தில் அவை டில்லி அரண்களின் ஓரத்தைத் தொட்டுக் கொண் டிருந்தன. அந்தக் குன்றுகள் நான்கு மைல்களுக்கு அப்பால் உள்ள யமுனைவரையில் பரந்திருந்தன. அவற்றின் உயரமும் ராணுவ ரீதியாக ஆங்கிலேயர்களுக்கு மிகவும் வசதியாகியது. அந்த 'அணை' சுற்றுவட்டமுள்ள எல்லா இடங்களையும்விட ஐம்பது அல்லது அறுபது அடி உயரம் இருந்ததால், அவற்றின் மீது

பீரங்கிகளை அமைத்து இடைவிடாது சுடுவதும் ஆங்கிலேயர் களுக்குச் சாத்தியமாயிற்று.

போதாக்குறைக்கு, அவர்களுககுப் பின்புறமாக இருந்த அகண்ட யமுனையும் பெரும் பாதுகாப்பாக அமைந்தது. பெருமழையால் ஜூன் மாதத்தில்கூட அதில் பூரணப் பிரவாகம் இருந்துவந்தது. எனினும், டில்லியிலிருந்து இந்தியச் சிப்பாய்கள் தாக்கியது போல், பாஞ்சாலச் சிப்பாய்களும் யமுனைக்கு அப்பால் வந்து ஆங்கிலத் துருப்புகளைப் பின்புறமாகத் தாக்கியிருப்பார் களாயின், ஆங்கிலேயர்களின் நிலைமை அதோகதியாக முடிந் திருக்கும். ஆனல் பாஞ்சாலத்திலிருந்து வரும் எல்லா வழிகளை யும் பாதுகாத்ததன் மூலம் நாபா, ஜிந்த், பாடியாலா ராஜாக்கள் ஆங்கிலேயர்களுக்கு மகத்தான தொண்டும் உதவியும் செய்த னர்! அதன் பயனுக உணவுப் பொருள்கள், ஆட்கள், ஆயுதங் கள், வெடி மருந்துகள் முதலியன பாஞ்சாலத்திலிருந்து ஆங்கி லேயர்களின் முகாமுக்கு இடைவிடாமல் வருவது சாத்தியமா யிற்று.

துர்ப்பாக்கிய இந்தியாவுக்கு இடையூருக அமைந்த அந்த நிலைமை ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த நன்மையாகியது. அவர் களுக்குப் பாதுகாப்பாக உயர்ந்தும் தாழ்ந்தும் உள்ள குன்றுகள், அவர்களுக்குப் பின்புறமாக, பீரங்கிப் பிரயோக எல்லைக்கு அப்பால் படைகள் யாவும் முகாம் அமைத்துக்கொள்ளுவதற்குற்ற சமவெளி, தேசபக்தர்களுடைய ஒற்றர்களுக்குத் தெரியாமல் மறைந்துகொண் டிருப்பதற்குற்ற வசதியான இடம், அருகில் என்றும் வற்ருமல் ஓடும் ஜீவ நதியின் தண்ணீர், துரோகி களின் உதவியால் அவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்த பாஞ்சால ராஜபாட்டைகள், தங்கள் சொந்தச் செலவில் அவைகளை இடை விடாமல் பாதுகாத்து வந்த ஆங்கில விசுவாசிகளான பாஞ்சால சம்ஸ்தானுதிபதிகளின் உதவி, இவையெல்லாம் பிரிட்டிஷ் தள பதியான பர்னுர்டுக்குப் பெரிதும் நம்பிக்கையை அளித்தன. 'சபாஷ்! இனி டில்லியைக் கைப்பற்றுவதில் நமக்கு ஒரு நாள் வேலைகூட இல்லை' என்று அவனும் மற்ற அதிகாரிகளும் மார் தட்டினர்.

'டில்லியைக் கைப்பற்றுவது ஒரு நாள் வேலைகூட இல்லை எனில், பின்னர் அதற்காக ஏன் இரண்டு நாட்களைச் செல வழிக்க வேண்டும்? 'துரோகம்' செய்த இந்த நகரம் மண்ணோடு மண்ணுகப் போகும்படி செய்வதற்காக இந்த விநாடியே அதன் மீது பாயும்படி நம் துருப்புகளுக்கு நாம் ஏன் உத்தரவிடக்கூடாது? நமது ராணுவத்தின் முதுகெலும்பான பஞ்சாபியர்கள் சந்தேகத் துக்கு இடமின்றி நம்மிடம் விசுவாசத்துடன் இருந்து வருகையில் நீண்ட காலம் முற்றுகையிட்டு நாம் ஏன் கஷ்டப்படவேண்டும்? 'கொடிய' இந்த நகர்மீது, திடீரென்று பாய்ந்து, முதல் அடியி லேயே இதை நசுக்குவது நல்லதல்லவா? நம் படைகள் பல பிரிவுகளாகப் பிரிந்து ஏக காலத்தில் நகரைத் தாக்கட்டும்; ஒரு பிரிவு லாகூர்க் கோட்டை வாயிற் கதவைத் தூளாக்கட் டும்; மற்றொன்று காபூல் கோட்டை வாயிற் கதவைத் தகர்க்

கட்டும்; மற்றத் துருப்புகள் அணையை உடைத்துக்கொண்ட பெருவெள்ளம் போல் ஏக காலத்தில் தெருக்களில் பாய்ந்து ஒவ்வோர் இடமாகக் கைப்பற்றிச் செல்லட்டும்; ஒரு விநாடி கூடத் தாமதமின்றி நாம் எல்லாரும் பாய்ந்து சென்று அரண் மனையைக் கைப்பற்றுவோம். இவ்வாறாக வில்பர்போர்ஸ் கிரேட் ஹெட்டும் ஹாட்சனும் துடித்தனர்! அத்தகைய துணிச்சலான திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றும் முழுப் பொறுப்பை யும் அவர்கள் தாங்களே ஏற்றுக்கொண்டனர்!

அதன்பின் தாமதத்துக்கு இடம் ஏது? டில்லியைத் தாக்க ஆரம்பிக்கும்படி ஜெனரல் பர்னார்ட் ஜூன் 12-ஆம் தேதி ரகசிய மாக உத்தரவிட்டான். யார் யார் எந்த எந்த இடத்தில் சேருவது? இரவில் எப்போது, எப்படிப் பல்வேறு படைப் பிரிவு களும் போரை ஆரம்பிப்பது? எந்தத் தளபதியின் தலைமையில் வலதுபுறப் படை இருப்பது? எந்தத் தளபதியின் தலைமையில் இடதுபுறப் படை இருப்பது?- இவை போன்ற விவரங்கள் யாவும் நிர்ணயிக்கப்பட்டன!

விடியற்காலை மணி இரண்டு அடித்தது. ரகசியமாக எல் லாரும் கூடவேண்டுமென்று ஏற்கனவே நிர்ணயம் செய்திருந்த தற்கு இணங்க, படைகள் எல்லாம் அணிவகுப்பு மைதானத்துக்கு வந்து கூடின. நாளை டில்லி அரண்மனையில் ஆனந்தமாகத் தூங்கலாம் என்ற நம்பிக்கை இருக்கையில், இன்றிரவு சில மணி நேரம் விழித்துக்கொண் டிருப்பதை யார் பொருட்படுத் தப் போகிறார்கள்? எவரும் பொருட்படுத்த மாட்டார்கள் அல்லவா?

ஆனால் உண்மையில் அதைப் பொருட்படுத்தும் சில பிரிவு களும் ஆங்கிலப் படையில் இருந்தன. குறிப்பிட்டிருந்த நேரத் தில் சில பிரிவுகளைக் காணவில்லை. எனவே, அந்த நிலையில் டில்லியைத் தாக்குவது அசட்டுத் துணிச்சலாக முடியும் என்று தளபதி கிரேவ்ஸ் நினைத்தான். அத்தகைய நிலையில் மேலே குறிப் பிட்ட தடபுடல். திட்டத்தை நிறைவேற்ற முற்படுவது, இந்தியா முழுவதிலுமே பிரிட்டிஷ் அதிகாரத்துக்குச் சாவுமணி அடிப்பதாகும் என்று மற்ற ராணுவ அதிகாரிகளும் கூறினர். திடீரென்று டில்லியை மின்னல் வேகத்தில் தாக்கி வெற்றி பெற லாமென ஆங்கிலப் படை ஆசை கொண்டிருந்தது. ஆனால் அந்த ஆசை இறுதியில் வெறும் ஆகாயக் கோட்டையாக முடிந்தது!

மறுநாள் காலை வில்பர்போர்ஸ் கிரேட்ஹெட் எதிர்காலத் தாக்குதலை ஒட்டி மற்றொரு திட்டத்தை வகுத்து, அதைத் தள பதி பர்னார்டின் ஆலோசனைக்கு அனுப்பினான். ஜெனரல் பர் னார்ட் கிரிமிய யுத்தங்களில் கலந்து புகழ் பெற்றவனாயினும், மிகவும் தயக்க புத்தியுள்ளவன். அவ்விஷயமாகத் தன் முக்கிய அதிகாரிகளைக் கலந்து ஆலோசிப்பதற்காக அவன் ஜூன் 14-ஆம் தேதி யுத்த சபை ஒன்றைக் கூட்டினான். உடனே நேரடியாக டில்லியைத் தாக்குவதுதான் சிறந்ததென்று கிரேட்ஹெட் துணிச்சலுடனும் உறுதியாகவும் கூறினான். எனினும் அது

வெற்றி பெறும் என்ற நம்பிக்கை மற்ற அதிகாரிகளுக்கு இல்லை. தெருத் தெருவாகவும் வீடு வீடாகவும் இருந்துகொண்டு புரட்சிக்காரர்கள் இடைவிடாமல் செய்யும் பீரங்கிப் பிரயோகத்திலிருந்து எத்தனை ஆங்கிலத் துருப்புகள் உயிர் தப்ப முடியும் என்ற கேள்வியும் அவர்களுடைய மனத்தை வாட்டியது. அத்தகைய தாக்குதல் வெற்றியைக் கொடுக்கும் என்பதில் பார்ணர்டுக்குக்கூட நம்பிக்கை இல்லை. வெகு நேரம் வரையில் விவாதம் நடந்தும், அவ்விஷயமாக அவர்களுக்குள் அபிப்பிராய ஒற்றுமை ஏற்படவில்லை. எனவே, 11-ஆம் தேதி முடிந்ததுபோலவே 14-ஆம் தேதியும் அவர்களுடைய ஆலோசனை பகற்கனவாக முடிந்தது.

மீண்டும் 16-ஆம் தேதி அந்த யுத்த சபையின் கூட்டமொன்று நடந்தது. அன்றைய விவாதத்தின் விளைவாக நிலைமை முந்திய நாளைக் காட்டிலும் மோசமாகி, ஆங்கில ராணுவ அதிகாரிகளுக்குள் அபிப்பிராய பேதமும், அவநம்பிக்கையுமே அதிகமாயின. ஏனெனில் டில்லியைத் திடீரென்று நேரடியாகத் தாக்கவேண்டும் என்ற துணிச்சலான திட்டத்தைப் பற்றி ஆங்கிலத் தளபதி ஆலோசித்து வரும் அதே சமயத்தில், டில்லி நகருக்குள் புதிய படைகளும், புதிய பொக்கிஷங்களும், புதிய சக்தியும் வந்து குவிந்துகொண்டிருந்தன. அதுவரையில் அங்கே தற்காப்பு முறைகளை மாத்திரம் கைக்கொண்டு வந்த தேச பக்தர்கள், அதன் பல்வேறு பக்கங்களிலிருந்தும் ஆங்கிலப் படையை வெற்றிகரமாகத் தாக்கவும் ஆரம்பித்தார்கள்.

இந்தியா முழுவதும் கொதித்தெழுந்த படைகளெல்லாம் பொக்கிஷங்களுடனும் ஆயுதங்களுடனும் வெடி மருந்துகளுடனும் டில்லிக்குச் சாரி சாரியாக வந்துகொண்டிருந்ததால், யுத்த சாதனங்கள்பற்றியோ, சிப்பாய்களின் தொகையைப் பற்றியோ தேச பக்தர்களுக்கு அணுவளவும் கவலை இல்லாமல் போயிற்று. அந்த நிலைமையில் ஆங்கிலத் துருப்புகள் ஓர் அடிகூட முன்வர முடியாமல் தடுக்கத் தேசீயப் படைகள் முற்பட்டன. இந்தியச் சிப்பாய்கள் திடீரென்று ஆங்கிலத் துருப்புகள்மீது பாய்ந்து உக்கிரமாகத் தாக்கி அவர்களுக்கு மிகுந்த சேதத்தை உண்டுபண்ணியும், தங்களுக்கு அதிகச் சேதம் எதுவுமின்றியும் திரும்புவர். இவ்விதமாக அவர்கள் ஆங்கிலப் படைகளுக்கு மிகுந்த தொல்லை விளைவித்து வந்ததால், ஆங்கிலேயர்கள் தற்காப்பைத் தவிர, எதிர்த்துத் தாக்கும் முறைகளைக் கைக்கொள்ள இயலவில்லை.

12-ஆம் தேதியன்று தேசபக்தர்கள் வெகு துணிச்சலுடன் நகரிலிருந்து வெளியேறி மரங்களிலும் பள்ளத்தாக்குகளிலும் பதுங்கிச் சென்று, புலிகளைப்போல் திடீரென்று ஆங்கிலத் துருப்புகள்மீது பாய்ந்து தாக்கினார்கள். எதிர்பாராத விதமாக அது நேர்ந்ததால், ஆங்கிலேயர்கள் திகிலும் குழப்பமும் அடைந்தனர். அதன் விளைவாகப் பகைவர்கள் பல பீரங்கித் துருப்புகளை இழந்தனர். அதிகாரி நாக்ஸும் ஒரு சிப்பாயால் சுடப்பட்டு மாண்டான். அதே சமயம் மற்றொரு புறத்திலிருந்தும் தேச

பக்தர்கள் ஆங்கிலப் படைகள்மீது பாய்ந்து தாக்கவே, இரு சாராருக்கும் கடுமையான போர் நடந்தது.

அன்றையிலிருந்து தேசபக்தர்கள் ஒவ்வொரு நாளும் காலையில் நகரிலிருந்து வெளியே செல்லுவதும் ஆங்கிலேயர்களைத் தாக்கிவிட்டு மாலை நகருக்குள் திரும்பி வருவதுமாக இருந்தனர். புதிதாக நகருக்குள் வந்த ஒவ்வொரு படையும் மறுநாள் வெளியே சென்று பகைவர்களைத் தாக்க வேண்டும் என்பது ஒரு விதி ஆயிற்று. அதன்படி 12-ஆம் தேதி தேசபக்தர்களுடன் சேர்ந்து கொண்ட 60-ஆவது படைப் பிரிவினர், 13-ஆம் தேதி நடந்த போரில் மும்முரமாக ஈடுபட்டனர்.

ஆங்கிலேயர்களின் பாதுகாப்பு 'அணை'யைத் தகர்ப்பதற்காக இந்தியச் சிப்பாய்களில் சிலர் ஒரு கட்டிடத்துக்குமேல் பல பீரங்கிகளை அமைக்க முயன்றார்கள். அதைப் பார்த்த மேஜர் ரீடும் ஹென்றி டாம்ஸும் தங்களுடைய துருப்புகளுடன் இரு புறங்களிலிருந்தும் அவ் வீரர்களைத் தாக்க முற்பட்டனர். ஏராளமான ஆங்கிலத் துருப்புகள் கட்டிடத்தைச் சூழ்ந்துகொண்டு கடுமையாகத் தாக்கியபோதுங்கூட, கட்டிடத்துக்குள் அகப்பட்டுக் கொண்ட அவ்வீரர்கள் சரணடையவில்லை. தங்கள் கைவசம் இருந்த மருந்து செலவழிந்த பின்னருங்கூட, அவர்கள் கத்திகளை உருவிக்கொண்டு பகைவர்கள்மீது பாய்ந்து போராடினர். தங்களில் எல்லோரும் போர் செய்து மடியும் வரையில் அவர்கள் அந்தக் கட்டிடத்தைப் பகைவர்களிடம் விடவில்லை!

நாஸிராபாத்தில் புரட்சியை ஆரம்பித்த சிப்பாய்கள் 18-ஆம் தேதி டில்லி வந்து, தங்களுடன் கொண்டு வந்திருந்த பொக்கிஷங்களை அரண்மனை அதிகாரிகளிடம் ஒப்பித்தனர். அந்தச் சிப்பாய்களின் பிரதிநிதிகளைச் சக்கரவர்த்தியே நேரில் மரியாதையுடனும் கௌரவத்துடனும் அரண்மனையில் வரவேற்று உபசரித்தார். 20-ஆம் தேதியன்று ஆங்கிலப் படையை எதிர்த்து முறியடிப்பதாக, தர்பாரில் அவர்கள் பிரதிக்ஞை செய்தனர். அதற்கிணங்க அன்று நாஸிராபாத் சிப்பாய்கள் பகைவர்களைத் தாக்குவதற்காக டில்லியிலிருந்து வெளிக்கிளம்பி, ரகசியமாகச் சென்று பின்புறத்திலிருந்து ஆங்கிலத் துருப்புகள்மீது திடீரென்று பீரங்கிப் பிரயோகம் செய்ய ஆரம்பிக்கவே, ஆங்கிலேயர்கள் திக்கு முக்காடிச் சிதறியோட முற்பட்டனர்.

தேச பக்தர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க ஆங்கில அதிகாரிகள் தங்களுடைய பீரங்கிப் படைகளைக் கொண்டு எவ்வளவோ முயன்றும் பயன் ஏற்படவில்லை. தேசீயப் படைகள் முன் வைத்த காலைப் பின்வைக்காமல் உறுதியுடன் தாக்கின.

சாயங்காலம் ஆயிற்று. தேச பக்தர்களின் கையே ஓங்கி நின்றது. அவர்கள் முன்னேறிச் சென்று பிரிட்டிஷ் பீரங்கிகளைக் கைப்பற்றினர். 9-ஆவது ஈட்டிப் படையும் விசுவாசிகள் அடங்கிய பாஞ்சாலப் படையும் பல தடவை தேச பக்தர்களின் மீது பாய்ந்தனவெனினும், இறுதியில் அவை பின்வாங்கும்படியே நேர்ந்தது. இரவு வந்துங்கூடப் போர் நின்றபாடில்லை. அதற்கு

மாருக அன்று இரவுதான் இரு சாராரும் உக்கிரமாகப் போர் புரிந்தனர். இறுதியில் ஆங்கிலேயர்களுக்குத் தங்களுடைய பீரங்கிகளைக் காப்பாற்றிக்கொண்டு பின்வாங்குவதே பெரும் பாடாகிவிட்டது.

'கலகக்காரர்கள் நம் படைகளைச் சின்னபின்னமாக்கி முறியடித்துவிட்டனர்' என்று அன்றைய யுத்தத்தைப்பற்றி லார்டு ராபர்ட்ஸ் குறிப்பிட்டிருக்கிருன்.

அன்றிரவு ஆங்கிலத் தளபதிக்கு மகத்தான மனக் கவலையால் தூக்கம் வரவில்லை. ஏனெனில் தேச பக்தர்கள் மிகுந்த துணிச்சலுடன் அன்று கைப்பற்றிய ஒரு பிரதேசத்தைத் தங்கள் வசமே ஸ்திரப்படுத்திக்கொண்டு விடுவார்களாயின், பாஞ்சாலத்துடன் ஆங்கிலேயர்களால் எவ்விதப் போக்குவரத்தும் செய்ய முடியாமல் போய்விடும். அத்தகைய விபரீதத்தைத் தவிர்ப்பதற்காக ஆங்கிலேயர்கள், மீண்டும் தேச பக்தர்களை எதிர்த்துப் போரிடுவதற்கான ஏற்பாடுகளை மறுநாள் விடியற்காலையிலேயே செய்ய ஆரம்பித்தார்கள். போதிய வெடி மருந்து இல்லாததாலும், மேற்கொண்டு உதவிக்குத் துருப்புகள் வராமையாலும் தேச பக்தர்கள் தாங்கள் ஆக்கிரமித்துக்கொண்ட இடத்தைக் காலி செய்து, மீண்டும் டில்லி நகருக்குச் சென்றுவிட்டதால், ஆங்கிலேயர்களுக்குத் திரும்பவும் அந்தப் பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொள்ளுவது மிகவும் சுலபமாயிற்று.

ஆயினும் அந்த யுத்தத்தையும் தேசீய வீரர்கள் உறுதியுடன் நின்று பெற்ற வெற்றியையும் பற்றிய செய்தி, டில்லி நகர ஜனங்களுக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது. டில்லி நகரச் சுவர்மீது வைத்திருந்த பீரங்கிகள் வெகு தூரம் வரை சுடும் சக்தியுள்ளனவாதலால், தேசீய வீரர்கள் ஆங்கிலப் படைகள்மீது இடைவிடாமல் பீரங்கிப் பிரயோகம் செய்து வந்தனர். அதனுல் ஆங்கிலத் துருப்புகள் தற்காப்பாக இருந்துகொள்ளுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியவில்லை. மேலும் அந்த நிலைமையில் தாங்கள் ஆக்கிரமித்துக் கொண்டுள்ள பிரதேசம் தங்களிடம் நிலைத்திருக்கும்படி செய்வதே அவர்களுக்குக் கஷ்டமாகிவிட்டது. பாஞ்சாலத்திலிருந்து உதவிக்குத் துருப்புகள் வந்தாலன்றி மேற்கொண்டு ஓர் அடிகூட முன் செல்லுவது முடியாத காரியம் என்பதை ஆங்கிலேயர்கள் உணர்ந்துகொண்டனர்.

ஆங்கிலேயர்களுக்கு இந்தக் கஷ்டங்களெல்லாம் போதா என்று ஜுலை 23-ஆம் தேதியும் வந்து சேர்ந்தது! 1857 ஜுலை 23-ஆம் தேதிதான் பிளாஸி யுத்தத்தின் நூருவது ஆண்டு தினமாகும். நூறு வருஷங்களுக்கு முன் அதே தேதியில் ஆங்கிலேயர்கள் ஆடிய சூதாட்டம் இந்தியாவுக்கு ஆபத்தாக முடிந்தது. இந்தியாவின் துர்ப்பாக்கியத்திஞல் பிளாஸி யுத்தத்தின் முடிவு விபரீதமாகியது. அதன் பின் கழிந்த நூறு ஆண்டுகளில் புதிய புதிய அவமதிப்புகளுக்கும் புதிய புதிய மானக்கேடுகளுக்கும் ஆளானதஞல் பாரதத் தாய் துடித்துக்கொண்டிருந்தாள். அவற்றை ஒட்டி ஆங்கிலேயர்களுடன் கணக்கைத் தீர்த்

துக்கொள்ளவும், தேசத்துக்கு ஏற்பட்ட அவமதிப்புகளை ரத்த வெள்ளத்தால் துடைத்து ஒழிக்கவும் டில்லியில் இருந்த தேசீய வீரர்கள் அனைவரும் உறுதி கொண்டனர்.

23-ஆம் தேதி விடியற்காலையில் தேசீய வீரர்கள் டில்லி நகரின் லாகூர்க் கோட்டை வாயில் வழியாக ஆங்கிலேயர்களைத் தாக்குவதற்காகப் புறப்பட்டனர். அன்று தங்களுடைய பலம் முழுவதையும் உபயோகிக்க வேண்டியிருக்கும் என்பதை ஆங்கிலேயர்களும் அறிவார்கள் ஆதலால், அவர்களும் கோரமான போருக்கு ஆயத்தமாயினர். விடியற்காலையிலிருந்தே அவர்களின் துருப்புகள் போர்க்களத்துக்கு வந்து அணிவகுத்து நின்றன. உதவித் துருப்புகள் அனுப்பும்படி ஆங்கிலேயர்கள் பாஞ்சால சர்க்காருக்கு அனுப்பியிருந்த வேண்டுகோள் வீணாகவில்லை. அவர்களின் அதிருஷ்டவசமாகப் பாஞ்சாலத்திலிருந்து அதற்கு முந்திய நாள்தான் ஏராளமான சிப்பாய்கள் வந்து சேர்ந்தனர்.

அங்கிருந்து புதிய துருப்புகள் வந்த செய்தி ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த நம்பிக்கையை உண்டுபண்ணியது. ஆயினும் அவர்களுக்கு உதவியாக மேற்கொண்டு துருப்புகள் வந்திருக்கின்றன என்ற செய்தியோ, அவர்களைப் பின்புறமாகச் சென்று தாக்க முடியாதபடி அவர்கள் பாலத்தை நாசம் செய்த சம்பவமோ தேச பக்தர்களின் உற்சாகத்தைக் குறைத்துவிடவில்லை. அதற்காக அவ்வீரர்கள் சிறிதும் கலங்கவும் இல்லை. அதற்கு மாறாக அவர்கள் பிரமாதமான துணிச்சலுடன் முன்னேறி ஆங்கிலேயர்களைத் தாக்கினர். ஆங்கிலக் காலாட்படைகள் சரமாரியாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததையும் லட்சியம் செய்யாமல் தேசீய வீரர்கள் அவர்களை இடைவிடாமல் தாக்கிப் பின்வாங்கும்படிசெய்தனர்.

நகரச் சுவர்களில் அமைத்திருந்த பீரங்கிகளும் மும்முரமாக வேலை செய்தன. மத்தியான்னம் பன்னிரண்டு மணி அடித்தது. அதே சமயம் போரின் உக்கிரமும் உச்ச நிலையை அடைந்தது. பஞ்சாபியர் படை, கூர்க்கப் படை, ஆங்கிலப் படை இந்த மூன்று படைகளையும் தேசீய வீரர்கள் மிகுந்த ஆக்கிரோஷத்துடன் தாக்கினர்.

இந்த யுத்தத்தைப்பற்றி மேஜர் ரீட் கூறியிருப்பதாவது: 'அன்று சுமார் 12 மணிக்குக் கலகக்காரர்கள் பிரமாதமான ஆவேசத்துடன் என் படைகளை எதிர்த்துப் போர் புரிந்தனர். வேறு எவரும் அவ்வளவு தீரத்துடன் போராடியிருக்க முடியாது. அவர்கள் சிறிதும் சோர்வடையாமல் திரும்பத் திரும்ப எங்களைத் தாக்கியதால், அன்று எங்களுக்குப் படுதோல்விதான் என்று நான் திகிலடைந்து விட்டேன்.'

ஆங்கில அதிகாரிகளுள் மிகுந்த தைரியசாலியும் தேச பக்தர்களின் வீரத்தை நேரில் பார்த்தவனுமான மேஜர் ரீட் அவ்விதம் கூறியிருப்பதிலிருந்து, இந்தியச் சிப்பாய்கள் அன்று எவ்வளவு வீரதீரத்துடன் போர் புரிந்திருக்க வேண்டுமென்பதை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம். ஆனால், அவர்களுக்கு உற்

சாகமுட்டி அவர்களின் தளரா உறுதியையும் தீரத்தையும் பயன் படுத்திக்கொண்டு உருவான வெற்றி பெறுவதற்குற்ற தலைவர் எவரும் அன்று அங்கு இராதது பாரத நாட்டின் துரதிருஷ்ட மாகும்.

அன்று ஆங்கிலப் படைகளெல்லாம் சேர்ந்து தோல்வி அடை யும் தறுவாயில், பாஞ்சாலப் படைகள் அவற்றிற்கு உதவியாகப் போர்க்களத்தில் பிரவேசித்தன. அன்று முழுவதும் போரிட்டுத் தாங்கள் வெற்றி பெறும் சமயத்தில் ஆங்கிலேயர்களுக்கு உதவி யாகத் துரோகிகள் முன்வந்ததைக் கண்ட தேசபக்தர்கள் மனம் உடைந்தனர். எனினும் அந்தச் சமயத்திலும் அவர்கள் போரை நிறுத்தவில்லை. கதிரவன் மறைந்து உலகை இருள் சூழ ஆரம் பித்தது. இறுதியில் இரு சாராரும் தங்களுக்குத்தான் வெற்றி என்று கூறிக்கொண்டு போர்க்களத்தை விட்டு அகன்றனர்! பிளாஸி யுத்தத்தின் நூறாவது ஆண்டு 'விழா' இவ்வாறாக முடி வுற்றது. அன்று எந்தக் கட்சியும் தோல்வி அடையவில்லை! இரு சாராரும் தங்கள் தங்கள் பகைவர்களின் உறுதியையும் பராக்கிர மத்தையும் மெச்சிக்கொண்டே தங்கள் தங்களுடைய முகாம் களுக்குத் திரும்பிச் சென்றனர்!

தினந்தோறும் இரு பக்கங்களிலும் புதிது புதிதாகப் படை கள் வந்து குவிந்துகொண் டிருந்தன. பாஞ்சாலத்திலிருந்து அடிக்கடி படைகள் வந்துகொண் டிருந்தன ஆதலால், ஆங்கி லேயர்களின் பக்கத்தில் இருந்த துருப்புகளின் தொகை ஏழாயிரம் ஆகியது. தேச பக்தர்களுக்கு உதவியாக, பகத்கானின் தலைமை யில் ரோஹில்கண்டிலிருந்தும் சிப்பாய்கள் வந்து சேர்ந்தனர்.

தேச பக்தர்கள் அடங்கிய படை ஒவ்வொன்றும் ஒவ் வோர் இடத்திலிருந்து வந்தது. அவ்விதம் டில்லி வந்து சேர்ந்த பல்வேறு படையினரும் தங்கள் ஆயுளிலேயே அதற்கு முன் ஒரு வரை ஒருவர் பார்த்ததில்லை. பல்வேறு இடங்களிலிருந்தும் வந் திருந்த பல்வேறு சாதி, மதத்தினரையும் யாதொரு வேற்றுமை யும் இன்றி ஐக்கியப்படுத்தியது தேச பக்தி என்ற சக்திதான்! பல இடங்களையும், பல சாதி, சமயங்களையும் சேர்ந்த அவர்கள் எல்லாரையும் ஒரே லட்சியம் இணைத்து ஒன்றுபடுத்தியது!

ரோஹில்கண்டிலிருந்து படைகளுடன் பகத் கான் வந்த சமயத்தில் டில்லி ஜனங்களிடை நிம்மதியே இல்லை. அவர் களுக்குப் போதிய பாதுகாப்பு இல்லாமையே அதற்குக் காரணம். ரோஹில்கண்டிலிருந்து படைகள் எதிர்பார்க்கப்பட்டன; ஆத லால், யமுனையின் பாலத்தை தேச பக்தர்கள் சீர்ப்படுத்தியிருந்த னர். அந்தப் படையை எதிர்கொண்டு அழைப்பதற்காக நவாப் அகமது குலி கான் பல பிரமுகர்களுடன் ஜுலை மாதம் 2-ஆம் தேதி புறப்பட்டுச் சென்றார். ஹக்கீம் ஹஸனுல்லா கான், ஜெனரல் ஸனத் கான், இப்ராகிம் அலி கான், குலாம் குலி கான் முதலிய பல பிரமுகர்களும் அவருடன் சென்றார்கள்.

ரோஹில்கண்ட் படைகளின் தளபதியான முகமது பகத் கான் தமது பணியை அங்கீகரிக்கும்படி சக்கரவர்த்தியைக் கேட்டுக்

கொள்ளவே அவர் கூறியதாவது: 'ஜனங்களுக்குப் பூர்ணப் பாது காப்பு ஏற்பட வேண்டும். அவர்கள் உயிருக்கும் சொத்துக்கும் எவ்விதத் தீங்கும் நேரக் கூடாது. பகைவர்களான ஆங்கிலேயர் களை அழிக்கும் கைங்கரியம் வெற்றிகரமாக நிறைவேற்றப் பட வேண்டும். இதுதான் என் ஆர்வம்.'

பகத் கானும் அவ்விதமே செய்வதாக உறுதி கூறி, தேசீய ராணுவத்தின் பிரதம தளபதியாக இருந்துகொண்டு சக்கர வர்த்தியின் கட்டளைகளை நிறைவேற்றுவதாகக் குறிப்பிடவே, சக்கரவர்த்தி உள்ளம் உருகி அவரது கையைப் பிடித்துத் தமது அன்பைத் தெரிவித்தார். உடனே பல வேறு படைப் பிரிவு களின் தலைவர்களும் அடங்கிய மகாசபை நடந்தது. பகத் கானைப் பிரதம தளபதியாகத் தேர்ந்தெடுக்க அவர்கள் எல் லோரும் இசைந்து அவரிடம் விசுவாசப் பிரமாணமும் செய்து கொண்டனர். மகாசபை முடிந்தவுடன் பிரதம தளபதி பகத் கானுக்குச் சக்கரவர்த்தி பேட்டியளித்தார். அப்பொழுது சக்கரவர்த்தி அவருக்குக் கேடயம், வீர வாள், 'ஜெனரல்' என்ற பட்டம் முதலியவற்றை வழங்கினர். பகத் கான் பிரதம தளபதியாக இருந்து அரசாங்க சம்பந்தமான எல்லா அலுவல்களையும் கவனிப்பார் என்று சக்கரவர்த்தியின் பிரகடனமும் வெளியாயிற்று.

சக்கரவர்த்தியின் கட்டளைக்கு இணங்கச் சிப்பாய்கள் எல்லாருக்கும் சிற்றுண்டி வழங்கினர். ஆக்ரா, நாஸிராபாத், ஜலந்தர் முதலிய பல இடங்களிலிருந்தும் வந்த சிப்பாய்கள் பகத் கான் தலைமையில் இருந்தார்கள். டில்லியிலுள்ள ஒவ் வொரு பிரஜையும் ஆயுதம் ஏந்த வேண்டும் என்று பிரதம தள பதி உத்தரவிட்டார். அதற்கிணங்க, எல்லாருக்கும் ஆயுதங் கள் விநியோகிக்கப்பட்டன.

பிறகு பகத் கான் ஆயுதசாலைக்குச் சென்று அதைப் பரி சீலனை செய்தபின், அங்கிருந்த ஆயுதங்களையும் மருந்துகளையும் ஒழுங்கான முறையில் தயாராக வைக்குமாறு உத்தரவிட்டார். யுத்தத்தை ஆரம்பிப்பது சம்பந்தமாக இரவு எட்டு மணிக்கு அவ ரும் சக்கரவர்த்தியும் கலந்து ஆலோசித்தனர். அவ்வமயம் பேகம் ஜீனத் மஹல், ஹக்கீம் ஹஸனுல்லா கான், அகமது குலி கான் முதலியோரும் பிரசன்னமாகி யிருந்தார்கள். ஜூலை 3-ஆம் தேதி நடந்த அணிவகுப்பில் சுமார் இருபதாயிரம் சிப்பாய் கள் ஆஜராக இருந்தது, எல்லாருக்கும் உற்சாகத்தை அளித்தது.

பகத் கான் டில்லியில் போருக்கான ஆயத்தங்களை மிகுந்த திறமையுடனும் கட்டுக் கோப்பான முறையிலும் உருவாக்கி வருகையில், ஆங்கிலேயர்களும் வெகு மும்முரமாகத் தங்கள் வேலைகளைச் செய்து வந்தனர். தளபதி சேம்பர்லேன், மிகத் திறமை வாய்ந்த ராணுவ இஞ்சினீயரான பெயிட்-ஸ்மித் முதலி யோர் பாஞ்சாலத்திலிருந்து பகைவர்களுக்கு உதவியாக வந்து சேர்ந்தார்கள். சீக்கிய யுத்தத்தில் மிகுந்த அநுபவம் பெற்ற முதல் தரமான போர்வழிகளை ஜான் லாரன்ஸ் பாஞ்சாலத்தி லிருந்து அனுப்பிக்கொண் டிருந்தான். அந்த நிலைமையில் ஏற்

கனவே பல தடவைகளிலும் ஆரம்பித்துக் கைவிடப்பட்ட 'நேரடி யான துணிகரத் தாக்குதலை' மறுபடியும் ஒரு முயற்சி செய்து பார்த்து விடுவதென்று ஜெனரல் பர்னுர்டு தீர்மானித்தான்.

முந்திய தடவைகளைப் போலவே இந்த முறையும் 'நேரடிப் பாய்ச்சல் திட்டம்' வெகு ஒழுங்காக உருவாக்கப்பட்டது. அதன்படி ஆங்கிலப் படைகள் சகல ஏற்பாடுகளுடனும் ஜூலை 3-ஆம் தேதி டில்லிமீது படையெடுக்க ஆரம்பித்தது. ஆனால், அதே சமயம் ஆங்கிலேயர்களுக்கு இடி இடித்தாற்போன்று ஒருவன் செய்தி கொண்டு வந்தான். படையெடுக்கும் சிரமத்தை ஆங்கிலேயர்களுக்குக் கொடுக்காமல், பகத் கான் அவர்கள் மீது தம் சைனியங்களுடன் படையெடுப்பை ஆரம் பித்துவிட்டார் என்பதே அந்தச் செய்தியாகும்.

தாங்கள் டில்லி நகரைப் பார்த்த மாத்திரத்தில் வெற்றி பெற்றுவிடலாம் என்று மனக்கோட்டை கட்டி வந்த பர்னுர்ட் முதலிய அதிகாரிகள் தேச பக்தர்களின் ராணுவ தந்திரத்தையும் உறுதியையும் கண்டு மனமுடைந்து போயினர். டில்லியை நேரடியாகப் பாய்ந்து தாக்கினுல் ஒரே நாளில் கைப்பற்றி விடலாம் என்று திட்டம் போட்டிருந்த பர்னுர்டு, தான் ஓரடி கூட முன் வைக்க முடியாததை நினைத்து வெட்கத்தினுல் வெதும் பினுன். பாஞ்சாலத்திலிருந்து தங்களுக்கு உதவியாக ஏராள மான துருப்புகள் வந்துங்கூட, தாங்கள் நினைத்தபடி டில்லியைக் கைப்பற்ற முடியாதது, ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த கலக் கத்தைக் கொடுத்தது. டில்லியை வெகு சீக்கிரத்தில் ஆக்கிர மித்துக் கொண்டுவிடலாம் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந் ததால், ஜூன் மாத முடிவிற்குள் டில்லி வீழ்ச்சி பற்றிய செய்தி பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய இடங்களுக்கு எட்டி விடும் என்று அவர்கள் கனவு கண்டு வந்தனர். மற்ற இடங் களில் இருந்த வெள்ளையர்களும் அவ்விதமே எதிர்பார்த்து வந்தார்கள்.

ஜூன் மாதம் முடிந்தது. ஜூலை மாதம் ஆரம்பமாயிற்று. ஆனுல் டில்லி வீழ்ச்சி யடையவில்லை. 'டில்லியிலுள்ள ஆங்கிலப் படைகள் என்னதான் செய்துகொண் டிருக்கின்றன' என்று மற்ற இடங்களில் இருந்த ஆங்கிலேயர்கள் இடித்துக் கேட்கலாயினர். அதனுல் ஏற்பட்ட கவலையும் வெட்கமும் பர்னுர்டின் மனத்தை அரித்துத் தின்ன ஆரம்பித்தது. அத்தகைய நிலைமைக்குச் சமீப காலத்தில் பரிகாரம் ஏற்படும் என்றும் அவனுக்குத் தோன்ற வில்லை. அதற்கு மாருக எதிர்காலம் இன்னும் அதிக இருள் சூழ்ந்ததாகத் தோன்றியது. தேச பக்தர்கள் இடைவிடாமல் தாக்கியதால் அவனுக்கு மூச்சு விடவும் அவகாசம் கிடைக்க

எனவே, அவன் உடலும் உள்ளமும் உருகி ஜூலை 5-ஆம் தேதி சீதபேதியால் மாண்டான். தங்கள் தளபதிக்கு நேர்ந்த கதி ஆங்கிலத் துருப்புகளுக்கு மிகுந்த சோகத்தை உண்டுபண்ணியது. இதற்குமுன் டில்லி நகருக்குள் பிரவேசிக்க முயன்ற தளபதி யைப் போலவே, இரண்டாவது தளபதியான பர்னுர்டும் டில்லி

நகருக்குள் பிரவேசிப்பதற்குப் பதிலாகச் சவப்பெட்டிக்குள் பிர வேசிக்க நேர்ந்தது அவர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. பின்னர் பர்ணுர்டின் ஸ்தானத்தில் ஜெனரல் ரீட் தளபதியானுன்.

பிறகு 14-ஆம் தேதி நடந்த போரிலும் வெள்ளையர்கள் படுதோல்வியே அடைந்தார்கள். ஆங்கிலேயர்களின் கண்ணுக விளங்கிவந்த வீரனை சேம்பர்லேன் அன்றைய யுத்தத்தில் ஒரு சிப்பாயால் சுடப்பட்டுப் படுகாயம் அடைந்தான். 'நமது முகா மிலேயே வீர பராக்கிரமத்திலும் புகழிலும் அந்தஸ்திலும் முதல்வனை சேம்பர்லேனை இழந்த அன்று, ஆங்கிலேயர்கள் எல்லோருக்கும் துக்க தினமாகும்' என்று ஆங்கில சரித்திராசிரி யர்கள் பிரலாபித்திருக்கின்றனர். அவன் படுகாயமடைந்ததை மகத்தான தேசீய நஷ்டமாக ஆங்கிலேயர்கள் கருதினர்.

ஜூலை 15-ஆம் தேதியும் சென்றது. ஆங்கிலேயர்களின் கனவு பலிக்கவில்லை. அதற்கு மாருக, டில்லி அரண்மனைச் சிக ரங்களில் சூரிய கிரணங்கள் பட்டுப் புதிய சோபையுடன் கம்பீர மாக அசைந்துகொண்டிருந்த தேசீயக் கொடி, டில்லிமா நகரத் தின் சுதந்தரத்தை உலகிற்குப் பிரகடனப் படுத்திக்கொண் டிருந்தது. தனக்கு முன் இரண்டு தளபதிகளுக்கு நேர்ந்த கதி தனக்கும் நேராமல் இருப்பதற்காக ஜெனரல் ரீட் தன் பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டு, உடம்பைத் தேற்றிக்கொள் ளும் நோக்கத்துடன் இமயமலைக்குப் புறப்பட்டுச் சென்ருன்.

மூன்று தளபதிகளை இழந்துங்கூட ஆங்கிலேயர்களால் டில்லி யைக் கைப்பற்ற முடியவில்லை. முக்கிய ராணுவ அதிகாரிகளான பீச்சரும் சேம்பர்லேனும் ஒவ்வொரு விநாடியும் முகாமில் மரண தேவனை எதிர்பார்த்துக்கொண்டு படுத்த படுக்கையில் இருந் தனர். இதன் மத்தியில் தேசீய சேனையில் இருபதினுயிரம் பேர் களுக்குமேல் சேர்ந்துவிட்டார்கள். அந்தப் படைக்கு மிகுந்த சேதம் விளைவித்துங்கூட, ஆங்கிலேயருக்கு நன்மை எதுவும் ஏற் படவில்லை. ஆனால் ஆங்கிலேயர்களில் சிலர் பலியானது அவர் களின் நிலைமையை மிகவும் பலவீனப்படுத்திவிட்டது.

எனவே, தாற்காலிகமாகத் தற்காப்புப் போரில் ஈடுபடுவ தைத் தவிர வேறு எதுவும் செய்வதில்லை என்று ஆங்கிலேயர்கள் தீர்மானித்தனர். ஏனெனில், அவர்கள் வெற்றி பெற்ருலுங்கூடத் தேசபக்தர்கள் இடைவிடாமல் தாக்கி வந்ததனுல், ஆங்கிலேயர் களின் பாடு திண்டாட்டம் ஆகியது. குறிப்பிட்ட போர்களில் ஆங்கிலேயர்கள் வெற்றியடைந்ததனுல் தேசபக்தர்களின் பலம் குன்றிவிடவில்லை. அதற்கு மாருக அவர்களின் உறுதியும் துணிச்சலுமே பன்மடங்கு அதிகமாயின.

இத்தகைய வெட்கக்கேடான நிலையில் ஆங்கிலப் படையின் மூன்ருவது தளபதியும் பதவியிலிருந்து விலகியதால், மற்ற அதி காரிகள் நம்பிக்கை இழந்து கவலைக் கடலில் ஆழ்ந்தனர்! டில்லி யைக் கைப்பற்றும் எண்ணத்தை விட்டுவிடலாமா என்று அந்த அதிகாரிகள் யோசித்து வருகையில், டில்லி முற்றுகையைக் கைவிடும் விஷயமாகத் தலைமைக் காரியாலயத்திலும் விவாதம்

நடக்கலாயிற்று! அப்போதுதான் தளபதி ரீட்டின் ஸ்தானத்தில் பிரிகேடியர் ஜெனரல் வில்ஸன் நான்காவது தளபதியானான்.

## 24

## கனவும் சூழ்ச்சியும்

சீக்கியச் சிப்பாய்கள் அலாகாபாத் கோட்டையைத் தேச பக்தர்களிடம் ஒப்பிப்பதற்குப் பதிலாக ஆங்கிலேயர்களிடம் ஒப்பித்தார்கள் அல்லவா? அதிலிருந்து ஆங்கிலேயர்கள் அந்தக் கோட்டையைத் தங்களுடைய ராணுவ நடவடிக்கைகளுக்கு முக்கியத் தளமாகச் செய்துகொண்டனர். எனவே அவர்களுக்குக் கல்கத்தா போன்ற வெகு தூரமுள்ள இடங்களிலிருந்து இந்தியா வின் வடபாகத்தில் சிவில் ராணுவ நடவடிக்கைகளை யெல்லாம் மேற்பார்வையிட வேண்டிய கஷ்டம் நீங்கியது. மேலும் புரட் சியை அடக்கி ஒடுக்கும் வரையில் அலாகாபாத்தையே தலை நகராக மாற்றிவிடுவதென்று லார்டு கானிங் தீர்மானித்தான். அதற்கிணங்க அவன் சில தினங்களில் அலாகாபாத் நகருக்குச் சென்று அங்கேயே வசிக்கலானான்.

இதன் மத்தியில் கான்பூரில் ஆங்கிலேயர்கள் தேச பக்தர் களின் கோபத்துக்கு ஆளான செய்தியும், அவசரமாக உதவி தேவை என்ற அவர்களின் கூக்குரலும் அலாகாபாத்துக்கு எட் டின. உடனே ஜெனரல் நீலன் அலாகாபாத்தின் பாதுகாப்புக் காகச் சில சிப்பாய்களை மாத்திரம் வைத்துக்கொண்டு, மற்ற எல் லாரையும் கான்பூரை முற்றுகையிடுவதற்காக, மேஜர் ரெனுட் தலைமையில் அங்கே அனுப்பிவிட்டான்.

அந்தச் சிப்பாய்கள் வழியில் இருந்த கிராமங்களையெல்லாம் எரித்துக்கொண்டு கான்பூருக்குச் சென்றனர். அவ்வமயம் கான் பூர் படைத் தளபதியாக நியமிக்கப்பட்ட ஹாவ்லக், ஜூன் மாதக் கடைசியில் அலாகாபாத் வந்து சேர்ந்தான். அவன் ராணுவத்தில் மிகுந்த பயிற்சியும் அநுபவமும் பெற்றவன். தேச பக்தர்கள் புரட்சியை ஆரம்பித்த சமயத்தில், ஆங்கிலேயர்களின் அதிருஷ்டவசமாகப் பாரசீக யுத்தமும் முடிவுற்றது. எனவே ஹாவ்லக் போன்ற தளபதிகளின் தலைமையில் ஆங்கிலப் படை கள் யாவும் உற்ற சமயத்தில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தன.

அலாகாபாத்தில் ராணுவத்தின் பிரதம அதிகாரியாக ஹாவ்லக் நியமிக்கப்பட்டதும், அவனுக்குக் கீழே தான் இருக்கும் படி நேர்ந்தது, நீலனுக்கு வயிற்றெரிச்சலை உண்டுபண்ணியது. எனினும், தன் தேச நலனை ஒட்டிய விஷயத்தில் சொந்த மாச்சரியம் எதற்கும் அவன் இடம் கொடுக்கவில்லை. ஆகையால் ஹாவ்லக்கின் படைகளுக்குத் தேவையான எல்லாச் சாதனங்களை

யும் சேகரித்துக் கொடுப்பதில் அவன் பெருமுயற்சி எடுத்துக் கொண்டான்.

கான்பூரிலுள்ள ஆங்கிலப் படைகளுக்கு உதவியாகச் செல்ல ஹாவ்லக்கின் படைகள் ஆயத்தமாக இருந்து வருகையில், அங்கே ஹ்யூ வீலர் தோல்வியடைந்து சரண் புகுந்துவிட்டான் என்றும், அவன் உட்பட அங்கிருந்த எல்லா ஆங்கிலேயர்களும் கங்கைக் கரையில் பலியாயினர் என்றும் திடீரென்று செய்தி வந்தது. அந்தச் செய்தியைக் கேட்டதும் ஹாவ்லக் வெறி கொண்டான். கான்பூர் மக்கள்மீது வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற ஆத்திரம் அவனை ஆட்கொண்டது. உடனே வெகு வேகமாகத் தன் படைகளுடன் கான்பூருக்குப் புறப்பட்டான். தேர்ந்தெடுத்த ஆயிரம் ஆங்கிலேயர்கள் அடங்கிய காலாட் படையும், நூற்றைம்பது சீக்கியச் சிப்பாய்களும், ஆங்கிலக் குதிரைப் படை ஒன்றும், ஆறு பீரங்கிகளும் அவனுடன் சென்றன. மற்றும் இந்தியர்களால் ரகசியமாகக் காப்பாற்றப்பட்டுக் கான்பூரில் இருந்து வந்த சிவில் ராணுவ அதிகாரிகளும் ஹாவ்லக்குடன் புறப்பட்டனர். புதிய படை அதிகாரிகளுக்கு, கான்பூர் செல்லும் பாதையைக் காட்டியவர்கள் அவர்களே. இந்தியர்களால்தான் தாங்கள் உயிர் தப்ப முடிந்தது என்பதை நன்றிகெட்ட அந்தப் பாதகர்கள் சிறிதும் எண்ணாமல், இந்திய ஜனங்கள்மீது வஞ்சம் தீர்க்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள். சில இந்தியர்கள் தங்களுக்கு மகத்தான உதவி செய்திராவிடில், கான்பூரில் நிகழ்ந்தவற்றை ஆங்கிலேயர்களிடம் சொல்லுவதற்குக்கூட ஒரு பேர்வழியும் உயிர் தப்பியிருக்க முடியாது என்பதையும் அவர்கள் மறந்து, பல கிராமங்களையும் ஆடவர், பெண், குழந்தைகளுடன் தகனம் செய்வதில் முக்கியப் பங்கெடுத்துக்கொண்டார்கள்.

மேஜர் ரெனுட் தலைமையில் ஒரு படை பக்தபுரியை நோக்கி வந்துகொண்டிருக்கிறது என்ற செய்தி கான்பூருக்கு எட்டியது. உடனே அந்தப் படையை எதிர்ப்பதற்காக நானா சாஹிப் அங்கே பல வீரர்களை அனுப்பினார். ரெனுடின் சிறிய படையைச் சில மணி நேரத்தில் துவம்சம் செய்துவிடலாம் என்ற நம்பிக்கையுடன் ஜ்வாலாப் பிரசாத், டீக்காசிங் இவர்களின் தலைமையில் தேசீய வீரர்கள் அடங்கிய சேனை, பக்தபுரி வந்து சேர்ந்தது. ஆனால் அதற்குள் ஹாவ்லக்கின் படைகளும் ரெனுடிற்கு உதவியாக வந்து சேரவே, இரு படைகளுமாகத் தேச பக்தர்கள்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தன. ரெனுடின் படையைச் சிறிது நேரத்தில் சின்னபின்னமாக்கி விடலாம் என்று நம்பிக்கொண்டிருந்த தேசீய வீரர்களுக்குப் பீரங்கிகளுடனும் மற்ற எல்லாச் சாதனங்களுடனும் வந்திருந்த ஹாவ்லக்கின் பெரும் படையையும் எதிர்பாராத விதமாக எதிர்த்துப் போரிடும்படி நேர்ந்தது. ஜுலை 12-ஆம் தேதி நடந்த அந்த யுத்தத்தில் தேசபக்தர்கள் தங்களுடைய துப்பாக்கிகளையெல்லாம் போர்க்களத்திலேயே விட்டுப் பின் வாங்கும்படி நேர்ந்தது எனவே, ஆங்கிலப் படைகள் வெற்றியுடன் பக்தபுரி நகருக்குள் பிரவேசித்தன.

பக்தபுரியில் புரட்சி ஏற்பட்டபோது ஆங்கிலேயர்களின் ஆட்சியில் உதவி மாஜிஸ்திரேட்டாக இருந்த ஹிக்மத் உல்லா என்பவரே தலைமை வகித்துப் புரட்சியை நடத்தினர். அப்போது அங்கே சில ஆங்கில அதிகாரிகள் தேச பக்தர்களின் வாட்களுக்குப் பலியாயினர். எனவே ஆங்கிலேயர்கள் அந்த நகருக்குள் பிரவேசித்ததும் முதல் காரியமாகத் தங்களுடைய வஞ்ச வெறியைக் காட்ட ஆரம்பித்தார்கள். ஏற்கனவே அந்த நகர மாஜிஸ்திரேட்டாக இருந்தவனும், தேச பக்தர்களால் உயிர்ப் பிச்சை அளிக்கப்பட்டவனுமான ஷெரர் என்பவனும் பகைவர்களுடன் சேர்ந்துகொண்டு, தன் 'அதிகார'த்தைச் செலுத்த ஆரம்பித்தான். நகருக்குள் பிரவேசித்ததும் முதல் முதலாக ஆங்கிலேயர்கள் செய்த காரியம் என்னவெனில், நகரைக் கொள்ளையிடும்படி தங்களுடைய துருப்புகளுக்கு உத்தரவிட்டதுதான்! கொள்ளையடித்த பின் நகருக்குத் தீ வைக்கும் வேலையைத் துரோகிகளான இந்தியப் படைகள் ஏற்றுக்கொண்டு, தங்களுடைய 'பொறுப்பை' ஆங்கிலேயர்கள் எவ்விதத்திலும் குறை கூற முடியாதவாறு நிறைவேற்றின! பிறகு வாலைக் குழைத்துக்கொண்டு ஆங்கிலேயர்களைத் தொடர்ந்து சென்றன.

பக்தபுரியில் மூண்ட புகை ஆகாய மார்க்கமாகக் கான்பூர் சென்றது. அங்கே தேச பக்தர்கள் தோல்வியுற்றதையும், பின்னல் அந்த நகர் கொள்ளையிடப்பட்டு ஜனங்களுடன் தகனமானதையும் கேள்வியுற்ற நாஞ சாஹிபும் கான்பூர் தர்பாரைச் சேர்ந்த மற்றவர்களும் பதைபதைத்து விட்டார்கள்.

கான்பூரை நோக்கி வரும் ஆங்கிலப் படையைப் பாண்டு நதிக்கரையில் தடுப்பதற்காக நாஞ சாஹிபே நேரில் ஒரு படையைக் கொண்டு செல்வதென்று தீர்மானித்தார். ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து கொள்ளுவதற்காகத் தேசபக்தர்களின் படையை விட்டு ஓடிய சில துரோகிகள் கைதியாகி உள்ளனர் என்ற செய்தி கிடைத்தது. அவர்கள்மீது நடந்த வழக்கு விசாரணையின்போது அவர்களில் சிலர், கான்பூரில் சிறைப்பட்டிருந்த ஆங்கிலப் பெண்களிடமிருந்து அலாகாபாத்திலுள்ள ஆங்கிலேயர்களுக்குக் கடிதங்கள் கொண்டு சென்றனர் என்பது ருஜுவாயிற்று. எந்தப் பெண்களின்மீது நாஞ சாஹிப் இரக்கங் கொண்டு, தேச பக்தர்களின் வாள்களுக்கு இரையாகாமல் காப்பாற்றினரோ, அதே பெண்கள் நாஞ சாஹிபுக்கு விரோதமாகச் சதி செய்து துரோகிகளின் மூலம் கடிதங்களை அனுப்பி யிருந்தனர்! எனவே அத்தகைய துரோகிகளும் சதிகாரர்களுமான அந்தப் பெண்களை என்ன செய்வது என்ற கேள்வி எழுந்தது. 'பீபீகரை' (பெண்கள் இருக்கும் இடம்) அழிப்பதன் மூலம் பக்தபுரியை எரித்த ஆங்கிலேயர்கள்மீது ஏன் வஞ்சம் தீர்க்கக் கூடாது என்று பலரும் கர்ஜித்தனர்.

நாஞ சாஹிபின் தலையீடு காரணமாக உயிர் தப்பிய சில ஆங்கில ஆடவர்களும் பீபீகரில் இருந்தனர். அவர்கள்

எல்லாரையும் என்ன செய்வது என்பதுபற்றி அன்றிரவு நடந்த கூட்டத்தில், இந்தியத் துரோகிகளையும் எல்லாக் கைதிகளையும் பலியிடுவது என்று ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேறியது. அதற்கிணங்க, துரோகிகளையும், ஆங்கில ஆடவர்களையும் மறுநாள் சிறைக்கு வெளியே இழுத்து வந்து வரிசையாக நிறுத்தி வைத்தனர். முதலாவதாகத் துரோகிகளை நானா சாஹிபின் எதிரில் சிரச்சேதம் செய்தார்கள். பின்னல் ஆங்கில ஆடவர்கள் சுடப்பட்டனர். அவர்களுக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனை நிறைவேறிய பின் நானா சாஹிப் அவ்விடத்தை விட்டுச் சென்றுர்.

பீபீகரிலுள்ள ஆங்கிலப் பெண்களுக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனையையும் நிறைவேற்றும்படி சிப்பாய்கள் உத்தரவிடப்பட்டனர். பெண்களைக் கொல்லச் சிப்பாய்கள் நயங்கியதால், கான்பூர் நகர் கசாப்புக் கடையைச் சேர்ந்த சிலரைத் தருவித்து அந்தக் கைங்கரியத்தை நிறைவேற்றும்படி நேர்ந்தது. சிறையில் இருந்த பெண்களும் குழந்தைகளுமாக நூற்றைம்பது பேர்கள் தாங்கள் செய்த துரோகத்தின் விளைவாகப் பலியாயினர். பக்தபுரியில் பலியான நிரபராதிகளுக்குப் பிரதியாக பாண்டேக்கள் அவ்வளவு சீக்கிரத்தில் பழிவாங்கி விட்டார்கள். நீதி வாட்களுக்கு இரையான அந்தத் துரதிருஷ்டசாலிகளின் பிரேதங்களைச் சமீபத்தில் இருந்த கிணற்றில் தள்ளி மூடினர். வெகு காலமாக ஜனங்களுக்குத் தண்ணீர் கொடுத்து அவர்களுடைய தாகத்தைத் தணித்து வந்த அந்தக் கிணறு ஆங்கிலேயர்களின் ரத்தத்தைக் குடித்துத் தன் தாகத்தைத் தணித்துக்கொள்ள வேண்டும் என்பது ஆண்டவன் கட்டளை போலும்!

நானு சாஹிபால் அனுப்பப்பட்ட சேனையைப் பாண்டு நதிக் கரையில் தோற்கடித்த ஹாவ்லக் தன் படைகளுடன் மேற்கொண்டு முன்னேறி வந்தான்; நானு சாஹிபின் சகோதரரான தளபதி பாலா சாஹிப் பேஷ்வாவின் தோளில் ஒரு தோட்டா பாய்ந்ததால் அவர் திரும்பிக் கான்பூருக்கு வந்து சேர்ந்தார். எனவே எதிர்காலத் திட்டத்தை நிர்ணயிப்பதற்காக நானு சாஹிப் யுத்தசபை ஒன்றைக் கூட்டினுர். ஆங்கிலேயர்கள் சகல சாதனங்களும் கூடிய பெரும் படையுடன் வந்ததால், அவர்களை எதிர்த்து நிற்பதா, அல்லது போர் எதுவுமின்றிக் கான்பூரைக் காலி செய்துவிடுவதா என்பதுபற்றி விவாதம் நடந்தது. நீண்ட நேர ஆலோசனைக்குப் பின் கடுமையாக எதிர்ப்பது என்று தீர்மானமாயிற்று.

ஜூலை 10-ஆம் தேதி ஆங்கிலப் படைகள் கான்பூருக்கு அருகில் வந்தன. அங்கே ஆங்கிலப் பெண்கள் பலியான சம்பவம் ஹாவ்லக் கோஷ்டியினருக்குத் தெரியாது. வீலர் முதலியோர் இறந்துவிட்டனர் எனினும், அங்கிருந்த பெண்களையாவது காப்பாற்ற வேண்டும் என்ற ஆர்வத்துடன் அவர்கள் சிறிது நேரங்கூட ஓய்வெடுத்துக் கொள்ளாமலும், களைப்பு, வெயில் முதலிய எதையும் பொருட்படுத்தாமலும்

கான்பூருக்கு வந்துகொண் டிருந்தார்கள். கான்பூர்ச் சிகரங்கள் தெரிந்ததும், நம்பிக்கையால் ஹாவ்லக்கின் வேகம் அதிகமா யிற்று. தேச பக்தர்களின் படைப்பலத்தை அறிந்து வருவதற் காக ஆங்கிலேயர்கள் சில ஒற்றர்களை அனுப்பி யிருந் தனர். தேச பக்தர்களின் படை அமைப்பை மிகவும் தந்திர சாலிகளும் போர்க்களங்களில் அநுபவம் பெற்றவர்களுமான ஒற்றர்கள் பார்த்த பின்புதான், தேச பக்தர்களிடையே சிறந்த ராணுவ நிபுணர்கள் இருப்பது அவர்களுக்குத் தெரிய வந்தது.

மத்தியான்னம் ஆங்கிலேயர்கள் நாஞ சாஹிபின் படையின் இடது பகுதியைப் பயங்கரமாகத் தாக்க ஆரம்பித்தனர். உடனே தேசீயப் பீரங்கிப் படைகள் வெகு கடுமையாக வேலை செய்யத் தொடங்கின. ஆங்கிலேயர்களின் பீரங்கிகள் அவ் விடத்துக்கு வரத் தாமதம் ஆகியதால், தேச பக்தர்களின் பீரங்கிகள் ஆங்கிலேயர்களிடையே பெரும் சேதத்தை விளை வித்தன. கலகக்காரர்களின் வெற்றியைக் கண்டு ஆத்திர மடைந்த ஹாவ்லக் என்ன நேர்ந்தாலும் ஓர் அங்குலங்கூடப் பின்வாங்காமல் முன்னேறுமாறு தன் படைகளுக்கு மிகுந்த துணிச்சலுடன் உத்தரவிட்டான். அவனது படை ஒருமித் தும், திடீரென்றும் ஒழுங்காகவும் முன்னே பாய்ந்து வந்ததால் தேசீயப் படை தன் பீரங்கிகளைப் போர்க்களத்திலேயே விட்டுப் பின்வாங்கும்படி நேர்ந்தது. அந்தப் படையின் இடது பகுதி அவ்வாறு பின்வாங்குகையில், வலது பகுதி ஆங்கிலேயர்களின் பீரங்கிகளைச் சமாளிக்க முடியாமல் தோல்வியுற்றது.

ஆங்கிலப் படைகள் வெற்றியடைந்ததைக் கண்டதும் தேச பக்தர்கள் எல்லாரும் கான்பூர் செல்லும் சாலை வழி யாகப் பின்வாங்க ஆரம்பித்தனர். எனினும் அச் சமயத்திலும் மகா தைரியசாலியான நாஞ சாஹிப் கலக்க மடையாமல் சிப்பாய்களை உற்சாகப்படுத்தி, மீதியுள்ள பீரங்கி களைக் கொண்டு போரைத் தொடர்ந்து நடத்தும்படி செய் தார். மீண்டும் தேசீய வீரர்கள் நாஞ சாஹிபின் உதாரணத் தைப் பின்பற்றி உக்கிரமாகப் போர் புரிந்தனர் எனினும், பிரம்மாண்டமான ஆங்கிலப் படையின் கட்டுக்கோப்பான எதிர்ப்பை அவர்களால் சமாளிக்க முடியவில்லை. பல தேசபக் தர்களும் முன் வைத்த காலைப் பின் வைக்காமல் வீர சுவர்க் கம் அடைந்தனர். ஆயினும் என்ன? இறுதியில் மீதியிருந்த சகலரும் பிரம்மாவர்த்தத்தை நோக்கிப் பின்வாங்கும்படியே நேர்ந்தது.

ஹாவ்லக்கின் படைகள் வெற்றி வெறியுடன் ஜூலை 17-ஆம் தேதி கான்பூர் நகருக்குள் பிரவேசித்தன. மகத்தான தேசீயப் புரட்சிக்குப் பின் ஆங்கிலேயர்கள் அடைந்த முதல் வெற்றி அதுவேயாதலால். ஆங்கிலேயர்களின் கௌரவத்தை மீண்டும் ஸ்தாபித்ததற்காக இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள வெள்ளையர்கள் எல்லாரும் ஹாவ்லக்கிற்கு வாழ்த்துக் கூறினர். இங்கிலாந்தின் தெரு ஓரங்களிலும், கடைகளின்

விளம்பரப் பலகைகளிலும், பொது விடுதிகளின் சுவர்களிலும் ஹாவ்லக்கின் பெயர் செதுக்கப்பட்டது.

கான்பூரைக் கொள்ளையடிக்கலாம் என்று ஆங்கிலத் தளபதி உத்தரவிட்டதும், ஆங்கில அதிகாரிகள், சிப்பாய்கள், இந்தியத் துரோகிகள் முதலியோர், படுகாயமடைந்து கீழே விழுந்து கிடக்கும் சிங்கத்தின்மீது பாயும் கழுகுகளைப்போல் கான்பூர்மீது பாய்ந்தனர்! ஆங்கிலப் பெண் கைதிகள் வைக்கப்பட்டிருந்த இடத்தில் சிந்தியிருந்த ரத்தத்தைக் கண்டதும் வெள்ளையர்களின் வெறி பன்மடங்கு அதிகமாகியது. உடனே அவர்கள் கான்பூரில் இருந்த பல பிராம்மணர்களைக் கைது செய்து, அவர்கள் புரட்சியில் சம்பந்தப்பட்டதாகக் குற்றஞ்சாட்டி அவர்களுக்கு மரண தண்டனை விதித்தனர். மற்றும் அவர்கள் எல்லாரையும் தூக்கில் இடுமுன், ரத்தம் சிந்திய இடத்தை நக்கும்படி செய்ததுடன், அங்கே தண்ணீரைக் கொட்டித் துடைப்பத்தால் சுத்தம் செய்யும்படியும் வற்புறுத்தினார்கள்.

கொடிய கைதிகளாயினும், தூக்கில் இடுமுன் இவ்விதம் அவமதிப்பது என்பது உலக சரித்திரத்திலேயே கண்டும் கேட்டும் இராத தண்டனையாகும். இத்தகைய அக்கிரமமான தண்டனை விதித்ததற்குக் காரணத்தை விளக்கிக் கொடிய ஆங்கில அதிகாரி ஒருவன் கூறியதாவது: 'ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தாங்கள் முறையே ஹிந்துக்களாகவும் முஸ்லிம்களாகவும் இறக்கிறோம் என்ற மன ஆறுதல்கூட இருக்கக்கூடாது. தூக்கில் இடுமுன் அவர்களுடைய மத உணர்ச்சிகளை நசுக்கினால்தான் நாம் அவர்கள்மீது உண்மையான வஞ்சம் தீர்த்தவர்கள் ஆவோம்.'

சில இடங்களில் புரட்சிக்காரர்கள் ஆத்திரமடைந்து ஆங்கிலேயர்களைப் பலியிட்டபோதும், அவர்களுடைய மத உணர்ச்சியைப் புண்படுத்தியதே இல்லை. இதற்குமுன் அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பைபிளை வாசிக்கவும் அநுமதித்தனர். ஆனால் ஆங்கிலேயர்களோ, டில்லியிலும் கான்பூரிலும் தாங்கள் படுகொலை செய்த தேச பக்தர்களின் மத உணர்ச்சியைப் புண்படுத்தத் தவறவே இல்லை. அவ்விதம் இருந்துங்கூடத் தேசிய வீரர்களில் பலரும் தங்களுடைய லட்சியம் ஒன்றையே உயிரினும் இனியதாகக் கருதி, புன்முறுவலுடன் மரணத்தை வரவேற்றனர். மிக மிகப் புனிதமான லட்சியத்துக்காக உயிர்த் தியாகம் செய்கிறோம் என்ற எண்ணத்தினால், அவர்கள் எத்தகைய துன்பங்களையும் பொருட்படுத்தவில்லை. அவர்கள் மாண்ட தூக்கு மேடைகளும் அவர்களுடைய சம்பந்தத்தினால் புனிதம் அடைந்தன!

அந்த வீரத் தியாகிகளைப்பற்றி ஆங்கில சரித்திராசிரியரான சார்லஸ் பால் கூறியிருப்பதைக் கண்ணுறும் கன்னெஞ்சர்களுக்கும் உடல் சிலிர்க்கும் என்பதில் ஐயம் உண்டோ! அந்த விவரம் இதுதான்: 'கான்பூரில் ஹ்யூ வீலர் புரட்சிக்காரர்களால் மாண்டதற்காக ஜெனரல் ஹாவ்லக் பயங்கரமான வஞ்சம் தீர்க்க ஆரம்பித்தார். அது காரணமாகச் சுதேசிகள் கோஷ்டி கோஷ்டியாகத் தூக்கில் இடப்பட்டு மாண்டனர். ஓர் லட்சியத்தி

லுள்ள மகத்தான பற்றுதல் காரணமாக உயிர்த் தியாகம் செய்பவர்கள் போன்று அவர்கள் ஆச்சரியகரமான மன அமைதியுடனும், கம்பீரமான முகத் தோற்றத்துடனும் தூக்குமேடை ஏறினர். நானா சாஹிபின் ஆட்சியில் கான்பூரில் மாஜிஸ்திரேட்டாக இருந்த ஒருவரைக் கைதுசெய்து, அவர்மீதுள்ள வழக்கை விசாரித்தபோது, அவர் விசாரணை நடவடிக்கைகளைச் சிறிதும் கவனியாமல் வேறு எவர்மீதோ வழக்கு நடப்பதுபோல் வெகு அலட்சியமாக இருந்தார். அவருக்கு மரண தண்டனை விதித்த பின் அவர் கம்பீரமாக எழுந்து நின்று, நீதிபதிக்குப் பின்புறத்தைக் காட்டிக்கொண்டே எள்ளளவும் கலக்கமின்றி நிமிர்ந்து நடந்து தனக்காக அமைக்கப்பட்டிருந்த தூக்கு மேடைக்கு அருகில் சென்றார். தூக்கு மேடை வேலையாட்கள் இறுதியான ஏற்பாடுகளைச் செய்துகொண் டிருக்கையில், அவர் வேடிக்கை பார்ப்பவர்போல் புன்முறுவலுடன் அவர்களின் அலுவல்களைக் கவனித்துக்கொண் டிருந்தார். பிறகு சிறிதும் மனக் கலக்கமோ, மனக் கிளர்ச்சியோ, சோர்வோ எதுவும் இன்றி, ஒரு யோகி சமாதிக்குள் பிரவேசிப்பது போல் அவரும் தூக்கு மேடையில் ஏறினார்! நாஸ்திகர்களான அந்நியர்களுடன் சம்பந்தம் வைத்துக்கொள்ளுவதைக் காட்டிலும் மரணம் சொர்க்கலோக சுகத்துக்கு ஒப்பாகும் என்பது அவரது நம்பிக்கை! அதனாலேயே அவரால் மரணத்தை அவ்வளவு அமைதியாக வரவேற்க முடிந்தது.'

கான்பூருக்குள் பிரவேசித்த பிரிட்டிஷ் படைகள் கண்மூடித் தனமான வெறிகொண்டு வஞ்சம் தீர்த்து வருகையில் தைரியமாகவும் உறுதியுடனும் போராடி வெற்றி பெற்ற 'ஆங்கிலப் படைகளையும் சீக்கியர் படைகளையும் ஹாவ்லக் பிரமாதமாகப் புகழ்ந்துகொண் டிருந்தான். அதன்பின், அலாகாபாத்தின் பாதுகாப்புக்குப் போதிய படைகளை அங்கே வைத்துவிட்டு நீலனும் கான்பூருக்கு வந்து சேர்ந்தான். எனவே கான்பூரைக் காவல் புரியும் பொறுப்பை நீலனிடம் ஒப்படைத்துவிட்டு ஹாவ்லக் தன் துருப்புகளுடன் அயோத்திக்குப் புறப்பட்டுச் சென்றான்.

உடனே நீலனுடைய மூளை தீவிரமாக வேலை செய்ய ஆரம்பித்தது. கான்பூரைப் 'பாதுகாக்க' அவன் புதிய யுக்தி ஒன்றைக் கண்டுபிடித்தான். அதாவது தாழ்த்தப்பட்டோரான மஹரர்கள் அடங்கிய படை ஒன்றை ஏற்படுத்தி, நகரத்தின் பாதுகாப்பை அவர்களிடம் ஒப்பித்தான். துர்ப்பாக்கியவசமாக இந்தியாவில் நிலவும் சாதி வேற்றுமையை அவன் ஆங்கிலேயர்களுக்குச் சாதகமாக உபயோகித்துக்கொள்ள முயன்ற சூழ்ச்சி, ஆச்சரியகரமாக வெற்றியும் பெற்றது. சுதந்தர உணர்ச்சி மிகுதியால் ஹிந்து, முஸ்லிம் வேற்றுமை மறைந்து ஒழிந்தபோது, ஆங்கிலேயர்கள் சாதி வேற்றுமையைத் தூண்டித் தங்களுடைய கொடுங்கோலை நிலைநிறுத்த முயன்றனர். கான்பூர் வீழ்ச்சி அடைந்தபின், நானா சாஹிப் பேஷ்வா கங்கையைக் கடந்து தமது பொக்கிஷத்துடனும் படைகளுடனும் பிரம்மாவர்த்தத்துக்குப் புறப்பட்டார். வழியில் அவர் முதல் முதலாகப் பதேகடில் தம் முகாமை அமைத்துக்கொண்டார். ஹாவ்லக்கின் தலைமையில் சென்ற படைகளால் நானா சாஹிப் இருக்கும் இடத்தை

அறிந்துகொள்ள முடியவில்லையாதலின், அவர்கள் எல்லாரும் (ஹாவ்லக்கும் அவன் துருப்புகளும்) லக்ஷ்மணபுரியை நோக்கிச் சென்றார்கள்.

ஜூன் மாத முடிவிற்குள் அயோத்தி மாகாணம் முழுவதும் புரட்சிக்காரர்கள் பரவிவிட்டதால், மாகாணத்தின் வழியாக ஆங்கிலப் படைகள் செல்லுவது என்பதும், ஹென்ரி லாரென்ஸுக்கு உதவியாக லக்ஷ்மணபுரியை முற்றுகையிடுவது என்பதும் எளிய விஷயம் அல்ல. எனினும் வெற்றி வெறி கொண்ட ஹாவ்லக்கிற்கும் அவன் துருப்புகளுக்கும் கங்கையைக் கடந்து செல்லுவதும் லக்ஷ்மணபுரியை முற்றுகையிடுவதும் அற்பமான காரியமாகத் தோன்றின. கண்ணால் பார்த்த மாத்திரத்தில் டில்லியை ஜயித்துவிடலாம் என்ற ஆசை பாஞ்சாலத்திலிருந்து வந்த ஆங்கிலேயர்களை ஆட்கொண்டது போலவே, கங்கையைக் கடந்துவிட்டால் உடனே வெகு சுலபமாக லக்ஷ்மணபுரியைக் கைப்பற்றி விடலாம் என்ற ஆசை ஹாவ்லக் கோஷ்டியினரையும் ஆட்கொண்டது.

லக்ஷ்மணபுரி கான்பூரிலிருந்து அதிக தூரம் இல்லை என்பது உண்மையே. மற்றும் ஹாவ்லக் பிரமாதமான வேகத்துடன் அலாகாபாத்திலிருந்து கான்பூருக்கு வந்து வெகு துரிதமாக அந்த நகரைக் கைப்பற்றினான் என்பதும் உண்மையே. அத்தகைய வெற்றியே அவனை, எவ்வளவு மகத்தான காரியத்தையும் அலட்சிமாகக் கருதும்படி செய்தது.

அவ்வமயம் அயோத்தியில் தேசீயப் புரட்சித் தீ பரவாத இடம் ஓர் அங்குலங்கூட இல்லை. இந்தியாவில் அப்போது புரட்சியை ஆரம்பித்த சிப்பாய்களில் பலரும் அயோத்தியில் பிறந்தவர்களாதலின், அவர்களுடைய பெற்றோர்கள், குழந்தைகள், உறவினர்கள், நண்பர்கள் முதலிய எல்லோருடைய இருதயத்திலும் புரட்சி அனல் வீசிக்கொண்டிருந்தது. அயோத்தியைச் சேர்ந்த ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு குடிசையிலும் புரட்சி உணர்ச்சி பொங்கிக்கொண்டிருந்தது.

ஆயினும் வெற்றி வெறியால் மமதை கொண்ட ஹாவ்லக் அத்தகைய நிலைமையைக் கண்டு அஞ்சவில்லை. சிறிது நேரத்தில் லக்ஷ்மணபுரியைக் கைப்பற்றிவிடலாம் என்றும், பின்னர் டில்லி சென்று அதைக் கைப்பற்றிய பின் ஆக்ராவையும் ஆக்கிரமித்துக் கொள்ளலாம் என்றும் உற்சாகத்துடன் நம்பிக்கொண்டிருந்தான். அந்த நிலைமையில் அவன் இரண்டாயிரம் ஆங்கிலத் துருப்புகளுடனும், பத்துப் பீரங்கிகளுடனும் ஜூலை 25-ஆம் தேதி கங்கையைக் கடந்தான். இவ்வாறாக ஒரு புறம் கான்பூரில் நீலன் சூழ்ச்சி செய்துவருகையில், மற்றொரு புறம் லக்ஷ்மணபுரி, டில்லி, ஆக்ரா முதலிய நகரங்களை மின்னல் வேகத்தில் கைப்பற்றிவிடலாம் என்று மனோராஜ்யம் செய்துகொண்டே ஹாவ்லக் லக்ஷ்மணபுரியை நோக்கிச் சென்றான்.

## 25

## ராமர் இருக்குமிடம் அயோத்தி!

அலாகாபாத், ஆக்ரா, வங்காள மாகாணங்களை ஆட்கொண்ட புரட்சித் தீயிலிருந்து பீகார் மாகாணமோ, அதன் தலைநகரமான பாடலிபுரமோ ஒதுங்கி நிற்கவில்லை. அந்த மாகாணமும் அந்தத் தீயில் குதித்துவிட்டது. அதைச் சேர்ந்த கயா, ஆரா, சப்ரா, மோதிஹாரி, முஸாபர்புர் முதலிய பல நகரங்களும் புரட்சியில் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டன. அந்த மாகாணத்தை அடக்கி வருவதற்காக, பாடலிபுரத்துக்கு அருகிலுள்ள தனபுரி நகரில் ஆங்கிலப் படைகள் வைக்கப் பட்டிருந்தன. அங்கே 7-ஆவது, 8-ஆவது, 40-ஆவது இந்தியக் காலாட் படைகளும், அவற்றைக் கண்காணித்து வருவதற்காக ஐரோப்பியத் துருப்புகளும் ஐரோப்பிய பீரங்கிப் படையும் வைக்கப்பட்டிருந்தன. அவை எல்லாம் மேஜர் ஜெனரல் லாயிடின் தலைமையில் இருந்து வந்தன. அவற்றைத் தவிரச் சமீபத்தில் உள்ள சிக்வாலியில் மேஜர் ஹோம்ஸ் தலைமையில் 12-ஆவது இந்தியக் குதிரைப் படைகளும் இருந்தன.

சரித்திரப் பிரசித்தமான பாடலிபுரம் மிகவும் வல்லமை பொருந்திய வஹாபியர்களின் முக்கிய ஸ்தானமாக இருந்தது. புரட்சியில் அந்த நகர் நிச்சயமாகப் பங்கெடுத்துக்கொண்டே தீரும் என்பதில் கமிஷனரான டெய்லருக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. எனவே அவன் வஹாபியர்களின் தலைவர்களை வெகு நுணுக்கமாகக் கண்காணித்து வந்தான்.

இந்தியாவில் ஆங்கில நுகத்தடியை ஆதிமுதல் அறவே வெறுத்து வந்த நகரங்களுள் பாடலிபுரமும் ஒன்று. ஆங்கில ஆதிக்கத்தை வீழ்த்தும் நோக்கத்துடன் 1852-ஆம் வருஷத்திலேயே அங்கே ஓர் ரகசியச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டு விட்டது. அந்தச் சங்கத்தில் மிகுந்த செல்வாக்குள்ளவர்களும் செல்வர்களுமான வியாபாரிகள், பாங்கர்கள், ஜமீன்தார்கள், பிரபல மௌல்விகள் முதலியோர் அங்கம் வகித்ததால், அதன் அலுவல்களைச் சிறந்த முறையில் நடத்துவதற்குத் தேவையான ஏராளமான நிதியும் அதனிடம் இருந்து வந்தது.

வெகு தூரத்தில் உள்ள எல்லைப்புற ஜில்லாக்களிலும் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகப் புரட்சியை உருவாக்குவதற்காகப் பாடலிபுரத்து ரகசியச் சங்கம் அவ்விடங்களுக்கு ஏராளமான தொகையும் அனுப்பி வந்தது. போலீசாரும் புரட்சியில் சேர்ந்துகொண்டிருந்ததால், இரவில் நடைபெறும் ரகசியக் கூட்டங்களுக்கு யாதொரு தடையும் ஏற்படவில்லை. சங்க அங்கத்தினர்களில் பலரும் பல்வேறு காரணங்களைக் கூறிக்கொண்டு தங்களிடம் நூற்றுக்கணக்கான சிப்பந்திகளை அமர்த்திக்கொண்டிருந்தனர். ஆனால் உண்மையில் அவர்கள் எல்லாரும் புரட்சிக்காரர்களே. ரகசியச் சங்க நிதியிலிருந்தே அந்தச் சிப்பந்திகள் எல்லாருக்கும் சம்பளம் கொடுக்கப்பட்டு வந்தது.

ஆங்கில ஆட்சியைச் சாம்பலாக்குவதற்காகப் பாடலிபுரத்தில் எரிந்து வந்த தேசீய வேள்வித் தீயின் ஜ்வாலை, அந்த மாகாணம் முழுவதும் ஜனங்களிடையே மிகுந்த உத்வேகத்தை உண்டாக்கியது.

தனபுரி முகாமில் இருந்த சிப்பாய்கள் இரவில் மரங்களின் கீழ் ரகசியக் கூட்டங்கள் கூட்டித் தங்களுடைய திட்டங்களை உருவாக்கி வந்தனர். இரவில் காவல் புரியும் ஆங்கிலேயர் யாராவது அந்தக் கூட்டங்கள் நடப்பதைக் கண்டுபிடித்துவிட்டால், உடனே தேசபக்தர்கள் தங்களுடைய ரகசியம் வெளியாகிவிடாமல் இருப்பதற்காக அவரைக் கொன்றுவிடுவது வழக்கம். புரட்சியை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகளெல்லாம் அங்கே பூர்த்தியானதும், அங்குள்ள தலைவர்கள் டில்லியிலும் லக்ஷ்மணபுரியிலும் உள்ள ரகசியச் சங்கங்களுடன் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்தனர்.

புரட்சியை எப்போது ஆரம்பிப்பது என்பதுபற்றித் தேச பக்தர்களுக்குள் ஆலோசனை நடந்து வந்தபோதுதான், மீரத் எழுச்சி பற்றிய செய்தி கமிஷனரான டெய்லருக்கு எட்டியது. அதை அடுத்து, தனபுரிச் சிப்பாய்களிடையேயும் அமைதியின்மை நிலவி வருகிறது என்ற செய்தி கிடைத்தது. டெய்லர் மிகவும் சாமர்த்தியசாலி. பாடலிபுரத்தைப் பாதுகாப்பதற்காக அவன் உடனே ராட்ரேயின் தலைமையில் இருநூறு சீக்கியச் சிப்பாய்கள் அடங்கிய ஒரு படையை அனுப்பினான். அந்தப் படை பாடலிபுரத்துக்குச் சென்றபோது, வழி நெடுக ஜனங்கள் அந்தத் துரோகிகளை வெறுத்துச் சபித்தனர். 'நீங்களெல்லாரும் உண்மையான சீக்கியர்களா, அல்லது பறங்கியர்களாக மாறிவிட்டீர்களா?' என்று அவர்களை இடித்துக் கூறி நமக்ஹராம் (தேசத் துரோகம்) செய்த பாவிகளென்றும் அவர்களை வெறுத்தனர். உற்ற சமயம் வரும்போது தேசத்திற்காகப் போரிடும்படியும் அவர்களை மக்கள் ரகசியமாகவும் பகிரங்கமாகவும் கேட்டுக்கொண்டார்கள்.

அவ்விதம் மாகாண ஜனங்கள் எல்லோருடைய சாபத்துடனும் அந்தப் படையினர் பாடலிபுரத்துக்குள் பிரவேசித்தபோது, அவர்களைக் கண்டதும் அந்த நகர சகோதர சகோதரிகளுக்கு உண்டான ஆத்திரம் கொஞ்சநஞ்சம் அல்ல. அவர்களைப் பார்ப்பதுங்கூடப் பெரும் பாவமென்று கருதி ஒவ்வொருவரும் முகத்தை வெறுப்புடன் திருப்பிக்கொண்டனர். சீக்கிய ஆலய குருமார், அவர்களை ஆலயத்துக்குள் அநுமதிக்கவும் மறுத்துவிட்டார்கள். அவர்கள் மகான் குரு கோவிந்த சிம்மனின் உண்மையான பக்தர்கள் அல்ல என்றே எல்லாராலும் கருதப்பட்டனர்.

பாடலிபுரத்துக்குத் துரோகிகள் படை வந்ததும், டெய்லர் அந்த மாகாணத்தில் புரட்சி அலுவல்களை முளையிலேயே கிள்ளி எறிந்துவிட முற்பட்டான். திர்ஹூத் ஜில்லாவில் போலீஸ் ஜமேதாராக இருந்த வரீஸ் அலியின் நடத்தை ஆங்கிலேயர்களுக்குச் சந்தேகத்தை உண்டுபண்ணியதால், அவர்கள்

திடீரென்று அவருடைய வீட்டைச் சூழ்ந்துகொண்டு அவரைக் கைது செய்தார்கள். அவ்வமயம் அவர் கயா புரட்சித் தலைவரான அலி கரீமுக்கு ஒரு கடிதம் எழுதிக்கொண்டிருந்தார். அவருடைய வீட்டிலிருந்து கைப்பற்றப்பட்ட கடிதங்களைச் சாட்சியாகக் கொண்டு ஆங்கிலேயர்கள் அவருக்கு மரண தண்டனை விதித்தனர். பின்னுல் அவரை ஆங்கில அரக்கர்கள் தூக்கு மேடைக்குக் கொண்டு வந்தபோது, அவர் கம்பீரமாகச் சுற்றுமுற்றும் பார்த்து, 'இவ்விடத்தில் உண்மையான, அஞ்சா நெஞ்சம் படைத்த தேசபக்தர் யாராவது இருப்பாராயின், அவர் என்னை விடுவிக்கட்டும்' என்று கர்ஜித்தார். எனினும், அந்தக் கர்ஜனை தேசபக்தர்களின் செவிகளில் விழுமுன்னரே, அவரது உயிரற்ற சடலம் தூக்கு மரத்தில் தொங்கியது.

கயாவைச் சேர்ந்த தலைவரான அலி கரீமையும் உடனே கைது செய்யும்படி ஆங்கிலேயர்கள் உத்தரவிட்டு அதற்காக ஆங்கிலப் படை ஒன்றையும் அனுப்பினர். அந்தப் படையின் தலைவனுகச் சென்ற லூரயி, அலி கரீம் இருக்கும் இடத்திற்குப் போய் அவரைக் கண்டு பிடித்ததும், அலி கரீம் கலங்கவில்லை: அவனிடம் அகப்பட்டுக்கொள்ளாமல் தப்பி ஓடிவிட்டார்.

மாகாணம் எங்கும் புரட்சியில் சம்பந்தப்பட்டதாகப் பலரும் கைதியாகி வருகையில், நகரிலுள்ள பல தலைவர்களின் பெயர்களையும் டெய்லர் அறிந்துகொண்டு அவர்கள் எல்லாரையும் திடீரென்று கைது செய்யத் தீர்மானித்திருந்தான். இரவில் தலைவர்களின் வீடுகளில்தான் ரகசியக் கூட்டங்கள் நடைபெறுவது வழக்கம். யார் யார் அந்தக் கூட்டங்களுக்குச் செல்லுகிருர்கள் என்பதுபற்றியோ, அல்லது அவர்களால் என்ன திட்டம் வகுக்கப்பெற்றிருக்கிறது என்பதுபற்றியோ டெய்லருக்கு யாதொரு தகவலும் கிடைக்கவில்லை. எனினும், அந்த நகரிலுள்ள மூன்று முல்லாக்கள் புரட்சிக் கூட்டங்களில் முக்கியப் பங்கெடுத்துக்கொண்டு வருகிருர்கள் என்பது மாத்திரம் அவனுக்குத் தெரியும். அம் மூவரும் மிகுந்த செல்வாக்கு உடையவர்களாதலால் அவர்களை உடனே கைது செய்துவிட வேண்டியது மிக அவசியம் என்று நினைத்தான். அவர்களைப் பகிரங்கமாகக் கைது செய்யவும் அவன் துணியவில்லை. அவ்விதம் கைது செய்தால், தான் அடக்க விரும்பும் புரட்சி உடனே பீரிட்டுக்கொண்டு கிளம்பிவிடும் என்பதே அவனது பீதியாகும்.

அந்த விஷயமாக எத்தகைய அசம்பாவிதமும் ஏற்படாமல் இருப்பதற்காக ஒரு யுக்தி செய்தான். ஒரு முக்கிய அரசியல் விஷயமாகக் கலந்து ஆலோசிக்க வேண்டுமென்று சில பிரமுகர்களை அவன் தன் வீட்டுக்கு அழைத்திருந்தான். எல்லாரும் வந்தவுடன் டெய்லர் சீக்கியப் படையுடன் அங்கே வந்து சேர்ந்தான். அவர்கள் சிறிது நேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தபின் புறப்பட்டுச் செல்லும் தறுவாயில், அவர்களில் மூன்று மௌல்விகளை மாத்திரம் அவன் தடுத்து, 'இந்தக் கொந்தளிப்பான காலத்தில் உங்களைச் சுதந்தரத்துடன் விட்டுவைப்பது ஆபத்தாகும்' என்று அமைதியாகவும் புன்முறுவலுடனும்

கூறி, அவர்களைக் கைது செய்தான். உற்ற சமயத்தில் டெய்லர் அந்த மூவரையும் கைது செய்ததை ஆங்கிலேயர்கள் பிரமாத மாகப் புகழ்ந்தார்கள்.

அவன் ஒரு துளிகூட ரத்தம் சிந்தாமல் அந்த மூன்று பிர பலத் தலைவர்களையும் கைது செய்துவிட்டான். திடீரென்று நேர்ந்த அந்தச் சம்பவத்தினால் உண்டான குழப்பம் தீருவதற்குள் பாடலிபுரத்துக்குப் பெரும் அடி கொடுக்கத் தீர்மானித் தான். அதன்படி நகரிலுள்ள சகலரையும் நிராயுதபாணிகள் ஆக்கும்படியும், இரவு ஒன்பது மணிக்கு மேல் எவரும் வீட்டுக்கு வெளியே வரக் கூடாதென்றும் கட்டளைகள் பிறப்பித்தான். அந்த உத்தரவுகளின் விளைவாக இரவில் ரகசியக் கூட்டங்கள் நடத்துவது அசாத்தியமானதுடன், ஆயுதங்களைச் சேகரித்து வைப்பதும் தேசபக்தர்களுக்குக் கஷ்டமாயிற்று. புரட்சியை ஆரம்பிக்கும் விஷயமாகத் தனபுரியிலிருந்து சமிக்ஞை வரு மென்று பாடலிபுரத்து ரகசியச் சங்கம் அதுவரையில் எதிர்பார்த் துக்கொண் டிருந்தது. ஆனால் புரட்சி இயக்கத்தின் உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும் முறைகளை ஆங்கிலேயர்கள் கைக் கொள்ள ஆரம்பித்ததும், இயக்கம் நசுக்குண்டு போகும்படி விடு வதைக் காட்டிலும் உடனே துணிச்சலுடன் புரட்சியை ஆரம் பிப்பதே சிறந்தது என்று தேசபக்தர்கள் தீர்மானித்தனர்.

ஜுலை 3-ஆம் தேதியன்று பீர் அலி என்ற தலைவரின் வீட் டுக்குச் சுமார் இருநூறு முஸ்லிம்கள் வந்தனர். மேற்கொண்டு செய்யவேண்டிய அலுவல்களை நிர்ணயம் செய்தபின், அவர்கள் எல்லாரும் தேசீயக் கொடிகளுடனும் தேசீய கோஷங்களுட னும் அந்த வீட்டிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டுச் சென்றார் கள். அதைக் கேள்வியுற்ற லயால், சில துருப்புகளுடன் அவர் களை எதிர்க்க வந்தபோது, ஊர்வலத்துக்குத் தலைமை வகித்து வந்த பீர் அலி அவனை நோக்கிச் சுட்டதில் அவன் வீழ்ந்து மாண் டான். ஆனால் பிறகு ராட்ரே, துரோகிகள் அடங்கிய ஒரு பெரும் படையுடன் வந்து தேசபக்தர்களைக் கடுமையாகத் தாக் கவே, அவர்கள் சிதறுண்டனர். உடனே ஆங்கிலேயர்கள், லயாலைச் சுட்டு வீழ்த்திய பீர் அலி உட்பட எல்லாத் தலைவர் களையும் கைது செய்தார்கள்.

பீர் அலி லக்ஷ்மணபுரியில் பிறந்து வளர்ந்தவராயினும், பின்னால் பாடலிபுரத்துக்கு வந்து அங்கேயே வசிக்கலானார். அவர் புத்தக வியாபாரி. தாம் விற்கும் தேசீயப் புத்தகங் களை இடைவிடாது படித்து வந்ததன் மூலம், அவரது இரு தயத்தில் சுதந்தர உணர்ச்சி பொங்க ஆரம்பித்தது. தேசத்தின் அடிமைத்தனத்தையும் ஆங்கிலேயர்களை அண்டி வாழும்படி யான நிலைமையையும் அவரால் சகிக்க முடியவில்லை. எனவே டில்லியிலும் லக்ஷ்மணபுரியிலும் உள்ள புரட்சித் தலைவர்களுடன் அவர் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார்.

பாடலிபுரத்தில் இருந்த ஆங்கில அதிகாரியான டெய்லர், தேசபக்தர்களைச் சித்திரவதைக்கும் அடக்கு முறைகளுக்கும் உள்ளாக்க முற்படவே, பீர் அலியால் அதை யெல்லாம் பார்த்

துக்கொண்டு அமைதியாக உட்கார்ந்திருக்க முடியவில்லை. தம் தேச பக்தர்கள் ஆங்கிலேயர்களிடம் அல்லலுறுவதைக் கண்டு சகியாதவராய், உற்ற காலத்துக்கு முன்பே புரட்சியை ஆரம் பித்துவிட்டார். பீர் அலி ஆங்கிலேயர்களுக்கு ஜன்ம விரோதி யாயினும், அவருடைய கண்டிப்பும் உறுதியும் கண்ணியமும் கம் பீரமும் மனோபலமும் ஆச்சரியமானவை என்பதையும் மதிப் பிற்கு உரியவை என்பதையும், பாடலிபுரக் கமிஷனராக இருந்த டெய்லரே ஒப்புக்கொண்டுள்ளான்.

கைதியான பீர் அலிக்கு ஆங்கிலேயர்கள் மரண தண்டனை விதித்தனர். இறுகிய விலங்குகளால் ஏற்பட்ட காயத்தினால் அவர் கைளிலிருந்து உதிரம் வடிந்துகொண் டிருந்தது. அவ ரைத் தூக்கு மேடைக்கு ஆங்கில அரக்கர்கள் கொண்டுவந்த போது, அவரது முகத்தில் பிறவிவீரனுக்கு உரிய புன்முறுவல் தவழ்ந்துகொண் டிருந்தது. எனினும், பீர் அலிக்கு அவருடைய புதல்வனைப்பற்றிய ஞாபகம் ஒரு க்ஷணநேரம் துயரத்தைத் தந்தது. அதை அறிந்த ஆங்கில அதிகாரி அதுதான் சமய மென்று அவரை அணுகினான். 'பீர் அலி, மற்றத் தலைவர்களின் பெயர்களை வெளியிட்டுவிட்டால், நீர் இப்போதுகூட உமது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளலாம்' என்றான்.

உடனே பீர் அலி அந்த அதிகாரியை நிதானமாகப் பார்த்து, மிகுந்த தைரியத்துடன் கம்பீரமான தொனியில் கூறியதாவது: 'ஒருவருடைய வாழ்க்கையில் உயிரைப் பாதுகாத்துக் கொள்ளு வதுதான் சிறந்தது என்ற நிலைமை சில சமயங்களில் ஏற்படுவது உண்டு. உயிரைத் தியாகம் செய்வதுதான் சிறந்தது என்ற நிலைமையும் சில சந்தர்ப்பங்களில் ஏற்படுவது உண்டு. இப்போது மரணத்தை வரவேற்றுத் தழுவிக்கொள்ளுவதுதான் சிரஞ்சீவியாக வாழ்வதற்கு வழியாகும். ஆங்கிலேயர்கள் எங்க ளுடைய தாய்நாட்டில் செய்துவரும் அட்டூழியங்களையும் அநீதி களையும் எதிர்த்துப் போருக்கு எழுந்ததைத் தவிர நானும் என் சகாக்களும் வேறொரு குற்றமும் பாவமும் செய்யவில்லை. உலகில் அட்டூழியங்களையும் அநீதிகளையும் எதிர்ப்பதுகூடத் தவறா? நீங்கள் இப்போது என்னைத் தூக்கில் இடலாம். என் போன்ற மற்றும் பலரையும் தூக்கில் இடலாம். ஆனால் எங்க ளுடைய புனித லட்சியத்தை நீங்கள் ஒரு காலத்திலும் தூக் கில் இட்டுவிட முடியாது! நான் இறந்தால் என் ரத்தத்திலிருந்து ஆயிரக் கணக்கான வீரர்கள் உதித்து உங்கள் சாம்ராஜ்யத் தையே அழித்துவிடுவார்கள் என்பது நிச்சயம்.'

தீர்க்கதரிசியும் வீரருமான பீர் அலி இவ்வாறு கூறியபின், எக்காலத்திலும் மறக்க முடியாத தேசிய வீரர்களின் சோதி வானில் இடம் பெற்றார்! 'என் உதிரத்திலிருந்து ஆயிரக் கணக் கான வீரர்கள் உதிப்பார்கள்' என்று அவர் கூறிய வார்த்தை பொய்யாக முடியாது! பொய்த்துப் போகவும் இல்லை!

பீர் அலி தூக்குமேடையில் மாண்டார் என்ற செய்தியைக் கேட்டதும், தனபுரியில் இருந்த 'மிகுந்த விசுவாசி'களான இந்தி யப் படையும் ஜூலை மாதம் 25-ஆம் தேதி புரட்சியை ஆரம்

பித்துவிட்டது. அங்கிருந்த ஆங்கிலத் துருப்புகளையோ, ஆங்கிலப் பீரங்கிப் படையையோ இந்தியச் சிப்பாய்கள் சிறிதும் பொருட்படுத்தாமல் கம்பெனியின் ராணுவ உடைகளையும் கிழித்தெறிந்துவிட்டு ஷான் நதியை நோக்கிப் புறப்பட்டனர். அவ்விடத்தில் பிரதம அதிகாரியாக இருந்த வயோதிகனான மேஜர் ஜெனரல் லாயிடின் பீதி காரணமாக, ஆங்கிலப் படைகள் இந்தியச் சிப்பாய்களைத் தொடர்ந்து செல்லத் துணியவில்லை.

அங்கிருந்து புறப்பட்ட சிப்பாய்கள் நேராக ஜகதீசபுரியை நோக்கிச் செல்லலாயினர். ஜகதீசபுரியில் அவ்வமயம் வயோதிகரான ஒரு வீரர் இருந்தார். வயதில்தான் அவர் கிழவரே தவிர, மன உறுதியிலும், புஜபல பராக்கிரமத்திலும், கத்தி வீச்சிலும் அவர் இளைஞராகவே விளங்கினார்! அவர் ஆங்கிலேயர்களை ஒரு கை பார்த்துவிடுவதாக மீசையை முறுக்கிக்கொண்டிருந்தார்! அந்த வீரர் இருக்கும் இடத்துக்கே தனபுரிச் சிப்பாய்கள் புறப்பட்டுச் சென்றனர்.

சுதந்தரப் பிரியர்களான சிப்பாய்களிடையும் ஜனங்களிடையும் அப்போது இருந்த பெருங் குறை என்னவெனில், பல இடங்களிலும் திறமை வாய்ந்த தலைவர்கள் இராததுதான். எனினும் ஷஹாபாத் ஜில்லாவைச் சேர்ந்த ஜகதீசபுரி அரண்மனையில் அந்தக் குறைக்கு இடமில்லை. அதனால்தான் தனபுரிச் சிப்பாய்கள் ஷான் நதியைக் கடந்து அங்கே சென்றனர். சுயராஜ்யப் போரைச் சிறந்த முறையில் நடத்துவதற்குற்ற வீரர் அங்கிருப்பது சிப்பாய்களுக்குத் தெரியும். குமார சிங் என்ற பெயர் பூண்ட இணையற்ற அந்த வீரர், எவரும் பிரமிக்கத் தக்க ஆண்மையும் அஞ்சா நெஞ்சமும் படைத்தவர். வானம் இடிந்து விழுந்தாலும் அச்சமில்லை என்று கர்ஜிக்கும் ஆற்றல் படைத்தவர். புராதன காலத்திலிருந்து பெரும் புகழ் படைத்த ராஜபுத்திர குடும்பத்தில் பிறந்தவர். எனவே அங்குள்ள ஜனங்களுக்கு அவருடைய குடும்பத்தின்மீது இயற்கையாகவே அன்பும் மதிப்பும் இருந்து வந்தன.

இந்திய பூமியில் எத்தனையோ உற்பாதங்கள் ஏற்பட்டுப் பல சாம்ராஜ்யங்கள் முளைத்ததும் மறைந்ததும் உண்டு. ஆனால் ஷஹாபாத் மாகாணத்தை மாத்திரம் எவ்வித உற்பாதமும் எதுவும் செய்ய முடியவில்லை! தர்ம சிந்தனையும், வீரமும் உள்ள ராஜபுத்திர மன்னர்களுடைய ஆட்சியின் கீழ் அங்கே எவ்வித அசம்பாவிதமும் ஏற்படவில்லை. அங்கே மக்களின் சுயராஜ்ய உரிமைக்கோ, சுதந்தரத்துக்கோ எவ்வித ஆபத்தும் நேரவில்லை. நூற்றுக்கணக்கான அரசியல் சண்டமாருதங்களிலுங்கூடக் குமார சிம்மனின் ஆட்சியாகிய ஆல மரம் யாதொரு பங்கமும் இன்றிச் செழுமையாகவே இருந்தது. அதன் கிளைகளில் வந்து ஒதுங்கிய பறவைகளை (மக்களை) அது காப்பாற்றாமல் எக்காலத்திலும் கைவிட்டதில்லை. கோடைக்கால வெயிலைப் பற்றியோ, மாரிக்கால வெள்ளத்தைப்பற்றியோ அதில் இருந்த பறவைகள் கலக்கமுற வேண்டிய அவசியமே ஏற்பட்டதில்லை!

தலைமுறை தலைமுறையாக அவை சந்தோஷமான வாழ்க்கையே நடத்தி வந்தன!

ஜகதீசபுரி மன்னர்கள், மக்களைத் தங்களுடைய குழந்தைகள் போன்றே கருதி வந்தனர். மக்களும் அந்த மன்னர்களைக் கடவுளின் பிரதிநிதிகளாகவே எண்ணித் தொழுது வந்தார்கள். ஆனால் மன்னருக்கும் மக்களுக்கும் இருந்த அத்தகைய அந்நியோந்நியத்தைக் கொடியர்களான அந்நியர்களால் சகிக்க முடியவில்லை. மக்களின் அவ்விதச் சந்தோஷ வாழ்க்கையைக் காண ஆங்கிலேயரின் கண்கள் கூசின. அந்த ராஜ குடும்பத்தை அழிப்பதற்கான சூழ்ச்சிகளை அவர்கள் செய்யலாயினர். கஷ்டகாலங்களாகிற கோடையிலிருந்தும் மாரியிலிருந்தும் மக்களைக் காப்பாற்றி வந்த சுயராஜ்யக் குடை திடீரென்று முறித்தெறியப்பட்டது. அந்நியர்களின் கொடுமையால் மாகாணம் முழுவதும் பாழாயிற்று. ஜகதீசபுரி ஆல மரம் இடியினுல் பிளக்கப்பட்டது. அதில் இருந்த பறவைகள் நிர்க்கதியாகி அங்கும் இங்கும் ஓடி அலைந்தன. அத்தகைய கொடுமைகளை இழைத்த அந்நிய அரக்கர்கள்மீது வஞ்சம் தீர்க்க வேண்டுமென்று வயோதிக வாலிபரான குமார சிம்மன் திடசங்கல்பம் கொண்டார்.

வயோதிகரான வாலிபர்! ஆம், அவர் வயோதிகரான வாலிபர்தாம். சற்றேறக்குறைய 80 வயதான குமார், குமரனுகவே இருந்தார்! வெள்ளையர்களால் தம் தேசம் சூறையாடப்பட்டு வருவதை அவர் எவ்வாறு சகித்துக்கொண்டிருக்க முடியும்? அயோத்தியை டல்ஹௌஸி கபளீகரம் செய்தபின் ஆங்கிலேயர்கள் ஹிந்துஸ்தானம் முழுவதும் உன்னதமாக விளங்கிய பிரதேசங்களையெல்லாம் தரைமட்டம் ஆக்கி வந்தார்கள். அவ்விதம் பலியானவற்றில் குமார சிம்மனின் ராஜ்யமும் ஒன்று. மன்னிக்க முடியாத, கொடிய, அநீதியான அந்தச் செய்கைக்குக் காரணமான ஆங்கிலேயர்களின் அதிகாரத்தை அழித்தே தீருவது என்று குமார சிம்மன் சபதம் செய்திருந்தார். அந்தச் சபதத்தை வெகு சீக்கிரத்தில் நிறைவேற்றும் நோக்கத்துடன், அவர் நானு சாஹிபுடன் செய்திப் போக்குவரத்தும் நடத்தி வந்தார்.

புரட்சியை ஆரம்பிக்கக் குமார சிம்மன் திட்டம் போட்டு வருகிருர்; இந்தியா முழுவதும் உள்ள புரட்சிச் சங்கங்களுடன் அவர் கடிதப் போக்குவரத்து நடத்தி வருகிருர்; பாடலிபுரத்திலுள்ள நூற்றுக்கணக்கான சிப்பாய்கள் அவருடன் ரகசியச் சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கிருர்கள்.—இவ்விதமெல்லாம் பாடலிபுரக் கமிஷனரான டெய்லருக்குத் தகவல்கள் கிடைத்து வந்தன. ஆனுல் அவற்றையெல்லாம் டெய்லர் நம்பவில்லை. எண்பது வயதான குமார சிம்மன் புரட்சிப் போருக்கு ஆயத்தம் செய்துகொண்டிருக்கிருர் என்பது அவனுக்கு வெறும் கட்டுக் கதையாகவே தோன்றியது. தவிர, குமார சிம்மனிடமிருந்து அடிக்கடி அவனுக்கு அன்பார்ந்த கடிதங்களும் வந்துகொண்டிருந்தன!

இருந்தாலும் அவருடைய மன நிலையைத் தெரிந்து கொள்ளுவதற்காக டெய்லர் அவருக்கு இவ்வாறு ஓர் அழைப்பு அனுப்பினன்: 'உங்களுக்கு இப்போது மிகவும் வயதாகிவிட்டது. உங்களுடைய தேக நிலைமையும் திருப்திகரமாக இல்லை. ஆகையால் இனி நீங்கள் உங்களுடைய வாழ்நாளை என்னிடமே கழிக்கலாம். உங்களை எப்போதும் உபசரித்து என்னிடமே வைத்துக்கொண்டிருக்கவேண்டும் என்பது என் அவா. ஆகையால், இந்த அழைப்பை மறுக்க மாட்டீர்களென்றே நம்புகிறேன். உங்கள் அன்புள்ள டெய்லர்.'

முன்பு சிவாஜிக்கு அப்ஸல் கான் அனுப்பியிருந்த அழைப்பும் இது போன்றதுதான். பெரும் ஜாம்பவானை அந்த ராஜபுத்திர வீரருக்கா தெரியாது டெய்லரின் சூழ்ச்சி! 'மிக மிக வந்தனம். என் உடல்நிலை மோசமாக இருந்து வருவது உண்மையே. அதனால்தான் இந்த நிலைமையில் நான் பாடலிபுரத்துக்கு வருவதென்பது முடியாத காரியம். சிறிது குணம் அடைந்ததும் உடனே புறப்பட்டு வந்துவிடுகிறேன்.' சூழ்ச்சிக்காரனை டெய்லருக்கு, சாணக்கியரான குமார சிம்மன் அனுப்பிய பதில் இதுதான்!

குமார சிம்மனின் நோயைத் தீர்ப்பதற்கு உற்ற மருந்துடன் தனபுரிச் சிப்பாய்களும் அப்போதுதான் அங்கே வந்து சேர்ந்தார்கள். 'குமார சிம்மன் அவர்களே! ஏன் இன்னும் தாமதம்? நம் தாய்நாட்டின்மீதும் மதத்தின்மீதும் நம் மானத்தின்மீதும் ஆணையிட்டு உங்களை அழைக்கின்றோம்! உங்களுடைய வாளை உருவி உறையைத் தூர எறியுங்கள். நீங்களே எங்களுடைய மன்னர், எங்களுடைய தலைவர், எங்களுடைய தளபதி. ராஜபுத்திரர்களின் சமூகத்துக்கு நீங்கள் திலகமாக விளங்குகிறீர்கள். ஆகையால், உடனே சிறிதும் தாமதமின்றிப் போர்க்களத்தில் குதிப்பீர்களாக!' இவ்வாறு அவர்கள் குமார சிம்மனை வேண்டிக்கொண்டனர்.

பின்னல் அந்தச் சிப்பாய்கள் ஜகதீசபுரியிலிருந்து ஷஹாபாத் ஜில்லாவின் முக்கிய நகரான ஆராவிற்குச் சென்று, அங்கிருந்த கஜானவைக் கைப்பற்றியதுடன் சிறைகள், அந்நிய அதிகாரிகள், அந்நியர்களின் கொடிகள் முதலியவற்றையும் அழித்து ஒழித்தனர். பிறகு அவர்கள் அங்கிருந்த சிறிய கோட்டையின்மீது தங்களுடைய கவனத்தைச் செலுத்தினர்கள். புரட்சி ஏற்பட்டால் எதிர்த்து நிற்பதற்காக ஆங்கிலேயர்கள் அந்தக் கோட்டையில் ஆயுதங்கள், வெடி மருந்துகள், உணவுப் பொருள்கள் முதலிய பல சாதனங்களையும் சேகரித்து வைத்திருந்தனர். அங்குள்ள ஆங்கிலேயர்களுக்கு உதவியாகப் பாடலிபுரத்திலிருந்து 56-ஆவது படையும் அனுப்பப்பட்டிருந்தது. அவர்கள் எல்லாரும் போருக்கான சகல சாதனங்களுடனும் கோட்டையில் இருந்து வருகையில், அவர்கள் எதிர்பார்த்திருந்த தேசிய சேனையும் அங்கே வந்து கோட்டையை முற்றுகையிட ஆரம்பித்தது.

சரணடைந்தாலும் தங்களுடைய உயிர் போவது நிச்சயமென்று எண்ணிக் கோட்டைக்குள் இருந்த ஆங்கிலேயர்கள் ஆவேசத்துடன் போராட முற்பட்டனர். தேசபக்தர்களோ கோட்டையைத் தாக்காமல் உள்ளே இருப்பவர்கள் வெளியே எவ்விதச் சம்பந்தமும் வைத்துக்கொள்ள முடியாதவாறு செய்வதிலேயே அதிகக் கவனம் செலுத்தினர். கோட்டை தங்களுடைய கையால் வீழ்ச்சி அடைவது நிச்சயம் என்று கருதி, அதைத் தாக்கி வீணாக நேரத்தையும் உயிர்களையும் செலவழிக்க அவர்கள் விரும்பாமல் இருந்திருக்கலாம். எனவே அவர்கள் எல்லாப் படைகளுடனும் பொதுவான தாக்குதலில் ஈடுபடாமல் கோட்டை மீது தங்களுடைய பீரங்கிகளின் பலத்தை மாத்திரம் உபயோகப்படுத்தி வந்தார்கள். இரண்டோர் இடங்களில் சுரங்க வெடிகளும் வைக்கப்பட்டன. சில நாட்களில் கோட்டைக்குள் தண்ணீர் மிகவும் குறைந்துவிட்டது.

அந்த நிலைமையிலும் ஆங்கிலேயர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்வதில் கோட்டைக்குள் இருந்த சீக்கியர்கள் மிகுந்த அக்கறை கொண்டனர். அங்கே குடி தண்ணீர் குறைந்ததால் உண்டான நிலைமையைச் சமாளிப்பதற்காக அவர்கள் ஒரே நாளில் புதிய கிணறு ஒன்றை வெட்டி விட்டார்கள்! ஆங்கிலேயர்களுக்காக அவர்கள் பிசாசுகளைப் போல் போரும் புரிந்தனர்! கோட்டைக்குள் ஆங்கிலேயர்களுக்கு உதவியாகச் சீக்கியர்கள் இருந்துவருகிறார்கள் என்பதைக் கேட்டதும் தேசபக்தர்கள் மிகவும் ஆத்திரமடைந்தனர்.

அந்தத் துரோகிகளின் மனத்தை மாற்றத் தேசபக்தர்கள் தினசரி செய்த முயற்சிகள் வியர்த்தமாயின. 'நம் தாய் நாட்டை அடிமைத்தனத்தில் ஆழ்த்தியவர்களும், நம் மதங்களை நசுக்கியவர்களுமான பறங்கியர்களுக்கு உதவி செய்வதால் நீங்கள் அடையப் போகும் நன்மை என்ன? நம் தேசத்தின்மீது ஆணை; சுதந்தரத்தின்மீது ஆணை; மதத்தின்மீது ஆணை; வெள்ளையர்களுக்கு உதவி புரியாதீர்கள்' என்றெல்லாம் துரோகிகளை நோக்கித் தேசபக்தர்கள் கதறினர். நயமாகவும் பயமாகவும் அவர்கள் எவ்வளவோ சொல்லியுங்கூட, அவர்களுடைய வார்த்தைகள் துரோகிகளின் செவிகளில் ஏறவில்லை. அதற்கு மாறாக, தேச பக்தர்களுக்குச் சீக்கியப் படையினர் அளித்த பதில் சரமாரியான துப்பாக்கிப் பிரயோகந்தான்! அதற்காக ஆங்கிலேயர்கள் ஆனந்த ஆரவாரம் செய்து துரோகிகளை மிகவும் பாராட்டினர்.

இவ்விதமாக மூன்று நாட்கள் வரையில் முற்றுகை நடந்தது. மூன்றாவது நாள் இரவு, வெகு தூரத்தில் ஏதோ பீரங்கி முழக்கம் கேட்கவே, ஆங்கிலேயர்களின் முகங்களில் புன்முறுவல் தவழ்ந்தது. தேசபக்தர்களைக் கொன்று முற்றுகையைச் சின்னா பின்னமாக்க ஆங்கிலப் படைகள் வந்துகொண்டிருக்கின்றன என்று அவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

ஆம், அவர்கள் நினைத்தபடி ஆங்கிலப் படைகளே அவர்களுக்கு உதவியாக வந்தன. காப்டன் டன்பார் தலைமையில்

தனபுரி ஆங்கிலப் படையைச் சேர்ந்த பலரும், ஏராளமான சீக்கியர்களும் ஷான் நதிக்கரைக்கு வந்து சேர்ந்தனர். அதைக் கண்டு ஆங்கிலேயர்களின் உற்சாகமும் சந்தோஷமும் எல்லை கடந்தன. தாங்கள் வெற்றி பெறுவது நிச்சயம் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு உண்டாயிற்று.

தனபுரியிலிருந்து ஆங்கில ஆடவர்களும் பெண்களும் குதூகலத்துடன் அவர்கள் எல்லோரையும் வழி அனுப்பினர். வெள்ளைத் துருப்புகளும் துரோகிகளும் அடங்கிய படகுகளும் புறப்பட்டன. அவை மாலை ஏழு மணிக்கு ஆரா எல்லையை அடைந்தன. பின்னால் எல்லாரும் கரையில் இறங்கவே, காப்டன் டன்பார் துருப்புகளை யெல்லாம் வரிசையாக ஒழுங்கு படுத்தினான். வழக்கம்போல் விசுவாசிகளான துரோகிகள் முன்னணியில் நிறுத்தப்பட்டனர். அவர்களும் அதைப் பெரும் கௌரவமாகக் கருதிச் சந்தோஷத்துடன் முன்வந்தார்கள்! சந்திரனும் நன்றாகப் பிரகாசித்துக்கொண் டிருந்ததால், அவர்கள் எல்லாரும் வெற்றி நிச்சயம் என்ற நம்பிக்கையுடன் முன்னேறிச் சென்றார்கள்.

சில மைல் தூரம் சென்றதும், ஆரா பாலம் தென்பட்டது; அங்கே எல்லாம் நிச்சப்தமாக இருந்தது. புரட்சிப் படைகளின் அறிகுறியே தென்படவில்லை. தங்களுடைய படைகளைக் கண்டு புரட்சிப் படைகள் பயந்து ஓடிவிட்டதாக ஆங்கிலேயர்கள் கருதினர். புரட்சிக்காரர்களை முறியடித்து வெற்றி பெறப் போவதாக உற்சாகம் கொண்டிருந்த ஆங்கிலப் படைகளுக்கு அந்த நிலைமை மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்தது. சந்திரனும் போரைப் பார்க்க முடியாமல் ஏமாற்றம் அடைந்தவனைப்போல் மறைந்தான். உலகைக் காரிருள் சூழ்ந்துகொண்டது.

டன்பார் வருகிறான் என்பதைக் கேட்ட மாத்திரத்திலேயே புரட்சிக்காரர்கள் ஓடிவிட்டதாகவும், மகா அலெக்ஸாண்டர் கூடப் பகைவர்களின் மனத்தில் அவ்வளவு திகிலை உண்டுபண்ணியது இல்லை என்றும் வெள்ளையர்கள் பெருமை கொண்டனர். சந்தடி எதுவுமே இல்லாததால் புரட்சிக்காரர்கள் ஓடி வெகு தூரத்துக்கு அப்பால் சென்றிருக்க வேண்டுமென்று எண்ணி, அவர்கள் உற்சாகத்துடனும் படாடோபத்துடனும் முன்னேறிச் சென்றார்கள். அவர்கள் ஒரு பெரிய மாந்தோப்பின் வழியாகச் செல்லுகையில் திடீரென்று இலைகள் அசையும் சத்தம் கேட்டது. ஆனால் ஆங்கிலேயர்கள் முதலில் அதை அலட்சியமாக நினைத்தனர். அதே சமயம் நான்கு புறத்திலிருந்தும் தோட்டாக்கள் பறந்துவந்து பாய்ந்து பலர் வீழ்ந்தபின்புதான் அவர்களுக்கு உண்மை புலனாயிற்று!

எங்கும் ஒரே இருள்மயமாக இருந்தது. எனினும் வானத்திலிருந்து பெய்த தோட்டா மாரி குறிதவறாமல் ஆங்கிலேயர்களை வீழ்த்தியது. குமார சிம்மனின் தலைமையில் தேசீய வீரர்கள் போரை ஆரம்பித்துவிட்டார்கள் என்பதையே அது காட்டியது. சகல யுத்த சாதனங்களுடனும் வந்திருந்த ஆங்கிலேயர்களால் எதுவுமே செய்ய முடியவில்லை. ஒவ்வொரு தேசீய

வீரரும் ஒவ்வொரு கிளையில் மறைந்துகொண்டு சுட்டதால், வெள்ளையர்கள் பிரமித்துத் திகில் கொண்டனர். இருளில் ஒரு சிப்பாயைக்கூட ஆங்கிலேயர்களால் பார்க்க முடியவில்லை. ஆங்கிலப் படைகளெல்லாம் வெள்ளை உடை தரித்துக்கொண் டிருந்தன; ஆதலின் மரக் கிளைகளில் இருந்த தேசீய வீரர்களுக்கு அவர்களை நன்ருகப் பார்க்க முடிந்தது. ஆங்கிலேயர்களுக்கோ பூமியில் மரங்களையும் வானத்தில் கிளைகளையும் நட்சத்திரங்களையும் தவிர வேறு எதுவுமே தெரியவில்லை. அவைகளைச் சுட்டு வெற்றி பெறுவது என்பதும் முடியாத காரியம் அல்லவா?

ஆங்கிலேயர்களால் ஒரு தேசீய வீரரைக்கூட வீழ்த்த முடியவில்லை. அந்த நிலைமையில் அவர்களும் துரோகிகளும் ஓட்டம் பிடிப்பதைத் தவிர வேறு வழி இல்லை. அவர்களுடைய தளபதியான டன்பார் முதலிலேயே கொல்லப்பட்டான். ஆங்கிலச் சிப்பாய்கள் அருகில் இருந்த பள்ளத்தில் போய்ப் பதுங்கிக்கொண்டனர். அங்கிருந்து அவர்கள் மரங்களை நோக்கிச் சுட்டார்கள். எனினும், மாண்டவர்களும் காயமடைந்தவர்களுமான தங்களுடைய சகாக்களையெல்லாம் அங்கேயே விட்டு விடியற்காலை அங்கிருந்து பின்வாங்கி ஓடி, தாகமும் பசியும் தாங்க முடியாமல் ஷான் நதிக்கரை போய்ச் சேர்ந்தனர்.

புரட்சிக்காரர்கள் பயந்து ஓடிவிட்டார்கள் என்று நினைத்துக்கொண்டு பெருமையடைந்த ஆங்கிலேயர்களுக்கு, அவ்வாறு தாங்கள் படுதோல்வி அடைந்ததுடன், தங்களில் பெரும்பாலானவர்களையும் போர்க்களத்தில் இழந்துவிட்டுத் திரும்பும்படி நேர்ந்தது, ஒருங்கே வெட்கத்தையும் துயரத்தையும் உண்டுபண்ணியது. குமார சிம்மனிடமிருந்து உயிர் தப்பி ஓடுவது ஆங்கிலேயர்களுக்கு எளிதாக இல்லை. ஈட்டிகளை வைத்துக்கொண்டு வேட்டையாடுவோரிடமிருந்து உயிர் தப்ப முயலும் காட்டுப் பன்றி, தன் உடல் கிழிபட்டு இரு புறங்களிலும் இரத்தம் வழிய ஓடுவதுபோலவே, ஆங்கிலேயர்களும் உதிரம் பெருக ஓடி ஷான் நதிக்கரையை அடைந்தனர். துரதிருஷ்டம் அங்கும் அவர்களைத் தொடர்ந்து சென்றது. நதிக்கரையில் படகுகளைக் காணவில்லை. சிறிது தூரத்திற்கு அப்பால் அவை மணலில் அழுந்திக் கிடந்தன. மற்றும் சில, பாண்டேக்களால் (தேச பக்தர்களால்) எரிக்கப்பட்டுக் கிடந்தன. இரண்டு படகுகளை மாத்திரமே ஆங்கிலேயர்களால் பாதுகாக்க முடிந்தது.

தனபுரியில் இருந்த ஆங்கிலேயர்கள் மிகுந்த குதூகலத்துடன் மறுநாள் நதிக்கரையில் வந்து நின்றுகொண் டிருந்தார்கள். முதல் நாள் ஆராவுக்குச் சென்ற ஆங்கிலேயர்கள், அங்கிருந்த வெள்ளையர்களையும் காப்பாற்றி வெற்றிக் கீதங்களுடன் திரும்பி வருவார்கள் என்று தனபுரி வெள்ளையர்கள் நினைத்துக்கொண் டிருந்தனர். ஆனல் படகுகளில் பயங்கரமான மௌனம் நிலவியது. அவற்றில் இருந்தவர்கள் தலைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு சோகத்தில் ஆழ்ந்திருந்தனர்.

முதல் நாள் புறப்பட்டுச் சென்றவர்களில் பத்தில் ஒருவர் வீதமே படகுகளில் திரும்பி வந்தனர். 'என் மகன் எங்கே?

என் தம்பி எங்கே? என் கணவன் எங்கே? என் தந்தை எங்கே?' என்றெல்லாம் கரையில் நின்றுகொண்டிருந்தவர்கள் ஓலமிட்டார்கள். முதல் நாள் ஆராவுக்குப் புறப்பட்டுச் சென்ற 415 ஆங்கிலேயர்களில் சுமார் 50 பேர்தாம் உயிர் தப்பி வந்துள்ளனர் என்ற செய்தி காட்டுத் தீப்போல் எங்கும் பரவியது. அதைப்பற்றி ஓர் ஆங்கிலேயர் எழுதுவதாவது: 'நதிக்கரையில் ஆங்கிலப் பெண்களின் பரிதாபமான கூக்குரலை எவ்வளவு காலமாயினும் மறப்பது என்பது முடியாத காரியம். அத்தகைய நாசகரமான படையெடுப்புத் திட்டத்தை வகுத்த ஜெனரல் லாயிட் அச்சமயம் அங்கே இருந்திருப்பாராயின், அவனை அங்கிருந்த ஆங்கிலேயர்கள் ஆத்திரத்தினால் அடித்துக் கொன்றிருப்பார்கள் என்பதில் சிறிதும் சந்தேகம்

தனபுரியில் ஆங்கிலேயர்கள் இவ்விதம் பிரலாபித்து வருகையில், தேச பக்தர்கள்மீது வஞ்சம் தீர்ப்பதற்காக மேஜர் அயர் தன் படைகளுடன் ஆராவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். டன்பார் தோல்வியடைந்ததுபற்றி அவனுக்கு எதுவுமே தெரியாது. ஆராவிலுள்ள ஆங்கிலேயர்கள் முற்றுகையிடப்பட்டதைக் கேள்வியுற்றே, அவன் சில படைகளுடன் ஆராவுக்குச் சென்றான். குமார சிம்மனின் சிப்பாய்கள் டன்பாரின் படைகளைச் சின்னபின்னம் ஆக்கிவிட்டுத் திரும்பி வருகையில், அயர் ஆராவை நோக்கிப் படையெடுத்து வருகிறான் என்ற செய்தி அவர்களுக்கு எட்டியது. உடனே ஒரு விநாடிகூடத் தாமதியாமல் குமாரசிம்மன் தம் படைகளை எல்லாம் சேகரித்து வழியிலுள்ள கேந்திர ஸ்தானங்களைக் கைப்பற்றிக்கொண்டு அயரின் படைகளை எதிர்த்துப் போர் புரிவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். பீபீகஞ்ஜ் என்ற கிராமத்துக்கு அருகில் ஆகஸ்டு மாதம் 2-ஆம் தேதி இரு படைகளுக்கும் வெகு கடுமையான யுத்தம் நடந்தது. சமீபத்தில் இருந்த அடர்ந்த காட்டைக் கைப்பற்றுவதற்காக இரு சாராரும் பெரு முயற்சி செய்தனர். அதிருஷ்டவசமாக இறுதியில் குமார சிம்மனே வெற்றி பெற்றார்.

குமார சிம்மனின் படைகள் அந்தக் காட்டுப் பிரதேசத்தில் இருந்துகொண்டு பகைவர்கள்மீது பீரங்கிப் பிரயோகம் செய்யத் தொடங்கின. அயரின் படைகளோ தங்களிடம் இருந்த சிறந்த பீரங்கிகளால் சரமாரியாகச் சுட்டுக்கொண்டே இடைவிடாது முன்னேறின. குமார சிம்மனின் சிப்பாய்கள் இணையற்ற துணிச்சலுடன் பீரங்கிகளுக்கு நேராகப் பாய்ந்து அவைகளைக் கைப்பற்ற மூன்று தடவை முயன்றார்கள். எனினும், அந்த முயற்சி வெற்றி பெறவில்லை. இருந்தாலும் பீரங்கி வாய்க்கும் அஞ்சாத தேச பக்தர்களின் வீரத்தைக் கண்டு வெள்ளையர்கள் கதி கலங்கிவிட்டார்கள்,

அவ்வமயம் காப்டன் ஹேஸ்டிங்ஸ் மூச்சுவாங்கத் தளபதி அயரிடம் வந்து, 'நமது காலாட் படை முறியடிக்கப்பட்டு வருகிறது. வெற்றி நம் கையிலிருந்து நழுவிவிட்டது என்றே

'தோன்றுகிறது' என்று பதைபதைத்துக் கூறினன். இன்னும் அரை மணி நேரம் வரையில் அவ்விதமே யுத்தம் தொடர்ந்து நடந்திருந்தால், குமார சிம்மன் மகத்தான வெற்றி பெற்றிருப்பார். தாங்கள் தோல்வி அடைவது நிச்சயம் என்று ஆங்கிலேயர்களுக்குத் தோன்றியதால், போர்க்களத்தை விட்டு ஓடுவதற்கு முன் இறுதியாக ஒரு தடவை பெருமுயற்சி செய்து பார்த்து விடுவது என்று தீர்மானித்தனர்.

அதற்கிணங்க, தேசீயப் படைகளின்மீது எல்லாரும் ஒரு மித்துப் பாய்ந்து, துப்பாக்கி ஈட்டிகளால் தாக்கும்படி அயர், தன் படைகளுக்கு உத்தரவிட்டான். தோல்வி அடையப் போகிறோம் என்ற ஆத்திரத்தில் ஆங்கிலச் சிப்பாய்களும் தேசீயப் படைகள்மீது கண்மூடித்தனமான துணிச்சலுடன் பாய்ந்து துப்பாக்கி ஈட்டிகளால் தாக்கினர். பீரங்கி வாய்க்கும் அஞ்சாத தேசீய வீரர்கள் அந்தத் தாக்குதலைக் கண்டு பிரமித்துப் போய்ப் பின்வாங்கியதற்குக் காரணம், இந்தியாவின் துரதிருஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அதன் விளைவாக, தேசீயப் படைகள் கேந்திர ஸ்தானமாக விளங்கிய அந்தக் காட்டை விட்டுப் பின்வாங்கும்படி நேர்ந்தது. தாங்கள் கனவிலும் கருதாத விதத்தில் வெற்றி கிடைத்தவுடன் ஆங்கிலேயர்கள் அளவற்ற உற்சாகம் கொண்டு, ஆரா கோட்டை வரையில் முன்னேறிச் சென்று அங்கு முற்றுகை இடப்பட்டிருந்த வெள்ளையர்களை யெல்லாம் விடுவித்தனர். ஆரா நகர் யாரும் எதிர்பாராத விதமாக இவ்விதம் வீழ்ச்சியுற்றது.

ஆரா முற்றுகை எட்டு நாட்கள் வரையில்தான் நீடித்திருந்தது. மகா தைரியசாலிகளும், ஆனல் குறைந்த தொகையினருமான ராஜபுத்திர வீரர்கள் அந்த எட்டு நாட்களுக்குள் ஆரா கோட்டையை முற்றுகை இட்டதுடன், இரண்டு போர்களிலும் ஈடுபட்டனர். அங்கிருந்து தமது சேனையுடன் பின்வாங்கிய குமார சிம்மன் ஜகதீசபுரிக்குச் செல்லலானார். ஆராவில் ஏற்பட்ட தோல்வியால் அவர் சிறிதும் சோர்வடையவில்லை. அங்கே வெற்றி பெற்ற ஆங்கிலேயருக்கு உதவியாக மேற்கொண்டு படைகள் குவிந்து வருகின்றன என்ற செய்தியைக் கேள்வியுற்றதும், அவர் ஜகதீசபுரியில் இருந்த வீரர்களை யெல்லாம் ஒன்று திரட்ட முற்பட்டார். தாங்கள் வெற்றி பெற்றாலுங்கூட, குமார சிம்மன் மேற்கொண்டு என்ன திட்டம் போட்டிருக்கிறாரோ என்று ஆங்கிலேயர்கள் நடுங்கிக்கொண்டிருந்தனர். அவர் மீண்டும் ஆராமீது படையெடுத்து வர விடுவது ஆங்கிலேயர்களுக்கு ஆபத்தாக முடியும் என்பதை உணர்ந்த அயர், அதற்கு இடம் கொடுக்காமல் இருப்பதற்காக ஏராளமான படைகளுடன் ஜகதீசபுரியை நோக்கிப் புறப்பட்டான்.

குறைந்த தொகையினரும், தோல்வியுற்றதால் உற்சாகம் இழந்தவர்களுமான தம் சிப்பாய்களுடன், சகல சாதனங்களுடனும் கூடிய ஏராளமான ஆங்கிலப் படைகளை எதிர்ப்பது ஆபத்தாகும் என்பதைக் குமாரசிம்மன் நன்கு உணர்ந்து, பகைவர்களை

நேரடியாக எதிர்க்காமல் தந்திர யுத்த முறைகளைக் கைக் கொள்ள முற்பட்டார். எனினும், மிகுந்த தொகையுள்ள ஆங்கிலப் படைகளை இரண்டொரு நாட்களுக்கு மேல் எதிர்த்து நிற்க அவரால் முடியவில்லை. இறுதியில் அவர் தம் படைகளுடன் ஜகதீசபுரியையும் விட்டுச் செல்ல நேர்ந்தது.

அயர் தன் படைகளுடன் ஆகஸ்டு மாதம் 14-ஆம் தேதி குமார சிம்மனின் அரண்மனையில் முகாம் போட்டான். ஜகதீச புரியில் இருந்த அரண்மனை, கோவில் முதலிய பல கட்டி டங்களை வெறிகொண்ட ஆங்கிலேயர்கள் இடித்தும் எரித் தும் தகர்த்தனர். எனினும், குமாரசிம்மனைப் பிடிக்க முடியாதது அவர்களுக்கு மிகுந்த வேதனையைக் கொடுத்தது. குமார சிம்மன் தோல்வியுற்றாலும், வெற்றி பெற்றாலும் அவர் உயி ருடன் இருக்கும் வரையில் தாங்கள் நிம்மதியாக வாழ முடியாது என்று அவர்கள் கலக்கம் அடைந்தனர். மற்ற மன்னர்கள், தலைநகர் வீழ்ச்சி யுற்றால் அடங்கி ஒடுங்கிவிடுவர். ஆனால் ஜகதீசபுரி மன்னர் அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர் அல்ல. 'ராமன் இருக்குமிடம் அயோத்தி' என்பதுபோல், 'நான் எங்கு இருக்கிறேனோ அதுதான் ஜகதீசபுரி' என்பதே குமார சிம்மனின் கொள்கையாக இருந்தது; எனவே குமார சிம்மனை விட்டுவிட்டு ஜகதீசபுரியைக் கைப்பற்றியது, ஆங்கிலேயர்களுக்கு மகிழ்ச் சியை அளிக்கவில்லை. ஜகதீசபுரியை அவர்கள் ஆக்கிரமித்துக் கொண்டதிலிருந்து, போர்க்களமே குமார சிம்மனின் ராஜ்ய மாயிற்று!

## 26

## வீழ்ச்சியும் தியாகமும்

டில்லியை மீண்டும் கைப்பற்றுவதற்காகச் சென்ற ஆங் கிலப் படைகளின் மூன்றாவது பிரதம தளபதிக்கு, புரட்சி வீரர்களிடமிருந்து அந்நகரைக் கைப்பற்றுவது அசாத்தியமான காரியமென்று தோன்றிவிட்டது. எனவே, அவன் தன் பதவியை ராஜீநாமாச் செய்தான். நான்காவது பிரதம தளபதியாக வில் ஸன் அந்தப் பதவியை ஏற்றுக்கொண்டான். தேசீய வீரர்களின் இடைவிடாத தாக்குதலால் சோர்வுற்று மனமுடைந்த ஆங்கி லேயர்கள், டில்லி முற்றுகையைக் கைவிட்டுவிடலாமா என்பது பற்றியும் யோசிக்க ஆரம்பித்தனர்.

அந்த யோசனையை அவர்கள் நிறைவேற்றி யிருப்பார்களா யின், 1857-ஆம் வருஷத்திய புரட்சியின் போக்கு எவ்விதம் மாறியிருக்கும் என்பதுபற்றித் திட்டமாக எதுவும் கூறுவதற் கில்லை. எனினும், அதனால் ஆங்கிலேயர்களுக்குப் படுதோல்வி களைக் காட்டிலும் அதிக ஆபத்து ஏற்பட்டிருக்கும் என்பதி

மாத்திரம் ஐயம் இல்லை. டில்லி நகரை முற்றுகையிட்டதால் அவர்களுக்கு ராணுவ தந்திர ரீதியாக மகத்தான நன்மை உண்டாயிற்று. • அதன் பயனாகப் புரட்சிப் படைகள் ஒரே இடத்தில் அடைபட்டு விட்டன அல்லவா? அவ்விதமின்றி, தேசீய வீரர்கள் சிறு சிறு பிரிவுகளாகப் பல இடங்களிலும் பிரிந்து நின்று தாக்கி யிருப்பார்களாயின், ஆங்கிலப் படைகள் ஏககாலத்தில் பல இடங்களிலும் பிரிந்து நின்று அவர்களை எதிர்த்திருக்க முடியாது.

டில்லி நகர் முற்றுகை இடப்பட்டதால், போர்முனையின் எல்லை மிகவும் குறுகிவிட்டது. அதனால் ஆங்கிலப் படைகளுக்குச் சமாளிக்க முடியாத நிலைமை எதுவும் ஏற்படவில்லை. தேசீய வீரர்களோ, ஒரே நகரில் கூட்டமாக இருந்ததால், அவர்கள் எல்லாரையும் ஏக காலத்தில் தாக்குவதும் ஆங்கிலேயர்களுக்குச் சாத்தியமாயிற்று. அந்த நிலைமையில் ஆங்கிலேயர்கள் முற்றுகையைக் கைவிடுவது, அணையை உடைத்து, தேங்கிக் கிடக்கும் புரட்சிப் படைகளைப் பெரு வெள்ளம்போல் தேசமெங்கும் பரவும்படி செய்ததாக முடியும்!

டில்லியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றினாலுங்கூட, தேசீயப் படைகள் பரந்தும் சூழ்ந்தும் நின்று அவர்களைத் தாக்குவது நிச்சயம். புரட்சிப் படைகளைத் தோற்கடித்து டில்லியிலிருந்து வெளியேறும்படி செய்வதற்கும், முற்றுகையைக் கைவிட்டு அவர்களைத் தங்கள்மீது பாயும்படி விட்டுவிடுவதற்கும் உள்ள வேற்றுமையை ஆங்கிலேயர்கள் உணர்ந்திருந்தனர் என்றாலும், சோர்வும் பீதியும் தேசீய வீரர்களின் கடுமையான தாக்குதலும் முற்றுகையைக் கைவிட்டுவிடலாமா என்றுகூட ஆங்கிலேயர்கள் ஆலோசிக்கும்படி செய்துவிட்டன.

அப்போது இந்தியாவில் ஆங்கிலேயர்களின் அதிகாரம் மயிரிழையில் தொங்கியது. அத்தகைய குழப்பமான நிலைமையில், அவர்களிடையே உறுதியும் கண்மூடித்தனமான துணிச்சலும் வாய்ந்த பெயிர்டு ஸ்மித் ராணுவத்தில் முக்கிய ஸ்தானம் வகித்து வந்தது அவர்களின் அதிருஷ்டமே ஆகும். முற்றுகையைக் கைவிட்டுப் பின்வாங்கும் விஷயமாக மற்ற ராணுவ அதிகாரிகள் யோசித்து வருகையில், அவன் உறுதியுடன் கூறியதாவது: 'டில்லியில் நமக்குள்ள பிடியை நாம் ஓர் அங்குலங்கூடத் தளர்த்திவிடக் கூடாது. அதன் கழுத்தைச் சுற்றிப் போட்டுள்ள சுருக்கை நாம் இடைவிடாது இறுக்கி வரவேண்டும். டில்லி முற்றுகையை நாம் கைவிட்டால் பாஞ்சாலம் நம் கையிலிருந்து நழுவிவிடும்; இந்தியாவும் நம் ஆதிக்கத்திலிருந்து போய்விடும்; பின்னால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இனி எக்காலத்திலும் மீள முடியாதவாறு நாசமாகிவிடும்.'

மிகவும் நெருக்கடியான சமயத்தில் பெயிர்டு ஸ்மித் உறுதியுடனும் நம்பிக்கையுடனும் கூறிய அவ்வார்த்தைகள் மற்ற அதிகாரிகள் எல்லாருக்கும் மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தன. தளபதி வில்சனும் டில்லியைக் கைப்பற்றாமல் திரும்புவதில்லை என்று உறுதி கொண்டான். அதே சமயம் தேசீய வீரர்களும்

சளைக்கவில்லை. மிகத் திறமையுடனும் பிரமிக்கத் தக்க தைரியத்துடனும் முற்றுகையை எதிர்த்து வந்தார்கள். புதிது புதிதாக அவர்கள் கைக்கொண்ட யுக்திகள் ஆங்கிலேயர்களிடையே மிகுந்த உயிர்ச் சேதத்தை உண்டுபண்ணின. வலது பாரிசத்திலாவது இடது பாரிசத்திலாவது உள்ள ஆங்கிலத் துருப்புகளை அவர்கள் திடீரென்று தாக்குவார்கள். அதன் விளைவாக ஆங்கிலேயர்களிடையே மிகுந்த உயிர்ச் சேதம் ஏற்படும். பிறகு ஆங்கிலேயர்கள் ஒருமித்து எதிர்த்து வருமுன் பின்வாங்கி விடுவார்கள். சில சமயங்களில் தேசீயப் படை பின்வாங்குவது போல் பாசாங்கு செய்யும். ஆங்கிலேயர்களும் அதை உண்மையென நம்பி அந்தப் படையை விரட்டிக்கொண்டு கோட்டைக்கு வெகு சமீபம் வரையில் வந்துவிடுவார்கள். அவ்வளவுதான்! திடீரென்று தேசீயப் படையின் பீரங்கிகள் பூமி கிடுகிடுக்கும் படியான இடி முழக்கத்துடன் தீயைக் கக்க ஆரம்பித்துவிடும்!

இவைபோன்ற தந்திர முறைகளால் ஆங்கிலேயர்களில் ஆயிரக் கணக்கானவர் பலியாயினர். இவ்வாறு ஏராளமானவர்கள் மாண்டதால், எக் காரணத்தைக் கொண்டும் சிப்பாய்களை விரட்டிச் செல்ல முயலக் கூடாதென்று வில்சன் தன் படைகளுக்குக் கண்டிப்பாக உத்தரவிட்டான். அத்தகைய யுக்திகளால் ஆங்கிலத் துருப்புகளின் தொகை குறைந்துவிடவே, தளபதி ஏக்கத்துடன் அடிக்கடி பாஞ்சால வழியைப் பார்த்துக்கொண்டிருந்தான். தனக்கு உதவியாக அங்கிருந்து முற்றுகைச் சாதனங்களுடன் ரெயில்வண்டி வருமா என்று எதிர்பார்த்த வண்ணம் இருந்தான். வட ஹிந்துஸ்தானத்தில் தபால் போக்குவரத்து, தந்திக் கம்பிகள், ரெயில் பாதைகள் முதலியன துண்டிக்கப்பட்டுவிட்டதால், தேச பக்தர்களைப்போல் டில்லியில் இருந்த ஆங்கிலப் படைகளும் முற்றுகை இடப்பட்டனபோல் ஆயின.

டில்லிக்குத் தெற்கே என்ன நிகழ்ந்து வருகிறது? கல்கத்தாவிலிருந்து அனுப்பப்பெற்ற படைகள் எங்கே போய்ச் சேர்ந்தன? லக்ஷ்மணபுரி, கான்பூர், காசி முதலிய பல நகரங்களிலும் நிலைமை எவ்விதம் இருந்து வருகிறது? இந்தக் கேள்விகள் ஆங்கிலேயர்களின் மனத்தில் எழுந்த வண்ணம் இருந்தன. ஹ்யூ வீலர் கொல்லப்பட்ட ஒரு மாதத்துக்குப்பின் வில்சன் படைகளுடன் டில்லிக்கு வந்துகொண்டிருப்பதாக அங்கிருந்த ஆங்கிலேயர்களுக்கு 'ஆதார பூர்வ'மாகத் தகவல் கிடைத்தது! கல்கத்தாவிலிருந்து உதவித் துருப்புகள் வரும் என்று அவர்கள் நம்புவதற்கில்லை. எனவே டில்லியில் இருந்த ஆங்கிலப் படைகளுக்கு எல்லா உதவியும் அளிக்க வேண்டிய முழுப் பொறுப்பும் பாஞ்சாலத்தின் தலையில் விழுந்தது.

ஜான் லாரென்ஸும் சலியாது பாஞ்சாலத்திலிருந்து ஆங்கிலப் படைகளையும் துரோகிகள் அடங்கிய படைகளையும் அனுப்பிவந்தான். டில்லி முற்றுகையில் ஏராளமானவர்களை இழந்து ஆங்கிலேயர்கள் தவித்துக்கொண்டிருக்கையில் நிக்கல்ஸன் தலைமையில் ஜான் லாரென்ஸ் இரண்டாயிரம் துருப்புகளை உதவிக்கு அனுப்பினான். அந்தச் செய்தியைக் கேட்டதும் டில்லியில் இருந்த ஒவ்

வோர் ஆங்கிலேயனின் முகத்திலும் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் உற்சாகமும் தாண்டவமாடின. இரண்டாயிரம் ஆங்கிலச் சிப்பாய்கள் வருகின்றனர் என்பதைக் காட்டிலும் நிக்கல்ஸனின் வருகையே அவர்களுக்கு அதிக உற்சாகத்தைக் கொடுத்தது. நிக்கல்ஸனைப் போன்ற ஓர் ராணுவ அதிகாரி ஆயிரக்கணக்கான சிப்பாய்களுக்குச் சமம் அல்லவா? 'நிக்கல்ஸன் வருகிறார்; இனி வெற்றி நமக்குத்தான் என்பதில் சந்தேகமில்லை' என்று டில்லியில் இருந்த ஒவ்வோர் ஆங்கிலேயனும் ஆனந்தமடைந்தான்.

ஆங்கிலேயர்களிடையே சிறந்த தலைவர்கள் இருந்ததால், வெற்றியில் அவர்களுக்கு நாளுக்கு நாள் நம்பிக்கை அதிகமாகி வந்தது. சிறந்த ராணுவத் தலைவர்கள் இராதது, தோல்வி நிச்சயம் என்ற எண்ணத்தைத் தேச பக்தர்களிடையே பலப்படுத்தி வந்தது. சமாதான காலங்களில் இன்றியமையாத அன்பு, இரக்கம், பெருந்தன்மை போன்ற அரிய குணங்கள் டில்லி சக்கரவர்த்தியிடம் நிறைந்திருந்தன வாயினும், அவருக்கு ராணுவ அநுபவம் போதாது. வீரர்கள் அடங்கிய படைகளுக்குத் தலைமை வகித்துப் போரை நடத்தும் அஞ்சா நெஞ்சமோ ஆற்றலோ தந்திரமோ அவருக்கு இல்லை. டில்லிக் கோட்டைக்குள் மகா தைரியசாலிகளான ஐம்பதினாயிரம் வீரச் சிப்பாய்கள் இருந்தும் அவர்களுக்கெல்லாம் தலைமை வகித்துப் போரை வெற்றிகரமாக நடத்துவதற்குற்ற சிறந்த தலைவர் இல்லாததால் அவர்களின் நிலைமை சாரதியற்ற ரதம்போல் ஆகியது.

எனினும் போர் செய்து இறுதியில் தோல்வியுற்ற அந்த வீரர்களை, அந்தத் தேச பக்தர்களை, அந்த இளஞ் சிங்கங்கள் யாவரையும் பாராட்டவும் கௌரவிக்கவும் வணங்கவும் நாம் கடமைப்பட்டிருக்கிறோம். தங்களை நடத்துவதற்குற்ற சிறந்த தலைவர் இல்லாமல் இருந்துங்கூட, அவர்கள் நீண்டகாலம் கட்டுக்கோப்பாக ஆங்கிலேயர்களை எதிர்த்து நின்றதுதான் மிக மிக ஆச்சரியமாகும்.

உற்ற ராணுவத் தலைவர் இல்லாத குறையைச் சக்கரவர்த்தியும் அறிந்து தகுந்த ஒருவரைக் கண்டு பிடிக்கப் பெருமுயற்சி செய்தார். அவ் விஷயமாக அவர் கைக்கொண்ட பரிசோதனைகள் பயன் அளிக்கவில்லை. அவர் ராணுவ அதிகாரம் முழுவதையும் பகத் கானுக்கு அளித்ததுடன், ராணுவ நிர்வாகத்துக்காக மூன்று உதவித் தளபதிகளையும் நியமித்தார். மற்றும் அது சம்பந்தமான எல்லா அலுவல்களையும் மேற்பார்வை இடுவதற்காக மூன்று பிரமுகர்களும் மூன்று ராணுவத் தலைவர்களும் அடங்கிய குழுவையும் அமைத்தார்.

மிகுந்த தேச பக்தியும் தியாக புத்தியும் வாய்ந்த சக்கரவர்த்தி, அம்முறைகளுடன் திருப்தி அடைந்து விடவில்லை. ஜயபுரி, ஜோதிபுரி, பிகானேர், ஆள்வார் முதலிய சம்ஸ்தான மண்டலாதிபதிகளுக்கு அவர் எதிர்காலத் திட்டம்பற்றி எழுதிய கடிதங்களில் இவ்விதம் குறிப்பிட்டிருந்தார்: 'எப்பாடு பட்டாயினும், எத்தனை கஷ்டங்களை அநுபவித்தாயினும், இந்தியாவிலிருந்து அந்நியர் ஆட்சியை அறவே ஒழிக்க வேண்டும் என்பதே

என் ஆர்வமாகும். ஹிந்துஸ்தானம் முழுவதுமே விடுதலை பெற்று விளங்க வேண்டும். தேசீய இயக்கத்தின் முழுப் பளுவையும் தாங்கும் சக்தி வாய்ந்த மிக்க சாமர்த்தியசாலியான ஒருவர் இதை நடத்த முன்வந்தால் அன்றி, புரட்சிப் போர் வெற்றி பெறுவது முடியாத காரியம். அவர், தேசத்தின் பல்வேறு சக்திகளையும் ஏகோபித்த முறையில் உருவாக்கும் ஆற்றல் உள்ளவராகவும் தேச ஜனங்கள் எல்லாருக்கும் பிரதிநிதியாக விளங்கும் யோக்கியதை உடையவராகவும் இருக்க வேண்டும். ஆங்கிலேயர்களை இந்த நாட்டிலிருந்து விரட்டியபின், என் சொந்த நலனுக்காக இந்தியாவை ஆட்சிபுரிய வேண்டும் என்ற ஆசை எனக்கு எள்ளளவும் இல்லை. பகைவர்களை விரட்டுவதற்காகச் சுதேசி மன்னர்கள் யாவரும் கத்தியை உருவுவார்களாயின், நான் என் ராஜ்யாதிகாரம் முழுவதையும் அந்த மன்னர்கள் அடங்கிய மகா சபையிடம் ஒப்பிக்கத் தயாராக இருக்கிறேன்.'

டில்லி சக்கரவர்த்தியும் இந்திய முஸ்லிம்களின் மாபெரும் தலைவருமான பகதூர் ஷா இந்திய மன்னர்களுக்கு எழுதிய கடிதம் இதுதான். அப்போது ஹிந்துஸ்தானம் முழுவதும் நிலவிய தேச பக்தியையும் சுதந்தர உணர்ச்சியையும் அந்தத் தலைவரின் புனித வார்த்தைகள் பிரதிபலிக்கின்றன. அடிமைத்தனத்தில் ஆழ்ந்து கிடந்த மக்களிடையே ஏற்பட்ட இத்தகைய எதிர்பாராத, ஆச்சரியகரமான, மகத்தான மனமாறுதல் உலக சரித்திரத்திலேயே கண்டறியாத விஷயம் என்று சரித்திராசிரியரான சார்லஸ் பால் கூறியுள்ளார்.

டில்லிச் சுவர்களுக்கு எதிரில் அடிமைத்தனத்துக்கும் சுதந்தரத்துக்குந்தான் போர் நடந்ததேயன்றி, இந்தியர்களுக்கும் அந்நியர்களுக்கும் உண்மையான யுத்தம் நடைபெறவில்லை எனலாம். 'டில்லி முற்றுகை' என்ற பிரபல நூலின் ஆசிரியர் கூறியிருப்பதாவது: 'பீரங்கிப் படையில் எத்தனை ஐரோப்பியர்கள் இருந்தனரோ அதைப்போல் நான்கு மடங்கு அதிகமாகச் சுதேசிகள் இருந்தனர். குதிரைப் படையிலும் ஐரோப்பியர்களைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமான சுதேசிகள் இருந்தனர். சுதேசிகளின் உதவியின்றி, நம்மால் ஓர் அடிகூட முன்செல்ல முடிய

அதாவது தேசத்தின் ஒரு பகுதியில் ஏற்பட்ட தீவிரமான விழிப்பை மற்றொரு புறத்தில் நிலவிய கோழைத் தூக்கம் கொன்றுவிட்டது. அப்படி இருந்துங்கூட ஆகஸ்டு மாத இறுதியிலும் ஆங்கிலேயர்கள் தாக்குவதற்குத் தேச பக்தர்கள் இடங்கொடுக்காமல் தாங்களே அவர்களை அடிக்கடி தாக்கி, அவர்கள் எப்போதும் தற்காப்பு முறைகளையே கைக்கொண்டிருக்குமாறு செய்துவிட்டனர். சுயாட்சிக் கொள்கையில் புரட்சிக்காரர்களுக்கு இருந்துவந்த அபரிமிதமான பற்றுதலையே அது காட்டுகிறது. தேச பக்தர்களின் வீரமும் உறுதியும் உற்ற தலைவர் இல்லாமையால் வீணாயின.

ஆங்கிலேயர்கள் கட்சியிலோ மிகத் திறமை வாய்ந்த நிக்கல்ஸன் இருந்தான். இந்த நிலையில் தேச பக்தர்களிடையே சோர்வு,

கலக்கம் இவற்றின் அறிகுறிகள் தென்படலாயின. உற்ற தலைவர் இல்லாமையால் தேசீயப் படைகளுக்குள் கருத்து வேற்றுமையும் ஏற்படலாயிற்று.

சக்கரவர்த்தியின் கட்டளைக்கு இணங்கச் சிப்பாய்த் தலைவர்கள், சிப்பாய்கள், டில்லி நகரப் பிரமுகர்கள் முதலியோர் அடங்கிய கூட்டம் ஒன்றைப் பகத் கான் கூட்டி, 'போரைத் தொடர்ந்து நடத்துவதா அல்லது சரண் புகுவதா?' என்று ஒரு கேள்வி கேட்டார். உடனே 'போர், போர்' என்ற முழக்கம் திசை அதிருமாறு கேட்டது! அந்த உற்சாகப் பெருக்கு அங்கிருந்த எல்லாருக்கும் மிகுந்த நம்பிக்கையை உண்டுபண்ணியது. உடனே புரட்சிப் படைகள் யாவும் நஜாப்கடை நோக்கிப் புறப்பட்டன. அங்கே சென்று ஆங்கிலேயரின் முற்றுகை ரெயில் வண்டியைத் தாக்க வேண்டும் என்பதே அவர்களின் நோக்கமாகும்.

ஆனால் நஜாப்கட் சென்றபின் துரதிருஷ்ட வசமாகப் படைகளுக்குள் இருந்த வேற்றுமை மீண்டும் தலைகாட்ட ஆரம்பித்தது. பரேலி சிப்பாய்களுடன் சேர்ந்து தங்களுடைய முகாம்களை அமைத்துக்கொள்ள நீமச் சிப்பாய்கள் மறுத்துவிட்டனர். மற்றும் அவர்கள் பகத் கானின் கட்டளைகளை மீறி, சமீபத்தில் உள்ள ஒரு கிராமத்தில் தங்களுடைய முகாம்களை அமைத்துக்கொண்டார்கள்.

இந்தச் செய்தியைத் தளபதி நிக்கல்ஸன் கேள்வியுற்றதும், சிறிதும் தாமதம் இன்றிப் போதிய படைகளுடன் நஜாப்கடை நோக்கிப் படையெடுத்துச் சென்று பகத்கானின் கட்டளையை மீறித் தூரத்தில் முகாம் போட்டிருந்த நீமச் சிப்பாய்களைத் திடீரென்று தாக்கினான். அபிப்பிராய பேதம் காரணமாகத் தேசீயப் படைகள் சிதறுண்டும் ஆயத்தமின்றியும் பகைவர்களின் நடமாட்டம் பற்றிய தகவல் தெரியாமலும் இருந்ததால் நீமச் படைகள் சின்னபின்னமாகி அழிந்தன. நீமச் சிப்பாய்கள் எல்லாரும், பகைவர்களும் ஆச்சரியப்படத் தக்கவாறு இறுதி வரையில் அபாரமான தைரியத்துடன் போர் புரிந்தார்கள். எனினும், நிக்கல்ஸன் படைகளின் ஒழுங்கான, கட்டுக்கோப்பான, உக்கிரமான தாக்குதலின் முன் அவர்களால் நிற்க முடியவில்லை. அவர்களிடையே ஒற்றுமையும் ஒழுங்கும் இல்லாததால், அவர்களின் தைரியம் வீணாகியது.

பத்லீ-கீ-ஸராய் யுத்தத்திலிருந்து ஓரிடத்தில்கூடத் தேச பக்தர்கள் இவ்வாறு படுதோல்வி அடைந்ததில்லை. அன்று நீமச் சிப்பாய்கள் ஒருவர்கூடப் பாக்கியின்றிப் போர்க்களத்தில் மடிந்தனர். தாங்களே தேர்ந்தெடுத்த தளபதியின் கட்டளைகளை மீறி அவர்கள் தான்தோன்றித்தனமாக நடந்துகொண்டதால், அவர்கள் எல்லாருக்கும் அந்தக் கதி நேர்ந்தது. கோழைத் தனத்தைப்போல் ஒழுங்கில்லாத தைரியமும் வியர்த்தந்தான் என்பதை அவர்களின் முடிவு நிரூபித்தது.

ஆங்கிலேயர்கள் ஆகஸ்டு மாதம் 25-ஆம் தேதி பெற்ற அந்த வெற்றி அவர்களிடையே இருந்து வந்த சோர்வை அடியோடு

அகற்றிவிட்டது. ஜூன் மாதத்துக்குப் பிறகு அவர்கள் பெற்ற உண்மையான ஒரு வெற்றி அதுதான். அதிலிருந்து டில்லியைத் தாக்கவேண்டும் என்ற அவர்களுடைய ஆர்வம் பன்மடங்கு அதிகமாகியது. இறுதியாக டில்லியைத் தாக்குவதற்கு உற்ற திட்டத்தைத் தயாரிக்கும்படி தளபதி வில்ஸன், பெயிர்டு ஸ்மித்துக்குக் கட்டளையிட்டான்.

ஏற்கனவே டில்லி முற்றுகையைக் கைவிடுவது என்று ஆங்கிலேயர்கள் ஆலோசித்து வந்தபோது, அவ்வாறு கைவிடுவதால் ஏற்படக்கூடிய ஆபத்தை அவர்களுக்கு எடுத்துக் கூறி, அவர்களிடையே மீண்டும் உறுதியும் உற்சாகமும் ஏற்படுமாறு செய்தவன்தான் பெயிர்டு ஸ்மித் என்பது ஞாபகம் இருக்கலாம்.

டில்லியை இறுதியாகத் தாக்குவதற்கு உற்ற திட்டத்தையும் அவன் தயாரித்து முடித்தான். அதே சமயம் முற்றுகைச் சாதனங்களுடன் ரெயில் வண்டியும் பாஞ்சாலத்திலிருந்து வந்து சேர்ந்தது. ஆங்கிலத் தளபதி, தன் துருப்புகளுக்கு இவ்வாறு ஒரு செய்தி அனுப்பினான்: 'டில்லி நகரம், சென்ற மூன்று மாதங்களாக ஆங்கிலப் படைகளையும் மூன்று பிரபல ஆங்கிலத் தளபதிகளையும் ஏமாற்றி வந்திருக்கிறது. எனவே இந்நகரைத் தகர்த்துத் தரைமட்டம் ஆக்குவதுதான், இதுவரையில் நீங்கள் செய்த முயற்சிகளுக்கு வெகுமதியாகும்.'

பாஞ்சாலத்திலிருந்து முற்றுகை ரெயில் வண்டி வந்து சேர்ந்தபின் ஆங்கிலேயர்களின் பக்கத்தில் 3500 ஆங்கிலச் சிப்பாய்களும், பஞ்சாபியர்களும் சீக்கியர்களுமாக 5,000 பேர்களும், 2,500 காஷ்மீரச் சிப்பாய்களும் இருந்தனர். அவர்களைத் தவிர டில்லி வீழ்ச்சியடைய உதவி புரிவதற்காக ஜிந்த் ராஜாவும் நூற்றுக்கணக்கான தன் சிப்பாய்களுடன் வந்திருந்தான். செப்டம்பர் மாத ஆரம்பத்தில் ஆங்கிலத் தளபதி, கடுமையான முற்றுகைக்குப் பூர்வாங்கமாகப் புதிய பீரங்கிகளை அமைக்க ஏற்பாடு செய்தான். அதைக் கண்டதும் டில்லிச் சிப்பாய்களுக்கு மிகுந்த திகில் உண்டாயிற்று. டில்லிச் சுவர்களுக்கு வெளியே ஆங்கிலப் படைகள் ஒழுங்காகவும் கட்டுக்கோப்பாகவும் முன்னேறி வந்தன.

கோட்டைக்கு உள்ளேயோ இந்தியச் சிப்பாய்களிடையே ஒழுங்கின்மையும் அராஜகமும் தாண்டவமாடின. கோட்டையிலிருந்து சிப்பாய்கள் பீரங்கிகளால் சுட்டுங்கூட, ஆங்கிலேயரின் பக்கமிருந்த இந்தியர்கள் பீரங்கிகளை அமைக்கும் வேலையைத் தலைப்பொறுப்பாகக் கவனித்து வந்தார்கள்.

ஆங்கிலேயர்களின் பக்கத்திலிருந்த இந்தியர்கள் மிக மிக ஒழுங்குடனும் உறுதியுடனும் தங்கள் அலுவல்களைச் செய்து வருகையில், ஆங்கிலேயர்களிடம் வீழ்ச்சியுறாமல் டில்லி நகரைப் பாதுகாப்பதற்காகப் போரிட்ட இந்தியப் படைகளோ அபிப்பிராய பேதம் காரணமாகக் கடமைகளைச் சரிவரச் செய்யாமல் மழுப்ப முற்பட்டனர். அதிகாரிகளை மதித்து அவர்களுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவதுதான் துருப்புகளின் முழுமுதற் கடமை என்பதை அவர்கள் அறிந்துகொள்ளாததே பெரும் அனர்த்தத்

தில் வந்து முடிந்தது. அதே சமயம் அவர்களிடையே திறமை யுள்ள தலைவர்கள் இல்லாததும் துரதிருஷ்டமே.

இந்த நிலையில் செப்டம்பர் மாதம் 14-ஆம் தேதி உதய மாயிற்று. ஆங்கிலப் படைகள் நான்கு பிரிவுகளாகப் பிரிந்து, நிக்கல்ஸன் தலைமையில் மூன்று பிரிவுகள் இடது புறத்தில் இருந் தும், மேஜர் ரீடின் தலைமையில் ஒரு பிரிவு வலது புறத்தில் இருந் தும், காபூல் வாயிற்புறத்தை உறுதியுடன் தாக்கி, டில்லிக்குள் பிரவேசிக்கத் தீர்மானித்தன.

அன்று சூரியோதயம் ஆனதும், அதுவரையில் டில்லிச் சுவர்களைத் தகர்த்துக்கொண் டிருந்த ஆங்கிலப் பீரங்கிகள் திடீ ரென்று மௌனம் சாதிக்கலாயின. சிறிது நேரம் வரையில் ஆங் கிலேயர்களின் முகாமில் நிச்சப்தம் நிலவியது. தகர்க்கப்பட்ட ஓரிடத்தின் வழியாக ஒரு படைப் பிரிவு உள்ளே செல்ல முயலுகை யில், புரட்சிக்காரர்களின் பீரங்கிகள் வெகு மும்முரமாக வேலை செய்ததால் ஆங்கிலேயர்கள் குவியல் குவியலாக மாண்டு அரண் களுக்குள் விழுந்தனர். சில ஆங்கிலச் சிப்பாய்கள் மாத்திரம் எல்லாவற்றையும் சமாளித்துக்கொண்டு சுவருக்கு அருகில் வந்து ஏணிகளின் வழியாக அவற்றைத் தாண்ட ஆரம்பித்தனர்.

அந்த முயற்சியில் நூற்றுக் கணக்கானவர் மாண்டுங்கூட, கோட்டைக்குள் ஏராளமானவர்கள் வருவதில் வெற்றி பெற்றது தான் ஆச்சரியமாகும். டில்லிச் சுவரைத் தாண்டியவுடன், அவர்கள் வெற்றிச் சங்கை முழக்கினர். அதே சமயம் மற்றும் சில இடங்களிலும் கடுமையான கைகலப்புச் சண்டைக்குப் பின் சில பிரிவுத் துருப்புகள் உள்ளே பிரவேசித்தன. காஷ்மீர வாயிற் புறத்துக்கு எதிராக இருந்த பாலம் தகர்க்கப்பட்டு ஒரு பலகையே பாக்கியிருந்தது எனினும் அதன் வழியாகப் பல ரும் கதவுக்கு அருகில் சென்றுவிட்டனர். பின்னால் வெடி மருந்து வைத்துக் காஷ்மீர் வாயிற் கதவை உடைத்தார்கள். பல ஆங்கிலேயர்களையும் பலி கொடுத்தே அவர்கள் கதவை உடைக்க முடிந்தது. அந்த வாயிற்படி வழியாக உள்ளே பிர வேசித்துத் தாக்கும்படி காம்பெல் தன் துருப்புகளுக்குக் கட்டளை யிட்டான்.

மேஜர் ரீடின் தலைமையில் மற்றொரு படைப்பிரிவு காபூல் வாயிற்புற வழியாக உள்ளே பிரவேசிக்க முயன்றது. ஆனால் தேசீய வீரர்கள் அவர்களைக் கதவுக்கு அருகில் வரவிடாமல் வெளியே சென்று வெகு கடுமையாகத் தாக்கினார்கள். முதலி லேயே ரீட் கொல்லப்பட்டான். அதன் பயனாக ஆங்கிலேயர் களின் முன்னேற்றம் தடுக்கப்பட்டதுடன், அவர்களிடையே மிகுந்த குழப்பமும் உண்டாயிற்று. சிறிது நேரத்தில் அவர்கள் சிதற அடிக்கப்பட்டு விடுவார்கள் என்றும் தோன்றியது.

அந்தச் சமயம் அவர்களுக்கு உதவியாக ஹோப் கிராண்ட் இந்தியக் குதிரைப் படையுடன் அங்கே வந்து சேர்ந்தான். அதனால் ஆங்கிலேயர்களிடையே குழப்பம் குறைந்து நம்பிக்கை உண்டாயிற்று. கிஷன்கஞ்ஜிலுள்ள தோட்டத்திலிருந்தும் ஒவ்

வொரு வீட்டிலிருந்தும் ஆங்கிலேயர்கள் இடைவிடாது பீரங்கிப் பிரயோகம் செய்ததையும் லட்சியம் செய்யாமல் தேசீய வீரர்கள் மிகுந்த ஆவேசத்துடன் போர் புரிந்தனர். ஆங்கிலேயர் பக்கம் இருந்த இந்தியக் குதிரைப் படையினாலும் முன்னேற முடிய வில்லை. இந்த நிலைமையில் அவர்கள் பின்வாங்குவது என்பதும் முடியாத காரியம். பின்வாங்கினால் புரட்சி வீரர்கள் பீரங்கிகளைக் கைப்பற்றிக்கொண்டுவிடுவார்கள் என்ற திகிலே ஆங்கிலேயர்கள் பின்வாங்காததற்குக் காரணம்.

இந்தியக் குதிரைப் படையினர் முன்னேற முடியாவிடினும், இறந்து, போர்க்களத்தில் வீழ்வதே சிறந்தது என்ற உறுதி யுடன் நின்றனர். 'சுதேசிக் குதிரைப் படையினர் முன்வைத்த காலைப் பின்வைக்கவே இல்லை. அவர்களின் வீரம் இணையற்றது. நான் அவர்களுக்கு உற்சாக மூட்டியபோது, ''எங்களைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்; உங்கள் விருப்பத்திற்கு இணங்க எவ்வளவு நேரம் வேண்டுமாயினும், பீரங்கிப் பிரயோகத்தை எதிர்த்து நிற்கத் தயார்'' என்று அவர்கள் கூறினர்' என்று தளபதி ஹோப் கிராண்ட் குறிப்பிட்டிருக்கிறான். இந்தியச் சிப் பாய்களில் பலரும் தங்களுடைய வீரத்தை அவ்வாறு துஷ்பிர யோகம் செய்யாமல் இருந்திருப்பார்களாயின், முதலாவது இந் திய சுதந்தர யுத்தம் இறுதிச் சுதந்தர யுத்தமாக மாறி யிருக்கும்!

தேசத்துக்காகத் தர்ம யுத்தம் செய்த சிப்பாய்களின் தைரி யம் துரோகிகளின் தைரியத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிக மாக இருந்ததே ஒழியக் குறையவில்லை. ஆக்கிரகம் கொண்ட தேச பக்தர்கள் அங்குலம் அங்குலமாக நின்று ஆங்கிலேயர்களை எதிர்த்து உக்கிரமாகப் போராடினர். ஈத்காஹுக்கு அருகில் தேச பக்தர்கள் அகோர யுத்தம் புரிந்தனர். எனவே அந்தப் பிரதேசத்தைக் கைப்பற்ற முயன்ற ஆங்கிலப் படையின் நிலைமை அலங்கோலமாகியது. அதைக் கண்ட தேசீய வீரர்கள் மேலும் தாக்கவே, வெள்ளையர்கள் பின்வாங்க நேர்ந்தது. பிறகு தேச பக்தர்கள் மேற்கொண்டு அவர்களை விரட்டிச் சென்றனர்.

அந்தப் பிரிவுப் படையை அவர்கள் துரத்திச் சென்று வருகையில் டில்லிக் கோட்டைக்குள் பிரவேசிக்க மற்ற மூன்று பிரிவுகளும் நகரைத் தாக்குவதற்காக முன்னேறிச் சென்றன. முக்கியத் தளபதிகளான காம்பெல், ஜோன்ஸ், நிக்கல்ஸன் இம் மூவரும் தங்களுடைய படைகளுடன் சென்றபோது வழியில் இருந்த பீரங்கிகளையும் கைப்பற்றி, உயரமான ஒவ்வோர் இடத்தி லும் ஆங்கிலக் கொடியையும் பறக்க விட்டனர்.

எனினும் குறிப்பிட்ட ஓரிடத்திற்கு அப்பால் அவர்களால் முன்னேற முடியவில்லை. தேசீயப் படையின் பீரங்கிகள் கக்கிய அக்கினியால் அவர்கள் பின்வாங்கும்படியும் நேர்ந்தது. இவ் வாறு அங்கே தேசீய சேனையின் கை ஓங்கத் தொடங்கவே, நிக்கல்ஸன் புலிபோல் பாய்ந்து, தன் படைகளுடன் முன்னேறி னான். அஞ்சா நெஞ்சம் படைத்த வீரனுக்கு இவ்வுலகில் அசாத்தியமான காரியம் எதுவுமே இல்லை என்பதுதான். அவன்

கொள்கை! அவன் அவ்வாறு பாய்ந்ததும் மீண்டும் இரு சாராருக்கும் பயங்கர யுத்தம் நடந்தது.

இருநூறு கஜ தூரத்திற்குள் நடந்த அந்த யுத்தம் ஒரு சிறிய பானிபட் யுத்தம்போல் அவ்வளவு கோரமாக இருந்தது. அப்போது வானம், பூமி, அஷ்ட திக்குகள் எல்லாம் சேர்ந்து, ஆங்கிலேயர்களை எதிர்ப்பனபோல் தோன்றின! கூரைகள், ஜன்னல்கள், வாசற்படிகள், தாழ்வரைகள் முதலிய பல இடங்களிலிருந்தும் தோட்டாக்கள் பறந்து வந்து, ஆங்கிலேயர்களை வீழ்த்திய வண்ணமாக இருந்தன. ஆயிரக்கணக்கான இடங்களிலிருந்தும் சுதந்தர வீரர்கள் பிரயோகித்த தோட்டாக்களால் வீரனை நிக்கல்ஸன்கூடப் பின்வாங்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. பயங்கரமான அந்த யுத்தத்தில் நிக்கல்ஸனைத் தவிர மற்ற எல்லா அதிகாரிகளும் பலியாயினர்.

அப்போது திடீரென்று ஆங்கிலப் படைகளிடையே ஏதோ பேரிடி விழுந்ததுபோல் கூக்குரல் ஏற்பட்டது. 'நிக்கல்ஸன், நிக்கல்ஸன்!' என்று ஏக காலத்தில் எல்லாரும் கதறினர்; நிக்கல்ஸன் எங்கே? மகா தைரியசாலியான ஒரு தேசீய வீரர் அவனைக் குறிவைத்துச் சுட்டதால், தோட்டா பாய்ந்து அவன் தரையில் உருண்டுகொண் டிருந்தான். அதே சமயம் ஆங்கிலப் படைகளிடையே, 'பின்வாங்குங்கள், பின்வாங்குங்கள்' என்ற பிரலாபங்கள் எழுந்தன. தேசீய வீரர்களிடையோ 'வெட்டி வீழ்த்துங்கள், வெட்டி வீழ்த்துங்கள்' என்ற கர்ஜனைகள் வானளாவின! இருநூறு கஜ தூரமுள்ள அந்தப் பிரதேசத்தில் சிறிது நேரத்திற்குள் ஒவ்வோர் அங்குலமும் வெள்ளையர்களின் கல்லறையாக மாறியது! அவ்விடத்தை விட்டுத் தப்பி ஓடினால் போதும் என்ற நிலைமை ஆங்கிலேயர்களுக்கு ஏற்படவே, அவர்கள் பின்வாங்கி மீண்டும் காஷ்மீர் வாயிலுக்கு வந்து சேர்ந்தனர்.

ஜும்மா மசூதி வரையில் முன்னேறிச் சென்றிருந்த மற்றோர் ஆங்கிலப் படைப் பிரிவும் அங்கிருந்து பின்வாங்கும்படி நேர்ந்தது. அந்த மசூதி வரையில் ஆங்கிலேயர்களை யாரும் கடுமையாக எதிர்க்கவில்லை. ஆனால் அங்கே அவர்கள் வந்ததும், தேசீய வீரர்களின் பக்கத்திலிருந்து பயங்கரமான யுத்த கோஷங்கள் கிளம்பின. உடனே கோரமான போரும் ஆரம்பமாயிற்று. அதில் தளபதி காம்பெல் காயமுற்றான். அவனுடைய படைகளின் நிலைமையும் அலங்கோலமாகியது.

ஆங்கிலேயர்கள் டில்லியைத் தாக்க ஆரம்பித்த முதல் நாள் இவ்விதம் அவர்களுக்குப் படுதோல்வியாக முடிந்தது. இந்தியாவில் உள்ள ஆங்கிலப் படைகள் அதற்குமுன் ஒரு காலத்திலும் இத்தகைய துர்ப்பாக்கிய நிலைக்கு ஆளானதில்லை. டில்லியைத் தாக்கிய நான்கு பிரிவுகளுள், மூன்று பிரிவுகளின் தளபதிகள் அன்றைய யுத்தத்தில் காயமடைந்தனர். மற்றும் 66 அதிகாரிகளும் 1104 சிப்பாய்களும் பலியாயினர்.

தோல்வியுற்ற பிரிவுகளைத் தவிர மற்றப் பிரிவுகளைச் சேர்ந்த பகைவர்கள் அன்று டில்லி நகரின் கால் பகுதியைக் கைப்பற்றி

னர் என்பது உண்மையே. ஆயினும் அதற்காகத் தாங்கள் கொடுத்த பலி, அளவு கடந்துவிட்டதைக் கண்டு அவர்களுக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. பயம், சோர்வு, கவலை எல்லாம் சேர்ந்து வில்ஸனை வாட்டின. இதே ரீதியில் டில்லியைத் தாக்குவதாயின், அந்த நகர் முழுவதையும் கைப்பற்றுவதற்குள், ஆங்கிலப் படைகளெல்லாம் அழிந்துவிடுமென்று வில்ஸன் கலங்கிஞன். ஆகையால், படைகளை யெல்லாம் உடனே பின்வாங்கும் படி உத்தரவிட வேண்டுமென்றும் அவன் கூறிஞன்.

'நகரை இன்னும் நாம் கைப்பற்றவில்லை. ஒரே ஒரு சந்தில் நடந்த யுத்தத்தில் மாத்திரமே நாம் ஏராளமான வீரர்களை இழந்துவிட்டோம். மீதி யுள்ளவர்களையும் யுத்தத்துக்கு வரு மாறு புரட்சிக்காரர்கள் அறை கூவி ஆர்ப்பாட்டம் செய்து வருகிருர்கள். இப்போது நமக்கு இரண்டே வழிகள்தாம் உள்ளன. ஒன்று நாம் நம்மில் சகலரையும் போர்க்களத்தில் பலி கொடுக்க வேண்டும்; அல்லது தோல்வி அடைந்தோம் என்ற அவமதிப்புடன் திரும்பிவிட வேண்டும். இப்போது நாம் பின்வாங்குவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை' என்று வில்ஸன் ஓலமிட்டான்.

காயமடைந்து கிடந்த நிக்கல்ஸன், வில்ஸனின் யோசனை யைக் கேட்டதும் துடித்துவிட்டான். 'பின்வாங்குவதா! ஒரு காலத்திலும் இல்லை. வில்ஸன் பின்வாங்கிஞல் அவனையாவது சுட்டு வீழ்த்துவதற்குப் போதிய பலம் என் உடலில் இன்னும் இருக்கிறது!' என்று அவன் கூறிஞன். மரணப் படுக்கையில் கிடந்த அவனது அபிப்பிராயத்தை மற்றவர்களும் அங்கீகரித்த னர். அதன் பயஞக, ஆங்கிலப் படைகள் பின்வாங்கும் எண் ணத்தைக் கைவிட்டு, தாங்கள் கைப்பற்றிய பிரதேசத்திலேயே உறுதியுடன் நிற்கத் தீர்மானித்தன. ஆங்கிலேயர்களின் ராணுவ சபையும் வில்ஸனின் அபிப்பிராயத்தை அங்கீகரிக்கவில்லை.

அதே சமயம் தேசீயப் படைகளிடையே என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதைக் கவனிப்போம். தேசீய வீரர்கள் அன்று போர்க்களத்தில் ஆங்கிலேயர்களை அலறவைத்து விரட்டி யடித்தனர் என்பது உண்மையே எனினும், பாழும் கருத்து வேற்றுமை காரணமாக அவர்களிடையே பிளவு உண்டாக ஆரம் பித்துவிட்டது. டில்லியை விட்டுவிட்டு, மாகாணத்தின் மற்ற இடங்களில் பரவி நின்று போரைத் தொடர்ந்து நடத்திவரலா மென்று ஒரு சாரார் கருதினர். தங்களில் ஒருவர்கூடப் பாக்கி யின்றி எல்லோரும் இறக்கும்படி நேரினும் டில்லியைக் கைவிடக் கூடாது என்று மற்ருெரு சாரார் வற்புறுத்தினர்.

ஆங்கிலேயர்களின் முகாமில் எவ்வளவு கருத்து வேற்றுமை இருந்தாலும் அவர்கள் இறுதியில் பெரும்பான்மையோரின் முடிவை அங்கீகரிக்கத் தவறுவதில்லை; அந்த முடிவை அநுசரித்து எல்லாரும் ஒருமித்துச் செயலில் இறங்கவும் தவறுவதில்லை. ஆஞல் அத்தகைய சம்பிரதாயம் தேசீயப் படைகளிடத்தில் முற்றும் அரிதாகியது. எல்லாரும் ஏகமனதாக ஒரு முறையை அநுஷ்டிக்காமல், ஒவ்வொரு சாராரும் தங்கள் தங்கள் நோக்கப்

படி நடந்துகொள்ள முற்பட்டனர். சிலர் டில்லியை விட்டு வெளியேறினர். மற்றவர்கள் டில்லியை விட்டுச் செல்லுவதில்லை என்று உறுதிகொண்டு போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தனர்.

டில்லியைப் பாதுகாத்துச் சுதந்தரத்தை நிலைநிறுத்துவதற்காக அந்த வீரர்கள் செப்டம்பர் 15-ஆம் தேதியிலிருந்து 24-ஆம் தேதி வரையில் மிகுந்த உறுதியுடனும் தைரியத்துடனும் அங்குலம் அங்குலமாக நின்று போர் புரிந்தார்கள். உதாரணமாக, ஆங்கிலப் படைகள் ஒரு மசூதிக்கு உள்ளேயோ, ஒரு மாளிகைக்கு உள்ளேயோ புகும்போது அதன் காவலர் தாம் இறப்பது நிச்சயம் என்று தெரிந்துங்கூட அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தாம் எத்தனை பேர்களை வீழ்த்த முடியுமோ, அத்தனை பேர்களை வீழ்த்திவிட்டுத் தாமும் வீர சுவர்க்கம் அடைவார். தாய் நாட்டிற்காகப் போராடிய அந்த வீரர்களிடையே பின்வாங்குவது என்ற பேச்சுக்கே இடம் இல்லாமல் போயிற்று!

டில்லியில் முக்கால் பாகம் வீழ்ச்சியுற்றதும் பிரதம தளபதி பகத் கான் சக்கரவர்த்தியிடம் சென்று இவ்வாறு கூறலானுர்: 'டில்லிமா நகர் நம் கையிலிருந்து நழுவிவிட்டது. எனினும் நாம் வெற்றி பெறுவதற்கான சந்தர்ப்பங்களெல்லாம் நழுவிவிட்டன என்று கூறுவதற்கு இல்லை. இப்போதுகூட நாம் வெளியிடங்களுக்குச் சென்று பகைவர்களைக் கலங்க வைக்கலாம். அடைபட்டுக் கிடக்கும் இந்தப் பிரதேசத்தைப் பாதுகாக்க முற்படுவதைக் காட்டிலும், வெளியிடங்களுக்குச் சென்று பகைவர்களுக்கு இடைவிடாது கஷ்டங்களை விளைவித்து வருவதன் மூலம் நாம் இறுதியில் நிச்சயமாக வெற்றி பெற வழி உண்டு. இந்தச் சுதந்தர யுத்தத்தில் இறுதி வரையில் வாளேந்திப் போர் புரிய உறுதி கொண்டிருக்கும் வீரர்களுடன் நான் டில்லியிலிருந்து வெளிச் சென்று போர் செய்யத் தீர்மானித்துள்ளேன். பகைவர்களிடம் சரண் புகுவதைக் காட்டிலும் போர் செய்த வண்ணம் வெளியேறுவதுதான் சிறந்தது என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சமயம் நீங்களும் எங்களுடன் வரவேண்டும். உங்களுடைய தலைமையில் சுயராஜ்யத்துக்காக நாங்கள் இறுதிவரையில் போரிட்டே தீருவோம்.'

பகதூர் ஷாவுக்குப் பாபர், ஹுமாயூன், அக்பர் இவர்களுக்கு இருந்த வீர தீர பராக்கிரமத்தில் நூறில் ஒரு பங்கு இருந்திருப்பினுங்கூட, அவர் பகத் கானின் அழைப்பை ஆட்சேபமின்றி அங்கீகரித்து அந்த வீரர்களுடன் டில்லி நகரை விட்டு வெளியேறியிருப்பார். அவ்விதம் வெளியேறுகையில் அவர் பகைவர்களால் பலியாகும்படி நேரினும், மன்னராகவே வீர சுவர்க்கம் அடைந்திருப்பார். ஆயினும் என்ன செய்வது? வயோதிகம் காரணமாக அவருடைய புத்தியும் குன்றிவிட்டது! போதாக் குறைக்கு, தோல்வியினுல் ஏற்பட்ட பீதியும் சேர்ந்துகொண்டதால், சக்கரவர்த்தி பகதூர் ஷா இறுதிவரையில் யாதொரு முடிவும் செய்யாமல் ஊசலாடிக்கொண்டிருந்தார். கடைசி நாளன்று ஹுமாயூன் சமாதியில் போய் ஒளிந்துகொண்டார்!

அவர் பகத் கானின் அழைப்பை அங்கீகரிக்க அறவே மறுத்து விட்டதுடன், இலாஹிபக்ஷ் மிர்ஸா என்பவனின் துர்ப்போதனைக் குச் செவிமடுத்துப் பகைவர்களிடம் சரண் புகவும் தீர்மானித் தார். இலாஹி பக்ஷ் மிர்ஸா ஒரு பெருந் துரோகி. பகதூர் ஷா ஒளிந்துகொண்டிருந்த இடத்தை அவன் பகைவர்களுக்கு அறிவிக்கவே, ஆங்கிலேயர்கள் உடனே காப்டன் ஹாட்ஸனை அவ்விடத்துக்கு அனுப்பினர். அவருடைய உயிருக்கு எவ்வித ஆபத்தும் நேராது என்று ஆங்கிலேயர் உறுதி கூறியதன் மீது சக்கரவர்த்தி சரண் புகுந்தார். உடனே அவரை ஆங்கிலேயர் கள் சிறைப்படுத்தினர்.

துரோகிகளான இலாஹி பக்ஷும், முன்ஷி ரஜாப் அலியும் அப்போது ஆங்கிலேயரிடம் ஓடி வந்து ஹுமாயூன் சமாதியில் இளவரசர்கள் ஒளிந்துகொண் டிருக்கும் இடத்தையும் தெரி வித்தனர். பின்னர் ஹாட்ஸன் அவ்விடத்துக்கு ஆட்களை அனுப்பி இளவரசர்களையும் கைது செய்து வரும்படி உத்தரவிட் டான். அவர்கள் ஏறிவந்த வண்டி சமீபத்தில் வந்ததும், ஹாட் ஸன் வெறிபிடித்தவனைப்போல் ஓடிச் சென்று, அவர்களைக் கீழே இழுத்துத் தள்ளினான். மூன்று இளவரசர்களும் ஆபரணங்களோ உயர்ந்த உடைகளோ எதுவும் இன்றி ஏழைகளைப்போல் நிர்க் கதியாக அவன் முன்னிலையில் நின்றனர். அந்தக் காட்சி எவ ருடைய மனத்தையும் உருக்கவல்லது எனினும், ஹாட்ஸனின் கல்நெஞ்சம் அதைக் கண்டு கரையவில்லை. அவனது துப்பாக்கியி லிருந்து கிளம்பிய மூன்று தோட்டாக்கள் அந்த மூன்று இளவர சர்களையும் விண்ணுலகிற்கு அனுப்பின.

ஹாட்ஸனின் மிருகத்தனத்தால் தைமூரின் வம்சம் இவ் விதம் பரிதாபகரமாக மறைந்தது. இளவரசர்களைச் சுட்டு வீழ்த்திய பின்னருங்கூட ஹாட்ஸனின் வஞ்சவெறி தீரவில்லை. காட்டுமிராண்டிகள்தாம் மரணத்துடன் திருப்தி அடைந்துவிடு வார்கள். ஆனால் வஞ்ச புத்தி படைத்த 'நாகரிக' ஆங்கிலேயர் கள் அவர்களையும்விட மோசமானவர்கள் அல்லவா? அவர்களின் ஜீவகாருண்யமற்ற தன்மைக்கு எல்லை ஏது? எனவே கொல்லப் பட்ட இளவரசர்களின் உடல்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு முன் கழுகுகளுக்கு இரையாகும்படி இழுத்து எறியப்பட்டன. அவை வெகு நேரம்வரை கழுகுகளுக்கு ஆகாரமான பிறகுதான், ஆற்றில் தள்ளப்பட்டன. அந்தோ! என்னே காலச் சக்கரத்தின் போக்கு! மகா சக்கரவர்த்தியான அக்பரின் சந்ததிகள் அந்தியகாலச் சடங்கு எதுவும் இன்றி இவ்விதம் ஆங்கிலேயர்களாலும் கழுகு களாலும் அலங்கோலப்பட வேண்டுமா?

இளவரசர்கள் கொலை உண்டபின், நகரில் கொள்ளையும் படுகொலையும் ஆரம்பமாயின. லார்டு எல்பின்ஸ்டன், ஜான் லாரென்ஸுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டதாவது: 'டில்லி முற்றுகை முடிந்தபின் நம் படைகளால் நிகழ்த்தப் பட்ட கொடுமைகள் நெஞ்சைப் பிளப்பனவாக இருக்கின் றன. நண்பர்கள், விரோதிகள் என்ற வேற்றுமை எதுவும் இன்றி, சகல இந்தியர்கள்மீதும் வஞ்சம் தீர்க்கப்பட்டது. கொள்ளை யடிப்பதிலோ நாம் நாதிர் ஷாவையும் மிஞ்சிவிட்டோம்!'

அப்போது டில்லி நகரையே தகனம் செய்துவிடவேண்டும் என்று ஜெனரல் அவுட்ராம் யோசனை கூறினன். டில்லி முற்றுகையில் ஈடுபட்ட ஆங்கிலச் சேனையில் ஐரோப்பியர்களும் இந்தியர்களுமாகச் சுமார் பத்தாயிரம் பேர்கள் இருந்தனர். அவர்களில் சுமார் நாலாயிரம் பேர்கள் கொல்லப்பட்டும் காயமுற்றும் போர்க்களத்தில் வீழ்ந்தனர். கிரிமியா யுத்தத்தில்கூட ஆங்கிலேயர்களிடையே மாண்டவர்களின் தொகை இவ்வளவு அதிகம் இல்லை. தேச பக்தர்கள் பக்கத்திலும் சுமார் ஆறுயிரம் பேர்கள் வரையில் வீர சுவர்க்கம் அடைந்தார்கள்.

சரித்திரப் பிரசித்தமான அந்த நகரில் சுதர்ம உணர்ச்சியினுலும் தேச பக்தியினுலும் தூண்டப்பட்ட மக்கள், பலமும் ஒழுங்கும் கட்டுக்கோப்பும் சூழ்ச்சியும் உள்ள ஆங்கிலேயர்களை 134 நாட்கள் வரையில் எதிர்த்துப் போராடினுர்கள். புனிதமான ஒரு கொள்கைக்காக, தேசீய வீரர்கள் ஈடுபட்ட அந்த யுத்தம் அதற்குற்ற பெருமையுடனேயே விளங்கியது. என்றைக்கு டில்லிமா நகர் அந்நியர்களின் கொடியைக் கிழித்தெறிந்து சுயராஜ்யத்தை ஸ்தாபித்ததோ, என்றைக்கு அந்த நகரம் அடிமைச் சங்கிலிகளைத் தூள் தூளாகத் தகர்த்து மீண்டும் சுதந்தரத்தை அடைந்ததோ, என்று அந்த நகர் இந்தியர்கள் யாவரும் ஒரு தாயின் குழந்தைகள் என்ற மந்திரத்தைப் பிரகடனம் செய்ததோ, அன்றையிலிருந்து ஆங்கிலேயர்களின் வாட்கள் பகதூர் ஷா சந்ததிகளின் உதிரத்தை உறிஞ்சிய நாள்வரையில், தேச பக்தர்கள் அந்தப் புனித யுத்தத்தில் புரிந்த தன்னலமற்ற தியாகங்களும் எண்ணிக்கையற்ற தீரச் செயல்களும் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை.

அப்போது டில்லியிலே அவர்களுக்குச் சிறந்த தலைவர் இல்லை. கட்டுக்கோப்பான ஒரு ஸ்தாபனம் இல்லை. ஒற்றுமையுடனும், ஒழுங்குடனும், சிறந்த தலைவர்களுடனும் கூடிய ஆங்கிலப் படைகளை அவர்கள் எதிர்க்கவேண்டி யிருந்தது. துரோகிகளாயினும் வீரர்களான ஏராளமான இந்தியர்களும் ஆங்கிலேயர்களின் பக்கம் இருந்தனர். அத்தகைய நிலைமையிலும் தேச பக்தர்கள் உயிருக்கு அஞ்சிப் பகைவர்களிடம் சரண் புகாமல் இறுதிவரையில் இணையற்ற தீரத்துடன் போராடி வீர சுவர்க்கம் அடைந்ததை நாம் எக்காலத்திலும் மறக்க முடியாது. தேசபக்தர்களிடையே சிறந்த தலைவர் இல்லை என்பதற்காகவோ, அபிப்பிராய பேதம் காரணமாக அவர்களிடையே ஒற்றுமை சீர் குலைந்ததற்காகவோ, அவர்களின் பெருமையை நாம் அலட்சியமாகக் கருதவும் கூடாது. அவர்கள் தேசத்துக்காகவும் மதத்துக்காகவும் போர் புரிந்து பலியான உண்மைத் தியாகிகள் ஆனதால், டில்லி முற்றுகை வீணுகிவிடவில்லை. அவர்களின் வீரதீர பராக்கிரமம் பொருந்திய சாகசங்களையும், அவர்களின் தவறுகளையுங்கூட இந்தியாவின் எதிர்காலச் சந்ததிகள் பயபக்தியுடன் ஞாபகத்தில் இருத்தி வருவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அவர்கள் எத்தனை தவறுகள் செய்திருப்பினும், சுதர்மத்துக்காகவும் சுயராஜ்யத்துக்காகவும் போரிட்ட அந்த வீரத் தியாகிகளின் உதாரணம் அஞ்சா நெஞ்சம் படைத்த தேசீய வீரர்களை உரு

வாக்கும் நிரந்தர ஊற்றாக விளங்கிவரும் என்பதில் ஐயமும் உண்டோ!

## 27

## உதிர வெள்ளத்திலே லக்ஷ்மணபுரி

என்றைக்குச் சின்ஹத் யுத்தத்தில் தேச பக்தர்கள் வெற்றி பெற்றனரோ அன்றைக்கே அயோத்தியிலும் ஆங்கிலேயரின் அதிகாரம் மறைந்துவிட்டது. அன்றே தேச பக்தர்களின் எழுச்சி பகிரங்கமான முறையில் மகத்தான தேசீயப் புரட்சியாக விசுவ ரூபம் எடுத்தது. காலியான லக்ஷ்மணபுரி சிம்மாசனத்தில், சிப்பாய்களும் தலைவர்களும் மன்னர்களும் மகாஜனங்களும் சேர்ந்து, தங்களுடைய அன்புக்குப் பாத்திரமான ஒருவரை ஸ்தாபித்தனர். சின்ஹத் யுத்தத்துக்குப் பின் ஒரு வாரம் வரையில் எங்கும் அராஜகம் தாண்டவமாடியது. எனவே, மேற்கொண்டு போர் செய்வதற்குற்ற ஏற்பாடுகளைச் செய்யு முன், முதலில் அராஜக நிலைமைக்குப் பரிகாரம் தேட வேண்டியது மிக அவசியம் ஆகியது.

அந்த ஒரு வாரத்திற்குள் ஆங்கிலேயர்களுக்குத் தங்கள் தற்காப்புக்களைப் பலப்படுத்திக்கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது. எனினும், தேச பக்தர்கள் லக்ஷ்மணபுரியில் அரசாங்க நிர்வாக முறைகளைச் சீர்ப்படுத்தும் விஷயமாகவே முதலில் கவனம் செலுத்த முற்பட்டனர். லக்ஷ்மணபுரி நவாப் வாஜித் அலி ஷாவை ஆங்கிலேயர்கள் கல்கத்தாவில் சிறைப் படுத்தி வைத்திருந்ததால் அவருடைய புதல்வர் இளவரசர் பிர்ஜிஸ் காதரைத் தேசீய வீரர்கள் சிம்மாசனத்தில் ஏற்றினர். பிர்ஜிஸ் காதர் சிறுவரேயாதலின், அயோத்தி ராஜ்ய நிர்வாகம் அவருடைய பிரதிநிதி என்ற முறையில் அவருடைய தாய் ராணி ஹஸ்ரத் மஹலிடம் ஒப்பிக்கப்பட்டது.

சக்கரவர்த்தி பகதூர் ஷாவின் வயோதிகம் காரணமாக டில்லிராஜ்ய நிர்வாகம், சக்கரவர்த்தியின் பெயரில் பேகம் ஜீனத் மஹலிடம் ஒப்பிக்கப்பட்டிருந்தது. அதுபோலவே லக்ஷ்மண புரியிலும் நவாபின் இளமைப் பருவம் காரணமாக ராஜ்ய நிர் வாகத்தைப் பேகம் ஹஸ்ரத் மஹல் மேற்பார்வையிட்டு வந்தார். இந்த ராணி, லக்ஷ்மிபாயைப்போல் அவ்வளவு சிறப்பு வாய்ந்த வீர வனிதை அல்லவெனினும், சுதந்தர ஆர்வமும் தைரியமும் படைத்தவர் என்பதில் சந்தேகம் இல்லை. அவர், ஸ்தாபனங்களை யும் இயக்கங்களையும் உருவாக்கும் சக்தியும் வாய்க்கப் பெற்றிருந் தார். அயோத்தி தர்பாரில் இருந்த மஹ்பூப் கான் என்ற கன வானிடம் அவருக்குப் பூரண நம்பிக்கை இருந்து வந்தது. அந்தப் பெண்திலகம் நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டதும், நீதி, வரி

வசூல், போலீஸ், ராணுவம் முதலிய பல இலாகாக்களிலும் தகுந்த அதிகாரிகளை நியமித்தார். சிப்பாய்களின் பிரதிநிதிகள், மஹ்பூப் கான் முதலிய பிரபல சர்தார்கள், பெரும்பாலான மக்கள் இவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களையே ராணி ஹஸ்ரத் மஹல் அதிகாரிகளாக நியமித்தார்.

அப்போது சுதந்தர யுத்தத்தில் சேருவதற்காக அயோத்தியைச் சேர்ந்த பல இடங்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் லக்ஷ்மணபுரிக்குக் கூட்டங் கூட்டமாக வந்துகொண்டிருந்தார்கள். அயோத்தி விடுதலை பெற்றுவிட்டது என்பதையும், அங்கு ஆங்கில ஆட்சியின் அறிகுறி சிறிதும் இல்லை என்பதையும் தெரிவித்து, பேகத்தின் முத்திரையிட்ட கடிதம் ஒன்றும் டில்லி சக்கரவர்த்திக்கு அனுப்பப்பட்டது. அத்துடன் அவருக்குப் பல பரிசுகளும் அனுப்பப்பட்டன. ஆயுதந் தாங்கிய தங்கள் தங்கள் சிப்பாய்களுடன் உடனே லக்ஷ்மணபுரிக்கு வருமாறு சுற்றுவட்டத்திலுள்ள ஜமீன்தார்கள், ராஜாக்கள் முதலானோருக்கும் கடிதங்கள் அனுப்பினர். நிர்வாக அதிகாரிகள் நியமிக்கப்பட்டுச் சகல இலாகாக்களின் அலுவல்களும் ஒழுங்காக நடைபெறலாயின. தினசரி தர்பாரும் நடைபெறத் தொடங்கியது.

இவ்வாறாகப் புரட்சி முடிந்து, உருவான அரசாங்க வேலைகள் ஆரம்பமாயின. எனினும் துரதிருஷ்டவசமாகப் புரட்சிக்காரர்கள், அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியாமல் தங்கள் இஷ்டப்படி நடந்துகொள்ள முற்பட்டார்கள். இத்தகைய தவறுதான் புரட்சியை அழிப்பதற்கான விதையாகும். அதிகார வர்க்கத்தின் அநீதியான சட்டங்களை ஒழிக்கவே ஒவ்வொரு புரட்சியும் ஆரம்பிக்கப்படுகின்றது. கொடுங்கோலர்களின் அக்கிரமமான சட்டங்களைத் தகர்க்கும் வழக்கம் ஏற்பட்டதும், அது பின்னால் எல்லாச் சட்டங்களையுமே ஒழிக்கும் விபரீத வழக்கமாக மாறிவிடுகிறது. கொடூரமான மிருகத்தனமான சட்டங்களை அழிக்கும் வாள், பிறகு எல்லாச் சட்டங்களையுமே அழிக்க ஆரம்பித்துவிடுகின்றது. அந்நிய ஆட்சியை வீழ்த்துவதற்காக வீறுகொண்டு எழும் வீரர்கள், அதன்பின் எல்லா ஆட்சி முறையையுமே அழிக்க வேண்டும் என்ற ஆவேசங் கொண்டுவிடுகின்றனர். அடிமைச் சங்கிலியைத் தகர்க்கும் ஆண்மை படைத்தவர்கள், அந்த வேகத்தில் நீதியை அடிப்படையாகக் கொண்ட நேர்மையான வழிகளையும் மீறி விரும்பத்தகாத பாதையில் செல்ல முற்படுகிறார்கள். இவ்வாறாகப் புரட்சி அராஜகத்திலும், தர்மம் அதர்மத்திலும், மானிட வர்க்கத்திற்கு மிகுந்த நலனை அளிக்கும் இயக்கம் பெரும் ஆபத்திலும் வந்து முடிகிறது.

அந்நிய ஆட்சியைப்போல் அராஜகமும் தனி நபர்களுக்கும், சமுதாயத்துக்கும், தேசத்துக்கும் பேராபத்தை விளைவிக்கிறது. அநியாயமான சட்டங்களை ஒழிக்க வேண்டியது எவ்வளவு இன்றியமையாததோ, அதுபோலவே நியாயமான சட்டங்கள் அமலில் இருந்து வர வேண்டியதும் இன்றியமையாதது. இந்த மூலாதாரமான உண்மையைப் புரட்சி உணர்ந்து கொள்ளாததாலேயே, அது இறுதியில் தன்னைத் தானே கொலை செய்துகொண்டு விடுகிறது. ஏதோ நோய் காரணமாகச் சிறிதளவு மதுவை உப

யோகிப்பவன், நோய் தீர்ந்த பின்னரும் அந்த வழக்கத்தைக் கைவிடாமல் இறுதியில் சீரழிவது போலவே, கொடுங்கோலை அழிப்பதற்காக ஏற்படும் புரட்சி, அது அழிந்த பின்னர் அராஜக நிலைமையை உண்டுபண்ணிவிடுகிறது.

அந்நிய ஆட்சியை வெறுப்பதுபோல் சுயாட்சியை மதித்து நடக்கவும் மனம் ஆரம்பம் முதல் பயிற்சி பெற வேண்டும். அந்நியரின் அவல ஆட்சியை அழிக்க முற்படுவோர், உள்நாட்டில் அமைதியின்மையும் ஒழுங்கீனமும் ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டியது மிக அவசியம். அந்நிய ஆட்சியை அழிப்பவர்கள் சுயாட்சியைப் பூசிக்கவும் வேண்டும். அந்நிய ஆட்சி அழிந்த அதே விநாடியில், பெரும்பாலான மக்களால் அங்கீகரிக்கப்படும் சட்டபூர்வமான ஓர் ஆட்சி முறை அமைக்கப்பட்டு அதை எல்லோரும் வணங்க வேண்டும். அப்போது நியமிக்கப் படும் அதிகாரிகளின் கட்டளைகளை எவரும் மீறக் கூடாது. ஒழுங்கிற்கு விரோதமாக எவரும் நடந்துகொள்ளக் கூடாது. பொதுஜன நன்மைக்கான உயர்ந்த கொள்கையை நிறைவேற்று வதில், சொந்த விருப்பு, வெறுப்புத் தலையிட அணுவளவும் இடங் கொடுக்கக் கூடாது. அரசியலில் விரும்பத்தக்க, நேர்மை யான மாறுதல் எதுவும் செய்ய வேண்டியது அவசியமென்று கருதப்படுமாயின், பெரும்பான்மையோரின் தீர்மானத்திற்கு இணங்கவே அவ்விதம் மாற்ற வேண்டும். இவைதாம், தர்ம நியாயமான அரசாட்சியின் முக்கிய விதிகள் ஆகும்.

புரட்சி வெற்றியடைவதற்கு இன்றியமையாத இந்த முறை கள் ஆரம்பத்தில் கையாளப்பட்டன. ஆரம்பமானவுடனே, டில்லி, லக்ஷ்மணபுரி, கான்பூர் முதலிய பெரிய நகரங்களில் கால தாமதம் இன்றி நிர்வாக முறை ஒழுங்காகவே அமைக்கப் பட்டது. சுயநல வஞ்சகர்களின் ஆதிக்கம் அங்கே ஏற்பட வில்லை. பொது மக்களிடையே செல்வாக்குள்ளவர்களும், பரம் பரையாக ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர்களுமே அங்குள்ள சிம்மாசனங்களில் அமர்ந்தனர். புரட்சியைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொண்டு தங்களுடைய சுய நலன்களைப் பெருக்கிக்கொள்ள அந்த மன்னர்கள் சிறிதும் மனங் கொள்ளவில்லை.

அஞ்சா நெஞ்சம் படைத்த வீரத் தியாகிகள் மூன்று வருஷ காலம் வரையில் இடைவிடாது சுதந்தர யுத்தத்தை நடத்தி வந்தனர். ஆனால் லக்ஷ்மணபுரி முகாமில் வீரத் தியாகிகளைக் காட் டிலும் ஒழுங்குக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்படாதவர்களின் தொகையே அதிகம் இருந்ததால் கோரிய பயன் கிடைக்கவில்லை. பேகம் ஹஸ்ரத் மஹல் நியமித்த அதிகாரிகளின் கட்டளைக்குச் சிப்பாய்கள் கீழ்ப்படிய மறுத்து ஒழுங்கீனமாகவும் தான்தோன் றித்தனமாகவும் நடந்துகொண்டனர்.

எனினும் வீரர்களும் களங்கமற்ற தேச பக்தர்களுமான சிப்பாய்கள் மாத்திரம் இறுதிவரையில் தங்கள் கடமையைச் செய்யப் பின்வாங்கவில்லை. அங்கே முற்றுகை இடப்பட்டிருந்த ரெஸிடென்ஸி கோட்டையை அவர்கள் ஜூலை 20-ஆம் தேதி

தாக்க ஆரம்பித்தனர். அது வரையில் மும்முரமாக இருந்து வந்த தேச பக்தர்களின் பீரங்கிப் பிரயோகம் அன்று திடீ ரென்று நின்றது. கோட்டைச் சுவர்களின் கீழே தேச பக்தர் கள் வைத்திருந்த சுரங்க வெடிகள் வெடித்துச் சுவர்கள் தகர்ந் ததும், சிப்பாய்கள் அந்த வழியாகப் பாய்ந்து சென்றனர்.

அதே சமயம் அவர்களின் பீரங்கிகள் ஆங்கிலேயர்களின் மீது நெருப்பைக் கக்க ஆரம்பித்ததுடன், பல்வேறு திசைகளி லிருந்தும் தேசீய வீரர்கள் வெகு உக்கிரமாகத் தாக்க முற்பட் டார்கள். கான்பூர்ச் சிப்பாய்கள் ஆங்கிலேயர்களின் பீரங்கிகளை எதிர்த்து முன்சென்றனர். அவர்களின் தலைவர், கையில் சுய ராஜ்யக் கொடி பறக்க அகழியில் குதித்து, 'வீரர்களே, என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள்' என்று கர்ஜித்துக்கொண்டு முன் சென்றார். அகழியைக் கடந்ததும் அவர் சுயராஜ்யக் கொடியை அங்கே ஊன்ற முயலுகையில் ஆங்கிலேயரின் தோட்டா ஒன்று பாய்ந்ததால் அவர் வீர சுவர்க்கமடைந்தார். அந்த வீரத் தியாகியின் மரணத்துக்குப் பதிலாக வீராவேச யுத் தம் புரிந்து வஞ்சம் தீர்க்க வேண்டிய சிப்பாய்களில் பலரும் பின்வாங்க ஆரம்பித்தனர்!

ஆங்கிலேயர்கள் தங்களுடைய தோழர்களின் ரத்தத்தைச் சிந்திய இந்தியர்கள் மீது வஞ்சம் தீர்த்ததுபோல் இந்தியர்களும் ஆங்கிலேயர்மீது வஞ்சம் தீர்க்க முற்பட்டிருப்பார்களாயின், முதல் இந்திய சுதந்தர யுத்தத்தின் முடிவே வேறு விதம் ஆகி இருக்கும். அந்த யுத்தத்தில் புறமுதுகு காட்டாத வீரர்கள் சுவர்க்கத்தில் இடம் பெற்றனர் என்பது நிச்சயம். ஆனால் மற்ற வர்கள் எங்கே இடம் பெற்றார்கள் என்பதுபற்றி நாம் கவலைப் படவில்லை.

தேச பக்தர்களின் முதலாவது பெருந் தாக்குதலை ஆங்கிலே யர்கள் சமாளித்த பின், தினசரி இரு சாராருக்கும் சில்லறைச் சண்டைகள் நடந்து வந்தன. ரெஸிடென்ஸியில் இருந்த வீடுகளை யெல்லாம் தேச பக்தர்கள் வெடி மருந்து வைத்துத் தகர்த்துக் கொண்டிருந்தனர். ரெஸிடென்ஸியைத் தகர்ப்பதற்காக அவர் கள் முப்பத்தேழு தடவைகள் வெடிமருந்து வைத்ததாக ஆங்கிலப் படைத் தலைவர்களில் ஒருவனான இன்னெஸ் கணக்கிட்டுக் கூறி யுள்ளான்.

கோட்டையில் சீக்கியர்களும் மற்றத் துரோகிகளும் முகாம் போட்டிருந்த இடத்துக்கு அருகில் தினசரி இரவில் தேச பக்தர் களின் பிரதிநிதிகள் சென்று, 'நீங்கள் ஏன் நம் தேசத்துக்குத் துரோகம் செய்து, உங்களுடைய சகோதரர்களின் உடல்களில் கத்தியைப் பாய்ச்சுகிறீர்கள்?' என்று கதறினர். ஆனால் அவர் களின் பிரலாபம் துரோகிகளுடைய செவிகளில் ஏறவில்லை.

ஹென்றி லாரென்ஸ் மாண்டபின் அயோத்திப் பிரதம கமிஷ னர் பதவியை ஏற்றுக்கொண்ட மேஜர் பாங்க்ஸூம் போர்க்களத் தில் உயிர் துறந்தான். ஆங்கிலப் படைகள் ஒழுங்கையும் கண்டிப் பான விதிகளையும் பின்பற்றி உருவாக்கப்பட்டிருந்தன. எனவே,

ஒரு சாதாரணச் சிப்பாய் மாண்டால் எவ்விதம் யாதொரு குழப்பமோ பரபரப்போ ஏற்படாதோ, அதுபோலவே தளபதி மாண்டபோதும் ஏற்படவில்லை. இரண்டாவது கமிஷனர் மாண்டபின், இங்கிலிஸ் அந்தப் பதவியை ஏற்றுக்கொள்ளவே, எல்லா அலுவல்களும் முன்போல் நடைபெற ஆரம்பித்தன. ஏராளமான உயிர்ச்சேதம், பொருட்சேதம், தலைவர்கள் நஷ்டம், உணவுப் பஞ்சம், தேச பக்தர்களின் இடைவிடாத நடவடிக்கைகள் முதலியன லக்ஷ்மணபுரியில் இருந்த ஆங்கிலேயர்ளுக்கு மிகுந்த கலக்கத்தையும் பீதியையும் உண்டுபண்ணின எனினும், அவர்களின் நம்பிக்கையைச் சிதைக்கவில்லை. அப்போதுதான் ஆங்கிலேயர்களுக்கு உயிர் கொடுக்க அங்கதன் என்பவன் வந்து சேர்ந்தான். வெள்ளையர்களிடம் வாலைக் குழைத்துக்கொண்டு கிடந்த இந்தியத் துரோகிகளுள் அவனும் ஒருவன். ஏற்கனவே அவன் ஆங்கில ராணுவத்தில் வேலை செய்து பின்னல் உதவிச் சம்பளம் பெற்றவன். லக்ஷ்மணபுரி முற்றுகை ஆரம்பமானதிலிருந்து, ஆங்கிலத் தூதர்களை வெளி இடங்களுக்கு அனுப்பி, தகவல் அறிந்து வரும்படி செய்வது அசாத்தியமாகிவிட்டது. அவ்விதம் சென்ற ஆங்கிலேயர்களில் ஒருவராவது தேச பக்தர்களின் வாள்களுக்குப் பலியாகாமல் தப்ப முடியவில்லை. ஆகையால், பல இடங்களிலிருந்தும் தகவல் அறிவதற்கு அவர்கள் இந்தியத் துரோகிகளையே அனுப்பும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

ஆயினும் தேச பக்தர்கள் மிகவும் கண்காணிப்புடன் இருந்ததால், அவ்விதம் சென்ற கோடரிக் காம்புகளில் அங்கதன் ஒருவன்தான் உயிருடன் ஆங்கிலேயர்களிடம் திரும்பிவர முடிந்தது. தேச பக்தர்களுக்கு எத்தகைய சந்தேகமும் ஏற்படாமல் இருப்பதற்காக அவன் கடிதம் எதுவும் கொண்டு செல்லவில்லை. லக்ஷ்மணபுரியில் உள்ள ஆங்கிலேயர்களுக்குப் பாதுகாப்பளிக்கக் கான்பூரிலிருந்து படைகள் வந்துகொண் டிருப்பதைத் தான் நேரில் பார்த்ததாக அவன் தளபதி இங்கிலிஸுக்கு உறுதி கூறினன். அந்தச் செய்தி ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது. அது முற்றும் உண்மையா என்பதை அறிந்துகொள்ளுவதற்காக, அவர்கள் எழுத்துமூலம் தகவல் கொண்டு வரும்படி அங்கதனைத் திருப்பியனுப்பினர்கள். அங்கதனும் 22-ஆம் தேதி லக்ஷ்மணபுரியிலிருந்து புறப்பட்டுச் சென்று, 25-ஆம் தேதி இரவு 11 மணிக்குத் திரும்பி வந்தான். ஹாவ்லக்கிடமிருந்து அவன் கொண்டுவந்த கடிதத்தைக் கண்டதும் ஆங்கிலேயர்கள் ஆனந்தமடைந்தனர்.

'எத்தகைய எதிர்ப்பையும் சமாளிப்பதற்குப் போதிய படைகளுடன் ஹாவ்லக் வந்துகொண்டிருக்கிருர். ஐந்து அல்லது ஆறு நாட்களில் லக்ஷ்மணபுரியின் கஷ்டம் தீர்ந்துவிடும்' என்று அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது. தங்களை மீட்பதற்காக வந்துகொண் டிருக்கும் ஹாவ்லக் லக்ஷ்மணபுரியிலுள்ள ராணுவ நிலைமையை நன்கு அறிந்துகொள்ளும்படி செய்வதற்காக, ஆங்கிலேயர்கள் அங்கதன் மூலம் தங்களுடைய படை விவரங்களையும் போர்த் திட்டங்களையும் படங்களையும் அனுப்பினர். அவனும் வெகு தந்திரமாக அவற்றை ஹாவ்லக்கிடம் கொண்டு

போய்ச் சேர்த்தான். அதன் பின் ஆங்கிலேயர்களின் கண்களெல்லாம் ஹாவ்லக் வரும் திசையை நோக்கிய வண்ணம் இருந்தன. தேச பக்தர்களுடைய பிரேதக் குவியலின்மீது ஹாவ்லக் வெற்றிக்கொடியுடன் வருவான் என்று அவர்கள் எதிர்பார்த்தனர். வெகு தூரத்தில் பீரங்கிகளின் பேரொலி கேட்கவே, ஹாவ்லக்கின் படைகள் வந்துவிட்டன என்று அவர்கள் குதூகலம் கொண்டனர்.

ஆனால், அது ஹாவ்லக்கின் பீரங்கி ஒலி அல்ல என்பதையும், தேச பக்தர்கள் இரண்டாவது முறையாகப் பெருந்தாக்குதலை ஆரம்பித்திருப்பதே அதற்குக் காரணம் என்பதையும் ஆங்கிலேயர்கள் வெகு சீக்கிரத்தில் தெரிந்துகொண்டனர்! அன்று தேசீய வீரர்கள் வெடிமருந்து வைத்துக் கோட்டைச் சுவரில் பெரும் பிளவை உண்டாக்கிவிட்டார்கள். ஒரு படைப் பிரிவு பிரவேசிக்கக்கூடிய அளவுக்குப் பெரும் பிளவை உண்டுபண்ணியுங்கூட, தேசீய சேனை உடனே அந்த வழியாகப் பாய்ந்து செல்லாதது இந்தியாவின் துரதிருஷ்டமே. அத்தகைய பிளவை ஆங்கிலேயர்கள் உண்டாக்கியிருந்தால், அந்தக் கோட்டையை அரை மணி நேரத்தில் கைப்பற்றி யிருப்பார்கள். தேசீய சேனை முழுவதும் அந்தப் பிளவின் வழியாகப் பிரவேசிக்காது போயினும், சில வீரர்கள் மாத்திரம் அவ்விடத்தில் ஆங்கிலப்படைகளை எதிர்த்து ஆவேசத்துடன் போர் புரிந்தனர். ஆங்கிலேயர்களின் பக்கம் இருந்த இந்தியர்கள் அன்று எவரும் பிரமிக்கத்தக்க மகா தைரியத்துடன் யுத்தம் செய்தார்கள். அன்று துரோகிகள் இணையற்ற தைரியத்துடன் போராடுகையில், தேச பக்தர்கள் கோழைகளாக நடந்துகொண்டது தாய்நாட்டின் துர்ப்பாக்கியம் அல்லவா?

பீரங்கிகளையும் பொருட்படுத்தாமல் பல தேசீய வீரர்கள் உள்ளே பிரவேசிக்க ஆரம்பித்ததும், அவர்களை ஆங்கிலப் படைகள் நெருங்கித் துப்பாக்கி ஈட்டிகளால் தாக்கத் தொடங்கின. அப்போது பல வீரர்கள் மாண்டனர். அவர்கள் வீழ்ச்சியுற்றனர். எனினும், நெருக்கடியான சமயத்தில் இந்தியாவின் கௌரவத்தைப் பாதுகாத்தனர் என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் இறுதிவரையில் வீராவேசத்துடன் போராடியதைக் கண்டு ஆங்கிலேயர்கள் ஆச்சரியம் அடைந்தனர். ஏராளமான வேட்டையாளர்களை எதிர்த்து நிற்கும் சில சிங்கங்களைப்போல் அவர்கள் யுத்தம் செய்த அற்புதக் காட்சியைச் சில வெள்ளையர்கள் சிறிது தூரத்திலிருந்து புகைப்படமும் எடுத்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

ஆகஸ்டு மாதம் 18-ஆம் தேதி தேச பக்தர்கள் மீண்டும் ஒரு முறை ஆங்கிலேயர்களைத் தாக்கினர். வழக்கம்போல் அன்றும் முதலில் வெடிமருந்து வைத்துச் சுவரில் பிளவை உண்டுபண்ணிய பின், பல வீரர்கள் ஆங்கிலப் படைகளின்மீது பாய்ந்தனர். அன்றைய யுத்தத்தைப்பற்றி மாலிஸன் குறிப்பிட்டிருப்பதாவது: 'சுவரில் பிளவு ஏற்பட்டதும் புரட்சிப் படை அதிகாரிகளில் வீரம் பொருந்திய ஒருவன் தன் வாளை வீசிக்கொண்டு முன்பாய்ந்து, மற்றவர்களையும் தன்னைத் தொடர்ந்து வருமாறு அழைத்தான். அவனுடைய அழைப்புக்குப் பதில் கிடைக்கு

முன்பே அவன்மீது ஒரு தோட்டா பாய்ந்ததால் கீழே விழுந்து மாண்டான். அவன் ஸ்தானத்தில் உடனே மற்றொருவன் வரவே அவனுக்கும் அதே கதி நேர்ந்தது. மூன்றாவதாக வந்தவனும் அவ்விதமே கொல்லப்பட்டான்.

ஒரு புறம் துரோகிகளாலும் மற்றொரு புறம் கோழைகளாலும் சூழப்பட்டிருந்துங்கூட, சில தேசீய வீரர்கள் தைரியமாக முன்சென்று தங்கள் கடமையை அணுவளவும் வழுவின்றி நிறைவேற்றியதை உலக சரித்திரம் உள்ள அளவும் மறக்க முடியாது. ஆயினும் பெரும்பாலான படைகளின் கோழைத்தனத்தால், அந்த வீரர்கள் வெற்றி பெற முடியாமற் போயிற்று. அந்த அதிகாரிகள் இறந்ததும் தேசீய சிப்பாய்கள் யாவரும் அணையை உடைத்துக்கொண்ட பெருவெள்ளம்போல் அந்தப் பிளவின் வழியாக உள்ளே பிரவேசிக்காமல், பின்வாங்குவதுதான் புத்திசாலித்தனம் என்று கருதிவிட்டனர். இந்த வெட்கக்கேடான சம்பவம் ஒரு படிப்பினையே யாகும்.

ஆயினும் உறுதியுள்ள சில வீரர்களின் இடைவிடாத தாக்குதலைச் சகிக்க முடியாமல் ஆங்கிலேயர்கள் திண்டாடிக்கொண்டிருந்த சமயத்தில், அங்கதன் மீண்டும் திரும்பி வந்து சேர்ந்தான். ஹாவ்லக் எவ்வளவு தூரம் வந்திருக்கிறான் என்று தளபதி ஆர்வத்துடன் கேட்டபோது, அங்கதன் ஹாவ்லக்கிடமிருந்து கொண்டுவந்த கடிதத்தை அவனிடம் கொடுத்தான். 'நான் லக்ஷ்மணபுரி வந்து சேரக் குறைந்த பட்சம் இருபத்தைந்து நாட்களாவது செல்லும்' என்று அதில் குறிப்பிட்டிருந்தது.

ஹாவ்லக் வெகு விரைவில் தங்களுக்கு உதவி அளிக்க வந்து சேருவான் என்று நம்பிக்கொண் டிருந்த ஆங்கிலேயர்களுக்கு, அங்கதன் கொண்டு வந்த செய்தி இடி இடித்ததுபோல் ஆகியது. அதைக் கேட்டதும் ஆங்கிலேயர்கள் அனைவரும் உற்சாகம் இழந்து துயரத்தில் ஆழ்ந்தனர். விரைவில் ஹாவ்லக் வராவிட்டால் தங்களுடைய கதி என்ன ஆகுமோ என்ற திகிலும் அவர்களை ஆட்கொண்டது. கோட்டைக்குள் உணவுப் பொருள் குறைந்துவிட்டதால். எல்லோருக்கும் அரை வயிற்றுக்குப் போதுமான உணவே அளிக்கப்பட்டது.

லக்ஷ்மணபுரியில் இருந்த ஆங்கிலேயர்களுக்குச் சிறிதும் தாமதமின்றி உதவி அளிக்க வேண்டிய அவசியத்தை ஹாவ்லக் நன்கு அறிவான். ஆயினும் அவன் தான் எண்ணியதுபோல் சீக்கிரத்தில் வர முடியவில்லை. பாவம்! அவன் என்ன செய்வான்? ஜூலை 29-ஆம் தேதியே அவன் கான்பூரிலிருந்து புறப்பட்டுக் கங்கையைக் கடந்துவிட்டான். அவனிடம் 13 பீரங்கிகளுடன் 1,500 சிப்பாய்களும் இருந்தனர். ஐந்து அல்லது ஆறு நாட்களில் லக்ஷ்மணபுரிக்கு வந்துவிடுவதாக அவன் உறுதி கூறியிருந்ததும் உண்மையே. அந்த உறுதிமொழியை நிறைவேற்றுவது மிக்க எளிதென்றும் அவன் எண்ணியிருந்தான்.

ஆனால் அவன் கங்கையைக் கடந்து அயோத்தி எல்லைக்குள் பிரவேசித்ததும் அவனுடைய கற்பனை மாளிகை சிதறுண்டது;

அயோத்தியில் தேச பக்தர்கள் ஒவ்வோர் அங்குலமாக நின்று அவனை எதிர்க்க ஆரம்பித்தனர். ஒவ்வொரு ஜமீன்தாரும் தம்மிடம் உள்ள நூற்றுக்கணக்கான ஆட்களைச் சேகரித்துக் கொண்டு சுதந்தரப் போரில் ஈடுபட்டார். ஒவ்வொரு கிராமத்திலும் தேசீயப் புரட்சிக் கொடி பறக்கத் துவங்கியது. அந்தப் பயங்கர நிலைமையைக் கண்டு ஹாவ்லக் மனமுடைந்தான். எனினும், அவன் அடியோடு நம்பிக்கையை இழந்துவிடவில்லை. தேச பக்தர்களை அங்குலம் அங்குலமாக எதிர்த்து முன்னேறுவதையும் நிறுத்தவில்லை. உன்னுவ் என்ற இடத்தில் தேச பக்தர்கள் அவனை எதிர்த்துப் போர் புரிந்தனர். எனினும் இறுதியில் அவர்கள் ஆங்கிலப் பீரங்கிப் படைகளின் உக்கிரமான தாக்குதல் காரணமாகப் பின்வாங்கும்படியே நேர்ந்தது. அதன் பின் ஹாவ்லக்கின் படை சாப்பிடும் நேரத்தைத் தவிர மற்றச் சமயங்களிலெல்லாம் சிறிதும் ஓய்வின்றி முன்னேறிச் சென்றுகொண்டே இருந்தது. பின்னல் பஷீரத்கஞ்ஜில் நடந்த போரிலும் தேச பக்தர்கள் வெற்றி பெறவில்லை.

ஆனல், அந்த இரண்டு போர்களிலும் ஆங்கிலேயர்கள் பெற்ற வெற்றி உண்மையான வெற்றி அல்ல. ஒரு நாள் யுத்தத்தில் ஆங்கிலேயர்கள் தங்களிடம் இருந்த படைகளில் ஆறில் ஒரு பாகத்தை இழந்தனர். தேச பக்தர்களோ ஆங்கிலேயர்களைப் போல் தங்களிடையே அதிக உயிர்ச் சேதம் ஏற்படக்கூடாது என்பதற்காகவே அந்த இரண்டு போர்களிலும் பின்வாங்கும் தந்திரத்தில் ஈடுபட்டனர். அப்போது தனபுரிச் சிப்பாய்களும் புரட்சியில் சேர்ந்துவிட்டார்கள் என்ற செய்தி ஆங்கிலேயர்களுக்குக் கிடைத்தது. அதைக் கேட்டதும் ஹாவ்லக் கதிகலங்கி முன்னேறிச் செல்லுவதை விடுத்து, 30-ஆம் தேதி மங்களவாரத்துக்குத் திரும்பிச் சென்றன்.

ஹாவ்லக்கின் படைகள் கான்பூரிலிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டது என்பதைக் கேட்டதும், நானு சாஹிப் பேஷ்வா மீண்டும் கான்பூரைச் சுற்றி ராணுவ நடவடிக்கைகளை ஆரம்பிக்கலானர். அயோத்திக்குச் செல்ல ஹாவ்லக் கான்பூரிலிருந்து புறப்பட்டுக் கங்கையைக் கடந்து சென்றபோது, கான்பூரில் திரும்பவும் பிரவேசிப்பதற்காக நானு சாஹிப் தம் படைகளுடன் கங்கையைக் கடக்கலானர். அவர் மீண்டும் கான்பூர் நகருக்குள் பிரவேசிக்க இடங்கொடுக்கக்கூடாது என்பதற்காகவே, ஹாவ்லக் ஆகஸ்டு மாதம் 4-ஆம் தேதி வரையில் மங்களவாரத்திலேயே முகாம் போட்டுக்கொண் டிருக்க நேர்ந்தது.

ஒரு வார காலத்திற்குள் புரட்சிக்காரர்களை வெகு தூரத்திற்கு அப்பால் விரட்டிவிடலாம் என நினைத்திருந்த ஹாவ்லக்கிற்கு, நானு சாஹிபின் நடவடிக்கைகள் காரணமாகக் கங்கைக் கரையை விட்டுச் செல்ல முடியவில்லை. அதே சமயம் தேசீய சேனைகள் பஷீரத்கஞ்ஜிற்கு வரவே, ஹாவ்லக் அவற்றைக் கடுமையாக எதிர்த்துப் பின்வாங்கும்படி செய்தான். அந்தப் போரில் அவன் 650 பேர்களை இழந்ததுடன் ஆங்கிலப் படைகள் மிகவும் களைத்துவிட்டதால் லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் நோக்

கத்தை விட்டு மீண்டும் கங்கைக் கரையிலேயே முகாமை அமைத்துக்கொண்டான். அவன் திரும்பிச் சென்றுவிட்டான் என்று கேள்வியுற்றதும் தேச பக்தர்கள் மீண்டும் பஷீரத் கஞ்ஜைக் கைப்பற்றி அங்கே தங்களுடைய முகாமை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

பஷீரத்கஞ்ஜைக் கைப்பற்றிய படையைச் சேர்ந்த பெரும் பாலோரும் செல்வர்களான ஜமீன்தார்கள் ஆவர். சகல பாக்கி யங்களும் வாய்ந்து உல்லாச வாழ்க்கை நடத்திக்கொண் டிருந்த அவர்கள், தங்களுடைய தேசம் சுதந்தரம் பெற வேண்டும் என்ற ஆர்வத்தால், எல்லாவற்றையும் துறந்து எத்தகைய துன்பங்களை யும் ஆபத்துக்களையும் லட்சியம் செய்யாமல் போர்க்களத்தில் குதிக்கத் தீர்மானித்தனர். இவர்களின் புனித நோக்கத்தை ஆங்கில சரித்திராசிரியரான இன்னெஸ் பாராட்டியிருப்பது குறிப் பிடத் தக்கதாகும். 'மற்ற இடங்களில் நிகழ்ந்தது சுதந்தரப் போராயினும் அல்லவாயினும், அயோத்தி ஜமீன்தார்கள் செய்த யுத்தத்தைக் கலப்பற்ற சுதந்தர யுத்தம் என்றுதான் கூற வேண்டும்' என்று இன்னெஸ் கூறியுள்ளார்.

கங்கைக் கரையில் முகாம் போட்டிருந்த ஹாவ்லக்கைத் தேச பக்தர்கள் சிறிது நேரமாவது அமைதியாக இருக்க விட வில்லை. அவனுடைய படை முகாமை இடைவிடாது சுற்றிய வண்ணம் இருந்தார்கள். ஹாவ்லக் மங்களவாரத்துக்குத் திரும்பி வந்ததும், தேச பக்தர்கள் பஷீரத்கஞ்ஜைக் கைப்பற்றிக்கொண் டதால், ஆகஸ்டு மாதம் 11-ஆம் தேதி ஹாவ்லக் மீண்டும் அதா வது மூன்றாவது முறையாக அங்கே படையெடுத்துச் சென்றான். அப்போது நடந்த போரிலும் தேச பக்தர்கள் தோல்வியுற்றனர். எனினும், 'இந்தப் போரில் நாம் அடைந்தது வெற்றியா அல்லது தோல்வியா?' என்று ஹாவ்லக் தன்னைத் தானே கேட்டுக்கொண் டான்!

ஆம், அது ஹாவ்லக்கிற்கு வெற்றியும் அல்ல; தோல்வியும் அல்ல! அந்த நிலைமையில் அவன் மீண்டும் மங்களவாரத்துக்கே திரும்பிச் சென்றான். இதன் மத்தியில் நானாவின் போர்த் திட்டங்கள் பக்குவம் அடைந்து வந்தன. ஸாகர், குவாலியர் முதலிய இடங்களிலிருந்து ஏராளமான தேச பக்தர்கள் நானா விடம் வந்து சேர்ந்தனர். அவர்களுடன் நானா சாஹிப் பிடூருக்குச் சென்று கான்பூரையும் தாக்க ஆயத்தமானார். அவரை எதிர்த்துச் செல்வதற்குப் போதிய துருப்புகள் நீலனிடம் இல்லாததால், அந்த நெருக்கடியான நிலைமையை விளக்கி அவன் ஹாவ்லக்கிற்கு அவசரச் செய்தியொன்று அனுப்பினான். அத் தகைய நிலைமையில் லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் பேச்சே எழு வதற்கு இடமில்லை ஆதலின், 12-ஆம் தேதி ஹாவ்லக் கான் பூருக்கே திரும்பிச் செல்வதற்காக மீண்டும் கங்கையைக் கடக்க நேர்ந்தது. வெள்ளையர்கள் அவ்வாறு திரும்பியதைக் கண்ட தும், தேச பக்தர்கள் சந்தோஷ ஆரவாரத்துடன் வெற்றி முழக் கம் செய்யலாயினர்.

ஹாவ்லக்கை எதிர்த்து நடந்த மூன்று போர்களிலும் ஏராள மான ஜமீன்தார்கள் பலியாயினர் என்பது குறிப்பிடத்தக்க

விஷயமாகும். தாய்நாடு சுதந்தரம் பெற வேண்டும் என்ற உணர்ச்சி அப்போது ஏழைகளிடையே மாத்திரம் அல்ல, செல்வர்கள், ஜமீன்தார்கள், ராஜாக்கள் முதலியோரிடையும் பொங்கிக்கொண் டிருந்தது என்பதை உலகம் அறிந்துகொள்ளு வதற்கு இந்த ஒரு சம்பவமே போதுமானது. இதைக் குறித்துச் சரித்திராசிரியரான இன்னெஸ் கூறுவதாவது: 'அயோத்தியிலிருந்து ஹாவ்லக் பின்வாங்கியது அவர் கனவிலும் கருதாத ஒரு நிலைமையை உண்டுபண்ணியது. ஆங்கிலேயர்கள் அந்த மாகாணத்தையே காலி செய்துவிட்டார்கள் என்று ஜமீன்தார்கள் கருதி, லக்ஷ்மணபுரியில் ஸ்தாபிக்கப்பட்ட சுதேசி சர்க்காரை உண்மையான அரசாங்கம் என்று அங்கீகரித்தனர். அதற்கு முன் அந்த அரசாங்கத்தின் உத்தரவுகளை அலட்சியம் செய்து வந்த அவர்கள், ஹாவ்லக் பின்வாங்கியதிலிருந்து அதன் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியவும் ஆரம்பித்து, அதன் ஆக்ஞைக்கு இணங்கத் தங்கள் தங்கள் விகிதத்துக்குத் துருப்புகளையும் அனுப்பினர்.'

அப்போது பொறாமை காரணமாக ஹாவ்லக்கிற்கும் நீலனுக்கும் கடுமையான சச்சரவு ஏற்பட்டது. நீலனுக்கு ஹாவ்லக் எழுதிய ஒரு கடிதத்திலிருந்தே அந்த உண்மை வெளியாகியுள்ளது. அதன் விவரம் இதுதான்: 'உண்மையான நிலைமையை விளக்கி உமக்கு அந்தரங்கமாக நான் கடிதம் எழுதினேன். நான் கைக்கொண்டுள்ள முறைகளை ஆட்சேபித்தும், என்னைக் கண்டித்தும், எனக்குப் புத்திமதி கூறியும் நீர் பதில் கடிதம் அனுப்பியிருக்கிறீர். எவ்வளவு அநுபவசாலி ஆயினும் எனக்குக் கீழுள்ள ஓர் அதிகாரியிடமிருந்து கண்டனத்தையோ ஆலோசனையையோ புத்திமதியையோ எதையும் நான் விரும்பவில்லை. அவற்றில் எதையும் ஏறெடுத்தும் பாரேன். இந்தச் சமயத்தில் நம் தேசத் தொண்டுக்கு எவ்வித இடையூறும் ஏற்படக் கூடாது என்ற ஒரே எண்ணந்தான் உம்மைக் கைது செய்யுமாறு நான் உத்தரவிடாததற்குக் காரணம். இது உமக்கு ஓர் எச்சரிக்கையாக இருக்கட்டும். இனிமேல் இவ்விதம் சட்டாம்பிள்ளைத்தனம் செய்ய முற்படாதீர்.'

ஆங்கிலேயர்களின் உதிரத்தில் ஊறிக் கிடக்கும் தேசீய உணர்ச்சியை, அந்தக் கடிதத்திலுள்ள ஒரு வாக்கியத்திலிருந்து சந்தேகமறத் தெரிந்துகொள்ளலாம். நீலன்மீது ஹாவ்லக்கிற்கு மிகுந்த ஆத்திரம் ஏற்பட்டது. தன் தேச நலனுக்கு யாதொரு குந்தகமும் ஏற்படக்கூடாது என்ற ஒரே எண்ணத்தினுல் அவன் தனக்கு இழைக்கப்பட்ட அவமதிப்பையும் பொருட்படுத்தவில்லை! அவர்களுக்குள் மிகுந்த அபிப்பிராய பேதமும் ஆத்திரமும் இருந்துங்கூட, தங்களுடைய பிளவு தங்கள் பகைவர்களான இந்திய தேச பக்தர்களுக்குச் சாதகம் ஆகிவிடக் கூடாது என்பதற்காக அவர்கள் தங்களுடைய சொந்த மாச்சரியங்களை மறந்து, தேச பக்தர்களை அடக்கி ஒடுக்குவதில் ஒருவருக்கு ஒருவர் உதவியும் செய்தனர். தேசத் தொண்டில் சொந்த நலன்களுக்கும் மாச்சரியங்களுக்கும் இடங் கொடாதவர்கள் அடங்கிய சமூகமே நிரந்தரமாகச் சீர், சிறப்பு, செல்வம்,

வீரம், சுதந்தரம் முதலிய பொக்கிஷங்களுடன் விளங்கி வர முடியும்.

கான்பூர் வந்ததும் ஹாவ்லக்கிற்குக் கிடைத்த முதல் செய்தி என்னவெனில், நானா சாஹிபின் படைகள் மீண்டும் பிரம்மாவர்த்த நகரை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டன என்பதுதான். தேச பக்தர்கள் தங்களைப் பின்தொடர்ந்தே வந்துகொண் டிருக்கிறார்கள் என்பதை அறிந்த ஹாவ்லக், அவர்களை எதிர்ப்பதற்காக உடனே புறப்பட்டான். அப்போது நடந்த பிரம்மாவர்த்த யுத்தத்தில், ஆங்கிலப் படைகள் தங்களுக்கு இருபது கஜ தூரத்தில் வந்ததும், தேச பக்தர்களின் 42-ஆவது படை துப்பாக்கி ஈட்டிகளால் பகைவர்களைத் தாக்க ஆரம்பித்தது. எனினும், தேச பக்தர்கள் அங்கே இறுதியில் தோல்வியே அடைந்தார்கள்.

அந்த யுத்தத்தில் வெற்றி பெற்ற ஹாவ்லக் 17-ஆம் தேதி மீண்டும் கான்பூருக்குத் திரும்பி வந்து சேர்ந்தான். பிரம்மாவர்த்தத்தில் போர் செய்தது நானா சாஹிபின் படைகளின் ஒரு பகுதியே என்பதும், யமுனா நதிக் கரையிலுள்ள கால்பி நகரில் மற்றொரு பெரும் பகுதி இருந்து வருகிறது என்பதும் அவனுக்குத் தெரிந்தன. கால்பியிலிருந்தும், பிரம்மாவர்த்தத்திலிருந்தும், அயோத்தியிலிருந்தும், கங்கையின் இரு கரைகளிலிருந்தும் புரட்சிப் படைகள் ஹாவ்லக்கிற்கு இடைவிடாமல் தலைவலியை உண்டுபண்ணி வந்ததால், பல போர்களிலும் 'வெற்றி' பெற்ற ஹாவ்லக் கல்கத்தாவிலுள்ள அதிகாரிகளுக்குப் பின்வருமாறு எழுதினான்: 'நாங்கள் மிகவும் பயங்கரமான நிலைமையில் இருந்து வருகிறோம். ஆகையால், மேற்கொண்டு எங்களுக்கு உதவியாகத் துருப்புகள் வந்தாலன்றி, லக்ஷ்மணபுரிப் படையெடுப்பை அடியோடு கைவிட்டு, அலாகாபாத்துக்கு நாங்கள் திரும்பி வருவதைத் தவிர வேறு வழி இல்லாமற் போய்விடும்.'

அந்த வேண்டுகோளுக்குப் பதிலாகக் கல்கத்தாவிலிருந்து உதவித் துருப்புகள் வரும் என்று ஹாவ்லக் மிகுந்த ஆர்வத்துடன் எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். அங்கிருந்து வரும் துருப்புகளுடன் சென்று, இதுவரையில் தான் அடைந்த வெற்றிகளுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல் லக்ஷ்மணபுரியைக் கைப்பற்றலாமென்றும் கற்பனை செய்துகொண் டிருந்தான். அவ்விதம் இருக்கையில் லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் படைத் தளபதிப் பதவியிலிருந்து அவன் நீக்கப்பட்டிருப்பதாக ஓர் உத்தரவு வந்தது! ஹாவ்லக்கின் ஸ்தானத்தில் ஜேம்ஸ் அவுட்ராம் நியமிக்கப்பட்டான். ஹாவ்லக் லக்ஷ்மணபுரிக்குச் செல்லுவதில் சிறிது தாமதம் ஏற்பட்டதற்காக, ஆங்கில அரசாங்கம் அவனுக்கு அவ்வளவு கடுமையான தண்டனை விதித்தது.

முன்னால் நீலன் வெற்றி பெற்றுங்கூட அவன் கான்பூர் செல்லத் தாமதம் ஏற்பட்டதற்காகவே, அவனைத் தளபதிப் பதவியிலிருந்து விலக்கி ஹாவ்லக்கை அந்த ஸ்தானத்தில் நியமித்தனர். குறித்த காலத்தில் லக்ஷ்மணபுரிக்குச் செல்லவில்லை என்பதற்காக மிகத் திறமை வாய்ந்த ஹாவ்லக்கைக்கூட அந்தப் பதவியிலிருந்து விலக்கி வேறொருவனைத் தளபதியாக நியமித்து

விட்டார்கள். அத்தகைய உத்தரவைப் பார்த்ததும் ஹாவ்லக்கிற்கு அவமானம் தாங்க முடியவில்லை. லக்ஷ்மணபுரியைக் கைப்பற்றிப் பெரும் புகழ் பெற வேண்டும் என்ற உத்தேசத்துடன் உயிரையும் துச்சமாக மதித்து, இரவு பகலாகக் கஷ்டப்பட்டு வந்த ஹாவ்லக்கிற்கு அதனால் ஏற்பட்ட ஏமாற்றம் கொஞ்ச நஞ்சமன்று. அந்தப் புகழ் ஜேம்ஸ் அவுட்ராமுக்கு வெகு எளிதில் கிடைக்கப் போவதை நினைத்து அவன் மனம் உடைந்தான்.

அவ்விதம் இருந்துங்கூட, சரித்திராசிரியரான மாலிஸன் அச்சம்பவத்தைக் குறித்து எழுதியிருப்பதாவது: 'இதுபோன்ற மகத்தான ஏமாற்றம் ஏற்பட்ட சமயத்திலுங்கூட, நம் தேச சகோதரர்கள் சொந்த வருத்தத்தைச் சிறிதும் பாராட்டாமல் தங்கள் தேச நலனையே முக்கியமாகக் கருதுவது அவர்களுடைய பெருமைகளில் ஒன்றாக இருந்து வருகிறது. சொந்த விருப்பு வெறுப்பைச் சிறிதும் பாராட்டாமல், கடமையிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பது ஆங்கிலேயர்களின் பிறவிக் குணமாகும். கடமையின் முன்னிலையில் அவர்கள் சொந்த உணர்ச்சிகளுக்குச் சிறிதும் இடம் கொடுப்பதில்லை. தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியால் துடித்துக்கொண்டிருந்தாலுங்கூட, தங்களைக் காட்டிலும் தேசம் பெரியது என்பதை அவர்கள் மறப்பதில்லை. அரசாங்கத்தின் அபிப்பிராயம் தங்களுடைய கருத்துக்கு நேர்மாறாக இருப்பினும், சர்க்கார்க் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு அவற்றை நிறைவேற்றுவதில் தங்களுடைய முழுக் கவனத்தையும் சக்தியையும் உபயோகிப்பது அவர்களுடைய வழக்கம். நீலன் அவ்விதமே நடந்துகொண்டார்; தளபதி பதவியிலிருந்து தாம் விலக்கப்பட்ட போதிலும், முன்போலவே சுறுசுறுப்பாகவும் தைரியத்துடனும், தம் தேச நலனில் அக்கறை காட்டுவதைத் தம் கடமை என்று கருதி, அவர் தம் அலுவல்களைச் செய்து வந்தார்.'

ஹாவ்லக் ஸ்தானத்தில் நியமிக்கப்பட்ட அவுட்ராம் செப்டம்பர் மாதம் 15-ஆம் தேதி கான்பூர் வந்து சேர்ந்தான். ஹாவ்லக்கிடமிருந்து அவுட்ராம் தளபதிப் பதவியை ஏற்றுக்கொண்டதும் விடுத்த முதல் கட்டளை இதுதான்: 'லக்ஷ்மணபுரி முற்றுகையை முடிப்பதற்காக இவ்வளவு காலமாக மிகுந்த தைரியத்துடன் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வருபவரே, அதை நிறைவேற்றும் கௌரவத்தையும் பெறுவதற்கு உரியவர். ஆகையால் அது முடியும் வரையில், தளபதி என்ற ஹோதாவில் நான் எனது அதிகாரம் முழுவதையும் மகா தைரியசாலியான ஹாவ்லக்கிடம் ஒப்பிக்கிறேன். அதுவரையில் நான் சாதாரண அதிகாரியாகவே இருந்து வர விரும்புகிறேன்.'

அவுட்ராமின் செய்கை ஆங்கிலப் படைகளுக்கு எத்தகைய சிறந்த உதாரணமாக அமைந்திருக்கும்! உயர்ந்த அதிகாரிகள் தங்கள் சொந்தக் கௌரவத்தை அறவே மறந்து, தேச நலனையே முக்கியமாகக் கருதியது அந்தப் படைகளுக்கு எவ்வித உணர்ச்சிகளை உண்டாக்கியிருக்கும்! அவுட்ராம் தன் அதிகாரம் முழுவதையும் ஹாவ்லக்கிடம் ஒப்பித்ததிலிருந்து அவனுடைய இணையற்ற பெருந்தன்மையும் தன்னலமற்ற குணமும் மற்ற எல்லாருக்கும்

சிறந்த உதாரணமாயின. அந்த உயர்ந்த செய்கையின் பயனுக எழுந்த உத்வேகம் ஒரு புறம் இருக்க, அயர், அவுட்ராம், கூப்பர் போன்ற சிறந்த அதிகாரிகளின் தலைமையில் கல்கத்தாவிலிருந்து புதிதாக ஆங்கிலத் துருப்புகளும் வந்து சேர்ந்ததால், கான்பூர்ப் படைகள் லக்ஷ்மணபுரி செல்லும் நோக்கத்துடன் 20-ஆம் தேதி மீண்டும் கங்கையைக் கடந்தன.

அப்போது ஹாவ்லக் மிகுந்த உற்சாகத்துடன் இருந்தான். அவன் தலைமையில் 2,500 ஆங்கிலச் சிப்பாய்களும், 1,750 துரோகிகளும் அடங்கிய பெரும் படை இருந்தது. அவற்றைத் தவிரக் குதிரைப் படை, பீரங்கிப் படை முதலியனவும், நீலன், அயர், அவுட்ராம் போன்ற சிறந்த அதிகாரிகளும் இருந்தனர். எனவே அந்த நிலைமையில் அவன் அயோத்தியிலுள்ள புரட்சிக் காரர்களை அலட்சியமாகக் கருதினுன். அந்நியர்களின் ஆதிக்கத் திற்கு உள்ளாகாமல் தங்கள் தேசத்தைக் காப்பாற்றுவதற்காகப் போர்க்களத்துக்கு வந்த சகல ஜமீன்தார்களும் ஆங்கிலப் படை களால் கொல்லப்பட்டனர். அடிமைத்தனத்தை உதறித் தள்ளு வதற்காகப் போருக்கு எழுந்த ஒவ்வொரு கிராமமும் இரக்கமற்ற ஆங்கிலேயர்களால் கொளுத்தப்பட்டது. ஒவ்வொரு பிரதேச மும், ஒவ்வொரு சாலையும், ஒவ்வொரு நதியும் தேச பக்தர்களின் ரத்தத்தால் சிவப்புமயம் ஆயிற்று.

இவ்விதமாக ஆங்கிலப் படைகள் அயோத்தியில் வெகு வேக மாக முன்னேறி வந்தன. வழியில் பல இடங்களிலும் நடந்த போர்களில் ஆங்கிலேயர்கள் ராணுவப் பயிற்சியற்ற தேச பக் தர்களை முறியடித்தனர். இவ்வாருக ஹாவ்லக் வெற்றிக் கோலத் துடன் செப்டம்பர் 23-ஆம் தேதி ஆலம்பாக்கிற்கு வந்து சேர்ந் தான். அங்கே தேச பக்தர்களின் படை ஒன்று முகாம் போட் டிருந்ததால், இரு படைகளுக்கும் அவ்விடத்தில் நாள் முழுவதும் கோர யுத்தம் நடந்தது. டில்லி வீழ்ச்சியடைந்ததுபற்றிய செய்தி அப்போது ஆங்கிலேயர்களுக்குக் கிடைக்கவே, அவர் களின் உற்சாகம் எல்லை கடந்தது.

இறுதியாக 25-ஆம் தேதி உதயமாயிற்று. ஹாவ்லக்கின் படைகள் லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் நேர்ப் பாதைகளை விட்டுக் குறுக்கு வழியாகச் செல்லுவதைத் தேச பக்தர்கள் பார்த்ததும், அவற்றின்மீது இடைவிடாது பீரங்கிப் பிரயோகம் செய்தனர். ஆங்கிலேயர்களோ அதையும் லட்சியம் செய்யாமல் லக்ஷ்மண புரிப் பாலம் வரையில் வந்துவிட்டார்கள். நகருக்குள் பிரவேசிப் பதாயின், அந்தப் பாலத்தை அவர்கள் கடந்து வரவேண்டும். ஆகை யால், மிகுந்த ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த அவ்விடத்தில் இரு சாராருக்கும் பயங்கரமான யுத்தம் நடக்கலாயிற்று. பாலத் தைத் தகர்ப்பதற்காக, காப்டன் மாடின் கட்டளைக்கு இணங்க ஆங்கிலேயர்களும் அரை மணி நேரம் வரையில் இடைவிடாமல் பீரங்கிப் பிரயோகம் செய்தனர். ஆயினும் பாலத்தில் இருந்த தேச பக்தர்கள் பின்வாங்கவில்லை; அங்கிருந்த பீரங்கிகளும் பிரதி யாக ஆங்கிலேயர்களின்மீது தீயைக் கக்கியவண்ணம் இருந்தன. அதனல் அவர்களிடையே உயிர்ச் சேதம் அதிகமாகியது.

அந்த ஒரு பாலத்தைக் கைப்பற்ற முடியவில்லை என்பதற்காக, தங்களுடைய படைகள் யாவும் தடைப்பட்டு நிற்பதா என்று ஆங்கிலேயர்கள் ஆத்திரமடைந்தனர். அவ்வமயம் மாட், அருகில் நின்றுகொண்டிருந்த ஹாவ்லக்கின் இளைய மகனைப் பார்த்து, 'இளஞ் சிங்கமே, இதற்கு ஏதாவது ஒரு பரிகாரத்தைக் கண்டுபிடி' என்று உற்சாகமூட்டினான். அதைக் கேட்ட அந்த வீர இளைஞனும் உடனே நீலனிடம் சென்று, பீரங்கிகளால் புரட்சிக்காரர்களைப் பாலத்திலிருந்து விரட்ட முடியாது என்று கூறி, பாலத்தின்மீது பாய்ந்து தாக்குமாறு உத்தரவு கொடுக்கும்படி கேட்டுக்கொண்டான். ஆனால் நீலன், தான் ஹாவ்லக்கைக் கலந்து ஆலோசிக்காமல் அவ்விதம் உத்தரவிட முடியாது என்று கூறவே, அந்தப் பதிலால் ஏமாற்றமடைந்த இளைஞனுக்குத் திடீரென்று ஒரு யுக்தி தோன்றியது. உடனே அவன் தன் குதிரையைப் பிரதம தளபதி ஹாவ்லக் இருக்கும் திசையை நோக்கி வெகு வேகமாகச் செலுத்தி, அவனைப் பார்த்து அவனது அநுமதியைப் பெற்று விட்டவன்போல் பாசாங்கு செய்துகொண்டு திரும்பி வந்தான்.

நீலனை இளம் ஹாவ்லக் மிகவும் மரியாதையுடன் வணங்கி, "பாலத்தைத் தாக்கும்படி பிரதம தளபதி உத்தரவு கொடுத்துவிட்டார்!' என்றான். அவ்விதமே தாக்கும்படி நீலனும் துருப்புகளுக்குக் கட்டளையிட்டான். இருபத்தைந்து ஆங்கிலேயர்கள் அடங்கிய முதல் கோஷ்டியுடன் இளம் ஹாவ்லக் தானே நேரில் பாய்ந்து தாக்கினான். அதைக் கண்டதும் தேச பக்தர்கள் அந்தக் கோஷ்டியினரை நோக்கிப் பீரங்கிகளால் உக்கிரமாகச் சுட்டனர். சிறிது நேரத்தில், அவ்வாறு பாய்ந்து தாக்கியவர்களில் ஓர் ஆங்கிலேயனைத் தவிர மற்ற எல்லாரும் பீரங்கிகளுக்குப் பலியாயினர். பாக்கியிருந்த அந்த ஒருவன் யார்? இளம் ஹாவ்லக்தான்! அதிருஷ்டம் அவன் பக்கம் இருந்தது. சமீபத்தில் இருந்த ஒரு சிப்பாய் ஹாவ்லக்கை நோக்கிச் சுட்டாரெனினும், தோட்டா அரை அங்குலம் மேலாகப் பாய்ந்து ஹாவ்லக்கின் இரும்புத் தொப்பியைத் துளைத்துக்கொண்டு சென்றது. பாலத்தின் மறுபுறத்தில் இருந்த பல ஆங்கிலேயர்கள் ஏக காலத்தில் தன்னை நோக்கிச் சுட்டதையும் லட்சியம் செய்யாமல், அஞ்சா நெஞ்சம் படைத்த சிப்பாய் மீண்டும் ஹாவ்லக்கைச் சுட முயன்றார். அதே சமயம் ஹாவ்லக்கினால் அவர் சுடப்பட்டு வீர சுவர்க்கமடைந்தார். அந்தச் சிப்பாய் சிறந்த வீரர் என்பதில் ஐயமில்லை. ஆனால், அதிருஷ்டம் ஹாவ்லக்கின் பக்கமே இருந்தது. எனினும் அவ் வீரத் தியாகியை நாம் மறப்பதற்கில்லை.

அந்தச் சிப்பாய் வீழ்ந்ததும் வெறி கொண்டவர்கள்போல் ஆங்கிலேயர்கள் ஒருங்கே பாலத்தின் மீது பாய்ந்து தாக்கினர். தேச பக்தர்கள் பின்வாங்கவே, ஆங்கிலேயர்களுக்கு முன்னேறிச் செல்லுவது சாத்தியமாகியது. இறுதியாகப் பாலம் வீழ்ச்சியுற்றது. இவ்வாறாக லக்ஷ்மணபுரிக்குச் செல்லும் முதல் வழி பகைவர்களால் கைப்பற்றப்பட்டது. பின்னர் இரண்டாவது, மூன்றாவது வழிகளும் கைப்பற்றப்பட்டன. ஆங்கிலேயர்களும் வெற்றியுடன் லக்ஷ்மணபுரிக்குள் பிரவேசிக்கலாயி

னர். அதன் பின்னரும் அவர்களால் சுலபமாக முன்னேற முடிய வில்லை. நாள் முழுவதும் கத்திகளுடன் கத்திகளும், துப்பாக்கி களுடன் துப்பாக்கிகளும் மோதுண்ட வண்ணமாக இருந்தன.

இரவு ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அவுட்ராம் கூறியதற்கு ஹாவ்லக் இணங்கவில்லை. லக்ஷ்மணபுரியில் அடை பட்டுக் கிடக்கும் ஆங்கிலேயர்களுக்கு ஓர் இரவு ஒரு யுகமாகத் தோன்றுமென்று அவன் கூறினான். ஹாவ்லக்கும் நீலனும் அதி வேகமாக முன்னேறிச் சென்றனர். நீலன், காஸ்பஜாரில் இருந்த பெரிய வளைவின் வழியாக உள்ளே பிரவேசித்தபோது தான், ஆங்கிலப் பீரங்கிப் படை தங்களைத் தொடர்ந்து வராமல், சிறிது தூரத்தில் மெதுவாக வந்துகொண் டிருப்பதைப் பார்த் தான். அவன் தன் குதிரையை நிறுத்தி, பீரங்கிப் படை எவ் வளவு தூரத்தில் வந்துகொண் டிருக்கின்றது என்பதைத் திரும் பிப் பார்த்தபோது, வளைவில் நின்றுகொண் டிருந்த ஒரு தேச பக்தர் அவனது கழுத்தை நோக்கிச் சுட்டதில், அந்தக் கணமே நீலன் மாண்டு வீழ்ந்தான். நிரபராதிகளான ஜனங்கள் அடங் கிய பல கிராமங்களைக் கொளுத்திய நீலன்மீது வஞ்சம் தீர்த்த அந்த வீரரை நாம் வாழ்த்தி வணங்குவோமாக! இணை யற்ற துணிச்சலும், கொடிய சித்தமும், கர்வமும் வாய்ந்த நீல னின் இவ்வுலக வாழ்வு அத்துடன் முடிவடைந்தது.

ஆங்கில ராணுவத்தின் ஒரு விசித்திர அம்சம் என்ன வெனில் அதன் அலுவல்கள் நடைபெறுவது தனி நபர் எவரை யும் பொறுத்ததல்ல. எனவே, பிரமாத சாமர்த்தியமும் துணிச் சலுமுள்ள நீலன் வீழ்ச்சியடைந்த போதும், ராணுவ நிலைமையில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. படைகளிடையே சிறிதும் குழப்பம் உண்டாகவில்லை. அவன் இறந்த பின்னரும் அவர்கள் ரெஸிடென்ஸியை நோக்கி முன்னேறிச் சென்றுகொண் டிருந்த னர். அவர்கள் கடைத் தெருவுக்குச் சென்றபோது, ரெஸிடென்ஸி யிலிருந்து சந்தோஷ ஆரவாரங்கள் கிளம்பின. பதிலுக்கு ஆங் கிலச் சிப்பாய்களும் குதூகலத்துடன் ஆரவாரம் செய்தனர்.

அந்தக் காட்சியைக் குறித்துக் காப்டன் வில்ஸன் கூறி யிருப்பதாவது: 'நம் துருப்புகள் ஒவ்வோர் அடியிலும் பலரைப் பலி கொடுத்த பின்னரே முன்னேற முடிந்தது. அப்படி யிருந்தும் அவர்கள் இறுதியில் ரெஸிடென்ஸியை அடைந்தனர். அங்கே முற்றுகையிடப்பட்டு நடுங்கிக்கொண் டிருந்தவர்களுக்கு அவர் களைக் கண்டவுடனே பீதியும் சந்தேகமும் மாயமாய் மறைந்து விட்டன. மரணத்தின் வாயிலிருந்து தங்களை விடுவிப்பதற்காக வந்த அவர்களுக்கு ரெஸிடென்ஸியில் இருந்தவர்கள் வாழ்த்துக் கூறி ஆசி அளித்தனர். நோயாளிகளும் காயமடைந்த வர்களும் ஆஸ்பத்திரியிலிருந்து ஊர்ந்து வெளியே வந்து சந் தோஷ ஆரவாரம் செய்தனர். இரு சாராரும் சந்தித்த காட்சியை வர்ணிப்பது முடியாத காரியம். புருஷர் களைப் பிரிந்திருந்த மனைவிமாரும், மற்ற உறவினர்களும் ஆனந் தத்தால் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டனர். பலர் தங்களுடைய புதல்வர்களும் கணவன்மார்களும் நெருங்கிய

மற்ற உறவினர்களும் மாண்டதை முதல்முதலாகக் கேள்வி யுற்றுச் சோகத்தில் ஆழ்ந்தனர்.'

லக்ஷ்மணபுரி ரெஸிடென்ஸியில் இடைவிடாது 87 நாட்கள் வரையில் யுத்தம் நடந்தது. 700 பேர் மாண்டனர்; காயம் அடைந்தவர்களும் மற்றவர்களுமாக சுமார் 500 ஐரோப்பியர்களும் 400 இந்தியத் துரோகிகளும் பாக்கி இருந்தார்கள். ஹாவ்லக் படையும், ரெஸிடென்ஸி போய்ச் சேருவதற்குள் 722 துருப்புகளை இழந்தது. அத்தனை பேர்களைப் பலி கொடுத்த பின்னரே ஹாவ்லக் லக்ஷ்மணபுரியில் வெற்றி பெற முடிந்தது.

அவன் ரெஸிடென்ஸிக்குள் பிரவேசித்தபோது, ஏராளமானவர்களைப் பலி கொடுத்தாயினும், அபரிமிதமாக ரத்தம் சிந்தியாயினும், இறுதியாகப் புரட்சிக்காரர்களின் பிடியிலிருந்து ஆங்கில ஆட்சியை மீட்டதாக நினைத்தான். ஆனால் சில மணி நேரத்தில் அவனுக்கு அந்த மயக்கம் தெளிந்துவிட்டது. ஏனெனில் அப்போது அவன் சமாளிக்க வேண்டிய மற்றொரு பிரச்னை எழுந்தது. ஹாவ்லக்கின் படைகள் ரெஸிடென்ஸி கோட்டைக்குள் பிரவேசித்த பின், அதையும் ஏற்கனவே அதற்குள்ளிருந்த படையையும் சேர்த்துத் தேச பக்தர்கள் முற்றுகையிட முற்பட்டார்கள். ஹாவ்லக்கின் படை ரெஸிடென்ஸிக்குள் பிரவேசித்தவுடன், பாண்டேக்கள் அடங்கிய படை கலைந்து சிதறிவிடும் என்று வெள்ளையர்கள் நம்பிக்கொண் டிருந்தனர். ஆனால் அந்த நம்பிக்கை அடியோடு பாழாகியது. பாண்டேக்களின் படை லக்ஷ்மணபுரியைக் கைவிட்டுச் செல்லவும் இல்லை; ஆங்கிலேயர்களுடன் சமாதானம் செய்துகொள்ள முன்வரவும் இல்லை.

சுதந்தர யுத்தத்தின் போக்கு, தங்களுக்கு விரோதமாகி வருவதைக் கண்டு ஆக்கிரகங் கொண்ட தேச பக்தர்கள், ஹாவ்லக் தன் படைகளுடன் உள்ளே பிரவேசித்த பின், மீண்டும் முன் போலவே ரெஸிடென்ஸியைச் சூழ்ந்துகொண்டு போரை ஆரம்பித்தார்கள்.

ஆங்கிலப் படை ரெஸிடென்ஸிக்குள் பிரவேசித்தபோது, அதன் ஒரு பகுதி ஆலம்பாக்கிலேயே தங்கிவிட்டது. அந்தப் பகுதி உள்ளே செல்லத் தேச பக்தர்கள் இடங் கொடுக்கவில்லை. ஏற்கனவே நடந்த போரினால் லக்ஷ்மணபுரித் தெருக்களில் சிந்திய ரத்தம் காய்வதற்குள், தோல்வியடைந்த தேச பக்தர்கள் சோர்வடைந்து விடாமல், மீண்டும் ஆங்கில அதிகாரத்தைக் கோட்டைக்குள் சிறைப்படுத்தி விட்டார்கள்!

பாண்டேக்களின் உறுதி காரணமாக லக்ஷ்மணபுரியில் இருந்த ஆங்கிலப் படை மாத்திரம் என்ன செய்வதென்று தோன்றாமல் விழிக்கவில்லை; பிஷாவரிலிருந்து அலிகட் வரையில் எல்லா இடங்களிலும் ஆங்கிலப் படைகள் திண்டாட்டத்திற்கு உள்ளாயின. லக்ஷ்மணபுரியை வீழ்த்துவதற்காக எல்லாப் படைகளும் ஹாவ்லக்கின் தலைமையில் அங்கே அனுப்பப்பட்டிருந்தன. அப்படி இருந்துங்கூட, ரெஸிடென்ஸியில் இருந்த ஆங்கிலேயர்கள் மீட்கப்படாததுடன், அவர்களை விடுவிப்பதற்காக ஏராளமானவர்களைப்

பலி கொடுத்தும் பலி வாங்கியும் வந்து சேர்ந்த ஹாவ்லக்கின் படைகள் இறுதியில் உள்ளே அகப்பட்டுக்கொண்டன!

அதனால் அந்த மாகாணம் முழுவதும் ஆங்கில அதிகாரத்தின் பலம் குன்றியது. அவ்வமயம் டில்லி வீழ்ச்சியடைந்து, அங்கே ஆங்கிலப் படை போர் எதுவும் இன்றி இருந்து வந்ததெனினும், அந்த மாகாணத்தில் 'அமைதி'யைப் பாதுகாக்க அது அவசியமாக இருந்தது. அதனால், மற்ற இடங்களுக்கு உதவியாக அதை அனுப்பவும் முடியவில்லை. அந்த நிலைமையில் ஆங்கிலப் பிரதம தளபதி போரைத் தொடர்ந்து நடத்திவரும் பொறுப்பை லக்ஷ்மணபுரியிலும் ஆலம்பாக்கிலும் இருந்த துருப்புகளிடமே தாற்காலிகமாக ஒப்பித்துவிட்டு, ஆங்கில அதிகாரத்துக்கு ஏற்பட்டுள்ள ஆபத்துக்குப் பரிகாரம் தேடுவதுதான் மிகவும் முக்கியமான அலுவலென்று எண்ணி, அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான்.

புதிய பிரதம தளபதியான காலின் காம்பெல் ஆகஸ்டு மாதம் 13-ஆம் தேதி கல்கத்தாவுக்கு வந்து, ஹிந்துஸ்தானத்தைத் தேச பக்தர்களிடமிருந்து மீண்டும் கைப்பற்றுவதற்காகப் பெரும் திட்டம் ஒன்றையும் வகுத்தான். ஆகஸ்டு மாதம் 13-ஆம் தேதியிலிருந்து அக்டோபர் மாதம் 27-ஆம் தேதி வரையில் அவன் பெரும் படையெடுப்புக்குப் பூர்வாங்கமான ஏற்பாடுகளை இடைவிடாமல் செய்து வந்தான். அவனுடைய திட்டத்திற்கு இணங்க, சென்னை, இலங்கை, சீனு முதலிய இடங்களிலிருந்து வந்த படைகளெல்லாம் தயாராக வைக்கப்பட்டன; காஸிம் பஜார் ஆயுத சாலையில் புதிய துப்பாக்கிகள் வார்க்கப்பட்டன; ஆயுதங்கள், வெடி மருந்துகள், உடைகள், உணவுப் பொருள்கள், போக்கு வரத்துச் சாதனங்கள் முதலியவை போதிய அளவு கிடைப்பதற்கான சிறந்த ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

இரண்டு மாதங்கள் வரையில் மிகவும் சிரமப்பட்டு அவன் ஏராளமாகப் போர்ச் சாதனங்களைச் சேகரித்து வருகையில், ஹாவ்லக்கும் அவுட்ராமும் இன்னும் ரெஸிடென்ஸியிலேயே அடைபட்டுக் கிடக்கின்றனர் என்ற செய்தி வந்தது. வீழ்ச்சியடைந்தும் மீண்டும் அட்டகாசம் செய்துவரும் லக்ஷ்மணபுரியின் 'பிடிவாதத்தை' அடக்குவதற்காகக் காம்பெல், 27-ஆம் தேதி கல்கத்தாவிலிருந்து புறப்பட்டான்.

அதே சமயம் கர்னல் பவெல், காப்டன் வில்லியம் பீல் இவர்களின் தலைமையில் கடற்படைப் பிரிவு ஒன்றும் நதியின் வழியாக அலாகாபாத்துக்கு அனுப்பப்பட்டது. கல்கத்தாவிலிருந்து அலாகாபாத் வரையிலும், கான்பூர் வரையிலும், பெரிய சாலைகள் அனைத்துக்கும் அருகில் தேச பக்தர்கள் சிறுசிறு கோஷ்டியினராகப் பிரிந்து ஆங்கிலப் படைகளுக்கு இடைவிடாமல் தொல்லை விளைவித்து வந்தார்கள். அவர்கள் எல்லாரும் சேர்ந்து ஒரே இடத்தில் இருந்திருப்பார்களாயின், அவர்களை ஆங்கிலேயர்கள் வெகு எளிதில் தோற்கடித்திருக்க முடியும். ஆனால் பாண்டேக்கள் குமார சிம்மனிடம் பயிற்சி பெற்றவர்கள் ஆதலின், ஆங்கிலேயர்களுடன் நேரடியான பெரும் போர் எதி

லும் ஈடுபடவில்லை. சிறு சிறு கோஷ்டிகளாகப் பிரிந்து, முற்றும் எதிர்பாராத இடங்களில் திடீரென்று அவர்கள்மீது பாய்ந்து, தாக்கி, அவர்களிடையே மிகுந்த சேதத்தை உண்டாக்கி வந்தார்கள். மறைந்திருந்து திடீரென்று தாக்கும் முறையை அவர்கள் கையாண்டு வந்ததனால் அந்த மாகாணம் முழுவதும் ஆங்கிலேயர்களிடையே பெருந் திகில் ஏற்பட்டது. அத்தகைய ஒரு கோஷ்டியினரை கஜுவா நதிக்கரையிலிருந்து விரட்ட முயலுகையில் கர்னல் பவெல் தேச பக்தர்களால் கொல்லப்பட்டான்.

பாண்டேயின் வாள் என்றைக்குப் பவெலின் உதிரத்தை உறிஞ்சியதோ, அன்றுதான் பிரதம தளபதி காலின் காம்பெல் கான்பூர் வந்து சேர்ந்தான். புரட்சிக்காரர்கள் எவ்வாறு ஆங்கிலேயர்களுக்கு இடை விடாமல் தொல்லை விளைவித்து வருகிறார்கள் என்பது அவன் அறியாத விஷயம் அல்ல. அவன் அலாகாபாத்திலிருந்து கான்பூருக்கு ஒரு வண்டியில் சென்றுகொண் டிருந்த போது, பாண்டேக்களின் படை ஒன்றைச் சந்திக்க நேர்ந்தது. அப்போது ஆங்கிலேயர்களுக்குப் போக்குவரத்துச் சாதனங்கள் கிடைப்பது பெரும் கஷ்டமாகியது. அதனாலேயே காம்பெல் மிகவும் மட்டமான ஓர் ஓட்டை வண்டியில் கான்பூருக்குப் பிரயாணம் செய்துகொண் டிருந்தான். போக்குவரத்துச் சாதனங்கள் பற்றித் தேச பக்தர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லாததால், அதே ரஸ்தாவில் ஓரிடத்தில் தேசீயச் சிப்பாய்கள் பல யானைகளின் மீது ஏறி வந்தனர். அவர்களுடன் குதிரைப் படைகளும் வந்து கொண் டிருந்தன. காலின் காம்பெல் யாதொரு துணையும் இன்றிச் சென்றுகொண் டிருந்தான். தனியாகச் செல்லும் வண்டிக்குள் அவர்கள் கவனம் செல்லவில்லை யெனினும், உள்ளிருந்த காம்பெல் எங்கே அவர்கள் தன்னைப் பார்த்துவிடுவார்களோ என்று ஒவ்வொரு விநாடியும் நடுங்கிக்கொண் டிருந்தான்.

இந்தியா முழுவதையும் வெல்வதற்காகத் திட்டம் போட்டுச் சென்றுகொண் டிருந்த ஆங்கிலப் பிரதம தளபதியின் முன்னிலையில் திடீரென்று தேச பக்தர்கள் தோன்றியது மிகமிக ஆச்சரியம் அல்லவா? அவர்களைக் கண்டதும் காம்பெலின் வண்டி திரும்பி ஓட ஆரம்பித்தது. அப்போது வண்டிக்காரன் அற்பச் சமிக்ஞை காட்டியிருந்தாலுங்கூட, தேச பக்தர்கள் அவனைக் கண்டுபிடித்திருப்பார்கள். மகத்தான போர்களில் வெற்றி பெற்றாலொழியக் கைது செய்ய முடியாத காம்பெலை, அந்த வண்டிக்காரன் வெகு சுலபமாகக் கைது செய்திருக்கலாம். எனினும், காம்பெலின் அதிருஷ்டத்தினால் அத்தகைய சம்பவம் நிகழவில்லை. வண்டிக்குள் இருப்பவன்மீது தேச பக்தர்களின் கவனம் சென்றிருக்குமாயின், அவர்கள் அவனைக் கைது செய்து குமார சிம்மனின் எதிரில் கொண்டுபோய் நிறுத்தியிருப்பர்; அல்லது பாதகர்களின் பிரதி நிதியான அவனை அவ்விடத்திலேயே மறு உலகிற்கு அனுப்பியிருப்பர்.

காலின் காம்பெல் இவ்விதம் ஆச்சரியகரமாக உயிர் தப்பிய பின், நவம்பர் மாதம் 3-ஆம் தேதி கான்பூருக்கு வந்து சேர்ந்தான். கிராண்டின் தலைமையில் அங்கே ஒரு பெரும் படை

சேகரிக்கப்பட்டிருந்தது. ஏற்கனவே குறிப்பிடப்பட்ட கடற் படையும் புதிய ஆங்கிலத் துருப்புகளுடன் அங்கே வந்து சேர்ந் தது. வழியில் தேச பக்தர்களின் படைகளைச் சிதற அடித்துவிட்டு கிரேட்ஹெட்டும் டில்லிப் படைகளுடன் கான்பூருக்கு வந்தான். டில்லி வீழ்ச்சி அடைந்தபின் அந்த மாகாணத்தில் 'அமைதி' நில வும்படி செய்வதற்காகக் கிரேட்ஹெட் கைக்கொண்ட முறைகள், அலாகாபாத்தில் நிகழ்ந்த நீலனின் நரகப் படலத்தையும் அற்ப மாகச் செய்துவிட்டன. அந்த அட்டூழியங்களுக்கு உலக சரித் திரத்திலேயே உவமை காண முடியாது.

தேசீயப் புரட்சி ஆரம்பமானதிலிருந்து நவம்பர் மாதம் வரையில் டில்லி மாகாணம் தேச பக்தர்களின் வசமே இருந்தது. அப்போது ஜனங்களுக்கு யாதொரு தொல்லையும் ஏற்படவில்லை என்பதை ஆங்கிலேயர்களும் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். 'அப் போது டில்லி மாகாணத்தைச் சேர்ந்த பல ஜில்லாக்களிலும் மக் கள் விவசாயத்தில் ஈடுபட்டனர். புரட்சிக்காரர்கள் மக்களுக்கு எவ்விதக் கொடுமையும் இழைக்கவில்லை' என்று ஒரு பிரபல ஆங் கில சரித்திராசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

தங்கள் தேச விடுதலைக்காகப் போராடும் பாண்டேக்கள், ஜனங்களுக்கு எவ்வித இன்னலும் இழைக்காததன் மூலம் தாங் கள் உண்மையான விடுதலை வீரர்கள் என்பதைக் காட்டிக்கொண் டனர். ஆங்கிலேயர்கள், இந்திய ஜனங்களுக்கு எல்லையற்ற கொடுமைகள் இழைத்ததன் மூலம், தாங்கள் பிற மக்களை அடிமைத்தனத்தில் ஆழ்த்தும் 'வீரர்கள்' என்பதை உலகம் அறி யப் பிரகடனம் செய்தனர்! கிரேட்ஹெட்டின் படைகள் டில்லி யிலிருந்து கான்பூருக்கு வரும் வழியில், பல கிராமங்களை எரித் தன; தங்களுக்கு எதிர்ப்பட்ட திடகாத்திரர்களான இந்தியர் கள் எல்லாரையும் தூக்கில் இட்டன; பறவைகளைக் கொல்லு வதுபோல மக்களைக் கொன்று குவித்தன.

கிராண்டிடம் ஐயாயிரம் ஆங்கிலத் துருப்புகளைத் தவிர, நூற்றுக் கணக்கான ஒட்டகங்கள் முதலியனவும் இருந்தன. அவன் லக்ஷ்மணபுரியிலுள்ள படைகளுக்குத் தேவையான உண வுப் பொருள்கள் கொண்டு வந்தான். கிராண்டின் படைகள் புரட்சிக்காரர்களைச் சிதற அடித்துவிட்டு ஆலம்பாக்கிற்கு வந்திருக்கின்றன என்பதைக் கேள்வியுற்றதும், காலின் காம்பெல் கான்பூரிலிருந்து புறப்பட்டுக் கங்கையைக் கடந்து சென்றான்.

புரட்சிப் படைகள் பின்புறமாகத் தாக்காமல் பாதுகாப்ப தற்காக விண்ட்ஹாம் தலைமையில் ஆங்கிலேயர்களும் சீக்கியர் களும் அடங்கிய ஒரு படை கான்பூரில் வைக்கப்பட்டது. விண்ட் ஹாம் பல ஐரோப்பிய 'யுத்த'ங்களில் வெற்றியடைந்து பெரும் புகழ் பெற்றவன். காலின் தனது படையுடன் நவம்பர் 9-ஆம் தேதி ஆலம்பாக் வந்து சேர்ந்தான். ஏற்கனவே அங்கே வந்த ஏராளமான படைகளையும் அவன் பார்வையிட்ட பின், எல்லாரு மாகச் சேர்ந்து லக்ஷ்மணபுரியைத் தாக்குவதற்கான திட்டம் ஒன்றை வகுத்தனர். அதற்கிணங்க, காலின் 10-ஆம் தேதியன்று தாக்குதலை ஆரம்பிக்குமாறு உத்தரவிட்டான்.

அப்போது ஆங்கிலேயர்களின் முகாமில் பல சிறந்த ராணுவத் தளபதிகள் இருந்தனர். ஹாவ்லக், அவுட்ராம், கடற்படையைச் சேர்ந்த பீல், கிரேட்ஹெட், ஹாட்ஸன், ஹோப் கிராண்ட், அயர், பிரதம தளபதி காலின் காம்பெல் முதலியோர் அங்கு இருந்தனர். படைகளில் புதிதாக வந்த ஸ்காட்லாந்து துருப்புகள், ஆங்கிலேயர்கள், ஆங்கில விசுவாசிகளான பாஞ்சாலச் சிப்பாய்கள், டில்லியில் தங்களுடைய சகோதரர்களை வீழ்த்தியதால் சிந்திய ரத்தம் காயாத வாட்களையுடைய துரோகிகள் முதலியோரும் இருந்தனர்.

நவம்பர் 14-ஆம் தேதி வெள்ளையர்களுக்கும் தேச பக்தர்களுக்கும் சில்லறைச் சண்டைகளே நிகழ்ந்தன. எனினும் மாலையில் ஆங்கிலேயர்கள் தில்குஷ் பாக் வரையில் முன்னேறிச் சென்றுவிட்டனர். காலின், இரவை அவ்விடத்திலேயே கழிக்கத் தீர்மானித்து அந்தத் தோட்டத்திலேயே முகாம் போட்டான். அப்போதுகூடத் தேச பக்தர்கள் ஆங்கிலேயர்களைத் தாக்கினர் என்றாலும், ஆங்கிலேயர்கள் அதைப் பொருட்படுத்தாமல் இரவை அவ்விடத்திலேயே கழித்தனர். மறுநாள் காலின், தன் துருப்புகளை எல்லாம் அணிவகுத்து ஒழுங்குபடுத்தி, 16-ஆம் தேதி மீண்டும் லக்ஷ்மணபுரியைத் தாக்க உத்தரவிட்டான். அதன் பின் ஆங்கிலேயர்கள் முன்சென்று சிக்கந்தர் பாக்கைச் சரமாரியாகத் தாக்கினர். அங்கே செல்லும் வரையில் அவர்களுக்கு எதிர்ப்பு அதிகம் இல்லை. ஆனால் அதன் பின் தேச பக்தர்கள் பிரமாத ஆவேசத்துடன் எதிர்த்துப் போர் புரியலாயினர்.

அப்போது புரட்சிப் படைக்கு யார் தலைமை வகித்திருப்பினும், அவர் படையை அற்புதமாக நடத்திச் சென்றார் என்பதில் சந்தேகம் இல்லை. எவார்ட் தலைமையில் ஸ்காட்லந்து துருப்புகளும், பவெலின் தலைமையில் சீக்கியர்களும் பயங்கரமாகக் கோஷம் செய்துகொண்டு சிக்கந்தர் பாக்மீது பாய்ந்தனர். அவர்கள் பாய்ந்த வேகத்தில் அவர்களின் முன்னிலையில் எந்தச் சேனையும் நிற்க முடியாது என்றே தோன்றியது. துரோகிகள் அடங்கிய படையின் சுபேதாரான கோகுல் சிங், தன் சகோதரர்களான தேச பக்தர்களைக் கொல்ல வெள்ளைத் துருப்புகளுடன் போட்டி போட்டுக்கொண்டு முன்சென்றான். தேச பக்தர்களின் ரத்தத்தைக் குடிக்கத் துரோகிகளின் வாட்களும் ஸ்காட்லந்து துருப்புகளின் வாட்களும் போட்டி போட்டன!

எனினும் சிக்கந்தர் பாக்கின் பலம் பொருந்திய பாதுகாப்பை அவர்களால் தகர்க்க முடியவில்லை. அங்கிருந்த கற்சுவர் தகர்க்கப்பட்டுங்கூட, தேசீய வீரர்கள் சிறிதும் பின்வாங்காமல் சுவர்களைப்போல் நின்றனர். இடிந்த சுவரின் வழியாக ஆங்கிலேயர்கள் அம்புகளைப்போல் உள்ளே பாய்ந்தார்கள். உள்ளே செல்லுவதிலும் துரோகிகளுக்கும் ஸ்கட்லந்து துருப்புகளுக்கும் போட்டி ஏற்பட்டது. எனினும் இறுதியில் துரோகிகளே வெற்றி பெற்றனர்! ஏனெனில், இடிந்த சுவரின் வழியாக முதலில் உள்ளே பாய்ந்து சென்றவன் ஒரு சீக்கியன் தான்!

அவனது வீரத்துக்கு அந்தக் கணத்திலேயே வெகுமதியும் கிடைத்துவிட்டது. அதாவது அதே சமயம் தேச பக்தரின் தோட்டா ஒன்று அவனது மார்பில் பாய்ந்து, ஊடுருவிச் செல்லவே அவன் கீழே விழுந்து மாண்டான். எனினும் அவனைத் தொடர்ந்து கூப்பரும் அதன் பின் எவார்ட்டும், அவர்களை அடுத்து ஜான் லம்ஸ்டனும் துருப்புகளுடன் அதிவேகமாக உள்ளே பாய்ந்து சென்றனர். ஆங்கிலப் படை முழுவதும் அவ்வளவு வேகமாகப் பாய்ந்து வரவே, தேசீயச் சேனை சிறிது நேரம் அப்படியே பிரமித்து நின்றுவிட்டது. அன்று தேசீயப் படைகளுக்குத் தலைமை வகித்தவர் பெரு வீரராதலால், பின்வாங்குவது என்ற பிரச்னையே அவர் மனத்தில் எழவில்லை!

வெற்றி அல்லது மரணம்! மரணம் அல்லது வெற்றி! இந்தக் கோஷங்களே தேசீய வீரர்களிடையே இருந்து வானளாவின. தேசத்தின் சுதந்தரத்துக்காகப் போராடும் வீரர்களுக்கு மாத்திரமே அத்தகைய கோஷங்கள் பொருத்தமானவை. மாண்ட துரோகியைத் தொடர்ந்து முதல்முதலாக உள்ளே வந்த கூப்பரை வீழ்த்துவதற்காக லூதியானு தேசீயப் படையைச் சேர்ந்த ஓர் அதிகாரி மிகுந்த துணிச்சலுடன் வாளை உருவிக்கொண்டு முன்வந்தார். இருவருடைய வாட்களும் உராய்ந்தன. ஏக காலத்தில் இருவரும் ஒருவரை ஒருவர் வெட்டி வீழ்த்தினர். உடனே லம்ஸ்டன் தன் வாளை ஆகாயத்தில் வீசிக்கொண்டு, 'வாருங்கள், ஸ்காட்லந்தின் கௌரவத்தைக் காப்பாற்றுங்கள்' என்று தன் படைகளை நோக்கிக் கூக்குரலிட்டான்.

என்ன அயோக்கியத்தனம்! ஸ்காட்லந்தின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமாம்! ஸ்காட்லந்தின் கௌரவத்துக்கு இந்திய தேச பக்தர்கள் என்ன ஆபத்தை விளைவித்தனர்? ஹிந்துஸ்தானத்துக்குக் கௌரவம் எதுவும் இல்லை போலும்! ஆயினும் ஸ்காட்லந்தின் 'கௌரவத்தை' லம்ஸ்டனின் படைகள் பாதுகாப்பதற்கு முன், ஒரு தேசீய வீரர் பாய்ந்து முன்சென்று ஹிந்துஸ்தானத்தின் கௌரவத்தைக் காப்பாற்றினர். அதாவது, ரத்தம் பெருக லம்ஸ்டனின் உடல் அவ் வீரரின் காலடியில் பொத்தென்று விழுந்தது!

இவ்வாறாக இங்கே நேருக்கு நேராக வாட்போர் நடந்துகொண்டிருக்கையில், ஆங்கிலப் படைகள் மற்றொரு புறமாக அந்தப் பிரதேசத்திற்குள் நுழைந்துவிட்டன. எனவே அதற்குமேல் சிக்கந்தர் பாக்கைக் காப்பாற்ற முடியாது என்பதைத் தேச பக்தர்கள் அறிந்துகொண்டனர். ஆயினும் வெற்றி கிடைக்கப் போவதில்லை என்பதற்காக அவர்கள் போராட்டத்திலிருந்து பின்வாங்க விரும்பவில்லை. வெற்றி கிடைக்காவிடினும், மானத்தையும் கீர்த்தியையும் இழக்க அவர்கள் சம்மதிப்பார்களோ? வெற்றியாயினும் தோல்வியாயினும் தங்கள் பொறுப்பு, கடமையைச் செய்வதே என்பதை உணர்ந்து, பின்னும் அதிக வீராவேசத்துடன் யுத்தம் செய்தார்கள்.

ஒவ்வோர் அடி நிலத்திலும் ஒவ்வொரு வாசற்படியிலும் கோர யுத்தம் நடந்தது. வாட்கள் உராய்வதால் தீப்பொறி

கள் கிளம்பின. அங்கே பூமியெங்கும் ரத்தமயமாகியது. அந்தப் போரைப்பற்றிச் சரித்திராசிரியர் மாலிஸன் கூறுவதாவது: 'சிக்கந்தர் பாக்கைப் பாதுகாப்பதற்காக மிகமிகக் கோரமான போர் நடந்தது. புரட்சிக்காரர்கள் தங்கள் முழு பலத்தையும் உபயோகித்தனர். நம் துருப்புகள் உள்ளே பிரவேசித்த பின்னருங்கூடப் போர் நிற்கவில்லை. ஒவ்வோர் அறையிலும் ஒவ்வொரு மாடிப் படியிலும் ஒவ்வொரு மூலையிலும் நின்றுகொண்டு புரட்சிக்காரர்கள் போர் செய்தனர். இறுதியாக நம் துருப்புகள் வெற்றி பெற்றபின் பார்த்தபோது, நான்கு புறங்களிலும் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட புரட்சிக்காரர்களின் பிரேதங்கள் குவியல் குவியலாகக் கிடந்தன. அங்கிருந்த புரட்சிப் படையிலிருந்து நால்வர் மாத்திரமே தப்பி வெளியே சென்றதாகக் கூறப்படுகிறது. அதுவும் சந்தேகந்தான்!'

ஹே வீரத் தியாகிகளே! தாய்நாட்டின் சுதந்தரத்துக்காகச் சிக்கந்தர் பாக்கில் போரிட்டு வீர சுவர்க்கம் அடைந்த திலகங்களே! உங்களை நாங்கள் மறவோம்! எக்காலத்திலும் மறவோம்! இதோ எங்கள் நன்றியைத் தெரிவிப்பதற்காக இந்தச் சரித்திரத்தை உங்கள் ஞாபகார்த்தமாக அர்ப்பணம் செய்கிறோம்! ஆஹா! இரண்டாயிரம் தேச பக்தர்களின் ரத்தம்! அந்த உதிரப் பெருக்கிற்கே இந்தச் சரித்திரம் அர்ப்பணம் செய்யப்படுகின்றது! வீர சிகாமணிகளே! பாரதத் தவப் புதல்வர்களான உங்களுடைய பெயர்கள் என்ன? தேச ஆவேசக் கனல் கனிந்து கொண்டிருந்த இருதயம் படைத்த தியாகசீலர்களான உங்களுக்கு அந்தப் போரில் தலைமை வகித்த வீரகேசரி யார்?

இதையெல்லாம் விவரித்துக் கூறும் அதிருஷ்டமும் பாக்கியமும் புண்ணியமும் எங்களுக்குக் கிடைக்கவில்லையே! மானிட வர்க்கத்தின் நலனுக்காக உயிரை அர்ப்பணம் செய்த உங்களுடைய பெயர்களைக் கூறும் பேறு எங்களுக்கு வாய்க்கவில்லையே! எனினும் உங்களுடைய ஞாபகார்த்தமாக இந்தச் சரித்திரத்தை அர்ப்பணம் செய்கிறோம். உங்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை; ஆயினும் என்ன? உங்களுடைய கீர்த்திக்கு எள்ளளவும் களங்கம் ஏற்படவில்லை அல்லவா? இரண்டாயிரம் ரத்த ஊற்றுக்களில் ஸ்நானம் செய்ததன் மூலம், உங்களுடைய கீர்த்தி பின்னும் அதிகமாக ஒளி வீசுகிறது. நீங்கள் சிந்திய உதிரம், அதற்கு முன் மாண்ட வீரர்களின் ஆன்மாவுக்குச் சாந்தியை அளிக்குமாக! எதிர்கால வீரர்களுக்கு இணையற்ற தேச ஆவேசத்தை உண்டுபண்ணுமாக!

சுதந்தர வீரர்களே! உங்கள் புகழ் அதோ குன்றின்மேல் இட்ட தீபம்போல் ஜொலிக்கின்றது. எனினும் சிக்கந்தர் பாக்கில் நீங்கள் புரிந்த தியாகம் உற்ற சமயத்தில் நிகழ்ந்திருக்குமாயின், உங்களுக்கு வெற்றியும் கிடைத்திருக்கும். ஆனால் இப்போதோ பகைவர்களின் பலம் பன்மடங்கு அதிகமாகியிருக்கிறது. அவர்களுக்கு உதவியாக ஆயிரக்கணக்கான புதிய சிப்பாய்கள் வந்திருக்கின்றனர். டில்லி வீழ்ச்சிக்குப் பின் ஆங்கிலேயர்களுக்கு மற்ற இடங்களிலுள்ள தேச பக்தர்களை எதிர்த்து நிற்ப

தற்குப் போதிய அவகாசம் கிடைத்திருக்கிறது. வெற்றியால் அவர்களுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டிருப்பதுபோல், தோல்வியால் உங்களுக்கு மிகுந்த சோர்வு உண்டாகியிருக்கிறது.

இத்தகைய உயிரற்ற பூமியில் இரண்டாயிரம் தியாகிகள் ஊற்றியுள்ள ரத்தங்கூடச் செழுமையை உண்டுபண்ண முடியாது. எனினும், முதலில் ரெஸிடென்ஸியைத் தாக்கியபோதே 'வெற்றி அல்லது மரணம்' என்ற கோஷத்துடன் நீங்கள் பாய்ந்திருந்தால், அரை மணி நேரத்திற்குள் ஹிந்துஸ்தானத்தின் சிகரத்தில் சுதந்தரக் கிரீடம் பிரகாசித்துக்கொண்டிருக்கும். வீரர்கள் எவ்வாறு மரணமடைய வேண்டுமோ அவ்வாறே மரணம் அடைந்திருக்கிறீர்கள். ஆனால் சுப வேளை தவறிவிட்டதால், மற்ற எல்லாப் பெருமைகளையும் நீங்கள் அடைந்துங்கூட வெற்றி மாத்திரம் உங்கள் கையிலிருந்து நழுவிவிட்டது. நேரமும் சந்தர்ப்பமும் நழுவவிடப் பட்டதே அதற்குக் காரணம். புரட்சி யுத்தங்களில் ஒரு நிமிஷ நேரத்தை இழந்ததால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை, பல பல ஆண்டுகளாயினும் ஈடு செய்ய முடியாது. அப்போது ஒரு துளி ரத்தம் உங்களுக்கு வெற்றியைக் கொடுத்திருக்கும். ஆனால் இப்போதோ உங்களுடைய உதிரம் ஆறுபோல் ஓடியும் உங்களுக்குக் கீர்த்திதான் கிடைத்ததேயன்றி, வெற்றி கிடைக்கவில்லை. புரட்சிச் சூறாவளியில், ஒரு விநாடியை நழுவ விடுவதும் மகத்தான ஒரு திட்டத்தையே பாழாக்கிவிடுகிறது. ஓரடி பின்வாங்குவதும் பெரும் ஆபத்தாக முடிகின்றது.

சிக்கந்தர் பாக்கில் தேச பக்தர்களின் குருதி வெள்ளம் ஓடியது போல் மற்ற இடங்களிலும் ஓடியது. தில்குஷ், ஆலம்பாக், ஷா நஜாப் முதலிய இடங்களிலும் தேசீய வீரர்கள் பகைவர்களை இராப்பகலாகத் திணற அடித்து வந்தனர்.

விடியற்காலை லக்ஷ்மணபுரியிலுள்ள சகல மணிகளும் அடிக்கத் தொடங்கின; பேரிகைகள் முழங்கின. மீண்டும் தேச பக்தர்கள் போருக்கு எழுந்துவிட்டனர் என்பதையே அவை வலியுறுத்தின. மோதி மஹல், ஷா நஜாப் முதலிய ஒவ்வோர் இடத்திலும் தேச பக்தர்கள் உக்கிரமாகவே போர் புரிந்தனர்; எனினும் இறுதியில் ஆங்கிலேயர்களே வெற்றி பெற்றார்கள்.

வெகு காலமாக ரெஸிடென்ஸியில் அடைபட்டுக் கிடந்த ஆங்கிலேயர்கள் விடுவிக்கப்பட்டார்கள். 17-ஆம் தேதியிலிருந்து 23-ஆம் தேதி வரையில் லக்ஷ்மணபுரியில் கோர யுத்தம் நிகழ்ந்த பின்னரே, ஆங்கிலேயர்கள் ரெஸிடென்ஸியைக் கைப்பற்ற முடிந்தது. தங்களுடைய சகாக்களின் உதிர வெள்ளத்தில் லக்ஷ்மணபுரி மிதந்துங்கூடத் தேச பக்தர்கள் சரண் புகுவதுபற்றியோ, பின்வாங்குவதுபற்றியோ சிந்திக்கவும் இல்லை! எனவே ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றுங்கூட, போர் எப்போது முடிவடையும் என்று யாராலும் கூற முடியவில்லை!

அதன் விளைவாகக் காலின் மீண்டும் தன் படைகளைச் சீர்ப்படுத்த ஆரம்பித்தான். அதாவது அவன் ரெஸிடென்ஸியைக் காலி செய்துவிட்டு, தில்குஷ் பாக்கில் ஆங்கிலப் படைகள் எல்லா

வற்றையும் ஒன்று திரட்ட முற்பட்டான். ஆலம்பாக்கில் நாலாயிரம் ஆங்கிலத் துருப்புகளும், இருபத்தைந்து பீரங்கிகளும் அவுட்ராமின் தலைமையில் இருந்தன. இவ்வாறாகக் காலின் மேற்கொண்டு எதிர்காலத்தில் நடக்கப்போகும் போருக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்யலானான். லக்ஷ்மணபுரியில் தங்களுக்குக் கிடைத்த வெற்றிக்காக அவன் தன் படைகளின் தைரியத்தையும் ஒழுங்கையும் பணிவையும் வெகுவாகப் புகழ்ந்தான். அந்த வெற்றிக்கு ஹாவ்லக்தான் முக்கிய காரணம் என்றும் பாராட்டினான்.

தங்களுக்குக் கிடைத்த வெற்றியைக் குறித்து ஆங்கிலேயர்கள் ஆனந்தம் அடைந்து வருகையில், ஹாவ்லக் திடீரென்று மாண்டான். ஏற்கனவே உஷ்ணத்தினாலும் கவலையினாலும் அவனுடைய உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகி, 24-ஆம் தேதி வெற்றி கிடைக்கும் தறுவாயில் அவன் இறந்துவிட்டான். அதனால் ஆங்கிலேயர்கள் சோகத்தில் ஆழ்ந்தனர். எனினும், 'மாண்டவரைக் குறித்து அழுதுகொண்டிருக்க அது சமயம் அல்ல. அரைகுறையாக இருந்து வரும் தங்கள் கடமையைப் பூரணமாக நிறைவேற்றி, லக்ஷ்மணபுரியைக் கைப்பற்றுவதே ஹாவ்லக்கைக் கௌரவிப்பதாகும். அதுதான் அவருடைய ஞாபகத்தைக் கொண்டாடுவதாகும்' என்று ஆங்கிலேயர் ஆறுதலடைந்தனர்.

லக்ஷ்மணபுரியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றுமுன், கான்பூரிலிருந்து திடீரென்று பீரங்கி முழக்கம் கேட்கத் தொடங்கியது. ஐரோப்பிய யுத்தங்களில் ஈடுபட்டுக் கீர்த்தி பெற்ற வீர விண்ட்ஹாம் அங்கு இருக்கும் வரையில், அந்த முழக்கத்தைக் குறித்துக் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை என்று காலின் அலட்சியமாக இருந்தான். விண்ட்ஹாமை எதிர்க்கத் துணியும் புரட்சிக்காரர்கள் இருக்க முடியாது என்றும் நினைத்தான். ஆனால் அப்போது இடி இடித்ததுபோல் வெள்ளையர்களுக்கு ஒரு செய்தி கிடைத்தது.

தாதியா டோபே கான்பூரில் இருக்கிறார் என்பதே அந்தச் செய்தி. அதைக் கேட்டதும் காலின் பிரமித்துவிட்டான். அங்கிருந்து கேட்ட பீரங்கி முழக்கத்தின் அர்த்தத்தையும் அவன் உடனே அறிந்துகொண்டான். பின்னால் சிறிதும் தாமதம் இன்றி அவன், லக்ஷ்மணபுரியை எதிர்க்கும் பொறுப்பை அவுட்ராமிடம் ஒப்படைத்துவிட்டு, கான்பூரில் தாதியா டோபே என்ன மாயஜால வேலை செய்கிறார் என்பதைக் கவனிப்பதற்காக அங்கே புறப்பட்டுச் சென்றான்!

## 28

## வீரகேசரி தாதியா டோபே

கான்பூரில் ஜூலை மாதம் 16-ஆம் தேதி தேசீயப் படைகள் தோல்வி அடைந்ததால், நானா சாஹிப் பிரம்மாவர்த்தத்துக்குச்

சென்றார். அன்றிரவு பிரம்மாவர்த்த அரண்மனையில் அவர் தம் எதிர்காலத் திட்டங்கள்பற்றித் தீவிரமாக ஆலோசிக்கலானார். மறுநாள் காலையில் அவர் தம் தம்பி பாலா சாஹிப், மருகர் ராவ் சாஹிப், மெய்க்காவலர் தாதியா டோபே முதலியோருடனும், தமது பொக்கிஷத்துடனும், இதர முக்கியச் சாதனங்களுடனும் கங்கைக் கரைக்கு வந்து சேர்ந்தார். அங்கே அவர்களுக்காகப் பல படகுகள் காத்துக்கொண் டிருந்தன.

ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணிகளும் அவர்களுடன் வந்தனர். பக்தபுரிக்குச் செல்ல வேண்டும் என்பதே நானா சாஹிபின் உத்தேசம்.

அவர்கள் பக்தபுரிக்குச் சென்றபோது நானா சாஹிபின் அந்தரங்க நண்பரான சௌத்ரி போபால் சிங், அவர்களை அன்புடன் வரவேற்றுத் தம் வீட்டில் எல்லாரையும் உபசரித்தார். ஹாவ்லக், தன் படைகளுடன் கான்பூரை முற்றுகையிட்டுக்கொண் டிருக்கையில், லக்ஷ்மணபுரியைத் தாக்குவதற்குற்ற முறையைப் பற்றியும் சிந்தித்துக்கொண் டிருந்தான். அதே சமயம் நானா சாஹிபும் ஹாவ்லக்கை எதிர்ப்பதற்கான முறைகள்பற்றித் தம் தர்பாரில் ஆலோசித்துக்கொண் டிருந்தார்.

அத்தகைய கஷ்டமான ஒரு பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்க்கும் பேராற்றல் படைத்த ஒருவர் அங்கே இல்லாமல் இல்லை. அவர்தாம் தாதியா டோபே! மிகமிகச் சிக்கலான பிரச்னைகளைத் தீர்ப்பதில் அவருக்கு ஈடு வேறு எவரும் இல்லை. அவர் அதுவரை நானா சாஹிபின் அரண்மனையில் சாதாரண குமாஸ்தாவாகவே இருந்து வந்தார். எனினும், அதுவரையில் அவர் தீர்த்து வைக்கவேண்டிய சிக்கலான பிரச்னை எதுவும் எழவில்லை. அப்போதுதான் புதிய புதிய பிரச்னைகள் எழுந்தன; புதிய சிம்மாசனங்களை ஸ்தாபிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது; புதிய படைகள் உருவாக்கப்பட்டன; புதிய புதிய போர்களையும் சமாளிக்க வேண்டியிருந்தது.

முதலில் கிடைத்த வெற்றியால் சந்தோஷம் கொண்டிருந்த நானா சாஹிபின் தர்பாரில் பின்னால் நேர்ந்த தோல்வியால் கலக்கம் ஏற்பட்டது. எனினும் பிறகு அங்கிருந்த எல்லாருடைய இருதயத்திலும் ஆச்சரியமான அமைதி நிலவியது. தங்களுக்கு நேர்ந்த அவமதிப்புக்காக வஞ்சம் தீர்க்க வேண்டிய சமயத்தில் கலக்கம் உறுவது சரியல்ல என்பதை அவர்கள் உணர்ந்தனர். அதற்குற்ற எதிர்காலத் திட்டத்தை உருவாக்கும் விஷயமாக அவர்கள் மும்முரமாக ஆலோசித்தனர். ஏழைப் பிராம்மணரான தாதியா டோபேயின் மூளையும் அங்கிருந்த சகலரும் பிரமிக்கத் தக்கவாறு வேலை செய்ய ஆரம்பித்தது.

கான்பூரில் ஏற்பட்ட தோல்வியால் சீர்குலைந்து கிடந்த படைகளை முதலில் ஒன்று திரட்ட வேண்டும் என்று அவர் யோசனை கூறினார். தாதியா டோபே மனித சுபாவ மர்மங்களை நன்கு அறிந்தவர்; தர்க்க சாஸ்திரத்தில் மகா மேதாவி; இணையற்ற துணிச்சலும் வாய்ந்தவர். எனவே ஒரே நாளில் அவர்

பெரும் படையை ஒன்றுதிரட்டிவிட்டார்! மேற்கொண்டும் துருப்புகள் தேவையாக இருந்ததால் அவர் நேராகச் சிவராஜ் புரிக்குச் சென்று, அங்கே ஏற்கனவே புரட்சியை ஆரம்பித் திருந்த 42-ஆவது படை முழுவதையும் சேகரித்துக்கொண்டு வந்துவிட்டார்!

இதன் மத்தியில் ஹாவ்லக் கங்கையைக் கடக்கவும் லக்ஷ் மணபுரிமீது படை எடுக்கவும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து கொண் டிருந்தான். எனவே, பின்புறமாக அவனுடைய படை களுக்குத் தொல்லை விளைவிக்க வேண்டும் என்று தாதியா தீர் மானித்தார். அதன் விளைவாகவே ஹாவ்லக் திரும்பவும் கான்பூருக் குச் செல்லவேண்டி யிருந்தது. அவன் கான்பூருக்குத் திரும்பிச் சென்றதும், பிரம்மாவர்த்தத்தில் மீண்டும் மகாராஷ்டிரர்கள் ஆட்சி புரிந்துகொண் டிருந்ததைக் கண்டு அவன் ஆச்சரியம் அடைந்ததும், பின்னுல் நடந்த போரில் ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி தேசீயப் படை தோல்வியுற்றதும் முந்திய அத்தியாயத் தில் குறிப்பிடப்பட் டிருக்கின்றன.

அந்தத் தோல்விக்குப் பின் தாதியா டோபே தம்மிடம் மீதி இருந்த சகல படைகளுடனும் கங்கையில் நீந்தி, அக்கரை சென்று, பக்தபுரியில் இருந்த நாஞ சாஹிபுடன் சேர்ந்துகொண் டார். அவர்களுக்கு மீண்டும் மேற்கொண்டு துருப்புகள் தேவையாக இருந்தன. அருகில் தாதியா டோபே இருக்கும் வரையில் நாஞ அவ்விஷயமாக ஏன் கவலைப்பட வேண்டும்? போரில் பறங்கியர்களைப் புறமுதுகு காட்டி ஓடுமாறு விரட்டி யடிக்க வேண்டுமென்று துடித்துக்கொண் டிருந்த குவாலியர் துருப்புகள், சிந்தியாவின் ஆங்கில விசுவாசம் காரணமாக அமைதி யாக இருந்துவர நேர்ந்தது. ஆகையால், குவாலியருக்கு ஒருவரை அனுப்ப வேண்டிய அவசியம் நாஞ சாஹிபுக்கு ஏற்பட்டது.

சிப்பாய்களின் தேச ஆவேச உணர்ச்சியைத் தூண்டி அவர் களிடையே மகத்தான உத்வேகம் எழும்படி செய்யத் தாதியா டோபேயைக் காட்டிலும் சிறந்த ஒருவர் யார் இருக்கிறுர்கள்? எனவே தாதியா, மாறுவேடம் பூண்டு குவாலியருக்குச் சென்று, மொராரில் இருந்த காலாட்படை, குதிரைப்படை, பீரங்கிப்படை எல்லாவற்றையும் தம் வசப்படுத்திக்கொண்டதுடன், அவற்றை யெல்லாம் கால்பி வரையிலுங்கூட அழைத்து வந்துவிட்டார்!

ராணுவ ரீதியாகக் கால்பி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இடம். கால்பிக்கும் கான்பூருக்கும் இடையே யமுனை நதி ஓடுவ தால், தேச பக்தர்களுக்கு அது ஒரு பாதுகாப்பாயிற்று. கான் பூருக்கு அடுத்தபடியாகக் கால்பிதான் சிறந்த படைத்தளம் என்ப தைத் தாதியா உணர்ந்து, கால்பிக் கோட்டையைத் தம் வசப் படுத்திக்கொண்டார். தமக்கு உதவியாக ஒரு பெரும் படை யும் கோட்டையும் இருப்பதை நாஞ சாஹிப் கேள்விப்பட்ட தும், கால்பியையே தம் படைத்தளமாக உபயோகப்படுத்திக் கொள்ள இசைந்ததுடன், அதை மேற்பார்வை யிடுவதற்காகத் தம் பிரதிநிதி என்ற முறையில் பாலா சாஹிபையும் அங்கே அனுப்பிஞர். பாலா சாஹிப் கோட்டையைப் பாதுகாத்து

வருகையில், ஆங்கிலேயர்களைத் தாக்கும் விஷயமாகத் தாதியா சிந்திக்கலானார்.

ஐரோப்பிய யுத்தங்களில் ஈடுபட்டுச் சூராதிசூரன் என்று பெயர்பெற்ற ஜெனரல் விண்ட்ஹாம் அப்போது கான்பூர்ப் படைகளின் பிரதம தளபதியாக இருந்தான். கான்பூரைப் பாதுகாக்கும் பொறுப்பை அந்தச் சிறிய படையிடம் ஒப்படைத்துவிட்டு, காலின் லக்ஷ்மணபுரிக்குச் சென்றிருந்தான். எனவே, அந்தச் சிறந்த சந்தர்ப்பத்தை இழக்கத் , தாதியா விரும்பவில்லை. லக்ஷ்மணபுரித் தேச பக்தர்கள், காலினின் பெரும் படையை எதிர்த்துப் போர் புரிந்துகொண் டிருந்ததால், அது வேறு இடங்களில் கவனம் செலுத்துவது என்பது முடியாத காரியம். அப்போது விண்ட்ஹாமுக்கு வெளியிடங்களிலிருந்து உதவி கிடைப்பதற்கும் வழியில்லை. ஆகையால் அவனைத் தாக்க அது தான் உற்ற சமயம் என்று தாதியாவுக்குத் தோன்றியது. சாத்தியமானால் திடீரென்று தாக்கி அவனை ஒழித்துவிட வேண்டும் என்பதே அவருடைய திட்டம். பாலா சாஹிபும் அதை அங்கீகரிக்கவே, கால்பி படைகளின் பிரதம தளபதியாகத் தாதியா நியமிக்கப்பட்டார். நேற்று ஏழையாக இருந்த தாதியா, தம்முடைய இணையற்ற திறமை காரணமாக இன்று பிரதம தளபதி ஆனார்!

அவர் யமுனையைக் கடந்து விண்ட்ஹாமின் படைகளுடன் பகிரங்க யுத்தத்தில் ஈடுபட்டார். ஐரோப்பியப் போர்க்களங்களில் தன் ஆயுள் முழுவதையும் செலவழித்து அநுபவம் பெற்ற விண்ட்ஹாமை எதிர்க்க வேண்டுமே என்று தாதியா சிறிதும் கலங்கவில்லை. கட்டுக்கோப்பின்றிச் சமீபத்தில் சேகரிக்கப்பட்ட சிப்பாய்களும், ராணுவ அநுபவம் அற்ற விவசாயிகளும் அடங்கிய படைகளுடன் அவனை எதிர்ப்பது சாத்தியமா என்பதையெல்லாம் ஆராய்ந்து தம் மூளையைக் குழப்பிக்கொள்ளவும் அவர் விரும்பவில்லை. கட்டுக்கோப்பு, சிறந்த பயிற்சி, ஒழுங்கு, அபரிமிதமான சாதனங்கள் முதலிய சகல வசதிகளும் வாய்க்கப் பெற்ற விண்ட்ஹாமின் படைகளை எதிர்க்க முன்வந்த தாதியாவின் துணிச்சல் தெய்விகமானது!

அந்தக் காட்சியைக் காண்பது மகத்தான தத்துவங்களை அறிந்துகொள்வதாகும். சிறந்த ராணுவத்திற்குத் தேவையான சகல ஸ்தூல அம்சங்களும் வாய்க்கப்பெற்ற ஆங்கிலப் படைகளை, எவ்விதச் சாதனங்களும் அற்ற, ஆனால் சுதந்தர உணர்ச்சியால் தூண்டப்பட்ட தேசீயப் படை எதிர்க்க முன்சென்றது அற்புதமான காட்சி அல்லவா? மற்றும் தர்ம நியாயமான சிறந்த லட்சியத்துக்காகப் போராடுவோர், எவ்வித வசதியும் இல்லாமல் இருந்துங்கூட, எவ்வளவு தைரியத்துடன் போராட முடியும் என்பதற்கு அந்தச் சம்பவம் எக்காலத்திலும் அழியாத ஓர் உதாரணமாகும். புனித லட்சியம் ஒன்றையே தங்களுடைய பலமாகக் கொண்ட தேசீயப் படைகளிடம் கட்டுக்கோப்பு, ஒழுங்கு முதலிய அம்சங்களும் இருந்திருக்குமாயின், மகத்தான வெற்றி கிடைத்திருக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

தாதியா குவாலியரிலிருந்து வந்த துருப்புகளுடன் நவம்பர் மாதம் 9-ஆம் தேதி கால்பியை அடைந்தார். கான்பூரிலிருந்து கால்பி சுமார் நாற்பத்தாறு மைல் தூரம் இருக்கிறது. ஆங்கிலப் படைகள் எங்கே இருக்கின்றன என்பதை அவர் அறிந்துகொண்ட பின், கால்பியிலிருந்து புறப்பட்டு யமுனையைக் கடந்து தோவாப் என்ற பிரதேசத்துக்குச் சென்றார். அதன்பின் தாதியா, தம் பொக்கிஷங்களை யெல்லாம் ஜால்ஞவில் வைத்துவிட்டு, படைகளுடன் கான்பூரை அடுத்துள்ள சில கிராமங்களை ஆக்கிரமித்துக்கொண்டார்.

யமுனையைக் கடந்ததும் உடனே அவர் அவசரப்பட்டுக் கொண்டு கான்பூருக்குச் செல்லாதது மிகவும் புத்திசாலித்தனமாகும். ஏனெனில், லக்ஷ்மணபுரியில் காலின் யுத்தத்தை ஆரம்பிக்கும் வரையில், தம் நடவடிக்கைகளை விண்ட்ஹாம் அறிந்து கொள்ளக்கூடாது என்பதற்காகவே அவர் உடனே அங்கே செல்லவில்லை. ஆனால் காலின் லக்ஷ்மணபுரியில் போரை ஆரம்பித்து விட்டான் என்ற செய்தி கிடைத்ததும், தாதியா வழியிலுள்ள முக்கிய இடங்களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டு சிவராஜபுரியை நோக்கிப் படையெடுத்துச் சென்றார்.

அவர் கைக்கொண்ட தந்திரமுறைகளின் விளைவாக நவம்பர் மாதம் 19-ஆம் தேதிக்குப் பின் ஆங்கிலப் படைகளுக்கு உணவுப் பொருள்கள் முதலிய எந்தச் சாதனங்களும் செல்ல முடியாதவாறு தடுக்கப்பட்டன.

அப்போது விண்ட்ஹாமும் கான்பூரில் சோம்பேறித்தனமாக உட்கார்ந்துகொண் டிருக்கவில்லை. கல்கத்தாவிலிருந்து சரமாரியாக வந்துகொண் டிருந்த ஆங்கிலப் படைகள் கான்பூரில் நிறுத்தப்பட்டன. கால்பி செல்லும் வழியைக் கண்காணிப்பதற்காகக் கார்த்யூவின் தலைமையில் ஒரு பிரிவு அனுப்பப்பட்டது. விண்ட்ஹாமும் அவசரப்பட்டு எதுவும் செய்யாமல், தாதியாவின் நடவடிக்கைகளை நிதானமாகக் கவனித்து வந்தான். தாதியா, காலினின் படைகளுக்குச் சாதனம் எதுவும் செல்ல முடியாமல் தடுப்பதற்காக அயோத்திக்குச் செல்ல உத்தேசித்திருக்கிறாரா, அல்லது கான்பூரில் தன்னை எதிர்க்க உத்தேசித்திருக்கிறாரா என்பதை அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை.

எனினும் அதற்காக அதிக காலம் காத்திருக்க அவன் விரும்பவில்லை. காலின் எப்போதும் எதிரிகளை முன்சென்று தாக்கும் துணிச்சல் உள்ளவன். கண்மூடித்தனமான ஒரு கொள்கையிலும் நம்பிக்கை உடையவன். அதாவது இந்தியச் சிப்பாய்களைக் காட்டிலும் மாத்திரம் அல்ல, ஆசியச் சிப்பாய்கள் எல்லோரையும் காட்டிலும் ஆங்கிலச் சிப்பாய்கள் சிறந்த வீரர்கள் என்பதிலும், ஆசியாக்காரர்களைத் தோற்கடிப்பதற்குற்ற சிறந்த முறை, மிகுந்த துணிச்சலுடன் நேரடியாக எதிர்த்து ஒரே மூச்சாகத் தாக்குவதுதான் என்பதிலும் தளராத நம்பிக்கை கொண்டவன்!

'நீ எவ்வளவு பலசாலியானாலும், ஆசியாக்காரனைத் தாக்குவதில் சிறிது தயங்கினாலும் உடனே அவன் கர்வங்

கொண்டு தன் உண்மையான பலத்தை உணர்ந்து உன்னைத் தாக்க ஆரம்பித்துவிடுவான். ஆகையால் உன் பக்கம் பலவீனமாயினுங்கூட, ஒரு விநாடியும் தயங்காமல் தைரியமாகத் தாக்கினால், ஆசியாக்காரர்கள் திகிலடைந்து ஓட்டம் பிடித்துவிடுவார்கள்.' ஆங்கிலேயர்களின் இந்த உபதேசத்தில் விண்ட்ஹாமுக்கு அளவற்ற நம்பிக்கையும் பக்தியும் உண்டு! இதில் விசேஷம் என்னவெனில், அத்தகைய நம்பிக்கையுடன் ஆங்கிலேயர்கள் போரிட்ட பெரும்பாலான சந்தர்ப்பங்களிலும், அவர்கள் வெற்றி பெற்றிருப்பதே ஆகும்! எனவே தங்களிடம் உள்ள துருப்புகளின் தொகையைக் காட்டிலும் உருட்டலும் மிரட்டலும் பகட்டும் பொய்யுமே வெற்றி அடைவதற்கான சிறந்த வழிகள் என்பது ஆங்கிலேயர்களின் பொதுவான எண்ணமாக இருந்து வருகிறது.

ஆசியாக்காரர்களின் தொகை எவ்வளவு அதிகம் இருப்பினும், பாணம்போல் பாய்ந்து, துணிச்சலுடன் தாக்கினால் அவர்கள் சிதறுண்டுவிடுவார்கள் என்ற மந்திரத்தை, இந்தியாவுக்கு வரும் ஒவ்வோர் ஆங்கிலச் சிப்பாயும் மனப்பாடம் செய்துகொள்கிறான்! ஆங்கில சரித்திராசிரியனும் இந்த விஷயத்தைக் குறிப்பிடாமல் விடுவதில்லை. அத்தகைய எண்ணத்தில் ஊறி வந்திருக்கும் விண்ட்ஹாம், எவ்வளவு காலந்தான் பொறுமையுடன் தாதியாவின் நடவடிக்கைகளைக் கவனித்து வர முடியும்? எனவே, அவன் கான்பூரிலிருந்து புறப்பட்டு, கால்பிக்கு அருகிலுள்ள கால்வாயின் பாலத்தை நோக்கிப் படைகளுடன் செல்லலானான்.

தாதியாவும் ஸ்ரீகண்டியிலிருந்து நவம்பர் மாதம் 25-ஆம் தேதி பாண்டு நதிப் பிரதேசத்தை நோக்கிப் புறப்பட்டார். அவருடைய தலைமையில் வரும் துருப்புகள் தங்களை நெருங்கியவுடன், அவர்களை ஒரே மூச்சில் தாக்கித் தோற்கடிப்பதற்குற்ற மேலே குறிப்பிட்ட 'மருந்தை' ஆங்கிலேயர்கள் உபயோகிக்க முற்பட்டனர். அதற்கிணங்க 26-ஆம் தேதியன்று ஆங்கிலத் துருப்புகள் தாதியாவின் படைமீது பாணம்போல் பாய்ந்து தாக்கினர். அதைக் கண்டதும், காடுகளில் மறைந்துகொண்டிருந்த தேசிய வீரர்கள் ஆங்கிலேயர்களின்மீது பீரங்கிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தார்கள். இரு சாராரும் நீண்ட நேரம் வரையில் பீரங்கிப் பிரயோகம் செய்தபின், தாதியாவின் மூன்று பீரங்கிகளை ஆங்கிலேயர்கள் கைப்பற்றினர்.

அதைக் கண்ட விண்ட்ஹாம் மிகுந்த சந்தோஷம் அடைந்து, பாணம்போல் பாய்ந்து, துணிச்சலுடன் தாக்கும் முறை வெற்றி பெற்றுவிட்டது என்று எண்ணினான். ஆங்கிலத் துருப்புகளும் அன்று தங்களுக்கு வெற்றி கிடைப்பது நிச்சயம் என்று நம்பினர். எனினும், சிறிது நேரத்தில் அவர்கள் நம்பிக்கை பாழாகிவிட்டது. ஏனெனில், தேசிய வீரர்களின் கடுமையான தாக்குதலால், ஆங்கிலேயர்கள் பின்வாங்கும்படி நேர்ந்தது. மேலும் சிறிது நேரம் யுத்தம் நடந்தபின், தாங்கள் வெற்றியடையப் போவதாக அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை

சிதறுண்டதுடன், தங்களுக்குத் தோல்வி நிச்சயம் என்ற திகிலும் உண்டாகிவிட்டது! இறுதியில் அவர்களைத் தாதியாவின் படைகள் கான்பூர் வரையில் துரத்திச் சென்றன. அன்று தங்களுடைய யுக்தி சிறிதும் பலியாமல் போனதைக் கண்டு விண்ட்ஹாம் ஏமாற்றமும் வெட்கமும் அடைந்தான்.

அந்தச் சம்பவத்தைக் குறித்து மாலிஸன் எழுதுவதாவது: 'புரட்சிப் படையின் தலைவர் சாமானியமானவர் அல்ல. விண்ட்ஹாமின் நேரடியான துணிகரப் பாய்ச்சலைக் கண்டு தாதியா எள்ளளவும் கலக்கமோ பீதியோ அடையவில்லை. அதற்கு மாறாக விண்ட்ஹாமின் பலவீனம் தாதியாவுக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெரிந்துவிட்டது. உண்மையான ஒரு தளபதிக்கு இருக்க வேண்டிய சிறந்த புத்தி நுட்பம் வாய்ந்த தாதியா டோபே, அந்தப் பலவீனத்தைத் தமக்கு முற்றும் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ளத் தீர்மானித்தார்.

மறுநாள் காலையில் மீண்டும் பகைவர்களைத் தாக்கத் தயாராக இருக்க வேண்டும் என்றும், சிவாலியிலிருந்தும் சிவராஜபுரியிலிருந்தும் வந்துகொண் டிருக்கும் தேசீயப் படைகள், ஆங்கிலப் படைகளின் வலது பக்கத்தைத் தாக்க ஆரம்பிக்கும் வரையில் தம் படைகள் போரை ஆரம்பிக்கக் கூடாதென்றும், ஒரு நிமிஷங்கூட ஓய்வின்றி இருபத்துநான்கு மணி நேரமாக விண்ட்ஹாமை எதிர்த்துப் போராடிய தம் படைகளுக்குத் தாதியா உத்தரவிட்டார். அந்தப் படைகள் வலது பக்கத்தைத் தாக்க ஆரம்பித்ததும், தம் படைகளும் தீவிரமான தாக்குதலை ஆரம்பிக்க வேண்டும் என்பது அவருடைய கட்டளை.

இதன் மத்தியில் விண்ட்ஹாமும் தன் படையைப் போருக்கு ஆயத்தப்படுத்தினான். மறுநாள் காலையில் மணி ஒன்பது அடித்த பின்னருங்கூடப் புரட்சிப் படைகள் தாக்குதலைத் தொடங்கவில்லை. எனவே, ஆங்கிலப் படை, காலை உணவுக்காகத் திரும்பி முகாமிற்குச் சென்று மீண்டும் பதினொரு மணிக்குப் போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தது. தாதியாவின் உண்மையான நோக்கம் என்ன என்பதை ஆங்கிலேயர்கள் அறிந்துகொள்ள முடியாததால், மேற்கொண்டு திட்டமாக என்ன செய்வது என்று தோன்றாமல் கலங்கினர்.

எனினும் அவருடைய நோக்கம் என்ன என்பது வெகு சீக்கிரத்தில் அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. திடீரென்று பீரங்கிக் குண்டுகள் பறந்து வந்து ஆங்கிலப் படைகளின் வலதுபுறத்தைத் தாக்கின. அதே சமயம் தாதியாவின் படைகள் பகைவர்களின் முன்னணியைத் தாக்க ஆரம்பித்தன. பிரம்மாவர்த்தத்துக்குச் செல்லும் பாதையிலிருந்தும் தேசீய சேனை கான்பூரைத் தாக்காமல் தடுப்பதற்காக, விண்ட்ஹாம் உடனே கார்த்யூவின் தலைமையில் ஆறு பீரங்கிகளுடன் அங்கே ஒரு படையை அனுப்பினான். பின்னால் இரு சாராருக்கும் கோரமான பீரங்கிப் போர் நடந்தது.

சிறிது நேரத்தில் ஆங்கிலப் பீரங்கிப் படைகள் பின்வாங்கும் அறிகுறிகள் தென்படலாயின. தாதியா தம் படைகளை அரை வட்ட வடிவமாக அமைத்திருந்தார். அவ்விதமாக முன்புறம் இருந்தும், இரு பக்கங்களில் இருந்தும் பகைவர்களை நெருக்க வேண்டும் என்பதே அவருடைய திட்டம். அந்த ராணுவ வட்டத்தைப் பிளக்க விண்ட்ஹாமினால் முடியாததுடன், ஆங்கிலேயர்கள் ஓரடி முன்வைப்பதற்கும் தேச பக்தர்களின் பீரங்கிகள் இடம் கொடுக்கவில்லை. அவர்களின் உறுதியான தாக்குதலால் இடது புறப் படைகள் பீரங்கிகளை விட்டுவிட்டுப் பின்வாங்க ஆரம்பித்தன. வலது புறத்தில் இருந்த படைகளாலும் தேச பக்தர்களை அதிக நேரம் எதிர்த்து நிற்க முடியவில்லை. அவர்களும் பின்வாங்கவே, தேசீயப் படையின் அரை வட்டம் குறுகி ஆங்கிலேயர்களைப் பின்னும் அதிகமாக நெருக்க ஆரம்பித்தது!

மாலை ஆறு மணிக்குள் ஆங்கிலப் படை முழுவதும் அறவே சீர்குலைந்துவிட்டது. அன்று தேசீய வீரர்கள் பூரண வெற்றி பெற்றனர். பகைவர்களின் பக்கத்தில் இருந்த ஆயிரக்கணக்கான கூடாரங்கள், எருதுகள், ஏராளமான உணவுப் பொருள்கள், உடைகள் முதலிய சாதனங்கள் தேச பக்தர்களிடம் சிக்கின. கான்பூர் நகரின் பாதிப் பாகம் அன்று தாதியாவின் வசமாகியது. வீர மகாராஷ்டிரரான தாதியா இவ்விதம் இரண்டாவது முறையாக மகத்தான வெற்றி பெற்றார். மிகுந்த திறமையும் கீர்த்தியும் வாய்ந்த ஆங்கிலத் தளபதியை அவர் படுதோல்வியடையும்படி செய்ததுடன், ஆங்கிலப் படை முழுவதையும் அலங்கோலமாக்கி, ஏராளமான யுத்தச் சாதனங்களையும் கைப்பற்றி, கான்பூர் நகரில் பாதியையும் தம் வசப்படுத்திக்கொண்டார். மகா சாமர்த்தியசாலியான தாதியாவிடம் கட்டுக்கோப்பும் ஒழுங்கும் உள்ள படைகள் இருந்திருந்தால், விண்ட்ஹாமின் படைகளை அவர் அடியோடு அழித்திருப்பார் என்பதை ஆங்கில சரித்திராசிரியர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர்!

தாதியா பெற்ற மகத்தான வெற்றி, காலினின் காதுக்கு எட்டியது. தாதியா கான்பூருக்கு வந்தபோது, லக்ஷ்மணபுரியில் காலின் குறைந்த பட்சம் ஒரு மாத காலமாவது யுத்தம் செய்து தீரவேண்டி இருக்கும் என்று நம்பிக்கொண்டிருந்தார். ஆனால் எதிர்பாராத விதமாக அவன் அங்கே தேச பக்தர்களை முறியடித்து விட்டான் என்ற செய்தி அவருக்குக் கிடைத்தது. அதைக் கேட்டதும் அவருடைய முகம் கவலையால் வாடியது. நிச்சயமாகக் காலின் அங்கிருந்து வந்து தம்மைத் தாக்குவான் என்பதையும், கங்கையின் இரு கரைகளிலிருந்தும் தம்மை நெருக்க முற்படுவான் என்பதையும் அவர் உணர்ந்தார்.

அதே சமயம் காலின் வெற்றி பெற்றுள்ளான் என்ற செய்தி விண்ட்ஹாமுக்கு மிகுந்த நம்பிக்கையைக் கொடுத்தது. கான்பூரில், தான் இழந்த புகழை மீண்டும் பெற்றே தீருவது என்று அவன் அன்றிரவே உறுதி கொண்டான். எனினும், அவனுடைய படைகள் மிகவும் களைத்துப் போய்விட்டதால், இரவே தாக்கு

தலை ஆரம்பிக்க அவனால் முடியவில்லை. மறுநாள் காலையில் போரை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானான், முதல்நாள் செய்த தவறுகளை விண்ட்ஹாம் சீர்ப்படுத்த முயன்றதுடன், மறுநாள் இறுதி வரையில் உறுதியாகத் தாக்கவும் தீர்மானித்தான்.

மறுநாள் காலையிலும் யுத்தம் ஆரம்பமாயிற்று. தேச பக்தர்கள் ஆங்கிலப் படையின் இரு பக்கங்களையும் வெகு கடுமையாகப் பீரங்கிகளால் தாக்கினர். முந்திய தினத்தைப்போல் அன்றும் நடுப்பகல் வரையில் யுத்தம் நடந்தது. ஆனால் அன்று ஆங்கிலேயர்கள் சிறிதும் பின்வாங்கவில்லை; உறுதியுடனும் ஏகோபித்தும் பயங்கரமாகவும் போர் புரிந்தனர். அந்த நிலைமையில் தங்களை எந்தப் படையும் அசைக்க முடியாது என்றும் நினைத்தனர். அவ்வளவு உறுதியுடன் நின்றும், தேச பக்தர்களின் ஆவேசத் தாக்குதலால் ஆங்கிலப் படைகள் சீர்குலையத் தொடங்கின. அந்தப் படையின் வலது பக்கம் பிளந்தெறியப்பட்டது.

அந்த யுத்தத்தில் ஆங்கிலேயர்கள் பல அதிகாரிகளை இழந்தனர். வில்ஸன் காயமடைந்து வீழ்ந்தான்; மெக்ரியா மாண்டான்; மர்பி, ஸ்டர்லிங், கிப்பின்ஸ் முதலியோரும் வீழ்ந்தனர். ஆசியாக்காரர்களிடையும் ஆங்கிலேயர்களை முறியடிக்கும் ஒரு தாதியா இருக்க முடியும் என்பதை அப்போதுதான் அவர்கள் உணர்ந்துகொண்டார்கள்! அன்று, மீதியிருந்த ஆங்கிலப் படைகளும் அதோகதியாயின. இவ்வாறாக மூன்றாவது நாளும் தாதியா வெற்றி பெற்றார்.

முதல் இரண்டு நாட்களைக் காட்டிலும் அன்று ஆங்கிலேயர்களின் கதி பரிதாபமாக இருந்தது. தேச பக்தர்களின் கோரமான தாக்குதலால் அவர்கள் போர்க்களத்தை விட்டு ஓட்டம் பிடித்தனர். அதன் பயனாகக் கான்பூர் நகர் முழுவதும் தாதியாவின் வசமாயிற்று. அன்றைய யுத்தத்தைப்பற்றி ஓர் ஆங்கில அதிகாரி குறிப்பிட்டிருப்பதாவது: 'அன்றைய யுத்தத்தின் முடிவைக் கண்டு எவரும் திகைக்காதிருக்க முடியாது. அன்று ஆங்கிலத் துருப்புகள் தங்களுடைய தைரியம், கொள்கை முதலிய எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். அவர்கள் தங்களுடைய முகாம்கள், மூட்டை முடிச்சுகள், யுத்த சாதனங்கள் முதலிய எல்லாவற்றையும் இழந்தனர். அவர்களுடைய ஒட்டகங்கள், யானைகள், குதிரைகள் எல்லாம் ஓட்டம் பிடித்தன. மகா தைரியசாலிகள் என்று கீர்த்தி வாய்ந்த ஆங்கிலத் துருப்புகள் சுதேசிகளால் விரட்டப்பட்டுப் போர்க்களத்திலிருந்து அவ்விதம் ஓடியது பரிதாபகரமும் வெட்கக் கேடும் ஆகும்.'

ஆங்கிலப் படை தாதியாவினால் முறியடிக்கப்பட்ட சமயம், அதன் அதிருஷ்ட வசமாகக் காலின் தன் படைகளுடன் அங்கே வந்து சேர்ந்தான். தாதியா பெற்ற வெற்றிகளால் ஆங்கிலேயர்களின் கௌரவமும் பெருமையும் சிதறுண்டதைக் கண்டு அவன் மனம் துடித்தான். ஆங்கிலத் துருப்புகள் ஓடிய அலங்கோலத்தை அவன் நேரில் பார்த்ததுமன்றி, தேச பக்தர்களுடைய வெற்றிப் பேரிகைகளின் முழக்கத்தையும் காதால் கேட்டான்.

தாதியா, கான்பூரில் நடத்திவரும் போர் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் அவன் உணராமல் இல்லை.

அந்த நெருக்கடியான சமயத்தில் காலின் ஆங்கிலத் துருப்புகளுக்கு உதவியாக வந்ததைத் தாதியா பெரும் துரதிருஷ்டமாகவே கருதினர். லக்ஷ்மணபுரியில் தேசீய சேனை உக்கிரமாகப் போர் புரிந்திருந்தால், காலின் அவ்வளவு சீக்கிரமாகக் கான்பூருக்கு வந்திருக்க முடியாது என்பதை அவர் தெரிந்துகொண்டார். எனினும் அதற்காக அவர் மனச் சோர்வு அடையவில்லை. ஆங்கிலப் படை கங்கையைக் கடந்து வரமுடியாமல் இருப்பதற்காக அவர் அயோத்திக்கு அருகிலுள்ள பாலத்தை உடைத்துவிடும்படி தம் படைகளுக்கு உத்தரவிட்டார். அவரது யுக்தியை ஆங்கிலேயர்கள் முதலிலேயே அறிந்து, நவம்பர் மாதம் 30-ஆம் தேதிக்கு முன்னரே அயோத்தியிலிருந்து பாலத்தைக் கடந்து கான்பூரை நோக்கி வந்துவிட்டார்கள்.

அப்போது நாஞ சாஹிபும், குமார சிம்மனும் தாதியாவின் முகாமுக்கு வந்து சேர்ந்தனர். இயற்கையாகவே அபாரத் திறமை வாய்ந்த தாதியா கான்பூரில் இருக்கையில், தாங்கள் கான்பூருக்கு வெளியில் இருப்பது சரியல்ல என்ற உத்தேசத்துடனேயே அவர்கள் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

தாதியாவின் படையின் இடது பக்கம் தகுந்த பாதுகாப்புடன் கான்பூருக்கும் கங்கைக்கும் மத்தியில் இருந்தது. மத்திய பாகம் கான்பூர் நகரிலேயே இருந்தது. வலது பக்கம் கங்கையின் பாலத்தை அடுத்து வெகு தூரம் வரை பின்புறமாகப் பரந்து நின்றது. அவருடைய படையில் பயிற்சி பெற்ற பத்தாயிரம் சிப்பாய்கள் இருந்தனர்.

டிசம்பர் மாதம் 2-ஆம் தேதியன்று காலினுடைய முகாமை நோக்கிக் குண்டுகள் பறக்க ஆரம்பித்தன. புரட்சிப் பீரங்கிப் படைகளின் அறைகூவலுக்கு இணங்க, காலின் 6-ஆம் தேதி போரை ஆரம்பிக்க நேர்ந்தது. அவன் ஏழாயிரம் பேர்கள் அடங்கிய தன் படையைச் சிறந்த முறையில் அணிவகுத்துப் பலப்படுத்திக் கொண்டபின் யுத்தத்தைத் தொடங்கினன். ஆங்கிலப் பிரதம தளபதியான தன்னுடைய முகாமைத் தாக்கும் 'கலகக்காரர்களின்' துணிச்சலைக் கண்டு அவனுக்கு எல்லை கடந்த ஆத்திரம் ஏற்பட்டது!

தேசீயப் படையின் வலது பக்கம் தகுந்த முறையில் பாதுகாக்கப்படவில்லை என்பதைத் தந்திரசாலியான காலின் உணர்ந்து, அதைக் கடுமையாகத் தாக்குவது என்று தீர்மானித்தான். காலினின் கட்டளைக்கு இணங்க அந்தப் படையின் கவனத்தை வேறிடத்தில் இழுப்பதற்காக 6-ஆம் தேதி காலை ஆங்கிலப் படைகள் தேசீயப் படையின் இடது பக்கத்தை எதிர்க்க ஆரம்பித்தன. மத்தியிலும் கிரேட்ஹெட் ஒரு போலித் தாக்குதலைத் தொடங்கினன். தங்கள் படையின் இடது பக்கத்தையும், மத்திய பாகத்தையுமே ஆங்கிலேயர்கள் பிளக்கத் தீர்மானித்திருப்பதாகத் தேச பக்தர்கள் நம்பி, அவ்விரு பிரதேசங்

களிலும் தங்களுடைய முழுப் பலத்தையும் உபயோகிக்க முற்பட்டனர். ஆங்கிலேயர்களின் பீரங்கிப் பிரயோகத்தால் தேசீயப் படைகளின் இடது பக்கத்தில் மிகுந்த சேதம் ஏற்பட்டு வருகையில், அவர்கள் திடீரென்று வலது பக்கத்தில் தங்களுடைய முழுப் பலத்தையும் பிரயோகிக்கலாயினர்.

வலது பக்கத்தில் இருந்த குவாலியர் படைகள், ஆங்கிலேயர்களும் சீக்கியர்களும் அடங்கிய படைகளின்மீது வெகு உக்கிரமாகப் பீரங்கிப் பிரயோகம் செய்தன. எனினும், இறுதியில் அவை பின்வாங்கும்படியே நேர்ந்தது. அதைக் கண்ட பகைவர்கள் உற்சாகமடைந்து மேன்மேலும் கொடூரமாகத் தாக்கவே, குவாலியர் சிப்பாய்கள் முற்றும் சிதறுண்டனர். அவர்களின் பீரங்கிகளெல்லாம் கைப்பற்றப்பட்டன; கால்பிச் சாலை வழியாக அவர்களைப் பகைவர்கள் துரத்தவும் தொடங்கினர். வலது பக்கம் சம்பந்தப்பட்ட வரையில் காலின் இவ்விதம் பூரண வெற்றி பெற்றான்.

இத்துடன் அவன் திருப்தி அடையவில்லை. இடது பக்கத்தில் பிரம்மாவர்த்தத்துக்குச் செல்லும் பாதையையும் தடுத்து, தாதியாவையும் அவருடைய படைகளையும் கைதுசெய்ய வேண்டும் என்ற பேராசை அவனை ஆட்கொண்டது. பிரம்மாவர்த்தத்துக்குச் செல்லும் பாதையைத் தடுப்பதற்காக அவன் மான்ஸ்பீல்டு தலைமையில் ஒரு படையை அனுப்பினான்.

ஆசியாக்காரர்கள் எவ்வளவு பலம் பொருந்தியவர்கள் ஆயினும் ஒரே மூச்சில் நேரடியாகத் தாக்கினால் பயந்துவிடுவார்கள் என்ற ஆங்கிலேயர்களின் கண்மூடித்தனமான நம்பிக்கை அன்றும் உண்மையானதுதான் விசித்திரமாகும். போலித் தாக்குதலில் ஈடுபட்ட கிரேட்ஹெட்டின் பக்கம் அன்று மிகவும் பலம் குன்றியிருந்தது. தேச பக்தர்கள் சில மணி நேரம் உறுதியுடன் எதிர்த்து நின்றிருப்பார்கள் ஆயின், அவன் படுவீழ்ச்சி அடைந்திருப்பதுடன், அன்றைய யுத்தத்தின் முடிவும் வேறு விதமாகியிருக்கும். ஆனால் அவனுடைய துணிச்சலான நேர்த் தாக்குதலைக் கண்டு, அவன் அபரிமிதமான பலத்துடன் வந்திருப்பதாக நினைத்துத் தேச பக்தர்கள் மோசம் போயினர்.

ஆங்கிலேயர்களின் அந்த நம்பிக்கை அன்று மற்றொரு விதத்திலும் உண்மையாகியது. அதாவது தேசீயப் படையின் இடது பக்கத்தைத் தாக்குவதற்காக மான்ஸ்பீல்ட் ஏராளமான படைகளுடன் பதுங்கிப் பதுங்கி மெதுவாக வந்தான். அவன் அவ்விதம் வருவதைக் கண்டு அவன் பக்கத்தில் போதிய படைப் பலம் இல்லையென்று கருதி, அவன் படைகளை நேரடியாகத் தாக்க ஆரம்பித்தனர். இடது பக்கத்தில் இருந்த படைகளுக்கு நானா சாஹிபே தலைமை வகித்தார். மான்ஸ்பீல்ட் தயங்கித் தயங்கி மெதுவாக வருவதை நானா சாஹிப் தமக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டார். அதன் பயனாகத் தாதியா டோபேயும் அவருடைய படைகளும் ஆங்கிலேயர்களிடம் கைதியாகாமல் தப்புவது சாத்தியமாயிற்று.

தாதியாவைச் சூழ்ந்துகொண்டாகிவிட்டதா என்று ராணுவ அதிகாரிகளைக் காலின் அடிக்கடி கேட்டுவந்தான். இறுதியில் மான்ஸ்பீல்டின் தயக்க நடவடிக்கைகளால் தாதியா டோபே தப்பிச் சென்றுவிட்டார் என்று தெரிந்ததும் அவனுக்கு உண்டான ஏமாற்றம் கொஞ்சநஞ்சம் அன்று! ஆங்கிலப் படைகள் தம்மைச் சூழ்ந்துகொள்ள முயல்கின்றன என்பதை அறிந்த தாதியா, அவர்களின் 'வலை'யைப் பிளந்துகொண்டு, தம் படைகள், ஆயுதங்கள் முதலிய சகல சாதனங்களுடனும் தப்பிச் சென்றுவிட்டார்!

எனினும் ஹோப் கிரான்ட் தன் படைகளுடன் அவரைத் தாக்கவே, டிசம்பர் மாதம் 9-ஆம் தேதி சிவராஜபுரிக்கு அருகில் ஆங்கிலேயர்களுக்குத் தாதியாவின் படைகளுக்கும் மீண்டும் போர் நிகழ்ந்தது. அன்றும் ஆங்கிலேயர்களிடமிருந்து தாதியா தப்ப முடிந்தது. எனினும், அவருடைய படைகளின் பெரும்பாலான பீரங்கிகளும் பகைவர்களிடம் சிக்கிவிட்டன. விண்ட்ஹாம் அடைந்த தோல்வியால் உண்டான அவமானத்துக்கு, இவ்விதமாக 6-ஆம் தேதியிலிருந்து 9-ஆம் தேதிக்குள் காலின் பரிகாரம் தேடிவிட்டான்.

அந்த மூன்று நாட்களுக்குள் ஆங்கிலேயர்கள் புரட்சிப் படைகளுக்குச் சொந்தமான முப்பத்திரண்டு பீரங்கிகளைக் கைப்பற்றியதுடன், அவற்றைச் சிதற அடித்து ஒரு பகுதியைக் கால்பிக்கும், மற்றொரு பகுதியை அயோத்திக்கும் பின்வாங்கும்படி செய்துவிட்டார்கள். இவ்வாறாகப் பெரும் வெற்றிகள் பெற்ற காலினுக்கு, இனிச் சில்லறை வெற்றிகள் பெறுவது பிரமாதமான காரியம் அல்ல என்று தோன்றியது. பின்னால் அவன், படைகளுடன் பிரம்மாவர்த்தத்துக்குச் சென்று, ஜனங்களின் சொத்துக்களை எல்லாம் கொள்ளையிட்டதுடன், அரண்மனையையும் தரைமட்டம் ஆக்கினான். மற்றும் அவனுடைய வெற்றிகளுக்கெல்லாம் 'சிகரம்' வைத்ததுபோல், அந்த நகரில் இருந்த தேவாலயங்களும் அவனுடைய கட்டளைக்கு இணங்க இடிக்கப்பட்டன.

இந்தியாவின் இணையற்ற ரத்தினங்களான நானா, தாதியா, பாலா, ராவ், ஜான்ஸிராணி முதலியவர்கள் வளர்ந்தது பிரம்மாவர்த்த அரண்மனையில்தான். முதல்முதலாகச் சுதந்தர யுத்தத்தின் விதை விதைக்கப்பட்டதும் அந்த அரண்மனையில்தான். அந்த நகரில் உள்ள தேவாலயங்களின் சந்நிதியிலேயே அந்த உயர்ந்த லட்சியம் ஸ்தாபிக்கப்பட்டது. மகாராஷ்டிரர்களிடமிருந்து கைப்பற்றிய ராய்கட் சிம்மாசனம், ஆங்கில அரக்கர்களைப் பலி கொடுத்து மீண்டும் ஸ்தாபிக்கப்பட்டதும் அவ்விடத்தில்தான்.

அப்போது பிரம்மாவர்த்த அரண்மனையிலும் ஆலயங்களிலும் தெய்விகச் சோதி சுடர் விட்டுக்கொண்டிருந்தது. இன்று அதைச் சாம்பலாகி விட்டதற்கும் அந்தச் சுடர்தான் காரணம். அந்தத் தெய்விகச் சாம்பலின்மீது நாம் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விட வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், அந்த அரண்மனையும் ஆலயங்களும் தம் கடமைகளை முற்றும் நிறைவேற்றிய

பின்னரே தகனம் செய்யப்பட்டன. அத்தகைய மாட மாளிகைகளும் கூடகோபுரங்களும் அழிந்தாலும், அதன் விளைவாகப் பொங்கி எழும் உத்வேகம் ஆயிரம் மடங்கு அதிகப் பலனை அளிக்கின்றது; ஆயிரம் மடங்கு அதிகமாக ஜீவசக்தியை உண்டுபண்ணுகின்றது.

அடிமைத்தனத்தைச் சகித்துக்கொண் டிருக்கும் மற்ற எந்தக் கட்டிடங்களையும் காட்டிலும் சுதந்தரப் போரில் அழிந்த கட்டிடங்கள் அன்றும் இன்றும் என்றும் இந்தியச் சமுதாயத்துக்கு ஜீவ சக்தியைக் கொடுக்கின்றன என்பதில் ஐயமும் உண்டோ? சுதந்தரம் ஜனனமானது அந்தக் கட்டிடங்களில்தான். அந்தச் சுதந்தரத்தைக் காப்பாற்றும் முயற்சியிலேயே அந்தக் கட்டிடங்கள் மாய்ந்தன. அடிமையாக வாழ்வதைக் காட்டிலும் சுதந்தரத்தை ஸ்தாபிக்கும் முயற்சியில் மாய்வது மேன்மை அல்லவா? சடலத்தைத் தகிக்கும் மயானத் தீயைக் காட்டிலும் தெய்விகமான ஹோமத் தீ, கோடி மடங்கு அதிகமான ஜீவ சக்தியை உண்டு பண்ணுகின்றதல்லவா?

## 29

## லக்ஷ்மணபுரி வீழ்ச்சி

கான்பூரில் தாதியாவின் பயங்கரமான எதிர்ப்பைச் சிதைத்து அவருடைய முன்னேற்றத்தைத் தடுத்த பின், மற்றப் பிரதேசங்களை மீண்டும் கைப்பற்றுவதில் காலின் தன் கவனத்தைச் செலுத்தலானான். அச்சமயம் ஸீட்டன் வழியிலுள்ள பிரதேசங்களை யெல்லாம் 'சமாதானம்' செய்துகொண்டு படைகளுடன் அலிகட் வந்து சேர்ந்தான். அதன்பின் அலிகடிலிருந்து கான்பூர் வரையிலும் உள்ள பிரதேசங்களை யெல்லாம் 'சமாதான'ப்படுத்துவதற்காகக் காலின் வால்போலைக் கால்பிச் சாலை வழியாக அனுப்பினான். வால்போல் கான்பூரிலிருந்து அலிகடை நோக்கி வரவேண்டுமென்றும் ஸீட்டன் அலிகடிலிருந்து கான்பூரை நோக்கிச் செல்ல வேண்டுமென்றும், அவ்விருவரும் மைன்புரியில் சந்திக்கவேண்டும் என்றும் ஏற்பாடு ஆகியிருந்தது.

அவ்விதமாக யமுனை நதி நெடுக உள்ள தோவாப் பிரதேசம் முழுவதையும் மீண்டும் கைப்பற்ற ஆங்கிலேயர்கள் திட்டம் போட்டிருந்தனர்.

அதே சமயம், காலினும் கான்பூரிலிருந்து பக்தபுரியை நோக்கிப் படையெடுத்துச் செல்லத் தீர்மானித்தான். தோவாபிலுள்ள தேச பக்தர்களை நெருக்கும் பட்சத்தில் அவர்கள் பக்தபுரிக்கே செல்லுவார்கள் என்று ஆங்கிலேயர்கள் கருதினர். தனித்தனியாகத் தங்களுடைய நடவடிக்கைகளை யெல்லாம்

முடித்துக்கொண்டு வால்போல், ஸீட்டன், காம்பெல் மூவரும் தங்கள் படைகளுடன் பக்தபுரிக்கு வருவார்கள் ஆதலால், அங்கே இறுதியாக ஒரு பெரும் யுத்தத்தை நடத்த வேண்டும் என்றும் ஆங்கிலேயர்கள் தீர்மானித்தனர்.

அந்தத் திட்டத்தின்படி டிசம்பர் 18-ஆம் தேதி வால்போல், படைகளுடனும் பீரங்கிகளுடனும் கான்பூரிலிருந்து கால்பிச் சாலை வழியாகத் தன் 'திக்விஜய'த்தை ஆரம்பித்தான். வழி நெடுகச் சிதறிக் கிடந்த தேச பக்தர்கள் அவனை இரண்டொரு தடவைகளில் எதிர்த்தனரெனினும், அதனால் பயன் எதுவும் ஏற்படவில்லை. வழி நெடுக வால்போல், ஆங்கிலேயர்களின் சம்பிரதாயத்திற்கு இணங்க, இந்தியர்கள்மீது கொடிய வஞ்சம் தீர்த்துக் கொண்டே போனான். நிரபராதிகள், ஆங்கில ஆட்சிக்கு எதிராகப் போருக்கு எழுந்த தேச பக்தர்கள், பாண்டேக்களுக்குப் புகலிடம் அளித்த கிராம ஜனங்கள் முதலிய சகலரையும் பலியிட அந்தப் பாவி சிறிதும் தயங்கவில்லை.

அவ்விதம் இடாவா வரையில் வந்த வால்போல், திடீரென்று தன் படைகளுடன் அந்த நகரிலேயே தங்கும்படி நேர்ந்தது. இடாவாவில் இருந்த தேசீய வீரர்கள் எல்லாரும் அதற்கு முன்னரே அந்த நகரை விட்டுச் சென்றுவிட்டனர். அப்படி இருந்தும் அவன் அந்த நகருக்குள் அப்பால் செல்ல முடியவில்லை. தேசீயக் காலாட் படையோ குதிரைப் படையோ பீரங்கிப் படையோ எதுவும் அவனைத் தாக்கவில்லை. ஆனால் அங்குள்ள ஒரு கட்டிடத்தில் இருந்த இருபது அல்லது இருபத்தைந்து இந்திய வீரர்கள் சகல சாதனங்களுடனும் கூடிய ஒரு பெரும் ஆங்கிலப் படையையே தடுத்துவிட்டார்கள்!

அந்த வீட்டின் மாடிச் சுவர்களில் துவாரங்கள் செய்து அவற்றின் மூலமாக அவர்கள் ஆங்கிலப் படைகள்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தனர். தேச ஆவேசங் கொண்ட அந்த வீர புருஷர்களின் துணிச்சலைக் கண்டு ஆங்கிலப் படை பிரமித்து நின்றது. எண்ணிக்கையற்ற துப்பாக்கிகளுடனும் பீரங்கிகளுடனும் கூடிய ஆங்கிலப் படைகள் இருபத்தைந்து தேசீய வீரர்களின் துப்பாக்கிப் பிரயோகம் காரணமாக நகருக்குள் பிரவேசிக்க முடியவில்லை. அந்நியர் எவராயினும், போரிடாமல் எளிதில் இடாவா நகருக்குள் பிரவேசித்து விட முடியாது என்பதைத் தேசபக்தர்கள் ஆங்கிலேயர்களுக்கு நிதரிசனமாகக் காட்டினர்.

அந்தக் கட்டிடத்திலிருந்து அந்த இருபத்தைந்து பேர்களும் தப்பிச் செல்லுவது சுலபம் எனினும், அவர்கள் அவ்விதம் செய்ய விரும்பவில்லை. தாய்நாட்டின் சுதந்தரத்துக்காகத் தங்களுடைய உயிரை அர்ப்பணம் செய்தே தீருவது என்று சங்கல்பம் செய்துகொண்ட தியாகிகளின் மனத்தில், உயிருக்குப் பயந்து ஓடுவது என்ற எண்ணம் எவ்வாறு எழ முடியும்? அவர்களுடன் என்ன யுத்தம் செய்வது? சிறிது நேரம் சென்றால் அந்தப் 'பைத்தியக்காரர்'களுக்குப் புத்தி தெளிவடைந்து விடும் என்றும், பின்னால் அவர்கள் தாங்களாகவே ஓடிவிடுவார்கள் என்றும் கருதி,

ஆங்கிலப் படைகள் காத்திருந்தன. வெகு நேரம் ஆகியும் அந்தப் 'பைத்தியக்காரர்களுக்கு'ப் புத்தி தெளியவில்லை. ஆங்கிலேயர்கள் பீரங்கிகளையெல்லாம் காட்டிப் பயமுறுத்தியும் அந்த வீரர்கள் கட்டிடத்தை விட்டுச் செல்லவில்லை.

சாதாரண மனிதர்களும் கோழைகளும் அல்லவா பீரங்கிகளைக் கண்டும் மரணத்தைக் கண்டும் அஞ்சுவார்கள்? சுதந்தர லட்சியத்தை அடையும் நோக்கத்துடன் மரணத்தையும் வரவேற்கும் சிலர்களைப் பயமுறுத்தும் சக்தி இவ்வுலகில் யாருக்கு உண்டு! உலகில் மரணத்திற்குப் பயப்படாதவர்கள் இல்லை. ஆனால் அந்த எல்லையையும் கடந்து புன்முறுவலுடன் மரணத்தை வரவேற்கும் வீரர்களை யார் பயமுறுத்த வல்லார்? இடி, பூகம்பம் போன்ற இயற்கையின் உற்பாதங்கள்கூட அத்தகையோரைப் பயமுறுத்த முடியாது. மரணத்தை வரவேற்போர் இவ்வுலகில் எதையும் கண்டு கலங்க மாட்டார்கள் அல்லவா? ஒரு காதலனிடமிருந்து எவ்வாறு காதலைப் பிரிக்க முடியாதோ, அதுபோலவே தேசீய வீரர்களின் மனத்திலிருந்து தேச பக்தியையும், தேசத்துக்காக மரணத்தை வரவேற்கும் ஆண்மையையும் பிரிக்க முடியாது.

அந்த இருபத்தைந்து வீரர்களும் தப்பிச்செல்ல விரும்பவில்லை. 'நாம் வெற்றி பெறுவோம்' என்பதில் அவர்களுக்கு எள்ளளவு நம்பிக்கையும் இல்லை. அப்படி இருந்தும் ஆங்கிலப் படைகளை அவர்கள் துச்சமாக மதித்தனர். டில்லி அலங்கங்களையும், கான்பூர்க் கோட்டைகளையும், லக்ஷ்மணபுரி முற்றுகையையும் கண்டு அஞ்சாத ஆங்கிலப் படைகள் அந்தச் சில வீரர்களைக் கண்டு மயங்கி நிற்க நேர்ந்தது!

அந்தச் சம்பவத்தைப்பற்றி மாலிஸன் குறிப்பிட்டிருப்பதாவது: 'சாதாரணத் துப்பாக்கிகளுடன் கூடிய வெகு சிலரான அவர்கள் தங்களுடைய லட்சியத்திற்காகப் போராடித் தியாகிகளாக மரணமடைய உறுதி கொண்டனர். அந்தக் கட்டிடத்தைப் பீரங்கிகளால் ஒரு நொடிப் பொழுதில் தகர்த்துவிடலாம் எனினும் வால்போல் அவ்விதம் செய்ய விரும்பவில்லை. அவன் படைகள் முதலில் கைவெடிகுண்டுகளை அந்தக் கட்டிடத்தின்மீது எறிந்தன. நான்கு புறங்களிலும் வைக்கோலை வைத்து எரித்துக் கட்டிடம் முழுவதும் புகைமயமாகும்படி செய்தன. எனினும் கட்டிடத்திலிருந்து அவர்களை விரட்டுவதற்காகக் கைக்கொண்ட எல்லா முயற்சிகளும் வீணாயின. அவர்கள் விரும்பியிருந்தால், சுலபமாக அதை விட்டு வெளிச் சென்றிருக்க முடியும். அவர்கள் அவ்வாறு செல்ல விரும்பாமல், மூன்று மணி நேரம்வரையில் நம் துருப்புக்களை எதிர்த்துப் போராடினர். அந்தக் கட்டிடத்தைத் தகர்த்தால் ஒழியத் தாங்கள் முன்னேற முடியாது என்பதை உணர்ந்த வால்போல், அதை இடித்துவிடுமாறு உத்தரவிட்டான். அதற்கிணங்க இஞ்சினீயர்களான பூர்ஷியரும் ஸ்கிராச்லியும் துப்பாக்கித் தோட்டாக்களால் சுரங்க வெடியைத் தயாரித்துக் கட்டிடத்தைத் தகர்த்தனர். அந்தத் தியாகிகளும் அதன் கீழே புதையுண்டார்கள். அவர்களுடைய விருப்பமும் நிறைவேறியது!'

வெடி மருந்தால் அந்தக் கட்டிடம் இடிந்து அழிந்தது. அந்தத் தியாகிகளின் சடலங்களும் மறைந்தன. ஆயினும் அவர்கள் கோரிக்கை நிறைவேறியது. அவர்களுடைய புகழ் என்றும் அழியாதவாறு ஸ்தாபிக்கப்பட்டது. தேசத் தொண்டில் தங்களுடைய உயிரை அர்ப்பணம் செய்யவேண்டும் என்ற அவர்களின் அபிலாஷை புனிதத்தன்மை வாய்ந்தது அல்லவா? அந்த ஸ்தலம் அந்தத் தேச பக்தர்களின் சமாதி ஆகியது. இடாவாவிலுள்ள அந்தப் புனிதச் சமாதி, உயிரைத் துச்சமாக மதித்து, தேசத் தொண்டு செய்யும் சிறப்பை அன்றையிலிருந்து சகல இந்திய சகோதர சகோதரிகளுக்கும் மௌனமாக உபதேசித்து வருகிறது! இடாவா நகரமே! உன் பெருமையே பெருமை! எவர் மனத்திலும் தேச ஆவேசத்தை உண்டுபண்ணும் அந்தச் சமாதியைக் காட்டிலும் சிறந்த ஞாபகச் சின்னம் வேறு என்ன இருக்க முடியும்?

வால்போல் இடாவாவுக்குச் சென்றபோது ஸீட்டன் தன் படைகளுடன் அலிகட்,காஷ்கஞ்ஜ்,மைன்புரி முதலிய இடங்களைக் கடந்து சென்றுவிட்டான். வழியில் தேச பக்தர்கள், கோஷ்டி கோஷ்டியாக அவனை எதிர்த்து வந்தார்கள். 1858 ஜனவரி மாதம் 8-ஆம் தேதி வால்போலும் ஸீட்டனும் மைன்புரியில் சந்தித்தனர். ஏற்கனவே, ஆங்கிலேயர்களால் தயாரிக்கப்பட்டிருந்த திட்டத்தின்படி, தோவாபிற்கு அருகில் டில்லியிலிருந்தும் மீரத்திலிருந்தும் அலாகாபாத்வரையிலும் உள்ள யமுனை நதிக்கரைப் பிரதேசங்களையெல்லாம் ஆங்கிலப் படைகள் மீண்டும் கைப்பற்றினர். இதன் மத்தியில் காலினும் கங்கை நதிக்கரை வழியாகப் படையெடுத்து வந்துகொண் டிருந்தான். பக்தபுரி நவாபை நசுக்கியதன் மூலம், அவன் தோவாப் பிரதேசப் புரட்சிக்காரர்களின் கடைசிக் கோட்டையையே அழித்துவிட்டான் எனலாம். அப்போது அவன் கான்பூரிலிருந்து பக்தபுரியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். தோவாப் பிரதேசத்தில் புரட்சிக்காரர்களின் பூண்டையே அழித்துவிட வேண்டும் என்பதே அவனுடைய நோக்கம்.

பக்தபுரியில் இருந்த பருகாபாத் நவாப்,தாம் ஒருகாலும் அந்நியர்களுக்கு அடிபணியப் போவதில்லை என்று சபதம் இட்டு, தம் சுதந்தரத்தைப் பிரகடனம் செய்திருந்தார். எனவே தோவாபைச் சேர்ந்த பல இடங்களிலிருந்தும் ஏராளமான புரட்சிக்காரர்கள் பக்தபுரிக்கு வந்திருந்தனர். அவர்களுக்கும் காலின் படைகளுக்கும் பற்பல தடவைகளிலும் சில்லறைப் போர்கள் நடந்தன.

கடைசியாக நடந்த போரில், பருகாபாத் நவாப் தம் தலைநகர், கோட்டைகள், ராணுவச் சாதனங்கள் முதலிய எல்லாவற்றையும் இழக்க நேர்ந்தது. அவைகளையெல்லாம் கைப்பற்றிய ஆங்கிலேயர்கள் பின்னால் நவாப் நாதர்கானையும் கைது செய்தார்கள். நாதர் கான் ஏற்கனவே கான்பூரில் நானா சாஹிபின் கீழே பல தடவைகளிலும் ஆங்கிலேயர்களை எதிர்த்து வெற்றி பெற்றவர். அத்தகைய வீரர், தங்கள் கையில் அகப்பட்டால் அவரை ஆங்கி

லேயர்கள் சும்மா விடுவார்களா? ஆயிரக்கணக்கான நிரபராதிகளைத் தூக்கில் இட்டும் கொளுத்தியும் தங்களுடைய மிருகத்தனத்தை உலகிற்கு அறிவித்த அவர்கள், தங்களுடைய பயங்கர விரோதியான நாதர் கானைத் தூக்கில் இட்டதுபற்றி ஆச்சரியப் படுவதற்கு இல்லை. அந்த வீரர் மௌனமாக இறந்துவிடவில்லை. 'இந்திய மக்கள் யாவரும் வாளை உருவி ஆங்கிலேயர்களை அறவே ஒழித்துச் சுதந்தரம் பெற வேண்டும்' என்று கேட்டுக்கொண்டு தூக்கில் மாண்டார். அந்த வீரர் தம் கடைசி மூச்சுப் போகு முன் இந்திய மகா ஜனங்களுக்கு விடுத்த கட்டளை இதுதான்!

ஜனவரி மாதம் 4-ஆம் தேதி காலின் வெற்றியுடன் பக்தபுரிக்குள் பிரவேசித்தபோது தோவாப் பிரதேசமும், காசியிலிருந்து மீரத் வரையிலுமுள்ள எல்லா இடங்களும் ஆங்கிலேயர் வசம் ஆகிவிட்டன. ஆங்கிலப் படைகளின் எதிர்கால நடவடிக்கைகள் என்ன என்பதுபற்றியே அப்போது சிந்தனை எழுந்தது. தோவாபில் மூண்ட புரட்சித் தீயை அணைத்துவிட்டால், பின்னுல் மற்ற இடங்களிலும் புரட்சி அடங்கிவிடும் என்று ஆங்கிலேயர்கள் நம்பி வந்தனர். ஆனுல் அது சிறிதும் ஆதாரமற்ற நம்பிக்கை என்பது பின்பு அவர்களுக்குத் தெரிந்தது.

டில்லி வீழ்ச்சி யடைந்தால் அதிலிருந்து எட்டு நாட்களுக்குள் புரட்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும் என்று அரசியல் தத்துவ நிபுணர்கள் ஜோஸ்யம் கூறியிருந்தனர். அதுவும் முற்றும் பொய்த்துவிட்டது. டில்லி வீழ்ச்சி யடைந்த பின் ஏற்கனவே அங்கிருந்த தேசீய வீரர்கள் எல்லாரும், பல இடங்களுக்கும் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து சென்று, பகைவர்களுக்குத் தொல்லை விளைவித்து வந்தனர்.

பகத் கானின் தலைமையில் ரோஹில்கண்ட் துருப்புகள், வீர சிங் தலைமையில் நீமச் துருப்புகள், மற்றும் பல சுபேதார்களின் தலைமையிலும் இருந்த துருப்புகள் முதலியன பல்வேறு இடங்களிலிருந்தும் போரைத் தொடர்ந்து நடத்திவந்தன. டில்லி வீழ்ச்சிக்குப் பின்னருங்கூட அந்த நகரில் ஒரு சமயம் மீண்டும் புரட்சி ஏற்படுவதற்கான அறிகுறிகள் தென்படலாயின. அதாவதுகான் பூரில் வெற்றியடைந்த நானு சாஹிப், டில்லிக்கும் படையெடுத்து வந்து, ஆங்கிலேயர்களால் சிறைப்படுத்தப்பட்டுள்ள சக்கரவர்த்தி பகதூர் ஷாவை விடுவிக்கப் போகிருர் என்ற வதந்தி, நகர் முழுவதும் பரவியது. நானு, உண்மையில் டில்லிக்கு வருவாராயின், உடனே காவலர்கள் ஒரு முயலைக் கொல்லுவது போல் வயோதிகரான சக்கரவர்த்தியைக் கொன்றுவிட வேண்டும் என்று ஆங்கிலேயர்கள் ரகசியமாகவும் கண்டிப்பாகவும் கட்டளையிட்டிருந்தனர்.

டில்லி வீழ்ச்சி யடைந்ததிலிருந்து தேச பக்தர்களின் ஆத்திரம் பன்மடங்கு அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை. தாங்கள் தோல்வி அடைந்துவிட்டதற்காக மனமுடைந்து வாளா இருக்க அவர்கள் விரும்பவில்லை. எத்தகைய இடையூறுகளையும் கஷ்டங்களையும் பொருட்படுத்தாமல், தங்கள் லட்சியம் ஒன்றிலேயே கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும் என்ற எண்ண

மும் உறுதியும் அவர்களின் இருதயத்தில் குடிகொண்டன. என்ன நேர்ந்தாலும் இறுதி வரையில் போராடி உயிர் துறப்பது என்ற தளரா உறுதி அவர்களை ஆட்கொண்டது. ஒன்று, பறங்கியர்கள் ஒழிய வேண்டும், அல்லது தாங்கள் ஒழிய வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் அவர்கள் தங்களுடைய கடமைகளைச் செய்யத் தொடங்கினர்.

டில்லியை ஆங்கிலேயர்கள் ஆக்கிரமித்துக்கொண்ட அநியாயத்திற்காக வஞ்சம் தீர்க்கவே, தேச பக்தர்கள் லக்ஷ்மணபுரியிலும் பரேலியிலும் போரைத் தொடர்ந்து நடத்தினர். தோவாப் ஆங்கிலேயர்களிடம் வீழ்ச்சி அடைந்தபின், அயோத்தி, ரோஹில்கண்ட் பிரதேசங்களில் தேச பக்தர்களின் பூரண ஆதிக்கம் ஏற்பட்டது. எனவே ரோஹில்கண்டை முதலில் ஜயித்த பின்தான் லக்ஷ்மணபுரிக்குச் செல்ல வேண்டும் என்று காலின் கருதினான். ஆயினும் லக்ஷ்மணபுரி, புரட்சிக்காரர்களின் முக்கிய ஸ்தானமாக இருந்ததால், முதலில் அதை அழித்துவிடும் பட்சத்தில், மற்ற இடங்களில் உள்ள தேச பக்தர்கள் தாங்களாகச் சரண்புகுந்து விடுவார்கள் என்று லார்டு கானிங் வற்புறுத்தவே, அவனுடைய கட்டளைக்கு இணங்கக் காலின் முதலில் லக்ஷ்மணபுரியையே தாக்கத் தீர்மானித்தான்.

ஏற்கனவே முடிவு செய்திருந்தபடி ஸீட்டன், வால்போல், பிரதம தளபதி காலின் முதலியோர் தங்கள் படைகளுடன் பக்தபுரிக்கு வந்து சேர்ந்தனர். அவர்களிடம் சுமார் பதினோராயிரம் துருப்புகள் இருந்தன. தோவாபில் ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடங்களில் எல்லாம் சிறு சிறு படைகள் வைக்கப்பட்டிருந்தன. அவர்களுக்கு உதவியாக மேற்கொண்டு ஆக்ராவிலிருந்தும் படைகள் வந்தன. அந்தப் பெரும் படையுடன் காலின் பக்தபுரியிலிருந்து புறப்பட்டான்.

அந்தப் படையைப்பற்றி ஆங்கில சரித்திராசிரியர்கள் இவ்வாறு வர்ணித்திருக்கின்றனர்: 'ஆறுல், உன்னுவ், பன்னிப் பிரதேசங்களில் அதற்கு முன் ஒருபோதும் அவ்வளவு பெரும் படை வந்ததில்லை. அங்கே பதினாயிரக் கணக்கான துருப்புகள், இஞ்சினீயர்கள், பீரங்கிப் படைகள், குதிரைகள், காலாட் படைகள், சாதனங்கள் அடங்கிய ஏராளமான வண்டிகள், கூடாரங்கள், 54 சிறிய பீரங்கிகள், 80 பெரிய பீரங்கிகள் எல்லாம் எல்லையின்றி வந்து சேர்ந்தன.'

இவ்வாறாக, பெரும் யுத்தத்திற்கு உற்ற எல்லா ஏற்பாடுகளும் வெகு சீக்கிரத்தில் பூர்த்தியாயின. 1858 பிப்ரவரி மாதம் 23-ஆம் தேதி காலின் கான்பூரிலிருந்து புறப்பட்டு, மீண்டும் கங்கையைக் கடந்து லக்ஷ்மணபுரிக்குத் தகுந்த தண்டனை விதிப்பதற்காக இத்தகைய பெரும் படையுடன் வந்து சேர்ந்தான்.

ஆங்கிலேயர்கள் கங்கையைக் கடந்தவுடனே, தன்னை அழிக்கத்தான் அவர்கள் வருகின்றனர் என்பதை அயோத்தி அறிந்துகொண்டது. தன் கிராமங்களையும் ஆலயங்களையும் விக்கிரகங்களையும் அவர்கள் வெடிமருந்து வைத்து அழித்துவிடுவார்கள் என்பதையும் தெரிந்துகொண்டது. அதையெல்லாம்

குறித்து அயோத்தி கலங்கவில்லை. நேபாளத்திலிருந்து ஜங் பகதூரின் துருப்புகளும் ஆங்கிலேயர்களுக்கு உதவியாகத் தன்மீது படையெடுத்து வருகின்றன என்பதுதான் அயோத்தியை ரத்தக் கண்ணீர் வடிக்கும்படி செய்தது. ஆங்கிலப் படைகள் வருவதைக் குறித்து அது சிறிதும் கலக்கம் உறவில்லை. அவ்விதம் கலங்கும் கோழையாக இருந்திருக்குமாயின், அந்நியரின் நுகத்தடியைத் தகர்த்தெறிய அது ஒருபோதும் முயன்றிராது. என்றைக்குத் தன் ராஜ்யத்திலிருந்து ஆங்கில அதிகாரத்தைப் பலாத்காரத்தினால் துரத்தியடித்ததோ, அன்றைக்கே ஆங்கிலேயர்கள் மீண்டும் சீக்கிரத்தில் படையெடுத்து வருவார்கள் என்பதை அயோத்தி அறிந்திருந்தது.

எனவே, அயோத்தியைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான தேசபக்தர்கள் யுத்தத்திற்கு ஆயத்தமாக இருந்தனர்; நேபாளப் படைகளும் தங்கள்மீது படையெடுத்து வரும் என்பதை அவர்கள் அறியார்கள். வெள்ளையர் தங்களைப் படுகொலை செய்யச் சிறிதும் தயங்க மாட்டார்கள் என்பதை அவர்கள் அறிவர்; ஆனால் நேபாளத்தைச் சேர்ந்த தங்களுடைய சகோதரர்களும் தங்களை அழிக்கும் வேலையில் ஈடுபடுவார்கள் என்பதை அவர்கள் அறியார்கள். ஆங்கிலேயர்களுடன் கைகலந்து இறுதி வரையில் போர் புரிய அவர்கள் தயாராக இருந்தனர்; ஆனால், ஹிந்துஸ்தானத்தின் சுதந்தரத்துக்காகப் போராடும் தாங்கள், அதற்கு விரோதமாக இருக்கும் ஹிந்துஸ்தானத்தின் ஒரு பகுதியையும் எதிர்த்துப் போர் புரியவேண்டி இருக்கும் என்ற வெட்கக் கேடான உண்மையை அவர்கள் அறியார்கள்.

காலின் தலைமையில் ஆங்கிலேயர்களின் பெரும் படை கங்கையைக் கடந்து சென்றுகொண்டிருக்கையில், ஜங் பகதூர் தன் நண்பர்களான ஆங்கிலேயர்களுக்கு உதவியாகத் தன் படைகளை அனுப்பிக்கொண்டிருந்தான். அவன் ஆங்கிலேயர்களைத் தன் நண்பர்களாகவும் இந்தியர்களை விரோதிகளாகவும் கருதி வந்தான்! இந்திய சரித்திரத்திற்கே ஒரு களங்கமாக இருக்கும் அந்த ஜங் பகதூர், சுயராஜ்யப் போர் ஆரம்பமானதைக் கேட்டதும் ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொண்டதன் மூலம், தனக்கும் தன் குடும்பத்துக்கும் எக்காலத்திலும் அழியாத அவமானத்தை விளைவித்துக்கொண்டான்.

கேவலம் சுயநலம் காரணமாக அவன் தன் தாயையே விற்கத் துணிந்து நேபாளத்திலிருந்து ஆங்கிலேயர்களுக்கு உதவியாகத் துருப்புகளை அனுப்பினான். முதல் முதலாக மூவாயிரம் கூர்க்கச் சிப்பாய்கள் வரையில் காட்மாண்டுவிலிருந்து அயோத்திக்குக் கிழக்கேயுள்ள அஸிம்கடுக்கும் ஜாலன்புரிக்கும் வந்து சேர்ந்தனர். கோரக்புரி தேசீயப் படையின் தலைவரான முகமது ஹுஸேன், நேபாளத்திலிருந்து வரும் கூர்க்கப் படையை எதிர்க்க ஆயத்தமானார்.

ஆங்கிலேயர்கள் தோவாபில் யுத்தம் செய்துகொண்டிருந்த போது, வேணி மாதவ், முகமது ஹுஸேன், ராஜா நாதர் கான் முதலியோர் காசியைச் சுற்றிலும், அயோத்திக்குக் கிழக்கிலும்

உள்ள பிரதேசங்களை மீண்டும் கைப்பற்றிவிட்டனர். அயோத்தி விஷயத்தில் ஆங்கிலேயர்கள் கண்ணோட்டம் செலுத்து முன்னரே நேபாளத் துருப்புகள் தேச பக்தர்களை அயோத்தி வரையில் பின் வாங்கும்படி செய்துவிட்டன. சில நாட்களுக்குள் ஜங் பகதூருக்கும் ஆங்கிலேயர்களுக்கும் ஒரு திட்டமான ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன் பயனாகப் பகைவர்கள் மூன்று புறங்களிலிருந்து அயோத்தி மாகாணத்தின்மீது படையெடுக்க ஆரம்பித்தார்கள்.

டிசம்பர் 23-ஆம் தேதி ஜங் பகதூர் ஒன்பதாயிரம் கூர்க்கர்கள் அடங்கிய தன் படையுடன் புறப்பட்டான். ஜெனரல் பிராங்ஸ் தலைமையிலும், ரோகிராப்ட் தலைமையிலும் ஆங்கிலச் சிப்பாய்கள் அடங்கிய இரு பெரும் படைப் பிரிவுகள் புறப்பட்டன. அந்த மூன்று படைகளும் வழிநெடுகக் காசிக்கு வடக்கேயிருந்து கிழக்கே அயோத்தி வரையிலும் தேச பக்தர்களைச் சிதற அடித்துக்கொண்டு அயோத்திக்குள் பிரவேசிக்கலாயின. பிப்ரவரி மாதக் கடைசியில் அவை கோக்ரா நதியைக் கடந்து அம்பர்புரியை நோக்கிப் படையெடுத்தன.

வழியில் அடர்ந்த காடு ஒன்றில் மிகவும் பலமான ஒரு கோட்டை இருந்தது. அது ராணுவ வசதிகள் வாய்க்கப்பெற்றிருந்ததால், அதைக் கைப்பற்றாமல் முன்னேறிச் செல்லுவது பத்திரமானது அல்ல என்று ஆங்கிலேயர்கள் கருதினர். நேபாளத் துருப்புகள் அதைத் தாக்க ஆரம்பித்தன. சகல சாதனங்களுடனும் கூடிய அந்தப் பிரம்மாண்டமான படையை எதிர்க்கத் தேச பக்தர்கள் தயங்கவில்லை. அவ்வளவு பெரிய பகைப்படையைத் தடுக்கத் துணிந்த தேசீயப் படையில் எத்தனை பேர்கள் இருந்தனர் என்று வாசகர்கள் கேட்கலாம். அந்தக் கோட்டைக்குள் முப்பத்துநான்கு பேர்களே இருந்தனர்! ஆயினும் என்ன? அவர்கள் மனத்தில் தேச ஆவேசத் தீ கொழுந்துவிட்டு எரிந்து வருகையில், எவ்வளவு பெரிய படையாக இருப்பினும் அவர்கள் அஞ்சுவார்களா?

வெற்றி கிடைத்தாலும் கிடைக்காவிடினும், தங்கள் நாட்டை அடிமைப்படுத்த முயலும் பகைவர்களை எதிர்த்து வீர சுவர்க்கம் அடைவதைத்தான் அவர்கள் விரும்பினரே அன்றி, அந்நியர்களுக்கு அடிபணிந்து கோழைகளாக வாழ விரும்பவில்லை. நேபாளச் சிப்பாய்கள் உறுதியுடன் போராடினர். தேச பக்தர்களோ அவர்களைக் காட்டிலும் பன்மடங்கு அதிக ஆவேசத்துடன் போர் புரிந்தார்கள். அதாவது அவ்விடத்தில் தேச பக்திக்கும் துரோகத்துக்கும் பயங்கரமான யுத்தம் நடந்தது.

தேச பக்தர்களின் தொகை மிக மிகக் குறைவு எனினும், அவர்களில் ஒவ்வொருவரும் சிறிதும் சளையாமல் பகைவர்களைத் தாக்கினர். அம்பர்புரி (தேவர்களின் நகரம்) என்ற பெயருக்கு உகந்தாற்போல் தேச பக்தர்கள் தேவர்கள்போலவே யுத்தம் செய்தனர். உலகிலேயே வேறு எந்த இடத்திலும் அத்தகைய விசித்திரமான யுத்தம் நடைபெற்றதில்லை. ஒரு புறம் சகல

சாதனங்களுடனும், ஆயிரக்கணக்கான சிப்பாய்களுடனும் கூடிய பிரம்மாண்டமான படை; மற்ருெரு புறம் புனிதத் தேச பக்தி யால் தூண்டப்பட்ட முப்பத்துநான்கு வீரர்கள்! அப்படி இருந்தும் அவ்வீரர்களின் தாக்குதலால் பகைவர்களில் பலர் மாண்டதுடன் ஏராளமானவர்கள் காயமும் அடைந்தனர்: முப்பத்துநான்கு தேச பக்தர்களில் முப்பத்துமூன்று பேர்கள் தங்கள் இடத்தை விட்டு நகராமல் போர் செய்து வீர சுவர்க்கம் எய்தினர். அச் சமயத்திலும் பாக்கியிருந்த ஒருவர் போரை நிறுத்தவில்லை! அவரும் இறுதி வரையில் போராடி வீர மரணம் அடைந்தார். அதன் பின்புதான் பகைவர்களால் கோட்டைக்குள் பிரவேசிக்க முடிந்தது. இதெல்லாம் ஆங்கில சரித்திராசிரியர் களும் ஒப்புக்கொண்டுள்ள உண்மை. அம்பர்புரியில் அந்த முப்பத்துநான்கு வீரர்கள் போர் புரிந்ததுபோல் டில்லி வீரர் களும் லக்ஷ்மணபுரி வீரர்களுங்கூட யுத்தம் செய்ய முடிய வில்லை.

அம்பர்புரியைக் கைப்பற்றியபின் கூர்க்கப் படைகளும் ஆங்கிலப் படைகளும் தங்களுடைய 'திக்விஜய'த்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு சென்றன. ஜெனரல் பிராங்ஸ், சுல்தான்புரி நாஸிம் முகமது ஹுசேன், தளபதி பந்தா ஹுசேன் முதலியோருடன் யுத்தம் செய்தபின், அயோத்தியை நோக்கி வந்துகொண் டிருந்தான். சமீபத்தில் ஏற்பட்ட தோல்விகளால் இழந்த மதிப்பை மீண்டும் பெறவும், அதுவரையில் அயோத்தி யின் கிழக்குப் பிரதேசத்தில் தங்களுக்கு இருந்த அதிகாரத்தை மீண்டும் நிலைநிறுத்தவும் அவன் உறுதி கொண்டான். ஜெனரல் பிராங்ஸை எதிர்க்க அந்தப் பிரதேசங்களில் தேசீயப் படை எது வுமே இல்லாமற் போயிற்று.

ஆங்கிலேயர்களும் துரோகிகளும் அடங்கிய படைகள் எல் லாம் காலின் படைகளுடன் சேர்ந்துகொள்ளுவதற்காக லக்ஷ்மண புரியை நெருங்கிக்கொண் டிருந்தன. பிராங்ஸ், தௌராவிலுள்ள கோட்டையைக் கைப்பற்றுவதற்காகத் தன் படைகளை அந்தப் பக்கமாகத் திருப்பினான். கோட்டையில் இருந்த தேச பக்தர்கள் தங்களுடைய பீரங்கிகளை இழந்துங்கூட ஆவேசத்துடன் போர் புரிந்ததால், பிராங்ஸ் அன்று தன் தோல்வியை ஒப்புக்கொண்டு போர்க்களத்திலிருந்து திரும்ப நேர்ந்தது.

பிராங்ஸ், தான் ஈடுபட்ட பெரும்பாலான யுத்தங்களிலும் வெற்றி கண்டவன். தௌராவில் அடைந்த தோல்வியால் ஆங் கிலேயர்களுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படுவதற்கு இல்லை. அப் போது ஆங்கில ராணுவத்தில் ஒழுங்கும் பொறுப்பும் கண்டிப் பாக அநுஷ்டிக்கப்பட்டு வந்தன. எனவே, பிராங்ஸ் பல இடங் களிலும் வெற்றி பெற்றிருந்துங்கூட, அந்த ஒரு தோல்வி காரணமாகப் பதவியிலிருந்து விலக்கப்பட்டான். கூடிய சீக்கிரம் நடக்க இருக்கும் முக்கியமான போரில் ஆங்கிலப் படைகளுக்குத் தலைமை வகித்து நடத்த வேண்டிய அதிகாரிகளின் பெயர்கள் அடங்கிய ஜாபிதாவிலிருந்து அவனுடைய பெயர் காலினால் அகற்றப்பட்டது!

அப்போது பல்வேறு திசைகளிலிருந்தும் லக்ஷ்மணபுரியை நோக்கிப் படையெடுத்து வந்த ஆங்கிலப் படைப் பிரிவுகள் ஒன்றுக்கு ஒன்று வெகு சமீபத்தில் வந்துகொண்டிருந்தன. கான்பூரிலிருந்து புறப்பட்ட பெரும் படைகள் மேற்கேயும், பிராங்ஸ், ஜங் பகதூர் இவர்களின் படைகள் கிழக்கேயும் லக்ஷ்மணபுரியை நெருங்கிக்கொண்டிருந்தன. மார்ச் 11-ஆம் தேதி அவையெல்லாம் சந்தித்து, துரதிருஷ்டம் வாய்ந்த லக்ஷ்மணபுரி மக்களைப் படுகொலை செய்ய ஆயத்தமாயின.

இதன் மத்தியில் லக்ஷ்மணபுரித் தேசபக்தர்களும் வாளா இருக்கவில்லை. தாதியாவின் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்காக நவம்பர் மாதம் காலின் கான்பூருக்குச் சென்றதிலிருந்து மார்ச் மாதம் வரையில், லக்ஷ்மணபுரியில் உள்ள ஒவ்வொரு தேச பக்தரும் அந்நியர்களை அழித்து அந்த நகரைக் காப்பாற்றுவதற்காகப் பெருமுயற்சி செய்துவந்தார். லக்ஷ்மணபுரியில் கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்த சுயராஜ்யக் கொடியின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அரசன் முதல் ஆண்டி வரையில் சகலரும் தங்களுடைய உயிரைத் துச்சமாகக் கருதிப் போரில் ஈடுபட்டனர்.

சுதந்தரப் போரில் கலந்துகொண்ட ராஜாக்களிலும் ஜமீன்தார்களிலும் பலர் ஆங்கில ஆட்சியால் மிகுந்த லாபம் அடைந்தவர்களாவர். அப்படியிருந்துங்கூட, நாட்டில் நன்மை அளிக்காத ஒரு முறையால், இறுதியில் தனி நபர்களும் நன்மை அடைய முடியாது என்ற சீரிய கொள்கையால் தூண்டப்பட்டு அவர்கள் சுதந்தரப் போரில் ஈடுபட்டனர். சொந்த நலன்களை உத்தேசித்து, தங்கள் கடமையைக் கைவிடக் கூடாதென்ற உறுதியும், மானம் இழந்து வாழ்வதைக் காட்டிலும் மரணமே சிறந்தது என்ற உணர்ச்சியும், சுதந்தரம் இல்லாத இடத்தில் சுயமதிப்போ ஆண்மையோ இருக்க முடியாது என்ற எண்ணமுமே, அவர்கள் எல்லாரும் சுயராஜ்யப் போரில் கலந்துகொண்டதற்குக் காரணம் ஆகும்.

லக்ஷ்மணபுரி ஜமீன்தார்கள் யாவரும் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாக எழுந்ததற்கு ஆங்கிலேயர்களின் நிலவரி முறை காரணம் அல்ல. தங்கள் நாட்டில் அந்நியர் ஆட்சியை அவர்கள் அறவே வெறுத்ததுதான் காரணம். இந்த உண்மையை அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த லார்டு கானிங் வெளியிட்டிருக்கிறான். ஜேம்ஸ் அவுட்ராம் எழுதிய கடிதத்துக்கு அவன் அனுப்பிய பதிலில் குறிப்பிட்டிருப்பதாவது: 'நமது நிலவரி முறையால் பாதிக்கப்பட்டதாலேயே அயோத்தி ராஜாக்களும் ஜமீன்தார்களும் நமக்கு விரோதமாக எழுந்திருக்கிறார்கள் என்று நீங்கள் கருதுவதுபோல் தோன்றுகிறது. இவ்விஷயத்தை இன்னும் ஆழ்ந்து ஆலோசிக்க வேண்டும் என்பதே என் அபிப்பிராயம் ஆகும். சாந்தா, பிஞ்சா, கோண்டா முதலிய சம்ஸ்தானங்களின் ராஜாக்களுக்கு நம் மீதுள்ள துவேஷத்துக்கு எல்லையே இல்லை. சாந்தா ராஜாவிற்குச் சொந்தமான ஒரு கிராமத்தைக் கூட நாம் எடுத்துக்கொள்ளவில்லை.

அது மாத்திரம் அல்ல; அவர் நமக்குக் கொடுக்க வேண்டிய கப்பத் தொகையையும் குறைத்திருக்கிறோம். பிஞ்சா ராஜா விஷயத்திலும் நாம் பெருந்தன்மையுடனேயே நடந்துகொண்டு வந்துள்ளோம். கோண்டா ராஜாவுக்குச் சொந்தமான நானூறு கிராமங்களில் மூன்றை மாத்திரமே நம் வசப்படுத்திக்கொண்டுள்ளோம். அதற்குப் பிரதியாக நாம் அவருடைய கப்பத் தொகையில் பத்தாயிரம் ரூபாயைக் குறைத்திருக்கிறோம். நம் அரசாங்கம் ஏற்பட்டதன் பயனாகக் கௌபரா ராஜாவைக் காட்டிலும் அதிக லாபம் அடைந்தவர்கள் வேறு எவரும் இல்லை. ஆங்கில அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டவுடன், அவருக்கு நாம் ஆயிரம் கிராமங்களைக் கொடுத்ததுடன், நம் உரிமைகளையும் விட்டுக்கொடுத்து அவருடைய தாயாரையும், அவரது சம்ஸ்தானத்தின் மேற்பார்வையாளராக நியமித்தோம். அப்படி இருந்தும் அவருடைய படைகள் ஆதிமுதல் லக்ஷ்மணபுரியில் நம்மை எதிர்த்துப் போராடி வருகின்றன. நமது ஆட்சியால் தூரா சம்ஸ்தான ராஜாவும் அளவற்ற லாபம் அடைந்தவர்தாம். ஆனால் அவருடைய சிப்பாய்கள்தாம் காப்டன் ஹெர்ஸியைத் தாக்கி அவருடைய மனைவியையும் கைது செய்து, லக்ஷ்மணபுரிச் சிறைக்கு அனுப்பினர். தன் எஜமானனால் துன்புறுத்தப்பட்டு வந்த தாலுக்தார் அஷ்ராப் பக்ஷ் கானுக்கு அவருடைய சொத்து முழுவதற்கும் ஏகபோக பாத்திய உரிமை அளித்தோம். அப்படி இருந்தும் அவருக்கு நம்மீதுள்ள துவேஷம் அற்ப சொற்பம் அல்ல. இதையெல்லாம் கவனிக்கும்போது, ராஜாக்களும் ஜமீன்தார்களும் நம்மை எதிர்த்து வருவதற்கு நமது ஆட்சியால் ஏற்பட்ட சொந்த நஷ்டம் எதுவும் காரணம் அல்ல என்பது சிறிதும் சந்தேகமின்றி வெட்ட வெளிச்சமாகத் தெரிகின்றது.'

சுதந்தரப் போரை ஆரம்பித்து நடத்திய ராஜாக்களும், ஜமீன்தார்களும் உயர்ந்த லட்சியத்தால் தூண்டப்பட்டவர்களேயன்றி, அவர்களின் எழுச்சிக்குச் சுயநலம் காரணம் அல்ல என்பதை ஆங்கில சரித்திராசிரியரான ஹோம்ஸும் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார்: 'நமது ஆட்சியால் எவ்விதக் கேட்டுக்கும் ஆளாகாத ஏராளமான ராஜாக்களும் ஜமீன்தார்களுங்கூட நமது அரசாங்கத்தின்மீது சீற்றம் கொண்டனர். நமது அரசாங்கம் இருப்பது, அவர்கள் ஓர் அடிமை நாட்டினர் என்ற உண்மையை இடைவிடாமல் வலியுறுத்தி வந்ததே அதற்குக் காரணம் ஆகும். அந்நிய அரசாங்கம் ஜனங்களின் விருப்பத்துக்கு விரோதமாகத் திணிக்கப்பட்டதாகையால், கோடிக் கணக்கான ஜனங்களுக்கு அதன்மீது உண்மையான விசுவாசம் இல்லை. எனவே 'சிப்பாய்க் கலக'த்தின் போது இந்திய மக்களின் போக்கைப் பரிசீலனை செய்ய முயல்வோர் ஒரு முக்கிய விஷயத்தை ஞாபகத்தில் இருத்திக்கொள்ள வேண்டியது அவசியமாகும். அதாவது ராஜ விசுவாசமும் தேச பக்தியும் பிரிக்க முடியாதவை. தேச பக்தி உள்ளவர்களிடத்தில்தான் விசுவாச உணர்ச்சி இருக்க முடியும். எனவே, நம்மைப் போன்ற ஓர் அந்நிய அரசாங்கத்தின்மீது அவர்களுக்கு விசுவாசம் ஏற்படுவது என்பது இயற்கைக்கு முரணாகும். ஆங்கி

லேயர்களின் ஆட்சியால் தங்களுக்கு மிகுந்த லாபம் உண்டென்று கருதியவர்களில்கூடச் சிலரே நமக்கு உதவி செய்தனர். மற்றும் சிலர் நாம் எக்கேடு கெட்டால் என்ன என்று வாளா இருந்து விட்டனர். எனினும், நம்மை வீழ்த்த முடியும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருந்திருக்குமாயின், அவர்கள் எல்லாரும் நமக்கு விரோதமாக வாள்களை உருவியிருப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை!'

அந்நிய ஆதிக்கம் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்தி லேயே ரத்தம் கொதித்த தேச பக்தர்களுள், சுயராஜ்யக் கொடியை நாட்டில் கம்பீரமாகப் பறக்க விடுவதற்காகத் தங்க ளுடைய அனைத்தையும் தியாகம் செய்துவிட்டுப் போர்க் களத்தில் குதித்த ராஜாக்கள், மகா ராஜாக்கள், ஜமீன்தார்கள், தாலுக்தார்களுள் ஒரு வீரரை நாம் எக்காலத்திலும் மறப்பதற் கில்லை. லக்ஷ்மணபுரி சிம்மாசனத்தைப் பாதுகாப்பதற்காக முதல் முதலாகப் போரில் குதித்தவர் அவர்தாம். ராணுவ, மந்திராலோசனை சபையிலும் மிகத் திறமை வாய்ந்தவர் அவர் தாம். அந்த மேதாவி நான்கு மாத காலமாகப் போர்க்களத் துக்கும் மந்திராலோசனை சபைக்குமாக நடமாடிக்கொண் டிருந்தார். அந்த வீரர்தாம் பைஜாபாத் தேச பக்தரான அகமது ஷா மௌல்வி ஆவார்!

அவ் வீரர் புரட்சிப் பந்தத்தைக் கையில் ஏந்திச் சென்று, நாடெங்கும் சுதந்தரத் தீயை மூட்டினார். அப்போதுதான் ஆங் கில அதிகாரிகள் அவரைக் கைது செய்து, தூக்கில் இடும்படி உத்தரவிட்டனர். தூக்கில் இடுமுன் அவரைப் பைஜாபாத் சிறை யில் வைத்திருந்தார்கள். ஆனால் அங்கே ஏற்பட்ட புரட்சிச் சண்டமாருதத்தின்போது சிறை தகர்க்கப்பட்டு அவர் விடுவிக் கப்பட்டார். ஆங்கிலேயர்களால் சிறைப்பட்ட சில தினங்களில் அவர் சுயராஜ்ய சிம்மாசனத்தில் இடம் பெற்றார். போர்க் களத்தில் அவர், வீரர்களுக்கெல்லாம் வீரராகத் திகழ்ந்தது போலவே, அரசியலிலும் மகா நிபுணராக இருந்து வந்தார். மந்திராலோசனை சபையில் அவர் தம் நாவன்மையால் எல்லா ரையும் வசீகரித்தது போலவே, போர்க்களத்திலும் அவர் காட் டிய தைரியத்தால் நண்பர்கள், விரோதிகள் எல்லாருடைய புகழுரைக்கும் பாத்திரரானார்.

தாதியாவை எதிர்த்து யுத்தம் செய்வதற்காகக் காலின் சென்றபோது, அவுட்ராமை நாலாயிரம் துருப்புகளுடன் ஆலம் பாக்கில் விட்டுச் சென்றான். இவ்வாறு பகைவர்களின் பலம் குன்றியதைத் தமக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக்கொள் ளுவதற்காக மௌல்வி இராப் பகலாக வேலை செய்து வந்தார். கான்பூருக்கு அருகில் நானா கைக்கொண்ட தந்திர முறைகள் காரணமாக, அதற்கு முன் பல தடவைகளிலும் லக்ஷ்மணபுரி, பகைவர்களிடம் சிக்காமல் காப்பாற்றப்பட்டது.

தாதியாவின் அபாரமான திறமையால் கிடைத்த மற்றொரு சந்தர்ப்பத்தையும் இழந்துவிடாமல் இருக்க மௌல்வி பெரு முயற்சி செய்தார். லக்ஷ்மணபுரி அரண்மனையில் அயோத்தி

பேகத்திற்குத்தான் சர்வாதிகாரம் உண்டு எனினும், புரட்சிக் காரர்கள், ராஜாக்கள், மகாராஜாக்கள் முதலியோரை ஒன்று படுத்தும் விஷயத்தில் அவருடைய முயற்சிகள் வெற்றி பெற வில்லை. அவர்களிடையே கட்டுப்பாடும் ஒழுங்கும் அக்கறை யும் இல்லாததால், குறைந்த தொகையினரான ஆங்கிலப்படை களை அழிப்பதற்குற்ற பல சந்தர்ப்பங்களையும் இழந்துவிட்டனர். ஆங்கிலப் படைகளின் பலம் குன்றியிருந்தபோது அவர்கள் உறுதி யுடனும் ஒற்றுமையுடனும் தாக்கியிருப்பார்களாயின் அது விரை வில் சீர்குலைந்து போயிருக்கும்.

டில்லி வீழ்ச்சியுற்றது. கான்பூர் வீழ்ச்சியுற்றது. பக்தபுரிக் கும் அதே கதி நேர்ந்தது. ஆங்கிலேயர்களிடம் தோல்வி யடைந்த ஆயிரக் கணக்கான புரட்சிக்காரர்கள் சுற்றுவட்டா ரங்களிலிருந்து லக்ஷ்மணபுரிக்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் அயோத்திக்கு உதவி புரிவதை விடுத்து, அதிகாரிகளுக்குக் கீழ்ப் படியாமல் தொல்லை கொடுக்க ஆரம்பித்தனர். அந்த நிலைமையில் ஏற்கனவே பல வெற்றிகளும் பெற்று, புதிதாக எண்ணிக்கை யற்ற துருப்புகளுடன் உதவிக்கு வந்துள்ள ஆங்கிலப் படையின் முன்னிலையில் எதுவும் நிற்க முடியாது என்றே தோன்றியது.

இவ்வாறு இருள் சூழ்ந்திருந்த சமயத்தில், அகமது ஷா மௌல்வியின் முயற்சிகள் மிகுந்த நம்பிக்கையை அளித்தன. அவரது நாவன்மையும், கம்பீரமான தோற்றமும் பலருடைய இருதயத்திலும் தேச பக்தியை உண்டுபண்ணின. எல்லாரும் ஏகோபித்து உறுதியுடன் தாக்கும் பட்சத்தில், அந்த நிலைமை யிலுங்கூட ஆங்கிலேயர்களைத் தோற்கடிக்க முடியுமென்று அவர் திட்டமாகக் கூறினார். அவ் விஷயமாக அவர் லக்ஷ்மணபுரி தர்பாரிலும் மிகுந்த நம்பிக்கை உண்டாகும்படி செய்ததுடன், குழப்பமாக இருந்த படைகளிடையே சிறிது ஒழுங்கு நிலவும் படியும் செய்தார்.

அப்போது அவர் பல கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டி யிருந்தது. லக்ஷ்மணபுரி தர்பாரில் அவருடைய செல்வாக்கையும் திறமையையும் கண்டு பொறாமை கொண்ட சில மூடர்கள் அவர்மீது ஆதாரமற்ற கோள்கள் சொல்லி, அவர் கைதியாகும் படி செய்துவிட்டனர். எனினும், சிப்பாய்களிடம் பேகத்தைவிட மௌல்விக்கு அதிகச் செல்வாக்கு இருந்ததாலும், மற்றும் டில்லி யிலிருந்து வந்திருந்த துருப்புகள் அவரிடம் பூரண நம்பிக்கை வைத்திருந்ததாலும், அவர்களுடைய வற்புறுத்தல் காரணமாகப் பேகம் இறுதியில் மௌல்வியைச் சிறையிலிருந்து விடுதலை செய் தார். விடுதலையானபின் படைநிலைமைபற்றி அவருடைய அபிப் பிராயத்தைக் கேட்டபோது அவர் கூறியதாவது: 'சுப வேளை தவறிவிட்டது. இப்போது எல்லாம் தாறுமாறாகக் கிடக்கின் றன. இனி வெற்றி பெறுவது கஷ்டமெனினும், நமது கடமை யைச் செய்து தீர வேண்டும் அல்லவா? அதற்காகவாவது நாம் போராடியே தீர வேண்டும்.'

சிறையிலிருந்து வெளிவந்த பின்னரும், லக்ஷ்மணபுரி மக் களிடையே அவருக்கு இருந்த செல்வாக்கு, சிறிதும் குறைய

வில்லை. துருப்புகளிடையே நிலவிய சில்லறைச் சச்சரவுகளை அவர் தீர்த்து, அவர்கள் மனத்தில் ஒரு புதிய உத்வேகத்தையும், உற்சாகத்தையும், தங்களை ஆக்கிரமிக்க முயன்று வரும் பகைவர்களை அழிக்க வாள்களை உருவ வேண்டும் என்ற ஆர்வத்தையும் உண்டு பண்ணினார். மற்றும் அந்தப் பெரியார் அத்துடன் திருப்தியடையாமல், துருப்புகளுக்குத் தாமே தலைமை வகித்துப் பல யுத்தங்களையும் நேரில் நடத்தினார். தேச பக்தர்கள் ஆலம்பாக்கைத் தாக்கியபோதெல்லாம், மௌல்வி போர்முனையின் முன்னணியிலேயே நின்று போர் புரிந்தார்.

ஆங்கிலப் படையை ஏமாற்றுவதற்காக அவர் டிசம்பர் 22-ஆம் தேதி ஒரு யுக்தி செய்தார். ஆங்கிலேயர்களுக்குத் தெரியாமல் தம் துருப்புகளுடன் கான்பூர் செல்லும் சாலையை நோக்கிச் சென்றார். தாம் ஆங்கிலேயர்களுக்குப் பின்புறமாகச் சென்றதும், ஆலம்பாக்கில் உள்ளவர்கள் முன்புறமாகத் தாக்க வேண்டும் என்பதே அவருடைய கட்டளை. அவர் வகுத்த திட்டம் மிகவும் அற்புதமானதால், அது நிச்சயமாக வெற்றி பெற்றிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

ஆனால் ஆங்கிலப் படையின் முன்புறமாக இருந்த மற்றொரு பிரிவின் தலைவரால் தம் துருப்புகளிடையே ஒழுங்கை நிலைநிறுத்த முடியவில்லை. ஒவ்வொருவரும் தம்மை ஒரு ராணுவ நிபுணர் என்று எண்ணிக்கொண்டு தமது விருப்பப்படி நடந்துகொள்ள முற்பட்டு விட்டனர். அதன் பயன் என்னவெனில்,, பகைவர்கள் தாக்க ஆரம்பிக்கு முன்னரே அவர்கள் எல்லாரும் புறமுதுகு காட்டத் தொடங்கிவிட்டனர்.

மௌல்வி, தாம் சம்பந்தப்பட்ட வரையில் தம் திட்டத்தை அற்புதமாக நிறைவேற்றினார் எனினும், ஒழுங்கின்மையாலும் கோழைத்தனத்தினாலும் அடங்காப் பிடாரிகள் தோல்வியுற்றனர்.

ஆயினும் மௌல்வி தம் முயற்சிகளைக் கைவிடவில்லை. கான்பூரிலிருந்து ஆங்கிலப் படையொன்று வந்துகொண்டிருப்பதாயும், ஆலம்பாக்கிலுள்ள ஆங்கிலத் துருப்புகளுக்கு உதவியாக அது சாதனங்களெல்லாம் கொண்டு வருவதாயும் ஜனவரி 15-ஆம் தேதி தேச பக்தர்களுக்கு ஒரு செய்தி கிடைத்தது. அந்தச் சாதனங்களை ஆலம்பாக்கிற்கு வரவிடாமல் எவ்விதம் தடுப்பது என்பதுபற்றி அவர்களிடையே விவாதம் ஆரம்பமாயிற்று. அவர்களுக்குள் வெறும் விவாதந்தான் நடந்ததேயன்றி, அதற்குற்ற திட்டம் எதுவும் உருவாகவில்லை. அவர்களின் கோழைத்தனத்தைக் கண்டு வெறுப்படைந்த மௌல்வி, ஆங்கிலப் படையின் சாதனங்களை யெல்லாம் தாம் கைப்பற்றிய பின், அதைப் பிளந்துகொண்டு லக்ஷ்மணபுரிக்குள் பிரவேசிப்பதாக எல்லார் முன்னிலையிலும் சபதம் செய்தார். பிறகு தம் படைகளுடன் கான்பூரை நோக்கிப் புறப்பட்டார்.

அவர் பகைவர்களுக்குத் தெரியாமல் ரகசியமாகவே புறப்பட்டார் எனினும், அவர் வரும் செய்தியை இந்திய ஒற்றர்களின்

மூலம் அவுட்ராம் தெரிந்துகொண்டான். உடனே மௌல்வியின் படைகளை எதிர்ப்பதற்காக அவன் ஒரு கோஷ்டியை அனுப்பினன். இரு படைகளுக்கும் யுத்தம் ஆரம்பமாயிற்று. மௌல்வி, தம் சிப்பாய்களையெல்லாம் உக்கிரமாகப் போராடும் படி உற்சாகம் ஊட்டுவதற்காக, தாமே முன்னணியில் நின்று ஆக்கிரோஷத்துடன் யுத்தம் செய்தார். அப்போது அவருடைய கையில் ஒரு தோட்டா பாய்ந்து கடுமையான காயம் ஏற்பட்டதால், அவர் கீழே விழுந்தார்.

அவரைக் கைது செய்ய ஆங்கிலேயர்கள் வெகு காலமாகத் துடித்து வருகிறார்கள் என்பது தேச பக்தர்களுக்குத் தெரியும். எனவே, உடனே அவர்கள் மௌல்வியை ஆங்கிலேயர்களின் கையில் சிக்க விடாமல் ஒரு டோலியில் வைத்து, வெகு வேகமாக லக்ஷ்மணபுரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். மௌல்வி, யுத்தத்தில் காயமுற்றார் என்பதைக் கேட்டதும், எல்லாரும் அவருடைய நிலைமையைக் குறித்து மிகவும் கவலை அடைந்தனர். அவர்மீது தங்களுக்குள்ள அன்பையும் மரியாதையையும் தெரிவிப்பதற்குற்ற சிறந்த வழி, அவர் ஆரம்பித்துள்ள வேலையைப் பூர்த்தி செய்வதுதான் என்று பலரும் உறுதி கொண்டனர்.

மிகவும் தைரியசாலியான வைதேஹி ஹநுமான் என்ற ஒரு பிராம்மணர் சிறிதும் தாமதமின்றி ஜனவரி 17-ஆம் தேதி படைகளுடன் புறப்பட்டுச் சென்று ஆங்கிலத் துருப்புகளை ஆவேசத்துடன் எதிர்த்துத் தாக்கினார். மிகவும் தீர புருஷரான இவர், காலை பத்து மணி முதல் மாலை ஆறு மணி வரையில் முன்னணியில் நின்று, யுத்தம் செய்து, பல பகைவர்களையும் வீழ்த்தினார் எனினும், இறுதியில் படுகாயமுற்று, பகைவர்களால் கைது செய்யப்பட்டார். பின்னால் தேசீயப் படைகள் சீர்குலைந்து சின்னபின்னமாயின. இத்தகைய தோல்விகளால் புரட்சி இயக்கம் உருக் குலையத் தொடங்கியது.

இவ்விதக் குழப்பமான நிலைமையிலும் உறுதியும் திறமையும் துணிச்சலும் வாய்ந்த பேகம் நிர்வாகத்தை ஒழுங்காக நடத்தி வந்ததிலிருந்து அவருடைய பெருமை வெளியாகின்றது. அவருடைய நிர்வாகத் திறமையை ஆங்கில சரித்திராசிரியர்களும் வெகுவாகப் புகழ்ந்திருக்கிறார்கள்.

தேசீயப் படைகள் மேற்கூறியவாறு தோல்விமேல் தோல்வி அடைந்து வருகையில், பேகத்தின் அரசாங்க வருமான இலாகா முதல் மந்திரியான ராஜா பாலகிருஷ்ண சிங் காலமானார். இத்தனை துரதிருஷ்டச் சம்பவங்களுக்கு இடையிலும், அந்நியர் ஆட்சியைக் காட்டிலும் அதை ஒழிக்கும் முயற்சியில் மரணம் அடைவது ஆயிரம் மடங்கு சிறந்தது என்ற புனித எண்ணத்துடன் போர்க்களத்தில் குதித்த தேச பக்தர்களுக்குக் குறைவில்லை. அவர்களுக்கெல்லாம் திலகம் போன்றவரும், வீரமே உருவெடுத்து வந்தவருமான மௌல்வி அகமது ஷா, போர்க்களத்தில் தமக்கு ஏற்பட்ட காயம் பூரணமாக ஆறுவதற்குள் - பிப்ரவரி மாதம் 15-ஆம் தேதி - மீண்டும் போர்முனைக்கு வந்துவிட்டார்!

கான்பூரிலிருந்து காலின் திரும்பி வருமுன் அவுட்ராமை ஒழித்துவிட வேண்டும் என்பது அவருடைய கருத்தாகும். ஆனால் துரதிருஷ்டவசமாக அவருடைய சிப்பாய்களின் கோழைத்தனம் நாளுக்கு நாள் அதிகமாக வளர்ந்தது. அதன் விளைவாக மௌல்வியின் முயற்சி வெற்றி பெறவில்லை. அன்றும் தேசியப் படைகள் தோல்வியடைந்தன. அந்த நிலையிலுங்கூட மௌல்வி தைரியத்தை இழக்காமல் வெற்றியையும் தோல்வியையும் ஒன்றாகவே கருதினார். உயர்ந்த லட்சியத்துக்காகவும் தாயின் கௌரவத்துக்காகவும் போராடுவது தம் இன்றியமையாத கடமை என்று நினைத்த அவர், தோல்விகள் காரணமாகச் சோர்வடையாததிலோ, நம்பிக்கை இழக்காததிலோ ஆச்சரியம் எதுவும் இல்லை. வெற்றியாயினும் தோல்வியாயினும் இறுதி வரையில் போராடித் தீருவது என்று அவர் உறுதி கொண்டார்.

கோழைகளைத் தவிர மீதியுள்ளவர்கள் தங்களுடைய சகாக்களின் விபரீதமான போக்கைக் கண்டு சோர்வடைந்து விடவில்லை. வெற்றியாயினும் தோல்வியாயினும், தங்களுக்கு உதவி கிடைத்தாலும் கிடைக்காவிடினும் இறுதிவரையில் போராடுவதே தங்கள் கடமையென்று நினைத்து, மிகுந்த தைரியத்துடன் யுத்தம் செய்தார்கள். வெகு சிலரின் இணையற்ற பலத்தைக் கண்டே ஆங்கிலேயர்கள் திகைத்துப் போயினர். ஆங்கிலேயர்களை ஆலம்பாக்கிலிருந்து எட்டே நாட்களில் விரட்டுவதாக 60-ஆவது படைப் பிரிவின் சுபேதார் சபதம் செய்து, அதை நிறைவேற்றுவதற்காகப் போர்க்களத்தை விட்டு அகலாமல் மிகுந்த தைரியத்துடன் போர் புரிந்து வந்தார். ஒரு நாள் பேகமே தம் படைகளுடன் நேரில் போர்க்களத்துக்கு வந்தார். எனினும், துரதிருஷ்டம் வாய்ந்த லக்ஷ்மணபுரி வெற்றி பெற முடியவில்லை. சிறந்த வீரர்களின் பெரு முயற்சிகளும் கோழைகளின் விபரீதமான போக்கால் வீணாயின.

இறுதியாகக் காலின் ஆலம்பாக்கிற்கு வந்து சேர்ந்தான். லக்ஷ்மணபுரியைக் கைப்பற்ற ஆங்கிலேயர்கள் எல்லாரும் பெரு முயற்சி செய்தனர். அவர்கள் அந்த நகரைப் பல தடவைகள் தாக்கியும், அது சுயராஜ்யக் கொடியின் கீழே கம்பீரமாகவும் பெருமையுடனும் விளங்கி வந்தது. ஆங்கிலேயர்களும் அதைக் கைப்பற்றாமல் அவ்விடத்தை விட்டு நகருவதில்லை என்று உறுதி கொண்டு தங்களுடைய முழுப் பலத்தையும் உபயோகித்துப் போர் புரிந்தனர். தேச பக்தர்களும் சிறிதும் சளைக்காமல் அவர்களை எதிர்த்து வந்தார்கள். ஒவ்வொரு கிராமத்திலிருந்தும், ஒவ்வொரு வயலிலிருந்தும் வந்த ஏழை விவசாயிகளான தேச பக்தர்கள், ஒன்று பறங்கியர்களை நாட்டிலிருந்து விரட்டுவது, இன்றேல் அந்த முயற்சியில் மாய்வது என்ற வீர உறுதியுடன் போர் புரிந்தார்கள்.

'பறங்கியர்களை விரட்டும் இறுதிப் போரில் அதோகதி அடைவதற்காகச் சகல இடங்களிலிருந்தும் ஜனங்கள் ஆயுதங்களுடன் லக்ஷ்மணபுரிக்குச் சரமாரியாக வந்துகொண் டிருந்தனர்' என்று சார்லஸ் பால் குறிப்பிட்டிருக்கிறார்! அங்கே வந்த புரட்சிக்காரர்

களின் தொகை இரண்டு லட்சமாகும் என்று காலின் குறிப்பிட்டிருக்கிறான். பறங்கியர்களை எதிர்க்கும் இறுதி யுத்தத்தில் கலந்துகொள்ளுவதற்காகப் பதினாயிரக் கணக்கானவர்கள் லக்ஷ்மணபுரிக்கு வந்தனர் என்று ஆங்கில சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர்.

அது எவ்விதமாயினும் அந்நகர் அந்நியர்களிடம் சிக்காமல் பாதுகாப்பதற்காக முப்பதாயிரம் சிப்பாய்களும், எண்பதாயிரம் தொண்டர்களும் கூடினர் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. நகரிலுள்ள தெருக்களிலும் சந்துகளிலும் அரண்களும் அடைப்புகளும் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு வீடும் ஒவ்வொரு கோட்டையாக விளங்கியது. ஒவ்வொரு வீட்டின் சுவர்களிலும் துப்பாக்கியால் சுடுவதற்காகத் துவாரங்கள் இடப்பட்டன. ஒவ்வொரு சுவருக்கு அருகிலும் பகைவர்களைத் தாக்குவதற்காகத் தேசீய வீரர்கள் ஆயத்தமாக நின்றனர். நகருக்குக் கிழக்கே கௌதமி நதியிலிருந்து கால்வாய்கள் வெட்டப்பட்டன. அவற்றின் கரைகளில் பீரங்கிகள் வைக்கப்பட்டன. தில்குஷ் பாக்கிலிருந்து கெய்ஸர் பாக் வரையில் மதில்கள் எழுப்பப்பட்டன. அரண்மனைக்குப் பாதுகாப்பாக ஏராளமான சிப்பாய்கள் நின்றதுடன், அங்கும் பீரங்கிகள் வைக்கப்பட்டன.

நகரின் வடபுறம் தவிர மற்ற எல்லா இடங்களையும் தேசபக்தர்கள் வெகுவாகப் பலப்படுத்தி விட்டார்கள். வடபுறத்தில் ஓடும் கௌதமி நதி, தங்களுக்குச் சிறந்த பாதுகாப்பாகும் என்று கருதியே அவர்கள் அந்தப் பக்கத்தைப் பலப்படுத்தவில்லை. அதற்கு முன் ஹாவ்லக், அவுட்ராம், காலின் இவர்களில் எவரும் வடபுறமாக லக்ஷ்மணபுரியைத் தாக்காததால் இம் முறையும் அவர்கள் அந்தப் பக்கமாக வந்து தாக்க முடியாது என்றே தேச பக்தர்கள் கருதினர். ஆனால் அவுட்ராம் நகரின் வடபுறம் பலவீனமாக இருப்பதை அறிந்து, அதை முற்றும் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்தான். சங்கிலியில் ஒரு வளையம் பலவீனமாக இருந்தாலும் எவ்விதம் அந்தச் சங்கிலியே பயனற்றதாகிவிடுமோ, அதுபோலவே வட புறத்தில் தேச பக்தர்கள் தற்காப்பு முறை எதையும் கைக்கொள்ளாதது, அவர்களுடைய மற்றப் பாதுகாப்பு ஏற்பாடுகளை எல்லாம் வீணாக்கிவிட்டது.

மார்ச் மாதம் 6-ஆம் தேதி ஆங்கிலேயர்கள் வடபுறமாக நகரைத் தாக்க முற்பட்டனர். அதே சமயம் கிழக்கேயும் ஆங்கிலேயர்களின் தாக்குதல் ஆரம்பமாயிற்று. அப்போது காலின் தலைமையில் முப்பதாயிரம் துருப்புகள் இருந்தன. ஒருவர்கூட லக்ஷ்மணபுரியிலிருந்து தப்பிச் செல்ல முடியாமல் இருக்குமாறு காலின் தன் துருப்புகளைப் பிரித்து அணிவகுத்திருந்தான். தாங்கள் எதிர்பாராத திசையிலிருந்து ஆங்கிலப் படை தாக்கியதால் தேச பக்தர்களின் திட்டங்கள் எல்லாம் சீர்குலைந்தன.

அந்த நிலைமையிலுங்கூட அவர்கள் சோர்வடைந்து விடாமல் மார்ச் மாதம் 6-ஆம் தேதியிலிருந்து 15-ஆம் தேதி வரையில்

இராப்பகலாகப் போர் புரிந்தனர். துரதிருஷ்டம் வாய்ந்த லக்ஷ்மணபுரியில் ஒரே வருஷத்துக்குள் மூன்ருவது தடவையாக ரத்த ஆறு ஓடியது. ஆங்கிலேயர்கள் ஒவ்வொரு கோட்டையாகக் கைப்பற்றிக்கொண்டு சென்றனர். தில்குஷ் பாக், காதம் ரசூல், ஷா நஜாப், பேகம் கோடீ முதலிய பல இடங்களும் வீழ்ச்சியுற்றன. 10-ஆம் தேதியன்று ஹாட்ஸன் கொல்லப்பட்டான். நிரபராதிகளும் நிராயுதபாணிகளும் சரண்புகுந்தவர்களுமான டில்லி இளவரசர்களைப் படுகொலை செய்தவன் ஹாட்ஸன்தான் என்பது ஞாபகம் இருக்கலாம். அதற்காக அந்தக் கொடிய அரக்கன் மீது லக்ஷ்மணபுரி வஞ்சம் தீர்த்தது.

14-ஆம் தேதி ஆங்கிலப் படை லக்ஷ்மணபுரி அரண்மனைக்குள் பிரவேசித்தது. கெய்ஸர் பாக்கில் தாங்கள் அடைந்த அற்புத வெற்றி காரணமாகக் காலின் ஆனந்தம் அடைந்து வருகையில், அவுட்ராமிடமிருந்து கலக்கத்தைக் கொடுக்கக்கூடிய ஒரு செய்தி வந்தது. ஏனெனில், லக்ஷ்மணபுரி வீழ்ச்சி அடைந்து விட்டதெனினும், நகரில் இருந்த ஆயிரக்கணக்கான தேச பக்தர்கள் சரண் புகவில்லை; போராட்டத்தைக் கைவிடவும் இல்லை. தங்களைச் சூழ்ந்துகொண்டு கைதுசெய்ய உத்தேசித்த துருப்புகளைப் பிளந்துகொண்டு அவர்கள் மன்னருடனும் பேகத்துடனும் வெளிச் சென்றுவிட்டனர். அதனுல் காலின் அடைந்த ஏமாற்றம் கொஞ்சம் அன்று.

லக்ஷ்மணபுரியில் நான்கு புறங்களிலும் உதிர வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. வெற்றிக் கோலம் பூண்ட ஆங்கிலப் படைகள் அரண்மனையைக் கொள்ளை இட்டுக்கொண்டிருந்தன. மன்னரும் அவருடைய தாயான ராணியும் நகரை விட்டுச் சென்றுவிட்டார்கள். அந்த நிலைமையில் மௌல்வி அகமது ஷா என்ன செய்துகொண்டிருந்தார் என்று வாசகர்கள் கேட்கலாம். வீரர்களுக்கெல்லாம் வீரரான அவருக்கு மரியாதையாக நாம் தலை வணங்குவோமாக. வீரம் செறிந்த அந்தப் பெரியார் வெகு சில தீரர்களுடன் மீண்டும் நகருக்குள் பிரவேசித்தார். லக்ஷ்மணபுரி வீழ்ச்சி உறும் என்ற எண்ணத்தையே அவரால் சகிக்க முடியவில்லை. ஆங்கிலேயர்களின் துப்பாக்கி ஈட்டிகளால் அந்த நகரில் உதிர வெள்ளம் ஓடுவதையும் அவரால் சகிக்க முடியவில்லை.

லக்ஷ்மணபுரி வீழ்ச்சியுற்ருலும் அதன் புகழ் வீழ்ச்சியுறக்கூடாது என்பதுதான் அவருடைய உறுதியாகும். அதன் கீர்த்தியை நிலைநிறுத்தவே அவர் மீண்டும் நகருக்குள் பிரவேசித்தார். தெருக்களில் வெள்ளையர்கள் தங்களுடைய வெற்றியைக் குறித்துச் சிரித்துக்கொண்டும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கையில், மௌல்வியின் தலைமையில் சில வீரர்கள் நகருக்குள் பாய்ந்து வந்தனர். லக்ஷ்மணபுரிக்கு இழைக்கப்பட்ட அவமதிப்பால் மனம் துடித்துக்கொண்டிருந்த மௌல்வி, தம் உயிரைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், நகரைச் சேர்ந்த ஒரு பகுதியான ஷாஹத்கஞ்ஜ் என்ற இடத்திற்கு வெகு சிலரான தம் சகாக்களுடன் வந்து மீண்டும் போரை ஆரம்பித்தார். இறுதி வரையில் யுத்தம் செய்த பின்னரே லக்ஷ்மணபுரி வீழ்ச்சியுற்றது

என்று சரித்திரம் குறிப்பிட வேண்டும் என்பதற்காகவே அவர் மீண்டும் போரைத் தொடங்கினார்.

பகைவர்கள் ரோம் நகருக்குள் பிரவேசித்து, அதை முற்றும் தங்கள் வசப்படுத்திக்கொண்ட பின்னருங்கூட, மாஜினி தனிமையில் அதைக் கைவிடாமல் பற்றிக்கொண்டிருந்தது போலவே, மௌல்வியும் லக்ஷ்மணபுரியைக் கைவிட விரும்பவில்லை! தேச பக்தர்கள் எல்லாரும் நகரை விட்டுச் சென்றுவிட்டனர். ஆயிரக் கணக்கான ஆங்கிலத் துருப்புகள் நகருக்குள் பிரவேசித்துவிட்டன. அந்த நிலைமையிலும் லக்ஷ்மணபுரியைப் பாதுகாக்க மௌல்வி உறுதி கொண்டார். அதைப் பாதுகாக்க முடியாவிடினும், அதன் நற்பெயரையாவது காப்பாற்ற வேண்டும் என்பதே அவருடைய சங்கல்பம் ஆகும். இறுதியாக ஒரே ஒரு வீரர் பாக்கியிருப்பினும், அவர் நகரைப் பாதுகாப்பதற்காகப் போரைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்பதே அவர் கொள்கை. லக்ஷ்மணபுரியைப் பறங்கிப் பாம்பு விழுங்கிவிட்டது எனினும், அதன் வாயில் கையை விட்டு அந்த நகரை மீண்டும் விடுவிக்கத் துணிந்தார் அவ்வீரர்!

அதைப்பற்றி மாலிஸன் எழுதுவதாவது: 'நகர் முழுவதும் ஆங்கிலேயர்களின் வசமாகியுங்கூட அவர்கள் நிம்மதியாக இருக்க முடியவில்லை. புரட்சிக்காரர்களுள் மிகப் பிடிவாதக்காரரான மௌல்வி, லக்ஷ்மணபுரிக்கு மீண்டும் திரும்பி வந்தார். அந்த நகரின் இருதயம் போன்ற ஷாஹத்கஞ்ஜை அவர் ஆக்கிரமித்துக்கொண்டு, கோட்டை போன்ற ஒரு கட்டிடத்திலிருந்து ஆங்கிலேயர்களைப் பீரங்கிகளால் தாக்க முற்பட்டார். அவரை அங்கிருந்து விரட்டுவதற்காக 21-ஆம் தேதியன்று ஒரு படைப் பிரிவு அனுப்பப்பட்டது. ஆரம்பத்தில் பேகம் கோடீயைக் கைப்பற்றிய படை அதுதான். அதில் ஆங்கிலச் சிப்பாய்களும் பாஞ்சாலச் சிப்பாய்களும் இருந்தனர். அங்கிருந்த புரட்சிக்காரர்களைப்போல் அவ்வளவு பிடிவாதத்துடன் அதற்கு முன் எவருமே போர் செய்ததில்லை. இணையற்ற துணிச்சலுடன் அவர்கள் போர் செய்தனர். அவர்களால் நம் பக்கத்தில் பலர் மாண்டதுடன், ஏராளமானவர்கள் காயமடைந்த பிறகுதான் அவர்களை விரட்ட முடிந்தது.'

லக்ஷ்மணபுரியைப் பாதுகாப்பதற்காக நடந்த கடைசிப் போர் அதுதான். எந்தச் சுதந்தரக் கொடிக்காகப் போராடினார்களோ அது அந்த நகரில் இல்லை என்பது நிச்சயமாகத் தெரிந்த பின்புதான், அவர்கள் நகரை விட்டு வெளிச்சென்று, ஹிந்துஸ்தானத்தின் மற்றப் பாகங்களிலிருந்து அந்தக் கொடியைப் பாதுகாக்க முற்பட்டனர். அன்றைய யுத்தத்தில் மௌல்வியைக் கைது செய்ய ஆங்கிலேயர்கள் எவ்வளவோ முயன்றும் அது வெற்றி பெறவில்லை.

லக்ஷ்மணபுரி முற்றும் பகைவர் வசமாகியது. உடனே ஆங்கிலேயர்கள் வழக்கம்போல் நகர ஜனங்களின்மீது வஞ்சம் தீர்க்க முற்பட்டனர். அதை விவரித்து எழுதுவதாயின் பேனாவை ரத்தத்தில் தோய்த்துக்கொண்டுதான் எழுத வேண்

டும். அரண்மனையும், மற்ற இடங்களும் எவ்வாறு கொள்ளை யிடப்பட்டன? ஜனங்கள் எவ்வாறு கூட்டங் கூட்டமாகப் படு கொலை செய்யப்பட்டார்கள்? சவங்கள்கூட எவ்வாறு அவமதிக் கப்பட்டன? ஆங்கிலேயர்கள் வெறி கொண்டு பல இந்தியர் களை எவ்விதம் சித்திரவதை செய்தார்கள்? இவையெல்லாம் மிக மிகத் துக்ககரமான வரலாறாகும். அப்போது நிகழ்ந்த அட்டூ ழியங்களை ரஸ்ஸெல் போன்ற ஆங்கிலேயர்கள்கூட மறைக்க வில்லை எனில், உண்மையில் இன்னும் எத்தகைய அட்டூழியங் கள் நடைபெற்றிருக்க வேண்டும் என்பதை ஒருவாறு கற்பனை செய்துகொள்ளலாம். ஆனால் அதே போன்ற சந்தர்ப்பங்களில் தேச பக்தர்கள் எவ்வளவு இரக்கத்துடன் நடந்துகொண்டனர்? ஆங்கிலேயர்களின் வஞ்சத்துக்கும் தேச பக்தர்களின் வஞ்சத் துக்கும் உள்ள வேற்றுமையை இரு ஆங்கில சரித்திராசி ரியர்களின் வாக்கு மூலங்களிலிருந்தே அறிந்துகொள்ளலாம்.

சார்லஸ் பால் எழுதுவது: 'லக்ஷ்மணபுரிச் சிறையில் பல ஆங்கிலப் பெண்களும் அதிகாரிகளும் இருந்தனர். அவர்கள் ஆறு மாத காலம் சிறையில் இருந்தபோது அவர்களுடைய உயி ருக்கு எவ்வித ஆபத்தும் நேரவில்லை. ஆனால் முதல் தாக்கு தலுக்குப் பின் ஆங்கிலேயர்கள் நகருக்குள் பிரவேசித்தபோது, நிரபராதிகள் உட்படச் சகலரையும் படுகொலை செய்துகொண்டு செல்லவே, புரட்சிக்காரர்கள் ஆத்திரமடைந்து அரண்மனைக்குச் சென்று, அதற்குப் பிரதியாக ஆங்கிலக் கைதிகள்மீது வஞ்சம் தீர்க்க உத்தரவு கொடுக்க வேண்டும் என்று பேகத்தை வேண்டி னர். அதற்கிணங்க லெப்டினன்ட் ஓர், மௌண்ட் ஸ்டூவர்ட் முதலிய ஏழு அல்லது எட்டு நபர்கள் புரட்சிக்காரர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். ஆனால் ஆங்கிலப் பெண் கைதி களையும் தங்களிடம் ஒப்பிக்க வேண்டுமென்று கேட்டதற்கு, பேகம் கண்டிப்பாக மறுத்துவிட்டதுடன், எங்கே அவர்களுக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்பதற்காக உடனே அந் தப் பெண்களை அரண்மனையில் உள்ள தம் அந்தப்புரத்துக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்துவிட்டார்!'

ஆனால் இந்தியர்கள்மீது ஆங்கிலேயர் தீர்த்த வஞ்சம் எப் படி? அதைப்பற்றி 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையின் பிரபல நிருபரான ரஸ்ஸெல் குறிப்பிட்டுள்ள வரலாறு இதுதான்: 'அரண் மனையிலும் மற்ற இடங்களிலும் இந்தியர்கள் படுகொலை செய் யப்பட்டு வருகையில், திகிலடைந்த ஒரு குழந்தையுடன் கிழ வன் ஒருவன் ஆங்கில அதிகாரிகளின் முன்னிலையில் வந்து, அவர் களின் கால்களில் விழுந்து உயிர்ப்பிச்சை அளிக்கும்படி கேட்டுக் கொண்டான். அங்கிருந்த ஒரு கொடிய ஆங்கில அதிகாரி அந்த வேண்டுகோளுக்கு அளித்த பதில் என்ன? நிரபராதியான அவ் வயோதிகனை அங்கேயே சுட்டுக் கொன்றதுதான்! பின்னல் அந்த அதிகாரி குழந்தையையும் நோக்கிச் சுட்டான். குழந்தை வெகு சமீபத்தில் இருந்துங்கூட மூன்று தடவை குறி தவறிவிட்டது. அந்த 'வீரன்' சிறிதும் சளைக்காமல் நான்காவது தடவையாகச் சுட்டு அந்தப் பச்சிளம் பாலகனைக் கொல்லுவதில் 'வெற்றி' பெற் றன்!'



குமார சிங்



லிச் சக்கரவர்த்தி பகதூர் ஷா

இந்தச் சம்பவத்தை அந்த நிருபர் வெளியிடாவிடில் அதைப் பற்றி எவரும் அறிந்திருக்க முடியாது. இதைப்போல் எண்ணிக்கையற்ற அட்டூழியங்கள் அப்போது நடந்தன. எனினும் அவற்றையெல்லாம் எவரும் குறிப்பிடாததால் அவை வெளியாகவில்லை.

அவர்கள் சில துரதிருஷ்டசாலிகளைச் சித்திரவதை செய்தனர் என்பதும் ரஸ்ஸெல்லின் குறிப்புகளிலிருந்து தெரிகிறது. அவர் குறிப்பிட்டிருப்பதாவது: 'ஒரு சிப்பாயை அருகிலுள்ள ஒரு மைதானத்துக்கு அவருடைய காலைப் பிடித்து இழுத்துச் சென்றனர். உடனே ஆங்கிலச் சிப்பாய்களில் சிலர் அந்த இந்தியச் சிப்பாயின் முகத்திலும் தேகத்திலும் சல்லடைக் கண்களைப் போல் துப்பாக்கி ஈட்டிகளால் குத்தி, கடைசியாக அவரை உயிருடன் தகனம் செய்தனர். அந்தக் கொடுமையைச் சில அதிகாரிகள் நேரில் பார்த்துங்கூட ஒருவராவது அதைத் தடுக்கவில்லை. அரைகுறையாக எரிந்த அந்தச் சிப்பாய் மரண வேதனை பொறுக்க முடியாமல் தேகத்திலிருந்து ரத்தமும் மாமிசமும் சிதற எழுந்து ஓடினார். எனினும், அவரை மீண்டும் பிடித்துவந்து அவர் எரிந்து இறக்கும் வரையில் ஆங்கிலேயர்கள் துப்பாக்கி ஈட்டிகளால் அழுத்திப் பிடித்துக்கொண்டிருந்தனர்.'

நிற்க. டில்லியும் லக்ஷ்மணபுரியும் வீழ்ச்சியடைந்துங்கூடச் சுதந்தர யுத்தத்தின் வேகம் குறையவில்லை. அதைக் கண்டபின் தான் ஆங்கிலேயர்களின் மயக்கம் தெளிந்தது. இரண்டொரு குறைகளை ஒட்டிச் சிப்பாய்களே அந்தப் புரட்சியை ஆரம்பித்ததாக அதுவரை ஆங்கிலேயர்கள் நினைத்துக்கொண் டிருந்தனர். ஆனால் முக்கிய நகரங்கள் வீழ்ச்சியடைந்த பின்னருங்கூடப் புரட்சி அடங்காததிலிருந்துதான், அது சிப்பாய்க் கலகம் அல்ல என்பதையும், சிப்பாய்கள், சாதாரண மக்கள் முதலிய சகலரும் ஈடுபட்ட சுதந்தர யுத்தம் என்பதையும் ஆங்கிலேயர்கள் தெரிந்துகொண்டனர்.

சகல கஷ்டங்களுக்கும் குறைகளுக்கும் உறைவிடமான அரசியல் அடிமைத்தனமே அந்த மகத்தான போருக்குக் காரணமாகும். அதற்கு மூல காரணம் சுயநலமோ, சொந்த லாப நோக்கமோ எதுவும் இல்லை; தெய்விகமான சுதந்தர லட்சியமே ஆகும். அந்தப் புனித லட்சியத்திற்காகச் சிப்பாய்கள் மாத்திரம் எழவில்லை; தேசமெங்கணும், கிராமங்கள், நகரங்கள் முதலிய சகல இடங்களிலிருந்தும் மக்கள் சுதந்தரப் போரில் குதித்தனர். அத்தகைய உயர்ந்த எண்ணமும் உறுதியும் தன்னலமற்ற தியாகமும் இருந்திராவிடில், அவர்கள் எல்லாரும் பிரமிக்கத் தக்கவாறு அவ்வளவு காலம் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தியிருக்க முடியுமா?

அப்போது லார்டு கானிங் ஒரு பிரகடனம் விடுத்தான். புரட்சியில் சேருவோரின் நிலங்கள், சொத்துக்கள், சம்ஸ்தானங்கள் முதலியன பறிமுதல் செய்யப்படும் என்பதும், உடனே சரண் அடைவோர் மன்னிக்கப்படுவார்கள் என்பதுமே பிரகடனத்தின் சாரம். அதன் பின்னருங்கூடத் தேச பக்தர்கள் தங்களுடைய

வாள்களைக் கீழே வைக்கவில்லை. லக்ஷ்மணபுரி வீழ்ச்சியுற்ற பிறகும் அயோத்தி, போரை நடத்தியே வந்தது.

அந்தப் பயங்கரமான எழுச்சியைப்பற்றி டாக்டர் டப் எழுதுவதாவது: 'இந்தியாவில் மூண்ட புரட்சி பொது ஜனங்களின் ஆதரவற்ற வெறும் சிப்பாய்க் கலகமாக இருந்திருக்குமாயின், நாம் பெற்ற நிர்ணயமான சில வெற்றிகளுக்குப்பின் அது அடியோடு மறைந்திருக்க வேண்டும்; அல்லது அடங்கியிருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக, ஏற்கனவே இருந்ததைக் காட்டிலும் பயங்கரமான முறையில் அது பரவியதேயன்றி அடங்கவில்லை. அது மாபெரும் புரட்சியாதலால், சமீபத்தில் அடங்குவதற்கான அறிகுறிகளும் தென்படவில்லை. புதிது புதிதாக வெளியாகும் விவரங்களிலிருந்து, அது ஏதோ திடீரென்று மூண்ட புரட்சி அல்ல என்பதும், வெகு காலமாகக் கொதித்துக்கொண் டிருந்து இப்போது பொங்கி யிருக்கிறதென்பதும் சந்தேகமின்றித் தெரிகின்றன. அது நீண்ட காலமாகத் தீர்க்காலோசனையுடன் உருவாக்கப்பட்டு வந்துள்ளது என்பதும் தெரிகிறது. அது ஹிந்துக்களையும் முஸ்லிம்களையுங்கூட ஒற்றுமைப்படுத்தி யிருக்கிறது. அயோத்தியையும் சுற்றுவட்ட மாகாணங்களையும் சேர்ந்த மக்கள் அதற்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் ஆதரவு அளித்து வந்திருக்கிறார்கள். எனவே, நாம் பெற்ற சில வெற்றிகளால் அது அடங்கிவிடாது. அது பிரிட்டிஷ் ஆட்சியையும் ஆதிக்கத்தையும் அடியோடு ஒழிக்க வேண்டும் என்பதற்காக ஏற்பட்டதேயன்றி, அற்ப காரணங்களை ஒட்டி மூண்டதல்ல. நமது உண்மையான போராட்டம் கலகக்காரர்களான சிப்பாய்களுடன் மாத்திரம் அல்ல. சிப்பாய்கள் மாத்திரமே விரோதிகளாக இருந்திருப்பின், முன்னரே அவர்களை அடக்கித் தேசத்தைச் சமாதானப்படுத்தியிருக்கலாம். நம் பகைவர்களை நாம் தோற்கடித்தும் சிதற அடித்தும் அவர்களுடைய பீரங்கிகளைக் கைப்பற்றியுங்கூட அவர்கள் மறுபடியும் யுத்த சன்னத்தர்களாக வந்துவிடுகிறார்கள். ஒரு நகரை நாம் கைப்பற்றி வருகையில் மற்றொரு நகர் நம்மிடமிருந்து நழுவிவிடுகிறது. ஒரு ஜில்லாவில் ஆங்கிலத் துருப்புகள் நிலைமையைச் சீர்ப்படுத்தியதும், மற்றொரு ஜில்லாவில் கலகமும் குழப்பமும் உண்டாகிவிடுகின்றன. புரட்சிக்காரர்களால் தடுக்கப்பட்ட ஒரு முக்கியப் பாதையை நாம் திறந்தால், சில நாட்களில் மீண்டும் அது மூடப்பட்டு முக்கிய இடங்களுடன் செய்திப் போக்குவரத்து நடத்த முடியாமல் போய்விடுகிறது. ஒரு பிரதேசத்திலிருந்து நாம் அவர்களை விரட்டினால், இரண்டு அல்லது மூன்று மடங்கு அதிக பலத்துடன் அவர்கள் மற்றொரு பிரதேசத்தில் போருக்கு எழுந்துவிடுகிறார்கள். நாம் வெற்றியுடன் முன்னேறிச் சென்றாலும் அவர்கள் பின்புறமாக வந்து இழந்த பிரதேசத்தை மீண்டும் கைப்பற்றிக்கொண்டு விடுகிறார்கள். கொல்லப்பட்ட ஏராளமானவர்களின் ஸ்தானங்களை நிரப்ப எங்கிருந்தாவது மேற்கொண்டு ஆட்கள் வந்த வண்ணமாக இருக்கின்றனர். அவர்களை ஓரிடத்திலிருந்தாவது நாம் நிரந்தரமாக விரட்ட முடியவில்லை. தைரியம் பொருந்திய நம் துருப்பு

கள் செல்லும் பாதைகளெல்லாம் உழு நிலம்போல் போர் நடந்த ஆழ்ந்த அடையாளங்களுடன் அலங்கோலமாகக் கிடக்கவேண்டியிருக்க, கழுகு பறந்து சென்ற ஆகாயத்தைப்போலவும், கப்பல் சென்ற கடல் நீரைப்போலவும் யாதோர் அடையாளமும் தெரியாமல் முன்னிருந்தது போலவே காட்சி அளிக்கின்றன!'

டப் விவரித்துள்ள இந்த உண்மைகளை ஆங்கிலேயர்கள் இறுதியில்தான் உணர்ந்தனர். தேச பக்தர்கள் ஆதிமுதற் கொண்டே அவற்றையெல்லாம் நன்கு அறிவர். அதனால்தான் என்ன நேர்ந்தாலும், ஆங்கிலேயர்கள் எத்தனை போர்களில் வெற்றி பெற்றாலும், தாங்கள் சுதந்தர யுத்தத்தைத் தொடர்ந்து நடத்திவர வேண்டும் என்று அவர்கள் உறுதி கொண்டனர். இந்திய ஆடவர்கள் மாத்திரம் அல்ல, பெண்திலகங்களுங்கூட அவ்வாறே உறுதியுடன் இருந்தார்கள். லக்ஷ்மணபுரி நவாபின் அந்தப்புரத்தைச் சூறையாடியபோது, சில பெண்மணிகள் கைது செய்யப்பட்டனர். அந்தப்புரக் கதவு திறக்கப்பட்டதும் சிப்பாய்கள் சரமாரியாகச் சுட ஆரம்பிக்கவே உள்ளே இருந்தவர்களில் பலர் கொல்லப்பட்டனர். துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இரையாகாமல் உயிர் தப்பிய ராணிகளை வெள்ளையர்கள் சிறையில் அடைத்தார்கள். பின்னர் லக்ஷ்மணபுரி நகர் தரைமட்டம் ஆக்கப்பட்டது. அதைக் குறித்து ஆங்கிலேயர்கள் ஆனந்தம் அடைந்தனர். ராணிகள் அடைக்கப்பட்டிருந்த சிறை அதிகாரிகள் அந்தப் பெண்மணிகளைப் பார்த்து, 'இப்போதாவது யுத்தம் முடிவடைந்து விட்டதென்று நினைக்கிறீர்களா?' என்று ஏளனமாகக் கேட்டனர். அதற்கு ராணிகள் அளித்த பதில் இதுதான்: 'இல்லை இல்லை, யுத்தம் முடியவில்லை. எதிர்காலத்தில் நீங்கள் முறியடிக்கப்படுவது நிச்சயம். அப்போதுதான் யுத்தம் முடிவடையும்!'

## 30

## குமார சிம்மனின் வீரப் பிரதாபம்

**கொ**டிய வேட்டைக்காரனான ஜெனரல் அயரிடமிருந்து உயிர் தப்பி, ஜகதீசபுரிக் காட்டிலிருந்து வெளிச்சென்ற கிழச் சிங்கமான குமார சிம்மன் ஒடி ஒளிந்துகொண்டுவிடவில்லை. தமது சுதந்தரத்துக்கு உலைவைத்த பாவிகள்மீது பாய எப்போது சந்தர்ப்பம் கிடைக்கும் என்று சிறிதும் கண் அயராது எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அவருடன் அவருடைய சகோதரரான அமர சிம்மனும், நிஸ்வார் சிங், ஜவான் சிங் என்ற இரு சிற்றரசர்களும் இருந்தனர். அவர்கள் தங்களுடைய ராணிகளுடன் காட்டில் தங்கியிருந்தார்கள். அந்தப்புரத்தில் சகல சௌபாக்கியங்களுடன் வாழ்ந்து வந்த பெண்திலகங்கள் காட்டில் தங்

களுடைய கூந்தலை வாரிக்கொண் டிருந்த காட்சி எவருடைய மனத்தையும் உருக்க வல்லது. ஆனால் அவர்கள் தங்களுடைய சொகுசான கூந்தலைச் சீப்புகளால் அல்ல, கூரிய அம்புகளால் வாரிக்கொண் டிருந்தனர். மலர்களையும்விட மிருதுவான அவர் கள் கரங்கள் தங்களுடைய சுதந்தரத்தை அபகரிக்க முற்படும் விரோதிகளின் குருதியைக் குடிக்கவல்ல கூரிய ஆயுதங்களையும் தாங்கும் உறுதி வாய்ந்தவை என்பதையே அவர்கள் செய்கை வெளிப்படுத்தியது.

பரம்பரையாகப் பொன்னரசு புரிந்துவந்த குமார சிம்மன், காட்டில் பட்டினி கிடக்கவும் நேர்ந்தது. சீரும் சிறப்பும் அற்ற அந்த நிலையிலும் அந்த வயோதிகரின் மன உறுதியும் கம்பீரமும் குறையவே இல்லை. புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா? அது போன்றே ஜகதீசபுரிச் சிங்கம் வாடி வலிமை இழந்திருப்பினும், அந்நியர்களிடம் அடிபணிந்து அடிமை வாழ்வை நடத்த இசை யுமா? ஆங்கிலேயர்களாகிற மத்த கஜத்தின் மத்தகத் தைப் பிளக்க எப்போது தருணம் வாய்க்கும் என்றே அந்தச் சிங் கம் எதிர்பார்த்துக்கொண் டிருந்தது.

பரம்பரையாகக் குமார சிம்மனின் குடும்பத்துக்குச் சொந்த மாக இருந்து வந்த ராஜ்யத்தை அந்நியர்கள் கைப்பற்றினர். ஜகதீசபுரியில் இருந்த அவருடைய அரண்மனையும் அவர்கள் வசமாயிற்று. அந்த நகர ஆலயங்களையும் விக்கிரகங்களையுங்கூட, ஆங்கிலேயர்களின் அநாசாரக் கைகள் பாக்கி விடவில்லை. காட் டில் இருந்த குமார சிம்மன் அதையெல்லாம் குறித்துக் கவலைப் படவில்லை. சுதந்தரப் போரை எப்படியாவது தொடர்ந்து நடத்தி வர வேண்டும் என்பதுதான் அவருடைய கவலையாகும். எவ்வளவு காலமாயினும், ஓர் இந்தியரே பாக்கி யிருப்பினுங் கூடச் சுதந்தர யுத்தத்தின் வேகம் குன்றக்கூடாது என்பதே அவ ருடைய ஆர்வமாக இருந்தது. அப்போது அவரிடம் 1,200 சிப்பாய்களும், பயிற்சியற்ற 500 தொண்டர்களுமே இருந்தனர். அந்தக் குறைந்த பலத்துடன் சென்று தம் ராஜ்யத்தை மீட்க முயல அவர் விரும்பவில்லை. அந்த வீரர் அதிக எதிர்ப்பில் ஈடு படாமல் என்றைக்கு ஜகதீசபுரியை விட்டு வெளிவந்தாரோ, அன்றே தம் போர்முறையை மாற்றிக்கொள்ள வேண்டியது மிக அவசியம் என்று தீர்மானித்துவிட்டார். அதாவது தேசபக்தர் கள் சிறு சிறு கோஷ்டிகளாகப் பிரிந்தும் மறைந்தும் இருந்து சுதந்தர யுத்தத்தை நடத்தி வரவேண்டும் என்பதுதான் அவ ருடைய தீர்மானம்.

அவர் ஆத்திரப்பட்டுக்கொண்டு ஆங்கிலேயர்களை எதிர்க் கத் தம் துருப்புகளை அனுப்பி யிருப்பாராயின், அப்போது அபரி மிதமான பலத்துடன் விளங்கிய ஆங்கிலப் படைகள் தேசீயத் துருப்புகளைச் சின்னபின்னம் ஆக்கியிருக்கும். அவர் மேற்குப் பிகாரிலுள்ள காடுகளிலும், ஷான் நதிப் பிரதேசத்திலும் நட மாடிக்கொண்டே பகைவர்களின் பலவீனமான அம்சங்களை மிக வும் ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தார். அப்போது லக்ஷ்மண புரியை அழிப்பதற்காக நேபாளிகளும் ஆங்கிலேயர்களும் அடங்

கிய படை ஒன்று அஸிம்கடிலிருந்து அயோத்திக்கு அனுப்பப் பட்டிருக்கிறது என்ற செய்தி அவருக்கு எட்டியது. மகா நிபுண ரான குமார சிம்மன் தாம் எதிர்பார்த்துக்கொண் டிருந்த சந் தர்ப்பம் அணுகிவிட்டதை உணர்ந்து, பகைவர்களின் மீது பாய ஆயத்தமானூர். சிலரைப்போல் அவர், தாம் இழந்த தலைநக ரைச் சபலம் காரணமாக மீண்டும் சுற்றிக்கொண் டிருக்கவில்லை; மற்றும் சிலரைப்போல் ஆத்திர மேலீட்டால் சந்தர்ப்பத்தைக் கவனியாமல் பகைவர்கள்மீது பாய்ந்து படுதோல்வி உறவும் இல்லை. நிதானமாகவும் தீர்க்காலோசனையுடனும் தந்திர யுத் தத்திலேயே தமது கருத்தைச் செலுத்தலானூர்.

ஆங்கிலேயர்கள் லக்ஷ்மணபுரிக்குப் படையெடுத்துச் சென்று கொண்டிருந்தார்கள் எனினும், ஜகதீசபுரிக்கு அருகில் குமார சிம்மன் போர் நடவடிக்கைகளில் ஈடுபடலாம் என்ற உத்தேசத் துடன், அந்தப் பிரதேசத்தை இடைவிடாமல் கண்காணித்து வந்தனர். குமார சிம்மன் அங்கே எத்தகைய முறைகளையும் கைக்கொள்ளாமல், கிழக்கு அயோத்திக்குச் சென்றூர். அந்தப் பிரதேசத்தில் ஆங்கிலேயர்களுக்குப் போதிய பலம் இல்லை என் பதை அறிந்தே, அவர் அங்கே கவனம் செலுத்த முற்பட்டார்.

கிழக்கு அயோத்தியில் சிதறிக் கிடக்கும் புரட்சிக்காரர்களை யெல்லாம் ஒன்று சேர்த்துத் திடீரென்று அஸிம்கடைத் தாக்க வேண்டும் என்பதே அவருடைய எண்ணமாகும். அந்த முயற்சி யில் வெற்றி பெறும் பட்சத்தில் பின்னூல் காசியையும், அலாகா பாத்தையுங்கூடக் கைப்பற்றி ஜகதீசபுரிக்கு இழைக்கப்பட்ட அவ மதிப்புக்கு வஞ்சம் தீர்க்க முடியும் என்பதும் அவருடைய நம்பிக்கை. 1858 மார்ச் 18-ஆம் தேதி ரேவாவில் உள்ள தேச பக்தர்களும் அவர்களுடன் சேர்ந்துகொண்டனர். அவரது தலைமையில் இருந்த தேசீயப் படைகள் யாவும் அத்ரௌலி கோட்டைக்கு அருகில் முகாம் போட்டிருந்தன.

அத்ரௌலியிலிருந்து அஸிம்கட் இருபத்தைந்து மைல் தூரம் இருக்கிறது. குமார சிம்மன் அவ்வளவு சமீபத்தில் இருக்கிறூர் என்பதை அறிந்த மில்மன் முந்நூறு காலாட் படைகளுடனும், குதிரைப் படைகளுடனும், பீரங்கிப் படைகளுடனும் அத்ரௌ லியை நோக்கிப் படையெடுத்துச் சென்றூன். 22-ஆம் தேதி சூரியோதயம் ஆவதற்குள் மில்மனின் படைகளும், தேசீயப் படை களும் சந்தித்தன. திடீரென்று ஆங்கிலத் துருப்புகளைக் கண்ட தும் தேசீயப் படை திக்பிரமை அடைந்ததுபோல் தோன்றியது. புரட்சிக்காரர்களுக்கு ஒரு விநாடியும் அவகாசம் அளிக்காமல் மில்மன் போரை ஆரம்பித்தான். அத்தகைய திடீர்த் தாக்குத லின் முன்னிலையில் புரட்சிக்காரர்கள் எவ்வளவு நேரந்தான் நிற்க முடியும்? வெகு சீக்கிரத்தில் அவர்கள் தோல்வியுற்றனர்.

குமார சிம்மனின் தந்திரம் பலியாததைக் கண்டு ஆங்கிலே யர்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள். அவருடைய படை களை எதிர்பாராத விதமாகத் திடீரென்று தாக்கி முறியடித்து விட்டதாக ஆனந்தமடைந்த ஆங்கிலச் சிப்பாய்கள், போர் செய்த சிரமத்தால் காலை ஆகாரத்தில் கவனம் செலுத்தலாயினர்.

அருகில் இருந்த மாந்தோப்பின் நிழலில் அவர்கள் ஆகாரம் செய்ய ஆரம்பிக்கையில், 'பூம், பூம்' என்று பீரங்கி முழங்கத் தொடங்கியது.

கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்ற பழமொழி அன்று ஆங்கிலச் சிப்பாய்கள் விஷயத்தில் முற்றும் உண்மை யாயிற்று. அவர்கள் ஆகாரத்தை வாய்க்குக் கொண்டுபோகும் போது திடீரென்று பீரங்கி முழக்கம் கேட்டதால் அலறிப் புடைத் துக்கொண்டு எல்லாரும் எழுந்தனர். தாங்கள் மிகவும் எளிதில் வெற்றி பெற்றுவிட்டதாக எண்ணி ஆனந்தத்தில் ஆழ்ந்திருந்த வர்களுக்கு, குமார சிம்மன் போருக்கு வந்துவிட்டார் என்பதை அறிந்ததும் இடி இடித்ததுபோல் ஆகியது. முதலில் புரட்சிக் காரர்கள் ஈடுபட்டது போலித் தாக்குதல் என்பதையும், அவர் கள் தோல்வி அடைந்ததுபோல் பாசாங்கு செய்தனரே தவிர உண்மையில் தோல்வி அடையவில்லை என்பதையும் அப்போது தான் ஆங்கிலேயர்கள் அறிந்தனர்.

குமார சிம்மனின் இணையற்ற ராணுவத் தந்திரத்தைப்பற்றி மாலிஸன் எழுதுவதாவது: 'ஒரு தளபதிக்கு அதைக் காட்டிலும் சிறந்த சந்தர்ப்பம் கிடைப்பது அரிது. அப்போது ஒவ்வோர் அம்சமும் குமார சிம்மனுக்குச் சாதகமாக இருந்தது. தமக்கு வெற்றி நிச்சயம் என்று அவர் உறுதி கொண்டார். முன்னர் ஸாலமாங்காவில் நடந்த யுத்தத்தில் மார்மாண்டின் மகத்தான தவற்றைக் கண்ட வெல்லிங்டன் எவ்விதம் சந்தோஷ ஆரவாரம் செய்தானோ, அதுபோலவே அவ்வமயம் குமார சிம்மனும் மில்ம னின் தவற்றைக் கண்டு சந்தோஷ ஆரவாரம் செய்திருப்பார் என்பது நிச்சயம்.'

குமார சிம்மனின் தந்திரத்தால் விளைந்த ஆபத்தான நிலைமையிலிருந்து விடுதலைபெற மில்மனும் பெரு முயற்சி செய் தான். உறுதியுடன் முன்சென்று தாக்கினால் குமார சிம்மன் பயந்து விடுவார் என்று நம்பி, அவன் புரட்சிப் படையைத் தாக்க ஆரம் பித்தான். ஆனால் புரட்சிக்காரர்கள் கரும்புத் தோட்டத்திலிருந் தும், தோப்பில் இருந்த மாமரங்களிலிருந்தும், மணல் வரப்பு களுக்கு அப்பாலிருந்தும் சரமாரியாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்த வண்ணமாக இருந்தனர். குமார சிம்மன் படையில் மில் மன் படையில் இருந்ததைக் காட்டிலும் ஐந்து அல்லது ஆறு மடங்கு அதிகச் சிப்பாய்கள் இருந்தனர். அவர்கள் சிறிதும் சளைக்காமல் கடுமையாகத் தாக்கவே மில்மன் தனது பெருந் தவற்றை உணர்ந்துகொண்டான்; திடீரென்று தாக்குதலை நிறுத் தினான்; எங்கே புரட்சிப் படைகள் தங்களைச் சூழ்ந்துகொண்டு விடுமோ என்ற பயத்தால், தப்பிச் செல்ல முயன்றான். மில்மனின் பலவீனத்தை அறிந்த குமார சிம்மன் உடனே ஆங்கிலப் படை களைச் சூழ்ந்துகொண்டே தீருவது என்று உறுதி கொண்டார். அதைக் கண்டு திகில் கொண்ட ஆங்கிலப் படைகள் பின்வாங்கி ஓட ஆரம்பித்தன. குமார சிம்மனின் சிப்பாய்களோவெனில், அவர்களை ஓடவிடாமல் அவர்கள்மீது ஓநாய்களைப்போல் பாய்ந்து தாக்கினர்.

எனினும் அப்போது பெற்ற வெற்றியால் குமார சிம்மன் கர்வம் அடையவில்லை; வெறி கொள்ளவும் இல்லை. பின்வாங்கி ஓட முயன்றவர்களைத் துரத்திச் செல்ல அவர் விரும்பவில்லை. தம்மிடம் உள்ள துருப்புகளின்மீது குமார சிம்மனுக்குப் பூர்ண நம்பிக்கை இல்லாததே அதற்குக் காரணமாகும். நேரடியான போரில் அவர்கள் அதிக நேரம் உறுதியுடன் நிற்பார்களா என்று சந்தேகங் கொண்டே, அவர் பகைவர்களை அத்ரௌலியிலிருந்து கோஸில்லாவில் இருந்த அவர்களுடைய முகாம் வரையில் விரட்டிச் சென்று திரும்பிவிட்டார். கட்டுக்கோப்பும், ஒழுங்கும், உறுதியும், அபரிமிதமான சாதனங்களும், துரோகிகளின் உதவியும் உள்ள ஆங்கிலேயர்களை மறைந்திருந்து திடீர்த் திடீரென்று தாக்க வேண்டும் என்பதே அவருடைய திட்டமாகும்.

கோஸில்லா முகாமிலும் ஆங்கிலேயர்கள் அமைதியாக இருக்க முடியவில்லை. அவர்கள் தோல்வியுற்ற செய்தி ஏற்கனவே முகாமிற்கு எட்டிவிட்டதால், அங்கிருந்த இந்திய வேலைக்காரர்கள் எல்லாரும் ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான எருதுகளையும், மற்ற எல்லாச் சாமான்களையும் எடுத்துக்கொண்டு சென்றுவிட்டனர். ஆங்கிலேயர்கள் தோல்வியுற்றுத் திரும்பி வருகையில் முகாம்களெல்லாம் காலியாகக் கிடந்தன. வேலைக்காரர்கள் இல்லை. உணவுப் பொருள்களும் இல்லை. அந்த நிலையில் குமார சிம்மனின் படைகளும் அவர்களை விரட்டி வந்தன.

ஆகையால் மில்மன் அங்கிருந்தும் மேற்கொண்டு பின்வாங்கிச் செல்லுவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை. அதை அறிந்த குமார சிம்மன் மேலும் மில்மனின் படைகளை அஸிம் கட்வரையில் துரத்தி யடித்தார். அந்தப் படைகளுக்குச் சொந்தமான எல்லாச் சாதனங்களும் குமார சிம்மனின் வசமாயின. அஸிம்கடுக்குச் சென்ற பின்தான் மில்மனுக்கு மீண்டும் நம்பிக்கை உண்டாயிற்று. அவன் அனுப்பிய அவசரச் செய்திக்கு இணங்கக் காசியிலிருந்தும் காஸிபுரியிலிருந்தும் கர்னல் டேம்ஸ் தலைமையில் உதவித் துருப்புகள் வந்திருந்தன. அஸிம்கட் ஒரு முக்கியப் படைத்தளம் ஆதலாலும், உதவிக்குத் துருப்புகள் வந்ததாலும், மில்மன் தான் அடைந்த படுதோல்விக்காகக் குமார சிம்மன்மீது வஞ்சம் தீர்க்க உறுதி கொண்டான்.

அந்த நோக்கத்துடன் கர்னல் டேம்ஸ் மார்ச் மாதம் 28-ஆம் தேதி அஸிம்கடிலிருந்து புறப்பட்டான். பின்பு நிகழ்ந்த போரில் குமார சிம்மனின் துருப்புகளைத் தோற்கடித்து விட்டதாக டேம்ஸ் சந்தோஷப்பட்டுக்கொண் டிருக்கையில், குமார சிம்மன் மில்மன் விஷயத்தில் அநுஷ்டித்த தந்திரத்தை மீண்டும் கையாளவே டேம்ஸின் படைகளெல்லாம் நையப் புடைபட்டு, குடல் தெறிக்க அஸிம்கடுக்குத் திரும்பி ஓடிவந்து அங்கிருந்த கோட்டைகளில் அடைக்கலம் புகுந்தன. குமார சிம்மனைத் தாக்கியது போதும் என்றாகிவிட்டது ஆங்கிலேயர்களுக்கு! அதற்குப் பின் அவரைத் தாக்குவது என்ற பேச்சே பகைவர்களிடை எழவில்லை.

பகைவர்களை முறியடித்த குமார சிம்மன் அஸிம்கட் நகருக்குள் பிரவேசித்தார். கோட்டையில் அடைபட்ட வெள்ளையர்

களை ஒழிக்க வேண்டிய பொறுப்பை அவர் சில சிப்பாய்களிடம் ஒப்படைத்துவிட்டு, வெற்றிக் கோலத்துடன் காசிமீது படையெடுக்கலானார். குமார சிம்மனின் இணையற்ற தந்திர முறைகளையும், மின்னல் வெற்றிகளையும் கண்ட கவர்னர் ஜெனரல் கதி கலங்கிவிட்டான். அவன் அப்போது அலாகாபாத்தில் இருந்து வந்தான் என்பது ஏற்கனவே குறிப்பிடப்பட் டிருக்கிறது.

குமார சிம்மனால் ஆங்கிலேயர்களுக்கு எத்தகைய ஆபத்து ஏற்படக் கூடும் என்பதை உணர்ந்த லார்டு கானிங், அவருடைய முன்னேற்றத்தை அலட்சியமாகக் கருதவில்லை. குமார சிம்மனே அஸிம்கடில் ஆங்கிலத் துருப்புகளைச் சிறைப்படுத்தியதுடன், காசியைத் தாக்குவதன் மூலம், கல்கத்தாவுக்கும் அலாகாபாத்துக்கும் ஆங்கிலேயர்கள் எவ்விதப் போக்குவரத்தும் நடத்த முடியாமல் தடுத்து விடவும் தீர்மானித்தார். லக்ஷ்மணபுரியிலிருந்து ஓடிய சிப்பாய்களும் அப்போது அந்த வீரருடன் சேர்ந்துகொண்டார்கள். சீர்குலைந்தும் கட்டுக்கோப்பின்றியும் கிடந்த துருப்புகளிடையே ஒற்றுமையையும் ஒழுங்கையும் நிலைநிறுத்திய பெருமை குமார சிம்மன் ஒருவருக்கே உரியது.

புரட்சி மூண்டதும், ஆங்கிலேயர்கள் விசுவாசிகளின் உதவி கொண்டு காசியையும் அலாகாபாத்தையும் கைப்பற்றிவிட்டார்கள். அதனால்தான் கல்கத்தாவைச் சுற்றிலும் தேசீய எழுச்சியை முளையிலேயே கிள்ளி எறிவது அவர்களுக்குச் சாத்தியமாயிற்று. ஆகையால் ஏற்கனவே தேச பக்தர்கள் இழந்த சந்தர்ப்பத்தை, காசிமீதும் அலாகாபாத் மீதும் படையெடுப்பதன் மூலம் மீண்டும் பெற வேண்டும் என்பதே குமார சிம்மனின் நோக்கமாகும். இதை அறிந்த கானிங், அந்தக் 'கலகக்காரத் தலைவனை' அடக்குவதற்காக நேரில் லார்டு மார்க் கர்ரையே படைகளுடன் அனுப்பினான்.

மார்க் கர் கிரிமிய யுத்தத்தில் கீர்த்தி பெற்றவன்; இந்திய ராணுவ விஷயங்களில் மிகுந்த அநுபவம் உள்ளவன். அவன் ஐந்நூறு சிப்பாய்களுடனும், எட்டுப் பீரங்கிகளுடனும் உடனே புறப்பட்டு அஸிம்கடிலிருந்து எட்டு மைல் தூரத்திலுள்ள ஓர் இடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கே அன்றிரவு ஓய்வெடுத்துக் கொண்ட பின், ஏப்ரல் 6-ஆம் தேதி காலையில் மீண்டும் புறப்பட்டான். குமார சிம்மனின் படைகள் தன் நடமாட்டத்தைக் கவனித்து வருகின்றன என்பது, அவனுக்கு அன்று காலை ஆறு மணிக்குத் தெரிந்தது. எனினும், அவன் அவ்விஷயமாகத் தனக்கு எதுவுமே தெரியாதவன்போல் பாசாங்கு செய்துகொண்டு, திடீரென்று குமார சிம்மன் படையின் இடது பாரிசத்தைத் தாக்குமாறு உத்தரவிட்டான்.

எவ்விதத் தாக்குதலையும் சமாளிக்கத் தேசீயப் படை தயாராக இருந்ததால், ஆங்கிலேயர்களின் தாக்குதல் ஆரம்பமான அதே விநாடியில் அவர்கள் மீது தோட்டாமாரி பொழியத் தொடங்கியது. வயோதிக வாலிபரான குமார சிம்மன் அன்று தமது வெள்ளைக் குதிரைமீது ஏறி முன்னணியில் மின்னலைப்போல் அங்கும் இங்கும் சென்று போரை நேரில் நடத்திக்கொண் டிருந்

தார். அன்று நம் வீரரின் பக்கத்தில் ஏராளமான துருப்புகள் இருந்தது உண்மையே. தம் படை பலவிதப் பேர்வழிகள் அடங்கிய ஒரு கதம்பப் படை என்பதை அவர் அறிவார். அதைக் கொண்டு பகைவர்களைப் பயமுறுத்தலாமே யன்றி அவர்கள் எல்லாரும் 'வெற்றி அல்லது மரணம்' என்ற உறுதி கொண்டு இறுதிவரையில் போரிடுவார்கள் என்று சொல்வதற்கில்லை. எனவே அன்று வெற்றி கிடைப்பது தம் ஜாக்கிரதையை, சாமர்த்தியத்தை, உறுதியை, ஆண்மையை மாத்திரமே பொறுத்திருக்கிறது என்ற மர்மத்தை மகா மேதாவியான அந்தப் பெரியார் அறிந்தே, ஒரு விநாடிகூடப் போர்க்களத்தின் முன்னணியை விட்டு அப்பால் செல்ல மனம் கொள்ளவில்லை.

மார்க் கர் படையின் பாரிசங்களைத் தாக்குவதற்காக அவ் வீரர் தம் படையைப் பல பிரிவுகளாகப் பிரித்து நிறுத்தியிருந்தார். பகைவர்களின் பீரங்கிகள் தேசீயப் படையின் மீது தீயைக் கக்கியவண்ணம் இருந்தன. ஆனால் தேசீயப் படையினிடம் பீரங்கிகளே இல்லை. அந்த நிலையிலும் பகைவர்களைப் பின்புறமாகத் தாக்குவதற்காகப் படையைக் கொண்டு வருவதில் அவர் வெற்றி பெற்றார். தேசீயப் படையின் எதிர் பாராத அந்தத் தாக்குதலால் பகைவர்களின் திட்டமெல்லாம் சீர்குலைந்து அவர்களுடைய பீரங்கிகள் பின்புறம் ¿ம்படி நேர்ந்துவிட்டது.

அதைக் கண்டதும் தேச பக்தர்கள் வெற்றிக் கோஷங்களுடன் முன்பாய்ந்து சென்றனர். குமார சிம்மன் ஆங்கிலப் படைகளைச் சூழ்ந்துகொண்டு தாக்கியதால் பகைவர்களின் யானைகளெல்லாம் வெறி பிடித்து ஓட ஆரம்பித்தன. மாவுத்தர்கள் தங்களுடைய உயிருக்கு ஆபத்து வந்துவிட்டதென்று திகிலடைந்து அவைகளின் கழுத்தை இரு கைகளாலும் இறுகப் பிடித்துக்கொண்டனர். வேலைக்காரர்கள் முதலிய எல்லாரும் மூலைக்கு மூலை ஓடத் தொடங்கினர். 'இதையெல்லாம் பொருட்படுத்தாமல் இன்னும் சிறிது நேரம் போரிட்டுக்கொண் டிருப்போமாயின், வெற்றி நமக்குத்தான்' என்று மார்க் கூறினான்.

அன்றைப் போரை விசித்திரமான ஒரு போர் என்றே சொல்ல வேண்டும். முதலில் ஆங்கிலப் படையின் முன்னணியில் தேசீயப் படையின் முன்னணி இருந்தது. பின்னர் அந்தப் படையின் பின்னணியில் தேசீயப் படையின் முன்னணி வந்துவிட்டது! அதே சமயம் ஆங்கிலப் படையின் முன்புறம் எல்லாம் நெருப்புமயம் ஆகிவிட்டது. ஒரு புறம் தீயையும் மற்றொரு புறம் குமார சிம்மனின் படையையும் எதிர்த்து நிற்க முடியாது என்பதை உணர்ந்த மார்க் கர், போர்க்களத்தை விட்டு எப்படியாவது அஸிம்கட் போய்ச் சேருவது என்று தீர்மானித்தான். வெற்றி கிடைக்காவிடினும், அதற்கு அடுத்தபடியாக அஸிம்கடிலுள்ள படைகளுக்கு உதவியாகச் செல்லுவதே சிறந்தது என்று அவனுக்குத் தோன்றியது. அப்போது அவனுடைய பீரங்கிகள் அவனுக்கு மிகவும் உதவியாக இருந்தன. தேசீயப் படையினிடம் பீரங்கிகள் இல்லாமையால்

மார்க் கரின் நோக்கத்தைத் தடுக்கவும் முடியவில்லை. அவன் நடுநிசிக்கு அஸிம்கட் போய்ச் சேர்ந்தான்.

அந்தப் போரைப்பற்றியும், அப்போது குமார சிம்மன் பல கஷ்டங்களைச் சமாளித்ததைப்பற்றியும் மாலிஸன் குறிப்பிட்டிருப்பதாவது: 'குமார சிம்மன் ஒப்பற்ற திறமையும் புத்தி நுட்பமும் தந்திரமும் வாய்ந்தவர் எனினும் அவரும் சில தவறுகளைச் செய்துவிட்டார். அவர் வகுத்த திட்டம் அற்புதமானது தான். ஆனால் அது சரிவர நிறைவேற்றப்படவில்லை. மில்மன் அவருக்கு அபூர்வ சந்தர்ப்பத்தை அளித்தும், அதைக் குமார சிம்மன் நழுவ விட்டுவிட்டார். அவர் மில்மனை அதோகதி ஆக்கியிருக்க முடியும். மில்மனின் சிப்பாய்கள் அத்ரௌலிக்கு அருகிலுள்ள மாந்தோப்பில் காலை ஆகாரம் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது அஸிம்கடுக்கும் அந்தப் படைகளுக்கும் இருந்த தொடர்பைக் குமார சிம்மன் கத்தரித்திருக்கலாம். ஆனால் அவர் அவ்வாறு செய்யாமல் மில்மனின் படையை நேரடியாகத் தாக்க முற்பட்டுவிட்டார். மற்றும் மில்மன் படைகள் பின்வாங்கிய போது, அவர் அவற்றைத் தொடர்ந்து விரட்டவும் இல்லை. அந்தப் படைகள் அஸிம்கடுக்குச் செல்ல முடியாமலே தடுத்து அவற்றைச் சூழ்ந்துகொண்டிருக்கலாம். இவையெல்லாம் குமார சிம்மன் அறியாத விஷயம் அல்ல. எனினும், தம் படைகளை நம்பி அவரால் தீவிரமாக எதுவும் செய்யமுடியாமல் போயிற்று. ஏனெனில் அந்தப் படைகளைச் சேர்ந்த ஒவ்வொரு குட்டித் தலைவரும் தம் சொந்தத் திட்டத்தின்படியே நடக்க விரும்பினர். குமார சிம்மன் அந்தத் தலைவர்களை அநுசரித்து நடந்துகொள்ளும் படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டதே, அவரது திட்டம் பூரணமாக நிறைவேறாததற்குக் காரணமாகும்.'

மார்க் கர் வெற்றி பெற முடியாமற் செய்ததுடன், அஸிம்கடுக்கு உதவியாகச் செல்ல வேண்டும் என்ற அவனுடைய நோக்கத்திலும் குமார சிம்மன் மண் விழும்படி செய்துவிட்டார். ஏனெனில், அப்போதும் அஸிம்கட் நகர் முழுவதும் தேச பக்தர்களின் வசமே இருந்தது. சுற்று வட்டப் பிரதேசங்களிலும் அவர்களுடைய ஆதிக்கமே நிலவி வந்தது. தம் படைகளின் குறை குணங்களையும் திறமையையும் யார் நன்கு அறிந்துகொள்ளும் ஆற்றல் படைத்தவரோ, அவர்தாம் சிறந்த தளபதி ஆவார். அந்த அபூர்வ அம்சம் சம்பந்தப்பட்ட வரையில், குமார சிம்மனுக்கு இணையே இல்லை. தம் பகைவர்களின் பலத்தையும் பலவீனத்தையும் அவர் திட்டமாக அறிந்துகொண்டிருந்தது போலவே, தம் சொந்தப் படைகளின் பலத்தையும் குணங்களையும் குறைகளையும் நன்கு தெரிந்துகொண்டிருந்தார். அஸிம்கட் கோட்டையில் இருந்த ஆங்கிலேயர்களை அவர் தாக்காததற்குக் காரணம் அதுதான். ஆரா முற்றுகையின் போதும், லக்ஷ்மணபுரி முற்றுகையின் போதும், பயத்தினாலோ வேறு எக்காரணங் கொண்டோ புரட்சிக்காரர்கள் ஆங்கிலச் சிப்பாய்களுடைய துப்பாக்கி ஈட்டித் தாக்குதலின் முன்னிலையில் சிதறுண்டதை உன்னியே, குமார சிம்மன் அஸிம்கடில், ஆங்கிலேயர்கள் அடைக்கலம் புகுந்திருந்த கோட்டையை முற்றுகை

யிட முற்படவில்லை. பகைவர்கள் கோட்டையை விட்டு வெளியே வர முடியாமல் இருப்பதற்கு உற்ற முறைகளைக் கைக்கொண்ட அதே சமயம், அவர்களை முற்றும் முறியடிப்பதற்கான மற்றொரு திட்டமும் அவர் மனத்தில் உருவாகி வந்தது.

1857-ஆம் வருஷம் சுதந்தர யுத்தத்தில் ஈடுபட்ட தேசபக்தர்களிடையே, இரு சாரார் இருந்தனர். பகைவர்களின் பீரங்கிகளுக்கோ வாள்களுக்கோ சிறிதும் அஞ்சாமல் போர்க்களத்தில் உறுதியுடனும் ஒழுங்குடனும் ஓரடிகூடப் பின்வாங்காமலும் எதிர்த்து நின்று மரணத்தைத் துச்சமாக மதிப்பவர்கள் ஒரு சாரார். தேசத்துக்காக உயிரைத் தியாகம் செய்யவேண்டும் என்ற அபிலாஷை இருந்தும் அதை நிறைவேற்றத் தைரியம் இன்றி, உறுதியாக நின்று பகைவர்களை எதிர்க்க வேண்டிய சமயத்தில் பின்வாங்குவதும் சிதறுண்டு போவதுமாக இருந்த மற்றொரு சாரார். இவர்களில் முதலில் குறிப்பிட்ட முதல்தர வீரர்களைக் குமார சிம்மன் ஒன்றுசேர்த்து எத்தகைய கஷ்டமான துணிகரத் தாக்குதலுக்கும் ஆயத்தமாக இருக்கக் கூடிய ஒரு சிறந்த படையை உருவாக்கி, தாம் ஏற்கனவே வகுத்துள்ள துணிச்சலான திட்டத்தை நிறைவேற்றவும் ஆயத்தமானார். அதற்கிணங்க, அவர் தானு நதியின் பாலத்தில் நிற்குமாறு தம் புதிய படைகளுக்கு உத்தரவிட்டார்.

ஏனெனில், லூகார்ட் என்ற தளபதி அந்தச் சிறிய பாலத்தின் வழியாகத்தான் தன் படையை அஸிம்கடிலுள்ள ஆங்கிலத் துருப்புகளுக்கு உதவியாகக் கொண்டு செல்ல முயன்று வந்தான். அஸிம்கடைத் தங்களுடைய பிடியிலிருந்து நழுவ விடக் கூடாது என்பதற்காகவே, புரட்சிக்காரர்கள் அந்தப் பாலத்தின் வழியாக ஆங்கிலத் துருப்புகளைச் செல்ல விடாமல் தடுத்து வருகிறார்கள் என்று லூகார்ட் எண்ணினான். ஆனால் மாலிஸன் குறிப்பிட்டுள்ளபடி மகா தந்திரசாலியான குமார சிம்மன் தம்மைச் சேர்ந்தவர்கள்கூடக் கண்டுபிடிக்க முடியாத ஓர் ஆழ்ந்த திட்டத்தைச் சிறிதும் தாமதமின்றி நிறைவேற்ற முற்பட்டார். எப்பாடு பட்டாவது அஸிம்கடைப் பாதுகாக்க வேண்டியதே தங்களுடைய உறுதியான எண்ணமென்று பகைவர்கள் நம்பும்படி செய்துவிட்டு; அவர்கள் அங்கே முழுக் கவனத்தையும் செலுத்திக்கொண்டிருக்கையில் நேராக ஜகதீசபுரிக்குப் படையெடுத்துச் செல்ல வேண்டும் என்பதே அவருடைய சிறந்த திட்டம்!

அந்தத் திட்டம் குமார சிம்மனின் சிறந்த ராணுவத் தந்திரத்திற்கு ஓர் உதாரணமாகும் என்று ஆங்கில சரித்திராசிரியர்கள் புகழ்ந்திருக்கிறார்கள். அஸிம்கடிலிருந்து காஸிபுரிக்குச் சென்று, அங்கிருந்து கங்கையைக் கடந்து ஜகதீசபுரியை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்பதே குமார சிம்மனின் நோக்கம். மிகவும் துணிகரமான இந்தத் திட்டத்தை நிறைவேற்றவே, பாலத்தில் நின்று பகைவர்களைத் தடுக்குமாறு முதல்தர வீரர்கள் அடங்கிய படைக்கு அவர் உத்தரவிட்டார். தம் படையின் மற்றொரு பிரிவு அஸிம்கடிலிருந்து புறப்பட்டு ஆங்கிலேயர்களுக்

குத் தெரியாமல் காஸிபுரிச் சாலைக்குச் செல்லும் வரையில், அந்த வீரர்கள் லூகார்ட்டின் படையை எதிர்த்துப் பாலத்தைப் பாது காத்துவர வேண்டும் என்பதும் அவருடைய கட்டளை. காஸிபுரி சென்று கங்கையைக் கடந்துவிட்டால், பின்பு ஜகதீசபுரியிலுள்ள காடு குமார சிம்மனுக்கு இடம் அளிக்கும். அதன் பின், சென்ற பன்னிரண்டு மாத காலமாக ஆங்கிலேயர்கள் பெற்ற வெற்றி யெல்லாம் வீணாகிவிடும்.

பாலத்தைப் பாதுகாத்து வந்த தேசீய வீரர்களை லூகார்ட் இடைவிடாமல் தாக்கினான் என்றாலும், அதன் அருகில்கூட அவ னால் வர முடியவில்லை. தேசீய வீரர்கள் ஆங்கிலேயர்களை வெகு கடுமையாக எதிர்த்து நின்றனர். அஸிம்கடிலிருந்து புறப்பட்டுக் காஸிபுரி செல்லும் பாதைக்குத் தாம் பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிட்டதாகக் குமாரசிம்மனிடமிருந்து செய்தி வரும் வரை யில், அந்த வீரர்கள் பாலத்தில் ஆங்கிலேயர்களுக்கு ஓர் அங்கு லங்கூட இடங் கொடுக்கவில்லை. அவர்கள் அவ்வாறு மகா வீரத் துடன் போர் புரிந்ததால்தான் குமார சிம்மனால் தம் திட்டத்தை நிறைவேற்ற முடிந்தது என்று மாலிஸன் குறிப்பிட்டிருக்கிறார். இறுதியாகத் தலைவரிடமிருந்து செய்தி கிடைத்ததும் அந்த வீரர் கள் எல்லாரும் ஒழுங்கான முறையில் பாலத்திலிருந்து பின் வாங்கி ஏற்கனவே ஏற்பாடு ஆகியிருந்தபடி குமார சிம்மன் இருந்த இடத்துக்குப் புறப்பட்டனர்.

தேசீய வீரர்கள் பாலத்தைக் காலி செய்துவிட்டுத் திடீ ரென்று பின்வாங்கியதும், லூகார்ட் தன் படைகளுடன் பாய்ந்து வந்தான். ஆனால் அதற்குள் ஏதோ மந்திரசக்தியினால் மறைந் தது போல், தேசீயப் படை மறைந்துவிட்டதை அறிந்து, அவன் மிகுந்த கலக்கமும் ஏமாற்றமும் அடைந்தான். அந்தப் படை அவ்விதம் திடீரென்று மறைந்ததற்குக் காரணம் என்ன என்பதை அவனால் தெரிந்துகொள்ள முடியவில்லை. எனவே, அது எங்கே சென்றது என்பதை அறிந்து வருவதற்காக அவன் ஒரு குதிரைப் படையையும், ஒரு பீரங்கிப் படையையும் அனுப்பி னான். அவை பன்னிரண்டு மைல் தூரம் சென்று பார்த்தும் குமார சிம்மனின் படைகள் கண்களுக்குத் தென்படவில்லை.

பிறகு அவற்றை ஆங்கிலேயர்கள் கண்டுபிடித்தபோது, விரட்டுவார் யார், விரட்டப்படுவோர் யார் என்பதையே அறிந்துகொள்ள முடியாமல் போய்விட்டது. ஆங்கிலப் படையைக் கண்டு தேசீயப் படை கலங்குவதற்குப் பதிலாக, தேசீயப் படையைக் கண்டு ஆங்கிலப் படை திகிலடைந்தது. ஏனெனில் ஆங்கிலேயர்களைக் கண்டதும் தேசீய வீரர்கள் எல்லோரும் போருக்குத் தயாராக நின்றனர். ஆங்கிலக் குதி ரைப் படை பாய்ந்து முன்சென்றபோது தேசீயப் படை சிறிதும் கலங்காமல் சரமாரியாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில், ஏராளமான ஆங்கிலச் சிப்பாய்களும் அதிகாரிகளும் மாண்டு வீழ்ந்தனர். சதுரவடிவமாக நின்று தாக்கிய தேசீயப் படையின் அணிவகுப்பை ஆங்கிலேயர்கள் எவ்வளவோ முயன்றும் சிறிதும் பிளக்க முடியவில்லை. எனவே தேசீய வீரர்களை விரட்டி

அடிப்பதற்காக வந்த ஆங்கிலேயர்களுக்குத் தாங்கள் பிழைத்தால் போதும் என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது! அந்த யுத்தத்திற்குப் பின் குமாரசிம்மன் மீண்டும் தம் படையெடுப்பைத் தொடர்ந்து கங்கைக் கரையை நெருங்கிக்கொண் டிருந்தார்.

குமார சிம்மனின் படையை விரட்டிச் சென்ற ஆங்கிலப் படை படுதோல்வி அடைந்த செய்தி அஸிம்கடுக்கு எட்டியது. உடனே தளபதி டக்லஸ் சில துருப்புகளுடனும் பீரங்கிகளுடனும் அந்தப் படைக்கு உதவியாகப் புறப்பட்டான். டக்லஸ் ஏற்கனவே குமார சிம்மனிடம் அடிபட்டவன் ஆதலின், மிகவும் ஜாக்கிரதையாக நாகாய் என்ற ஒரு கிராமத்துக்கு வந்தபோது, அங்கும் குமார சிம்மனின் படைகள் ஆங்கிலேயர்களை 'வரவேற்க' ஆயத்தமாக இருந்தன. தம்மிடமிருந்து சமிக்ஞை கிடைக்கும் வரையில் டக்லஸின் படையை எதிர்த்து நிற்கும்படி முதல்தர வீரர்கள் அடங்கிய தம் படைக்கு உத்தரவு கொடுத்துவிட்டு, குமாரசிம்மன் மீதியுள்ள படைகளை இரு பிரிவுகளாகப் பிரித்து வெவ்வேறு பாதைகளின் வழியாகக் கங்கைக் கரைக்குச் செல்லும்படி கட்டளையிட்டார். மத்தியில் ஏற்படும் சில்லறைப் போர்கள் காரணமாகத் தம் படையெடுப்புத் திட்டத்துக்கு எவ்விதக் குந்தகமும் ஏற்படக் கூடாது என்பதே அவருடைய கவலையாகும்.

தேசீயப் படையின் இரு பிரிவுகள் ஆங்கிலேயர்களுக்குத் தெரியாமல் ரகசியமாகக் கங்கைக் கரையை நெருங்கிக்கொண் டிருக்கையில், முதல்தர வீரர்கள் அடங்கிய படை டக்லஸின் துருப்புகளை உக்கிரமாக எதிர்த்துக்கொண் டிருந்தது. டக்லஸின் பீரங்கிகளால் தேசீய வீரர்களில் ஏராளமானவர்கள் பலியாகியுங் கூட அவர்கள் குழப்பம் அடையவில்லை, பின்வாங்கவும் இல்லை, உக்கிரமான எதிர்ப்பை நிறுத்தவும் இல்லை! தேசீய வீரர்களிடம் பீரங்கிகள் இல்லாமலிருந்தும், அவர்களுடைய உறுதி காரணமாக இறுதியில் ஆங்கிலப் படைகளே சோர்வடைந்தன. குமார சிம்மன் பிரித்து அனுப்பிய இரு பிரிவுகளும் இறுதியில் ஒன்று சேர்ந்து, கங்கைக் கரையை அணுகிக்கொண் டிருந்தன.

சோர்வடைந்த ஆங்கிலப் படைகள் ஏப்ரல் மாதம் 17-ஆம் தேதி இரவு அதூஸி என்ற கிராமத்துக்கு அருகில் ஓய்வெடுத்துக் கொண்டன. மறுநாள் விடியற்காலை டக்லஸ் மீண்டும் தேசீய வீரர்களை எதிர்க்க ஆயத்தமானான். எனினும், அவர்கள் பதின்மூன்று மைல்களுக்கு அப்பால் சென்று, குமார சிம்மனுடன் சேர்ந்துகொண்டு விட்டார்கள் என்பது அப்போதுதான் அவனுக்குத் தெரிந்தது. உடனே ஆங்கிலக் குதிரைப் படையும், பீரங்கிப் படையும் மீண்டும் அவர்களைத் துரத்திச் சென்றன. மிகவும் களைப்படைந்திருந்த ஆங்கிலக் காலாட் படைகளை மாத்திரம் மற்றொரு நாள் ஓய்வெடுத்துக்கொள்ள டக்லஸ் அநுமதித்தான். குமார சிம்மனின் ஒற்றர்கள் மிகுந்த சாமர்த்தியசாலிகள் ஆதலால் பகைவர்களுடைய திட்டங்களை அப்போதைக்கப்போது சந்தேகத்துக்கு இடமின்றி அறிந்து வருவதில் வெற்றி பெற்றனர். ஆங்கிலப் படைகள் மிகவும் களைத்துப் போயிருக்கின்றன

என்பதையும் அவர்கள் குமார சிம்மனிடம் அறிவிக்கத் தவற வில்லை. அதைக் கேட்டதும் அவர் அந்தச் சந்தர்ப்பத்தைப் பூர ணமாக உபயோகப்படுத்திக்கொள்ள உறுதி கொண்டு, நடு நிசிக்கே படைகளுடன் புறப்பட்டார். சிக்கந்தர்புரி வந்து, கோக்ரா நதியைக் கடந்து, காஸிபுரி மாகாணத்துக்குள் பிர வேசித்தார். அவர் வெகு தூரம் உள்ள மனோகர் என்ற கிரா மத்துக்குச் சென்றபோது, சிப்பாய்கள் எல்லோரும் மிகவும் களைத்தும் பசியுடனும் இருந்ததால் அங்கே ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

அங்கே தங்குவது தங்களுக்குப் பாதகமாக முடியும் என் பதைக் குமார சிம்மன் அறிவாராயினும், அந்த நிலையில் வேறு எதுவும் செய்வதற்கில்லை. சில மணி நேரத்தில் டக்லஸும் அங்கே வந்து உடனே தாக்குதலை ஆரம்பித்தான். தேசீயப் படைகள் இடைவிடாமல் பல மைல்கள் தூரம் வந்த களைப்பால் மிகவும் சோர்வடைந்திருந்தன. ஆதலின், அந்தப் போரில் தோல்வி அடைந்ததுடன் தங்களிடம் இருந்த பல யானைகள், வெடி மருந்துகள், உணவுச் சாதனங்கள் முதலியவற்றையும் இழந்தன. அந்தச் சமயத்திலும் குமார சிம்மனின் தைரியம் சிறிதளவும் குன்றவில்லை. இன்னும் சிறிது நேரம் எதிர்த்து நின்றால் தம் படைகள் முற்றும் படுதோல்வி அடையும் என்பதை உணர்ந்த அவர், அதுவரை பல தடவைகளிலும் கையாண்ட தந்திர முறையையே மீண்டும் அநுஷ்டிக்க முற்பட் டார். அதாவது தம் படையைச் சிறு சிறு கோஷ்டிகளாகப் பிரித்து, ஒவ்வொரு கோஷ்டியும் வெவ்வேறு புறமாகப் பின்வாங் கும்படி செய்ததால், எந்தக் கோஷ்டியை விரட்டிச் செல்லுவது என்று தெரியாமல் டக்லஸ் திகைத்தான்.

வெவ்வேறு பாதைகளின் வழியாகப் பின்வாங்கிச் செல்லும் ஒவ்வொரு கோஷ்டியும் குறித்த நேரத்தில் குறிப்பிட்ட ஓர் இடத் தில் வந்து சேர்ந்துகொள்ள வேண்டும் என்றும் அவர் ரகசிய மாக உத்தரவிட்டார். அதற்கிணங்க, குறிப்பிட்ட இடத்தில் எல்லாக் கோஷ்டிகளும் வந்து ஒன்று சேர்ந்தன. குமார சிம்ம னின் படைகள் எங்கே சென்றன என்பதை டக்லஸ் தெரிந்து கொள்ள முடியாததால், அது தெரியும் வரையில் மனோகர் கிராமத்திலேயே தங்கியிருக்கத் தீர்மானித்தான். இதன் மத்தி யில் குமார சிம்மனின் வீரர்கள் எல்லாரும் மீண்டும் கங்கைக் கரையை அணுகிக்கொண் டிருந்தார்கள்.

இறுதியில் அவர்கள் கங்கைக் கரை வந்து சேர்ந்தார்கள். அதைக் கேள்வியுற்ற டக்லஸ் மீண்டும் அவர்களைப் பின்தொடர ஆரம்பித்தான். ஆங்கிலேயர்கள் தங்களை மறுபடியும் துரத்தி வருகிறார்கள் என்பதை ஒற்றர்களின் மூலம் அறிந்த குமார சிம்மன் வேறொரு தந்திரம் செய்தார். படகுகள் கிடைக்காத தால், புரட்சிக்காரர்கள் பலியா என்ற இடத்துக்கு அருகில் யானைகளின் மீது ஏறிக் கங்கையைக் கடக்கத் தீர்மானித்திருக் கிறார்கள் என்று ஒரு வதந்தியைக் கிளப்பிவிட ஏற்பாடு செய் தார். அந்த வதந்தியைக் கேள்வியுற்ற டக்லஸின் ஒற்றர்கள்

அதை அவனிடம் அறிவிக்கவே, அத்தகைய ஒரு முக்கிய ரகசியத்தை அறிந்து வந்ததற்காக அவன் அவர்களை மிகவும் பாராட்டினான். புரட்சிக்காரர்கள் யானைகளின் மீது ஏறிக் கங்கையைக் கடக்கும்போது அவர்களை ஒருவர்கூடப் பாக்கி யின்றிச் சுலபமாகச் சுட்டு வீழ்த்திவிடலாம் என்றும் அவன் சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தான்.

பின்னர், ஆங்கிலேயர்கள் எல்லாரும் பலிலாவிற்குச் சென்று மறைந்துகொண்டு ஒவ்வொரு விநாடியும் புரட்சிக்காரர் களை எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். யாரும் எதிர்பாராத விதம் தாங்கள் மகத்தான வெற்றி பெறப்போவ தைக் குறித்து அவர்கள் எல்லாரும் உள்ளூற ஆனந்தம் கொண்டனர். ஆனால் அதே சமயம் அங்கிருந்து ஏழு மைல் தூரத்துக்கு அப்பாலுள்ள ஓர் இடத்தில் குமாரசிம்மனின் சிப்பாய் கள் படகுகளில் கங்கையைக் கடந்து சென்றுகொண் டிருந்தார் கள். யானைகளின்மீதேறிக் கங்கையைக் கடக்கப்போவதாக வதந்தியைக் கிளப்பிவிட்டு ஆங்கிலேயர்களை ஏமாற்றிய பின், குமார சிம்மன் தம்மால் எத்தனை படகுகளைச் சேகரிக்க முடி யுமோ அவற்றைச் சேகரித்துக்கொண்டு, சிவபுரி கட்டத்தி லிருந்து தெய்விகமான பாகீரதி நதியை இரவில் கடந்து செல்ல முற்பட்டார்.

அதைக் கேள்வியுற்ற ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்ட ஆத் திரம் கொஞ்சமன்று. உடனே அவர்கள் பலிலாவிலிருந்து அவ சர அவசரமாகச் சிவபுரி கட்டத்துக்கு ஓடி வந்தனர். ஆனால் அதற்குள் பெரும்பாலான படகுகளும் அக்கரை சென்றுவிட்டன. கடைசியாகச் சென்ற ஒரு படகை மாத்திரமே ஆங்கிலேயர்கள் கஷ்டப்பட்டுக் கைப்பற்ற முடிந்தது. அக்கரை சென்றுகொண் டிருந்த படகுகளை நோக்கிப் பகைவர்கள் சரமாரியாகச் சுட்ட னர். இன்னும் சில நிமிஷ நேரத்தில் குமார சிம்மனும் அக்கரை சென்றிருப்பார். ஆனால் துரதிருஷ்டவசமாக அவருடைய கை மணிக்கட்டில் ஒரு தோட்டா பாய்ந்து ஊடுருவிச் சென்றது.

தேசத்தின் வீரமும் தைரியமும் சுதந்தர உணர்ச்சி யுமே உருவெடுத்து வந்த குமார சிம்மன் நெருக்கடியான அந்தச் சமயத்தில் படுகாயம் அடைந்தது நாட்டின் துர்ப்பாக்கியம் அல் லவா? வயோதிக வீரரான அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. இனி அந்தக் கை பயன்படாது என்று தெரிந்ததும் அந்த வீரர் தம் வாளை எடுத்து, காயமடைந்த கையை முழங்கைக்குக் கீழே தாமே வெட்டி, 'தாயே! உன் செல்வப் புதல்வன் உனக்கு அளிக்கும் இறுதிக் காணிக்கை இதுதான். இதை ஏற்றுக்கொள், என் தாயே!' என்று கூறி அதைப் புனித கங்கா நதியில் எறிந்து விட்டார்! ஆஹா, என்ன நெஞ்சழுத்தம்! என்ன வீரம்! என்ன தியாக புத்தி!

தாயான கங்கா தேவிக்குத் தன் கையைக் காணிக்கையாகக் கொடுத்த பின், அந்தப் பெரு வீரர் மேற்கொண்டு எவ்வித ஆபத் துமின்றி அக்கரை போய்ச் சேர்ந்தார். தன் கையிலிருந்து

தப்பிச் சென்ற இரையை வேடுவன் ஏமாற்றத்துடன் பார்த்துக்கொண்டு நிற்பது போலவே, நதியைக் கடக்க வழியின்றி ஆங்கிலேயர்கள் அந்தத் திசையைப் பார்த்துக்கொண்டே துக்கத்துடன் நின்றனர். அவ்வளவு தூரம் ஓய்ச்சல் ஒழிவின்றிக் கஷ்டப்பட்டும், குமார சிம்மனைத் தோற்கடிக்கவோ பிடிக்கவோ முடியாமற் போனதைக் குறித்து ஆங்கிலேயர் மிகவும் ஏமாற்றமும் வெட்கமும் அடைந்தனர். வேடுவர்களிடமிருந்து தப்பிய சிங்கம் ஷஹாபாத் காட்டை அடைந்து பின்னுல் ஜகதீசபுரி வந்து சேர்ந்தது.

இவ்வாருகக் குமார சிம்மன் தம் தலைநகரான ஜகதீசபுரிக்குள் ஏப்ரல் 23-ஆம் தேதி மறுபடியும் பிரவேசித்தார். எட்டு மாதங்களுக்கு முன் அவர் அந்த நகரை விட்டு வெளிச்செல்லும்படி நேர்ந்தது. ஆனுல் இப்பொழுது மீண்டும் ஜகதீசபுரி மன்னரே ஜகதீசபுரிக்கு வந்து சேர்ந்தார். குமார சிம்மன் கங்கையைக் கடக்கு முன்னமே அவருடைய சகோதரரான அமர சிம்மன் தேச பக்தர்களான விவசாயிகளும் கிராமவாசிகளும் அடங்கிய ஒரு படையைத் தயாராகச் சேகரித்து வைத்திருந்தார். அந்தப் படையும் குமார சிம்மன் படைகளுடன் சேர்ந்து கொண்டது.

படுகாயம் அடைந்தும் குமார சிம்மன் ஓய்வெடுத்துக் கொள்ளவில்லை. தம் படைகளைப் பல பிரிவுகளாகப் பிரித்து, நகரின் பல பாகங்களிலும் காவல் புரியுமாறு கட்டளையிட்டார். ஜகதீசபுரியைக் கண்காணித்து வருவதற்காக அங்கே வைக்கப் பட்டிருந்த ஆங்கிலப் படைகளுக்கு, குமார சிம்மன் திடீரென்று ஆரா வந்து சேரும்வரையில் எதுவுமே தெரியாது. குமார சிம்மன் ஜகதீசபுரிக்குள் பிரவேசித்திருக்கிருர் என்பதையே அவர்களால் நம்ப முடியவில்லை. தேசபக்தர்களின் வெற்றிக் கோலத்தைக் கண்டு ஆராவில் இருந்த ஆங்கிலத் தளபதியான கிராண்ட் ஒருங்கே சொல்லொணு ஆத்திரமும் திகிலும் அடைந்தான். கிழக்கு அயோத்தி முழுவதும் பரவி நின்ற ஆங்கிலப் படைகளையெல்லாம் ஏமாற்றிவிட்டு அவர் எவ்வாறு வந்தார் என்பதை அவனுல் கற்பனை செய்துகொள்ளவும் முடியவில்லை.

அவர் ஜகதீசபுரிக்குள் பிரவேசித்ததும் அன்றி, ஆங்கிலத் துருப்புகள் அருகில் இருப்பதையும் பொருட்படுத்தாமல் நகரை முன்போல் ஆட்சிபுரிய முற்பட்டதைக் கண்டு லே கிராண்ட் கோபவெறி கொண்டான். எட்டு மாதங்களுக்கு முன் அயர் எவ்விதம் குமார சிம்மனை ஜகதீசபுரியிலிருந்து விரட்டினுனே, அதைப்போல் தானும் அவரை விரட்டிக் கீர்த்தி பெற வேண்டும் என்ற ஆசை லே கிராண்டை ஆட்கொண்டது. அவ்விதம் விரட்டுவது எளிது என்ற நம்பிக்கையுடன் அவன் நூற்றுக்கணக்கான துருப்புகளுடனும் பீரங்கிகளுடனும் ஏப்ரல் 23-ஆம் தேதி ஜகதீசபுரிமீது படையெடுத்தான்.

அந்தப் படையைக் குமார சிம்மன் எவ்வாறு சமாளிக்க முடியும்? சென்ற பல மாதங்களாக அவர் இடைவிடாமல் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போர் புரிந்திருக்கிருர். ஒரு விநாடிகூட ஓய்

வின்றித் தொண்டு செய்து வந்திருக்கிறார். அவருடைய படைகளோ ஒரு வேளைகூட நிம்மதியாக முழு ஆகாரம் சாப்பிடவில்லை. ஓர் இரவுகூட நிம்மதியாகத் தூங்கவில்லை. கிழக்கு அயோத்தி நெடுக ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடியவண்ணம் நேற்றுத்தான் ஜகதீசபுரி வந்து சேர்ந்தார். அவரும் அவருடைய படைகளும் இன்னும் ஒரு நாள்கூட ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லை. தேசீயச் சிப்பாய்கள் எல்லாரும் மிகவும் களைத்திருந்தனர். அவர்களிடம் போதிய ஆயுதங்களும் இல்லை. போதாக் குறைக்கு, குமார சிம்மனுக்குப் படுகாயமும் ஏற்பட்டு விட்டது. அவரிடம் பயிற்சி பெற்ற துருப்புகள் வெகு சொற்பமாகவே இருந்தன.

இவற்றை யெல்லாம் மனத்திற் கொண்டே லே கிராண்ட் அவரை வெகு சுலபமாக முறியடித்துவிடலாம் என்று நினைத்தான். அவனுடைய படைகள் பல நாட்களாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்ததால் சோர்வின்றியும் ஆரோக்கியத்துடனும் காணப்பட்டன. உற்சாகத்துடனும் ஒழுங்குடனும் கூடிய அவற்றிடம் ஏராளமான ஆயுதங்களும் இருந்தன. தனக்கு நிச்சயம் மகத்தான வெற்றி கிடைக்கப்போகிறது என்பதில் லே கிராண்டிற்கு எள்ளளவும் சந்தேகம் ஏற்படவில்லை.

இவ்விதம் பூரண நம்பிக்கையுடன் ஆங்கிலப் படை நகரிலிருந்து சுமார் ஒன்றரை மைல் தூரத்திலுள்ள காட்டுக்குள் பிரவேசித்தது. குமார சிம்மனிடம் பீரங்கிகள் இல்லாமையால், ஆங்கிலேயர்களின் பீரங்கிகள் எதிர்ப்பு எதுவும் இன்றி இடி முழக்கம் செய்யத் தொடங்கின. சிறிது நேரத்திற்குள் குமார சிம்மனின் படைகள் சின்னபின்னமாகிவிடும் என்று ஆங்கிலேயர்கள் நினைத்தனர். ஆனால் அதற்கு மாறாகத் தேசீயப் படைகள் பகைவர்களைச் சூழ்ந்துகொள்ளத் தொடங்கின.

அதைக் கண்ட லே கிராண்ட் எக்காலத்திலும் பலனைக் கொடுக்கத் தவறாத தங்களுடைய 'அரு மருந்தை' உபயோகிக்க முற்பட்டான். துணிச்சலுடன் நேரடியாகத் தாக்கி ஆசியாக் காரர்களைத் திகிலடையச் செய்வதுதான் அந்த மருந்து என்பது முந்திய அத்தியாயத்தில் குறிப்பிடப்பட் டிருக்கிறது. அவ்விதமே தாக்கும்படி லே கிராண்ட் தன் துருப்புகளுக்கு உத்தரவிட்டான். தாங்கள் பாய்ந்து தாக்கும் வேகத்தில் தேசீயப் படைகள் திகில் கொண்டு சிதறிவிடும் என்று ஆங்கிலேயர்கள் நினைத்தனர். ஆனால் அதற்கு மாறாகக் குமார சிம்மனின் வீரர்கள் அந்தத் தாக்குதலை வெகு துணிச்சலுடன் எதிர்த்து நிற்கலாயினர். அவர்கள் எவ்வாறு எதிர்த்தனர் என்பதை யாரும் அறியார். ஆனால் சிறிது நேரத்தில் ஆங்கிலப் படைகள் திகிலடைந்தும் சிதறுண்டும் ஓட முற்பட்டன என்பது ஆங்கில சரித்திராசிரியர்கள் ஒப்புக்கொண்ட உண்மையாகும். தேசீயப் படைகள் அவர்களைச் சூழ்ந்துகொண்டதால், அவர்கள் ஓடவும் முடியாமல் போயிற்று. நேரடியாகத் துணிச்சலுடன் தாக்குவது என்ற அவர்களுடைய உறுதி, தேசீயப் படைகளின் உக்கிரமான எதிர்ப்பின் முன்னிலையில் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது.

அன்று அவர்கள் போர்க்களத்திலிருந்து ஓடியதுபோல அதற்கு முன் ஒருபோதும் ஓடியதில்லை. ஒவ்வோர் ஆங்கிலச் சிப்பாயும் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள எங்கே இடைவெளி கிடைத்ததோ, அதன் வழியாக ஓட முற்பட்டான். குமார சிம்மனின் படைகள் அவர்களை விரட்டியடித்தன. இவ்வாறாக ஆங்கிலேயர்கள் அந்தப் போரில் படுதோல்வி அடைந்தார்கள்.

அந்தப் போரில் கலந்துகொண்ட ஓர் ஆங்கிலேயன் தன் அநுபவத்தைப்பற்றித் தான் எழுதிய கடிதம் ஒன்றில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறான்: 'அன்றைப் போரில் நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றி எழுத எனக்கு மிகவும் வெட்கமாக இருக்கிறது. நாங்கள் எல்லாரும் புரட்சிக்காரர்களால் முறியடிக்கப்பட்டுப் போர்க்களத்தை விட்டு ஓடினோம். நம் துருப்புகளில் சிலர் தாகம் தாங்க முடியாமல் சேறும் சகதியும் நிறைந்த ஒரு குட்டையைக் கண்டதும் தண்ணீர் குடிப்பதற்காக ஒருவருக்கு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு ஓடினர். அதே சமயம் குமார சிம்மனின் குதிரைப் படைகள் எங்களை விரட்டி வந்ததால், தண்ணீர் குடிக்க வழியின்றி நாங்கள் மீண்டும் ஓட்டம் பிடித்தோம். அன்று நாங்கள் அடைந்த அவமானத்துக்கு எல்லையே இல்லை. ஒவ்வொருவரும் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காகத் திகிலடைந்தும் திக்குத் திசை தெரியாமலும் ஓடினர். அதிகாரிகளின் கட்டளைகள் காற்றுவாக்கில் பறந்தன. ஒழுங்கு என்பதே அடியோடு மறைந்தது. எங்கே பார்த்தாலும் நம் துருப்புகளிடையே பிரலாபங்களும் பெருமூச்சுக்களும் கூக்குரல்களுமே கிளம்பின. நம்மில் பலர் கடுமையான வெயிலைத் தாங்க முடியாமல் மூர்ச்சையாகி மாண்டனர். வைத்தியசாலையையும் குமார சிம்மன் கைப்பற்றிக்கொண்டதால் மருந்தும் கிடைக்கவில்லை. எனவே, மற்றும் பலர் சோர்ந்து மாண்டனர்; பாக்கியிருந்தவர்களைப் பகைவர்கள் வெட்டி வீழ்த்திவிட்டார்கள். டோலிகளைத் தூக்குவோர் அவற்றை அப்படியே போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். எங்கே நோக்கினும் குழப்பமும் திகிலும் தாண்டவமாடின. நம்மிடையே படுகாயம் அடைந்தவர்களைப் பதினாறு யானைகளில் ஏற்றிச் செல்லவேண்டியதாயிற்று. மார்பில் தோட்டா பாய்ந்து தளபதி லே கிராண்டும் மாண்டான். நம் சிப்பாய்கள் குமார சிம்மனிடமிருந்து தப்புவதற்காக ஐந்து மைல் தூரம் ஓடியதால், அவர்களுக்குத் துப்பாக்கிகளைத் தூக்குவதற்குக்கூடச் சக்தி இல்லை. கடும் வெயிலைத் தாங்கும் பழக்கமுள்ள சீக்கியர்களோ எனில், யானைகளின்மீது ஏறி எல்லாருக்கும் முன்னதாக ஓடிவிட்டார்கள். வெள்ளையர்களுடன் சேர்ந்து செல்லவும் அவர்கள் மறுத்துவிட்டனர். அந்தப் பயங்கரமான படுகொலையிலிருந்து சுமார் எண்பது பேரே உயிர் தப்ப முடிந்தது. ஆடு மாடு அடைக்கும் தொட்டிக்குள் கால்நடைகளைக் கொண்டு செல்வது போலவே, நாங்களும் பலியாவதற்காக அந்தக் காட்டுக்குள் அழைத்துச் செல்லப்பட்டோம்.' இந்தக் கடிதம் சார்லஸ் பால் எழுதியுள்ள சரித்திரத்தில் வெளியாகியிருக்கிறது.

இவ்வாறுகக் குமார சிம்மனின் படைகள் அன்று பூரண வெற்றி பெற்றன. தேசீயப் படைகளுக்குப் பீரங்கிகளின் உதவி இல்லாமல் இருந்துங்கூட அவை ஆங்கிலேயர்களை முறியடித்து, பகைவர்களின் பீரங்கிகளையும் கைப்பற்றிய சாகசத்திற்கு உவமையே இல்லை. அந்த யுத்த சம்பந்தமான ஓர் அற்புத உண்மை குறிப்பிடத் தக்கதாகும். ஆங்கிலேயர்களின் பக்கத்தில் அன்று ஒன்பது சீக்கியர்களே மாண்டனர். குமார சிம்மன் விடுத்திருந்த கண்டிப்பான கட்டளையே அதற்குக் காரணமாகும். இந்தியர்கள் பகைவர்களின் பக்கம் இருப்பினும் அவர்களுடைய உயிருக்கு எவ்வித ஆபத்தும் விளைவிக்கக் கூடாது என்பது குமார சிம்மனின் பொதுவான கட்டளை. ஆனால் நாட்டை அடிமைப் படுத்தியுள்ள அந்நியர்களிடம் அணுவளவும் இரக்கம் காட்டக் கூடாது என்றும் அவர் கண்டிப்பாக உத்தரவிட்டிருந்தார்.

ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொண்டதற்காகப் புரட்சியின் ஆரம்பத்தில் பல வங்காளிகள் கைது செய்யப்பட்டார்கள். எனினும், குமார சிம்மன் அவர்கள் எல்லாரையும் விடுதலை செய்ததுடன், அவர்களுடைய விருப்பத்திற்கு இணங்க அவர்களை யானைகளின்மீது ஏற்றிப் பாடலிபுரத்துக்கு அனுப்பினார். ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்த எல்லாத் தஸ்தாவேஜுகளையும் எரித்துவிடுவது என்று சிப்பாய்கள் தீர்மானித்தபோது, அவ்விதம் செய்யக்கூடாது என்று தடுத்தவர் குமார சிம்மன்தாம். 'அவ்விதம் எரித்துவிட்டால், தேசத்திலிருந்து ஆங்கிலேயர்களை விரட்டியபின், ஜனங்களின் உரிமைகள் சம்பந்தமாகவும், யார் யாருக்கு என்ன தொகை கொடுக்க வேண்டும் என்பதுபற்றியும் எவ்விதச் சாட்சியும் இல்லாமல் போய்விடும்' என்று குமார சிம்மன் கூறி, தஸ்தாவேஜுகள் தீக்கு இரையாகாமல் தடுத்தார்.

பகைவர்களை அடியோடு முறியடித்த பின் ராணு குமார சிம்மன் ஏப்ரல் மாதம் 23-ஆம் தேதி ஜகதீசபுரியிலுள்ள தம் அரண்மனைக்குள் பிரவேசித்து, மீண்டும் கிரீடத்துடனும் கீர்த்தியுடனும் விளங்கலானார்.

பாரத அன்னையின் வீரத் தவப் புதல்வரான குமார சிம்மனை நாம் காண்பது இதுதான் கடைசி முறையாகும். ஏனெனில், கங்கை நதியைக் கடந்தபோது கையில் தோட்டா பாய்ந்து படுகாயமுற்ற அவர், அதன் விளைவாக 26-ஆம் தேதி காலமானார். கீர்த்தி வாய்ந்த ராணுவாகவே அவர் தம் அரண்மனையில் மாண்டார். சுதந்தரக் கொடியின் கீழ் ஒரு சுதந்தர மன்னராகவே உயிர் நீத்தார். அவர் மாண்ட தினத்தன்று ஜகதீசபுரியில் ஆங்கிலக் கொடி பறக்கவில்லை! பொன்மயமான சுதந்தரக் கொடியே பறந்துகொண் டிருந்தது! அந்தக் கொடியின் குளிர்ந்த நிழலிலேயே அவரது ஆவி பிரிந்தது! ஒரு ராஜபுத்திர வீரருக்கு அதைக் காட்டிலும் சிறந்த மரணம் வேறு என்ன இருக்க முடியும்! ஆங்கில சரித்திராசிரியரான ஹோம்ஸ், வீர மரணம் அடைந்த குமார சிம்மனுக்கு அஞ்சலி செய்துள்ளார்.

தமக்கு இழைக்கப்பட்ட அக்கிரமங்களுக்காக அவர் ஆங்கிலேயர்களின்மீது வஞ்சம் தீர்த்துவிட்டார். தம்மிடம் இருந்த

அற்பப் படை வசதிகளைக் கொண்டு, கட்டுக்கோப்பும் ஒழுங்கும், ஒற்றுமையும் ஆயுத பலமும் பொருந்திய மாபெரும் ஆங்கிலப் படை படுதோல்வி அடையும்படியும் செய்துவிட்டார். நாட்டை இறுக்கியிருந்த அடிமைச் சங்கிலியைத் தகர்த்து அதை விடுதலை செய்தார். தனி ஒரு மனிதர் அத்தகைய மகத்தான காரியங் களைச் செய்தது அற்புதமான விஷயமாகும். கடைசியாக அந் தப் பெரியார் நோய்வாய்ப்பட்டு இறக்கவில்லை. போர்க்களத் தில் ஏற்பட்ட காயத்தால் மாண்டார். இந்தியத் தாயின் விடு தலைக்காக அதைக் காட்டிலும் சிறந்த தியாகம் ஏதாவது உண்டா? அவரது வாழ்க்கையின் சிறப்புக்கு எவ்விதம் சரித்திரத்தில் உவமை காண்பது அரிதோ, அதுபோலவே அவரது மரணத்தின் சிறப்புக்கும் உவமை காண்பது அரிது!

குமார சிம்மனிடம் பல அபூர்வ குணங்கள் அமைந்திருந் தன. அவருடைய ஒப்பற்ற துணிச்சலும் சீரிய ஒழுக்கமும், தேசீயச் சிப்பாய்களிடையே இன்றியமையாத அம்சங் களான ஒழுங்கையும் தைரியத்தையும் உண்டுபண்ணின. தேசத் தொண்டில் ஈடுபட்டுத் தலைமை வகிப்போர் ஒருங்கே இணையற்ற திறமையும் சொந்த வாழ்க்கையில் எவராலும் ஆட்சேபிக்க முடி யாத ஒழுக்கமும் வாய்க்கப் பெற்றிருப்பது மிக மிக அரிதாகும். ஆனால் குமார சிம்மனிடம் அவ்விரு அம்சங்களும் நிறைந்திருந் தன. அவருடைய பரிசுத்தமான வாழ்க்கை மக்களிடையே அவ ருக்கு மிகுந்த செல்வாக்கை உண்டுபண்ணியதுபோல், அவரிடம் மதிப்பையும் மரியாதையையும் அடிப்படையாகக் கொண்ட பீதி யையும் உண்டுபண்ணின. அந்தப் பெரியார் எங்கே பார்த்துவிடு வாரோ என்று பயந்து யாரும் தங்கள் வீடுகளின் தாழ்வரை களில் சுருட்டுப் பிடிக்கக்கூடத் துணிய மாட்டார்கள்!

1857-ஆம் ஆண்டில் இந்தியாவில் இருந்த தலைவர்களுள் ராணுவ நிர்வாகத் திறமையிலும் படையெடுப்புத் தந்திரத் திலும் குமார சிம்மனுக்கு இணையானவர் எவருமே இல்லை. அப் போது நிகழ்ந்த சுதந்தர யுத்தத்தில், மறைந்திருந்து திடீர்த் திடீ ரென்று பகைவர்களைத் தாக்குவதால் ஏற்படக் கூடிய மகத்தான பயன்களை முதல் முதலாக அறிந்து, அந்த முறையைச் செயலில் காட்டி வெற்றி பெற்றவர் அவர்தாம். சிவாஜியின் அடிச்சுவடு களைப் பின்பற்றித் தந்திர யுத்தங்களில் ஈடுபட்டவரும் அந்த வீரர்தாம்.

குமார சிம்மனைப்போல் தாதியா டோபேயும் சில குறிப்பிட்ட அம்சங்களில் உயர்ந்தவரே. தாதியாவும் தம் துருப்புகளையோ, அல்லது நினைத்த மாத்திரத்தில் ஏராளமான துருப்புகளைச் சேகரிப்பதில் தமக்குள்ள சக்தியையோ பகைவர் கள் அடியோடு நசுக்கிவிட இடம் கொடுக்கவில்லை. ஆனால் குமார சிம்மனோ அவ்விதம் நசுக்க இடங் கொடுக்காததுடன், மிகுந்த பலமும், ஏராளமான ஆயுத சாதனங்களும் உள்ள பகை வர்களை நசுக்குவதிலும் வெற்றி பெற்றார். மறைந்திருந்து திடீர்த் தாக்குதலில் ஈடுபடுவோர், தம் துருப்புகளிடையே சீர் குலைவு ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுதல் மிக அவசியம்

ஆகும். இறுதி வெற்றி பெற அதுதான் வழி. மிக்க பலம் பொருந்திய பகைவர்களை எதிர்த்து நிற்க விரும்பாமல் அடிக்கடி போர்க்களத்திலிருந்து ஓடுவதாலோ, அடிக்கடி யுத்தத்தைத் தவிர்ப்பதாலோ துருப்புகள் சீர்குலைந்துவிடும்.

மறைந்திருந்து திடீர் யுத்தத்தில் ஈடுபடுவோர், கோழைத் தனம் காரணமாகப் போர்க்களத்தை விட்டுச் செல்லுவது என் பதைக் கனவிலும் கருதக்கூடாது. அதற்கு மாறாகப் பகைவர் களின் மனத்தில் திகிலும் தம் துருப்புகளிடையே மிகுந்த நம்பிக் கையும் உண்டாகும்படி செய்ய வேண்டும். பகைவர்களின் பலம் மிகவும் அதிகமாக இருந்து, தங்களுக்கு நிச்சயம் வெற்றி கிடைக் காது என்று தோன்றும் சந்தர்ப்பங்களில், யுத்தத்தில் ஈடுபடும் படியான நிலைமை ஏற்படாமல் தவிர்த்துக்கொள்வதே புத்தி சாலித்தனமாகும். போரில் இறங்கியபின் கோழைத்தனத்தினால் ஓடுவது இறுதியில் பெரும் ஆபத்தாக முடியும். அதற்கு மாறாக, வெற்றியாயினும் தோல்வியாயினும், இருப்பினும் இறப்பினும், இறுதிவரையில் போராடியே தீர வேண்டும். அதாவது பவன்கிண் டில் போரிட்ட பாஜியைப் போலவும், தாணு நதியில் போரிட்ட குமார சிம்மனைப் போலவும் போரிட வேண்டும். பகைவர்களை எதிர்த்து நிற்பதற்குப் போதிய பலம் தம்மிடம் இல்லை என்பதை உணர்ந்த தலைவர் யுத்தத்தில் சிக்கிக்கொள்ளக் கூடாது. பகைவர் களுக்குச் சமமான பலம் தம்மிடம் இருக்குமாயின், போரில் குதித்து இறுதி வரையில் ஒரு கை பார்த்துவிட வேண்டும். தாம் விரும்பிப் போரில் இறங்கினாலும் சரி, அல்லது தமது விருப்பத் துக்கு விரோதமாகப் போர் செய்யும்படி நேர்ந்தாலும் சரி, பின்பு பயம் அல்லது ஒழுங்கின்மை காரணமாக அதைக் கை விடுவது என்ற பேச்சே இருக்கக் கூடாது. பெருந் தோல்வியாயி னும் மரணமாயினும் போரைத் தொடர்ந்து இறுதிவரையில் நடத்தியே தீர வேண்டும். போரில் தோல்வியடையலாம்; ஆனால் புகழுக்கும் பெருமைக்கும் களங்கம் ஏற்படும்படி நடந்து கொள்ளக் கூடாது.

பயத்தினாலும் திகிலினாலுமே தாதியாவின் துருப்புகள் பல இடங்களில் தோல்வியடைந்தன. ஆனால் குமார சிம்மனோ தம் துருப்புகளிடையே திகில் உண்டாகச் சிறிதும் இடம் கொடுக்க வில்லை. அவருடைய படைகளை ஆங்கிலேயர்கள் விரட்டி வந் தார்கள். அந்த நிலைமையில்கூடத் தாங்கள் ஆங்கிலேயர் களை எதிர்த்து நிற்க முடியாது என்ற எண்ணம் அந்தப் படை களுக்கு உண்டாகவில்லை. குமார சிம்மனின் இணையற்ற தைரி யமே அதற்குக் காரணம். அவருடைய தைரியத்தையும் உறுதி யையும் கண்டு, தேசியப் படைகளுக்குத் தாங்கள் வெற்றி அடைந்தே தீருவோம் என்பதில் நம்பிக்கை உண்டாயிற்று. குமார சிம்மன் உற்ற சந்தர்ப்பம் பார்த்துத் தந்திரமாகப் பகை வர்களுக்கு அடி கொடுத்து அந்த நம்பிக்கை நீடித்திருக்குமாறு செய்தார்.

ஆனால், தாதியாவோ பல தோல்விகள் காரணமாகத் தம் துருப்புகளெல்லாம் முற்றும் சீர்குலைந்த பின்புதான், மறைந்

திருந்து திடீர்த் தாக்குதலில் ஈடுபட வேண்டியதாயிற்று. ஏற்கனவே நடந்த போர்களில் சிறந்த நிபுணர்களும் வீரர்களும் பலியாகிவிட்டதால், அவர் மகா தந்திரசாலியாக இருந்தும் திடீர்த் தாக்குதலை வெற்றிகரமாக நடத்த முடியவில்லை. அதனாலேயே தாதியா தம் துருப்புகளிடையே உண்டான குழப்பத்தினாலும் பீதியினாலும் சிற்சில சமயங்களில் போர்க்களத்தை விட்டுச் செல்ல நேர்ந்தது.

குமார சிம்மனோ வீர சிவாஜியைப் போலவே, தம் துருப்புகளின் மனத்தில் அவநம்பிக்கை உண்டாக ஒரு விநாடியும் இடம் கொடுத்ததில்லை; அதற்கு மாறாக அவர்களுக்குத் தங்கள் சொந்த பலத்திலும் தம்மிடத்திலும் மிகுந்த நம்பிக்கையை உண்டு பண்ணினார். போரை நடத்துவதிலும் அதைத் தவிர்ப்பதிலும் குமார சிம்மன் தமக்குள்ள இணையற்ற திறமையைப் பல தடவைகளிலும் வெளிப்படுத்தினார். அதனால்தான் அவர் மிகவும் பலம் பொருந்திய தம் பகைவர்களையும் படுதோல்வி அடையும்படி செய்து சுதந்தரக் கொடியின் கீழே சிம்மாசனத்தில் சுதந்தர மன்னராக உயிர் நீத்தார்.

ஏப்ரல் 26-ஆம் தேதி குமார சிம்மன் வீர சுவர்க்கம் அடைந்த பின், அவரது ஸ்தானத்தை அவருடைய இளைய சகோதரரான அமர சிம்மன் ஏற்றுக்கொண்டார். தமையனாரைப் போலவே தம்பியும் சுதந்தரப் போரின் வேகம் சிறிதும் குன்றாதவாறு அதை நடத்தலானார். அமர சிம்மனும் அவருடைய வீர சகோதரரைப்போல், அஞ்சா நெஞ்சம், மிகுந்த தேச பக்தி, ஒழுக்கம் போன்ற சீரிய குணங்கள் வாய்க்கப் பெற்றவர். தம் சகோதரர் காலமான பின் அவர் நாலு நாட்கள்கூட ஓய்வெடுத்துக்கொள்ளவில்லை. உடனே ஆராவைத் தாக்குவதற்காகப் புறப்பட்டார்!

லே கிராண்ட் தோல்வியுற்றதைக் கேள்விப்பட்ட ஆங்கிலேயர்கள் சிறிதும் தாமதமின்றி அமர சிம்மன்மீது படையெடுக்க முற்பட்டனர். டக்லஸ், லூகார்ட் இவர்களின் தலைமையில் ஆங்கிலப் படைகள் மே 3-ஆம் தேதி படையெடுப்பை ஆரம்பித்தன. பீஹியா, ஆதம்புரி, தலில்புரி முதலிய பல இடங்களிலும் இருந்து தேசீயப் படைகளை ஆங்கிலேயர்கள் அடிக்கடி தாக்க ஆரம்பித்ததால், அமர சிம்மன் புதிய தந்திர முறைகளைக் கைக்கொண்டார். அதாவது, போரில் பகைவர்களின் கை ஓங்குவது போல் தோன்றினால், அவர் தம் படைகளைச் சிறு சிறு கோஷ்டிகளாகப் பிரித்து, பல்வேறு திசைகளின் வழியாகவும் சென்று ரகசியமாக ஓரிடத்தில் ஒன்று சேரும்படி உத்தரவிடுவார். அதனால் அவர்களை விரட்டிச் செல்வது ஆங்கிலேயர்களுக்கு அசாத்தியமாகிவிடும். அவ்விதம் திடீரென்று மாயமாக மறைந்து செல்லும் படைகளை எவ்வாறு சமாளிப்பது என்பது அவர்களுக்கு ஒரு பெரும் பிரச்னையாகியது.

ஒவ்வொரு போரிலும் அவர்களுக்கு வெற்றி கிடைப்பது நிச்சயம் என்று தோன்றினாலும், இறுதியில் அமர சிம்மனின் மகத்தான தந்திர முறைகளால், அவர்கள் வெற்றி பெற முடி

யாமல் போயிற்று. போர்க்களத்திலிருந்து திடீரென்று மறைந்து பின்னர் மீண்டும் முழுபலத்துடன் வரும் படையைப் பகைவர்கள் எவ்வாறு தோற்கடிக்க முடியும்? காட்டின் ஒரு புறத்திலிருந்து அவரை விரட்டினால், மற்றொரு புறத்தில் கிளம்பு வார். அங்கே பகைவர்கள் சென்றால் மீண்டும் முன்னால் இருந்த இடத்துக்கே வந்துவிடுவார்! அவருடைய தந்திர முறைகளால் ஆங்கிலேயர்கள் சோர்வும் வெட்கமும் ஏமாற்றமும் அடைந் தனர். அத்தகைய நிலைமையைச் சகிக்க முடியாமல் தள பதி லூகார்ட் ஜூன் மாதம் 15-ஆம் தேதி தன் பதவியை ராஜீ நாமாச் செய்துவிட்டு, ஓய்வெடுத்துக் கொள்வதற்காக இங்கி லாந்து சென்றான். அவன் படைகளும் போர்க்களத்தை விட்டு முகாமுக்குச் சென்றன!

பகைவர்கள் இவ்விதம் அடங்கி ஒடுங்கியதைக் கண்டதும் அமர சிம்மன் சிறிதும் தாமதமின்றித் தேசீயப் படைகளையெல் லாம் ஒன்று திரட்டி, மகத்தான வெற்றி பெற்ற ஒரு தளபதியைப் போல் போர்க்களத்துக்கு வந்தார். அவருடைய சிறந்த ராணுவ தந்திரம் காரணமாக, வெற்றி பெறும் சக்தியுள்ள ஆங்கி லேயர்கள் தோல்வியடைந்தவர்கள்போல் எதுவும் செய்ய முடி யாமல் முகாமுக்குத் திரும்பிச் சென்றனர்.

கயாவைச் சேர்ந்த போலீஸ் படைகளையும் அமர சிம்மன் தம் வசப்படுத்திக்கொண்டார். தேசீயப் படைகளுடன் தாம் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தைத் தாக்கச் செல்லுவதுபோல் அவர் பாய்ச்சல் காட்டிவிட்டு, ஆங்கிலேயர்கள் அவசர அவசர மாக அவ்விடத்துக்குச் சென்றுகொண் டிருக்கையில் ஆரா நக ரைத் தாக்கி அதற்குள் பிரவேசித்துவிட்டார்.

ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்கள் கழிந்தன. ஜகதீச புரி அரண்மனைச் சிகரங்களின்மீது சுதந்தரக் கொடியே வான ளாவப் பறந்துகொண் டிருந்தது. மக்களின் மனப்பூர்வமான அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரரான ராஜா அமர சிம்மனே ஆட்சி புரிந்துகொண் டிருந்தார். அதைக் கண்ட ஆங்கிலேயர் களுக்கு வயிறு எரிந்தது. எப்படியாவது அமர சிம்மனை ஒழித்து விடுவதாகத் தளபதி டக்லஸும், அவனது படையைச் சேர்ந்த ஏழாயிரம் ஆங்கிலச் சிப்பாய்களும் சபதம் செய்தார்கள். அமர சிம்மனின் தலையைக் கொண்டு வருவோருக்கு ஏராளமாக வெகு மதி கொடுப்பதாகவும் விளம்பரம் செய்தனர். ஜகதீச புரிக் காடுகளை அழித்துச் சாலைகள் போட்டு, அவற்றின் வழியாக ஆங்கிலேயர்கள் படையெடுக்கத் தொடங்கினர். அதைத் தடுக்க அமர சிம்மன் புதிய புதிய முறைகளைக் கைக்கொள்ளவே, ஆங்கிலேயரின் முயற்சிகள் இறுதியில் வீணாயின. அமர சிம்ம னின் தந்திர முறைகளைக் கண்ட மக்கள் குமார சிம்மன் இறக்க வில்லையோ என்று கருதினர்.

இத்தகைய வெட்கக்கேடான நிலைமைக்கு முடிவு காண இறுதியாக ஒரு பெருமுயற்சி செய்து பார்த்துவிடுவது என்று ஆங்கிலேயர்கள் உறுதி கொண்டார்கள். அதற்கிணங்க ஏழு படைப் பிரிவுகள் ஏழு திசைகளிலிருந்து ஜகதீசபுரிமீது படை

யெடுத்தன. இவ்வாறாக, ஜகதீசபுரி செல்லும் ஏழு சாலைகளும் அடைபட்டு விட்டதால், எலியைப்போல் அமர சிம்மன் பொறியில் அகப்பட்டுக்கொண்டு விட்டதாக வெள்ளையர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். அந்தப் படைச் சங்கிலி வளையம் அமர சிம்மனைச் சிறிது சிறிதாக இறுக்கத் தொடங்கியது. அக்டோபர் 17-ஆம் தேதி ஆங்கிலப் படைகள் தலைநகரைச் சூழ்ந்துகொண்டன. அந்த வலையில் நிச்சயமாக அமர சிம்மன் அகப்பட்டே தீருவார் என்று பகைவர்கள் கருதினர். குறிப்பிட்ட ஒரே சமயத்தில் அவர்கள் பல திசைகளிலிருந்து நகருக்குள் பிரவேசித்தனர். ஆனால் இறுதியாகக் கூண்டுதான் அவர்களின் கையில் சிக்கியதே அன்றி, அதற்குள் இருந்த சிங்கம் எவ்வித ஆபத்தும் இன்றித் தப்பி ஓடிவிட்டது.

ஆங்கிலேயர்களின் திட்டத்திற்கு இணங்க ஆறு பிரிவுகள் குறிப்பிட்ட சமயத்தில் நகரைச் சூழ்ந்துகொண்டன. எனினும் ஏழாவது பிரிவு ஐந்து மணி நேரம் தாமதித்தே வந்து சேர்ந்ததால், மகா தந்திரசாலியான அமர சிம்மன் தம் படைகளுடன் அந்த இடைவெளி வழியாக மாயமாக மறைந்துவிட்டார். நகரைக் கைப்பற்றுவதைக் காட்டிலும் புரட்சிப் படைகளை அழிப்பது முக்கியமாதலால், அமர சிம்மன் மாயமாக மறைந்ததைக் கண்டு ஆங்கிலேயர்கள் மிகுந்த ஏமாற்றம் அடைந்தனர். அவர்கள் தப்பிச் சென்ற புரட்சிப் படைகளை விரட்டிச் சென்று அழிப்பதற்காக ஒரு குதிரைப் படையை அனுப்பினார்கள். அந்தப் படைக்கு உதவியாகவும் மேற்கொண்டு இடைவிடாமல் படைகள் சென்றுகொண்டிருந்தன. இதன் விளைவாக அமர சிம்மன் ஒரு விநாடிகூட ஓய்வு எடுத்துக்கொள்ள முடியவில்லை.

அப்போது பகைவர்களுக்குப் புது மாதிரியான துப்பாக்கிகளும் வந்து சேர்ந்தன. அதனால் தேசீயப் படைகளின் பழைய ரகத் துப்பாக்கிகள் பயனற்றுப் போயின என்றே சொல்லவேண்டும். இவ்வாறு அமர சிம்மன் பல்வேறு கஷ்டங்களுக்கு உட்படும்படி நேர்ந்தும், பகைவர்களிடம் சரண் அடைவது என்ற எண்ணம் அவருக்குக் கனவிலும் எழவில்லை.

அக்டோபர் 19-ஆம் தேதி ஆங்கிலப் படைகள், நவநதி கிராமத்துக்கு வந்து, தேசீயப் படைகள் அடங்கிய ஒரு கோஷ்டியைச் சூழ்ந்துகொண்டன. அதில் நூறு பேர் இருந்தனர். அவர்கள் எல்லோரும் புலிகளைப்போல் பாய்ந்து பகைவர்களை எதிர்த்தனர். எனினும், ஆங்கிலேயர்களிடம் அபரிமிதமான ஆயுதங்கள் இருந்ததால் அந்த நூறு பேர்களில் மூவர் மாத்திரமே உயிர் தப்ப முடிந்தது. அம் மூவரில் ராணா அமர சிம்மனும் ஒருவர். அவரும் மாறுவேடம் பூண்டு யுத்தத்தில் கலந்துகொண்டிருந்தார். அவ்விடத்தில் பாண்டேக்களின் உதிர வெள்ளம் ஓடியதெனினும் அவர்கள் சுதந்தரக் கொடியைத் தணிக்கவில்லை.

அம் மூவரும் தப்பியது மிகவும் ஆச்சரியமான சம்பவமாகும். அப்போது ராணா அமர சிம்மன் ஏறிச்சென்ற யானை, பகைவர்களால் பிடிபட்டதெனினும், அவர் அதிலிருந்து கீழே குதித்து மறைந்தார். இவ்விதம் தேச பக்தர்கள் ஒவ்வோர் அங்குலமும்

போர் செய்துகொண்டே பின்வாங்கி, கடைசியில் கெய்மூர் மலை போய்ச் சேர்ந்தனர். அந்த ஜில்லாவைச் சேர்ந்த ஜனங்கள் பகைவர்களுக்குப் பொய்த் தகவல்கள் கொடுத்து வந்ததாலேயே, தேசபக்தர்கள் யாதோர் ஆபத்தும் இன்றி அங்கே போய்ச் சேர முடிந்தது!

அவர்கள் அங்கு இருப்பதை அறிந்த ஆங்கிலேயர்கள் படைகளுடன் அங்கும் சென்றனர். அப்போதும் அவ் வீரர்களிடையே சரண் அடைவது என்ற பேச்சே எழவில்லை. தேசபக்தர்கள் ஒவ்வொரு குன்றிலிருந்தும், ஒவ்வொரு பள்ளத்தாக்கிலிருந்தும், ஒவ்வொரு பாறையிலிருந்தும் போர் செய்து ஒருவர்கூடப் பாக்கியின்றி வீர சுவர்க்கம் அடைந்தனர். தேசத்தின் சுதந்தரத்தையும், கௌரவத்தையும் பாதுகாப்பதற்காக அவர்கள் தங்களுடைய உயிர்களையும் லட்சியம் செய்யவில்லை. ஆடவர்கள் மாத்திரம் அல்ல, பெண்களும் போராடிய வண்ணமே வீர சுவர்க்கம் அடைந்தார்கள்.

அந்தப் பெண்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிவந்து கைதிகளாகவும் அடிமைகளாகவும் வாழ விரும்பவில்லை. ராஜா குமார சிம்மனின் அரண்மனையைச் சேர்ந்த நூற்றைம்பது பெண் மணிகளும், தங்களுக்கு வெற்றி கிடைக்காது என்று தெரிந்ததும் பீரங்கிகளின் எதிரில் தாங்களாகவே வந்து அவற்றிற்குத் தீ வைத்து, வீரத் தியாகிகளாக மாண்டனர். பிஹார், தன் பிறப்புரிமைக்காக இவ்விதம் போராடியது. எனினும் இறுதியில் ராணு அமர சிம்மன் பகைவர்களின் கையில் சிக்கவில்லை! அவரைத் துரதிருஷ்டம் சூழ்ந்துகொண்டது எனினும், அவர் பகைவர்களிடம் அகப்படாமல் தப்பினார். ஆனால் அவருக்கு என்ன நேர்ந்தது? அவர் தம் அந்திய காலத்தை எங்கே கழித்தார்? சரித்திரமும் 'அவர் எங்கே?' என்று எதிரொலிப்பதைத் தவிர, நமக்கு அவ்விஷயமாக எதுவும் தெரியவில்லை!

## 31

## துரோக வலை

லக்ஷ்மணபுரி வீழ்ச்சி அடைந்த பின், ரோஹில்கண்ட், அயோத்தி மாகாணங்களில் தேசீயப் படைகளை ஒன்று சேர்ப்பதற்குற்ற சக்தி பொருந்திய ஸ்தாபனம் எதுவும் இல்லை. தோவாப் பிரதேசத்திலும் பிகாரிலும் ஆங்கிலேயர் பெற்ற வெற்றிகள், தேசீயப் படைகள் எல்லாம் சிதறுண்டு போகும்படி செய்துவிட்டன. எனவே தேச பக்தர்கள் பகிரங்கமாக யுத்தம் செய்வதை விடுத்து, தந்திரமான போர்களில் ஈடுபட்டனர். ஆரம்பத்திலேயே அவர்கள் அம்முறையைக் கையாண்டிருப்பின், மகத்தான வெற்றிகள் கிடைத்திருக்கலாம். ஆனால் பின்னர்

வெற்றி கிடைப்பது அசாத்தியமாகத் தோன்றினும், தேசபக்தர் கள் போர்முனையை விட்டுச் செல்லவோ சரண் புகவோ விரும்ப வில்லை. மறைந்திருந்து, தந்திரமாக யுத்தம் செய்வது என்று ரோஹில்கண்ட், அயோத்தித் தலைவர்கள் தீர்மானித்தனர்.

உடனே அவர்கள் அந்த மாகாணங்களில் பின்வருமாறு ஒரு பிரகடனம் விடுத்தனர்: 'ஆங்கிலேயர்களுடன் பகிரங்கமான போரில் ஈடுபடாதீர்கள். ஒழுங்கிலும், ஆயுத பலத்திலும் அவர்கள் உங்களைக் காட்டிலும் மேலானவர்கள். ஆனால் அவர் களின் நடமாட்டங்களைக் கவனித்து வாருங்கள். நதிகளில் உள்ள சகல கட்டங்களையும் காவல் புரியுங்கள். அவர்களின் செய்திப் போக்குவரத்தைச் சீர்குலையுங்கள். அவர்களுக்குச் சாதனம் எதுவும் வராமல் தடை செய்யுங்கள். அவர்களின் முகாம்களைச் சுற்றியவண்ணம் இடைவிடாமல் தொல்லை விளைவித்து வாருங்கள். பறங்கியர்களுக்கு ஒரு விநாடியும் ஓய்வு கொடுக்காதீர்கள்.'

மௌல்வி அகமது ஷா சிறிதும் தாமதமின்றி இந்தக் கட் டளைகளை நிறைவேற்ற முற்பட்டார். லக்ஷ்மணபுரியிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகளைக் கண்காணித்து வருவதற்காக அவர் அங் கிருந்து 29-மைல் தூரத்திலுள்ள பாரி என்ற இடத்தில் முகாம் போட்டிருந்தார். பேகம் ஹஸ்ரத் மஹலும் ஆறுயிரம் சிப்பாய்க ளுடன் பிடவுலியில் முகாம் போட்டிருந்தார். அவ்விரு படைகளை யும் சிதற அடித்தாலன்றித் தாங்கள் நிம்மதியாக இருக்க முடி யாது என்பதை உணர்ந்த ஹோப் கிராண்ட், மூவாயிரம் சிப்பாய்க ளுடனும் ஒரு பெரும் பீரங்கிப் படையுடனும் லக்ஷ்மணபுரியி லிருந்து புறப்பட்டான். முதலில் பாரிக்குச் செல்ல வேண்டும் என்பதே அவனுடைய நோக்கம்.

மறுநாள் நிகழ்ந்த ஒரு சம்பவத்திலிருந்து தேசீய ஒற்றர் களின் ஆச்சரியகரமான தைரியத்தையும் திறமையையும் அறிந்து கொள்ளலாம். அதாவது, ஆங்கிலப் படைகளின் நிலைமை பற் றிய திட்டமான தகவலை அறிந்து வருமாறு மௌல்வி சில ஒற்றர் களை அனுப்பினார். அன்றிரவே அவர்கள் மிகுந்த தைரியத் துடன் ஆங்கில முகாமுக்குள் பகிரங்கமாக நுழைந்தனர். அங்கே காவல் புரிந்த ஆங்கிலச் சிப்பாய் அவர்களை நிறுத்தி, 'நீங்கள் யார்?' என்று கேட்டபோது, அவர்கள், 'நாங்கள்தாம் 12-ஆவது பிரிவைச் சேர்ந்தவர்கள்' என்றனர், துணிச்சலாக. அவர்கள் சிறிதும் தயக்கமின்றி, தைரியமாக அளித்த அந்தப் பதிலைக் கண்டு காவற் சிப்பாய் திருப்தியடைந்தான்.

அந்த ஒற்றர்கள் கூறியது முற்றும் உண்மையே. அவர்கள் 12-ஆவது படைப் பிரிவைச் சேர்ந்தவர்கள்தாம். அதற்கு முந் திய வருஷம் ஜூலை மாதம் 12-ஆவது பிரிவுப் படை புரட்சியில் ஈடுபட்டு அதன் அதிகாரியையும் கொன்ற சம்பவத்தைப்பற்றிக் காவற் சிப்பாய்க்கு என்ன தெரியும்? அந்த ஒற்றர்களும் துணிச் சலாக உள்ளே சென்று தங்களுக்குத் தேவையான எல்லாத் தக வல்களையும் அறிந்துகொண்டு யாதோர் அசம்பாவிதமும் இன்றி வெளியே வந்தனர். அவர்களின் மூலம் ஆங்கில முகாமின் அமைப்பு, பகைத் துருப்புகளின் நிலைமை முதலியவற்றை அறிந்து

கொண்ட மௌல்வி, தம் ஏற்பாடுகளை வெகு துரிதமாகச் செய்ய லானார். அதற்கிணங்க, பாரியிலிருந்து நான்கு மைல் தூரத்தி லுள்ள ஒரு கிராமத்தை அவர் உடனே தமது வசப்படுத்திக் கொண்டார்.

பகைவர்களின் முன்புறத்திலுள்ள அந்தக் கிராமத்தைத் தேசீயக் காலாட் படைகள் ஆக்கிரமித்துக்கொண் டிருந்த அதே சமயத்தில், தமது குதிரைப் படை ரகசியமான ஒரு பாதையின் வழியாகச் சென்று ஆங்கிலத் துருப்புகளைப் பின்புறமாகத் தாக்கத் தயாராக இருக்க வேண்டும்; மறுநாள் ஆங்கிலத் தளபதி எவ்விதச் சந்தேகமும் இன்றி அந்தக் கிராமத்தின் வழியாக வரும்போது காலாட் படைகள் முன்புறமாகத் தாக்க வேண்டும்; அதே சமயம் குதிரைப் படை பின்புறத்தையாவது பாரிசத்தையாவது தாக்க வேண்டும்.—இதுதான் மௌல்வி வகுத்திருந்த திட்டமாகும். மௌல்வியின் திட்டம் அவரது ராணுவத் தந்திரத்தைக் காட்டு கிறது என்று மாலிஸன் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனால் அந்த அரிய திட்டம் நிறைவேறுவது மிகவும் முக்கிய மான இரண்டு விஷயங்களைப் பொறுத்திருந்தது. அதாவது, அந் தக் கிராமத்திலுள்ள தேசீயப் படைகள் முற்றும் ரகசியமாக இருந்துவர வேண்டும்; காலாட்படை முன்புறமாக வந்து பகை வர்கள் முன்னெச்சரிக்கையாக இருக்கும்படி செய்துவிடக்கூடாது.

மௌல்வி, அன்றிரவே தமது குதிரைப்படையை ரகசியப் பாதையின் வழியாக அனுப்பினார். அவரும் தம் மற்றப் படைக ளுடன் கிராமத்தில் மறைந்திருந்தார். அவர் எண்ணியவாறே பகைவர்களும் எவ்விதச் சந்தேகமும் இன்றி அந்தக் கிராமத்தை நெருங்கிக்கொண் டிருந்தனர். அவ்விதமே இன்னும் அரைமணி நேரம் சென்றிருப்பின் பகைவர்கள் மௌல்வியின் வலையில் வீழ்ந்திருப்பார்கள். ஆனால் தேசபக்தர்களின் துரதிருஷ்டம்; அது வேறு விதமாகியது. அந்த அரைமணி நேரத்திற்குள் மௌல்வி யின் அரிய திட்டம், குதிரைப் படையின் அவசர புத்தியால் சீரழிந்தது.

ஆங்கிலத் துருப்புகளின் பாரிசத்தில் குதிரைப் படையினர் மிகவும் வசதியான ஓரிடத்தில் மறைந்துகொண்டு உற்ற சமயம் வந்ததும் பகைவர்களின்மீது பாய்வதற்குத் தயாராக இருந் தனர். அவ்விதம் இருக்கையில் அவர்களுக்கு எதிரில் சில பீரங் கிகள் யாதொரு பாதுகாப்பும் இன்றி இருந்தன. அவற்றைக் கண்டதும் குதிரைப் படையின் தலைவர் மௌல்வியின் கண்டிப் பான உத்தரவை மறந்து, திடீரென்று பாய்ந்து அவற்றைக் கைப் பற்றவே, ஆங்கிலேயர்கள் தங்களைச் சூழ்ந்துள்ள ஆபத்தை அறிந்து அந்தப் பீரங்கிகளை மீண்டும் கைப்பற்றியதுடன், தேசீ யப் படைகளைக் கடுமையாகத் தாக்கவும் ஆரம்பித்தனர். தம் திட்டம் சீர்குலைந்ததைக் கண்டு மௌல்வி அகமது ஷா மனம் உடைந்தார். சிறிது நேரம் பகைவர்களை எதிர்த்து நின்றபின் அந்தத் திட்டத்தை நிறைவேற்ற மற்றொரு சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் அவர் அந் தக் கிராமத்தை விட்டுச் சென்றார்.

அதனால் உற்சாகமடைந்த ஹோப் கிராண்ட் பாரியிலிருந்து பிடவுலி வரையில் தேசீயச் சிப்பாய்களைத் துரத்திச் சென்றான். அவர்களை யெல்லாம் அயோத்தியிலிருந்து விரட்டிவிட வேண்டும் என்பதே அவனுடைய நோக்கமாகும். அதே சமயம் மற்றொரு புறத்தில், அதாவது ரூபியா கோட்டைக்கு அருகில் தேச பக்தர் களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் கடுமையான போர் நிகழ்ந்து கொண்டிருந்தது.

தோவாப் பிரதேசத்திலிருந்து ஆங்கிலப் படைகள் பல் வேறு கோஷ்டிகளாகப் பிரிந்து, தேசீயப் படைகளை யெல்லாம் பக்தபுரி வரையில் விரட்டிச் சென்ற விவரம் ஏற்கனவே குறிப் பிடப் பெற்றிருக்கிறது. அதுபோலவே, அயோத்தி மாகாணத் திலிருந்து தேசீயப் படைகளை அடியோடு அழிப்பதற்காகப் பல இடங்களிலிருந்தும் ஆங்கிலப் படைகள் அயோத்தியின் வட எல்லையை நோக்கி முன்னேறி வந்துகொண் டிருந்தன. 1858 ஏப்ரல் மாதம் 1-ஆம் தேதிக்குள் இந்தியாவில் இருந்த ஆங்கிலச் சிப்பாய்களின் தொகை தொண்ணூற்று ஆறுயிரமாகப் பெருகிவிட் டது. அவர்களைத் தவிர விசுவாசிகளான சீக்கியர்கள், பட்டா ணியர்கள் முதலியோரும் ஏராளமாக இருந்தனர். மற்றும் இந் திய மன்னர்களிலும் பலர் ஆங்கிலேயர்களுக்கு உதவியாக அடிக் கடி துருப்புகளை அனுப்பிக்கொண் டிருந்தனர்.

இவ்விதமாக ஒன்று சேர்ந்த துருப்புகளில் பெரும்பாலோ ரும் தேச பக்தர்களிடமிருந்து அயோத்தியை மீண்டும் கைப்பற் றும் விஷயத்தில் தங்கள் முழு பலத்தையும் உபயோகிக்க முற் பட்டனர். அந்த நோக்கத்துடனேயே லூகார்ட், டக்லஸ் இரு வரும் பிகாருக்கும், ஹோப் கிராண்ட், பாரி - பிடவுலி பிரதேசங் களுக்கும், வால்போல் கங்கைக்கரை நெடுக மேற்கேயும் அனுப் பப்பட்டனர். இவ்வாறாக, தேசீயப் படைகளை ரோஹில்கண்ட் வரையில் விரட்டி, மகத்தான ஒரு பெருமுயற்சி செய்து அவற் றைத் துடைத்து ஒழித்துவிட வேண்டுமென்று ஆங்கிலேயர்கள் திட்டம் போட்டிருந்தனர்.

அந்த உத்தேசத்துடன் ஏப்ரல் மாதம் 1-ஆம் தேதி புறப் பட்ட வால்போல், 15-ஆம் தேதியன்று ரூபியா கோட்டையைத் தாக்க முற்பட்டான். அது லக்ஷ்மணபுரியிலிருந்து ஐம்பத் தொரு மைல் தூரத்தில் உள்ளது. ரூபியா கோட்டை மிகவும் பலம் பொருந்தியது என்பதற்காகவோ, அதன் தலைவரான நரபதி சிம்மன் விசேஷச் சக்தி வாய்ந்தவர் என்பதற்காகவோ அவன் அதைத் தாக்கவில்லை. நரபதி சிம்மன் மிகச் சிறிய ஜமீன்தாரே யாயினும், சுதந்தரப் போராட்டம் வெற்றி பெறு வதற்காகத் தமக்குச் சொந்தமான அனைத்தையும் அர்ப்பணம் செய்து உதவி புரிந்துவந்தார். தேசத்தின் புனருத்தாரணத்துக் காகத் தம்மையே பலி கொடுக்கவும் அவர் சித்தமாக இருந்தார். மகத்தான ஆயுத பலத்துடன் கூடிய வால்போலின் படை அந்தச் சிறிய கோட்டையைத் தாக்க முற்பட்டதற்குக் காரணம் அதுதான்.

நரபதி சிம்மனின் கோட்டைக்குள் இருநூற்றைம்பது சிப்பாய்கள்கூட இல்லை. அவர் திகிலடைந்து முன்னமே கோட்டையிலிருந்து வெளியேறி ஓடியிருப்பார் என்று ஆங்கிலேயர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் அன்று காலை நரபதி சிம்மனால் விடுதலை செய்யப்பட்ட ஆங்கிலேயர்களில் ஒருவன் கொண்டுவந்த செய்தி வேறு விதமாக இருந்தது. ஆங்கிலேயர்களுடன் தாம் ஒரு முறையாவது கோர யுத்தம் செய்து, அவர்களைத் தோற்கடித்து, அவர்கள்மீது வஞ்சம் தீர்த்துக்கொண்டால் அன்றி, தாம் கோட்டையை விட்டுச் செல்லப் போவதில்லை என்று நரபதி சிம்மன் சபதம் செய்திருப்பதாக அந்த ஆங்கிலேயன் அறிவித்தான். அதைக் கேட்டதும், வால்போலின் கோப வெறி அளவு கடந்தது. 'குடிசை போன்ற ஒரு கோட்டையை யுடைய இந்தக் குட்டி ஜமீன்தாருக்கு இவ்வளவு ஆணவமா!' என்று அவன் ஆத்திரம் அடைந்தான். உடனே கோட்டையைத் தகர்க்குமாறு தம் படைகளுக்கு உத்தரவிட்டான்.

நரபதி சிம்மனிடம் இரண்டாயிரம் சிப்பாய்கள் இருப்பதாக ஆங்கிலேயர்கள் வழக்கம்போல் ஒரு வதந்தியைக் கிளப்பிவிட்டனர். அதிகத் துருப்புகள் இருப்பதாகப் பறை சாற்றினால்தான், தாங்கள் பெறப் போகும் வெற்றியின் மதிப்புப் பன்மடங்கு அதிகமாகும் என்பது அவர்களுடைய எண்ணம். கோட்டையிலிருந்து வெளிவந்த ஆங்கிலேயன் அதற்குள் இருநூற்றைம்பது சிப்பாய்களே இருப்பதாகக் கூறியுங்கூட, வால்போல் கோஷ்டியினர் அதை மிகைபடக் கூற முற்பட்டதுதான் விந்தையாகும்.

மற்றும் கோட்டையின் பலம் பொருந்திய பாகத்தைத் தாக்கும்படி வால்போல் தன் படைகளுக்கு உத்தரவிட்டான். தனக்கு வெற்றி நிச்சயம் என்ற எண்ணத்துடனேயே அவன் அவ்வாறு செய்தான். சுலபமாகத் தான் வெற்றி பெற்றுவிட்டதாக எவரும் நினைக்கக்கூடாது என்பதற்காகவே பலம் பொருந்திய பாகத்தைத் தாக்கும்படி தன் படைகளுக்குக் கட்டளையிட்டான். ஆங்கிலேயர்கள் கோட்டையைத் தாக்க ஆரம்பித்ததும், தேச பக்தர்களிடமிருந்து சரமாரியாகத் தோட்டாக்கள் பறந்து வரத் தொடங்கின. பகைவர்கள் கோட்டையின் அகழை அணுகிய போது, தேச பக்தர்களின் துப்பாக்கிப் பிரயோகம் பின்னும் அதிக உக்கிரமாகியது.

முன்னணியில் இருந்த நூற்றைம்பது ஆங்கிலச் சிப்பாய்களில் நாற்பத்தாறு பேர்கள் மாண்டனர். பாண்டேக்களின் துப்பாக்கிப் பிரயோகம் காரணமாகத் தளபதி க்ரோவ் ஓரடிகூட முன்செல்ல முடியவில்லை. அந்த நெருக்கடியான நிலைமையைப் பார்த்த வால்போல் ஒரு கோஷ்டிப் படைகளுடன் சென்று கோட்டையின் பலவீனமான பாகத்தையும் தாக்க முற்பட்டான்.

ஆங்கிலேயர்கள் சுட்ட பீரங்கிக்குண்டுகள் கோட்டையின் மற்றொரு புறத்தில் நின்றுகொண் டிருந்த ஆங்கிலப் படைகளைத் துவம்சம் செய்தன. சக்தி பொருந்திய பீரங்கிகளால் தன் விரோதிகளை மாத்திரம் அல்ல, நண்பர்களையும் கொல்லும் துணிச்

சலும் திறமையும் தனக்கு உண்டு என்பதை உலகத்துக்குக் காட்டிய முதல் தளபதி வால்போல்தான்!

அன்று ஆங்கிலேயரின் கௌரவத்தை நிலைநிறுத்துவதற்காக முன்வந்த ஹோப், தேச பக்தர்களின் துப்பாக்கிகளுக்குப் பலியாக நேர்ந்தது. அதே சமயம் க்ரோவ் தன் படைகளுடன் பின்வாங்க ஆரம்பித்தான். ஆங்கிலத் துருப்புகளிடையே நிலைமை மிகவும் குழப்பமாகியது. இவ்வாறாக அன்று பகைவர்கள் வெட்கக் கேடான முறையில் விரட்டியடிக்கப்பட்டு ஓட்டம் பிடித்தனர்.

ஹோப் மாண்டதைக் கேட்டு இந்தியாவிலுள்ள எல்லா ஆங்கிலேயர்களும் அதிர்ச்சியடைந்தார்கள். அதனால் லார்டு கானிங், காலின் முதலியோர் துக்கத்தில் ஆழ்ந்தனர். இங்கிலாந்து முழுவதும் வருந்தியது. தங்கள் பக்கத்தில் நூற்றுக் கணக்கான சிப்பாய்கள் மாண்டிருந்தால்கூட, ஆங்கிலேயர்கள் அவ்வளவு தூரம் வருந்தியிருக்க மாட்டார்கள். ஏனெனில் அப்போது இந்தியாவில் இருந்த மிகுந்த தைரியமும் சுறுசுறுப்பும் திறமையும் வாய்ந்த முதல்தர ராணுவ அதிகாரிகளுள் ஹோப் கிராண்டும் ஒருவன்.

அதன்பின் நரபதி சிம்மன் கோட்டையை விட்டு வெளியேறினார். ஆங்கிலேயர்களை ஒரு யுத்தத்திலாவது தோற்கடித்து அவர்கள் மீது வஞ்சம் தீர்க்க வேண்டும் என்று அவர் செய்திருந்த சபதம் நிறைவேறிவிட்டதல்லவா? தம்மிடம் இருந்த சிலர் உதவியால் அவர் பகைவர்களுடன் போரிட்ட வண்ணம் கோட்டையை விட்டுச் சென்றாரே தவிர, உயிருக்குப் பயந்தோ, புறமுதுகு காட்டியோ ஓடவில்லை. தம் கையில் இருந்த சுதந்தரக் கொடியின் கௌரவத்துக்குச் சிறிதும் களங்கம் ஏற்படாத வகையில் தந்திரமாகப் பின்வாங்கினார்.

இவ்விதம் அயோத்தி மாகாணத்தில் இருந்த தேசீயப் படைகளையெல்லாம் ரோஹில்கண்டிற்கு விரட்டியபின், அங்கே தானே நேரில் சென்று போரை நடத்துவதற்காகப் பிரதம தளபதி காலின் எல்லாத் துருப்புகளையும் ஒன்றுதிரட்ட முற்பட்டான். அவ்வமயம் சகல புரட்சித் தலைவர்களும் ஷாஜஹான்புரி வந்து சேர்ந்தனர். நானா சாஹிப், மௌல்வி அகமது ஷா முதலியோரும் அங்கிருந்தனர். அதற்கு முன் அவ்விரு வீரர்களையும் பிடிப்பதற்காக ஆங்கிலேயர்கள் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. எத்தனையோ கஷ்டங்களுக்கு இடையிலும் அவ்வீரர்கள் எள்ளளவும் சோர்வடையவில்லை. அவர்களின் உற்சாகமும் குன்றவில்லை. சுதந்தரக் கொடியைக் கம்பீரமாகப் பறக்க விட்டுக்கொண்டே அஞ்சா நெஞ்சத்துடன் மார்தட்டி நின்றனர்.

அந்த நிலைமையில் அவ்விருவரும் ஒரே இடத்தில் இருந்து வருகிறார்கள் என்ற செய்தி காலினுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. தன் நடவடிக்கைகள்பற்றி அவர்களுக்கு எதுவுமே தெரிந்திருக்கக் காரணம் இல்லை என்று அவன் நினைத்தான். அந்த நகரை நான்கு புறங்களிலும் சூழ்ந்துகொண்டு அவர்களைக் கைப்பிடியாகப் பிடிக்க ஆசை கொண்டான்.

அதற்கிணங்க, ஷாஜஹான்புரி பகைவர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டது. ஆயினும் என்ன? அதில் இருந்த பறவை கள் யாவும் ஓடிவிட்டன! அதைக் கேட்டதும் காலின் ஒருங்கே ஆத்திரமும் வெட்கமும் அடைந்தான். ஷாஜஹான்புரியைச் சுற்றி நான்கு புறங்களிலும் தன் துருப்புகள் காவலிருந்தும் தலைவர்கள் தப்பிவிட்டனர். அதிலும் குறிப்பாக எந்தப் பக்கத்தில் காலின் தலைமையில் துருப்புகள் காவல் புரிந்தனவோ, அவ்வழியாகவே அவர்கள் தப்பிச் சென்றனர்.

ின் ஷாஜஹான்புரி சூழ் படலம் இவ்வாறு படு தோல்வியாக முடிந்தபின், அந்த ஆத்திரத்தில் அவன் பரேலி நகரையாவது நாசமாக்கித் தீருவது என்று உறுதி கொண்டான். பின்னுல் அவன் ஷாஜஹான்புரியில் நான்கு பீரங்கிகளுடன் ஒரு பிரிவுப் படையை விட்டுவிட்டு, 14-ஆம் தேதி பரேலி போய்ச் சேர்ந்தான். அப்போதும் அந்த நகர் கான் பகதூர்கான் வசமே இருந்து வந்தது. டில்லியும் லக்ஷ்மணபுரியும் வீழ்ச்சியுற்ற பின், தேசீய வீரர்கள் சுதந்தரத்துடன் விளங்கும் பரேலி நகரில் ஒன்று கூடி வந்தார்கள்.

டில்லி ராஜ குடும்பத்தைச் சேர்ந்த இளவரசர் மிர்ஸா பிரோஸ் ஷா, நானு சாஹிப், மௌல்வி அகமத் ஷா, பாலா சாஹிப், பேகம் ஹஸ்ரத் மஹல், ராஜா தேஜசிங் முதலியோரும் மற்றத் தலைவர்களும் ரோஹில்கண்டின் தலைநகரான பரேலிக்கு வந்து சேர்ந்தார்கள். அன்றும் அங்கே சுதந்தரக் கொடியே கம்பீர மாகப் பறந்துகொண் டிருந்தது. அதன் காரணமாகவே காலி னுக்கு அந்த நகர்மீது ஆத்திரம் ஏற்பட்டது. அங்கிருந்த தலை வர்கள் ஆங்கிலேயர்களைப் பகிரங்கமான போரில் எதிர்த்து நிற்க விரும்பவில்லை. அப்போது அவர்கள் விடுத்திருந்த பிரகட னத்திற்கு இணங்க மறைந்திருந்து தந்திர யுத்தம் செய்யவே விரும்பினர். நகரைக் காலி செய்துவிட்டு, ரோஹில்கண்டைச் சுற்றிச் சிதறி நின்று பகைவர்களைத் தந்திரமாக எதிர்த்துப் போரிட வேண்டும் என்பதே அவர்கள் திட்டமாகும்.

அதை அநுசரித்து நகரைக் காலி செய்வதற்கான எல்லா ஏற்பாடுகளும் பூர்த்தியாயின. எல்லோரும் இறுதி உத்தரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர். ஆனுல் நகருக்கு அருகில் பகைவர்கள் வந்ததும், அவர்களின் ரத்தத்தைச் சிந்தாமல் தாங்கள் நகரத்தைக் காலி செய்ய முடியாது என்று தைரியம் பொருந்திய ரோஹில்லாக்கள் மறுத்துவிட்டனர். தங்கள் தேசத்துக்காகப் போரிடவும், உயிர்த் தியாகம் செய்யவும் தயார் என்பதை ஒரு தடவையாவது நிரூபணம் செய்யாமல் தாங்கள் நகரைக் காலி செய்ய முடியாது என்று அவர்கள் கூறினர்.

நகரைச் சூழ்ந்துகொண்ட ஆங்கிலேயர்கள் அசுர பலத் துடன் இருந்தனர். அவர்களிடம் ஏராளமான பீரங்கிகள் இருந்தன. அவர்களுடைய குதிரைப் படைகளும், காலாட் படைகளும் அபரிமிதமான ஆயுதங்களுடன் வந்திருந்தன. பிரதம தளபதியான காலின் காம்பெலே அந்தப் படைகளுக்கெல்

லாம் தலைமை வகித்தான். அந்த நிலைமையில் கான் பகதூர் கானின் படைகள் வாட்போரில் ஈடுபட்டு வீர சுவர்க்கம் அடைய விரும்பினர். தங்களுடைய லட்சியத்தில் தங்களுக்குள்ள தளரா நம்பிக்கையுடன் புன்முறுவலோடு மரணத்தை வரவேற்க அவர்கள் ஆயத்தமாயினர். உயர்ந்த லட்சியத்திற்காக மரணமடைவது, சுவர்க்கத்தின் கதவுகளைத் திறக்கும் சாவி என்பதே அவர்கள் பூரண நம்பிக்கை.

அத்தகைய ஒரு மகோந்நதமான லட்சியத்திற்காக உயிர்த் தியாகம் செய்வதைக் காட்டிலும் சிறந்த தொண்டு வேறு எதுவுமே இல்லையல்லவா? அவர்கள் வாட்களை உருவிக்கொண்டு பாணங்களைப்போல் ஆங்கிலப் படைகளின்மீது பாய்ந்தனர். அவர்களுடைய சிரங்களைப் பச்சைத் தலைப்பாகைகளும், விரல்களைக் குரான் வாக்கியங்களுடன் கூடிய மோதிரங்களும் அலங்கரித்துக் கொண்டிருந்தன. வீரம் செறிந்த அந்தக் காஸிகள் யுத்த கோஷங்கள் செய்துகொண்டும், கேடயங்களால் தங்கள் முகங்களை மறைத்துக்கொண்டும் பகைவர்களின்மீது பாய்ந்து தாக்கினார்கள். சூரிய வெளிச்சத்தில் அவர்களின் வாட்கள் மின்னலைப் போல் ஜோதியுடன் விளங்கின! அவர்களின் துணிச்சலையும் பயங்கரமான தாக்குதலையும் கண்டு ஆங்கிலச் சிப்பாய்கள் நடுநடுங்கினர்.

ஏராளமான சிப்பாய்களை வெட்டி வீழ்த்திய பின்னரே, அந்தத் தேச பக்தர்களைப் பகைவர்கள் துப்பாக்கி ஈட்டிகளால் குத்திக் கொல்ல முடிந்தது. அந்த யுத்தத்தில் தேச பக்தர்கள் ஒருவர்கூடப் பாக்கியின்றி வீர சுவர்க்கம் அடைந்தனர். அவர்கள் ஓர் அடிகூடப் பின்வாங்காமல் சிங்கங்களைப்போல் போரிட்ட வண்ணம் வீழ்ந்தனர். குவியல் குவியலாக மாண்டு கிடந்த தேச பக்தர்களைப் பார்த்துக்கொண்டு காலின் அவ்வழியாக வந்த போது, மாண்டவர்போல் வீழ்ந்து கிடந்த ஒருவர், திடீரென்று எழுந்து காலினை வெட்டி வீழ்த்த முயலுகையில், அவன் பக்கத்தில் வந்த சீக்கிய விசுவாசி ஒருவன் அந்தத் தேச பக்தரை வீழ்த்திவிட்டான். இவ்விதம் தேச பக்தர்கள் இறுதிவரையிலும் தங்களுடைய முயற்சியைத் தளர விடவில்லை.

கான் பகதூர் கானைப் பிடிக்க ஆங்கிலேயர்கள் செய்த முயற்சி வீணாகியது. அவர் பல தேச பக்தர்களுடன் மே மாதம் 7-ஆம் தேதி பரேலியை விட்டுச் சென்றார். அவர்களால் காலி செய்யப்பட்ட ரோஹில்கண்டின் தலைநகரை ஆங்கிலப் படைகள் ஆக்கிரமித்துக்கொண்டன. கான் பகதூர் கான் தங்களுடைய பிடியிலிருந்து தப்பியதால் காலின் ஏமாற்றமடைந்தான். எனினும் பரேலி நகரைக் கைப்பற்றிய சந்தோஷத்தில் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. அவன் அங்கு அவ்விதம் ஆனந்தமாக இருக்கையில் திடீரென்று 'மௌல்வி, மௌல்வி, மௌல்வி!' என்ற கூக்குரல்கள் முகாமின் நான்கு புறங்களிலிருந்தும் கிளம்பின.

மௌல்வி ஷாஜஹான்புரியில் மீண்டும் தம் அலுவல்களைக் கவனித்துவந்தார்! காலினைத் திணற அடித்தபின் நானா சாஹிபும்

மௌல்வியும் போரைத் தவிர்க்கும் நோக்கத்துடன் மாத்திரம் ஷாஜஹான்புரியை விட்டுச் செல்லவில்லை. அவர்கள் அந்த நகரை விட்டுச் செல்லுமுன்னரே, நாணு சாஹிபின் உத்தரவுக்கு இணங்க, சர்க்கார்க் கட்டிடங்கள் அனைத்தும் இடிக்கப்பட்டன. ஆங்கிலத் தளபதி, ஷாஜஹான்புரியில் சில துருப்புகளை மாத்திரமே வைத்துவிட்டு, மற்றத் துருப்புகளுடன் பரேலிக்குச் சென்றுவிடுவான் என்று நாணு சாஹிபும் மௌல்வியும் ஊகித்தது முற்றும் உண்மையாயிற்று.

காலின் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றதும் மௌல்வி மீண்டும் திரும்பிவந்து, ஆங்கிலப் படைகளைத் துவம்சம் செய்து, நகரைக் கைப்பற்றி, பரேலியை ஆக்கிரமித்துக்கொண்ட ஆங்கிலேயர்கள்மீது வஞ்சம் தீர்க்கவேண்டும் என்பதே அவர்களின் திட்டமாகும். அவர்கள் ஊகித்தபடியே எல்லாம் நடந்து வந்தன. ஆங்கிலத் தளபதி, பீரங்கிகளுடன் சில துருப்புகளை மாத்திரமே ஷாஜஹான்புரியில் வைத்துவிட்டுப் பரேலிக்குச் சென்றான். பலமான கட்டிடங்களெல்லாம் நாணு சாஹிபின் கட்டளைப்படி இடிக்கப்பட்டுவிட்டன ஆதலின், ஆங்கிலேயர்கள் யாதொரு பாதுகாப்பும் அற்ற மைதானத்திலேயே தங்களுடைய முகாமை அமைத்துக்கொள்ள நேர்ந்தது.

தங்களுக்கு இனி எவ்வித ஆபத்தும் இல்லை என்று அவர்கள் கவலையின்றி இருந்து வருகையில் மௌல்வி ஷாஜஹான்புரி மீது படையெடுக்கலானார். அவருடைய படைகள் நடு நிசிக்குப் பின் நகரிலிருந்து நான்கு மைல் தூரத்தில் நிற்க நேரிட்டது; எவ்விடத்திலும் நிற்காமல் செல்ல வேண்டும் என்பதே மௌல்வியின் கட்டளை. அப்படி இருந்தும் யாருடைய மூடப் பிடிவாதம் காரணமாகவோ படைகள் அங்கே நிற்கும்படி நேர்ந்துவிட்டது. அதனால் தலைவர்களின் அற்புதமான திட்டம் வீணாகியது. ஏனெனில் ஆங்கிலேயர்களால் நியமிக்கப்பட்டிருந்த ஒற்றர்களில் ஒருவன், தேசீயப் படைகள் அங்கிருப்பதை அறிந்து ஷாஜஹான்புரியில் இருந்த கர்னல் ஹேலிடம் அந்த விவரத்தை அறிவித்தான். உடனே அவன் புதிதாக நிர்மாணிக்கப்பட்டிருந்த கோட்டைக்குள் தன் படைகளுடன் சென்று போருக்கு ஆயத்தமானான்.

மௌல்வி, தம் படையெடுப்பைக் கைவிடவில்லை. மிகவும் உறுதியுடன் பகைவர்களைத் தாக்கி நகரை ஆக்கிரமித்துக் கொண்டார். உடனே அவர் தம் படைகளின் பராமரிப்புக்காக நகரில் இருந்த செல்வர்களான வியாபாரிகளுக்கு வரி விதித்தார். அதில் தவறு எதுவும் இல்லை. தேசத்தின் அடிமைத்தனத்தையும், தேசத்துக்கு நேர்ந்த அவமானத்தையும் துடைத்து ஒழிப்பதற்காகப் போராடும் வீரர்களை, தாங்களாக வலுவில் முன்வந்து ஆதரிக்கவேண்டியது மக்களின் கடமை அல்லவா? நகரை ஆக்கிரமித்துக்கொண்ட பின், மௌல்வி எட்டுப் பீரங்கிகளுடன் வந்து பகைவர்களின் புதிய கோட்டையைத் தகர்க்கத் தொடங்கினார்.

இந்தச் செய்தி, பரேலியிலிருந்த காலினுக்கு மே-7-ஆம் தேதி எட்டியது. அதைக் கேட்டு அவன் திகைப்படைந்தான்,

அதே சமயத்தில் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியும் ஏற்பட்டது. சில நாட்களுக்கு முன் மௌல்வி தப்பிச் சென்றதிலிருந்து அவரை மீண்டும் பிடிக்க எப்போது சந்தர்ப்பம் கிடைக்கும் என்று அவன் எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். அந்தச் செய்தியைக் கேட்டதும் இம்முறை அவரை எப்படியாவது பிடித்தே தீருவது என்று உறுதி கொண்டான். தான் தேடிக்கொண் டிருக்கும் இரையின்மீது திடீரென்று பாய்வதற்காகத் துருப்புகளுடனும் சகல முன்னேற்பாடுகளுடனும் புறப்பட்டான்.

இம் முறை மௌல்விக்குத் தப்பிச் செல்ல வழியில்லை என்ற உறுதியுடன் காலின் போரை ஆரம்பித்தான். மே 11-ஆம் தேதியிலிருந்து மூன்று நாட்கள் இடைவிடாமல் போர் நடந்தது. மிகுந்த செல்வாக்கும், இணையற்ற தேச பக்தியும் உள்ள மௌல்விக்கு எவ்வித ஆபத்தும் நேரக்கூடாது என்பதற்காகப் பல்வேறு இடங்களிலிருந்தும் புரட்சித் தலைவர்கள் தங்கள் தங்களுடைய படைகளுடன் ஷாஜஹான்புரிக்கு வந்தனர். அயோத்தி பேகம், வய்யான் சாஹிப், மஹமதி மன்னர், டில்லி இளவரசரான பிரோஸ் ஷா, நானா சாஹிப் முதலிய பல தலைவர்களும் தங்களிடம் இருந்த சகல படைகளுடன் ஷாஜஹான்புரியில் சுதந்தரக் கொடிக்கு ஏற்படப்போகும் ஆபத்தைத் தவிர்ப்பதற்காக 15-ஆம் தேதிக்கு முன் வந்து சேர்ந்தார்கள்.

ஆங்கிலத் தளபதி போட்ட வலையில் அகப்பட்டுக் கொள்ளாமல் மௌல்வி ஷாஜஹான்புரியை விட்டு வெளியேறி, மீண்டும் அயோத்திக்குள் பிரவேசித்தார். ஒரு வருஷ காலமாக மிக மிகக் கஷ்டப்பட்டும், ரத்தம் சிந்தியும் புரட்சிக்காரர்களையெல்லாம் அடியோடு விரட்டிக் கைப்பற்றிய அயோத்திக்குள் மீண்டும் மௌல்வி வெகு துணிச்சலாகப் பிரவேசித்தது ஆங்கிலேயர்களைத் திடுக்கிடும்படி செய்துவிட்டது. காலின் அயோத்தியைக் கைப்பற்றினான். உடனே மௌல்வி ரோஹில்கண்டுக்கு வந்தார். காலின் ரோஹில்கண்டைக் கைப்பற்றியதும் மௌல்வி மீண்டும் அயோத்திக்குச் சென்றுவிட்டார்.

கோடிக் கணக்கான தம் தேச மக்களுக்காகவும், நாட்டின் நலனுக்காகவும் கௌரவத்துக்காகவும் தமக்கு எத்தனை கஷ்டங்கள் நேர்ந்தாலும் சிறிதும் சோர்வின்றிப் பறங்கியர்களை எதிர்த்துப் போராடி வந்த மௌல்வி அகமது ஷாவை நாம் எக்காலத்திலும் மறப்பதற்கில்லை. தங்களுடைய அக்கிரம ஆசைக்குப் பெரும் முட்டுக்கட்டையாக இருந்த மௌல்வியை ஒழிக்கும் முயற்சியில் தாங்கள் மீண்டும் தோல்வியுற்றதைக் கண்டு ஆங்கிலேயர்கள் அடியோடு நம்பிக்கை இழந்தனர். மிகவும் சக்தி பொருந்திய அந்தப் புரட்சித் தலைவரைக் கொல்ல வல்லவர் யார் என்று ஆலோசிக்கலாயினர். அந்த நோக்கத்தை எவ்வாறு நிறைவேற்றுவது என்பதுபற்றிக் காலினின் மூளை தீவிரமாக வேலை செய்யத் தொடங்கியது.

அதை நிறைவேற்றுவதற்குற்ற சிறந்த வழி என்ன? அவ் விஷயமாக ஆங்கிலேயர்கள் கலங்க வேண்டிய அவசியமே இல்லை. இந்தியாவில் ஆங்கில ஆதிக்கத்துக்கு விரோதிகளான தேச பக்தர்

களை ஒழிக்கப் பல தடவைகள் முயற்சி செய்தும் ஆங்கிலேயர்கள் தோல்வியே அடைந்தனர். அவ்விதம் இருந்தும், இறுதியில் அவர்களின் அந்தக் கொடிய நோக்கம் நிறைவேறுவதற்காக அவர்களுக்கு உதவியளிக்கத் துரோகிகள் முன்வரவில்லையா? அது போலவே மௌல்வியை வீழ்த்தும் சக்தி ஆங்கிலேயர்களின் வாட்களுக்கு இல்லையெனில், அவர்களுக்காக எதையும் சாதிக்கத் தயாராக இருக்கும் துரோகிகளின் வாட்கள் அதை நிறைவேற்றக் கூடும் அல்லவா? எனவே ஆங்கிலேயர்கள் ஏன் கலங்க வேண்டும்?

மௌல்வி அயோத்திக்குள் பிரவேசித்த பின், தம்மால் இயன்ற வரையில் பகைவர்களை எதிர்த்து வந்ததுடன், அவர்களை அந்த மாகாணத்திலிருந்து விரட்டுவதற்குற்ற சிறந்த வழி என்ன என்பதுபற்றியும் யோசிக்கலானார். அயோத்தியில் மீண்டும் புரட்சிச் சூறாவளியைக் கிளப்பிவிடுவதற்கான திட்டம் ஒன்று அவரது மனத்தில் உருவாகி வந்தது. அவ் விஷயமாகப் பாவன்ராஜா தமக்கு ஓரளவு உதவிபுரியக் கூடும் என்று அவருக்குத் தோன்றியதால், அந்நியர்களை நாட்டிலிருந்து விரட்டத் தமக்கு உதவி புரியுமாறு வேண்டிக்கொண்டு அயோத்தி பேகம் முத்திரையிட்ட கடிதம் ஒன்றை அவனுக்கு அனுப்பினார்.

சோம்பேறித்தனமும் கோழைத்தனமுமே உருவாகித் தொந்தி விழுந்து கிடந்த பாவன் ராஜாவுக்குப் போர் என்ற வார்த்தையே பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தது. அவன் சம்பந்தப்பட்டவரையில் அந்நியர்களை எதிர்த்துப் போர் செய்வது என்ற பேச்சிற்கே இடமில்லை. அந்தக் கடிதத்தைப் பார்த்ததும் அவன் மனத்தில் துரோக சிந்தனைகள் எழத் தொடங்கின. உடனே மௌல்வியைத் தான் நேரில் பார்க்க விரும்புவதாக அவன் பதில் கடிதம் அனுப்பினான். அவனுடைய துரோக சிந்தனையை அறியாத மௌல்வி, எப்படியாவது நாட்டை அந்நியர்களிடமிருந்து விடுவிக்க வேண்டும் என்ற ஆர்வத்தால், அந்த ராஜாவின் 'அழைப்பு'க்கு இணங்கி உடனே யானைமீது ஏறிப் புறப்பட்டுச் சென்றார்.

அவர் நகருக்குள் சென்றதும் நகர வாயிற் கதவுகளெல்லாம் திடீரென்று மூடப்பட்டன. கோட்டைச் சுவரின்மீது காவலர்கள் சூழ ராஜா ஜகந்நாத சிங் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் அவனுடைய தம்பியும் இருந்தான். அவர்களைப் பார்த்த விநாடியே, தாம் துரோக வலையில் அகப்பட்டுக்கொண்டதை மௌல்வி உணர்ந்தார். கதவுகள் மூடப்பட்டதன் அர்த்தத்தையும் தெரிந்துகொண்டார். திடுக்கிடத் தக்க அந்த நிலைமையிலும் அவர் தைரியத்தை இழக்காமல், அந்தத் துரோகியுடன் சமரசப் பேச்சை ஆரம்பித்தார்.

ஆனால் கல்லையும் கரைக்க வல்ல அந்தக் கர்ம வீரரின் கனிமொழிகள், கல்லினும் கடிய அந்தக் கொடியர்களின் மனத்தை உருக்கவில்லை. கழுதை அறியுமா குங்குமப்பூ வாசனையை! ஒன்று, அந்நியர்களை நாட்டிலிருந்து விரட்ட வேண்டும், அல்லது அந்த முயற்சியில் தம் உயிரைத் தியாகம் செய்ய வேண்டும் என்ற மௌல்வியினுடைய புனிதக் கொள்கையின் பெருமையை அந்த

ஆடுதன் ராஜா அறிவது எங்ஙனம்? கதவுகளைத் திறக்க அந்தக் கோழை இசைய மாட்டான் என்பது நிச்சயமாகத் தெரிந்ததும், தமது யானை கதவை முட்டித் தள்ளிக்கொண்டு போகட்டும் என்று மௌல்வி, மாவுத்தனுக்குக் கட்டளையிட்டார். அந்தப் பிரம்மாண்டமான யானையும் அவ்வாறே முட்டியது.

இன்னும் ஒரே தடவை முட்டினால் போதும், கதவு தடா லென்று விழுந்துவிடும். ஆனால், அந்தோ! அதற்குள் அந்தத் துரோகியின் தம்பி மௌல்வியைக் குறி வைத்துச் சுடவே, அந்தப் பெரியார் தோட்டா பாய்ந்து வீர சுவர்க்கம் அடைந்தார். இணையற்ற தேசபக்தரும், எண்ணிக்கையற்ற ஆங்கில வீரர் களை அலற அடித்தவரும், பெரு வீரருமான மௌல்வி அகமது ஷா, துரோகியான ஒரு கோழையின் கையால் மரணம் அடைய வேண்டும் என்பது பாழும் விதியின் கட்டளை போலும்!

மன்னரின் மன்னரான மௌல்வி கீழே வீழ்ந்ததும் ஆடு தன் ராஜாவும் அவன் தம்பியும் கோட்டைச் சுவரிலிருந்து இறங்கி வந்து, அவருடைய தலையை வெட்டி ஒரு துணியால் மூடி எடுத்துக்கொண்டு, பதின்மூன்று மைல் தூரத்திலுள்ள பிரிட்டிஷ் தாணுவுக்கு ஓடினர். அப்போது ஆங்கில அதிகாரிகள் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள். அவ்விருவரும் தாங்கள் கொண்டு சென்ற பொக்கிஷத்தை அவிழ்த்து, உதிரம் பெருகிக் கொண்டிருந்த மௌல்வியின் தலையை ஆங்கில அதிகாரிகளின் காலடியில் உருள விட்டனர்! 'நாகரிக முதிர்ச்சி' பெற்ற ஆங்கிலே யர்கள் மறுநாள் அதைக் கொத்தவாலியில் எல்லோரும் பார்ப்பதற்காக ஒரு கம்பத்தில் செருகி வைத்தார்கள்! அதைக் கொண்டுவந்த கொழுத்த மிருகத்துக்கு (ராஜா ஜகந்நாத சிங்குக்கு) வெறுக்கத்தக்க அந்தத் துரோகச் செய்கைக்காக அவர்கள் ஐம்பதினாயிரம் ரூபாய் வெகுமதியும் அளித்தனர்!

மௌல்வி மாண்ட செய்தி இங்கிலாந்துக்கு எட்டியதும், ஆங்கிலேயர்கள் எல்லோரும் பெருமூச்சு விட்டு ஆனந்தக் கூத்தா டினர். வட இந்தியாவிலே பிரிட்டிஷாரின் பயங்கர விரோதியாக விளங்கிய மௌல்வி அகமது ஷா மரணம் அடைந்ததைக் குறித்து ஆங்கிலேயர்கள் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தனர் என்று சரித்திராசிரியரான ஹோம்ஸ் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆஜானுபாகு, பருமனற்ற தேகம், தசை முறுக்கேறிய இரும்பு போன்ற அங்கங்கள், ஊடுருவிப் பாயும் ஆழ்ந்த கண் கள், வெற்றிலை நரம்புபோல் வளைந்த புருவங்கள், கம்பீரத் தன்மைக்கு அறிகுறியான கூர்மையான மூக்கு - இவைதாம் மௌல்வியின் லட்சணங்களாகும். அந்த வீரத் தியாகியின் களங்கமற்ற தேச பக்தியால் இந்திய சரித்திரத்தின் பக்கங்கள் இணையற்ற சோபையுடன் விளங்குகின்றன. தாய்நாட்டின் மீது ஆழ்ந்த, எவராலும் அசைக்க முடியாத பற்றுதல், இஸ்லாம் மதோபதேசங்களுக்கு எவ்விதத்திலும் முரணல்ல என்பது அந்த வீர முஸ்லிமின் வாழ்க்கையிலிருந்து வெளியாகின்றது. ஆன்மார்த்த விஷயங்களில் அசாதாரணமான பற்றுதல் உள்ள ஒரு சிறந்த முஸ்லிம், சீரிய தேச பக்தராகவும், தாய்

நாடு விடுதலை பெற்றுச் சுதந்தரத்துடன் விளங்குவதற்காகத் தனது ஜீவ ரத்தத்தைப் பாரத அன்னையின் பலிபீடத்தில் அர்ப்பணம் செய்பவராகவும் இருக்க முடியும் என்பதை அவருடைய வாழ்க்கை வெளியிடுகிறது. இஸ்லாம் மதத்தில் உண்மையான நம்பிக்கையுடையவர், தாய்நாட்டிற்காக உயிர்த் தியாகம் செய்வதைப் பெருமையாகவும் விசேஷ உரிமை யாகவும் கருதுவார் என்பதையும் அவருடைய வாழ்க்கை நிரூபிக்கின்றது.

புரட்சித் தலைவர்களின் உத்தம குணங்களை உள்ளபடி குறிப்பிட வேண்டும் என்ற உயர்ந்த நோக்கமற்ற ஆங்கில சரித்திராசிரியரான மாலிஸன்கூட உணர்ச்சி மிகுதியால், தாம் ஆங்கிலேயர் என்பதைச் சிறிது நேரம் மறந்து, மௌல்வியைப் பற்றி வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: 'மௌல்வி அகமது ஷாவை ஓர் அசாதாரண மனிதர் என்றே கூற வேண்டும். ராணுவத் தலைவர் என்ற முறையில் அவருடைய இணையற்ற திறமை, புரட்சிப் போர் நடந்தபோது, பற்பல தடவைகளில் வெளியாகியிருக்கிறது. உதாரணமாக, காலின் காம்பெலைப் போர்க்களத்தில் இரு முறை முறியடித்த பெருமை அவர் ஒரு வருக்கே உரியதாகும். பைஜாபாத் மௌல்வி அகமது ஷா அவ் வாறு கீர்த்தியுடன் மாண்டார். அக்கிரமமாக அழிக்கப்பட்ட தம் தேசத்தின் சுதந்தரத்தை மீண்டும் பெறுவதற்காகத் தந்திர முறைகளிலும் போரிலும் ஈடுபடும் ஒருவர் தேச பக்தரெனில், மௌல்வி ஒரு சிறந்த தேசபக்தர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அவர் யாரையும் மறைந்திருந்து கொல்லவில்லை. கொடிய கொலைகளிலும் ஈடுபடவில்லை. தேசத்தைக் கைப்பற்றிய அந்நியர்களுக்கு விரோதமாகப் போர்க்களத்தில் பகிரங்கமாகவும் கௌரவமாகவும் ஆண்மை யுடனும் உறுதியுடனும் வீரப் போர் புரிந்தார். உலகில் சத்திய சீலர்களும் தைரியசாலிகளுமான சகலருடைய மதிப் புக்கும் அவர் என்றென்றும் உரியவராகத் திகழ்கின்றார்.

## 32

## வீர ரமணி

'என் ஜான்ஸியைக் கைவிடுவதா? ஒரு காலத்திலும் இல்லை. தைரியம் உள்ளவன் அதைக் கைப்பற்ற முன்வரட்டும்!' இவ் வாறு ராணி லக்ஷ்மி பாய் கர்ஜித்தாள். ஆம்! எவ்விதம் மகா லக்ஷ்மியிடமிருந்து கௌஸ்துப ரத்தினத்தைப் பிரிக்க முடி யாதோ, அதுபோலவே ஜான்ஸி ராணி. லக்ஷ்மியிடமிருந்தும் சுதந்தர ரத்தினத்தைப் பிரிக்க முடியாதல்லவா? அவ்வாறு பிரிக்கும் வல்லமை இவ்வுலகிலுள்ள அசுரர்களுக்கு இல்லை. ஏன், அவ்விதம் பிரிக்கும் சக்தி, மரண தேவனான யமனுக்குக்

கூடக் கிடையாது! லக்ஷ்மி பாயின் தேகத்தில் ஒரு சொட்டு ரத்தம் இருக்கும் வரையிலும், அவரிடமிருந்து சுதந்தர ரத்தினத்தைப் பிரிக்க முடியாது. அவருடைய இருதயத்திலிருந்து கடைசிச் சொட்டு ரத்தம் வழிந்துகொண் டிருக்கும்போது, அவர் தம் கௌஸ்துப மணியான சுதந்தர ரத்தினத்துடன் அக்கினிப் பிரவேசம் செய்து, மின்னலைப் போல் மறு உலகம் சென்று மறைந்துவிடுவார்.

லக்ஷ்மி பாயின் ஆட்சியில் ஜனங்கள் சந்தோஷமாகவும் சமாதானமாகவும் வாழ்ந்து வந்தார்கள். ஆனால் அவரிட மிருந்து டல்ஹௌஸி அந்த ராஜ்யத்தைக் கொள்ளையடித்த போது, பொது ஜனங்களுக்கு உண்டான ஆத்திரம் அளவு கடந் தது. எனினும், லக்ஷ்மி பாய் கொள்ளைக்காரனிடமிருந்து அதை மீண்டும் கைப்பற்றவே, அவர்களின் ஆவேசம் தணிந்து அமைதி ஏற்பட்டது.

அப்போது பெண்திலகத்தின் தினசரி வாழ்க்கை, பார்ஸனீஸ் எழுதியுள்ள 'லக்ஷ்மிபாயின் சரித்திர'த்தில் இவ்வாறு வர்ணிக்கப் பெற்றிருக்கிறது: 'ராணி லக்ஷ்மி பாய் தினசரி விடியற் காலை ஐந்து மணிக்கு எழுந்து சுத்தமான வாசனைத் தண்ணீரில் ஸ்நானம் செய்த பின், தூய வெள்ளைச் சேலை உடுத்துக்கொண்டு பிரார்த்தனை செய்வார். பிறகு துளசி மாடத்துக்குப் பூசை செய்தபின், பார்த்திவ பூசை ஆரம்பமாகும். அப்போது தர்பார்ச் சங்கீத வித்துவான்கள் கோஷ்டி கானம் செய்வார்கள். பிறகு பௌராணிகர்கள் புராண பாராயணம் செய்து முடித்ததும் சர்தார்களும் மற்றவர்களுமாக எழுநூற்றைம்பது பேர்கள் அவருக்கு மரியாதை செலுத்த வருவார்கள். லக்ஷ்மி பாய் அவர்களுக்குப் பதில் மரியாதை செலுத்துவார். அவர்களில் ஒருவர் வராமல் இருந்தாலும், மறுநாள் அவர் வரும்போது முதல் நாள் அவர் வராததற்குக்காரணம் என்ன என்று கேட்க ராணி தவறுவதே இல்லை. இதிலிருந்து அவரது அபாரமான ஞாபக சக்தியைத் தெரிந்துகொள்ளலாம். பிறகு மீண்டும் கடவுள் வழிபாடு நடந்ததும் சாப்பாடு ஆரம்பமாகும்.

'அதன்பின் ஏதாவது மிகவும் அவசர அலுவல் இருந்தாலன்றி, லக்ஷ்மி பாய் ஒரு மணி நேரம் ஓய்வெடுத்துக்கொள்ளுவார். காலையில் தமக்கு அளிக்கப்பட்ட காணிக்கைகளை எல்லாம் பிறகு பார்வையிடுவார். அவையெல்லாம் ஒரு வெள்ளித் தட்டில் பட்டுத் துணியால் மூடப்பட்டு அவர் முன்னிலையில் கொண்டு வரப்படும். அவற்றில் தமக்கு விருப்பமானவற்றை வைத்துக் கொண்டு மற்றவைகளை வேலைக்காரர்களுக்குப் பகிர்ந்து அளிப்பதற்காக, காணிக்கை இலாகா மந்திரியிடம் ஒப்படைத்துவிடுவார்.

'மாலை மூன்று மணிதான் அவர் வழக்கமாகத் தர்பாருக்குச் செல்லும் நேரமாகும். தர்பாரில் பெரும்பாலும் ஆடவ உடையுடன்தான் பிரசன்னமாவார். அப்போது அவருடைய இடுப்பில் ரத்தினவாள் தொங்கிக்கொண் டிருக்கும். கணவர் இறந்த பின் லக்ஷ்மி பாய் சில குறிப்பிட்ட ஆபரணங்களை அணிவதில்லை.

சிற்சில சமயங்களில் பெண் உடையுடனும் தர்பாருக்கு விஜயம் செய்வது உண்டு. எனினும், தர்பாரில் உள்ளவர்கள் அவரைப் பார்ப்பதில்லே. ஏனெனில் தர்பார் மண்டபத்தை அடுத்த தனி அறையில் அவர் உட்கார்ந்திருப்பார். அந்த அறையின் கதவுகள் தங்கமயமானவை. வாசற்படியில் இரு காவலர்கள் நின்றுகொண்டிருப்பர். அங்கே தங்க ஜரிகையாலான திரை போடப்பட்டிருக்கும். அந்த அறையில்தான் லக்ஷ்மி பாய் தம் சிம்மாசனத்தில் வீற்றிருப்பார். அறைக்கு எதிரில் லக்ஷ்மண ராவ் திவான்ஜி முக்கிய தஸ்தாவேஜுகளுடன் நின்றுகொண்டிருப்பார். அப்பால் தர்பார் அங்கத்தினர்கள் வீற்றிருப்பர்.

லக்ஷ்மி பாய் மிகுந்த புத்தி நுட்பமுடையவராதலின் எவ்வளவு சிக்கலான விஷயங்களேயும் வெகு துரிதமாக மனத்தில் வாங்கித் தம் உத்தரவுகளே விடுப்பார். அந்த உத்தரவுகள் தெளிவாகவும் திட்டமாகவும் இருக்கும். சிற்சில சமயங்களில் அவர் தம் உத்தரவுகளேத் தாமே எழுதிவிடுவதும் உண்டு.

'நீதி சம்பந்தமான விஷயங்களில் அவர் மிக மிக ஜாக்கிரதையாக நடந்துகொள்வார். ஸிவில் - கிரிமினல் வழக்குகளேத் தீர விசாரித்து மிகுந்த சாமர்த்தியத்துடன் தீர்ப்புக் கூறுவார். ராணி சாஹிப், மகா லக்ஷ்மியை ஆழ்ந்த பக்தியுடன் பூசிப்பது வழக்கம். ஒரு தாமரைத் தடாகத்தின் கரையில் மகாலக்ஷ்மி கோவில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செவ்வாய்க்கிழமையும் லக்ஷ்மி பாய் அந்தக் கோவிலுக்குச் செல்லுவது வழக்கம். ஒரு நாள் அவர் கோவிலிலிருந்து தெற்கு வாசற்படியின் வழியாகத் திரும்பி வந்துகொண்டிருந்தபோது, ஏராளமான பிச்சைக்காரர்கள் வழியை அடைத்து நின்று சச்சரவிட்டுக்கொண்டிருந்தனர். அதற்குக் காரணம் என்னவென்று அவர் மந்திரி லக்ஷ்மண ராவ் பாண்டேயைக் கேட்டார். அவரும் விசாரித்து, அவர்கள் எல்லோரும் பரம ஏழைகள் என்றும், குளிரால் கஷ்டப்படுவதாகவும், தங்களுடைய நிலேயைக் கவனிக்கும்படி அவர்கள் பாயைக் கேட்டுக்கொள்ளுவதாகவும் தெரிவித்தார். அதைக் கேட்டதும் இரக்க சித்தமுள்ள லக்ஷ்மி பாய் மிகவும் மனம் வருந்தி, அதிலிருந்து நான்காவது நாள் அவர்கள் எல்லோரும் அதே இடத்தில் வந்து கூட வேண்டும் என்றும், அப்போது ஒவ்வொருவருக்கும் ஒரு கம்பளிச் சட்டை, குல்லாய், கம்பளிப் போர்வை முதலியன கொடுக்கப்படும் என்றும் அறிவித்தார்.

'அந்த ஏழைகளுக்குக் கொடுப்பதற்காக ஆயிரக் கணக்கான சட்டைகளும் குல்லாய்களும் தைக்கும்படி நகரிலுள்ள தையற்காரர்கள் அனேவருக்கும் மறுநாளே உத்தரவு இடப்பட்டது. குறிப்பிட்ட தினத்தில் பிச்சைக்காரர்கள் மாத்திரம் அல்ல, ஏழைகளும் கோவிலுக்கு வரலாம் என்று பிரகடனம் செய்யப்பட்டது. அன்று லக்ஷ்மி பாயே நேரில் ஏழைகளுக்கும் உடைகள் வழங்ஞர். அவர்கள் யாவரும் ராணியை மனமார வாழ்த்திச் சென்ருர்கள்.

'நதேகானுடன் போரிட்டதில் காயமடைந்த சிப்பாய்களே நகருக்குள் கொண்டுவந்தபோது, அவர்கள் எல்லாருக்கும் சிகிச்சை செய்கையில் தாம் நேரில் இருக்க வேண்டும் என்று

லக்ஷ்மி பாய் வற்புறுத்தினர். அன்பும் அநுதாபமும் நிறைந்த அவருடைய வார்த்தைகளால், சிப்பாய்கள் தங்களுடைய வலியையும் மறந்து ஆறுதலும் சந்தோஷமும் அடைந்தனர். காயமடைந்தவர்களுக்காக ராணி மிகவும் வருந்தியதுடன், அவர்களுக்கு ஆபரணங்கள், பதக்கங்கள் முதலியனவும் பரிசளித்து, அன்புடன் அவர்கள் முதுகில் தட்டிக்கொடுத்து உற்சாகம் ஊட்டியதால், இந்த உத்தமியான ராணிக்குத் தங்கள் உயிரையும் தியாகம் செய்யலாமென்று மற்றவர்கள் நினைத்தனரே அன்றி, காயமடைந்தவர் எவரும் மனச் சோர்வு அடையவில்லை.

'லக்ஷ்மி பாயின் ஊர்வலச் சிறப்பை வர்ணிப்பது என்பது முடியாத காரியம். மகாலக்ஷ்மி கோவிலுக்குச் செல்லுகையில், அவர் சில சமயங்களில் பல்லக்கில் செல்லுவார்; மற்றும் சில சமயங்களில் குதிரைமீது ஏறிச் செல்லுவார். பல்லக்கில் செல்லும் போது, அது தங்கத் திரைகளால் மூடப்பட்டிருக்கும். அவர் ஆடவ உடையுடன் குதிரைமீது ஏறிச் செல்லுவது காண்பதற்கரிய காட்சியாக இருக்கும். முன்புறம் ராணுவ வாத்தியங்கள் முழங்க, சுதந்தரக் கொடியைத் தாங்கிச் செல்லுவார்கள். அதன் பின் இருநூறு ஐரோப்பியர்கள் செல்லுவர். ராணிக்கு முன்னும் பின்னுமாக நூறு குதிரை வீரர்கள் அணிவகுத்துப் போவார்கள். பல்லக்கு அருகில் மந்திரிகள் முதலிய உயர்தர அதிகாரிகள் குதிரைமீதோ நடந்தோ செல்லுவார்கள். சிற்சில சமயங்களில் அந்த ஊர்வலத்துடன் துருப்புகளும் செல்லுவது உண்டு. லக்ஷ்மி பாய் அரண்மனையிலிருந்து புறப்படும்போது ஒலிக்கும் இனிய கீதம் செவிக்கு அமுதமாக இருக்கும்.'

பதினொரு மாதங்கள் வரையில் ராணி லக்ஷ்மி பாய் இவ்வாறு சிறப்புடன் ஆட்சி புரிந்து வந்தார். புந்தேல்கண்ட் பிரதேசம் முழுவதும் சுதந்தர ஒளி வீசிக்கொண் டிருந்தது. அதே சமயம் தாதியாவும் கால்பியிலிருந்து படையெடுத்து வந்ததால், விந்திய மலையிலிருந்து யமுனை வரையில் ஆங்கில அதிகாரத்தின் அறிகுறி கூடத் தென்படவில்லை. அப்போது பிராம்மணர்கள், மௌல்விகள், சர்தார்கள், தொரக்தார்கள், சிப்பாய், போலீசார், ராஜாக்கள், ராவ்கள், பாங்கர்கள், கிராமவாசிகள் முதலிய எல்லோரும் ஏகமனதாக ஒன்றையே கோரினர். அதுதான் சுதந்தரம்!

'எனது ஜான்ஸியைக் கைவிட முடியாது. தைரியமுள்ளவன் அதை எடுத்துக்கொள்ளட்டும்' என்று ஜான்ஸி ராணி கூறியதைக் கண்டு, மிகுந்த பலத்துடன் விளங்கிய ஆங்கிலேயர்கள் திடுக்கிட்டுவிட்டனர். ஒரு பெண் அவ்வாறு கர்ஜிப்பார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அந்த நிலைமையைச் சமாளிப்பதற்காக அவர்கள் ஹ்யூ ரோஸின் தலைமையில் ஆயுதங்களுடன் ஐயாயிரம் படைகளையும் ஏராளமான பீரங்கிகளையும் அனுப்பினர்.

1858-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் இமயமலையிலிருந்து விந்திய பர்வதம் வரையிலும் உள்ள எல்லாப் பிரதேசங்களும் தேசபக்தர்களின் வசம் இருந்தன. அவ்விடங்களை யெல்லாம் மீண்டும் கைப்பற்ற ஆங்கிலேயர்கள் பரந்த ராணுவத் திட்டம்

ஒன்றைத் தயாரித்திருந்தனர். அந்தப் பிரதேசம் முழுவதையும் இரு பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவுக்கும் அவர்கள் ஒரு பெரிய படையை அனுப்பினார்கள். அதற்கிணங்கப் பிரதம தளபதி காலின் காம்பெல் அலாகாபாத்திலிருந்து புறப்பட்டுச் சென்று தோவாப் பிரதேசத்தைக் கைப்பற்றி, மீண்டும் கங்கையைக் கடந்து, லக்ஷ்மணபுரிமீது படையெடுத்ததும், லக்ஷ்மணபுரியை அழித்தபின் பிகார், காசி, அயோத்தி முதலிய இடங்களில் மூண்டிருந்த புரட்சித் தீயை அவித்ததும், பின்னால் தேசபக்தர்களையெல்லாம் ரோஹில்கண்ட் வரையில் விரட்டி, வடக்குப் பிரதேசம் முழுவதையும் மீண்டும் கைப்பற்றியதும் ஏற்கனவே குறிப்பிடப்பட் டிருக்கின்றன.

யமுனையின் வடபாகத்திலிருந்து இமய மலையை நோக்கிக் காலின் படையெடுத்துச் சென்றான். யமுனைக்கும் விந்திய பர்வதத்துக்கும் இடையே உள்ள தென் பிரதேசங்களைக் கைப்பற்றுவதற்காக ஹ்யூ ரோஸ் படைகளுடன் சென்றான். வடக்கே சீக்கியர்கள், கூர்க்கர்கள், இந்திய மன்னர்களின் சிப்பாய்கள் முதலியோர் காலினுடன் சேர்ந்துகொண்டார்கள். தெற்கேயும் ஹைதராபாத், போபால் முதலிய மற்றச் சம்ஸ்தானங்கள் ஹ்யூ ரோஸுக்கு உதவியாக இருந்தன. மற்றும் சென்னையிலிருந்தும் பம்பாயிலிருந்துங்கூட அவனுக்கு உதவியளிக்க ஏராளமான இந்திய சிப்பாய்கள் வந்திருந்தனர்.

துரோகிகள் அடங்கிய ஒரு படை விட்லாக்கின் தலைமையில் இருந்தது. அந்தப் படை ஜபல்புரியிலிருந்து புறப்பட்டு வழியிலுள்ள பிரதேசங்களை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டு இறுதியில் ஹ்யூ ரோஸுடன் சேர்ந்துகொள்ள வேண்டும்; விட்லாக் ஜபல்புரியிலிருந்து புறப்பட்டதும், ஹ்யூ ரோஸின் தலைமையில் இருந்த மற்றொரு துரோகிப் படை மோவிலிருந்து கிளம்பி ஜான்ஸி வழியாகக் கால்பிக்குப் படையெடுத்துச் செல்ல வேண்டும்.-இதுதான் ஆங்கிலேயர்களின் திட்டமாகும். அதன்படி ஹ்யூ, 1858 ஜனவரி மாதம் 6-ஆம் தேதி மோவிலிருந்து புறப்பட்டுத் தேச பக்தர்களுடன் போரிட்ட பின் ராய்கட் கோட்டையைத் தன் வசப்படுத்திக்கொண்டான். மீண்டும் அங்கிருந்து ஸாகருக்குப் படையெடுத்துச் சென்று, அங்கே தேச பக்தர்களால் சிறைப்பட்டிருந்த ஆங்கிலேயர்களை யெல்லாம் விடுவித்ததுடன், மேற்கொண்டும் முன்னேறிச் சென்று பல இடங்களையும் கைப்பற்றினான்.

மார்ச் மாதம் 10-ஆம் தேதி பாணபுரியும், அதன்பின் பிரபலமான சந்தேரிக் கோட்டையும் வீழ்ச்சியுற்றன. இவ்விதம் ஆங்கிலப் படைகள் வெற்றிக்கோலத்துடன் மார்ச் மாதம் 20-ஆம் தேதி ஜான்ஸியிலிருந்து சுமார் பதினான்கு மைல் தூரமுள்ள ஓரிடத்தில் முகாம் போட்டன. நர்மதைக் கரையிலிருந்து நெடுகப் பல இடங்களிலும் இருந்த தேச பக்தர்கள் எல்லோரும் மேலே குறிப்பிட்ட பல போர்களிலும் கலந்துகொண்டு இறுதியில் ஜான்ஸி வந்து சேர்ந்தனர். அதனால்தான் புரட்சிக்காரர்களின் கோட்டையாக விளங்கிய ஜான்ஸியைச் சூறையாட ஹ்யூ ரோஸ் அவசர அவசரமாக வந்துகொண் டிருந்தான்.

அப்போது துரோகி சர்க்காரி ராஜாவைத் தாதியா எதிர்த்துப் போரிட்டு வந்ததால், அந்த ராஜாவுக்கு உதவிபுரியச் செல்லுமாறு லார்டு கானிங்கும் பிரதம தளபதி காலினும் ஹ்யூ ரோஸிற்குக் கட்டளை யிட்டனர். ஹ்யூ ரோஸ் அந்த உத்தரவின்படி நடந்துகொண் டிருப்பானாயின், ஜான்ஸியைக் கைப்பற்ற வேண்டும் என்ற அவனுடைய திட்டம் பாழாகியிருக்கும். அந்த உத்தரவின்படி நடக்க அவனுக்கு மனமில்லை; அதைப் புறக்கணிக்கவும் அவன் துணியவில்லை.. இந்தியாவிலேயே இரண்டு உயர்ந்த ஆங்கில அதிகாரிகளின் கட்டளையை மீறும் முழுப் பொறுப்பையும் ராபர்ட் ஹாமில்டன், தான் ஏற்றுக்கொள்ளவே, ஆங்கிலப் படைகள் நிச்சயமாகத் தங்களுக்கு வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் ஜான்ஸிமீது படையெடுக்கத் தொடங்கின.

ஆனால் ஜான்ஸி எல்லையில் அடி வைத்ததிலிருந்து ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்கள் அற்ப சொற்பம் அல்ல. ராணியின் உத்தரவுப்படி ஜான்ஸியைச் சுற்றிலும் உள்ள எல்லாப் பிரதேசங்களும் பாழாக்கப்பட்டுக் கிடந்தன ஆதலால், அவர்களுக்கு எவ்வித வசதியும் சாதனமும் கிடைக்கவில்லை. வயல்களில் ஒரு சோளப் பயிரோ, மைதானங்களில் புல்லோ, சாலைகளில் நிழலுக்கு ஒரு மரமோ எதுவும் இல்லை. ஸ்பெயின் கொடுங்கோலர்களின் கையில் நெதர்லண்ட்ஸ் சிக்குவதைக் காட்டிலும் கடல் அணைகளை உடைத்து நாடு முழுவதும் வெள்ளமயமாகச் செய்வதுதான் சிறந்ததென்று முன்னர் ஆரஞ்ச் வில்லியம் மன்னன் தீர்மானித்தான் அல்லவா? அதுபோலவே லக்ஷ்மிபாயும் ஜான்ஸி விஷயத்தில் முடிவு செய்தார்.

அன்பும் இரக்கமும் நிறைந்த லக்ஷ்மி பாயின் கண்கள் மீண்டும் தீப்பொறியைக் கக்க ஆரம்பித்தன. மர்த்தன் சிங், பாணபுரி ராஜா, ஷஹாகர் அதிபர், தைரியசாலிகளான டாகுர்கள், புந்தேல்கண்ட் சர்தார்கள் எல்லோரும் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போர் புரிய மிகவும் ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் இருந்து வந்தனர். தேசீய உணர்ச்சியும் சுதந்தரமும் உருவெடுத்து வந்தாற் போன்ற ராணி லக்ஷ்மி பாய், எல்லோர் மனத்திலும் தேச ஆவேசத்தை உண்டுபண்ணியதில் ஆச்சரியம் இல்லை.

அத்தனை கஷ்ட நஷ்டங்களுக்கு இடையிலும் ஆங்கிலேயர்களுக்கு ஜான்ஸியை நெருங்குவது சாத்தியமாகியது. சிந்தியாவும், டெஹ்ரி மன்னரும் அவர்களுக்குத் தேவையான சகல சாதனங்களையும் ஏராளமாகக் கொண்டு வந்து குவிப்பதில் போட்டி போட்டுக்கொண்டதே அதற்குக் காரணமாகும். தங்கள் நாட்டை அந்நியர்களிடம் காட்டிக்கொடுக்கும் துரோகிகள் ஏராளமாக இருக்கும் வரையில், தேச பக்தர்கள் எவ்வளவு பலம் பொருந்தியவர்களாயினும் எவ்வாறு வெற்றி பெற முடியும்? எனினும் தாங்கள் வெற்றி பெற முடியாது என்பதற்காகத் தேசீய வீரர்களின் உறுதி சிறிதளவும் குன்றவில்லை.

பகைவர்களிடம் சரணடைந்து உயிர்ப்பிச்சை கேட்பதைக் காட்டிலும் அவர்கள் மனத்தைப் பிளக்கக் கூடிய விஷயம் வேறு என்ன இருக்க முடியும்? 'பிறந்தவர் இறந்துதான் தீரவேண்டும்.

மானம் இழந்து வாழ்வதைக் காட்டிலும் மானத்தைப் பாது காப்பதற்காக மரணமடைந்து புகழை நிலைநாட்டுவதே எல்லாவற்றிலும் மேலானது' என்று ஜான்ஸி ராணியும் அவரைச் சேர்ந்தவர்களும் கர்ஜித்துச் சுதந்தரப் போரில் தீவிரமாக ஈடுபட்டனர்.

பகைவர்களின் படை எவ்வளவு பலம் பொருந்தியதாயினும் நாட்டின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காகப் போராடியே தீருவது என்று ஜான்ஸி ராணி உறுதிகொண்டார். யுத்தத்துக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் ஜான்ஸி மக்கள் அனைவரும் பங்கெடுத்துக்கொண்டனர். இராப்பகலாக யுத்த ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றன. ராணியின் படையில் தைரியசாலிகளுக்குக் குறைவில்லையெனினும், பயிற்சி பெற்றவர்கள் வெகு சிலரே இருந்தனர். துருப்புகளிடையே ஒழுங்கும் இல்லை. ராணியே படை முழுவதற்கும் தலைமை வகித்து அதை நடத்தினார். யுத்த ஏற்பாடுகளை யெல்லாம் அவரே நேரில் பரிசீலனை செய்தார். அங்கும் இங்கும் சென்று வெகு சுறுசுறுப்புடன் எல்லா அலுவல்களையும் கவனித்து வந்தார். பீரங்கிகள் சுடுவதில் திறமை வாய்ந்தவர்களை அவரே நேரில் தேர்ந்தெடுத்தார்.

யுத்த முஸ்தீபுகள் நடைபெறும் ஒவ்வோர் இடத்துக்கும் அவர் விஜயம் செய்ததால், எல்லோர் மனத்திலும் வீர உணர்ச்சியும் உற்சாகமும் பொங்கின. தேசத்தின் வெற்றிக்காகப் பிராம்மணர்கள் பிரார்த்தனை செய்துகொண் டிருந்தார்கள். போருக்குச் சென்றுள்ள சிப்பாய்கள் ஜயம் பெற வேண்டும் என்று ஜான்ஸி கோயில்களில் ஜனங்கள் பூஜை செய்ததுடன், காயம் அடைந்த சிப்பாய்களுக்குத் தொண்டு செய்வதிலும் அக்கறை கொண்டார்கள். வெடிமருந்துகள் முதலிய யுத்த சாதனங்களைச் செய்வதில் தொழிலாளர்கள் தீவிரமாக ஈடுபட்டனர். வெடி மருந்துச் சாலைகளில் பெண்கள்கூட வேலை செய்தார்கள்.

23-ஆம் தேதி இரவு நகர் எங்கும் யுத்த பேரிகைகள் முழங்கின. அடிக்கடி கோட்டையிலிருந்து தீவட்டி வெளிச்சம் தெரிந்தது. யுத்தம் ஆரம்பம் ஆகிவிட்டது என்பதற்கு அறிகுறியாகக் காவலர்கள் சில தடவை சுட்டனர். 24-ஆம் தேதி உதயமாயிற்று. அவ்வளவுதான்! இனியும் என்ன தாமதம்? தேச பக்தர்களின் பீரங்கிகள் இடி முழக்கம் செய்யத் தொடங்கின.

அந்தப் போரை நேரில் கண்ட ஒருவர் குறிப்பிட்டுள்ள விவரங்கள் இவைதாம்: 'ஜான்ஸியில் 25-ஆம் தேதி யுத்தம் வெகு கடுமையாக ஆரம்பமாகியது. பகைவர்களின் பீரங்கிகள் இராப் பகலாகத் தீயைக் கக்கியவண்ணம் இருந்தன. பீரங்கிக் குண்டுகள் கோட்டையையும் நகரையும் தகர்த்துக்கொண் டிருந்தன. அந்தக் குண்டுகள் பகலில் சரியாகத் தெரியா எனினும், இரவில் கொள்ளிவாய்ப் பிசாசுகள் போல் ஆகாயத்தில் செல்லுவது நன்றாகத் தெரியும். தெற்கு வாசற்படியில் இருந்த தேச பக்தர்களின் பீரங்கிகளை 26-ஆம் தேதி மத்தியான்னத்திற்குள் ஆங்கிலேயர்கள் வாயடைத்துப் போகும்படி செய்துவிட்டார்கள். பகைவர்களின் கொடுமையான தாக்குதல் காரணமாக அந்தப் பக்கத்தில் எவரும் நிற்க முடியவில்லை. அதைக் கண்டு தேசீயப்

படைகள் உற்சாகம் இழந்தன. பின்னுல் மேற்கு வாசற்படியில் இருந்த பீரங்கியைத் திருப்பி, பகைவர்களைச் சுட ஆரம்பித்தார்கள். மூன்ருவது தடவையாகச் சுட்டபோது ஆங்கிலேயர்களின் பக்கம் இருந்த பீரங்கி நிபுணர் ஒருவர் மாண்டதால் அந்தப் பீரங்கி வாயடைத்துப் போயிற்று. அதற்குக் காரணஸ்தரான தேசீயப் படையைச் சேர்ந்த பீரங்கி நிபுணர் குலாம் கோஷ்கானுக்கு லக்ஷ்மிபாய் ஒரு வெள்ளிச் சதங்கை பரிசளித்தார். நதேகானுடன் செய்த யுத்தத்திலும் அவர் அதுபோலவே தம் திறமையைக் காட்டியவர். 5-ஆவது, 6-ஆவது நாட்களிலும் பீரங்கி யுத்தம் வெகு கோரமாக இருந்தது. அன்று ஆங்கிலேயர் பக்கத்தில் ஏராளமானவர்கள் பலியாயினர். அவர்கள் பக்கத்தில் இருந்த பல பீரங்கிகளும் நாசமாயின.

'7-ஆவது நாள் இடது புறம் இருந்த தேசீயப் படையின் பீரங்கி மேடை தகர்க்கப்பட்டதால், சுடுவது அசாத்தியம் ஆகி விட்டது. ஆயினும் இரவே கல் தச்சர்களைக் கொண்டு வந்து அந்த மேடையைச் சீர்ப்படுத்தி விட்டார்கள். மறுநாள் அந்த இடத்தில் மீண்டும் பீரங்கிகள் வேலை செய்ததைக் கண்டு ஆங்கிலேயர்கள் திகைத்துப் போயினர். அன்றும் பகைவர்கள் பக்கத்தில் ஏராளமானவர்கள் மாண்டனர். 8-ஆவது நாள் காலையில் ஆங்கிலப் படை சங்கர் கில்லாவை நோக்கிச் சென்றது. ஆங்கிலேயர்களிடம் உயர்ந்த ரகத் தொலைநோக்கிகள் இருந்தனவாதலால், அவற்றின் உதவி கொண்டு அவர்கள் கோட்டைக்குள் இருந்த தண்ணீர்த் தொட்டியைப் பீரங்கிகளால் தகர்க்க முற்பட்டார்கள். அப்போது தண்ணீர் எடுக்கச் சென்றவர்களிலும் சிலர் மாண்டனர். வெகு நேரம் வரையில் யாரும் அந்தத் தொட்டிக்கு அருகில் செல்ல முடியாததால், மக்களுக்குக் கஷ்டம் ஏற்பட்டது. பின்னுல் தேச பக்தர்கள் பகைவர்களின் பீரங்கிகளைத் தகர்க்கவே, ஜனங்கள் மீண்டும் அங்கே சென்று தண்ணீர் எடுத்து வருவது சாத்தியமாயிற்று.

'ஜான்ஸியிலுள்ள புளியந் தோப்பில் ஒரு வெடி மருந்துச் சாலை இருந்தது. அங்கே இரண்டு மணங்கு மருந்து உற்பத்தியானதும் அதை நிலவறையில் கொண்டுபோய் வைத்துவிடுவார்கள். அப்போது பகைவர்களின் பீரங்கிக் குண்டொன்று வெடி மருந்துச் சாலையில் விழுந்ததால் அதில் வேலை செய்துகொண்டிருந்தவர்களில் முப்பது ஆடவர்களும் எட்டுப் பெண்களும் மாண்டனர். அன்று எங்கும் ஒரே குழப்பமாக இருந்தது. துப்பாக்கிகள், பீரங்கிகள், வாள்கள் முதலியவற்றின் இடி முழக்கம் ஒரு புறம் இருக்க, தேசீய வீரர்களின் கோஷங்களும் வானளாவின. எங்கணும் யுத்த பேரிகைகளும் சங்கங்களும் பிரமாதமாக ஒலித்தன. தூசிகளும் புகையும் மேக மண்டலங்கள்போல் நகரைக் கவிந்துகொண்டன. கோட்டையில் இருந்த பல பீரங்கி நிபுணர்களும் சிப்பாய்களும் பகைவர்களின் பீரங்கிப் பிரயோகத்தால் கொல்லப்பட்டனர். அவர்களின் ஸ்தானத்தில் பாய் சாஹிப் உடனே வேறு சிலரை நியமித்தார். அவர் ஒரு நிமிஷமும் ஓய்வின்றி, போரை மேற்பார்வையிட்டு வந்தார். எங்கேயாவது ஒரு புறம் பலவீனமாக இருப்பது தெரிந்தால், உடனே

அங்கே சென்று அதைச் சீர்ப்படுத்திவிடுவார். அதனால் தேசீயச் சிப்பாய்கள் உற்சாகமடைந்து இடைவிடாமல் போர் புரிந்துவந் தனர். தேச பக்தர்களின் உறுதியான எதிர்ப்புக் காரணமாக ஆங்கிலேயர்கள் மார்ச் மாதம் 31-ஆம் தேதி வரையில் கோட் டைக்குள் பிரவேசிக்க முடியவில்லை.'

இத்தனை அலுவல்களுக்கு இடையிலும் பாயின் கண்ணோட் டம் ஒரு குறிப்பிட்ட திசையை நோக்கிச் சென்றுகொண் டிருந் தது. ஆஹா, ராணியின் முகத்தில் புன்முறுவல் தவழ்வதைப் பாருங்கள்! உற்ற சமயத்தில் அதோ ஒரு மாபெரும் வீரர் வரு கின்றார்! தேச பக்தர்கள் யாவரும் அவருக்கு மரியாதை செய்யுங் கள்! வெற்றிப் பேரிகைகள் முழங்கட்டும்! யுத்த கோஷங்கள் வானளாவட்டும்! வீரர் தாதியா டோபேயே ஜான்ஸிக்கு உதவி யாகத் தம் படைகளுடன் வருகின்றார். ஆங்கிலேயர்களை நடுங் கச் செய்யவும் ஜான்ஸிக்கு உற்சாகம் அளிக்கவுமே அவர் வரு கிறார்.

கான்பூரில் விண்ட்ஹாம் தோல்வியடைந்து காலின் வெற்றி பெற்ற பின், தாதியா கங்கையைக் கடந்து நானாவுடன் சேர்ந்து கொண்டார். பிறகு நானா அவ் விடத் திலே யே தங்கி யிருக்க, தாதியா மாத்திரம் தம் படையுடன் கால்பிக்கு அருகில் யமுனையைக் கடந்து வந்தார். பேஷ்வா ஆரம்பித்த சுதந்தர யுத்தத்தில் கலந்துகொண்டு உதவிபுரிய, சர்க்காரி ராஜா மறுத்து விட்டதால், தாதியா அவரது தலைநகரைக் கைப்பற்றி அந்தத் துரோகிக்குச் சரியான தண்டனை விதித்ததுடன், அவருக்குச் சொந்தமான இருபத்துநான்கு பீரங்கிகளைக் கைப்பற்றி, அவரிட மிருந்து மூன்று லட்சம் ரூபாய் கப்பத் தொகையும் பெற்றுக் கொண்டார். பிறகுதான் அவர் கால்பியை நோக்கிப் புறப்பட் டார்.

அப்போது அவருடைய உதவி கோரி ஜான்ஸி ராணியிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. அவர் அந்தக் கடிதத்தைப் பிரதம தலைவரான பேஷ்வா நானா சாஹிபுக்கு அனுப்பி, அவருடைய அனு மதி பெற்ற பின், ஆங்கிலப் படையைப் பின்புறமாகத் தாக்கு வதற்காக ஜான்ஸியை நோக்கிப் புறப்பட்டார். அவரைக் கண்டே ராணி லக்ஷ்மிபாயின் இருதயத்தில் நம்பிக்கையும் அதரத்தில் புன்முறுவலும் திகழ்ந்தன.

அவ்விருவரும் குழந்தைகளாக இருந்தபோது பிரம்மாவர்த் தத்தில் விளையாடியவர்கள். இன்றோ அவ்விருவரும் சேர்ந்து போர்க்களத்திலும் விளையாடுகின்றார்கள். ஒருவர் ஜான்ஸிக் கோட்டையில் பீரங்கிகளின் தீக்கு நடுவில் நின்றுகொண் டிருக் கிறார்; மற்றவரோ தம் இருபத்திரண்டாயிரம் துருப்புகளுடன் ஜான்ஸிக்கு அருகில் வந்துகொண் டிருக்கிறார். அவ்விருவரும் குழந்தைகளாக விளையாடிக்கொண் டிருந்தபோது அவர்களை யாரும் கவனிக்கவில்லை; ஆனால் இன்றோ உலகத்தின் கவனத் தையே அவர்கள் கவர்ந்திருக்கிறார்கள்.

தாதியாவிடம் அதற்கு முன் ஒருபோதும் அத்தனை அதிகத் துருப்புகள் இருந்ததில்லை. அதைக் கண்டு ஆங்கிலேயர்கள்

மிகுந்த கலக்கம் அடைந்தனர். சிவாஜியின் சீடர்கள் போன்றோ, குமார சிம்மனின் வீரர்கள் போன்றோ, அந்த இருபத்திரண்டாயிரம் சிப்பாய்களும் போர் புரிந்திருப்பின், ஹியூ ரோஸின் படைகள் இருந்த இடம் தெரியாமல் மறைந்திருக்கும். ஆனால் ஆங்கிலேயர்களின் நேரடியான தாக்குதலின் முன்னிலையில், துரோகம் காரணமாகவும் கோழைத்தனம் காரணமாகவும், தாதியாவின் படைகள் சிதறுண்டு போயின.

ஜான்ஸியிலுங்கூடத் துரோகிகள் இருந்தனர். அங்கிருந்த பல பீரங்கிகளும் திடீரென்று வேலை செய்யவில்லை. தாதியா கொண்டு வந்திருந்த அபரிமிதமான யுத்த சாதனங்கள், பீரங்கிகள் முதலியவை ஆங்கிலேயர்களிடம் சிக்கின. புற முதுகு காட்டி ஓடிய கோழைகளைப் பகைவர்கள் சுட்டதில் ஆயிரத்து ஐந்நூறு பேர்கள் மாண்டனர். பைத்தியக்காரர்கள்! மடையர்கள்! கோழைகளைப்போல் ஓடியும் அவர்களால் தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. அதற்கு மாறாக அவர்கள் எதிர்த்து நின்றிருப்பார்களாயின், பரேலியில் இறுதி வரையில் பகைவர்களை எதிர்த்து நின்ற காஸிகளைப்போல் வீர சுவர்க்கம் அடைந்திருக்கலாம்; அல்லது ஹ்யூ ரோஸின் படைகளைத் துவம்சம் செய்து என்றென்றும் அழியாப் புகழ் பெற்றிருக்கலாம்.

ஆயினும் இறைவன் அவர்களை மன்னிப்பாராக! அவர்கள் நம்முடைய மதிப்புக்குப் பாத்திரர்கள் அல்லவாயினும் நமது அநுதாபத்துக்கு உரியவர்களே. எவ்விதம் இருந்தாலும் அவர்களும் தேசத்தின் விடுதலைக்காகப் பலியானவர்கள் அல்லவா? அவர்களுடைய மரணம் சகலருக்கும் ஒரு சிறந்த படிப்பினையாகும், அதாவது உயிர் வாழ்வதற்காக ஓடும் கோழைகள் மாண்டுபோகிறார்கள் என்பதையும், இறப்பதற்காகப் போராடும் வீரர்கள் என்றென்றும் உயிர் வாழ்கிறார்கள் என்பதையும் அவர்களது மரணம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இறந்தாயினும் தேசத்தின் கௌரவத்தைப் பாதுகாக்கவே ராணி லக்ஷ்மி பாய் போரிட்டு வந்தார். அவ்விதம் இருந்தும், சர்தார்களும், டாகுர்களும், சிப்பாய்களும் மனம் சோர்ந்தனர். தாதியா தங்களுக்கு உதவியாக வருவார் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் ஒன்பது நாட்கள் வரையில் இரவு பகலாகப் போரிட்டனர். தாதியா வந்ததும் அவர்கள் ஆனந்தம் அடைந்தார்கள். ஆனால் ஏப்ரல் மாதம் 1-ஆம் தேதி அவர் தோல்வியுறவே அவர்களிடையே தாங்கள் வெற்றி அடைவோம் என்ற நம்பிக்கை பாழாகிவிட்டது.

அவர்களுடைய நிலைமையைக் கண்ட லக்ஷ்மி பாய் இவ்வாறு கர்ஜிக்கலானார்: 'இதுவரையில் முற்றும் பேஷ்வாவின் உதவியையே நம்பி ஜான்ஸி போரைத் தொடங்கவில்லை. எதிர் காலத்தில் நாம் போரை நடத்த அவருடைய உதவி இருந்துதான் தீர வேண்டும் என்பதும் இல்லை. இதுவரை உங்களுடைய சுய மதிப்பும் வீரமும் உறுதியும் ஆண்மையும் அற்புதமான முறை

யில் வெளியாகியிருக்கின்றன. இனியும் அவ்விதமே தொடர்ந்து தைரியத்துடனும் உற்சாகத்துடனும் போர் புரியுங்கள்.'

இந்தக் கர்ஜனையைக் கேட்டதும் சிப்பாய்களிடையே மீண்டும் உத்வேகம் ததும்பியது. யுத்த பேரிகைகளின் முழக்கமும் தேச பக்தர்களின் கோஷங்களும் மறுபடியும் வானளாவின. பீரங்கிகளின் இடி முழக்கம் மீண்டும் கேட்கலாயிற்று. ஏப்ரல் 3-ஆம் தேதி ஜான்ஸி நகரின்மீது ஆங்கிலேயர்களின் இறுதித் தாக்குதல் ஆரம்பமாகியது. அவர்கள் எட்டுத் திசைகளிலிருந்தும் ஜான்ஸியை நெருக்கினர். தேச பக்தர்களும் வெகு உக்கிரமாகப் போர் புரியலாயினர்.

ராணி லக்ஷ்மிபாய், கையில் வாளுடன் காளி தேவிபோல் விளங்கினார்! அந்தக் காட்சி சிப்பாய்களிடையே மகத்தான ஆவேசத்தை உண்டுபண்ணியது. அவர் மின்னல்போல் நான்கு புறங்களிலும் தோன்றித் தேச பக்தர்களுக்கு மிகுந்த உற்சாகத்தை உண்டாக்கினார். மகா வீரத்துடன் போர் புரிந்த சிலருக்குத் தங்கத் தோடாக்களும் மற்றும் சிலருக்கு உடைகளும் பரிசளித்தார். சில வீரர்களைத் தம் புனிதமான கையால் தட்டிக் கொடுத்து உற்சாகம் ஊட்டினார். மற்றும் பலர் அவருடைய புன்முறுவலாலும் வீரம் செறிந்த வார்த்தைகளாலும் புதிய சக்தி பெற்றனர்.

பகைவர்கள் பீரங்கிகளால் பிரதான வாசற்படியைத் தாக்கிக்கொண் டிருந்தார்கள். கோட்டைச் சுவர்களின்மீது எட்டு இடங்களில் ஆங்கிலேயர்கள் ஏணிகளை வைத்து ஏறவும் ஆரம்பித்தனர். அவ்வளவுதான்! கோட்டையிலிருந்தும், அலங்கங்களிலிருந்தும், வீடுகளிலிருந்தும் தோட்டாக்கள் சரமாரியாகப் பறந்து வந்தன. தேச பக்தர்களின் பீரங்கிகளும் ஒருங்கே அக்கினியைக் கக்கின. 'பறங்கியர்களை ஹதம் செய்யுங்கள்!' என்ற கோஷங்கள் நான்கு புறங்களிலிருந்தும் கிளம்பின. லெப்டினன்ட் டிக், லெப்டினன்ட் மைக்கேல் ஜான் இருவரும் ஏணிகளில் ஏறி, தங்களைப் பின்தொடருமாறு மற்றவர்களையும் அழைத்தனர். உடனே தேச பக்தர்களின் பீரங்கிகள் அந்தத் திசையை நோக்கின. இருவரும் சிதல் சிதலாயினர். அவர்களைத் தொடர்ந்து ஏணிகளில் ஏறிய லெப்டினன்ட் போனஸ், லெப்டினென்ட் வாக்ஸ் முதலியோருக்கும் அதே கதி நேர்ந்தது. சுவர்களைத் தாண்ட முயன்ற நான்கு தலைவர்கள் மாண்டதைக் கண்டதும் ஆங்கிலேயர்கள் கலக்கமடைந்து, பின்வாங்கும்படி தங்கள் துருப்புகளுக்குக் கட்டளையிட்டனர். உடனே ஆங்கிலச் சிப்பாய்கள் எல்லோரும் ஆங்காங்கே கிடந்த கற்குவியல்களுக்கிடையே பதுங்கிப் பதுங்கிப் பின்வாங்க ஆரம்பித்தார்கள்.

அந்த யுத்தத்தைப்பற்றி லோ என்ற ஆங்கில சரித்திராசிரியர் குறிப்பிட்டிருப்பதாவது: 'பிரதான வாசற்படிக்குச் செல்லும் சாலையில் நாங்கள் திரும்பியதுதான் தாமதம்; உடனே புரட்சிக்காரர்களின் பீரங்கிகள் தீயைக் கக்கின. அந்தக் காட்சி மிகவும் பயங்கரமாக இருந்தது. கோட்டைச் சுவர்கள்தாம் ஆயிரக்கணக்கான வாய்களிலிருந்தும் அக்கினியைக் கக்குகின்றனவோ

என்று தோன்றியது. எங்கே நோக்கினும் தீயும் தோட்டாக்
களும் பீரங்கிக் குண்டுகளும் சீறும் சப்தமே கேட்டது. நம்மை
அடியோடு அழிப்பதற்காகப் பிரளய தேவனே வந்துவிட்டானோ
என்றே நினைத்தோம்!'

பிரதான வாசற்படியின் வழியாக வர முடியாமல், பகைவர்
கள் தடுக்கப்பட்டனர். எனினும், தெற்கு வாசற்படியிலிருந்து
பிரலாபம் கேட்கத் தொடங்கியது. ஆம், அங்கே ஆங்கிலேயர்
களின் சூழ்ச்சி பலித்துவிட்டது. துரோகிகள் காட்டிக்
கொடுத்து விட்டார்கள். அவர்களின் உதவியால் பகைவர்கள்
தெற்கு வாசற்படியைத் தாண்டி வெகு வேகமாக முன்னேறி
னர். பன்னிரண்டு நாட்கள் வரை பிரமாதமாகப் போர் நடந்
தது. ஜான்ஸி மகாராணியிடம் அதிகப் படைகள் இல்லாமல்
இருந்தும், சிற்சில சமயங்களில் அவருக்கு வெற்றி கிடைக்கலாம்
என்றும் தோன்றியது. ஆயினும் என்ன? பண ஆசை
பிடித்து நாட்டைக் காட்டிக் கொடுக்கும் துரோகிகள் இருக்கும்
போது, எவ்வளவு பலம் இருந்துதான் என்ன செய்ய முடியும்?

அத்தகைய பாவிகளின் துணை கொண்டு ஆங்கிலேயர்கள்,
தம் படைகளை மூன்று பிரிவாகப் பிரித்து, பலவீனமான குறிப்
பிட்ட இடங்களைத் தாக்கும்படி செய்தனர். ஒரு பிரிவுப்
படைகள் நகருக்குள்ளும் புகுந்து பொது மக்களைக் கொல்லவும்,
வீடுகளுக்குத் தீ வைக்கவும் ஆரம்பித்தன. உளவாளிகளின்
உதவியால் ஆங்கிலேயர்கள், அரண்மனைக்கு அப்பால் இருந்த
மருந்துச் சாலைக்கும் தீ வைத்தனர். அதனால் மகாராணிக்கு
மிகுந்த நஷ்டம் ஏற்பட்டது. வெள்ளையர்களும் அதுதான் சமய
மென்று தங்கள் அழிவு வேலையை ஆரம்பித்தார்கள். ஆண்கள்
- பெண்கள், குழந்தைகள் - வயோதிகர்கள் என்ற பேதமின்றி
எதிர்ப்பட்ட ஜனங்களையெல்லாம் சுட்டும் வெட்டியும் கொன்று
குவித்தனர். இவ்வாறு ஜான்ஸியில் ரத்த ஆறு ஓடியது. மகா
ராணியின் மாளிகையான ராஜ மஹலைப் பாதுகாத்து நின்ற
வீரர்களையும் வெள்ளையர்கள் கொன்று அதை இடித்துத் தகர்த்
தனர். அரண்மனையில் இருந்த ஏராளமான தொகையும் கொள்ளை
யிடப்பட்டது. பல கட்டிடங்கள் நாசமாயின. அந்தோ! இறு
தியில் ஜான்ஸி பகைவர்களிடம் வீழ்ச்சியுற்றது.

கோட்டை மதிலின்மீது நின்றுகொண் டிருந்த ராணி திரும்
பிப் பார்த்தபோது, தெற்கு வாசற்படியில் பேராபத்து நேர்ந்து
விட்டது தெரிந்தது. அதைக் கண்டதும் ராணியின் கண்கள்
கோபத்தினால் தணல்போல் சிவந்தன. உடனே அவ்வீர மாது
தன் வாளுடனும், 'வெற்றி அல்லது மரணம்' என்ற உறுதியுட
னும் தமக்குத் துணையாக நின்ற சுமார் ஆயிரத்து ஐந்நூறு வீரர்
களுடனும் பகைவர்கள் வரும் திசையை நோக்கிச் சென்றார்.
தன் குட்டிகளைத் திருடிய வேடுவன்மீது பெண்புலி பாய்வது
போல் இருந்தது, அந்த வீர வனிதையின் பாய்ச்சல்!

இரண்டு படைகளும் மோதிக்கொண்டன. தேசிய வீரர்
களின் வாள்கள் வெகு துரிதமாக வேலை செய்ததால், பல
வெள்ளையர்களின் தலைகள் தரையில் விழுந்து உருண்டன. தேச

பக்தர்களின் ஆவேசத்தைக் கண்ட ஆங்கிலேயர்கள் பின்வாங்கி ஓடி, மறைவிடங்களிலிருந்து துப்பாக்கிப் பிரயோகம் செய்ய முற்பட்டனர். ஜான்ஸி தெருக்களில் ஆங்கிலேயர்களின் ரத்த வெள்ளம் ஓடியதால், காளி தேவியின் கோபம் சிறிது தணிந்தது! வெகு சில துருப்புகளுடன் அவ்விடத்தில் மேற்கொண்டு போர் புரிவது அர்த்தமற்ற துணிச்சலாகும் என்பதை உணர்ந்த ராணி திரும்பினார்.

ராணியின் வீராவேசத்தைக் கண்டு மற்ற இடங்களில் இருந்த தேசீய வீரர்கள் புதிய சக்தி பெற்றவர்கள்போல் மீண்டும் ஆவேசத்துடன் போர் புரிந்தார்கள். நகரும் அரண்மனையும் ஆங்கிலேயர்களிடம் சிக்கிய பின்னருங்கூட, ராணியின் குதிரை லாயத்தைப் பாதுகாத்து வந்த ஐம்பது வீரர்கள், அதைப் பகைவர்களிடம் ஒப்பிக்க மறுத்துவிட்டனர். 'சரணம்' என்ற வார்த்தை அவர்களுடைய அகராதியில் இல்லையல்லவா? அவர்கள் எண்ணிக்கையற்ற பகைவர்களை வெட்டி வீழ்த்தினர்; இறுதியில் தாங்களும் ஒருவர்கூடப் பாக்கியின்றி உயிர்த் தியாகம் செய்தனர். ஏராளமான குதிரைகள் இருந்த லாயத்தை அதன் பிறகுதான் பகைவர்களால் கைப்பற்ற முடிந்தது. நகர் முழுவதும் எரிந்தும் அழிந்தும் போனதால், காயமடைந்தவர்கள், மரணவேதனைக்கு உள்ளானவர்கள் முதலியோரின் பிரலாபம் சகிக்க முடியாததாயிற்று.

கோட்டைச் சுவர்கள் மிகவும் பலமானவையாதலின் அன்று அவற்றை ஆங்கிலேயர்களால் இடித்துத் தகர்க்க முடியவில்லை. இறுதியாக ராணி அந்தச் சுவர்மீது நின்று ஜான்ஸி நகரின் அலங்கோலத்தைச் சுற்றிப் பார்த்தபோது, துக்கம் தாங்க முடியாமல் அவருடைய கண்களிலிருந்து நீர் பெருகியது. அந்தோ! ஜான்ஸி ராணி கண்ணீர் விடுவதா? அவருடைய அழகிய கண்கள், ஜான்ஸி மக்கள் படுகொலை செய்யப்பட்டதைக் கண்டு கண்ணீர் வடித்ததால் கோவைப் பழம்போல் சிவந்தன! அதே சமயம் அவை ஜான்ஸியில் பறக்கும் பறங்கியர் கொடியை நோக்கின. அதைக் கண்டதும் கண்ணீர் நின்றது. அவரது கண்களிலிருந்து மீண்டும் கோபத் தீ கிளம்பியது. ஜான்ஸி நகரில் அடிமைத்தனத்துக்கு அறிகுறியான கொடி பறப்பதை நம் வீர ரமணி எவ்வாறு சகித்துக்கொண் டிருக்க முடியும்?

ராணியின் மனம் துடித்துக்கொண் டிருந்த அச்சமயம் ஒருவர் அவரிடம் ஓடி வந்தார். 'மகாராணியவர்களே! பிரதான வாயிலைப் பாதுகாத்து நின்ற பீரங்கிப்படைத் தலைவர்களும், மகா வீரர்களுமான சர்தார் குவார் குதா பக்ஷும், குலாம் கோஷ் கானும் பகைவர்களால் சுடப்பட்டு மாண்டனர்' என்ற செய்தியை அறிவித்தார். ஏற்கனவே மனம் துடித்துக்கொண் டிருந்த மகாராணிக்கு அந்தச் செய்தி இன்னும் அதிக அதிர்ச்சியைக் கொடுத்தது. ஆயினும் என்ன? ஜான்ஸி ராணியிடமிருந்து சுதந்தர ரத்தினத்தைப் பிரிக்க வல்லவர் யார்?

உடனே ராணி, தம்மைச் சுற்றி இருந்த பிரமுகர்களிடம் கூறியதாவது: 'ஆங்கிலேயர்கள் நாற்புறமும் சூழ்ந்துகொண்டுள்

ளனர். ஜான்ஸி நகர் வீழ்ச்சியுற்று விட்டது. நம் பீரங்கிப் படையின் பலமும் குன்றிவிட்டது. சேனைகளில் பெரும்பகுதியும் சிதைந்து போய்விட்டன. சுத்த வீரர்களில் பலரும் வீர சுவர்க்கம் சென்றுவிட்டனர். ஆகவே இனி நாம் போர் புரிந்து வெற்றி பெறுவது அசாத்தியம். வெள்ளையர்கள் என்னைக் கைது செய்வது என்பது ஒருபோதும் முடியாத காரியம். என் உடலில் உயிர் இருக்கும் வரையில் என்னைத் தீண்டவோ அவமதிக்கவோ சகியேன். ஆகையால், ராஜபுத்திர வீரமாதர்களின் வழக்கப் படி அக்கினிப் பிரவேசம் செய்து மாய்வேனேயன்றி விரோதி களின் கையில் சிக்க மாட்டேன்; அல்லது வெடிமருந்துக்கு நான் என் கையினுலேயே தீ வைத்து மாய்வேன். உங்களில் மரணத் துக்குத் துணிந்தவர்களே இங்கே இருக்கலாம். மற்றவர்கள் இன்றிரவே உயிர் தப்பி வெளியே சென்றுவிட வகை தேடுவீர் களாக!'

ராணி இவ்வாறு கூறியதைக் கேட்டு அநுபவம் மிகுந்தவரும் வயோதிகருமான ஒரு சர்தார் கூறியதாவது: 'மகாராணியவர் களே! இனித் தாங்கள் இங்கிருப்பது ஆபத்தாக முடியும். எனவே தாங்கள் பகைவர்களின் முகாமைத் தாண்டிக்கொண்டு இன்று இரவே கோட்டையை விட்டு வெளியேறி, பேஷ்வா இருக்கும் இடத்துக்குச் செல்ல வேண்டும். அவ்வாறு செல்லும்போது பகைவர்களை எதிர்த்து மாண்டால், வீர சுவர்க்கம் இருக்கவே இருக்கிறது!'

அதற்குப் பதிலாக ராணி லக்ஷ்மி பாய், 'போர்க்களத்தில் இறப்பதையே நான் விரும்புகிறேன். ஆனுல் நான் இறந்தபின் என் உடலைப் பகைவர்கள் அவமதித்தால் என்ன செய்வது?' என்று தயங்கினுர்.

'அவமதிப்பா? எங்களில் ஒருவர் பாக்கி இருக்கும் வரை யிலும் உங்களுடைய புனிதச் சரீரத்தைத் தொடுவதற்காக நெருங்குபவனை எங்களுடைய வாள் துண்டு துண்டாக்கிவிடும்' என்று தர்பாரில் இருந்த சகலரும் ஒரே வாக்காகக் கர்ஜித்தனர்.

எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. லக்ஷ்மிபாய் தம் அன் பார்ந்த சகலப் பிரஜைகளையும் ஆசீர்வதித்து அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டார். தங்களுடைய ராணியை இனி என்று காணப் போகின்றேம் என்று பிரஜைகள் எல்லாரும் கண்ணீர் விட்டுக் கதறினர். மகாராணியின் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் பரம ரகசியமாகச் செய்யப்பட்டன. அவர் ஒரு போர் வீரன்போல் மாறுவேடம் பூண்டு, எஃகுக் கவசம் தரித்து, உறைவாளை இடையிற் செருகிக்கொண்டு சுத்த வெள்ளை யான தன் பட்டத்துக் குதிரைமீது ஏறிப் புறப்பட்டார். அப் போது ராணி யுத்த தேவதைபோல் காட்சியளித்தார். தம் ஸ்வீகாரக் குழந்தையான தாமோதர ராவைத் தம் முதுகில் ஒரு பட்டுத் துணியால் கட்டிக்கொண்டார்.

மகாராணியின் அன்புக்குரிய தோழிகளும் போர்வீரர்களைப் போல் மாறுவேடம் புனைந்து புறப்பட்டனர். அவருடைய

தந்தையான மோரோபந்து தாம்பேயும், மற்றும் பல வீரர்களும் குதிரைகளின்மீது ஏறி மகாராணிக்குப் பாதுகாப்பாகச் சென்றனர். அவர்கள் ரகசிய வழியாகக் கோட்டையிலிருந்து வெளிப்பட்டு நகரத்தின் வடக்கு வாசலுக்கு வந்தார்கள். அப்போது அங்கிருந்த காவற்சிப்பாய் அவர்களை, 'யார்?' என்று கேட்டான். அவன் டெஹ்ரி சம்ஸ்தானத்தைச் சேர்ந்த துரோகிகளின் படையைச் சேர்ந்தவன். தேசீய வீரர்கள் சிறிதும் தயக்கமின்றி, 'ஹ்யூ ரோஸிற்கு உதவியாக டெஹ்ரி சம்ஸ்தானச் சிப்பாய்கள் செல்லுகின்றனர்' என்று கூறவே, அவன் திருப்தி அடைந்தான். அதுபோலவே சிறிது தூரத்திற்கு அப்பால் இருந்த ஆங்கிலச் சிப்பாயையும் அவர்கள் ஏமாற்றிவிட்டுச் சென்றனர்.

மற்றும் வழியில் தென்பட்ட ஆங்கிலச் சிப்பாய்களுக்கு மகாராணி கோஷ்டியினர் தந்திரமாகவும் திருப்திகரமாகவும் பதில் கூறிவிட்டுச் சென்றபோதிலும், சிலர் சந்தேகம் கொண்டு வழி மறித்தனர். அவர்களுக்கு உதவியாக மேற்கொண்டும் ஏராளமாக ஆங்கிலச் சேனைகள் வந்து சேர்ந்தன. அப்போது மகாராணி மிகவும் ஆக்கிரோஷத்துடன் வாட்போர் புரிந்ததில், பல வெள்ளைச் சிப்பாய்கள் வீழ்ந்து மாண்டனர். எனினும் ஆங்கிலப் படைகளின் தொகை அதிகமாகவே, இதர வீரர்கள் மகாராணியைச் சென்றுவிடும்படி கூறித் தாங்கள் வீரப்போரில் இறங்கினர். மகாராணிக்குத் துணையாக, மாறுவேடம் பூண்ட தோழிகளும் மற்றும் சில வீரர்களும் மாத்திரம் சென்றார்கள். மற்ற வீரர்கள் தங்கள் தொகை மிகவும் சொற்பம் என்பதையும் பொருட்படுத்தாமல் ஆங்கிலேயர்களை எதிர்த்து நின்றதில் பெரும்பாலோரும் வீர சுவர்க்கம் அடைந்தார்கள்.

மகாராணி லக்ஷ்மி பாய் தங்களை ஏமாற்றிச் சென்றுவிட்டார் என்ற செய்தி ஆங்கிலேயர்களுக்கு இடி இடித்ததுபோல் இருந்தது. லெப்டினென்ட் பௌகர் என்ற தளபதியின் தலைமையில் ஒரு படை மகாராணி கோஷ்டியினரை விரட்டிக்கொண்டு வந்தது. ஆனால் அந்தப் படை காரிருளில் வழி தெரியாமல் அலைந்து கொண்டிருக்கையில், மகாராணி தம் படையுடன் கானகத்தின் வழியாகப் பந்தீர் என்ற கிராமம் போய்ச் சேர்ந்தார்.

இரவு வெகு நேரம் கழித்துப் பௌகர் படைகளும் அந்தக் கிராமத்துக்கு அருகில் வந்து சேர்ந்தன. காலையில் மகாராணி காலைக் கடன்களை முடித்தபின், சுவீகாரக் குழந்தையையும் முதுகில் கட்டிக்கொண்டு புறப்படவே ஆங்கிலப் படைகளும் அங்கே வந்து ராணி கோஷ்டியினரைப் பின்தொடர ஆரம்பித்தன. அப்போது நடந்த போரில் மகாராணி பலரையும் தம் வாளால் வெட்டி வீழ்த்தவே, மிகுந்த ஆத்திரங்கொண்டு பௌகரே நேரில் வந்து ராணியுடன் போர் புரிந்தான். இறுதியில் அவனும் காயமடைந்து குதிரையிலிருந்து கீழே விழவே ஆங்கிலேயர்கள் பின்வாங்கினர். அச்சமயம் ராணி லக்ஷ்மிபாயும் குதிரையைத் தட்டிவிட்டுப் பறந்து சென்றார். அந்தப் போரில் வீழ்ந்தவர்களைத் தவிர மற்றத் தேசீய வீரர்கள் மகாராணிக்குப் பாதுகாப்பாகச் சென்றனர். காயமடைந்த பௌகர் தன் முயற்சியில் தோல்வியுற்றுச் சேனையுடன் வந்த வழியே திரும்பினான்.

மகாராணியும் அவருடைய கோஷ்டியினரும் அன்று பகல் முழுவதும் ஓரிடத்தில்கூட நிற்காமல், இரவு பன்னிரண்டு மணிக்குக் கால்பி நகரை அடைந்தனர். அந்தப்புரத்தில் அரச போகங்களில் வாழ்ந்து வந்த அந்தப் பெண்மணி, ஜான்ஸியிலிருந்து நூற்றிரண்டு மைல் தூரத்திலுள்ள கால்பிக்குச் சென்ற சாகசம் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதாகும். நடுவழியில் பல இடங்களில் போர் நடந்தும், அவ்வீர மாது வெகு திறமையுடன் பல எதிரிகளையும் விண்ணுலகிற்கு அனுப்பினார். அவர் ஏதோ ஒரு மந்திர வாளுடன் பிறந்தவர் என்றே அவ்வமயம் தோன்றியது. அதனாலேயே ஆங்கிலப் படைக் கூட்டம் மேற்கொண்டு அவரைத் தாக்க அஞ்சிப் பின்வாங்கிச் சென்றது. மகாராணியைக் கால்பி நகருக்குக் கொண்டு சேர்த்த அந்தக் குதிரையும், நடுவழியில் நடந்த போரில் காயமடைந்த பல வீரர்களும் களைப்பினால் வீழ்ந்து மாண்டனர். அத்தகைய வீரர்களையும் அந்தக் குதிரையையும் நாம் எக்காலத்திலும் மறப்பதற்கில்லை.

ராணியின் தந்தையான மோரோபந்து தாம்பே, ஜான்ஸிக் கோட்டையை விட்டு வெளிச் செல்லுகையில், ஒரு யானைமீது ஏராளமான பொருள்களையும் ஏற்றிக்கொண்டு சென்றார். பகைவர்களால் வழி மறிக்கப்பட்டும், அவர் எப்படியோ தப்பித்துக் கொண்டு ததியா என்ற ஊரை அடைந்தார். ஆனால் அவ்வூர் அரசனான ஒரு துரோகி தாம்பேயிடம் இருந்த பொருள்களையெல்லாம் கவர்ந்துகொண்டதுடன், அவரையும் ஆங்கிலேயர்களிடம் ஒப்பித்துவிட்டான். மகாராணியால் பல போர்களிலும் தோல்வியடைந்த ஆங்கிலேயர்கள், தங்களுடைய வஞ்சத்தை ராணியின் தந்தையான தாம்பே மீது தீர்த்துக்கொண்டனர்!

அவரை ஜான்ஸிக்குக் கொண்டு வந்து பகல் இரண்டு மணிக்கு ராஜமஹாலுக்கு அருகில் பகிரங்கமாகத் தூக்கில் இட்டனர். அவரைத் தூக்கில் இடும்படி உத்தரவிட்ட பாவி ஹ்யூ ரோஸ்தான். பாரதப் புதல்விகளில் முதன்மையான வீர ரத்தினமெனத் திகழ்ந்த மகாராணி லக்ஷ்மி பாயைப் பெற்று வளர்த்த அந்தப் பெரியாரின் வாழ்க்கை கொடிய வெள்ளை அரக்கர்களால் இவ்வாறு துக்ககரமாக முடிவுற்றது.

மகாராணி, ஜான்ஸிக் கோட்டையை விட்டுச் சென்ற மறு நாள் ஆங்கிலேயர்கள் யாதோர் எதிர்ப்பும் இன்றி அதற்குள் பிரவேசித்து, அங்கே தங்கள் கொடியைப் பறக்க விட்டனர். பின்னால் தங்கள் தளபதியின் உத்தரவுப்படி வெள்ளைச் சிப்பாய்கள் ஜான்ஸி நகரை மூன்று நாட்கள் வரையில் கொள்ளையிட்டுச் சூறையாடினர். வெற்றி வெறியால் அங்கே ஆங்கிலேயர்கள் செய்த அட்டூழியங்களை ஆங்கில சரித்திராசிரியர்கள்கூடக் குறிப்பிட்டிருக்கின்றனர். பல நாட்கள்வரை வெள்ளைச் சிப்பாய்கள் நாதிர் ஷாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி ஜான்ஸி நகரில் இருந்த நிரபராதிகளான மக்களை நூற்றுக்கணக்கில் கொன்று குவித்தனர். வீடுகளுக் கெல்லாம் தீ வைத்தனர். பல பெரிய மாளிகைகளைத் தரைமட்டம் ஆக்கினர். கோவில்களை எல்லாம்

இடித்தனர். அழகிய அந்த நகரை அவர்கள் வெகு சீக்கிரத்தில் கோர நரகமாக மாற்றிவிட்டனர். இவ்வாருக ஜான்ஸி தன் பெருமையை இழந்தது.

நர்மதை, கங்கை, யமுனை இந்த மூன்று நதிகளின் இடையே உள்ள பிரதேசங்களைக் கைப்பற்றுவதற்காக ஹ்யூ ரோஸின் தலைமையிலும் விட்லாக்கின் தலைமையிலும் ஏராளமான படைகள் புறப்பட்டன என்ற விவரம் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஹ்யூ ரோஸ், ஜான்ஸியைக் கைப்பற்றினன். அதன் பின் படையெடுப்பைத் தொடர்ந்து, கால்பியை ஆக்கிரமிப்பது விட்லாக் செய்ய வேண்டிய பங்காகும். அதை அநுசரித்து அவன், பிப்ரவரி மாதம் 17-ஆம் தேதி யன்று தன்னிடம் இருந்த சகல படைகளுடனும் ஜபல்புரியிலிருந்து புறப்பட்டான். அவனிடம் அப்போது ஏராளமான ஆங்கிலத் துருப்புகளும், சென்னையிலிருந்து வந்திருந்த இந்தியப் படைப் பிரிவுகளும், குதிரைப் படைகள், பீரங்கிப் படைகள் முதலியனவும் இருந்தன. அவன் வெற்றிக் கோலத்துடன் ஸாகருக்குள் பிரவேசித்தபோது, ஆங்கில விசுவாசியான ஓர்ச்சா ராஜாவும் அவனுடன் சேர்ந்துகொண்டான். பின்னர் அந்தப் படைகள், அம் மாகாணத்தில் புரட்சிக்காரர்களுக்கெல்லாம் தலைவராக இருந்த பாந்தா நவாப்மீது படையெடுத்தன.

சுதந்தர யுத்தம் ஆரம்பமானதும் ஜான்ஸி, ஸாகர் முதலிய இடங்களில் ஆங்கிலேயர்கள் கொல்லப்பட்டபோது, அவர்கள் தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்காகப் பல இடங்களுக்கும் ஓடினர். அப்போது பாந்தா நவாப் பல வெள்ளையர்களுக்கும் தமது அரண்மனையில் புகலிடம் அளித்து, அவர்களைப் பராமரித்து வந்தார். அதே சமயம் அவர், நாட்டிலிருந்து ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தை ஒழிக்கவும் அரும்பாடு பட்டு வந்தார். ஆரம்பத்திலேயே அவரது ராஜ்யத்தில் அடிமைத் தனம் அடியோடு அழிக்கப்பட்டுவிட்டது. அவர் சுதந்தர மன்னராகவே ஆட்சி புரிந்துவந்தார்.

அவ்விதம் இருக்க, தமது சுதந்தரத்தை அபகரிக்க ஆங்கிலப் படைகள் வந்துகொண் டிருக்கின்றன என்ற செய்தியைக் கேட்டதும் பாந்தா நவாபும் அவருடைய மக்கள் அனைவரும் போருக்கு ஆயத்தமாயினர். இரண்டு கட்சிகளுக்கும் பல தடவைகளிலும் போர் நடந்தபின், இறுதியில் துரதிருஷ்டவசமாகத் தேசீயப் படைகளே தோல்வியுற்றன. அதன்பின் பாந்தா நவாப் எஞ்சிய படைகளுடன் கால்பிக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டதால், விட்லாக் ஏப்ரல் மாதம் 19-ஆம் தேதி வெற்றியுடன் அந்த ராஜ்யத்துக்குள் பிரவேசித்தான்.

பாந்தாவை ஆக்கிரமித்துக் கொண்டபின் அடுத்தபடியாக விட்லாக், கீர்வி சமஸ்தானத்தின்மீது படையெடுக்கவும் ஆயத்தமாஞன். அந்தச் சமஸ்தானத்தை ஆண்டுகொண் டிருந்த ராவ் மாதவராவுக்கு அப்போது பத்து வயதுதான். அவனுடைய ராஜ்யம் ஆங்கிலேயர்களின் மேற்பார்வையிலேயே இருந்து வந்தது. அந்தச் சிறுவன் பாஜி ராவ் பேஷ்வாவுக்கு நெருங்கிய உற

னன். 1827-ஆம் வருஷம் கீர்வியின் அதிபராக இருந்துவந்த ஆனந்தராவ், காசியிலுள்ள கோயில்களில் பல தர்ம காரியங்கள் செய்வதற்காக ஆங்கிலேயர்களிடம் இரண்டு லட்சம் ரூபாய் வரை கொடுத்து வைத்திருந்தார். ஆனால் அவர் இறந்ததும், அந்தத் தொகையை அவர்கள் அப்படியே கபளீகரம் செய்துவிட்டார்கள்.

அதைத் தவிர, ஆனந்த ராவின் புதல்வரான விநாயக ராவ் என்பவர் மடத்தனமாக ஆங்கிலேயர்களிடம் லட்சக்கணக்கான தொகையைக் கொடுத்து வைத்திருந்தார். அதுவும் இறுதியில் பறிபோயிற்று. அவர் மாண்ட பின்புதான் அவருடைய ஸ்வீகாரப் புதல்வனான மாதவ ராவ் பட்டத்துக்கு வந்தான். அவன் சிறுவனானதால் சம்ஸ்தான நிர்வாகம் முழுவதும் ஆங்கிலேயர்களிடமே இருந்தது. அவர்கள் ராமசந்திர ராவ் என்பவரை நிர்வாகத் தலைவராக நியமித்தனர். அங்கே ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகக் குழப்பம் ஏற்படும் என்று நினைப்பதற்கு இல்லை அல்லவா?

ஆனால் 1857-ஆம் ஆண்டில் ஓர் உண்மை வெளியாயிற்று. அதாவது ராஜாக்களின் நடவடிக்கைகள் தேச நலனுக்கு முரணாக இருக்குமாயின், அவற்றை ஜனங்கள் அங்கீகரிக்க மாட்டார்கள் என்பதுதான். பல வருஷங்களாக அரசியல் துயிலில் ஆழ்ந்திருந்த மக்களிடையே அப்போதுதான் விழிப்பு ஏற்பட்டது. அவர்கள் தங்களுடைய சக்தியை உணர்ந்துகொண்டனர். தேசத்தினுடைய உண்மையான பலத்தின் முன்னிலையில் இடையூறுகளெல்லாம் மறையத் தொடங்கின. ஜமீன்தார்கள், வைதிகர்கள், வியாபாரிகள் முதலிய எல்லோருடைய மனத்திலும் சுதந்தர உணர்ச்சி பொங்கியது. டில்லி, சுதந்தரம் பெற்றதென்றும், லக்ஷ்மணபுரியிலும் அந்நியரின் ஆதிக்கம் ஒழிக்கப்பட்டுவிட்டதென்றும், ஜான்ஸியில் பறங்கியர்களின் கொடி பறித்தெறியப்பட்டுவிட்டதென்றும் கிடைத்த செய்திகள் எல்லோருக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தன. அதனால் கீர்வி சம்ஸ்தான மக்கள் தங்களுடைய நாட்டின் எதிர்காலத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்டு, ராவின் அபிப்பிராயத்தையோ, மந்திரிகளின் அநுமதியையோ கேட்காமல் சுதந்தரப் பிரகடனம் செய்துவிட்டார்கள்.

ஆனால் அந்தச் சம்ஸ்தான அதிபனான பத்து வயதுள்ள ராவ் ஆங்கிலேயர்களுக்கு விரோதமாக எதுவுமே செய்யவில்லை. அதற்கு மாறாக அவன், ஆங்கிலப் படை புந்தேல்கண்டிற்குத் திரும்பி வந்தபோது, எதிர்கொண்டு சென்று, அதை நகருக்கு அழைத்து வந்தான். அவ்விதம் இருந்தும் ஆங்கிலேயர்கள் என்ன செய்தனர்? நகருக்குள் வந்ததும் அவர்கள் செய்த முதல் வேலை சிறுவனான ராவைக் கைதுசெய்து சிறைப்படுத்தியதேயாகும்.

உடனே வழக்கம்போல் கொள்ளையும் கொடுமைகளும் ஆரம்பமாயின. அரண்மனை தகர்க்கப்பட்டது; தலைநகர் தீ வைக்கப்பட்டு அழிந்தது. ஆங்கிலேயர்களின் பட்டவர்த்தனமான இந்த அநீதியைக் கண்டித்து, ஆங்கில சரித்திராசிரியரான மாலிஸன் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார். 'விட்லாக் படைமீது

கீர்வி சம்ஸ்தானத்தைச் சேர்ந்த எவரும் ஒரு தடவைகூடத் துப்பாக்கிப் பிரயோகம் செய்யவில்லை. அப்படி இருந்தும் சிறுவ னை ராவை ஆங்கிலேயர்கள் தங்களுடைய விரோதியாகவே கருதிவிட்டனர். அதற்குக் காரணம் என்ன? விட்லாக்கின் அயோக்கியத்தனமும் கொள்ளைப் புத்தியுந்தான். கீர்வி அரண் மனையில் ஏராளமான செல்வமும் பொக்கிஷங்களும் விலைமதிக்க முடியாத ரத்தினங்களும் வைரங்களும் இருந்தன. அவற்றைக் கொள்ளையிடவே விட்லாக் கீர்வி அதிபரைக் கைது செய் தான்.'

கீர்வி சம்ஸ்தானத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டபின் விட்லாக் மஹோபாவில் தன் முகாமை ஏற்படுத்திக்கொண்டான். ஆங்கிலேயர்கள் போட்ட திட்டத்திற்கு இணங்க, அவன் தன் பங்கைப் பூர்த்தி செய்துவிட்டான் என்றே சொல்லவேண்டும். அதாவது, புந்தேல்கண்டின் கிழக்குப் பிரதேசங்களை யெல்லாம் தன் வசப்படுத்திக்கொண்டு விட்டான். மீதி இருந்த இரண் டொரு சில்லறை இடங்களுக்கும் தன் படைகளில் சிலவற்றை அனுப்பி யிருந்தான். நிற்க. விட்லாக்கை இங்கேயே விட்டு விட்டு, நாம் ஜான்ஸி ராணியின் புனித அடிச்சுவடுகளை மீண்டும் தொடர்ந்து செல்லுவோம்.

ராணி லக்ஷ்மி பாய் கால்பி நகரை அடைந்ததும், அவரை ராவ் சாஹிப் அன்புடன் வரவேற்று உபசரித்தார். ஜான்ஸியில் நடந்த சம்பவங்களையும், வெள்ளையர்கள் செய்த அட்டூழியங் களையும் கேள்வியுற்ற பேஷ்வா மிகவும் மனவேதனை அடைந்த துடன், உற்ற காலத்தில் வந்து மகாராணிக்குத் துணைபுரிய இய லாமற் போனதற்காகவும் வருந்தினார். மகாராணி, ஆங்கிலேயர் களின் சேனைக் கூட்டத்தை அஞ்சா நெஞ்சத்துடன் எதிர்த்து நின்று, செந்நாய்களிடமிருந்து சிங்கம்போல் தப்பி வந்ததைக் குறித்து மனமாரப் புகழ்ந்தார். அவருக்கு வேண்டிய விடுதிகளை அமைத்துக் கொடுத்து ஆதரித்தார்.

மகாராணி அங்கே சிறிது நேரங்கூட ஓய்வு எடுத்துக்கொள்ள வில்லை. பேஷ்வா ராவ் சாஹிபின் வேண்டுகோளுக்கு இணங்க அவர் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்யத் தொடங்கினார். லக்ஷ்மி பாய் அவ்விதம் போர் ஆயத்தங்களைச் செய்து வருகிறார் என்று கேள்வியுற்ற பாந்தா நவாப், பாணபுரி ராஜா, ஸாகர் ராஜா முதலிய சில சிற்றரசர்களும் உற்சாகங் கொண்டு, தங்கள் தங்கள் சேனைகளையும் திரட்ட முற்பட்டனர். தங்களுடைய சேனைகளைத் திரட்டிப் பேஷ்வாவுக்கு உதவி புரிய வேண்டும் என்பதே அவர்களுடைய அவா.

மகாராணி, கால்பி நகரில் இருக்கிறார் என்ற செய்தி ஜான் ஸிக்கு எட்டியது. அதைக் கேட்டு ஹ்யூ ரோஸ் திடுக்கிட்டுப் போனான். அங்கே படைகள் திரட்டப்பட்டு வருகின்றன என்ற செய்தியும் அவனுக்குக் கிடைத்தது. உடனே அவன் ஜான்ஸியில் பிரமாதமான தற்காப்பு முறைகளைக் கைக்கொண்டதுடன், கால் பிக்கும் படையெடுத்துச் செல்லத் தீர்மானித்தான்.

அதை அறிந்த மகாராணி, கால்பியிலிருந்து நாற்பத்திரண்டு மைல் தூரமுள்ள கஞ்ச் கிராமத்துக்குப் பேஷ்வாவின் படையுடன் புறப்பட்டுச் சென்றார். பகைவர்களைக் கால்பி வரையில் வரவிடாமல் முன்சென்று எதிர்க்க வேண்டும் என்பதே அவருடைய நோக்கம். அவருடைய விருப்பப்படி பேஷ்வாவின் படைகள் உருவாக்கப்படவில்லை. அதன் சம்பந்தமாக ராவ் சாஹிபோ, தாதியா டோபேயோ உற்ற முறைகளைக் கைக்கொள்ளவும் முடியவில்லை. பாந்தா நவாப், ஸாகர் ராஜா, பாணபுரி ராஜா முதலியோர் அங்கே ஒரே கொடியின்கீழ்க் கூடினர் எனினும், ஒரு பெரும் படைக்கு இருக்க வேண்டிய கட்டுப்பாடும் ஒழுங்கும் அவர்களிடையே இல்லை. அவர்களிடையே ஒற்றுமை, ஒரே திட்டத்தில் உறுதியான நம்பிக்கை, கண்டிப்பு, கீழ்ப்படிதல் முதலிய முக்கிய அம்சங்கள் சூனியமாக இருந்தன. தம் நோக்கம் நிறைவேறும்படி செய்யும் சக்தி ஒருவரிடமாவது இல்லை.

ஆனால் பகைவர்களிடம் அவ்விதக் குறைகள் இல்லை. அவர்களுடைய ராணுவ ஸ்தாபனம் அற்புதமான கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் ஆதாரமாகக் கொண்டிருந்தது. ஹ்யூ ரோஸ் தளபதியாக நியமிக்கப்படுமுன் அவர்களுக்குள் கடுமையான தர்க்கமும் அபிப்பிராய பேதமும் இருந்து வந்தன என்றாலும், அவன் தளபதியாக நியமிக்கப்பட்டது முதல், ராணுவத்தைச் சேர்ந்த எல்லோரும் அணுவளவும் ஆட்சேபம் இன்றி அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிய முற்பட்டனர். அவன் விடுக்கும் எல்லா உத்தரவுகளும் சரியே என்ற அபிப்பிராயம் எல்லோரிடையும் நிலவியது. அவை சரியாக இராவிடினும் அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியது தங்கள் கடமை என்று அனைவரும் கருதினர். கோழையான ஒரு தளபதி தவறான கட்டளைகள் விடுத்தாலும், அவற்றை அவன் படைகள் ஒற்றுமையுடனும் பணிவுடனும் தைரியத்துடனும் நிறைவேற்றும் பட்சத்தில் அவை வெற்றி பெறுவது நிச்சயம். ஆனால் துருப்புகள் கட்டுப்பாடும் கீழ்ப்படிதலும் ஒழுங்கும் ஒற்றுமையும் இன்றித் தான்தோன்றித்தனமாக நடந்துகொள்ளுமாயின், எவ்வளவு சாமர்த்தியசாலியான சிறந்த தளபதியாயினும் அவனுடைய அரிய திட்டங்கள் ஆபத்தாகவும் படுதோல்வியாகவுமே முடியும்.

ஹ்யூ ரோஸின் படையும் தேசீயப் படையும் கஞ்ச் கிராமத்தில் சந்தித்தன. மத்தியான்ன வெயிலை வெள்ளையர்கள் சிறிதும் தாங்க முடியாது என்பதைத் தேச பக்தர்கள் நன்கு அறிவர். எனவே, காலையில் பத்து மணிக்கு மேல்தான் அவர்களுடன் போரை ஆரம்பிக்க வேண்டும் என்று தேசபக்தர்களுக்குக் கட்டளையிடப்பட்டிருந்தது. தந்திரமான அந்த முறையை, அவர்கள் அன்று அமலுக்குக் கொண்டு வந்ததால், ஆங்கிலப் படைக்குப் பெரு நஷ்டம் ஏற்பட்டது. ஆயினும் ஆங்கிலேயர்கள் ஏராளமான யுத்தத் தளவாடங்களுடன் வந்திருந்ததால், இறுதியில் தேசீய வீரர்கள் தோல்வியே அடைந்து பின்வாங்கினர்.

அவர்கள் போர்க்களத்திலிருந்து ஓடவில்லை என்பதையும் மிகவும் ஒழுங்காகவும் ஆச்சரியகரமான முறையிலும் பின்வாங்கினார்கள் என்பதையும் மாலிஸன் புகழ்ந்து கூறியிருக்கிறார். இறுதி

யில் தேசீயப் படைகள் மீண்டும் கால்பிக்கு வந்து சேர்ந்தன. கஞ்ச் கிராமத்தில் ஏற்பட்ட தோல்வியால் தலைவர்கள் மன முடைந்து ஒருவர்மீது ஒருவர் புகார் கூறத் தலைப்பட்டனர். தோல்விக்குக் காரணம் குதிரைப் படைதான் என்று காலாட் படையினர் கூறினர். ஜான்ஸித் துருப்புகளே காரணமென்று குதிரைப் படையினர் குற்றம் சாட்டினார்கள். எல்லோரும் சேர்ந்து தாதியா மீது பழியைப் போட்டனர்.

ஆனால் தாதியாவிற்குக் கால்பியில் இருந்துகொண்டு அந்த அற்பத்தனமான ஆட்சேபங்களையும் குற்றச்சாட்டுகளையும் கேட்டுக்கொண் டிருக்க நேரமில்லை. அவர், ஜாலவனுக்கு அருகிலுள்ள சர்க்கி கிராமத்தில் வசித்து வந்த தம் தந்தையைப் பார்ப்பதற்காகச் சென்றார். அவர் சுதந்தரப் போரை விட்டுவிட வில்லை. அப்போது அவருடைய இருதயத்தில் மகத்தான போர்த் திட்டம் ஒன்று உருவாகி வந்தது!

கஞ்ச் கிராமத்தில் ஏற்பட்ட தோல்வியால் சோர்வடைந்து வருந்திய பேஷ்வாவிடம் ராணி லக்ஷ்மி பாய் அந்தத் தோல்விக்கு மூலகாரணத்தை விளக்கிக் கூறியதாவது: 'நம் சேனைகளிடையும் சேனைத் தலைவர்களிடையும் போதிய கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லை. மிக மிகத் திறமை வாய்ந்த ஒருவர், சேனைகளுக்குத் தலைமை வகிக்க வேண்டும். கட்டுப்பாடும் ஒழுங்கும் பயிற்சியும் இல்லாத சேனை எவ்வளவு பெரிதாயினும் வெற்றி பெற முடியாது. ஆகையால் நீங்கள் தீர்க்காலோசனையுடனும் திறமையுடனும் போதிய முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டும். படைகளுக்கெல்லாம் ஒழுங்கான பயிற்சி அளிக்க வேண்டும். போர்த் தளவாடங்களை மிகத் திறமையுடன் உபயோகிக்க வேண்டும். எதிரிகளின் பலத்தையும், அவர்களின் நடமாட்டங்களையும் உளவாளிகளின் மூலம் அப்போதைக் கப்போது தெரிந்துகொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும். இதையெல்லாம் நிறைவேற்றினால் நாம் வெற்றி யடைவது நிச்சயம்.'

மகாராணியின் வார்த்தைகளைக் கேட்ட பாந்தா நவாப் முதலியோருக்கு மீண்டும் புதிய உத்வேகமும் மனோபலமும் உண்டாயின. மறுபடியும் பகைவர்களை எதிர்த்துப் போரிட வேண்டிய அவசியத்தை வலியுறுத்தி ஆவேசம் ததும்பும் பாஷையில் பிரகடனம் ஒன்று விடுக்கப்பட்டது. அதைப் பார்த்ததும் தேசீய வீரர்கள் கூட்டங் கூட்டமாக யமுனைக் கரைக்குச் சென்றனர். வாட்களுடனும் துப்பாக்கிகளுடனும் சென்ற சிப்பாய்கள், சுதந்தரப் போரில் வெற்றி பெற யமுனையின் ஆசியைக் கோரினர்.

'யமுனைக்கு ஜே! பறங்கியர்களை நாட்டிலிருந்து ஒழித்து, மீண்டும் சுதந்தரத்தையும் சுதர்மத்தையும் நிலைநிறுத்துவோம் என உன் புனித தீர்த்தத்தைக் கையில் வைத்துப் பிரதிக்ஞை செய்கின்றோம். இது நிறைவேறினால்தான் நாங்கள் எல்லோரும் உயிருடன் வாழ்வோம். இல்லாவிட்டால் போர்க்களத்தில் மடிவோம். தாயே, காளிந்தி! இது சத்தியம், சத்தியம், சத்தியம்!' என்று எல்லா வீரர்களும் உணர்ச்சி வசப்பட்டுக் கோஷம் செய்தார்கள்.

ஏப்ரல் 15-ஆம் தேதி ஆங்கிலேயர்கள் கால்பியை நெருங்கினர். அப்போது குவாலியரிலிருந்து வந்திருந்த தேசீயப் படை ஒன்று ஆங்கிலேயர்களின்மீது பாய்ந்து அவர்களைச் சின்னபின்னப் படுத்திவிட்டது. அதனால் ஆங்கிலேயர்கள் தோல்வியுற்றுப் பின் வாங்கும்படி நேர்ந்தது. அவ்விதம் வெற்றி பெற்ற சேனைகள் எல்லை மீறிய சந்தோஷத்தினால் துரதிருஷ்டவசமாகக் குடியிலும் களியாட்டங்களிலும் மனத்தைச் செலுத்த ஆரம்பித்தன. தோல்வியுற்ற ஆங்கிலேயர்களோ மறுநாள் மேஜர் ஓர் என்ற தளபதியைத் தலைவனாகக் கொண்டு கால்பியை ஆத்திரத்துடன் தாக்க ஆரம்பித்தனர். யமுனையின் ஆசி பெற்று, அதன் முன்னிலையில் சபதம் செய்த வீரர்கள் மிகுந்த ஆவேசத்துடன் போர் புரியவே அன்றும் ஆங்கிலேயர்கள் தோல்வியே அடைந்தார்கள்.

அதற்குள் ஹ்யூ ரோஸ் ஏராளமான சேனைகளுடன் படையெடுத்து, தற்காப்பற்ற பல கிராமங்களையும் கைப்பற்றிக் கொண்டு கால்பிக்கு அருகில் வந்து சேர்ந்தான். ஸ்டூவர்ட், ராபர்ட்ஸன், கார்டன் முதலிய தளபதிகளும் தங்கள் தங்கள் சேனைகளுடன் வந்து நான்கு புறங்களிலும் இருந்து அந்த நகரைத் தாக்கினர். பேஷ்வாவின் சேனைகள் உயிரைத் துச்சமாக மதித்து ஆங்கிலப் படைகளின் மத்தியில் பாய்ந்து அவைகளைச் சின்ன பின்னம் ஆக்கின. இருந்தாலும் ஆங்கிலேயர்களிடம் இருந்த எண்ணிக்கையற்ற பீரங்கிகள், துப்பாக்கிகளின் முன்னிலையில் யார் என்ன செய்ய முடியும்? அவற்றால் பேஷ்வாவின் சேனைகளுக்கு மிகுந்த உயிர்ச் சேதம் ஏற்பட்டது. அதனால் நிலை கலங்கிய பேஷ்வாவும் அவருடைய படைகளும் பின்வாங்க முற்படவே, லக்ஷ்மி பாய் தம் படைவீரர்களுடன் முன்னணியில் வந்து வீராவேசமாகப் போர் புரிந்ததுடன் பேஷ்வாவின் சிப்பாய்களுக்கும் உற்சாகம் மூட்டினார்.

அவர்கள் மீண்டும் புதிய பலம் பெற்றவர்களைப்போல் வெள்ளையர்களை எதிர்த்துப் போர் புரிந்தனர். ஆங்கிலேயர்கள் அந்த வீரர்களின் முன்னிலையில் நிற்க முடியவில்லையாயினும், அவர்களின் பீரங்கிகள் மாத்திரம் 'வீர'த்துடன் நெருப்பைக் கக்கி வந்தன. லக்ஷ்மி பாய் காளி தேவியைப் போல் போர் புரிந்த உக்கிரத்தைக் கண்டு வெள்ளையர் படைகள் பீரங்கிகளையெல்லாம் போர்க்களத்திலேயே விட்டுவிட்டு ஓடத் தலைப்பட்டன. இருபத்திரண்டு வயதான ஓர் யுவதி கையில் வாளுடன் போர்க்களத்தின் மத்தியில் பாய்ந்து, மின்னல் வேகத்தில் பகைப் படைகளை வெட்டி வீழ்த்துவதை ஆங்கிலேயர்கள் நம்பவும் முடியவில்லை. அந்த வீர மாதை வீழ்த்தும் வல்லமை பீரங்கிகளுக்கும் இல்லையோ என்றே தோன்றியது.

அன்றும் ஆங்கிலப் படைகள் சின்னபின்னமாயின. தேசீயப் படைகளின் பயங்கரமான தாக்குதலைக் கண்டு திகிலடைந்த ஹ்யூ ரோஸ் ஆபத்துச் சமயத்துக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த ஒட்டகங்களின்மீது ஏறி முன்னேறத் தொடங்கினான். அந்த ஒட்டகங்கள் இல்லாவிடில், அன்று ஆங்கிலேயர்கள் பெரும்பாலோரும் பலியாகிப் படுதோல்வி அடைந்திருப்பர். அந்த

யுத்தத்தைப்பற்றி ஓர் ஆங்கில எழுத்தாளர் குறிப்பிட்டிருப்பதாவது: 'இன்னும் பதினைந்து நிமிஷ நேரம் யுத்தம் தொடர்ந்து நடந்திருக்குமாயின், புரட்சிக்காரர்கள் எங்கள் எல்லோரையும் கண்ட துண்டமாக வெட்டி வீழ்த்தியிருப்பர். ஆனால் எங்களிடம் இருந்த நூற்றைம்பது ஒட்டகங்கள் எங்களுடைய உயிரைக் காப்பாற்றி, யுத்தத்தின் முடிவையும் எங்களுக்குச் சாதகமாக மாற்றிவிட்டன! அன்றையிலிருந்து எந்த ஒட்டகத்தைக் கண்டாலும் எனக்கு அதன்மீது அன்பு சுரக்கிறது!'

ஒட்டகங்களின் உதவியால் ஆங்கிலேயர்கள் மே 22-ஆம் தேதி தேசீயப் படைகளைப் பின்வாங்கும்படி செய்வதில் வெற்றி பெற்றனர். லக்ஷ்மி பாய் மட்டும் சளைக்கவில்லை. தந்திரமாகப் போர் புரிந்து பல வெள்ளையர்களை வெட்டி வீழ்த்தினார். அவர் மாத்திரம் பின்வாங்காமல் தம் சிறு படையுடன் வெள்ளையர்களை நெருக்கிக்கொண்டே இருந்தார். ஆயினும் என்ன? பேஷ்வாவின் சேனைகள் சோர்வடையவே, வெள்ளையர் தளபதிகள் அதுதான் சமயமென்று நினைத்துக் கோட்டையை நாற்புறத்திலும் சூழ்ந்துகொள்ள முற்பட்டனர். மேற்கொண்டு முன்செல்லுவது ஆபத்தாக முடியும் என்பதை உன்னி, மகாராணி தம் வீரர்களுடன் பின்வாங்கினார்.

பிறகு பேஷ்வா, பாந்தா நவாப், லக்ஷ்மிபாய் முதலியோர் எஞ்சிய சேனைகளோடு கால்பிக் கோட்டையை விட்டுப் போகத் தீர்மானித்தனர். அவர்கள் எவ்வளவு வீரர்களாக இருந்துதான் என்ன பயன்? சூழ்ச்சியும் துரோகமும் மிருகபலமும் பீரங்கிகளின் துணையும் உள்ள ஆங்கிலேயர்களின் முன்னிலையில் அவர்களால் நிற்க முடியவில்லை. களங்கமற்ற வீரர்களும் சிற்சில சமயங்களில் கொடிய கொள்ளைக்காரர்களின் முன்னிலையில் நிற்க முடியாமல் போய்விடக் கூடும் அல்லவா? அந்தத் தேசீய வீரர்களின் நிலைமையும் அவ்விதமே ஆயிற்று.

மேலும் வெள்ளையர்களின் பீரங்கிகளுக்கு நிரபராதியான மக்கள் பலியாவதையும் அவர்களால் சகிக்க முடியவில்லை. அவர்கள் கோட்டையை விட்டுச் சென்றதும், வெள்ளையர்கள் அங்கே புகுந்து அதைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டனர். கோட்டையில் ஒரு வருஷ காலத்துக்கு மேலாகச் சேகரித்து வைத்திருந்த போர்த் தளவாடங்கள், அறுபதினாயிரம் பவுண்டு வெடி மருந்து, பீரங்கிகள், உணவுப் பொருள்கள் முதலியனவெல்லாம் வெள்ளையர்களிடம் அகப்பட்டன. அந்த வெற்றியைக் குறித்துக் கவர்னர் ஜெனரல் கானிங், ஹ்யூ ரோஸுக்குப் புகழ் மாலை சூட்டினான். கொள்ளைக்காரர்களான வெள்ளையர்களின் வெறியை அந்த வெற்றி மேற்கொண்டு பன்மடங்கு அதிகப்படுத்தியது. கால்பியில் தேசீயத் தலைவர்களைத் தவிர மற்றவை யாவும் ஆங்கிலேயர்களின் வசம் ஆயின. அங்கிருந்து புறப்பட்ட ராணி லக்ஷ்மிபாய், ராவ் சாஹிப், பாந்தா நவாப் முதலியோர் எங்கே சென்றனர் என்பது யாருக்கும் தெரியாது. பாவம்! துரதிருஷ்டசாலிகளும் நிர்க்கதியானவர்களுமான அவர்களிடம் படைகளோ, யுத்தத் தளவாடங்களோ எவையும் இல்லை. எனவே, அவர்கள் வறுமையினாலோ, கைது செய்யப்பட்டோ, தற்கொலை செய்துகொண்டோ

இறப்பதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை என்று பகைவர் கள் எண்ணிக்கொண்டிருந்தனர்! யமுனையின் வடகரையிலிருந்து இமயம் வரையிலும் உள்ள பல இடங்களையும் கா்லின் மீண்டும் கைப்பற்றினான். ஹ்யூ ரோஸும் விட்லாக்கும் நர்மதையிலிருந்து புறப்பட்டு யமுனையின் தென்கரை வரையிலும் உள்ள சகலப் பிர தேசங்களையும் ஆக்கிரமித்துக்கொண்டனர். ஆகையால் புரட் சியை முற்றும் நசுக்கிவிட்டதாக ஆங்கிலேயர்கள் ஆறுதலும் ஆனந்தமும் அடைந்தார்கள்.

தங்களுடைய வெற்றியைக் குறித்து ஹ்யூ ரோஸ் தன் படைகளுக்குக் கீழ்வருமாறு வாழ்த்துக் கூறினான்: 'வீரச் சிப்பாய் களே! நீங்கள் ஆயிரம் மைல் தூரம் படையெடுத்து வந்திருக் கிறீர்கள். நதிகளைக் கடந்திருக்கிறீர்கள். மலைகளைத் தாண்டி யிருக்கிறீர்கள். காடுகளைப் பிளந்துகொண்டு வந்திருக்கிறீர்கள். பிரம்மாண்டமான படைகளைத் தோற்கடித்திருக்கிறீர்கள். பரந்த விஸ்தீரணமுள்ள பிரதேசங்களைக் கைப்பற்றி உங்க ளுடைய தேசத்தின் பெருமையையும் நிலைநிறுத்தி யிருக்கிறீர் கள். தைரியசாலிகளான நீங்கள் கண்டிப்பான ஒழுங்கிற்கும் கட்டுப்பட்டு நடந்து வந்திருக்கிறீர்கள். ஒழுங்கு இல்லாவிடில், தைரியத்தினால் மாத்திரம் யாதொரு பயனும் ஏற்படாது. பல கஷ்டங்களுக்கு இடையிலுங்கூட நீங்கள் உங்களுடைய தளபதி யின் கட்டளைகளுக்கு முற்றும் கீழ்ப்படிந்து வந்திருக்கிறீர்கள். உங்களிடம் ஒரு சமயங்கூடக் கீழ்ப்படிய மறுப்பதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை. நர்மதையிலிருந்து யமுனை வரையி லும் உள்ள எல்லாப் பிரதேசங்களிலும் நாம் வெற்றி பெற்றதற்கு உங்களிடையே நிலவிய கண்டிப்பான ஒழுங்கே காரணம்.'

பிறகு ஹ்யூ ரோஸ் தன் தேக நிலையை முன்னிட்டுத் தன் பதவியை ராஜீநாமாச் செய்தான். வெற்றி பெற்ற ஆங்கிலேயர் கள், புரட்சிக்காரர்களை யெல்லாம் அடியோடு அழித்துவிட்டதாக நினைத்து ஆறுதல் அடைந்ததுடன், ஓய்வெடுத்துக்கொள்ளவும் முற்பட்டார்கள். தாதியா, லக்ஷ்மி பாய், நானா சாஹிப் முதலி யோர் உயிருடன் இருக்கும்போது அவர்கள் ஓய்வெடுத்துக்கொள் ளத் துணிந்ததுதான் ஆச்சரியமாகும்.

கால்பி நகரை விட்டுச் சென்ற ராவ் சாஹிப், பேஷ்வா, பாந்தா நவாப், லக்ஷ்மி பாய் முதலியோர், குவாலியருக்கு நாற்பத் தாறு மைல் தூரத்திலுள்ள கோபாலபுரம் என்ற கிராமம் போய்ச் சேர்ந்து, தங்களுடைய எதிர்காலத் திட்டத்தைப்பற்றி விவாதிக்கலாயினர். அப்போது தேச பக்தர்களுக்கு நம்பிக்கை அளிக்கக்கூடிய அறிகுறி எதுவுமே இல்லை. நர்மதையிலிருந்து யமுனை வரையிலும், யமுனையிலிருந்து இமயம் வரையிலும் எல் லாப் பிரதேசங்களையும் ஆங்கிலேயர்கள் மீண்டும் கைப்பற்றிவிட் டார்கள். தேச பக்தர்களிடம் படைகள் இல்லை, கோட்டை இல்லை, புதிய படைகள் வரும் என்ற நம்பிக்கையும் இல்லை. பல போர்களிலும் தோல்வியடைந்த தலைவர்கள், நம்பிக்கையற் றிருந்த அந்த நிலையிலும் சுதந்தரப் போரைக் கைவிடலாமென்று கனவிலும் நினைக்கவில்லை.

நட்சத்திரங்கள் மங்கிவிட்டன; விளக்குகள் அணைந்து விட்டன; மின்மினிப் பூச்சிகளைக்கூடக் காணவில்லை! எனினும் ராணி லக்ஷ்மி பாயாகிற ஜோதி அங்கு இருக்கும்போது அவர்களை அந்தகாரம் அணுகுவது எங்ஙனம்!

தமது 'தந்தையைப் பார்ப்பதற்காக'ச் சென்றிருந்த தாதியாவும் அப்போது அவர்களுடன் வந்து சேர்ந்துகொண்டார். அவர் வயோதிகரான தம் தந்தையைப் பார்ப்பதற்காகக் கால்பியிலிருந்து சென்றார் என்று ஜனங்கள் சொல்லிக்கொண்ட போதிலும், சரித்திரம் அவ்வாறு கூறவில்லை. கால்பியைக் கைப்பற்ற ஹ்யூ ரோஸின் மனத்தில் ஆழ்ந்த திட்டமொன்று உருவாகி வந்த அதே சமயத்தில், தாதியாவின் மனத்திலும் ஓர் அற்புதத் திட்டம் தளிர் விட்டுக்கொண் டிருந்தது. அதன் பயனாகவே அவருக்குச் சர்க்கியிலிருந்த தம் தந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை திடீரென்று உண்டாயிற்று. ஆனால் அந்த ஆசையின் ரகசியம் என்ன?

கால்பி வீழ்ச்சியடைந்த பின்னரும் சுதந்தர யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதற்காகத் தங்களுக்குப் பலமான ஒரு பிரதேசமும் ஒரு கோட்டையும் ஒரு படையும் இருக்க வேண்டிய அவசியத்தைத் தாதியா உணர்ந்தார். அதை ரகசியமாக நிறைவேற்றவே, அவர் திடீரென்று கால்பியிலிருந்து புறப்பட்டுக் குவாலியருக்குச் சென்றார். குவாலியரைச் சேர்ந்த முக்கிய ராணுவ அதிகாரிகள் எல்லோரும் சுதந்தர யுத்தத்தில் கலந்து கொள்ளத் தயாரென்று உறுதி கூறினர். உடனே தேசீயப் படை உருவாகத் தொடங்கியது. தர்பார் அதிகாரிகள், சர்தார்கள் முதலியோரையும் தாதியா தமது இணையற்ற பேச்சுத் திறமையால் தம் வசப்படுத்திக்கொண்டார். ஒரு மாத காலத்துக்குள் குவாலியர் முழுதுவம் தாதியாவை முற்றும் ஆதரிக்கலாயிற்று.

இவ்வாறாகச் சிந்தியாவின் அதிகாரத்தை அடியோடு சிதைத்து, குவாலியர் முழுவதையும் சுதந்தரப் போரில் ஈடுபடும்படி செய்த பின்புதான் தாதியா கோபாலபுரத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் தம்முடைய தந்தையைப் பார்த்துவிட்டு வந்திருப்பதாக எல்லோரும் கருதினர். குவாலியரிலிருந்து தாதியா சந்தோஷச் செய்தியுடன் வந்திருப்பதையும், சுதந்தர யுத்தத்தில் குதிக்கக் குவாலியர் ஜனங்கள் எல்லோரும் துடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் கேட்டு, ஜான்ஸி ராணிக்கு மிகுந்த நம்பிக்கை உண்டாயிற்று.

ஸாகர், கால்பி, ஜான்ஸி, ஆக்ரா, லக்ஷ்மணபுரி, கான்பூர் முதலிய பல இடங்களிலும் 1857-ஆம் வருஷம் ஜூன் மாதம் சுதந்தரக் கொடி பறந்துகொண் டிருந்தது. ஆனால் ஒரே ஒரு வருஷ காலத்திற்குள் அவ்விடங்களிலெல்லாம் மீண்டும் ஆங்கிலேயர்களின் கொடி பறக்கலாயிற்று. தேச பக்தர்களின் வீரம் வெள்ளையர்களின் சூழ்ச்சிக் கருவியை எதிர்த்து நிற்க முடியவில்லை. சிறிதும் இரக்கமற்ற வெள்ளையர்களின் கொடிய செய்கைகளால், தேச பக்தர்கள் சிதறுண்டனர். அவர்களின் பொருள்களும், யுத்தத் தளவாடங்களும் கொள்ளையிடப்பட்டன.

அத்துடன் ஆங்கிலேயர்கள் நிற்கவில்லை. தேசீய உணர்ச்சியுள்ள தலைவர்களையும் வீரர்களையும் எப்படியாவது, எத்தகைய முறைகளைக் கைக்கொண்டாவது அழித்தாலொழிய, தாங்கள் இந்தியாவில் நிரந்தரமாக வாழ முடியாது என்ற உத்தேசத்துடன் அந்தத் தலைவர்களை வேட்டையாட முற்பட்டனர். காலமும் பிற சந்தர்ப்பங்களும் அவர்களுக்குச் சாதகமாக இருந்தன.

தங்களை ஆங்கிலேயர்கள் வேட்டையாடத் தீர்மானித்துள்ளனர் என்பதை அறிந்த பேஷ்வா முதலியோர் கலங்கி வருகையில் மகாராணி லக்ஷ்மி பாய் கூறியதாவது: 'இதுவரையில் நாம் ஜான்ஸி, கால்பி முதலிய கோட்டைகளை இடமாகக் கொண்டு யுத்தம் செய்தபடியால் எதிரிகளை எதிர்த்து நிற்கவாவது முடிந்தது. இனி நமக்குப் பாதுகாப்பான கோட்டை எதுவும் இல்லை. நாம் சிந்தியா மன்னனின் இருப்பிடமான குவாலியர்க் கோட்டையை எதிர்த்து அதைக் கைப்பற்ற வேண்டும். சாத்தியமாயின், அந்த மன்னனையும் நம்முடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். தகுந்த பாதுகாப்புகளுடன் அந்தக் கோட்டையிலிருந்து ஆங்கிலேயர்களை எதிர்க்க வேண்டும்.'

ராணியின் யோசனைக்கு இணங்க எல்லோரும் புறப்பட்டு மே 28-ஆம் தேதி அமீன் மஹலுக்குச் சென்றனர். அங்கிருந்த மஹல்காரர்கள் அவர்களைத் தடுத்தபோது, 'எங்களைத் தடுக்க நீங்கள் யார்? நாங்கள் சுயராஜ்யத்துக்காகவும் சுதர்மத்துக்காகவும் போராடுகிறோம். எங்கள் முன்னேற்றத்தை உலகிலுள்ள எந்தச் சக்தியாலும் தடுக்க முடியாது' என்று தலைவர்கள் கர்ஜிக்கவே, அந்தக் கோழைகள் வாயடைத்துப் போயினர். பின்னர் ஆயிரக் கணக்கான தேச பக்தர்கள் அவர்கள் எல்லோரையும் வரவேற்று, தாங்களும் சுதந்தரப் போருக்கு ஆயத்தமானார்கள்.

சிந்தியா மன்னன் ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொண்டு தேச பக்தர்களை அடக்கத் துணைபுரிந்து வந்தான். அதனால் தேச பக்தர்களின் மனம் குமுறிக்கொண்டிருந்தது. எனினும் அவர்கள் முதலில் ஜயாஜி ராவ் சிந்தியா மன்னனின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டே தீவிர நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுவது என்று தீர்மானித்தனர். உடனே அவர்கள் அவனுக்கு ஒரு செய்தி விடுத்தார்கள். ஆங்கிலேயர்களை விரட்டினாலன்றி இந்தியா க்ஷேமமடைய முடியாது என்றும், அவர்களை விரட்டும் விஷயத்தில் தங்களுடன் ஒத்துழைத்துத் தங்களுக்கு உதவி புரியவேண்டும் என்றும் ராவ் சாஹிப் பேஷ்வா, பாந்தா நவாப், தாதியா, லக்ஷ்மி பாய் முதலியோர் அவனுக்குச் சொல்லி அனுப்பினர்.

தேசீயத் தலைவர்களின் கோரிக்கைக்கு இணங்கச் சிந்தியா மறுத்ததுடன், ஜூன் மாதம் 1-ஆம் தேதி குவாலியருக்கு அருகில் பேஷ்வாவின் படைகளை எதிர்க்கவும் முற்பட்டான். குவாலியரின் படைகளைக் கண்டதும், சிந்தியா தன் தவற்றை உணர்ந்து தமக்கு உதவி புரியவும், சுதந்தரக் கொடிக்கு மரியாதை செலுத்தவுமே வருவதாகப் பேஷ்வா நினைத்தார். எனினும்

சிந்தியாவின் நோக்கத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிந்த ராணி, தம் முந்நூறு குதிரை வீரர்களுடன் நேராகச் சிந்தியாவின் படைகள்மீது பாய்ந்தார். அவருடைய துணிச்சலான பாய்ச்சலால் அந்தப் படையின் ஒரு பகுதி சிதறுண்டதெனினும், மற்றவை பேஷ்வாவின் சேனைகளை எதிர்த்து நின்று வெற்றி பெறுவது நிச்சயம் என்று சிந்தியா மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தான்.

ஆனால் தாதியாவைக் கண்டதும், அவரிடம் ரகசியமாக விசுவாசப் பிரமாணம் செய்துகொண்டிருந்த சிந்தியாவின் சிப்பாய்கள் எல்லோரும் பேஷ்வாவின் படைகளை எதிர்த்துப் போர் புரிய வெளிப்படையாக மறுத்துவிட்டனர். அது மாத்திரமல்ல, ஏற்கனவே தீர்மானித்திருந்தபடி அவர்கள் எல்லோரும் தங்களுடைய அதிகாரிகளுடன் பேஷ்வாவின் பக்கமும் சேர்ந்துகொண்டனர். இவ்வாறாக, தேச பக்தர்களின் மந்திரக் கோலால் சிந்தியாவின் ராஜ்யாதிகாரம் சிறிது நேரத்தில் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. கோழையான ஜயாஜி ராவ் சிந்தியாவும் அவனுடைய மந்திரியான தினகர ராவும் உடனே போர்க்களத்திலிருந்து மாத்திரம் அல்ல, குவாலியரிலிருந்தே ஓட்டம் பிடித்து ஆக்ராவுக்குச் சென்று ஆங்கிலேயர்களிடம் சரண் புகுந்தனர்!

இவ்வாறாகச் சுதந்தரமடைந்த குவாலியர், சந்தோஷத்தில் மூழ்கியது. பேஷ்வாவுக்கு மரியாதையாகக் குண்டுகள் போடப்பட்டன. நிதி மந்திரி அமர் சந்த் பாதியா சிந்தியாவின் பொக்கிஷத்தைப் பேஷ்வாவிடம் ஒப்பித்தார். தேச பக்தர்களிடம் அநுதாபம் காட்டியதற்காகச் சிந்தியாவால் சிறைப்பட்டிருந்தவர்கள் யாவரும் மக்களின் குதூகல ஆரவாரங்களுக்கிடையே விடுதலை செய்யப்பட்டனர். ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொள்ளுமாறு சிந்தியாவிற்குத் துர்ப்போதனை செய்த துரோகிகள் ஓட்டம் பிடித்தனர். குவாலியரில் அவர்கள் இருந்த அறிகுறியும் தென்படக் கூடாது என்பதற்காக அவர்களுடைய மாளிகைகள் சொத்துக்கள் முதலியனவும் அழிக்கப்பட்டன.

தன் சொந்த நாட்டுக்கும் தர்மத்துக்கும் விரோதியாக இருப்பவனுக்கு ஆட்சி புரியும் யோக்கியதை உண்டா? குவாலியர் ஜனங்கள் அதை நன்கு அறிந்தே சிந்தியாவைச் சிம்மாசனத்திலிருந்து விரட்டினர். ராவ் பாஜியை உற்ற சமயத்தில் சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தத் தவறியதால்தான், 1818-இல் புனா, தேசத் துரோகக் குற்றத்துக்கு ஆளாகியது. ஆனால் 1857-ஆம் ஆண்டில் இந்திய மக்கள் தங்களுடைய சக்தியை அறிந்துகொள்ளத் தவறவில்லை. தன் தேசத்துக்கே விரோதமாக நடந்துகொண்ட சிந்தியா, ஜனங்களின் ஆதரவை எவ்விதம் பெற முடியும்? அதனாலேயே ஜனங்கள் அவனைச் சிம்மாசனத்திலிருந்து இழுத்துக் கீழே தள்ளி, சம்ஸ்தானத்துக்கு அப்பால் விரட்டினர். 'மக்களின் திருப்தியே மன்னனின் சக்தி' என்ற ஹிந்து வேத வாக்கு, குவாலியரில் மீண்டும் நிலைநிறுத்தப்பட்டது!

சுப தினமான ஜூன் மாதம் 3-ஆம் தேதி நடந்த சுயராஜ்ய உற்சவத்தை ஒட்டி, பெரிய தர்பார் ஒன்று நடந்தது. சர்தார்கள், ராஜ தந்திரிகள், பிரபுக்கள், ராணுவ அதிகாரிகள் முதலிய சகலரும் அதில் பிரசன்னமாகி யிருந்தனர். தாதியா டோபேயும், அவருடைய தலைமையில் அராபியர்கள், ரோஹில்லாக்கள், பட்டாணியர்கள் முதலானோரும் ராணுவ உடைகளுடனும், இடையில் வீர வாள்களுடனும் வந்திருந்தனர். ராவ் சாஹிப் பேஷ்வா எல்லோருக்கும் தலைமையில் ராஜ உடையுடனும் ஆபரணங்களுடனும் சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். அவர் தர்பாருக்கு வந்தபோது எல்லோரும் எழுந்து அவருக்கு மரியாதை செய்தனர். அவர் ஆனந்தக் கண்ணீர் பெருக எல்லோருக்கும் வாழ்த்துக் கூறினார்.

ராமராவ் கோவிந்த் பிரதம மந்திரியாகவும், தாதியா டோபே பிரதம தளபதியாகவும் நியமிக்கப் பெற்றனர். நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஒரு வாள் தாதியாவுக்குச் சம்மானமாக அளிக்கப்பட்டது. மற்றும் எட்டு மந்திரிகள் நியமிக்கப்பட்டனர். இருபது லட்சம் ரூபாய் வரை படைகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது. எல்லோருடைய முகங்களிலும் ஆனந்தம் தாண்டவமாட, தர்பார் முற்றும் வெற்றிகரமாக முடிந்தது.

நானு சாஹிப் பேஷ்வாவின் பிரதிநிதியான ராவ் சாஹிப் பேஷ்வா இவ்விதம் ஒரு புதிய சிம்மாசனத்தை ஏற்படுத்திக் கொண்டார். தேச பக்தர்களிடையே புத்துயிரும் புதிய நம்பிக்கையும் உண்டாயின. சிதறிக் கிடந்த புரட்சிக்காரர்கள் மீண்டும் ஒன்று சேர்ந்து தங்களுடைய நிலைமையைப் பலப்படுத்திக்கொள்ளுவதற்கான எல்லையற்ற வசதிகளும் கிடைத்தன.

தாதியா மாத்திரம் பட்டமளிப்பு விழா சம்பந்தமான களியாட்டங்களில் அக்கறை கொள்ளவில்லை. செத்துப்போன புரட்சி இயக்கத்துக்குத் தமது 'மந்திர' சக்தியால் உயிர் கொடுத்தவர் அவர் அல்லவா? நிர்க்கதியான சுதந்தர இயக்கத்துக்கு ராஜ்யம், ராணுவம், சீர், சிறப்பு, செல்வம், சிம்மாசனம் முதலியன கிடைத்த பெருமை அவர் ஒருவருக்கே உரியதாகும்.

ஆங்கிலேயர்களிடையே பிரமாதமான திகிலும் தேச பக்தர்களிடையே புதிய உத்வேகமும் உற்சாகமும் நம்பிக்கையும் ஏற்படும்படி செய்யவே பட்டமளிப்பு விழா வெகு ஆடம்பரமாகக் கொண்டாடப்பட்டது. தலைவர்களின் அந்த நோக்கம் பூரண பலனைக் கொடுத்தது. நிர்க்கதியாக ஓடிய தேசபக்தர்கள் மீண்டும் பெரும் படையுடனும் ராஜ்யத்துடனும் வெற்றி கோஷம் செய்வதைக் கண்டு ஆங்கிலேயர்கள் திகிலடைந்தனர். இனி ஓய்வெடுத்துக்கொள்ளலாம் என்ற அவர்களுடைய எண்ணத்திலும் மண் விழுந்தது. அதற்கு மாறாக, முற்றும் சோர்வடைந்து பல இடங்களிலும் சிதறிக் கிடந்த தேச பக்தர்களிடையே, குவாலியரில் தலைவர்கள் பெற்ற பிரமிக்கத்தக்க வெற்றி எல்லையற்ற உற்சாகத்தை உண்டுபண்ணியது.

குவாலியரைக் கைப்பற்றியதன் மூலம் லக்ஷ்மி பாயும், தாதியாவும் காட்டிய இணையற்ற திறமையையும் ராஜதந்திரத்தையும் பற்றிச் சரித்திராசிரியரான மாலிஸன் கூறியிருப்பதாவது: 'யாராலும் கனவிலும் கருத முடியாத ஒரு சாகசத்தைப் புரட்சித் தலைவர்கள் வெகு சுலபமாகவும் நளினமாகவும் சாதித்துவிட்டார்கள்! குவாலியரை அவர்கள் கைப்பற்றிய பின், சில நாட்கள் தாமதித்தாலும் தங்களுக்கு ஏற்படக் கூடிய மகத்தான ஆபத்தை ஹ்யூ ரோஸ் உணர்ந்துகொண்டான். மேற்கொண்டு தாதியாவுக்குச் சில நாட்கள் அவகாசம் கிடைத்துவிடுமாயின், இந்தியா முழுவதும் மகாராஷ்டிரர்களின் மகத்தான எழுச்சியை உண்டாக்கிவிடுவார் என்பது நிச்சயம். அப்பொழுது மத்திய இந்தியாவில் ஆங்கிலப் படைகள் இல்லாததால், அங்கே புரட்சிக்காரர்கள் பெறும் வெற்றி, பிறகு ஆங்கிலேயர்கள் அங்கே எக்காலத்திலும் அடியெடுத்து வைக்க முடியாமல் செய்துவிடும்.'

பட்டமளிப்பு விழாவின்போது ஆரம்பமான களியாட்டங்கள் கால வரையறையின்றித் தொடர்ந்து நடைபெறலாயின! தங்களுக்கு ஏற்பட்ட வெற்றி சாசுவதமானது என்று கருதி, பேஷ்வா கோஷ்டியினர் எதிர்காலத்தைப்பற்றி யோசிக்கவே இல்லை. குவாலியரைக் கைப்பற்றியபின், லக்ஷ்மி பாய், அரண்மனையைச் சேர்ந்த ஒரு தோட்டத்தில் விடுதி அமைத்துக் கொண்டு தங்கினார். பேஷ்வா கோஷ்டியினரின் களியாட்டங்களைக் கண்டு அவருடைய மனம் புழுங்கியது.

'இவ்விதம் களியாட்டங்களில் காலம் கடத்துவது ... யில் ஆபத்தாக முடியும். ஆங்கிலேயர்கள் பெரும் சூழ்ச்சிக்காரர்கள். தேசபக்தர்களை எல்லாம் அடியோடு அழிக்காத வரையில், தங்களுக்கு இந்தியாவில் பிழைப்பில்லை என்பதை அறிந்து கொண்டு, அதற்கான நடவடிக்கைகளைக் கைக்கொண்டு வருகிறார்கள். ஆகையால் இப்போது கிடைத்துள்ள அவகாசத்தை நாம் களியாட்டங்களில் வீணாக்கிவிடக்கூடாது. ஆங்கிலேயர்கள் மீண்டும் போருக்கு வருவார்கள் என்பது நிச்சயம். இந்தச் சந்தர்ப்பத்தைச் சிறிதும் வீணாக்காமல், சேனைகளைத் திரட்டுவதிலும், யுத்தப் பயிற்சி அளிப்பதிலும், கோட்டை கொத்தளங்களைப் பலப்படுத்துவதிலும், யுத்தத் தளவாடங்களைத் தயாரிப்பதிலும் ஈடுபட வேண்டும்' என்றெல்லாம் கூறி லக்ஷ்மிபாய் அவர்களை எச்சரித்தார். ஆனால் அவருடைய உபதேசம் விழலுக்கு இறைத்த நீராக முடிந்தது. 'கேடு வரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே' என்பதற்கு இணங்க அவருடைய பொன்மொழிகள், பேஷ்வா கோஷ்டியினரின் செவிகளில் விழவில்லை. தங்களுக்குச் சுயராஜ்யம் நிலைத்துவிட்டது என்றே அவர்கள் கருதினர்.

தேச பக்தர்கள் குவாலியரைக் கைப்பற்றிவிட்டனர் என்ற செய்தியைக் கேட்டுத் தளபதி ஹ்யூ ரோஸ் திடுக்கிட்டான். பேஷ்வாவின் நிலைமையைப்பற்றித் துரோகிகள் ஆங்கிலேயர்களுக்கு அப்போதைக்கப்போது அறிவித்து வந்தனர். ஆனால் பேஷ்வா

கோஷ்டியினரோ ஆங்கிலேயர்களின் நிலையை அறிந்துகொள்ள ஒற்றர்களை நியமிக்கவில்லை. குவாலியரைத் தேச பக்தர்கள் கைப்பற்றிவிட்டார்கள் என்ற செய்தியைக் கேட்டவுடனே ஹ்யூ ரோஸ் சிறிதும் தாமதமின்றி மீண்டும் பம்பாயிலிருந்து திரும்பி வந்து, சர்வ சேனாதிபத்தியத்தை ஏற்றுக்கொண்டு ஏராள மான பட்டாளங்களுடனும், யுத்தத் தளவாடங்களுடனும் குவா லியரை நோக்கிப் படையெடுத்து வந்தான்.

அவனுடைய சேனையில் இந்தியச் சிப்பாய்களும் ஏராளமாக இருந்தனர். தன்னலப் பேய்களான சில துரோகிகளால் இந் தியாவின் அடிமைத்தனத்துக்கு இந்தியச் சிப்பாய்களே உதவி அளிக்கும்படியாக நேர்ந்தது. ஏராளமான சேனைகளுடன் குவா லியருக்கு வெகு சமீபமாக வந்த பின்புதான், அந்தச் செய்தி பேஷ்வாவுக்குத் தெரிய வந்தது. அதன் பின்புதான் பேஷ்வா கோஷ்டியினர் களியாட்டங்களை விட்டுவிட்டு அவசர அவசர மாக யுத்த ஏற்பாடுகளைச் செய்யலாயினர். ஆங்கிலச் சேனைகள் குவாலியரை முற்றுகையிட முற்பட்டன. ஹ்யூ ரோஸ் தன் னுடன் சிந்தியாவையும் அழைத்துக்கொண்டு வந்தான். சிந்தி யாவுக்காகவே தாங்கள் போராடுவதாக ஆங்கிலேயர்கள் பறை சாற்றினர். குவாலியரைச் சேர்ந்த பாமர மக்களை ஏமாற்றவே அவர்கள் இவ்விதத் தந்திரத்தைக் கையாண்டனர்.

குவாலியரின் கிழக்குப் புறத்தைப் பாதுகாத்து நின்ற லக்ஷ்மி பாய் தம் சேனைகளுடன் ஆங்கிலேயர்களை எதிர்த்துக் கடுமையாக வும் கோபாவேசத்துடனும் போர் புரிந்தார். அந்த யுத்தத்தில் பகைவர்களுக்கு மிகுந்த உயிர்ச்சேதம் ஏற்பட்டது. லக்ஷ்மி பாயிடம் அதிகப் படைகள் இல்லை என்பதையும் தாங்கள் சிறிது காலம் எதிர்த்து நின்றால் தங்களுக்கு வெற்றி நிச்சயம் என்பதை யும் எண்ணி ஆங்கிலேயர்கள் மேன்மேலும் ஏராளமான படை களைக் கொண்டுவந்து குவித்தனர்.

இந்தியப் பட்டாளங்களே தேச பக்தர்களை எதிர்த்தன! அத்தகைய நிலைமையில் லக்ஷ்மி பாயின் வீரம் துரோகத்தின் முன் னிலையிலும் மிருக பலத்தின் முன்னிலையிலும் எவ்வளவு காலம் சமாளித்து நிற்க முடியும்? அப்படி இருந்தும் இளமையும், வனப்பும் வீரமும் ஒருங்கே அமைந்த லக்ஷ்மி பாய் ஆண் வேடம் பூண்டு, எதிரிகளை வெட்டி வீழ்த்தி, ஆங்கிலப் படைகளைப் பிளந்துகொண்டு சென்றார். தம் படைகள் தம்மைத் தொடர்ந்து வருகின்றனவா என்பதை அறிந்துகொள்ளக்கூட அவர் பின் புறம் பார்க்கவில்லை. ஆயினும் ஆண்வேடம் பூண்டிருந்த மந் தரை, காசி என்ற அழகிகளான இரு தோழிகளும், ராமசந்திர ராவ் தேஷ்முக்கும் மாத்திரம் தங்களுடைய உயிரைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் மகாராணியைப் பின்தொடர்ந்து பாது காப்பாகச் சென்றனர். அவ்வளவு ஆபத்திலும் ஜான்ஸி ராணிக் குத் துணையாகச் சென்ற அந்த அழகிகளை இந்திய சரித்திரம் உள்ள அளவும் மறக்க முடியாது.

ராணியின் படையை ஸ்மித் தன் துருப்புகளுடன் தாக்கிக் கொண்டிருந்தான். அன்று லக்ஷ்மி பாய் போர்க்களத்தில் காட்

டிய வீரம் காண்பதற்கரிய காட்சியாக இருந்தது. அவர் நாள் முழுவதும் மின்னலைப்போல் அங்கும் இங்கும் சென்று உக்கிரமாகப் போரிட்டதால், சிப்பாய்களும் எல்லையற்ற உற்சாகத்துடனும் ஆவேசத்துடனும் பகைவர்களை எதிர்த்தனர். எனவே ஜான்ஸிப் படையைப் பிளக்க முடியாமல் ஸ்மித் இறுதியில் பின்வாங்கும்படி நேர்ந்தது.

18-ஆம் தேதி உதயமாயிற்று. அன்று ஆங்கிலேயர்கள் இறுதியான முடிவு ஏற்படும் வரையில் போரிட்டுத் தீருவது என்ற உறுதியுடன் போர்க்களத்துக்கு வந்தனர். அதற்கிணங்க அவர்கள் பல திசைகளிலிருந்தும் கோட்டைமீது படையெடுத்தார்கள். முதல் நாள் பின்வாங்கும்படி நேர்ந்த ஆத்திரத்தால் தூண்டப்பட்ட ஸ்மித், அன்று மேற்கொண்டு அதிகப் படைகளுடன் வந்து ராணியின் படைப் பிரிவையே தாக்கினான். அன்று ஹ்யூ ரோஸும் அந்தப் படைகளின்மீதே தன் முழுக் கவனத்தையும் செலுத்தினான். அதிகப் படைகளையோ, ஆங்கிலத் தளபதிகளையோ கண்டு பாரத வீராங்கனை அஞ்சவில்லை. இருப்பதாயினும் இறப்பதாயினும் இறுதி வரையில் தம் கடமையைச் செய்தே தீருவது என்ற புனிதப் பிரதிக்ஞையுடன் போர்க்களத்துக்கு வந்துள்ள வீர மாதை அச்சம் அணுகுவது எங்ஙனம்?

முதல் நாள் நடந்த போர் காரணமாக ராணியின் சொந்தக் குதிரை மிகவும் களைத்துப் போயிருந்ததால், அன்று அவர் வேறு புதிய குதிரை ஒன்றின்மீது ஏறிப் போர்க்களத்துக்கு வந்து பகைவர்களின்மீது பாய்ந்தார். பாணங்கூட அவ்வளவு வேகமாகப் பறக்க முடியாது. மின்னல்கூட அவ்வளவு துரிதமாகத் தோன்ற முடியாது. சிங்கங்கூட எதிரே வரும் யானையின்மீது அத்தகைய உக்கிரத்துடன் பாய முடியாது!

ஓர் ஆங்கில எழுத்தாளர் அந்தக் காட்சியை இவ்வாறு வர்ணித்திருக்கிறார்: 'இந்த அழகிய ராணி போர்க்களத்துக்குச் சென்று ஹ்யூ ரோஸின் பிரம்மாண்டமான படையை அணுவளவும் அச்சமின்றித் தாக்க முற்பட்டார். நம் படைகளும் இடைவிடாமல் வெகு கடுமையாகத் தாக்கின. அதனால் ராணியின் படைப் பிரிவு பிளக்கப்பட்டது. அவருடைய படையின் தொகை குறைந்து கொண்டும் வந்தது. ராணியோ அந்த நிலைமையில் கூட எள்ளளவும் கலக்கமின்றி முன்னணியில் நின்று எவரும் பிரமிக்கத் தக்கவாறு போரிட்டார். ஹ்யூ ரோஸின் ஒட்டகப் படைகளின் முன்னிலையில் புரட்சிப் படைகள் நிற்க முடியவில்லை. ராணி மாத்திரம் அப்போதும் போரிட்டவண்ணமே முன்வந்து கொண்டிருந்தார்!'

ராணியின் படைப் பிரிவினர் இணையற்ற தைரியத்துடன் போரிட்டு வருகையில், ஆங்கிலேயர்கள் அடங்கிய மற்றொரு படை பின்புறமாக வந்து அவர்களைச் சூழ்ந்துகொள்ள முற்பட்டது. பின்புறம் இருந்த புரட்சிப் படை பிளக்கப்பட்டுவிட்டதே அதற்குக் காரணம்.

தேச பக்தர்களின் பீரங்கிகள் வாயடைத்துப் போயின. முக்கியப் படைப் பிரிவு சிதறுண்டது. வெற்றி பெற்றுவந்த வெள்ளையர்கள் நான்குபுறமும் சூழ்ந்துகொண்டு வந்தனர். அந்த நிலைமையில் ராணி தம்முடன் இருந்த இருபது குதிரை வீரர் களுடனும் தோழிகளுடனும் பகைவர்களைப் பிளந்துகொண்டு, மற்றொரு புறத்தில் இருந்த தம் தோழர்கள் இருக்கும் இடத் துக்குப் போய்ச் சேர முயன்றார். ஆனால் ஆங்கிலேயர்களோ அவரை நோக்கிச் சரமாரியாகச் சுட்டுக்கொண்டே விரட்டிச் சென்றனர். எதிரில் வந்த ஆங்கிலேயர்களை ராணி ஒப்பற்ற தைரியத்துடன் வெட்டி வீழ்த்திவிட்டு, அப்பால் சென்றபோது, 'நான் இறந்தேன், பாய் சாஹிப், நான் இறந்தேன்' என்று ஒரு தீனக்குரல் கேட்டது. லக்ஷ்மி பாய் திரும்பிப் பார்க்கையில், தோழி மந்தரை ஓர் ஆங்கிலச் சிப்பாயால் சுடப்பட்டு வீழ்ந்து கிடந்தாள். உடனே ராணிக்கு ஏற்பட்ட கோபாவேசத்தை வர்ணிப்பது என்பது இயலாத காரியம். தன்னை ஆபத்துச் சூழ்ந்து கொண்டிருப்பதையும் கவனியாமல், ராணி திரும்பி அந்த வெள்ளைச் சிப்பாயை ஒரே வீச்சில் வெட்டிச் சாய்த்து, மந்தரை யைக் கொன்றதற்காக அவன்மீது வஞ்சம் தீர்த்துக்கொண்டார்.

நாற்புறமும் ஆங்கிலச் சேனைகள் வந்து சூழ்ந்துகொண்டு விட்டபடியால், இனித் தாம் தப்புவது அரிது என்பது லக்ஷ்மி பாய்க்குப் புலனாகிவிட்டது. அதே சமயம் அவருடைய முதுகில் ஒரு குண்டு வந்து பாய்ந்தது. அச்சமயத்திலும் அவர் தைரியத்தை இழக்காமல், மாறுவேடம் பூண்டு தம் இரு புறத்திலும் வந்து கொண் டிருந்த தோழிகளையும், ராமசந்திர ராவ், ரகுநாத் சிங் முதலிய மெய்க் காவலர்களையும் நோக்கி, 'யுத்த களத்தில் நான் வீழ்ந்தால் என் உடலை வெள்ளையர்கள் தீண்டாமல் பாது காக்க வேண்டியது உங்களுடைய கடமை. உங்களிடம் கடைசி யாக நான் எதிர்பார்க்கும் உதவி அதுதான்' என்று கூறினார்.

அதைக் கேட்ட அவ்வீரர்கள் மனம் உருகி, என்ன நேரினும் லக்ஷ்மி பாயின் தேகத்தை வெள்ளையர்கள் தொடக்கூடாது என்ற உறுதியுடன் தங்கள் தங்கள் குதிரைகளை ராணிக்கு அருகில் செலுத்தி, இறுதி வரையில் அவரைக் காத்து நின்றனர். அச் சமயம் சிறுவனான தாமோதர ராவ், ராமசந்திர ராவ் தேஷ்முக் கின் குதிரைமீது இருந்தான்.

லக்ஷ்மி பாய், தாம் பட்ட காயத்தையும் லட்சியம் செய்யாமல் வெள்ளையர்களை வெட்டி வீழ்த்தி முன்சென்றுகொண் டிருக்கை யில், வழியில் ஒரு சிறிய கால்வாய் குறுக்கிட்டது. அவருடைய குதிரை துரதிருஷ்டவசமாக அதைத் தாண்டாமல் பிரமித்து நின்றுவிட்டது. லக்ஷ்மி பாய், தம் சொந்தக் குதிரையின்மீது ஏறி வந்திருந்தால் உயிர் தப்பியிருக்க முடியும். புதிய குதி ரையை முன்செலுத்த எவ்வளவோ முயன்றும் பயனில்லை. அது சுற்றிச் சுற்றி வந்ததேயன்றிக் கால்வாயைத் தாண்டவில்லை. நாற் புறமும் ஆங்கிலச் சேனைகள் சூழ்ந்துகொண் டிருந்ததால் ராணி தந்திரமாகப் பின்வாங்குவதற்கும் இடமில்லை. அதே சமயம் பல ஆங்கிலச் சிப்பாய்கள் லக்ஷ்மி பாய்க்கு அருகில் வந்து ஆத்திரத் துடன் போர் புரிந்தனர்.

அப்போது ஓர் ஆங்கிலேயன் தன் கத்தியால் வெட்டவே லக்ஷ்மி பாயின் தலையின் வலது புறம் சிதைந்து ரத்த வெள்ளம் பெருகியது. அவருடைய கண் ஒன்றும் அதிர்ச்சியால் தெறித்து வீழ்ந்தது. அதே சமயம் மற்றொரு சிப்பாய் லக்ஷ்மி பாயை மார்பில் ஓங்கி வெட்டவே, மகாராணி படுகாயம் அடைந்தார்.

ஆஹா! படுகாயமடைந்தும் அந்த வீர ராணி தைரியத்தை இழக்கவில்லை. தம்மைப் படுகாயப்படுத்திய இரு வீரர்களையும் ஒரே மூச்சில் வெட்டி வீழ்த்திவிட்டு, தாமும் குதிரைமீது சாய்ந்தார். அவரை லக்ஷ்மி பாய் என்று அறியாத ஆங்கிலேயர்கள், பின்வாங்கிய பேஷ்வாவின் சேனைகளை எதிர்ப்பதற்காகச் சென்றனர். ராமசந்திர ராவும், மற்றவர்களும் ராணியைத் தாங்கி, சமீபத்தில் இருந்த கங்காதாஸ் பாவா என்பவரின் கூரைக் குடிசைக்குக் கொண்டுபோய்ப் படுக்கவைத்து அவரைத் தண்ணீர் பருகச் செய்தனர். அப்போது அவருடைய உடல் முழுவதும் ரத்த மயமாக இருந்தது. அவர் மூர்ச்சை தெளிந்து கண்ணைத் திறந்தார். தம்மை வெள்ளையர்கள் தீண்டவில்லை என்பதை அறிந்ததும், அவருடைய முகத்தில் ஒரு விதத் தெய்விகமான புன்முறுவல் தோன்றியது. பின்னுல் அவர் தம் சுவீகாரப் புதல்வனை தாமோதர ராவை அன்புடன் நோக்கிய வண்ணம் இறைவனைப் பிரார்த்தித்துக்கொண்டே உயிர் நீத்தார்.

அப்போது லக்ஷ்மி பாய்க்கு வயது இருபத்துமூன்று. உடனே ராமசந்திர ராவ் தமக்கு இடப்பட்டிருந்த கட்டளைக்கு இணங்க அவருடைய உடலைக் குடிசைக்கு அருகில் காஷ்டத்தில் இட்டுத் தகனம் செய்தார். புத்திரன், சுத்த வீரர்களான நண்பர்கள் முதலியோரின் முன்னிலையில் லக்ஷ்மி பாயின் ஆன்மா சாந்தியடைந்தது. தாம் செய்திருந்த பிரதிக்ஞைக்கு இணங்க, அடிமைத்தனம் தம் உடலையும் ஆன்மாவையும் தீண்டுமுன் அவர் வீரசுவர்க்கம் அடைந்தார்!

இந்திய சரித்திரத்திற்கே கண்போல் இருந்து வருவது ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாயின் வாழ்க்கைதான். ஒரு நாட்டின் ஏற்றத்துக்கும், சிறப்புக்கும், அழியாப் புகழுக்கும் அத்தகைய ஓர் ஆன்மா போதுமானது. சிறந்த குணங்கள் அம்சங்கள் அனைத்தும் உருவெடுத்தாற் போன்றே அவர் விளங்கினுர். ஒரு பெண் - இருபத்துமூன்று வயதுகூட நிரம்பவில்லை - ரோஜாப் புஷ்பம் போன்ற அழகு - மனத்தைக் கொள்ளை கொள்ளும் உயரிய குணங்கள் - பரிசுத்த வாழ்க்கை - இணையற்ற தைரியம் - உவமையற்ற போர்த் திறன் - இவை வேறு எவரிடத்தும் ஒருங்கே வாய்க்கப் பெற்றதில்லை. இவருடைய இருதயத்தில் என்றும் அழியாத தேசபக்திச் சுடர் பிரகாசித்துக்கொண் டிருந்தது.

ஒரு தேசத்தில் அத்தகைய தேவதை ஜனிப்பது மிக மிக அபூர்வமாகும். அவர் போன்ற ஒரு பெண்திலகத்தைப் பெறும் பாக்கியம் இங்கிலாந்துக்குக் கிடைத்ததில்லை. சீரிய கொள்கைகளும் இணையற்ற வீரமும் மிளிர்ந்து கிடந்த புரட்சிக்கால இத்தாலியிலுங்கூட அத்தகைய ஒரு வீராங்கனை தோன்றியதில்லை!

உவமையற்ற அந்த ரத்தினத்தை ஈன்றெடுத்த பெருமை பாரத நாடு ஒன்றுக்கே உரியது! அது அக்கினியைக் காட்டிலும் மிகுந்த சோபையுடன் விளங்கி வருகிறது; கங்கா தாஸ் பாவாவின் குடிசைக்கு எதிரில் எரிந்த காஷ்டத்தின் மூலம் என்றென்றும் பிரகாசித்துக்கொண் டிருக்கிறது!

நம் நாட்டில் அற்புதமான சுதந்தர யுத்தம் மூண்டிராவிடில் அந்தத் தெய்விகமான ரத்தினத்தின் மகிமையை நாம் எவ்வாறு அறிய முடியும்? மகா சமுத்திரத்தில் உள்ள மாசிலா முத்துக்கள் மிதப்பதில்லை அல்லவா? சூரியகாந்த ரத்தினம் இரவில் பிரகாசிப்பதில்லை அல்லவா? தீக்கல் வெல்வெட்டு மெத்தையில் உராய்வதன் மூலம் நெருப்பைக் கிளப்புவதில்லை அல்லவா? அவற்றிற்கு எதிர்ப்பு மிக அவசியம் ஆகும். அநீதியினுல்தான் மனம் துடிக்க ஆரம்பிக்கிறது; உ திரம் கொதிக்கிறது; நாட்டு உணர்ச்சி பொங்குகிறது; தேச ஆவேசத் தீ கொழுந்து விடுகிறது. அத்தகைய உலையிலிருந்துதான் தெய்விகக் குணங்கள் வெளிப்படுகின்றன.

சகிக்க முடியாத அநீதியின் விளைவாக 1857-ஆம் ஆண்டு மூண்ட தீ, வானளாவ எரிந்தது. மீரத்தில் தெறித்த பொறி, பாரதம் எங்கணும் பற்றிக்கொண்டது. டல்ஹௌஸியின் இரும்பு உருளையால் நசுக்குண்டு நாசமான பிரதேசங்கள் புத்துயிர் பெற்றுப் பயங்கரமான போரில் ஈடுபட்டன. மீரத்திலிருந்து விந்தியம் வரையில், பிஷாவரிலிருந்து தம்தம் வரையில், அஷ்ட திக்குகளிலும் அக்கினி ஜ்வாலை சீறிக்கொண்டு கிளம்பிற்று! புரட்சி என்னும் சண்ட மாருதத்துடன் ரத்தமாரியும் சேர்ந்துகொண்டது!

டில்லி முற்றுகைகள், பிளாஸி அநீதிக்காக வாங்கிய பழி, கான்பூர் பலிகள், லக்ஷ்மணபுரிப் படுகொலைகள் முதலியவை அடுக்கடுக்காக நிகழ்ந்தன! ஆயிரக்கணக்கான தேசீய வீரர்கள் போர் புரிந்து வீர சுவர்க்கம் எய்தினர்! நகரங்கள் தகனமாயின! குமார சிங் வந்தார், போராடினுர், வீழ்ந்தார்! மௌல்வி வந்தார், போராடினுர், வீழ்ந்தார்! கான்பூர்ச் சிம்மாசனம் தகர்ந்தது! லக்ஷ்மணபுரிச் சிம்மாசனம் மறைந்தது! டில்லிச் சிம்மாசனம் வீழ்ச்சியுற்றது! பரேலிச் சிம்மாசனம் பாழாயிற்று! ஜகதீசபுரி, ஜான்ஸி, பாந்தா, பருகாபாத் சிம்மாசனங்களும் கொள்ளை போயின! லக்ஷக் கணக்கான வாட்கள் உராய்ந்தன! பதினுயிரக் கணக்கான குதிரைகளும் ஒட்டகங்களும் யானைகளும் மோதிக் கொண்டன! எங்கும் போர்க்களம் ஆகியது! இடி முழக்கம் வானைப் பிளந்தது! இவ்வாருக ஒரு பிரம்மாண்டமான எரிமலையே வெடித்துத் தீயைக் கக்குவதுபோல் இருந்தது! 1857-இல் கிளம்பிய சுதந்தர யுத்த ஜ்வாலைகளுள் கங்காதாஸ் பாவாவின் குடிசைக்கு அருகே காஷ்டத்திலிருந்து கிளம்பியதுதான் கடைசி ஜ்வாலையாகும்.

# 33

# நாடெங்கும் தெறித்த பொறிகள்

**1857**-ஆம் ஆண்டில் மூண்ட சுதந்தர யுத்தத்தின் முக்கியமான காட்சிகள் வட இந்தியாவிலேயே நடைபெற்றனவாதலின், அங்கே நிகழ்ந்த பிரமிக்கத்தக்க சம்பவங்களைப்பற்றி மாத்திரம் இதுவரையில் விவரித்துக் கூறினோம். அந்த யுத்தத்தின் உட்கருத்தையும் பொதுவான தன்மையையும் நன்கு அறிந்துகொள்ள வேண்டுமாயின், மற்ற மாகாணங்களிலும் ஏற்பட்ட அதன் பலாபலன்களை நாம் கவனிக்க வேண்டியது அவசியமாகும். எரிமலை வெடித்து அதிலிருந்து கிளம்பிய ஜ்வாலைகள் ஆகாயம் அளாவ நடனம் செய்துகொண் டிருக்கையில், அவற்றிலிருந்து மற்ற இடங்களில் தெறித்த பொறிகளின்மீதும் நமது கண்ணோட்டம் செல்ல வேண்டும்.

டில்லி முற்றுகையின்போது பாஞ்சாலத்தில் நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றி ஏற்கனவே சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கிறோம். அதன்பின் அங்கும் இங்கும் ஏற்பட்ட சில்லறைக் கிளர்ச்சிகளைத் தவிர, மற்றப்படி பாஞ்சாலம் முழுவதும் அமைதியாகவே இருந்து வந்தது. பாஞ்சாலத்தைச் சேர்ந்த ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அந்தரங்கத்தில் புரட்சிக்காரர்களிடமே அநுதாபம் கொண்டனர்; ஆங்கிலேயர்களை முற்றும் வெறுத்தனர். ஆயினும் ஒரு கட்சியினருக்கும் தீவிரமாக உதவி செய்ய அவர்கள் விரும்பவில்லை. ஆனால் சீக்கியர்களும் சீக்கிய மன்னர்களும் மாத்திரம் அந்தரங்கத்தில்கூடத் தேச பக்தர்களிடம் அநுதாபம் கொள்ளவில்லை. மற்றும் அவர்கள் நடுநிலைமை வகிக்காமல், பகிரங்கமாக ஆங்கிலேயருக்கு உதவி புரியவும், போர்க்களத்தில் தங்கள் தேச சகோதர சகோதரிகளின் ரத்தத்தைச் சிந்தவும் தயங்கவில்லை.

ராஜபுதன ஜனங்கள் தேச பக்தர்களிடம் பூரண அநுதாபம் காட்டிவந்தனர் என்பது பல நிகழ்ச்சிகளிலிருந்து வெளியாகியிருக்கிறது. ஜயபுரி, ஜோதிபுரி, உதயபுரி முதலிய பிரதேசங்களைச் சேர்ந்த மக்கள் ஆங்கிலேயர்களுக்கு உதவியாகப் போரிட்ட இந்தியச் சிப்பாய்களைச் சபித்து வெறுத்தனர். தேச பக்தர்கள் வெற்றி பெற்றதாகச் செய்தி கிடைத்தபோதெல்லாம் அவர்கள் எல்லோரும் கடைத் தெருக்களில் நின்றுகொண்டு சந்தோஷ ஆரவாரம் செய்தனர். அவர்கள் தோல்வியடைந்தபோதெல்லாம் ஜனங்கள் துக்கத்தில் ஆழ்ந்தனர். மகத்தான சுதந்தரப் போரில் தேச பக்தர்கள் வெற்றி பெற வேண்டும் என்று ராஜபுதன ஜனங்கள் பிரார்த்தித்து வந்தனர் என்பது சந்தேகமற வெளியாகிறது. ராஜபுதன மன்னர்களில் பெரும்பாலோரும் நடுநிலைமையே வகித்து வந்தனர். திட்டமாக யார் வெற்றியடைவர் என்று தெரியும் வரையில் அவர்கள் ஒரு கட்சிக்கும் பகிரங்கமாக உதவி புரியவில்லை! ஆயினும் ஆங்கிலேயர்களுக்கு உதவியாகப் படைகளை அனுப்ப வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட போதெல்லாம், அந்தப் படைகள் தங்களுடைய மன்னர்களின் கட்டளை

களைப் பகிரங்கமாக மீறி, ஆங்கிலேயர்களுக்கு உதவியாகவும் தங்கள் சகோதரர்களை எதிர்த்தும் யுத்தம் செய்ய முற்றும் மறுத்துவிட்டன!

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தத்தில் உத்தரப் பிரதேசம், அயோத்தி, ரோஹில்கண்ட், பிகார், வங்காளம், பந்தேல்கண்ட், மத்திய இந்தியா இவைதாம் குருக்ஷேத்திரமாக அதாவது கோரமான போர்க்களங்களாக விளங்கின. பொதுவாக, பர்மாவிலும், குறிப்பாக ரங்கூனிலும் அற்ப எழுச்சி உண்டாகியதெனினும் அதனால் யாதொரு பயனும் ஏற்படவில்லை.

விந்திய மலைக்கு வடக்கேயுள்ள பிரதேசங்கள்பற்றி இது வரையில் கவனித்தோம். அதற்குத் தெற்கே நிகழ்ந்த சம்பவங்கள்பற்றியும் கவனிக்கவேண்டியது அவசியம் அல்லவா? சிவாஜியினால் ஸ்தாபிக்கப்பட்ட சாம்ராஜ்யத்தை முதல்முதலாக அங்கே நாம் காண்கிறோம். பின்னால் இங்கிருந்து வடக்கே குடியேறிய மகாராஷ்டிரர்களே கான்பூர், கால்பி, ஜான்ஸி முதலிய இடங்களில் சுதந்தரப் போரில் ஈடுபட்டு வந்தார்கள். ராய்கடிலிருந்து வீழ்த்தப்பட்ட சிம்மாசனம், கான்பூர் ரத்தக் கடலிலிருந்து மீண்டும் தோன்றியது. சாந்தாஜி, தானாஜி போன்ற வீரர்களால் கம்பீரமாகப் பறக்கவிடப்பட்டு வந்த சுதந்தரக் கொடியைத் தாதியா டோபே மீண்டும் நிலைநாட்டினார்.

வடக்கே மூண்ட எழுச்சியின்போது தேசீய வீரர்களிடையே நிலவிய ஒற்றுமையும், இணையற்ற தைரியமும், உறுதியும் தெற்கேயும் நிலவியிருக்குமாயின், இங்கிலாந்திலுள்ள யாவரும் இந்தியாவுக்கு வந்து போரிட்டிருந்தால்கூட, இந்தியத் தாயின் மணிக்கொடியை ஒரு காலத்திலும் இறக்கியிருக்க முடியாது. ஆனால் தெற்கே தயக்கமும் தடுமாற்றமும் உறுதியின்மையும் புரட்சியைச் சிதைத்துவிட்டன. வடக்கே சுதந்தரப் போர்த் திட்டம் உருவாகி வருகையில், தூதர்கள் தெற்கேயும் சென்று ஒவ்வொரு சம்ஸ்தானத்திலும், ஒவ்வொரு நகரிலும் புரட்சி விதையை ஊன்றி வந்தார்கள். ஸாதாராவைச் சேர்ந்த ரங்க பாபுஜி, கான்பூர் நானா சாஹிபுடன் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார். புனா, ஸாதாரா, தார்வாட், பெல்காம், ஹைதராபாத் முதலிய இடங்களிலெல்லாம் முகாம் போட்டிருந்த சிப்பாய்களிடையே பிராம்மணர்கள், மௌல்விகள் முதலியோர் புரட்சிப் பந்தங்களுடன் சென்று ரகசியமாகத் தீ மூட்டி வந்தார்கள். வடக்கே புரட்சி ஆரம்பமானதும் தெற்கேயும் ஆரம்பித்து விடுவது என்று, மைசூரிலிருந்து விந்திய பர்வதம் வரையிலும் சிப்பாய்கள் பிரதிக்ஞையும் செய்துகொண்டிருந்தார்கள்.

புரட்சியை ஆரம்பிக்க வேண்டும் என்பதைத் தெற்கேயுள்ளவர்கள் மறக்கவில்லை. ஆனால் வடக்கே அது மூண்டவுடன் சிறிதும் தாமதமின்றித் தெற்கேயும் ஆரம்பம் ஆகிவிடவேண்டும் என்பதை மாத்திரம் மறந்துவிட்டனர். வடக்கே யாரும் எதிர்பாராத விதமாக மின்னல் வேகத்தில் புரட்சி பொங்கி எழுந்துவிட்டது. பகைவர்களை வீழ்த்துவது அல்லது தாங்கள்

வீழ்ந்து மடிவது என்ற ஒரே உறுதியுடன் அங்கே தேசபக்தர்கள் சுதந்தரப் போரில் குதித்தனர். தெற்கே உள்ளவர்களும் அவர் களைப் பின்தொடர்ந்து உடனே போரில் ஈடுபட்டிருக்க வேண் டும். ஆனால், அவர்கள் அவ்விதம் செய்யாமல் வடக்கே போரின் போக்கு, சாதகமாக இருக்குமா, பாதகமாக இருக்குமா என்பதை அறிந்துகொள்ளுவதற்காகத் தாமதித்துவிட்டார்கள்.

எந்தப் புரட்சியும் வெற்றி பெறுவது அதன் சம்பந்த மான நடவடிக்கைகளின் மின்னல் வேகத்தையே பொறுத்திருக் கிறது. புரட்சிக்கான முன்னேற்பாடுகளைச் செய்யும்போதுதான் அமைதியும் நிதானமும் கணக்கும் ஆலோசனையும் தேவை. புரட்சி ஆரம்பமாகும் நாளை நிர்ணயித்துவிட்டால், பின்னர் அறையிலிருந்து எல்லா நடவடிக்கைகளும் மின்சார வேகத்தில் நடைபெற வேண்டும். சங்கநாதம் செய்து, பேரிகைகள் முழங் கியபின், உயிரைத் துச்சமாக மதித்துப் போரில் குதித்துவிட வேண்டும். அப்போது தயங்குவோர் இறுதியில் தோல்வியுறு வது நிச்சயம். புரட்சியை ஆரம்பிப்பது நன்மையா தீமையா என்று அப்போது ஆராய முற்படுவோரின் கதி அதோகதிதான்.

முன்னேற்பாடுகளைச் செய்யும்போதுதான் அமைதி வேண் டும். பின்னால் அதை நிறைவேற்றுகையில் தயக்கமின்மையும் தைரியமும் மிக அவசியம் ஆகும். பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்கையில் தீர்க்காலோசனையுடனும் நிதானமாகவும் ஒவ் வோர் அடியாக முன்செல்ல வேண்டும். ஆனால் புரட்சி மூண்ட பின், எதிரே நெருப்பு ஏரி தென்பட்டாலுங்கூட ஒரு விநாடியும் தயக்கமின்றிப் பாணம்போல் அதன் மூலம் பாய்ந்து முன் செல்ல வேண்டும். பின்னர் வெற்றியாயினும் தோல்வியாயினும், வாழ்வாயினும் வீழ்வாயினும், உறுதியுடன் போரை நடத்த வேண்டும். புரட்சி வெற்றி பெறும் ரகசியம் இதுதான்.

இந்த மூலாதாரமான விதியைத் தெற்குப் பிரதேசம் மறந்துவிட்டது. வடக்குப் பிரதேசம் புரட்சியை ஆரம்பித்த தும் தெற்கே புரட்சி ஆரம்பமாகவில்லை. அது தயங்கித் தள் ளாடிச் செல்ல முற்பட்டது. வெற்றி கிடைக்குமோ கிடைக் காதோ என்ற கவலையின் விளைவாக அங்கும் இங்கும் சில்லறைப் புரட்சிகளே மூண்டன. வாழ்வு அல்லது வீழ்ச்சி, வெற்றி அல்லது மரணம் என்ற உறுதியுடன் ஒருமித்து முயற்சி நடை பெறவில்லை. நிச்சயமான தோல்வியே அதன் பயனாக முடிந்தது.

அப்போது மூன்று முக்கியப் படைப் பிரிவுகள் தெற்கே இருந்தன: கோல்ஹாபூரில் 27-ஆவது பிரிவும், பெல்காமில் 29-ஆவது பிரிவும், தார்வாடில் 28-ஆவது பிரிவும் இருந்தன. ஆகஸ்டு மாதம் 10-ஆம் தேதி போரை ஆரம்பிப்பது என்று நிர்ணயித்திருந்தார்கள். அந்த முடிவு கடிதங்களின் மூலம் எல் லோருக்கும் அறிவிக்கப்பட்டிருந்தது. இதன் மத்தியில் கோல் ஹாபூர் ஜனங்களையும் சிப்பாய்களையும் கண்காணித்து அடக்கு வதற்காக ஆங்கிலப் படை ஒன்று அவ்விடத்துக்கு அனுப்பப்பட் டது. தந்தி இலாகாவைச் சேர்ந்த ஓர் அதிகாரியே அந்தச் செய்தியைத் தேசபக்தர்களான சிப்பாய்களுக்கு அறிவித்தார்.

ஏற்கனவே ஆத்திரத்துடன் இருந்த சிப்பாய்கள் அந்தச் செய்தியைக் கேள்வியுற்றதும், ஜூலை மாதம் 31-ஆம் தேதியே சுதந்தரப் போரை ஆரம்பித்துவிட்டார்கள். உடனே அவர்கள் சில ஆங்கில அதிகாரிகளைச் சுட்டு வீழ்த்தியபின் கஜானாவைக் கைப்பற்றினார்கள். அப்போது அவர்களுக்கும் கோல்ஹாபூருக்கு வந்த ஆங்கிலத் துருப்புகளுக்கும் ஒரு சிறிய போர் நடந்தது. ஸாவந்தவாடியைச் சேர்ந்த ராம்ஜி சிர்ஸாவின் தலைமையில் தேசபக்தர்கள் ஒன்றுதிரண்டு ஆங்கிலத் துருப்புகளைக் காதி கானகத்தை நோக்கி விரட்டினர். சில மாதங்களுக்குப் பின் ஆங்கிலேயர்கள் போர்ச்சுகீசியர்களின் உதவி கொண்டு அந்தத் தேச பக்தர்களைச் சிதற அடித்துவிட்டார்கள். கோல்ஹாபூருக்கு வந்த புதிய ஆங்கில அதிகாரி ஜேகப், மற்றச் சிப்பாய்களையெல்லாம் நிராயுதபாணிகள் ஆக்கி, அவர்களுடைய தலைவர்களையும் சுட்டுக் கொன்றுவிடும்படி உத்தரவிட்டான்.

கோல்ஹாபூர்ச் சிப்பாய்கள் சுதந்தரப் போரை ஆரம்பித்த போதே, அந்த நகர மக்களும் அதில் ஈடுபட்டிருக்கவேண்டும். ஆனால் அவர்கள் அவ்விதம் செய்யத் தவறிவிட்டனர். நானா சாஹிபிடமிருந்து வந்த தூதர்கள் இளைஞரான கோல்ஹாபூர் மகாராஜாவைக் கண்டு பேசி, அவரும் தேசீய எழுச்சியில் கலந்துகொள்ளும்படி செய்தனர். அந்த மன்னருக்கு லக்ஷ்மண புரி தர்பாரால் ஒரு வாளும் பரிசளிக்கப்பட்டது. சாங்கிலி, ஜம்கிண்டி முதலிய தென் சம்ஸ்தான ராஜாக்களுடனும் கோல்ஹாபூர் மகாராஜா ரகசியமாகக் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார். அவருடைய தம்பியான சிம்னா சாஹிபின் தேகத்தில் சிவாஜியின் ரத்தம் ஓடிக்கொண்டிருந்தது. அகால எழுச்சியால் வீணாகிய புரட்சித் திட்டங்களை மீண்டும் வெற்றிகரமான முறையில் அமலுக்குக் கொண்டு வருவதற்காகச் சிம்னா சாஹிப் ரகசிய ஏற்பாடுகளைச் செய்து வந்தார். அரைகுறையான பயிற்சி பெற்ற துருப்புகளையும், ஏராளமான தொண்டர்களையும் ஒன்று சேர்த்து மீண்டும் சுதந்தரப் போரை ஆரம்பிக்க ஆயத்தமானார்.

அவருடைய நோக்கத்திற்கு இணங்க டிசம்பர் மாதம் 15-ஆம் தேதி அதிகாலையில் கோல்ஹாபூர் மறுபடியும் பொங்கி எழுந்தது. நகரவாயில் கதவுகள் மூடப்பட்டன; பீரங்கிகள் தயாராக இருந்தன; தெருக்களிலெல்லாம் புரட்சி பேரிகைகள் முழங்கத் தொடங்கின. அந்தச் செய்தியைக் கேட்டதும் ஜேகப் தன் துருப்புகளை ஆயத்தம் செய்து, கச்சா வாயிற்புறத்தில் தேச பக்தர்களைத் தாக்கினான். அந்த விநாடியிலிருந்து ஆங்கிலேயர்கள் அரண்மனையைக் கைப்பற்றும் வரையில் கோர யுத்தம் நடந்தது. இறுதியில் தேச பக்தர்கள் தோல்வியுற்றனர்.

உடனே வழக்கம்போல் கோல்ஹாபூர் மகாராஜா புரட்சிக்கும் தமக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லையென்றும், தமக்குத் தெரியாமல் படைகளும் பிரஜைகளும் சேர்ந்து அவ்வாறு செய்துவிட்டதாகவும் ஆங்கிலேயர்களிடம் அறிவித்தார். புரட்சித் தலைவர்களின் பெயர்களைக் கேட்டபோது, அவ்விஷயமாகத் தமக்கு

எதுவுமே தெரியாதென்றும் அவர் சாதித்துவிட்டார். அவர்களைக் கண்டுபிடிக்க ஜேகப் பெருமுயற்சி செய்தும் பலிக்கவில்லை. சந்தேகத்தின்மீது அவன் பலரைச் சிறையில் அடைத்துங்கூட, பரந்த புரட்சிபற்றிய உளவு இம்மியளவும் அவனுக்குக் கிடைக்கவில்லை.

தலைவர்களில் ஒருவர் கைது செய்யப்பட்டபோது, அவரிடம் புரட்சி சம்பந்தமான ரகசிய தஸ்தாவேஜு ஒன்று இருந்தது. உடனே அவர் தம்மைக் கைது செய்தவர்களின் முன்னிலையிலேயே அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து வாயில் போட்டு மென்று விழுங்கிவிட்டார். பீரங்கிகளின் வாயில் வைத்துச் சுடப்பட்டவர்களில் ஒருவர் மாத்திரம் படுகாயம் அடைந்தாரே தவிர உயிர் துறக்கவில்லை. அவ்விதம் இருந்தும் தம்மை இரண்டாவது தடவையாகச் சுட்டுக் கொல்வார்கள் என்ற உத்தேசத்துடன் அவர் நிமிர்ந்து மார்பைக் காட்டிக்கொண்டு கம்பீரமாக நின்றார். அதைப் பார்த்த ஜேகப் அவருக்கு அருகில் சென்று, 'உங்கள்மீது நான் இரக்கப்படுகிறேன். கெட்ட சகவாசத்தால் நீர் யோசனையின்றிப் புரட்சியில் கலந்துகொண்டுவிட்டீர். கலகத் தலைவர்களின் பெயர்களை நீர் வெளியிடுவதன் மூலம் சர்க்காருக்கு உதவி செய்வீராயின், உமது உயிர் காப்பாற்றப்படும்!'' என்றான்.

ஆனால் அவ்வீரரோ படுகாயத்தினால் உண்டான வேதனையையும் பொருட்படுத்தாமல், வெறுப்புடன் ஜேகபைப் பார்த்துச் சிறிதும் தயக்கமின்றி, 'நான் செய்தது செய்ததுதான். அதற்காக நீர் உமது விருப்பப்படி எனக்குத் தண்டனை விதிக்கலாம்' என்று சொல்லிப் பீரங்கியின் எதிரில் மீண்டும் நிர்ப்பயமாக நின்றார். ஒருவருடைய பெயரைக்கூட அவர் வெளியிடவில்லை.

மற்றொரு புரட்சிக்காரர் பீரங்கி வாய்க்குப் பயந்து ஒரு தலைவரின் பெயரை முணுமுணுக்கவே, அதைக் கேட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் மெதுவாக நழுவிச் சென்று பிரஸ்தாபத் தலைவரையும் மற்றவர்களையும் எச்சரித்து விட்டார். எனவே போலீசார் தேட ஆரம்பிக்குமுன் அவர்கள் மாயமாகப் பறந்துவிட்டனர். புரட்சிக்காரர்கள் பரஸ்பரம் அவ்வளவு விசுவாசத்துடனும் நம்பிக்கையுடனும் நடந்துகொண்டார்கள்.

கோல்ஹாபூரில் நிலைமை இவ்வாறு இருக்கையில், பெல்காமிலும் புரட்சி மூண்டது. ஆயினும் சிப்பாய்களின் தலைவரான டாகுர்சிங்கும், ஜனங்களின் தலைவரும் மகா தைரியசாலியுமான ஒரு முன்ஷியும் சுதந்தரப் போர் ஆரம்பமாகும் தறுவாயில் கைது செய்யப்பட்டனர். உடனே பெல்காமையும் தார்வாடையும் அடக்கப் புதிதாக ஆங்கிலப் படைகளும் வந்து சேர்ந்ததால் அந்த இரண்டு பிரதேசங்களும் அடங்கிவிட்டன.

கைதியான முன்ஷி, சர்க்கார் ஊழியராவர். புனாவிலும் கோல்ஹாபூரிலும் இருந்த சிப்பாய்களுக்கு அவர் எழுதிய கடிதங்கள் துரதிருஷ்டவசமாக ஆங்கிலேயர்களிடம் அகப்பட்டுவிட்டதால், அவர் பீரங்கி வாயில் வைத்துச் சுடப்பட்டார்.

ஸாதாராவில் இருந்த ரங்க பாபுஜிமீது ஆங்கிலேயர்களுக்கு ஒரு காலத்திலும் நம்பிக்கை இல்லை. கோல்ஹாபூரில் புரட்சிப் பிரசாரம் செய்ததாக அவருடைய புதல்வர் தூக்கில் இடப்பட்டார். அதே சமயம் ஸாதாராவைச் சேர்ந்த இரண்டு இளவரசர்களையும் ஆங்கில அரக்கர்கள் தேசப் பிரஷ்டம் செய்தனர். பல வருஷங்களாகத் தாம் விசுவாசத்துடனும் நம்பிக்கையுடனும் தொண்டு புரிந்து வந்த ஸாதாரா ராஜ குடும்பத்துக்கு ஏற்பட்ட ஆபத்தைக் கண்டு சகியாத ரங்க பாபுஜி, ஆங்கிலேயர்களின் கையில் அகப்படாமல் எங்கேயோ மறைந்துவிட்டார். அவரைக் கண்டுபிடிப்போருக்கு வெகுமதி அளிப்பதாக ஆங்கிலேயர்கள் விளம்பரம் செய்தனர்; அவரைக் கைது செய்யவும் பெருமுயற்சி செய்தனர். ஆனல் அவர்களுடைய முயற்சி பலிக்கவில்லை. அந்த உத்தம தேசபக்தரின் கதி என்ன ஆயிற்று என்பது இன்று வரை யாருக்கும் தெரியாது!

அப்போது லார்டு எல்பின்ஸ்டன், பம்பாய் கவர்னராக இருந்து வந்தான். திறமை வாய்ந்த அவன் தன் மாகாணத்தில் ஏற்பட்ட நிலைமையைச் சமாளித்ததுடன், ராஜபுதனத்துக்கும் துருப்புகளை அனுப்பி வந்தான். பம்பாய் நகரில் பெரும் புரட்சி ஏற்படாமல் தடுத்த பெருமை, பிரதம போலீஸ் அதிகாரியான பாரஸ்டு என்பவனுக்கே உரியதாகும். அந்த நகர் சுகவாசிகளும் துரோகிகளும் கோழைகளும் நிறைந்த இடமாக இருந்தது. தேசப்பற்றுதல் உடையவர்கள் அங்கு இருந்த சிப்பாய்களிடையேதான் இருந்தனர்.

எனவே பாரஸ்டு அதை அறிந்து அவர்களை வெகு கவனமாகக் கண்காணித்து வந்தான். தீபாவளி விடுமுறையின் போது சுதந்தரப் போரை ஆரம்பித்து விடுவது என்று சிப்பாய்கள் முடிவு செய்திருந்தனர். அது சம்பந்தமாக ரகசியக் கூட்டங்களும் நடைபெற்று வந்தன. அந்தக் கூட்டங்களுக்கு உளவாளிகளை அனுப்ப அவன் பெருமுயற்சியும் தந்திரமும் செய்தான். ஆனல், சிப்பாய்கள் மிக்க ஜாக்கிரதையாக இருந்ததால், அவனல் வெற்றி பெற முடியவில்லை. மாறுவேடங்கள் பூண்டு அவனே நேரில் பலருடனும் வெகு தந்திரமாக நட்புக் கொண்டு விருந்து வைபவங்கள் முதலியவற்றில் கலந்துகொள்ள முற்பட்டான்.

அவனது விடாமுயற்சி இறுதியில் பயனைக் கொடுத்தது. அதாவது கங்காப் பிரசாத் என்பவரின் வீட்டில் ரகசியக் கூட்டங்கள் நடைபெறுவதைக் கடைசியாகக் கண்டுபிடித்தான். பின்னர் அவன் கங்காப் பிரசாத்தின் வீட்டுக்குச் சென்று, தன்னை எதிர்த்தால் கைது செய்துவிடுவதாக அவரைப் பயமுறுத்தி ஓர் அறையில் இருந்துகொண்டு ரகசியக் கூட்ட நடவடிக்கைகளைக் கதவு இடைவெளி வழியாக நேரில் பார்த்தான். அவ்விஷயம் அங்கே கூடிய தேசபக்தர்களுக்குத் தெரியாது. மற்றும் ஒரு நாள் அவன் வேறு சில ராணுவ அதிகாரிகளையும் அழைத்து வந்து, ரகசியக் கூட்ட நடவடிக்கைகளைக் கவனித்தான். எந்தச் சிப்பாய்கள் தங்களிடம் மிகுந்த விசுவாசத்துடன் இருப்பதாக நினைத்துக்கொண் டிருந்தனரோ. அதே சிப்பாய்கள் அந்தக்

கூட்டத்துக்கு வந்திருப்பதைக் கண்ட ஆங்கில அதிகாரிகள் பிர மித்துப் போயினர்.

முதலில் பம்பாயில் புரட்சியை ஆரம்பித்தபின், புனவை நோக்கிப் படையெடுத்துச் சென்று அந்நகரைக் கைப்பற்றி மகா ராஷ்டிர ராஜ்யத்தை ஏற்படுத்துவதென்பதும், அதற்கு நானு சாஹிபைப் பேஷ்வாவாகப் பிரகடனம் செய்வது என்பதுமே தேச பக்தர்களின் திட்டமாகும். ஆனல் அந்தத் திட்டம் நிறை வேறுமுன், பாரஸ்ட் அதை அடியோடு சீர்குலைத்துவிட்டான். அது மாத்திரம் அல்ல; புரட்சியில் சம்பந்தப்பட்ட இரு தலைவர்களை அவன் தூக்கில் இட்டதுடன், ஆறு பிரபல இந்தியப் படைத் தலைவர்களையும் தேசப் பிரஷ்டம் செய்தான். இவ் வாருக, பம்பாயில் புரட்சி, முளையிலேயே கிள்ளி எறியப் பட்டது.

அதே சமயம் நாகபுரி, ஜபல்புரி முதலிய இடங்களிலும் புரட்சித் தீயின் பொறிகள் தெறிக்கலாயின. 1857 ஜூன் மாதம் 13-ஆம் தேதி நாகபுரிக்கு அருகில் புரட்சியை ஆரம்பிக்கச் சிப்பாய்கள் தீர்மானித்திருந்தார்கள். பிரமுகர்கள் பெரும் பாலோரும் அதற்குச் சம்மதித்தனர், 13 - ஆம் தேதியன்று நகர ஜனங்கள் மூன்று விளக்குக் கூண்டுகளை (பலூன்கள்) ஆகாயத்தில் விடவேண்டும் என்றும், சிப்பாய்கள் எல்லோரும் புரட்சியை ஆரம்பிக்கலாம் என்பதற்கு அதுதான் அடையாள மென்றும் தீர்மானிக்கப்பட்டது.

அங்கே மற்ருெரு விஷயமும் தேச பக்தர்களுக்குச் சாதக மாக இருந்தது; அதாவது அச்சமயம் ஆங்கிலேயர்கள் நாகபுரி, ஜபல்புரி முதலிய பிரதேசங்களுக்கு ஆங்கிலத் துருப்புகளை அனுப்பக் கூடிய நிலைமையில் இல்லை. எனினும் வெகு சீக்கிரத் தில் சென்னையிலிருந்து இந்தியத் துருப்புகளைத் தருவித்து, புரட்சித் தீப்பொறியைச் சுலபமாக அணைத்துவிட்டார்கள். ஜபல்புரி மன்னரான சங்கர சிம்மனும் அவருடைய புதல்வரும் சுதந்தர இயக்கத்துக்குப் பேருதவி புரிந்து வந்தார்கள்.

அவர்களை ஆங்கிலேயர்கள் கைது செய்து அவர்களுடைய அரண்மனையைச் சோதனை செய்தபோது, ஒரு பட்டுத் துணியில் ஒரு துண்டுக் காகிதம் கட்டி வைத்திருந்தது. அந்தக் காகி தத்தில் மன்னனின் காலைப் பிரார்த்தனைச் சுலோகம் எழுதி யிருந்தது. அதன் விவரமாவது: "ஹே சண்டி தேவியே! தேசத் துக்கு விரோதமாக அவதூறு கூறுவோரின் வாய்கள் அடைத்துப் போகட்டும்! பாவிகள் ஒழியட்டும்! பகைவர்களின் பூண்டை அழிப்பவளே! மதத்தின் கூக்குரலுக்குச் செவி கொடு! உன் அடியார்களான எங்களைக் காப்பாற்று! ஆங்கிலேயர்களை அறவே ஒழித்துவிடு!'

ஜபல்புரியில் இருந்த 52-ஆவது இந்தியப் படைப் பிரிவைப் புரட்சியில் கலந்துகொள்ளும்படி தூண்டியதாக ராஜா சங்கர சிம்மன்மீதும் அவர் புதல்வர்மீதும் நடந்த வழக்கில் அவர் களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. அதற்கு இணங்க,

அவ்விருவரையும் 1857 செப்டம்பர் மீ 18-ஆம் தேதி பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுக் கொன்றனர். அதைக் கேள்வியுற்றதும் 52 - ஆவது படைப் பிரிவினர் பயந்துகொண்டு அடங்கி ஒடுங்கி விடவில்லை. அதற்கு மாறாக அவர்கள் மிகுந்த ஆத்திரமடைந்து மாக் கிரகர் என்ற ஆங்கில அதிகாரியைக் கொன்றதுடன் சுதந் தரப் போரிலும் தீவிரமாக ஈடுபட்டனர், டில்லி இளவரசரான பிரோஸ் ஷாவின் முயற்சியால் தார் சம்ஸ்தானம், மஹித்புரி, கோரியா முதலிய மற்ற இடங்களிலும் புரட்சி ஆரம்பமாகியது.

இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் விதி, மேலே குறிப்பிட்ட மன்னர்களைக் காட்டிலும் உண்மையில் ஹைதராபாத் நிஜாமின் கையில்தான் இருந்தது. புதிய நிஜாமான அப்ஸூல்-உத்-தௌலா 1857 மே மாதம் சிம்மாசனம் ஏறினார், அப்போது சர் ஸாலர் ஜங் அந்தச் சம்ஸ்தானத்தின் பிரதம மந்திரியாக இருந்து வந்தான். அவன் ஒரு வார்த்தை சொன்னால் போதும், தக்ஷிணம் முழுவதும் பொங்கி எழுந்திருக்கும். ஹைதராபாத் நிஜாம் சுதந்தரப் போரில் கலந்துகொண் டிருந்தால், தக்ஷிணம் முழுவதும் ஒரே மனிதர்போல் அதில் பாய்ந்திருக்கும் என்பதிலும், ஏற்கனவே வடக்கே மூண்ட புரட்சியால் ஆட்டம் கண்டிருந்த ஆங்கில ஆட்சி அறவே அழிந்து போயிருக்கும் என்பதிலும்

ஆங்கிலேயர்களை எதிர்த்து எழவேண்டும் என்று ஸாலர் ஜங்கிற்கு யாரும் உபதேசிக்கவில்லை என்று சொல்ல முடியாது. ஆங்கிலேயர்கள்மீது அவனுக்கு இருந்து வந்த எல்லையற்ற விசுவாசம் காரணமாக அவன் மனத்தில் மதப் பற்றுதல், தேச பக்தி, சுதந்தர உணர்ச்சி முதலியவற்றிற்கு இடமில்லையெனினும், புரட்சியில் சேர்ந்துகொள்ளுமாறு ஹைதராபாத் மக்கள் அவனை மிகவும் வற்புறுத்தி வந்தார்கள். அவ்விதம் இருந்தும் ஸாலர் ஜங்கின் கன்னெஞ்சம் கரையவில்லை. எனவே, அவனைச் சிறிதும் பொருட்படுத்தாமலே ஹைதராபாத் விசுவரூபம் எடுக்கத் தொடங்கியது.

தேசபக்தர்களான மௌல்விகள் விடுத்த பிரகடனங்கள் அவ்வருஷம் ஜூன் மாதம் 12 - ஆம் தேதி நகரச் சுவர்களை அலங்கரித்துக்கொண் டிருந்தன. எங்கு நோக்கினும் புரட்சிப் பிரசுரங்கள் குவியல் குவியலாக விநியோகம் செய்யப்பட்டன. மசூதிகளில் முஸ்லிம்களின் கூட்டங்கள் நடைபெற ஆரம் பித்தன. இந்தியாவிலிருந்து ஆங்கிலேயர்களை விரட்டுவதாக அந்தக் கூட்டங்களில் இருந்தவர்கள் யாவரும் பிரமாணம் செய்த னர். அதை எல்லாம் கண்டும் ஸாலர் ஜங்கின் மனம் உருகவில்லை.

போதாக்குறைக்கு, அவன் சில பிரபலத் தலைவர்களையும் கைது செய்து ஆங்கில அதிகாரிகளிடம் ஒப்பித்துவிட்டான். அதன் விளைவாக ஜூலை மாதம் 17 - ஆம் தேதி மாலை ஹைதரா பாத் நகர் முழுவதும், 'சுதந்தரம், சுதந்தரம்' என்ற கோஷங் களுடன் பொங்கி எழுந்தது. சிறைப்பட்ட தேச பக்தர்களை விடுவிப்பதற்காகவும் பிரிட்டிஷ் ரெஸிடென்ஸியைத் தகர்ப்பதற் காகவும் எல்லோரும் புறப்பட்டனர், மற்றும் நிஜாமின்

சொந்தப் படையைச் சேர்ந்த ரோஹில்லா சிப்பாய்களும், நூற்றுக்கணக்கான ஜனங்களும் சுதந்தர யுத்தத்தை ஆரம்பித்து விட்டார்கள்.

ஸாலர் ஜங் பகிரங்கமாகத் தங்களுடன் சேர்ந்துகொள்ளா விடினும் மற்றச் சம்ஸ்தான அதிபதிகளைப்போல் அந்தரங்கத்தில் தங்கள்மீது அநுதாபத்துடன் இருந்து வருவான் என்று மக்கள் நினைத்தனர். எவ்விதமாயினும் அவன் ஆங்கிலேயரின் பக்கம் சேர்ந்துகொள்ள மாட்டான் என்று நிச்சயமாக நம்பினர். ஆனால் அவன் விஷயமாக அவர்கள் மிகுந்த ஏமாற்றம் அடையும் படியே நேர்ந்தது. ஏனெனில் அவன் ஆங்கிலேயர்களுடன் சேர்ந்துகொண்டதும் அன்றி, தன் சம்ஸ்தானச் சிப்பாய்களைப் படுகொலை செய்ய அவர்களுக்கு உதவியும் புரிந்தான்.

அப்போது நடந்த போரில் புரட்சித் தலைவரான தொரபாஸ் கான் கொல்லப்பட்டதுடன், மௌல்வி அலாவுதீனும் பகைவர் களால் கைது செய்யப்பட்டார். ஹைதராபாத்தில் சுதந்தர இயக்கத்தின் உயிர்நாடியாக இருந்த மௌல்வி அலாவுதீனை அவர்கள் அந்தமானுக்கு அனுப்பிவிட்டதால், அந்தச் சம்ஸ் தானத்தில் சுதந்தர இயக்கம் சிதறுண்டு போயிற்று. அது பற்றி ஆங்கில சரித்திராசிரியர் குறிப்பிட் டிருப்பதாவது: 'மூன்று மாத காலம் வரையில் இந்தியாவின் விதி அப்ஸுல்-உத்-தௌலா, ஸாலர் ஜங் இவ்விருவரின் கையிலும் இருந்தது. எனினும், புரட்சிச் சிப்பாய்களால் ஸ்தாபிக்கப்பட்ட டில்லி முடியரசின் கீழே இருப்பதைக் காட்டிலும் ஆங்கிலேயர்களின் பாதுகாப்பில் இருப்பதே சிறந்தது என்ற அவர்களுடைய புத்தி சாலித்தனமான கொள்கையே இறுதியில் வெற்றி பெற்றது.'

தென் பிரதேசத்தில் மூண்ட புரட்சியை நிஜாம் சிதற அடித்துவிட்டாரெனினும், நிஜாம் சம்ஸ்தானத்துக்கு அருகில் இருந்த சிரபுரி ராஜா. சுதந்தரப்போரில் எல்லாவற்றையும் தியா கம் செய்வதென்று தீர்மானித்தார், மிகுந்த தெய்வ பக்தியுள்ள அந்த ஹிந்து இளைஞரின் இருதயத்தில் தேச பக்தி ததும்பியதில் ஆச்சரியம் எதுவும் இல்லை., அவர் தம் தீர்மானத்திற்கிணங்க அராபியர்கள், ரோஹில்லாக்கள், பட்டாணியர்கள் முதலியோர் அடங்கிய படையொன்றைச் சேகரிக்க ஆரம்பித்தார். நானு சாஹிபின் தூதர்களும் அவரிடம் வந்து பேஷ்வாவின் தலைமை யில் போரிடுமாறு கேட்டுக்கொண்டனர். ராய்ச்சூர், ஆர்க்காடு முதலிய இடங்களைச் சேர்ந்த பிராம்மணர்களும் மௌல்விகளும் சிரபுரி ராஜனை உற்சாகப்படுத்தினர். அவர் சிறிது தயக்கமுற்ற போது மக்கள் அவரைக் கோழை என்றும், ஆண்மை அற்றவர் என்றும் தூற்றியதால், அவர் வெட்கமடைந்து பேஷ்வாவின் பெயரால் புரட்சியை ஆரம்பித்தார்.

உடனே அவரை அடக்குவதற்காக நிஜாமும் ஆங்கிலேயர் களும் படைகளுடன் புறப்படவே, அதைக் கேள்வியுற்ற சிரபுரி ராஜா தம் விதி முடிந்துவிட்டது என்பதை உணர்ந்துகொண் டார். நிஜாம், ஆங்கிலக் கூட்டுப் படை இவைகளை எதிர்த்து நிற்க முடியாததால், அவர் தோல்வியுற்று ஹைதராபாத்திற்குச்

சென்றுவிட்டார். ஸாலர் ஜங்கின் உத்தரவிற்கு இணங்க அவரை நிஜாம் அதிகாரிகள் கைது செய்து ஆங்கிலேயர்களிடம்

அந்த ராஜா குழந்தைப் பருவம் முதல் மெடோஸ் டெய்லர் என்ற ஆங்கிலேயனிடம் நெருங்கிப் பழகியவர். எனவே இருவரும் பரஸ்பரம் மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். அந்த ராஜாவிடமிருந்து புரட்சியைப்பற்றிய ரகசியங்களையும், தலைவர்களின் பெயர்களையும் அறிந்து வருவதற்காக ஆங்கிலேயர்கள் மெடோஸ் டெய்லரைச் சிறைக்கு அனுப்பினார்கள். சிறையில் மரணத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்த ராஜாவுக்குத் தம் அன்பார்ந்த நண்பரான மெடோஸ் டெய்லரைக் கண்டதும் ஏற்பட்ட ஆனந்தம் கொஞ்சமன்று.

ஆனால் புரட்சி இயக்கத்தின் ரகசியங்களையும், அதில் அவர் எவ்வாறு 'சிக்கி'க்கொண்டார் என்பதையும்பற்றி டெய்லர் கேட்டபோது, ராஜா கூறியதாவது: 'என் உயிர் போவதாயினும் அவ் விஷயமாக நான் எதுவும் கூறப்போவதில்லை. ரெஸிடெண்டை நான் சென்று பார்க்க வேண்டும் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். ஒரு வேளை நான் அவரிடம் உயிர்ப்பிச்சை கேட்பேன் என்று அவர் எண்ணியிருக்கலாம், ஆனால் ஒரு போதும் நான் உயிர்ப்பிச்சை கோரப் போவதில்லை. கோழையாகவோ பிறரின் தயவிலோ உயிர் வாழ நான் விரும்பவில்லை. என் சகோதரர்களின் பெயர்களைக் கூறி அவர்களைக் காட்டிக் கொடுக்கும் கொடிய பாவத்துக்கும் நான் ஆளாகப் போவதில்லை.'

டெய்லர் தன் முயற்சி பலியாமல் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்றான் எனினும், மீண்டும் ஒரு தடவை அவன் ராஜாவிடம் வந்து, புரட்சியைப்பற்றிய ரகசியங்களைத் தெரிவித்தால் அவர் நிச்சயமாக மன்னிக்கப்படுவாரென்று அறிவித்தான். அவர் அவன் விருப்பத்துக்கு இணங்க மறுபடியும் மறுத்துவிட்டார். டெய்லரிடம் அவர் கூறியதாவது: 'புரட்சி சம்பந்தமாக நான் கைக்கொண்ட நடவடிக்கைகளைப்பற்றி மாத்திரம் கூறத் தயார்; ஆனால் மற்றத் தலைவர்களுடைய பெயர்களைக் கூறும்படி அதிகாரிகள் வற்புறுத்துவார்களாயின், அதற்கு நான் ஒரு போதும் சம்மதியேன். மரணத்துக்கும் தயாராக இருக்கும் நான் என் தேச சகோதரர்களைக் காட்டிக் கொடுக்க முற்படுவேன் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? இல்லை, இல்லை! அதிகாரிகள் பீரங்கிகளால் என்னைச் சுட்டுக் கொல்லட்டும், தூக்கில் இடட்டும். நான் நர்க வேதனையை அநுபவிக்கவும் அஞ்சவில்லை. அவையெல்லாம், தேச சகோதரர்களைத் துரோகம் செய்வதுபோல் அவ்வளவு பயங்கரமானவை அல்ல!'

'அப்படியாயின் தாங்கள் மரணத்தை வரவேற்கத் தயாராக இருக்க வேண்டியதுதான்' என்றான் டெய்லர்.

அரசர் கம்பீரமாக, 'ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள். என்னைத் தூக்கில் இடாதீர்கள். நான் திருட்டுக் குற்றம் எதுவும்

செய்து விடவில்லை. வீரனைப்போல் பீரங்கி வாயில் வைத்துச் சுடுங்கள். இதுதான் என் கோரிக்கை'' என்றார்.

அவருக்கு விதிக்கப்பட்டிருந்த மரண தண்டனை இறுதியில் டெய்லரின் தலையீடு காரணமாகத் தீவாந்தர சிட்சையாகக் குறைக்கப்பட்டது. ஆனால் சில நாட்கள் கழித்து அந்தமானுக்குப் புறப்படும் தறுவாயில் சிரபுரி ராஜா ஓர் ஆங்கில வார்டரிடமிருந்து துப்பாக்கியை எடுத்து, 'தீவாந்தர சிட்சையைக் காட்டிலும் மரணத்தையே நான் விரும்புகிறேன். என் சிப்பாய்களில் மிகக் கீழ்த்தரமானவன்கூடச் சிறையில் இருக்க விரும்ப மாட்டான். அவ்விதம் இருக்க அவர்களின் ராஜாவான நான் சிறையிலோ தீவாந்தரத்திலோ இருப்பதா!' என்று சொல்லித் தம்மைத் தாமே சுட்டுக்கொண்டு மாண்டார். மெடோஸ் டெய்லர் எழுதியுள்ள 'எனது வாழ்க்கைச் சரித்திரம்' காண்க.

நர்குந்த் அதிபரான பாஸ்கர ராவ் பாபா சாஹிபும் சிரபுரி ராஜாவுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார். சிரபுரி, சுதந்தரப் போரை ஆரம்பித்ததும் பாஸ்கர ராவ் தயங்கிக்கொண்டிருந்துவிட்டு, அந்தப் புரட்சியை ஆங்கிலேயர்கள் அறவே நசுக்கிய பின்புதான் தம் சம்ஸ்தானத்தில் புரட்சியை ஆரம்பித்தார். இவ்விதமாகத் தாமதித்தும் தடுமாற்றத்துடனும் பல இடங்களிலும் புரட்சி ஆரம்பிக்கப் பட்டதால், அது வெற்றி பெற முடியாமற் போயிற்று.

பாபா சாஹிப் சிறந்த அறிவாளி. அபூர்வமான நூல்கள் அடங்கிய பெரும் புத்தகசாலை ஒன்று அவரிடம் இருந்தது. கட்டழகியான அவருடைய மனைவியும் அவரைப் போல் சிறந்த அறிவும் தேச பக்தியும் வாய்க்கப் பெற்றவர். அவருக்குச் சுவீகார உரிமை இல்லை என்று ஆங்கிலேயர்கள் மறுத்ததிலிருந்து அவர், பறங்கியர்களை நாட்டிலிருந்து அறவே ஒழிக்கத் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்வது என்று சங்கல்பம் செய்துகொண்டிருந்தார்.

அவருடைய முயற்சியினாலேயே 1858 மே மாதம் 25 - ஆம் தேதி நர்குந்த் பகிரங்கமாகச் சுதந்தரப் புரட்சியில் ஈடுபட்டு இங்கிலாந்தின் மீது யுத்தப் பிரகடனம் செய்தது! பாபா சாஹிப் அடிமை நுகத்தடியைத் தூக்கி எறிந்துவிட்டார். அந்தச் செய்தியைக் கேள்வியுற்றதும் மான்ஸன் என்ற ஆங்கில அதிகாரி தன் துருப்புகளுடன் படையெடுத்து வந்தான். பாபா சாஹிப், தேர்ந்தெடுக்கப்பட்ட சில குறிப்பிட்ட வீரர்களுடன் சென்று, நர்குந்துக்கு அருகிலுள்ள ஒரு காட்டில் இரவில் திடீரென்று பகைவர்களைத் தாக்கியதில் மான்ஸன் பலியானான்.

இதன் மத்தியில் பாபா சாஹிபின் சகோதரன் சுதந்தரப் போரில் கலந்துகொள்ள மறுத்ததுடன், ஆங்கிலேயர்களின் பக்கத்திலும் சேர்ந்துகொண்டான். மீண்டும் ஏராளமான ஆங்கிலத் துருப்புகள் சென்று பாபா சாஹிபைத் தோற்கடித்தன எனினும் அவர் போர்க்களத்திலிருந்து தப்பிச் சென்றார். மாறுவேடம் பூண்டு மறைந்திருந்த அவரைச் சில நாட்களுக்குப்

பின் ஆங்கிலேயர்கள் பிடித்து, ஜூன் மாதம் 12 - ஆம் தேதி தூக்கில் இட்டார்கள். அப்படி இருந்தும் கட்டழகியும் யுவதியுமான நர்குந்த் ராணி பகைவர்களிடம் சரண் புகவில்லை. தம் மாமியார் முதலிய உறவினர்களுடன் மலப்பிரபா நதியில் விழுந்து வீரசுவர்க்கத்தில் கணவருடன் சேர்ந்துகொண்டார்.

இவர்களைத் தவிர, கோமள துர்க்க அதிபரான பீம ராவ், கான்தேஷ் தலைவர்கள், அவர்களுடைய மனைவிமார் முதலியோர் வில், அம்பு முதலியவைகளுடன் மகாராஷ்டிரத்தில் ஆங்கிலேயர்களை எதிர்க்க ஆரம்பித்தனர். அவர்கள் அகாலத்தில் போரை ஆரம்பித்ததாலும், போதிய முன்னேற்பாடுகளைச் செய்யாததாலும், பரஸ்பரம் ஒத்துழைப்பின்றி அங்கும் இங்குமாகச் சில்லறைப் போர்களை நடத்தியதாலும், ஆங்கிலேயர்களின் அபரிமிதமான ஆயுதங்களின் முன்னிலையில் வெற்றி பெற முடியவில்லை.

நிற்க. பெருமை பொருந்திய அயோத்தியின் பக்கம் கடைசியாக மீண்டும் நமது கண்ணோட்டத்தைச் செலுத்துவோம். மௌல்வி அகமதுஷாவைப் போன்ற இணையற்ற வீரர்களின் பெருமை, அவர்கள் இருந்தாலும் சரி, இறந்தாலும் சரி, அணுவளவும் குன்றுவதில்லை. அவர்களின் வாழ்வைப்போல் வீழ்ச்சியும் விசேஷ மகிமையுடனேதான் விளங்குகின்றது. போர்க்களத்தில் வீழ்ச்சியடையும் மற்றவர்கள் இருக்கலாம். இருதயத்தில் என்றென்றும் குன்றாத தேச பக்தியும், மனத்தில் தூய்மையும், சரீரத்தில் வீர பராக்கிரமமும் பொருந்தியவர்கள், தேசத்தின் சுதந்தரத்தைக் காட்டிலும் உயிர் பெரிதல்ல என்ற புனித எண்ணத்துடன் போர்க்களத்தில் குதிக்கும்போது அவர்களுக்கு மரணம் ஏது! வீரர்கள் போர்க்களத்தில் தங்களுடைய தலைகள் சீவப்பட்ட பின்னருங்கூடச் சிறிது நேரம் தொடர்ந்து போரிட்டிருக்கிறார்கள் என்பது கண்ணாரக் கண்ட உண்மையாகும்! அத்தகையோரின் முண்டம் கண்ட துண்டமாக வெட்டப்பட்ட பின்னருங்கூட, அது ஆவி ரூபமாகப் பகைவர்களை இரவில் தொல்லைப்படுத்தி வருகிறது என்ற நம்பிக்கை நிலவி வருவதும் நிதரிசனமான விஷயமாகும். அத்தகைய நம்பிக்கையில் அற்புதமான தத்துவங்கள் அடங்கி யிருக்கின்றன.

மௌல்வி அகமதுஷா பகைவர்களை எதிர்த்துப் போரிட்டு வருகையில், லார்டு கானிங் பிரகடனம் ஒன்று விடுத்து அதை அயோத்தி முழுவதும் விளம்பரம் செய்தான். அதன் விவரமாவது: 'தாங்களாக வலுவில் ஆயுதங்களை யெல்லாம் கொண்டு வந்து எங்களிடம் கொடுத்துச் சரண் அடைவோர், கலகக்காரர்கள் என்று கருதப்பட மாட்டார்கள். அத்தகையோர் ஏற்கனவே செய்த குற்றங்களுக்காகவும் முற்றும் மன்னிக்கப்படுவார்கள். இப்போது எங்களுக்கு உதவி புரிவோருக்கு அவர்களுடைய நிலங்கள் மீண்டும் திருப்பிக் கொடுக்கப்படும். இந்தியர்களின் கலகத்தை நசுக்கிப் பிரிட்டிஷார் வெற்றி பெற்றுவிட்டார்கள். ஆதலால், இனியும் பிரிட்டிஷாரை எதிர்த்து அர்த்தமற்ற பிடிவாதம் காட்டுவோர் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்படுவர்.'

இந்தியத் தலைவர்களில் பலரும் ஒருவர்பின் ஒருவராகக் கொல்லப்பட்டு வந்ததால், அவ்விதப் பிரகடனத்தின் பயனாக அயோத்தி ஜனங்கள் சமாதானமடைந்து பணிந்துவிடுவார்கள் என்று ஆங்கிலேயர்கள் நினைத்தனர். அயோத்தியின் துர்ப் பாக்கியத்துக்குச் சிகரம் வைத்தாற்போல், பெரியாரான பைஜாபாத் மௌல்வியை, பாவென் என்ற பாவி கொலை செய்துவிட்டான் என்ற செய்தியும் 1858-ஜூன் மாதம் 5-ஆம் தேதி கிடைத்தது. உடனே பழிக்குப் பழி வாங்குவதற்காக அயோத்தி முழுவதும் திரண்டெழுந்தது!

அப்போது அயோத்தி மக்கள் அடுக்கடுக்காக அடைந்த தோல்விகளால் மிகவும் சோர்வடைந்திருந்தனர். சரணடைவோரை மன்னிப்பதாகவும் ஆங்கிலேயர்கள் பிரகடனம் விடுத்தார்கள். அந்நிலையில் மௌல்வியின் மரணம் அவர்களின் சோர்வை முற்றும் அகற்றி, அவர்களுக்கு மகத்தான ஆவேசத்தை உண்டுபண்ணிவிட்டது. உடனே 'வஞ்சம்', 'வஞ்சம்' என்ற கோஷங்களுடன் அயோத்தி முழுவதும் பொங்கி எழுந்தது! அதாவது மௌல்வியின் உடல் மறைந்ததெனினும், அவரது ஆவி பகைவர்களை எதிர்த்துப் போரிடத் தொடங்கியது! பலம் - பலவீனம், வெற்றி - தோல்வி, நம்பிக்கை - அவநம்பிக்கை, வாழ்வு - சாவு முதலிய எவ்விதச் சிந்தனையும் இன்றி ஜனங்கள் எல்லோரும் போர்க்களத்துக்குச் சென்றனர்!

மௌல்வியைக் கொலை செய்ததற்காக வஞ்சம் தீர்க்கும் நோக்கத்துடன் நிஜாம் அலி கான் பிலிபீத் வரையில் படையெடுத்துச் சென்றார். கான் பகதூர் கான் நாலாயிரம் துருப்புகளுடன் ஆங்கிலேயர்களைத் தாக்க முற்பட்டார். பருகாபாத் தேசபக்தர்கள் ஐயாயிரம் பேர்களுடன் புறப்பட்டார்கள். விலாயத் ஷா மூவாயிரம் வீரர்களுடன் போர்க்களம் சென்றார். நானா சாஹிப், பாலா சாஹிப், அலிகான் மிவாதி முதலிய மற்றத் தலைவர்கள் ஐயாயிரம் சிப்பாய்களுடன் ரோஹில்கண்டிலும் அயோத்தியிலும் மகத்தான போரை ஆரம்பித்தார்கள்.

தேசீயப் படைகளின் பிரம்மாண்டமான படையெடுப்பைக் கண்டு துரோகியும் கோழையுமான பாவென், திகிலும் நடுக்கமும் கொண்டான். அவனுடைய பாதுகாப்புக்காக ஆங்கிலேயர்கள் உடனே துருப்புகளை அனுப்பினர். அந்தப் பிரதேசத்தில் தேசபக்தர்களுக்கும் பகைவர்களுக்கும் கோர யுத்தம் நிகழ்ந்தது. கோக்ரா நதிக் கரையில் சவுக் கட்டத்திற்கு அருகே, பேகமும் சர்தார் மமுகானும் தங்களுடைய படைகளின் தலைமைக் காரியாலயத்தை உருவாக்கிக்கொண்டிருந்தார்கள். இவர்களைத் தவிர ராஜாராம் பக்ஷ், பஹாநாத் சிங், சண்டா சிங், குலாப் சிங், கோபால் சிங், ஹநுமந்த சிங் முதலிய பிரபல வீர ஜமீன்தார்களும் தங்களுடைய படைகளுடன் வந்து, மீண்டும் அயோத்தியைக் கைப்பற்றுவதற்காக ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடினர்.

ஏற்கனவே, தார் சம்ஸ்தானத்தில் ஆங்கிலேயர்களுடன் போராடி வந்த பிரபல முஸ்லிம் இளவரசரான பிரோஸ் ஷாவும்

அயோத்திக்கு வந்து சேர்ந்தார். வீரத் தந்தையின் வீரப் புதல்வரும் பிரபல மன்னருமான நரபதி சிம்மனும் அயோத்தியில் ஆங்கிலேயர்களை எதிர்த்து வந்தார். ரூபியா கோட்டையைப் பகைவர்களிடம் சிக்காமல் பாதுகாப்பதற்காக மகா தைரியத்துடன் போராடிய நரபதி சிம்மனின் தந்தையான ஜஸ்ஸா சிங், நானா சாஹிபின் அந்தரங்க நண்பராவார். அவர் பிரம்மாவர்த்தத்தில் நானா சாஹிபுக்குத் துணையாகப் போர் புரிந்தபோது வீர சுவர்க்கம் அடைந்தார். எந்தக் கொள்கைக்காகத் தம் தந்தை உயிர் நீத்தாரோ, அதே கொள்கையை நிறைவேற்றுவதற்காக நரபதி சிம்மன், உண்மையான க்ஷத்திரிய தர்மத்துக்கு இணங்க, தமது வாளை உருவினார். நானா சாஹிப் தோல்வியுற்ற போது ரூபியா கோட்டையில் அவரை வரவேற்று அவருக்கு இடமளித்தவரும் நரபதி சிம்மன்தான்.

இவர்கள் எல்லோரையும்விடச் சக்தியிலும், ஆண்மார்த்த உத்வேகத்திலும், உறுதியிலும், தேச பக்தியிலும் மேம்பட்டவரான ராஜா வேணிமாதவரும் தம் கோட்டையிலிருந்து புறப்பட்டு மிகுந்த தைரியத்துடன் கான்பூர்ச் சாலை வழியாகப் படையெடுத்து லக்ஷ்மணபுரி மீது பாயத் தயாராக இருந்தார். தங்களுக்கு வெற்றி கிடைக்காது என்று தெரிந்த பின்னரும் கூடக் கடமைக்காகவும், நற்பெயருக்கு இழுக்கு ஏற்படக்கூடாது என்பதற்காகவும் மரணத்தை வரவேற்க முற்பட்டவர்களின் ஆண்மையையும் பெருமையையும் என்னவென்று சொல்லுவது!

இனித் தமக்கு வெற்றி கிடைக்காது என்று நிச்சயமாகத் தெரிந்த பின்னருங்கூட, க்ஷத்திரிய வம்சத்தின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக லக்ஷ்மணபுரி மீது படையெடுத்துச் சென்ற வேணிமாதவரின் பெருமையே பெருமை! பறங்கியர்களை மகத்தான முறையில் தாக்கப் போவதாகவும், ஆகையால் நகரிலுள்ள இந்தியர்கள் எல்லோரும் அதை விட்டுச் சென்றுவிட வேண்டுமென்றும் அவர் நகரமெங்கும் விளம்பரங்கள் ஒட்ட ஏற்பாடு செய்தார். வெற்றிப் போதையுடனும் மிக்க ராணுவ பலத்துடனும் இருந்த ஆங்கிலேயர்களும் அவரது தைரியத்தைக் கண்டு பிரமித்தனர். அயோத்தியில் அதற்கு முன் ஓடிய ரத்த வெள்ளம் போதாதென்று மீண்டும் அங்கே ரத்த ஆறு ஓடத் தொடங்கியது.

லக்ஷ்மணபுரிக்கு அருகிலுள்ள நவாப்கஞ்ஜ் என்ற இடத்தில் முகாம் போட்டிருந்த தேசியத் துருப்புகளை, ஜூன் மாதம் 13-ஆம் தேதியன்று ஹோப் கிரான்ட் திடீரென்று தாக்கினான். ஆங்கிலத் துருப்புகளும், இந்தியத் துரோகிகளும் அடங்கிய அந்தப் பிரம்மாண்டமான படையின் முன்னிலையில் சாதாரணமாகத் தேசியப் படை சிதறுண்டு போயிருக்க வேண்டும். ஆனால் மௌல்வி இறந்து ஒரு வாரங்கூடச் செல்லவில்லை அல்லவா? அவர் கொலையுண்டதற்காக வஞ்சம் தீர்க்க முன்வந்துள்ள வீரர்களைத் தடுக்கும் சக்தி எவருக்கு உண்டு!

அந்தப் போரில் தேசீய வீரர்கள் காட்டிய தைரியத்தையும் போர்த்திறனையும் குறித்துத் தளபதி ஹோப் கிரான்ட்கூடத்

தன்னை அறியாமல் புகழ்ந்திருக்கிறான். அவன் எழுதியிருப்பதாவது: 'அன்றைய யுத்தத்தில் புரட்சிக்காரர்கள் வெற்றி பெறவில்லை யெனினும் மிகவும் கடுமையாகத் தாக்கினார்கள் என்பதில் சந்தேகமில்லை. நீண்ட நேரம் வரையில் மிகவும் கஷ்டப்பட்டே அவர்களை முறியடிக்க முடிந்தது. மிகுந்த தைரியசாலிகளான ஜமீன்தார்கள் பின்னணியில் வந்து பீரங்கிப் பிரயோகம் செய்தனர். நான் இந்தியாவில் பல போர்களை நேரில் பார்த்திருக்கிறேன். எத்தனையோ தைரியசாலிகள் 'வெற்றி அல்லது மரணம்' என்ற ஒரே உறுதியுடன் போரிட்டிருக்கிறார்கள். ஆனால் அந்த வீரர்களான ஜமீன்தார்களைப்போல் அதற்கு முன் எவரும் அவ்வளவு துணிச்சலுடன் உக்கிரப்போர் புரிந்ததில்லை. வீச்சரிவாள் புல் பூண்டுகளை அறுத்துத் தள்ளுவதுபோல், எங்களுடைய பீரங்கிகள் அவர்களைச் சிதல் சிதலாக்கி வீழ்த்தியுங்கூட, பாக்கி இருந்தவர்கள் பீரங்கிகளை நோக்கி மேற்கொண்டு முன்வந்தனரே அன்றிப் பின்செல்லவில்லை. இறுதியில் ஒரே ஒரு பீரங்கியைச் சுற்றி மாத்திரம் நூற்றிருபத்தைந்து பிரேதங்கள் கிடந்தன எனில், அவர்களின் துணிச்சலை அறிந்துகொள்ளலாம். மூன்று மணி நேரம் வரையில் மிகவும் உக்கிரமாகப் போர் புரிந்தபின்பே நாங்கள் வெற்றி பெறுவது சாத்தியமாயிற்று.'

அத்தகைய கோர யுத்தம் அயோத்தியைச் சேர்ந்த இரண்டோர் இடங்களில் மாத்திரம் அல்ல, அம் மாகாணம் முழுவதும் நிகழ்ந்தது. தேசபக்தர்களோ பகைவர்களை மாத்திரம் அல்ல, தாய்நாட்டுக்கு விரோதமாக அவர்களுடன் சேர்ந்துகொண்டமான சிங், பாவென்கர் போன்ற துரோகிகளையும் எதிர்த்துப் போரிட நேர்ந்தது. அவ்வீரர்கள் பாவெனை எதிர்த்து நின்றார்கள்; லக்ஷ்மணபுரி மீது படையெடுத்தார்கள்; சுல்தான்புரியில் கோர யுத்தம் செய்தார்கள்; துரோகி மானசிம்மனை அவனது கோட்டையிலிருந்து வெளிவர முடியாமல் தடுத்தார்கள்; ஆங்கிலத் துருப்புகள் வரக்கூடிய பாதைகளையெல்லாம் அடைத்தார்கள்; ஆங்கிலேயர்களின் முகாம்களையெல்லாம் தகர்த்தார்கள்.

இவ்வாறாக, தேசீய வீரர்கள் தங்களுடைய அரிய தியாகத்தினால் அயோத்தியில் ஒவ்வோர் அங்குல பூமியையும் புனிதத் தன்மை வாய்ந்ததாகச் செய்தனர். புரட்சிக்காரர்களை யெல்லாம் தங்களுடைய இரும்பு வளையத்தால் இறுக்கியாகிவிட்டதென்று ஆங்கிலேயர்கள் நினைத்து வருகையில், மௌல்வி கொலையுண்டதால் ஆவேசங் கொண்ட தேசபக்தர்கள் பலம் பொருந்திய அந்த வளையத்தைப் பொடிப்பொடியாக்கி விட்டார்கள். அப்போது அவ் வீரர்கள் புரிந்த அற்புதச் சாகசங்கள் எண்ணில் அடங்கா.

அயோத்தி இவ்விதம் மீண்டும் பயங்கர யுத்தத்தில் ஈடுபட்டது. 1858 அக்டோபர் மாதம் ஆங்கிலப் பிரதம தளபதி நான்கு புறங்களிலிருந்தும் தேசீயப் படைகளை நெருக்கும்படி தன் படைகளுக்கு உத்தரவிட்டான். அவைகளை, நேபாளத்தை நோக்கி விரட்டிச் செல்ல வேண்டும் என்பதும் அவனது கட்டளையாகும்.

வேணிமாதவரின் நகரமான சங்கரபுரியை ஆங்கிலப் படைகள் மூன்று புறங்களிலும் சூழ்ந்துகொண்டன. அப்போது அவரது நிலைமை மிகவும் பலவீனமாக இருந்தது. பகைவர்கள் தம்மைக் காட்டிலும் பன்மடங்கு அதிக பலத்துடன் வந்திருக்கிறார்கள் என்பதை அவர் அறிவார். உருவிய வாளை உறையில் போட அந்நிலைமையிலுங்கூட அவர் விரும்பவில்லை. 'இனி நீர் வெற்றி பெறுவது என்பது முடியாத காரியம். ஆகையால் போரைத் தொடர்ந்து நடத்துவதன் மூலம் வீணாக ரத்தம் சிந்துமேயன்றி யாதொரு பயனும் ஏற்படாது. நீர் சரணமடைந்தால் பூர்ணமாக மன்னிக்கப்படுவதுடன், உங்கள் சொத்துக்களெல்லாம் உம்மிடம் திருப்பிக் கொடுக்கப்படும்' என்று பிரதம தளபதி அவருக்கு ஒரு செய்தி அனுப்பினான்.

வேணிமாதவர் அதற்கு அளித்த பதில் இதுதான்: 'இனி என் கோட்டையை நான் பாதுகாப்பதென்பது அசாத்தியம். எனவே அதை விட்டுவிட்டு நான் செல்லுகிறேன் எனினும், உம்மிடம் ஒருபோதும் சரணடையேன். ஏனெனில், என்னுடைய இந்தத் தேகம் எனது அரசனான நவாபுக்குச் சொந்தமானது. நான் சுயராஜ்யத்துக்குத்தான் அடிமையாக இருப்பேனேயன்றி, வேறு எவருக்கும் எக்காலத்திலும் அடிமையாக இருக்க மாட்டேன்.'

1858 நவம்பர் மாதம் இங்கிலாந்து ராணியின் பிரசித்தி பெற்ற பிரகடனம் இந்தியா முழுவதும் விளம்பரம் செய்யப்பட்டது. நூறு ஆண்டுகளுக்குப் பின் கம்பெனியின் ஆட்சி முடிவடைந்துவிடும் என்ற தீர்க்கதரிசனமும் உண்மையாயிற்று. அதற்கிணங்க, கம்பெனியின் ஆட்சி மறைந்து ராணியின் ஆட்சி ஏற்பட்டது. 'ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட்டவர்கள் ஆயுதங்களைக் கீழே வைத்துவிடும் பட்சத்தில், அவர்களுக்குப் பூரண மன்னிப்பு அளிக்கப்படுவதுடன் அவர்களுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட மாட்டா; அத்தகையோர் விஷயத்தில் விசாரணை எதுவும் நடைபெறாது; ராஜாக்களின் சுவீகார உரிமைகள் அங்கீகரிக்கப்படும்' என்று அறிவிக்கப்பட்டது. மற்றும் மக்களின் மத நம்பிக்கைகளில் அதிகாரிகள் இனி எக்காலத்திலும் தலையிட மாட்டார்கள் என்றும், கொடுத்த வாக்குறுதிகள் நிச்சயமாக நிறைவேற்றப்படும் என்றும் பிரகடன ஷரத்துகள் கூறின.

அதையொட்டிச் சார்லஸ் பால் எழுதியிருப்பதாவது: 'ராணியின் பிரகடனத்துக்குப் பின்னருங்கூட, அயோத்தியில் புரட்சிக்காரர்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தார்கள். அவர்களிடம் ஜனங்கள் மிகுந்த அநுதாபம் காட்டியதால், அவர்களுக்கு உற்சாகமும் புதிய பலமும் உண்டாயின. தேவையான சாப்பாட்டு வசதிகளை மக்கள் செய்து கொடுத்ததன் காரணமாக உணவுச் சாதனங்களைக் கொண்டு செல்ல வேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படவில்லை. மற்றும் தங்களுடைய சாதனங்களைப் பாதுகாத்துக் கொள்ளுவதும் அவர்களுக்கு வெகு சுலபமாகியது. ஏனெனில், அவ் விஷயமாகப் பொது மக்கள் அவர்

களுக்குப் பேருதவி புரிந்தனர். ஆங்கிலத் துருப்புகளின் நடமாட்டங்களை யொட்டி அவர்களுக்குத் தேவையான தகவல்களை அடிக்கடி பொது ஜனங்களே அறிந்து வந்து கூறினர். ஆங்கிலேயர்களின் பட்லர்களும் வேலைக்காரர்களும் புரட்சிக்காரர்களிடம் ரகசியமாக அநுதாபம் கொண்டிருக்கையில், எந்த விஷயத்தைத்தான் அவர்களிடமிருந்து மறைத்து வைக்க முடியும்? நம்மைப்பற்றிய தகவல்கள் நம் குதிரைப் படைகளையும் காட்டிலும் அதிக வேகமாக அவர்களுக்கு எட்டி வந்தன!'

ராணியின் பிரகடனத்தில் கொடுக்கப்பட்ட வாக்குறுதியும், அது போன்ற மற்ற வாக்குறுதிகளும் ஆங்கிலேயர்களால் எவ்வாறு நிறைவேற்றப்பட்டன என்பது இந்திய மகாஜனங்கள் அறிந்த விஷயமே! ஈட்டுப் பத்திரங்களின் மீது சர்க்காருக்குக் கொடுக்கப்பட்டிருந்த லட்சக் கணக்கான தொகைகளை அவர்கள் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டார்கள்.

ராணியின் பிரகடனத்துக்குப் பின்னரும் பொதுவாக ஆங்கிலேயர்களின் மனப்பான்மை எவ்விதம் இருந்தது என்பதைக் கீழ்க்கண்ட உதாரணத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையின் பிரபல ஆசிரியரான ஜான் டிலேன் எழுதியுள்ள சரித்திரத்தில் சில உண்மைகள் வெளியாகியிருக்கின்றன. முதலாவது சுதந்தர யுத்தம் நடந்தபோது டபிள்யூ. எச். ரஸ்ஸெல் இந்தியாவில் அந்தப் பத்திரிகையின் விசேஷ நிருபராக இருந்தார். அவர் லக்ஷ்மணபுரியிலிருந்து எழுதிய கடிதம் ஒன்றில், ஒரு சம்பவம் வெளியாகி யிருக்கிறது. அதாவது அலாகாபாத்தில் இருந்த ஆங்கிலோ-இந்தியர் ஒருவர் பல இந்திய வியாபாரிகளிடமிருந்தும் ஏராளமான தொகை கடன் வாங்கியிருந்தாராம். பின்னர் அவரை ஆங்கிலேயர்கள் விசேஷக் கமிஷனராக நியமிக்கவே, அந்த ஆங்கிலோ-இந்தியர் பதவியேற்றதும் செய்த முதல் காரியம், தனக்குக் கடன் கொடுத்தவர்கள் எல்லோரையும் தூக்கில் இட்டதுதான்! இதுபோல அவ்வமயம் சகிக்க முடியாத, எண்ணிக்கையற்ற அட்டூழியங்கள் நிகழ்ந்தன.

ராணி விடுத்த பிரகடனத்தின் ஷரத்துகள் இவைதாம்: 'கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் ராணுவ இலாகாவிலும் சிவில் இலாகாவிலும் வேலையில் இருக்கும் சகல உத்தியோகஸ்தர்களையும் அந்தப் பதவிகளில் உறுதிப்படுத்துகிறோம். இந்திய சுதேச மன்னர்களுடன் கம்பெனியார் செய்துகொண்டுள்ள எல்லா உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் நாம் அங்கீகரிப்பதுடன், சிறிதும் வழுவின்றி அவற்றை அமலுக்குக் கொண்டு வருவோம். சுதேச மன்னர்களும் அவ்விதமே நடந்துகொள்ள வேண்டும். தற்போது நம்மிடம் இருப்பவைகளைத் தவிர அதிகப் பிரதேசங்களை ஆக்கிரமித்துக்கொள்ள நாம் விரும்பவில்லை. எங்களுடைய உரிமைகளிலும் எங்களுக்குச் சொந்தமான பிரதேசங்களிலும் தலையிட முயல்வோர் தண்டனையடைவர். பிறர் உரிமைகளில் தலையிடவும் நாங்கள் அநுமதிக்க மாட்டோம். எங்களுடையவை போன்றே மன்னர்களின் உரிமைகள், கௌரவம் முதலியவற்

றிற்கும் மரியாதை காட்டுவோம். எங்கள் சொந்தப் பிரஜைகளைப் போல் அவர்களுடைய பிரஜைகளும் க்ஷேமமாகவும் முன்னேற்றத்துடனும் விளங்க வேண்டும் என்பதே எமது விருப்பம். அவ்விதம் விளங்குவதற்கு உள்நாட்டு அமைதியும் நல்ல அரசாங்கமும் மிக அவசியமானவை. எங்கள் மற்றப் பிரஜைகளின் விஷயத்தில் நாம் எவ்வாறு கடமையைச் செய்யக் கட்டுப்படுகிறோமோ, அது போலவே இந்தியப் பிரஜைகளின் விஷயத்திலும் கடமையைச் செய்யக் கட்டுப்பட்டுள்ளோம். ஆண்டவனின் கிருபையால் அந்தக் கடமைகளையெல்லாம் சிறிதும் வழுவின்றியும் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமலும் நிறைவேற்றுவோம். கல்வி, திறமை, யோக்கியப் பொறுப்புள்ளவர்கள் யாராயினும், ஜாதி மத வித்தியாசமின்றி அவர்களுக்கு உத்தியோகங்கள் வழங்கப்படும். பிரிட்டிஷ் பிரஜைகளைக் கொலை செய்வதில் நேரடியாகச் சம்பந்தப்பட்டவர்களைத் தவிர மற்றக் குற்றவாளிகள் யாவரும் மன்னிக்கப்படுவார்கள். சர்க்காருக்கு விரோதமாகப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், அதை விட்டுவிட்டுத் தங்களுடைய வீடுகளுக்குத் திரும்பி வந்து அமைதியாக வாழ்க்கை நடத்துவார்களாயின், அவர்கள் எல்லோரையும் இதன் மூலம் யாதொரு நிபந்தனையும் இன்றி மன்னித்து விடுதலை செய்வதுடன், அவர்கள் செய்துள்ள குற்றங்களையும் மறந்துவிடுவோம்.'

அந்தப் பிரகடனம் விடுவிக்கப்பட்டதன் முக்கிய நோக்கம், புரட்சியை அழித்து விடவேண்டும் என்பதே. ஆனால் அயோத்தி மக்கள் அதை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அதற்கு எதிராக அயோத்தி பேகம் இவ்வாறு ஒரு பதில் பிரகடனம் விடுத்தார்: 'கம்பெனியார் செய்துகொண்டுள்ள உடன்படிக்கைகளும் ஒப்பந்தங்களும் ராணியால் அங்கீகரிக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சூழ்ச்சியை மக்கள் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். ஹிந்துஸ்தானம் முழுவதையும் கம்பெனியார் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டனர். எனவே இந்த ஏற்பாட்டை அங்கீகரிப்பதாயின், அதைக் காட்டிலும் படுமோசமான விஷயம் இருக்க முடியாது. பரதபுரித் தலைவரைத் தங்களுடைய புதல்வன் போல் கருதுவதாகக் கம்பெனியார் கூறிவிட்டுப் பின்னர் அவரது ராஜ்யத்தையே கைப்பற்றிவிட்டார்கள். லண்டனுக்குக் கொண்டு செல்லப்பட்ட லாகூர் அதிபர் பின்பு திரும்பி வரவே இல்லை. நவாப் ஷம்ஸ்-உத்-தீன் கானை ஆங்கிலேயர்கள் தூக்கில் இட்டனர். பேஷ்வாவை அவர்கள் புனாவிலிருந்தும் ஸாதாராவிலிருந்தும் தேசப் பிரஷ்டம் செய்ததுடன், பிடூரில் அவரை ஆயுள் பரியந்தம் சிறையில் இட்டுவிட்டனர். காசி ராஜா ஆக்ராவில் சிறைப்பட்டுள்ளார். பிகார், ஒரிஸ்ஸா, வங்காளம் முதலிய மண்டலாதிபதிகள் இருந்த இடமே தெரியவில்லை. பரம்பரையாக நமக்குச் சொந்தமாக இருந்து வந்த சொத்துக்களையெல்லாம் அவர்கள் கைப்பற்றிக் கொண்டபின், இனி எதையும் ஆக்கிரமித்துக் கொள்ளப் போவதில்லை என்று உறுதி கூறுகிறார்கள். கம்பெனியாரின் ஏற்பாடுகளையெல்லாம் அங்கீகரிப்பதாயின் பழைய நிலைமைக்கும் தற்போதைய நிலைமைக்கும் வேற்றுமை என்ன இருக்கிறது? நமது தேசத்தை அவர்கள் கைப்பற்றிக் கொண்டதுடன், பிரகடனம் விடுத்த பின்னருங்கூட, சமீபத்தில்

ஜனங்கள் சரிவர நடந்துகொள்ளவில்லை என்ற பொய்க் காரணத்தைக் கூறி அவர்களுக்குச் சொந்தமான கோடிக்கணக்கான செல்வத்தையும் கொள்ளையிட்டு விட்டார்கள். பிரதேசங்களை அதிகரித்துக்கொள்ளத் தாம் விரும்பவில்லை என்று கூறியிருக்கும் ராணி, நமக்குச் சொந்தமான தேசத்தை நம்மிடம் ஏன் ஒப்படைக்கவில்லை? கலகம் செய்த படை முழுவதையுமோ, கலகம் செய்த ஜனங்கள் எல்லோரையுமோ, எந்த ராஜாவும் அல்லது ராணியும் தண்டித்ததில்லை, தண்டிக்கவும் முடியாது. அந்த நிலையில் எல்லோரும் மன்னிக்கப்படுவது சகஜம். ஏனெனில், 'தண்டனை' என்ற வார்த்தை இருந்து வரும் வரையில், புரட்சியை அடக்குவது என்பது முடியாத காரியம். 'மர்த்தா க்யா நஹீங் கர்த்தா! (இறக்கத் துணிந்தவன் எதைத்தான் செய்ய மாட்டான்!)' என்பது பிரபலமான பழமொழி அல்லவா?

'கலகக்காரர்களுக்கு இடமளித்தவர்களுக்கோ, கலகக் காரர்களைத் தூண்டி விட்டவர்களுக்கோ உயிர்ப்பிச்சை அளிக்கப்படும் எனினும், அவர்கள் தண்டனையிலிருந்து விடுபட முடியாது; ஆங்கிலேயர்களைப் பலியிட்டவர்களுக்கும் அதற்கு உடந்தையாக இருந்தவர்களுக்கும் சிறிதும் இரக்கம் காட்டப்பட மாட்டாது; ஆனால் அந்தக் குற்றம் செய்தவர்களைத் தவிர மற்ற எல்லோரும் மன்னிக்கப்படுவார்கள் என்றெல்லாம் ராணியின் பிரகடனம் கூறுகிறது. அந்தப் பிரகடனத்தின்படி எவரும் - அவர் குற்றவாளியாயினும் சரி, நிரபராதியாயினும் சரி - தப்ப முடியாது என்பதை மந்தபுத்தி படைத்தவர்கூட உணராதிருக்க முடியாது. அது ஒரு விசித்திரமான தஸ்தாவேஜாகும். அதில் எல்லாம் குறிப்பிட்டிருக்கிறது. ஆனால் ஒன்றுமே குறிப்பிடப்படவில்லை! எனினும் ஒரே ஒரு விஷயம் மாத்திரம் பிரகடனத்தில் மிகவும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது புரட்சியில் சம்பந்தப்பட்ட எவரையும் ஆங்கிலேயர்கள் விடப்போவதில்லை என்பதுதான். நமது படை எந்தக் கிராமத்தில் அல்லது மாகாணத்தில் தங்கியிருந்ததோ, அங்குள்ள ஜனங்கள் தப்ப முடியாது. அந்தப் பிரகடனத்தைப் பார்த்த பின் ஜனங்களைப்பற்றி நமக்கு மிகுந்த கவலை ஏற்பட்டிருக்கிறது. ஏனெனில், ஆங்கிலேயர்களுக்குத் துவேஷ உணர்ச்சி பொங்கிக்கொண்டிருப்பது பிரகடனத்திலிருந்து சிறிதும் சந்தேகமின்றி வெளியாகிறது. இந்த நிலைமையில் நாம் விடுக்கும் கட்டளை இதுதான்: தாங்கள்தாம் கிராமத் தலைவர்கள் என்று ஆங்கிலேயர்களிடம் மடத்தனமாக அறிவித்துக் கொண்டிருப்பவர்கள், 1859 ஜனவரி மாதம் 1-ஆம் தேதிக்கு முன் நமது முகாமில் வந்து ஆஜராக வேண்டும். தவறுகள் செய்திருப்பினும் அவ்வாறு ஆஜராவோர் மன்னிக்கப்படுவர். இந்திய மன்னர்கள் தங்களுடைய பிரஜைகளிடம் என்றும் அன்பும் இரக்கமுமே காட்டி வருகிறார்கள். இது லட்சக்கணக்கானவர்கள் கண்ட உண்மை; கோடிக்கணக்கானவர்கள் காதால் கேட்ட உண்மை. ஆனால் ஆங்கிலேயர்களோ தங்களுக்கு இழைக்கப்பட்ட குற்றத்தை எக்காலத்திலும் மன்னித்ததில்லை. மற்றும் அமைதி நிலைநிறுத்தப்பட்டதும், மக்களின் நிலைமையை அபிவிருத்தி செய்வதற்காக ரஸ்தாக்கள் அமைத்தல், கால்வாய்கள்

'தோண்டுதல் போன்ற மராமத்து வேலைகள் கைக்கொள்ளப் படும் என்று பிரகடனத்தில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. ரஸ்தாக் கள் போடுவது, கால்வாய்கள் தோண்டுவது, இவற்றைத் தவிர இந்தியர்களுக்கு வேறு எவ்வித வேலையும் இல்லை போலும்! இவ்வாறு பிரகடனத்தில் கூறப்பட்டிருப்பதன் அர்த்தத்தை அறிந்துகொள்ளாதவர்களுக்கு எதிர்காலத்தில் நம்பிக்கைக்கே இடமில்லை. ஆகையால் அந்தப் பிரகடனத்தைக் கண்டு எவரும் ஏமாந்து போக வேண்டாம்!'

இவ்வாருக, பேகம் விடுத்த எதிர்ப் பிரகடனம் காரணமாக, பிரிட்டிஷ் ராணியின் பிரகடனத்தை அயோத்தி ஏறெடுத்தும் பார்க்காததுடன், 'நிபந்தனையற்ற விடுதலை' என்ற மாய வலை யிலும் விழவில்லை. எனவே அயோத்தி மக்களின் வாள்கள் முன் போலவே தொடர்ந்து வேலை செய்து வந்தன. அவர்களின் அசுவங்கள் முன்போலவே ஆவேசத்துடன் அமர்க்களம் சென் றன. பிரகடனத்துக்குப் பின்னரும் உதிர நதியின் ஓட்டம் நிற்க வில்லை. தியாகத் தீயில் குதிக்கும் வீரர்களின் எண்ணிக்கையும் குறையவில்லை. விடுதலை அல்லது வீழ்ச்சி என்ற ஒரே உறுதியுடன் அயோத்தி முழுவதும் போரைத் தொடர்ந்தது. பகைவரின் பாதத்தில் வீழ்வதைக் காட்டிலும் கழுத்தில் பாய் வதையே அயோத்தி விரும்பியது. சங்கரபுரி, தண்டிக்கரை, ராய் பரேலி, சீதாபுரம் முதலிய பல இடங்களில் போர் உக்கிர மாகவே நடந்துகொண் டிருந்தது.

1858 ஜூலை மாதத்திலிருந்து நவம்பர் வரையிலும், நவம் பரிலிருந்து டிசம்பர் வரையிலும், பின்னர் 1859 ஏப்ரல் வரை யிலும் அயோத்தி ஜனங்கள் சுதந்தர யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தார்கள். பல திசைகளிலிருந்தும் ஆங்கிலேயர்களால் தாக்கப்பட்ட தேச பக்தர்கள் நேபாளம் வரையிலும் பின்வாங் கினர். நேபாளத்தில் பிரவேசித்த பின்னரும் அவர்களை ஆங்கிலேயர்கள் விடவில்லை. அந்நிலைமையிலும் தேச பக்தர் களுக்கு ஒரே ஒரு நம்பிக்கை இருந்தது. அதாவது நேபாள ராஜா தங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பார் என்பதுதான்.

அவ்வமயம் நேபாளத்தில் பிரவேசித்த தேச பக்தர்களின் தொகை அறுபதினுயிரம் ஆகும். நாஞ சாஹிப், பேகம், அவருடைய இளைய புதல்வர் முதலிய பிரமுகர்களின் தலைமையில் பதினுயிரக்கணக்கான தேசபக்தர்கள் அங்கே சென்றனர். நேபாள மன்னஞன ஜங் பகதூர் அப்போது அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினுன். அதற்கு நாஞ சாஹிப் அனுப்பிய ஆணித்தரமான பதில் மிகவும் முக்கியமாதலால் அதில் ஒரு பகுதியை இங்கே தரு கின்ருேம். அதன் விவரமாவது: 'தங்களுடைய கடிதம் கிடைத் தது. நேபாளத்தின் 'கீர்த்தி'யைப்பற்றி நாங்கள் வெகு தூரத்திலிருந்து கேள்விப்பட்டிருக்கிருேம். இந்தியாவில் இருந்த புராதன மன்னர்களின் சரித்திரத்தை நான் வாசித்திருக்கிறேன்; தற்போதைய மன்னர்களிலும் பலருடைய பெருமையை நேரில் பார்க்கிறேன். ஆனுல் மேன்மை தங்கிய உங்களுடைய நட வடிக்கைகளோ இணையற்றிருக்கின்றன. உங்கள் தேச மக்களை

அறவே வெறுக்கும் ஆங்கிலேயருக்குக்கூட உதவிபுரியத் தாங்கள் தயங்கவில்லை. அவர்கள் உதவி கோரியவுடனே, சிறிதும் தாமதமின்றி அவர்களுக்கு உதவிபுரிய அவசர அவசரமாகப் படைகளை அனுப்பினீர்கள். உங்களுடைய பெருந்தன்மைக்கு எல்லையே இல்லை! அப்படியிருக்க உங்களிடமும் உங்களுடைய பிரஜைகளிடமும் என்றென்றும் நேசப்பான்மையுடன் இருந்து வந்துள்ள பேஷ்வாக்களின் சந்ததிகள் தங்களிடமிருந்து உதவியை எதிர்பார்ப்பது இயற்கைக்கு முரணான விஷயம் அல்ல. உங்கள்மீது எல்லையற்ற துவேஷம் கொண்டுள்ள ஆங்கிலேயர்களுக்குக்கூட நீங்கள் யாதொரு நிபந்தனையும் இன்றி உதவி செய்திருக்கும் போது, உங்களுடைய நண்பர்களும் தேச சகோதரர்களுமான எங்களுக்கு உதவிபுரிய மறுக்க மாட்டீர்கள் என்பதே எங்களுடைய நிச்சயமான நம்பிக்கை. பகைவர்களுக்கு உள்ளே இடமளித்துள்ள தாங்கள், நண்பர்களுக்கு உதவி செய்தாலும் செய்யாவிடினும், அவர்களை வெளியே விரட்ட மாட்டீர்கள் என்பது நிச்சயந்தான்! ஆங்கிலேயர்களால் இந்தியா படும் பாட்டையும் அடைந்துள்ள கஷ்ட நஷ்டங்களையும் பற்றிய கதை எல்லோரும் அறிந்த உண்மையாதலால், அதை மீண்டும் விவரிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆங்கிலேயர்கள் உடன்படிக்கைகளை எவ்வாறு மீறினர்? உறுதிமொழிகளை எவ்வாறு காற்றுவாக்கில் விட்டனர்? இந்திய மன்னர்களின் கிரீடங்களை எவ்வாறு அபகரித்தனர்? இந்திய ராஜ்யங்களை அழித்தபின், எவ்வாறு மதத்தையும் ஒழிக்க முற்பட்டிருக்கிறார்கள்?—இவையெல்லாம் எல்லோரும் அறிந்தவையே. அதனால்தான் எங்களால் சுதந்தர யுத்தம் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வருகிறது. என் சகோதரரான பாலா சாஹிபை நான் தங்களிடம் அனுப்பி யிருக்கிறேன். மற்ற விஷயங்களை யெல்லாம் அவர் தெளிவுபடுத்துவார்.' இந்தக் கடிதம் சார்லஸ் பால் எழுதியுள்ள சரித்திரத்தில் பிரசுரமாகி யிருக்கிறது.

பேஷ்வாவின் ராஜ முத்திரையிட்டு அந்தக் கடிதம் ஜங் பகதூருக்கு அனுப்பப்பெற்றது. அதன்பின் ஜங் பகதூருக்கும் நானா சாஹிபின் பிரதிநிதிக்கும் பல தடவைகளிலும் மந்திராலோசனைகள் நடந்தன. தேசீயத் தலைவர்களை நேரில் பார்த்து வருவதற்காக, கர்னல் பலபத்ர சிங் என்பவனை ஜங் பகதூர் அனுப்பினான். தலைவர்கள் எல்லோரும் ஏகோபித்து அவனிடம் கூறியதாவது: 'தேசத்தின் தர்மத்துக்காகவே நாங்கள் பறங்கியர்களை எதிர்த்துப் போராடி வருகிறோம். எங்களுக்கு உதவிபுரிய வேண்டியது ஓர் இந்தியர் என்ற முறையில் ஜங் பகதூரின் கடமையாகும். அவர் எங்களுக்கு உதவிசெய்ய முற்படுவாராயின், எங்களுக்குத் தலைமை வகிக்கும்படி அவருடைய அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டாலும் அவர்கள் கீழ் நாங்கள் கல்கத்தாமீது படையெடுக்கத் தயாராக இருக்கிறோம். எங்களுக்குத் தேவையான சாதனங்களைப் பற்றி ஜங் பகதூர் கவலைப்பட வேண்டியதில்லை. அவர் அனுப்பும் அதிகாரிகளின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து போரை நடத்துவோம். போரில் நாங்கள் எந்தப் பிரதேசத்தை ஜயித்தாலும் அதை உங்களுடைய கூர்க்கச் சர்க்காரிடம் ஒப்பிப்பதாகவும் உறுதி கூறுகின்றோம். அவ்விதம் உதவி புரிவது அவருக்குச்

சாத்தியம் இல்லாவிடில், அவருடைய ராஜ்யத்தில் எங்களுக்கு இடமாவது அளிக்கட்டும். இங்கே நாங்கள் அவருடைய கட்டளை களுக்குக் கீழ்ப்படிந்து வசிக்கிறோம்.'

அதற்குப் பதிலாக, கூர்க்கப் பிரதிநிதியான கர்னல் பலபத்ர சிங் கூறியதாவது: 'ஆங்கிலேயர்கள் உங்கள்மீது இரக்கம் காட்டி யிருக்கிறார்கள். ஆகையால், நீங்களெல்லோரும் ஆயுதங்களை யெல்லாம் கீழே போட்டுவிட்டு, அவர்களிடம் சரண் அடை யுங்கள். அவ்விதம் செய்வதுதான் சிறந்ததாகும்.'

நானா சாஹிப் கோஷ்டியினர், 'ஆங்கிலேயர்களின் பிரகட னத்தைப்பற்றி நாங்கள் கேள்விப்பட்டோம். ஆயினும் பிரகட னத்திற்கு இணங்க எங்களில் பலர் உயிரிழக்க நேரிடுமாதலால், சுதந்தர யுத்தத்தில் ஈடுபட்ட தங்களுடைய சகாக்களை இழந்து விட்டு மற்றவர்கள் உயிர்வாழ உடன்பட மாட்டார்கள். ஜங் மகாராஜா இந்தியராதலால் அவருடைய படைகளான கூர்க்கர் களை எதிர்த்துப் போராடவும் நாங்கள் விரும்பவில்லை. அவர் சம் மதித்தால் அவரது முன்னிலையில் எங்களுடைய ஆயுதங்களைக் கீழே எறியச் சித்தமாக இருக்கிறோம். எங்களைக் கொலை செய்யும்படி ஜங் பகதூர் உத்தரவிட்டாலும், யாதோர் எதிர்ப்பும் இன்றி அதற்கு நாங்கள் உட்படுகின்றோம். ஆனால் எங்களுடைய சகோதரர்கள் சிலரின்மீது வஞ்சம் தீர்ப்பதற்காகத் துடித்துக் கொண் டிருக்கும் ஆங்கிலேயர்களிடம் நாங்கள் அடிபணிவது என்பது எக்காலத்திலும் முடியாத காரியம்' என்று கூறினர்.

ஜங் பகதூரின் பிரதிநிதிக்கும் தேசீயத் தலைவர்களுக்கும் பல தடவைகளிலும் ஆலோசனை நடந்தது. 'புரட்சிக்காரர்களுக்கு உதவி புரிய வேண்டும் என்பது எனது விருப்பமாயின், லக்ஷ்மண புரியில் அவர்களைப் படுகொலை செய்ய என் துருப்புகளை அனுப்பியிருக்க மாட்டேன்' என்று இறுதியில் ஜங் பகதூர் வெளிப்படையாகக் கூறவே, அவனுடைய துரோகத்தையும், கொடிய இருதயத்தையும் கண்டு தேச பக்தர்கள் திடுக்கிட்டு விட்டார்கள். அத்தகைய அற்பத்தனமான, கொடிய பதிலை அனுப்பியதுடன் அவன் திருப்தியடையவில்லை. நேபாளத்தில் பிரவேசித்த தேச பக்தர்களை வேட்டையாடவும் ஆங்கிலேயர் களுக்குப் பூரண அநுமதி கொடுத்துவிட்டான்.

அதைக் கண்டதும் தேச பக்தர்கள் அடியோடு நம்பிக்கை இழந்து, தங்களுடைய ஆயுதங்களை எல்லாம் ஒளித்து வைக்க ஆரம்பித்தார்கள். பெரும்பாலோரும் மனமுடைந்து அமைதி யாகத் தங்கள் தங்களுடைய வீடுகளுக்குச் செல்ல முற்பட்டனர். அவர்களை யெல்லாம் உற்சாகப்படுத்தும் நோக்கத்துடன், ஆங்கிலேயர்கள் அவர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் கொடுக்க வில்லை. சில வீரர்கள் மாத்திரம், பாரத புண்ணிய பூமியில் பாவிகளான பறங்கியர்களின் ஆட்சியைக் காணச் சகியாமல், காடு களுக்குச் சென்றுவிட்டார்கள். வீடுகளுக்குச் சென்று அடிமை களாக வாழ அவர்கள் விரும்பவில்லை. காடுகளில் பட்டினி கிடந்து இறக்க நேரும் என்ற பயங்கரமான உண்மையை அவர் கள் அறிந்திருந்தும், அதைப் பொருட்படுத்தவில்லை.

பிரிட்டிஷ் தளபதியான ஹோப் கிராண்டிற்கு அவ்வமயம் நாஞ சாஹிப் ஒரு கடிதம் எழுதினார். அப்போதுங்கூட அவ் வீரர் சரணடைவது என்ற பேச்சையே எடுக்கவில்லை. இந்தியா வில் ஆங்கிலேயர்களின் அநீதியான ஆட்சியை வன்மையாகக் கண்டித்திருந்தாரேயன்றி மன்னிப்புக் கோரவில்லை. அதில் நாஞ சாஹிப் குறிப்பிட்டிருந்ததாவது: '....இந்தியாவை ஆக்கிர மித்துக் கொள்ளவும், நாங்களெல்லோரும் சட்ட விரோதிகள் என்று கூறவும் உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? எங்கள் தாய்நாடான இந்தியாவை ஆட்சிசெய்ய அந்நியர்களான உங் களுக்கு யார் அதிகாரம் அளித்தனர்? என்ன அக்கிரமம்? பறங்கியர்களான நீங்கள் மன்னர்கள்! இந்நாட்டில் பிறந்த நாங் கள் உங்களுக்கு அடிமைகளா!'

மனத்தை உருக்கும் இவைதாம் நாஞ சாஹிபின் இறுதி வார்த்தைகள் என்று சரித்திரம் குறிப்பிடுகின்றது. இல்லை, அவை வெறும் வார்த்தைகள் அல்ல; பேஷ்வா சிம்மாசனத்தின் பெருமூச்சாகும்! சிவாஜியின் கடைசிச் சந்ததியான அப்பெரியார், இணையற்ற அந்த மகாராஷ்டிர வீரரின் பெருமையை நிலை நிறுத்திவிட்டார். பாஜிராவின் கோழைத்தனத்தினால் ஏற்பட்ட களங்கத்தை நாஞ சாஹிப் முற்றும் அகற்றிவிட்டார். பேஷ் வாக்களின் சிம்மாசனம், பண்டைய சித்தூர் ராஜபுத்திரர் களைப்போல் தியாக அக்கினியில் எரிந்து மறைந்தது.

அந்தச் சிம்மாசனத்தினுடைய கடைசிக் கூக்குரல் இது தான்: 'இந்தியாவில் அந்நியர்கள் அரசர்கள்! இந்தியர்கள் திருடர்களா?' ஆம், எல்லோராலும் வணங்கப்பட வேண்டிய தேசீய வீரர்கள், திருடர்களைப்போல் காடுகளில் போய் ஒளிந்துகொள்ள நேர்ந்ததல்லவா?

அந்தக் கடிதம் எழுதியபின் நாஞ சாஹிபுக்கு என்ன நேர்ந் தது என்பது யாருக்கும் தெரியாது. சரித்திரமும் அதைக் குறிப்பிடவில்லை. காட்டிற்குச் சென்ற பாலா சாஹிப், தாமாக வலுவில் ஏற்றுக்கொண்ட வறுமையினாலும் துன்பத்தினாலும் பூவுலகை நீத்தார். பேகமும் அவருடைய இளைய புதல்வரும் மாத்திரம் பின்னர் ஜங் பகதூரால் புகலிடம் அளிக்கப் பட்டனர். சிறந்த தியாகியான ஜாரன்சிங் இறுதியாக நடந்த சுதந்தரப் போரில் பலியானார்.

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தம் அயோத்தியில் இவ்வாறு முடிவுற்றது. உலகிலேயே வேறு எந்த நாடும் தன் சுதந்தரத்துக்காக இவ்வளவு தைரியத்துடனும் பிடிவாதத் துடனும் யுத்தம் செய்ததில்லை.

அதைக் குறித்துச் சரித்திராசிரியரான மாலிஸன் எழுதி யிருப்பதாவது: 'தங்களுடைய சகோதரர்களான சிப்பாய்கள் ஆரம்பித்த சுதந்தர யுத்தத்தில் அயோத்தி மக்களும் கலந்து கொண்டனர். அவர்கள் எவ்வளவு பிடிவாதத்துடன் போரை நடத்தி வந்தார்கள் என்பது இந்தப் பக்கங்களில் குறிப்பிடப்பட் டிருக்கிறது. அயோத்தியைப்போல் இந்தியாவின் வேறு எந்தப்

பாகமும் அவ்வளவு உறுதியுடன் நீண்ட காலம் போரிடவில்லை. 1856-ஆம் வருஷம் ஜனங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி, அவர்களின் மனத்தை இரும்பைக் காட்டிலும் கடினமாகச் செய்துவிட்டது. இறுதியாக லார்டு கிளைவ் அயோத்தி முழுவதையும் ஆக்கிரமித்துக்கொண்டு, புரட்சிக்காரர்களை யெல்லாம் நேபாளத்திலுள்ள காடுகளுக்கு விரட்டியபோது, அவர்கள் சரண் அடைவதைக் காட்டிலும் பட்டினி கிடந்து இறப்பதையே வரவேற்றனர்! விவசாயிகள், தாலுக்தார்கள், நிலச்சுவான் தார்கள், வர்த்தகர்கள் முதலிய அனைவரும் நீண்டகாலப் போராட்டத்துக்குப் பின்புதான் தோல்வியை ஒப்புக் கொண்டார்கள்!'

## 34

## மாயப் புலி

**1858** ஜூன் மாதம் 20-ஆம் தேதி குவாலியர் மைதானத்தில் நடந்த உக்கிரமான யுத்தத்தில் ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய் வீர சுவர்க்கமடைந்தார். ஆங்கிலேயர்களின் பரம விரோதியான அவ்வீர திலகம் மறைந்தார் எனினும், யுத்த தந்திரத்தில் மகா சாமர்த்தியசாலியான மற்றொரு விரோதி அவர்களிடம் சிக்காமல் தப்பித்துக் கொண்டார். 20-ஆம் தேதி குவாலியரிலிருந்து அவர் எங்கே சென்றார்?

அந்த வீரர் மாயமாய் மறைந்த சில நாட்களுக்கெல்லாம் மத்திய இந்தியாவிலுள்ள காடுகள், நகரங்கள், குகைகள், கிராமங்கள், மலைகள், நதிகள் முதலிய சகல இடங்களிலும் 'தாதியா டோபே, தாதியா டோபே' என்ற கோஷங்களும் பயங்கரமான போர் முழக்கமும் கேட்கத் தொடங்கின. கொடிய வேடுவர்களால் துரத்தப்பட்ட மகாராஷ்டிரப் புலி மத்திய இந்தியாவிலுள்ள காட்டுக்குச் சென்று அங்கே வாசம் செய்யலாயிற்று.

ராணி லக்ஷ்மி பாயின் மரணம் காரணமாகத் தாதியா டோபே தம் வலது கையை இழந்தார் என்றே சொல்ல வேண்டும். மற்றும் தேச பக்தர்கள் அடைந்த பல்வேறு தோல்விகளால் சுதந்தர இயக்கமும் நசுக்குண்டது. நானா சாஹிபைப்பற்றியோ எதுவும் தெரியவில்லை. இந்தியர்களின் உதவியைக் கொண்டே ஆங்கிலேயர்கள் இந்தியாவில் யாரும் அசைக்க முடியாதவாறு தங்களுடைய நிலைமையைப் பலப் படுத்திக் கொண்டு விட்டார்கள்.

தாதியாவிடமோ குறிப்பிடத் தகுந்த படை எதுவும் இல்லை, துப்பாக்கிகள் இல்லை, சாதனங்கள் இல்லை. இவற்றையெல்லாம் எங்கிருந்தாவது பெறலாம் என்ற நம்பிக்கையும்

இல்லை! அந்த நிலையிலும் அஞ்சாத நெஞ்சம் படைத்த தாதியா ஆங்கிலேயர்களுக்குத் தொல்லை விளைவித்து வர முற்பட்டார். 'சுதந்தரக் கொடியை அந்நியர்களின் பாதத்தில் வைத்துச் சரண் அடைவதா? ஒரு காலத்திலும் இல்லை' என்று கர்ஜித்தார். பகைவர்கள் தங்களுடைய ராக்ஷச பலத்தால் ஒருவேளை சுதந்தரக் கொடியை முறித்து எறியலாமேயன்றி, தாதியாவைப் போன்ற வீரர்கள் இருக்கும் வரையில் அதைத் தலை குனியும்படி செய்ய முடியாது அல்லவா?

குவாலியரிலும் ஜௌரா அலிபூரிலும் தோல்வியுற்ற பின், தாதியா டோபேயும் ராவ் சாஹிப் பேஷ்வாவும் மீதியிருந்த படைகளுடன் சரமதுரை என்ற இடத்துக்குச் சென்று, மூன்று முக்கிய முறைகளை அடிப்படையாகக் கொண்டு எதிர்கால நடவடிக்கைகளில் ஈடுபடுவது என்று முடிவு செய்தனர். முதலாவதாக, ஆங்கிலப் படையுடன் எத்தகைய போரிலும் சிக்கிக் கொள்ளாமல் இருக்க முயல வேண்டும். இரண்டாவதாக, ஆங்கிலேயர்களின் தீவிரமான கண்காணிப்பு இல்லாத பிரதேசங்களில் திடீர்த் தாக்குதலைக் கைகொள்ள வேண்டும். உணவுச் சாதனங்களும் சிறந்த ஆயுதங்களும் இருந்தாலன்றி, மேலே குறிப்பிடப்பட்ட இரு முறைகளையும் நிறைவேற்ற முடியாது. ஆகையால், தாங்கள் செல்லும் இடங்களில் இந்தியச் சம்ஸ்தான மன்னர்களிடமிருந்து உணவுச் சாதனங்கள், பணம், ஆயுதங்கள் முதலியவற்றைப் பெற வேண்டும் என்பதே தாதியாவின் மூன்றாவது முறையாகும்.

வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் ஒவ்வோர் அடிக்கும் ஒரு சம்ஸ்தானம் இருக்கிறது. அந்தச் சம்ஸ்தானங்கள் பல வருஷங்களாக ஏராளமான உணவுச் சாதனங்களையும் ஆயுதங்களையும் சேகரித்து வைத்திருந்தன. அத்தகைய சாதனங்களைக் கொண்டு தேசத்துக்குப் பாதுகாப்பளிக்க வேண்டியது மன்னர்களின் கடமையாகும். ஆனால் 1857-ஆம் வருஷம் சம்ஸ்தான மன்னர்கள் எல்லோரும் தங்களுடைய தேசத்தின் தேவைகளையும், பிரஜைகளின் விண்ணப்பங்களையும் வேண்டுகோள்களையும் முற்றும் அலட்சியம் செய்துவிட்டார்கள். தங்களுடைய சொந்த நலன்களுக்கு எங்கே ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்ற கெட்ட எண்ணம் கொண்டே அவர்கள் தேசபக்தர்களுடன் பகிரங்கமாகச் சேர விரும்பவில்லை.

சுயநலக்காரர்களான அவர்கள் யாதொரு பயனும் இன்றி ஏராளமான உணவுச் சாதனங்களைச் சேகரித்து வைத்திருக்கையில் தேசீயப் படைகள் பட்டினி கிடப்பதா? அத்தகைய படு மோசமான நிலைமைக்குப் பரிகாரமாக, தாதியா டோபேயும் பாலா சாஹிபும் ஓர் அற்புத ஏற்பாடு செய்தனர். சுயநல மன்னர்களிடமிருந்து அந்தச் சாதனங்களைக் கைப்பற்றி, தேசத்தின் தற்காப்புக்கு உபயோகப்படுத்திக் கொள்ளுவதுதான் அவர்கள் செய்த ஏற்பாடாகும். அதன் பயனாகச் சுதந்தரப் போரை நடத்துவதற்குப் போதிய தொகையும், உணவுச் சாதனங்களும், ஆயுதங்களும் கிடைத்தவுடன், தேசீய ராணுவத்தைப்

பராமரிக்கும் பணுவை முற்றும் ஜனங்கள் ஏற்றுக்கொள்ளும் படியும் நேரவில்லை.

பலவீனர்களான அம் மன்னர்களிடம் அதிகப் படைகளும் இல்லை. சிறிய தொகையினரான அந்தச் சிப்பாய்களும் பெரும் பாலும் தேச பக்தர்களிடம் அநுதாபமே காட்டி வந்தனர். எனவே சுதேச மன்னர்களிடமிருந்து தேவையான சாதனங் களைக் கைப்பற்றுவதில் கஷ்டம் ஏற்படவில்லை. அடிக்கொரு சம்ஸ்தானம் இருப்பதால், தேசீயப் படைகள் ஏராளமான சாதனங்களைத் தூக்கிச் செல்ல வேண்டிய அவசியமும்

இத்தகைய சௌகரியங்களையெல்லாம் எண்ணியே தாதியா அந்தத் திட்டத்தைக் கைக்கொண்டார். பல மன்னர் களும் ஆட்சேபம் எதுவுமின்றி அவ்விதம் உதவி செய்தனர். உதவி செய்ய மறுத்தவர்களிடமிருந்து அவை பலாத்காரமாகக் கைப்பற்றப்பட்டன என்பதைத் தவிர, அவர்களுக்குத் தேச பக்தர்கள் வேறு எவ்விதக் கஷ்டமும் கொடுக்கவில்லை.

அத்தகைய படையெடுப்புகளை நிறுத்தாமல் தொடர்ந்து உற்ற சந்தர்ப்பம் கிடைத்ததும் நர்மதையைக் கடந்து தம் முடைய காட்டுக்குச் சென்றுவிட வேண்டும் என்பதே மகா ராஷ்டிரப் புலியின் நோக்கமாகும். அவரால் நர்மதையைக் கடக்க முடியாமலும், பார்க்கக்கூட முடியாமலும் தடுத்துவிட வேண்டும் என்பதே ஆங்கிலேயர்களின் உத்தேசம். இவ்விதம் இரு சாராருக்கும் பந்தயம் ஆரம்பமாயிற்று!

தாதியாவின் கண்ணோட்டம் முதலில் பரதபுரி மீது சென்றது. அங்கே பலம் பொருந்திய ஆங்கிலப் படை வந்திருக் கிறது என்று கேள்வியுற்றதும், அவர் திடீரென்று ஜயபுரிக் குப் புறப்பட்டார். ஜயபுரி தர்பாரில், தாதியாவின் கட்சியைச் சேர்ந்த பலர் இருந்தனர். ஜயபுரிச் சிப்பாய்களும் ஜனங்களும் அவருடைய பக்கமே இருந்தார்கள். எனவே தாதியா அங்கே தூதர்களை அனுப்பி, ஆயத்தமாக இருக்கும்படி எல்லோ ருக்கும் அறிவிக்கச் செய்தார். அந்தத் தகவல் ஆங்கிலேயர் களுக்கு உடனே தெரிந்துவிட்டதால், ஆங்கிலப் படை சிறிதும் தாமதமின்றி நாஸிராபாத்திலிருந்து ஜயபுரிக்குப் படையெடுத்து வந்தது.

ஜயபுரிமீது பாயும் திட்டம் இவ்வாறு சிதைவுறவே, ாதியா உடனே தமது கவனத்தைத் தெற்குப் பிரதேசத்தில் செலுத்தினர். ஆனல் அவரை அங்கும் செல்ல விடாமல் கர்னல் ஹோம்ஸும் அவன் படைகளும் துரத்திக்கொண்டு வந்தனர். தாதியா திடீரென்று அவர்களை ஏமாற்றி, டாங்க் சம்ஸ்தானத்தை நோக்கிச் செல்ல முற்பட்டார். அந்தச் சம்ஸ் தான நவாபோ நகரிலுள்ள பாதுகாப்பான ஓரிடத்தில் ஒளிந்து கொண்டு, அவரை எதிர்ப்பதற்காக நான்கு பீரங்கிகளுடன் சில குறிப்பிட்ட சிப்பாய்களை அனுப்பினன். ஆனல் டாங்க் சம்ஸ்தானச் சிப்பாய்கள் போர்க்களத்துக்கு வந்ததும், போரை



டில்லி அரசர் அரண்மனை



ஹுமாயூனின் கல்லறை (பகதூர் ஷா கடைசியாகச் சரணடைந்த இடம்)

ஆரம்பிக்காமல் தாதியாவின் படைகளைச் சகோதர வாஞ்சை யுடன் ஆலிங்கனம் செய்து, அவர்களுடன் சேர்ந்துகொண் டார்கள். இவ்வாறு எதிர்பாராத விதமாக அவருக்குப் புதிய துருப்புகளும் பீரங்கிகளும் சாதனங்களும் கிடைத்தன. எனவே அவர் தென் பிரதேசத்தை நோக்கி மீண்டும் படை யெடுக்கலானார்.

இந்திரகிரி வரையில் சென்றதும் தம் படைகள் ஓய் வெடுத்துக் கொள்ளுவதற்காகத் தாதியா அங்கே தங்கினார். அப்போது அவருக்குப் பின்புறமாக ஹோம்ஸும், பாரிசத்தில் ராஜபுதனத்திலிருந்து ராபர்ட்ஸும் படைகளுடன் வந்துகொண் டிருந்தனர். எதிரே இருந்த சம்பல் நதியில் பெருமழை காரண மாக வெள்ளம். இரு புறங்களிலும் பகைவர்கள், எதிரே கடக்க முடியாத நதி! எனவே தாதியா வடகிழக்கேயுள்ள பூந்தியை நோக்கிப் புறப்பட்டு, வெகு தந்திரமாக நீமச் - நாஸிராபாத் மாகாணம் வரையில் வந்தார்.

அப்போது அம் மாகாணத்திலும் சுதந்தர எழுச்சி ஏற் பட்டிருந்தது. தம் படைகள் ஓய்வெடுத்துக் கொள்ளுவதற் காக அவர் பில்வாடா என்ற கிராமத்துக்கு அருகில் முகாம் போட்டார். அதைக் கேள்வியுற்ற ராபர்ட்ஸ் அங்கே சென்று 1858 ஆகஸ்டு மாதம் 7-ஆம் தேதி தாதியாவின் படைகளைத் தாக்கினான். அவர் பகல் முழுவதும் யுத்தம் செய்து அவனை முன்னேற விடாமல் தடுத்து, இரவில் தம்முடைய படைகளை யும் பீரங்கிகளையும் பத்திரமாகக் கோத்ரா நகர் கொண்டு போய்ச் சேர்த்தார்.

உதயபுரியைச் சேர்ந்த அந்நகரில் தமது படை ஓய் வெடுத்துக்கொண் டிருக்கையில், சமீபத்திலுள்ள பிரபல க்ஷேத்திரமான நாதத்வாராவில் இருக்கும் கிருஷ்ணன் கோவிலில் பிரார்த்தனை செய்வதற்காக அவர் சென்றிருந்தார். அவர் முகாமுக்குத் திரும்பி வந்தபோது நடுநிசி இருக்கும். அவர் களை ஆங்கிலப் படை ஒன்று விரட்டிக்கொண்டு வருவதாக அப்போது ஒரு செய்தி கிடைத்தது. உடனே முகாமைக் கலைத்துக்கொண்டு புறப்படும்படி தாதியா தம் சிப்பாய்களுக்கு உத்தரவிட்டார். ஆனால் காலாட் படையினர் மிகவும் களைத் திருந்ததால், 'நாளைக் காலை வரையில் எங்களால் ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது. வேண்டுமாயின் குதிரைப் படைகள் முன் செல்லட்டும்' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டனர்.

மறுநாள், அதாவது 14-ஆம் தேதி காலையில் தாதியாவின் படைகளுக்கும் அங்கே வந்த ஆங்கிலப் படைகளுக்கும் நடந்த போரில் தேசியப் படைகள் சிதறுண்டதால், அவை தங்களுடைய பீரங்கிகளையெல்லாம் போர்க்களத் திலேயே விட்டுவிட்டுப் பின்வாங்கிப் பதினைந்து மைல் தூரத் திற்கு அப்பால் சென்றன. மீண்டும் தாதியா பீரங்கிகள் இன்றியும் உணவுச் சாதனங்கள் இன்றியும் கஷ்டத்திற்கு உள்ளானார். அப்போது அவர்களை ஆங்கிலத் துருப்புகள் விரட்டி

யும் சென்றன. தாதியா பின்புறமாக வரும் பகைவர்களிடம் சிக்கிக்கொள்ளாமல் தவிர்ப்பதற்காக, சம்பலை நோக்கிப் பாய்ந்து செல்ல முற்பட்டார்.

அவரைப் பின்புறத்திலும் பாரிசத்திலும் மாத்திரம் பகைவர்கள் துரத்திக்கொண்டு வரவில்லை; அவருக்கு எதிராகச் சம்பல் நதிக்கரையிலும் ஓர் ஆங்கிலத் தளபதி படைகளுடன் நின்றுகொண்டிருந்தான். அப்படி இருந்தும் தாதியா வெகு தந்திரமாக அந்தத் தளபதியை ஏமாற்றிவிட்டுச் சிறிது தூரத்துக்கு அப்பால் தம் படைகளுடன் அந் நதியைக் கடந்து சென்றுவிட்டார். தாதியாவின் படைகளுக்கும் ஆங்கிலப் படைகளுக்கும் நடுவே சம்பல் நதியைத் தவிர வேறு எவ்விதத் தடையும் இல்லை. பீரங்கிகளோ, உணவுச் சாதனங்களோ, பணமோ, எதுவும் இல்லாமலிருந்த தாதியா அந்த நிலைமையில் நர்மதையைத் தாண்டக் கூடுமென்று கனவிலும் கருதுவதற்கில்லை. நதியைத் தாண்டிய தாதியா நேராக ஜால்ரா பட்டணத்துக்குச் சென்றார். அந்தச் சம்ஸ்தான அதிபதி ஆங்கில விசுவாசியானதால், தாதியாவைக் கண்டதும் பீரங்கிகளுடனும் துருப்புகளுடனும் அவரை எதிர்க்க வந்தான். ஆனால் தாதியாவைப் பார்த்ததும் அந்தச் சம்ஸ்தானச் சிப்பாய்கள் அவருக்கு மரியாதை செய்து அவருடன் சேர்ந்துகொண்டனர். அவருக்கு ஜால்ரா பட்டண சம்ஸ்தானத்திலிருந்து குதிரைகள், வண்டிகள், ஏராளமான உணவுச் சாதனங்கள் முதலியவை கிடைத்தன. ஒரு பீரங்கிகூட இல்லாமல் அங்கே சென்ற அவருக்கு முப்பத்திரண்டு பீரங்கிகள் கிடைத்தன.

அபராதமாக இருபத்திரண்டு லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்று ராவ் சாஹிப் பேஷ்வா அந்தச் சம்ஸ்தான ராஜாவுக்கு உத்தரவிட்டார். தன்மீது இரக்கம் காட்டும்படி அந்த ராஜா மன்றாடியதால் இறுதியில் அபராதத் தொகையைப் பதினைந்து லட்சமாகக் குறைத்தனர். அங்கே தாதியா ஐந்து நாட்கள் வரையில் தங்கியிருந்து, ஒவ்வொரு குதிரை வீரருக்கும் மாதம் முப்பது ரூபாய் வீதமும், காலாட் படையைச் சேர்ந்த ஒவ்வொரு சிப்பாய்க்கும் பன்னிரண்டு ரூபாய் வீதமும் சம்பளம் பகிர்ந்தளித்தார். பின்னர் ராவ் சாஹிப், தாதியா, பாந்தா நவாப் மூவரும் சேர்ந்து எதிர்கால நடவடிக்கைகள் பற்றி யோசிக்கலாயினர்.

நர்மதையைக் கடந்து தக்ஷிணத்துக்குச் செல்ல வேண்டும் என்பதே அவர்களின் முக்கிய நோக்கமாகும். ஆனால் அவர்களைத் தடுக்க ஆங்கிலேயர்கள் நான்கு புறங்களிலும் வலை வீசியிருந்தனர். ஒவ்வொரு பாதையையும் ஆங்கிலப் படைகள் மிகவும் ஜாக்கிரதையாகக் காவல் புரிந்துகொண்டிருந்தன. ஆயினும் அப்போது தாதியாவிடம் முப்பத்திரண்டு பீரங்கிகளும், புதிய படையும், புதிய உணவுச் சாதனங்களும், ஏராளமான தொகையும் இருந்ததால், சுதந்தரப் போரைத் தீவிரமாகத் தொடர்ந்து நடத்துவதில் எவ்விதத் தயக்கமும் இருப்பதற்கில்லை. 'அடுத்தபடியாக நாம் இந்தூருக்குச் செல்ல வேண்

டும்' என்று அவர் தம் சகாக்களுக்கு ரகசியமாகக் கூறினர்.

அவ்விதம் முடிவு செய்த தாதியாவின் தைரியத்துக்கும் ஊகத்திற்கும் உவமையே இல்லை. நிர்க்கதியான நிலைமையிலும் நினைத்த மாத்திரத்தில் புதிய சேனைகளையும் புதிய கிரீடங்களையும் புதிய ராஜ்யங்களையும் படைக்கும் வல்லமை பொருந்திய தாதியாவுக்கு இந்தூர் மீது படையெடுத்துச் செல்லுவது பிரமாதமான காரியம் அல்ல. தம் எஜமானரான பேஷ்வாவுக்கு உதவி புரிய வேண்டியது இந்தூர் மண்டலாதிபதி ஹோல்கரின் கடமை அல்லவா? அவர் தாமாக வலுவில் உதவி புரியச் சம்மதிக்காவிடில், வற்புறுத்தி அவரிடமிருந்து உதவி பெறும் ஆற்றல் பேஷ்வாவுக்கு உண்டு. மற்றும் தாதியாவை ஆதரிப்பதாக இந்தூர்ப் படைகள் ரகசியமாகப் பிரமாணமும் எடுத்துக் கொண்டிருந்தன. இந்தூர் தர்பாரைச் சேர்ந்தவர்கள்கூட அவருக்கு அந்தரங்கமாக அழைப்புக் கடிதங்கள் அனுப்பிக் கொண்டிருந்தனர். எனவே தாதியா தமது நாடகத்தைத் தொடரலானர். அவர் ஜால்ரா பட்டணத்திலிருந்து புறப்பட்டுத் தெற்கேயுள்ள மால்வாவுக்குச் சென்று, யாரும் எதிர்பாராத விதமாகத் திடீரென்று ராய்கடில் தோன்றினர்.

அப்போது ராபர்ட்ஸ், ஹோம்ஸ், பார்க், மைக்கேல், ஹோப், லாக்கார்ட் முதலிய தளபதிகள் தங்களுடைய படைகளுடன் பல்வேறு திசைகளிலிருந்தும் தாதியாவை விரட்டி வந்தனர். அவர் இந்தூரை நோக்கிப் படையெடுத்துச் செல்லுகிறுர் என்பதைக் கேட்டதும், அவர்களுக்கு உண்டான திகில் கொஞ்சமன்று. ஒருவன் மால் பிரதேசத்திலிருந்து புறப்பட்டான்; மற்றொருவன் நளகோராவை நோக்கி ஓடினன்; ராய்கடுக்குச் செல்வதா வேண்டாமா என்று மூன்ருவது பேர்வழி தயங்கினன்.

ஜெனரல் மைக்கேல் தன் படைகளுடன் மிக மிகக் கஷ்டப்பட்டு ஒரு குன்றின்மீது ஏறியபோது, தாதியா மற்றொரு பக்கமாகக் கீழே இறங்குவதைப் பார்த்தான். எனினும், அவனுடைய படைகள் மிகவும் களைத்துப் போயிருந்தன ஆதலின், மேற்கொண்டு முன்செல்ல முடியவில்லை. அந்தப் படைகள் ஓய்வெடுத்துக்கொண்டு புறப்படுவதற்குள் தாதியா வெகு தூரம் சென்று மறைந்துவிட்டார்.

மறுநாள் மைக்கேல் வெகு வேகமாகச் சென்று, கடைசியாக அவருடைய படைகளைத் தாக்க ஆரம்பித்தான். தேசீயப் படைகள் மிகவும் களைத்திருந்தும் வேறு வழியின்றிப் போரிட வேண்டியதாயிற்று. அப்போது தாதியாவிடம் முப்பது பீரங்கிகளுடன் ஐயாயிரம் சிப்பாய்கள் இருந்தனர். அவ்விதம் இருந்தும் அன்று நிகழ்ந்த ஆச்சரியம் என்னவெனில், ஆயிரம் ஆங்கிலப் படைகளும் தேசீயப் படைகளின் மீது பாய்ந்தவுடன், அவை தங்களுடைய பீரங்கிகளை விட்டுவிட்டுப் பின்வாங்க ஆரம்பித்து ஆங்கிலப் படைகளை எதிர்த்து நிற்கக்கூட முயலவில்லை.

குமாரசிம்மனுக்கும் தாதியாவுக்கும் உள்ள வேற்றுமை அதுதான். மறைந்திருந்து திடீரென்று தாக்குவதே குமாரசிம்ம னின் கொள்கையெனினும், சந்தர்ப்பம் கிடைத்தபோது அவர் பகைவர்களைப் பகிரங்கமாக எதிர்க்கவும் தயங்கவில்லை. ஆனால் தாதியாவின் படைகள் அத்தகைய சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்திக்கொள்ளத் தவறிவிட்டன.

ராய்கட் மைதானத்தை விட்டுச் சென்ற தாதியாவின் படை கள் பேத்வா நதிக்கரையிலுள்ள காட்டுக்குள் புகுந்து, அடுத்த பக்கத்திலுள்ள ஸ்ரீரஞ்ஜ் என்ற இடத்துக்குச் சென்றன. அங்கே தாதியாவுக்கு மற்றும் நான்கு பீரங்கிகள் கிடைத்தன. பெரு மழை காரணமாக ஆங்கிலப் படைகள் அங்கே வர முடியவில்லை. எனவே தாதியா, தம் துருப்புகள் ஓய்வெடுத்துக்கொள்ளுவதற் காக ஒரு வாரம் அநுமதித்து அதன்பின் மீண்டும் வடதிசை நோக்கிப் புறப்பட்டார். சிந்தியா ராஜ்யத்தைச் சேர்ந்த இஸா கர் நகரம் தேச பக்தர்களுக்கு எவ்விதச் சாதனமும் அளிக்க மறுத்ததால், தாதியா அங்கிருந்து பலாத்காரமாக எட்டுப் பீரங்கிகளைக் கைப்பற்றினார். எனினும், நர்மதையைக் கடந்து செல்ல வேண்டுமென்ற அவருடைய நோக்கம் பூர்த்தி பெறு வதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை. ஆங்கிலப் படை கள் பல திசைகளிலும் முட்டுக்கட்டை போட்டு வருகையில், அவர் தம் நோக்கத்தை எவ்வாறு நிறைவேற்ற முடியும்?

அப்போது தாதியா புரிந்த சாகசங்களைப்பற்றி ஓர் ஆங்கில சரித்திராசிரியர் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: ‘பத்து மாத காலம் வரையில் தாதியா வெகு தந்திரமாகப் போரைத் தவிர்த் துப் பின்வாங்கிக்கொண்டே யிருந்தார். அது காரணமாக ஆங்கிலேயர்களால் அவரைத் தோற்கடிக்க முடியவில்லை. ஆங் கிலப் படை இடைவிடாமல் ஓட்டப் பந்தயத்தில் ஈடுபடுமாறு அவர் செய்து வந்ததால், ஆங்கிலத் தளபதிகளைக் காட்டிலும் அவ ருடைய பெயர்தான் ஐரோப்பா முழுவதும் பிரசித்தமாகியது. அப்போது தாதியா சாதிக்க முற்பட்ட சாகசம் எளிதானதல்ல. பல போர்களிலும் தோற்கடிக்கப்பட்டுச் சோர்வுற்றிருந்த படை களிடையே ஒற்றுமையும் உத்வேகமும் நிலவும்படி செய்யும் அசா தாரணமான பொறுப்பை அவர் ஏற்கவேண்டி யிருந்தது. மற் றும் பல்வேறு தினுசான பேர்வழிகளடங்கிய படையுடன் இடை விடாது ஓரிடம் விட்டு மற்றோரிடத்துக்குச் சென்றுகொண்டே இருக்க நேர்ந்தது. அதனால் அவரை விரட்டிச் சென்ற ஆங்கிலப் படைகள்தாம் திகைப்படைந்தனவே யன்றி, அவர் பிரமிக்கவோ, சோர்வடையவோ இல்லை. அரைகுறையான ஒழுங்கும் பயிற்சி யும் உள்ள படைகளைக் கொண்டு அவர் பல நகரங்களை ஆக்கிர மித்ததுடன் ஏராளமான சாதனங்களையும் கைப்பற்றுவது சாத்தியமாயிற்று: இடைவிடாது ஓடிக்கொண்டிருந்த அந்தப் படைகளுக்கு மேற்கொண்டு ஆட்களைச் சேகரிப்பதிலும் அவர் வெற்றி பெற்றதுதான் மிக மிக ஆச்சரியமாகும். புரட்சிக் காரர்கள் படுதோல்வி யடைந்த பின்னரும் தாதியா இத்தகைய அற்புதமான காரியங்களை நிறைவேற்றியதிலிருந்து, அவரது மகத்தான சாமர்த்தியத்தை அறிந்துகொள்ளலாம்.’ ஹைதர்

அலியைப்போல் தாதியாவும் பயங்கரமான தலைவரேயா வார். நாகபுரி வழியாகச் சென்னைக்குச் செல்ல வேண்டும் என்ற அவருடைய திட்டம் வெற்றி பெற்றிருக்குமாயின், ஹைதர் அலியைப்போல் அவரும் ஆங்கிலேயர்களுக்குப் பேராபத்தை விளைவித்திருப்பார். ஆனால் நெப்போலியனுக்கு இங்கிலீஷ்க் கால்வாய் அமைந்ததுபோல், தாதியாவுக்கும் நர்மதை பெரும் முட்டுக்கட்டையாகியது. அவர் நர்மதையைக் கடந்திருப்பாராயின், பின்னர் ஆங்கிலேயர்களால் அவரை எதுவும் செய்திருக்க முடியாது.'

அதன் பின் தேசீயப் படைகள் இரு பிரிவுகளாகப் பிரிந்தன. ஒரு பிரிவுக்குத் தாதியாவும், மற்றொரு பிரிவுக்கு ராவ் சாஹிப் பேஷ்வாவும் தலைமை வகித்தனர். இரு படைகளும் தனித் தனியாகப் புறப்பட்டுச் சென்றன. அவை பழைய தந்திரத் தைக் கைவிடவில்லை. பல தடவைகளிலும் அவை பகைவர்களை ஏமாற்றிவிட்டுச் செல்லுவதும், போர் நடந்த இடங்களில் பீரங்கிகளை இழப்பதும், மீண்டும் வேறு இடங்களிலிருந்து புதிய பீரங்கிகளைக் கைப்பற்றுவதுமாக இருந்தன. மங்க்ரோலி, சிந்த்வாடா முதலிய இடங்களில் ஏராளமான ஆங்கிலப் படை கள் கடுமையாக எதிர்த்தும் தேசீயப் படைகள் இறுதியில் தப்பிச் சென்றுவிட்டன.

கடைசியாகத் தேசீயப் படையின் இரு பிரிவுகளும் லலிதபுரி யில் சந்தித்தன. ஆயினும் என்ன? நர்மதையோ சமீபத்தில் இல்லை. நான்கு புறங்களிலும் பகைவர்கள் நெருக்கிக்கொண்டே வந்தனர். தெற்கிலிருந்து மைக்கேலும், கிழக்கேயிருந்து கர்னல் லிட்டெலும், வடக்கேயிருந்து கர்னல் மீடும், மேற்கேயிருந்து கர்னல் பார்க்கும், சம்பல் நதிப் பிரதேசத்திலிருந்து ராபர்ட் ஸூம் தாதியாவைச் சூழ்ந்துகொண்டு வந்தார்கள். பின்னர் ராவும் தாதியாவும் கலந்து ஆலோசித்து, திடீரென்று கஜூரி வந்து சேர்ந்தனர். ஆனால் துரதிருஷ்டவசமாக அங்கும் ஆங்கிலப் படைகள் இருந்ததால், அவர்கள் மீண்டும் காடுகளில் பிரவேசித்து வடக்கே தல்பஹாட் வரையில் சென்றார்கள். எனவே தெற்கே படையெடுத்து வரும் எண்ணத்தைத் தாதியா கைவிட்டுவிட்டதாக ஆங்கிலேயர்கள் நினைத்தனர்.

ஆனால் தாதியாவும் ராவும் திடீரென்று பேத்வா நதியைக் கடந்து மீண்டும் கஜூரிக்கு வந்தபோது தேசீயப் படைக்கும் அங்கிருந்த ஆங்கிலப் படைக்கும் போர் நடந்தது. அதன் பின் மீண்டும் தேசீயப் படைகள் தென் பிரதேசங்களை நோக்கிப் படையெடுத்துச் சென்றன. தாதியாவின் துணிச்சலைக் கண்டு ஆங்கிலேயர்கள் மிகுந்த குழப்பமடைந்து, அவரைத் தடுப்பதற் காகப் பல்வேறு திசைகளிலிருந்தும் ஓடி வந்தனர். ஆனால் தாதியாவோ பகைவர்களின் பெருமுயற்சி பயனற்றுப் போகும் படி செய்ததுடன், மின்னல் வேகத்தில் நதிகளைக் கடப்பதும், காடுகளின் வழியாக ஊடுருவிப் பாய்வதுமாக இருந்தார்.

அந்த நிலைமையிலும் அவரது கண்ணோட்டம் தென் திசை யிலேயே இருந்தது. கடைசியாக அவர் நர்மதைக்கு வந்து

சேர்ந்தார். நர்மதையையும் தாண்டிவிட்டார். அவருடைய துணிச்சலையும் சாகசத்தையும் கண்டு உலகமே பிரமித்தது. ஆங்கிலேயர்கள் என்ன செய்வது என்று தோன்ருமல் விழித்த னர். 'தமது திட்டத்தை ஆச்சரியகரமாக நிறைவேற்றிய தாதியாவைப் புகழாதிருப்பது முடியாத காரியம்' என்று சரித்திராசிரியரான மாலிஸன் குறிப்பிட்டிருக்கிருர்.

நான்கு பக்கங்களிலும் ஆங்கிலப் படைகள் சூழ்ந்துகொண் டிருந்துங்கூட, கடைசியாக மகாராஷ்டிர மன்னர் தம் படை யுடன் தக்ஷிணம் வந்து சேர்ந்தார். தாதியா, ஹோஷங்காபாத் என்ற இடத்தில் நர்மதையைக் கடந்து நாகபுரிக்குச் சென்ற தைக் கேள்வியுற்றதும், இந்தியாவில் உள்ளவர்கள் மாத்திரம் அல்ல, இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் உள்ளவர்கள்கூட, 'ஹா! என்ன துணிச்சல்! என்ன துணிச்சல்!' என்று ஆச்சரிய மடைந்தனர். 'தாதியா ஓர் அசாதாரண மனிதர் என்றே தோன்றுகிறது' என்று 1859 ஜனவரி மாதம் 17 - ஆம் தேதி லண்டன் 'டைம்ஸ்' அவரை மிகப் பாராட்டி எழுதியது!

மாயாவி தாதியா தக்ஷிணம் வந்து சேர்ந்ததும், தேசியப் புரட்சியின் உருவம் முற்றும் மாறியது. அவருக்குமுன் நிஜாம் ராஜ்யம் இருந்தது. அவரை ஆதரிப்பவர்கள் நிஜாம் தர்பாரில் ஏராளமானவர்கள் இருந்தனர். மற்ெருரு பக்கம் புனு, பம்பாய், மகாராஷ்டிரம் முதலிய சகலப் பிரதேசங்களின் ஆதரவும் இருந்தது. தாதியாவின் இணையற்ற திறமையைக் கண்டு ஹைதராபாத் நிஜாம், சென்னையில் இருந்த லார்டு ஹாரிஸ், பம்பாயில் இருந்த லார்டு எல்பின்ஸ்டன், கல்கத்தா வில் இருந்த லார்டு கானிங் முதலியோர் திகைத்துப் போயினர். தாதியா தமது ஒப்பற்ற துணிச்சலால் பகைவர்களைத் திகைத்துப் போகும்படி செய்தது உண்மையே. எனினும், அதனுல் பகைவர்களின் பலம் குறைந்துவிடவில்லை.

ஒரு வருஷ காலத்துக்கு முன் தாதியா அவ்வாறு செய்திருப் பாராயின், சுதந்தர யுத்தத்தின் போக்கே வேறு விதம் ஆகி யிருக்கும். ஆனுல் 1858 அக்டோபர் மாதம் அவர் நான்கு பக்கங்களிலும் இருந்த பகைவர்களையும் ஏமாற்றிவிட்டு நர்மதையைத் தாண்டியது எல்லோரையும் ஆச்சரியப்படும்படி செய்ததே யன்றி, அவருக்கு வெற்றியைக் கொடுக்கவில்லை. அப் போது பெரும்பாலான இடங்களிலும் புரட்சி நசுக்குண்டு விட்டது. சுதந்தரப் போரில் சிந்திய ரத்த வெள்ளம், தேசத் தைப் பலவீனமாகவும் உணர்ச்சியற்றுப் போகும்படியும் செய் திருந்தது. அந்த நிலைமையிலும் நாகபுரி ஜனங்கள் உறுதியுடன் நின்றிருப்பார்களாயின், புரட்சியின் போக்கு மாறியிருக்கலாம்.

வட இந்தியாவைச் சேர்ந்த ஒவ்வொரு கிராமத்திலும் விவசாயிகள் தாங்களாக வலுவில் சந்தோஷத்துடன் தாதியாவின் படைகளுக்குச் சகல உதவியும் புரிந்தனர். ஆனுல் மகாராஷ்டிரத் திலோ ஜனங்கள் அவருக்கு உதவி புரிய அஞ்சினர். ஆங்கில விசுவாசியான பங்கா ராணியின் காலத்தில் இருந்த பேர்வழி களிடமிருந்து தாதியா போன்ற வீரர்கள் வேறு எவ்விதப் பயனை

எதிர்பார்க்க முடியும்? அத்தகைய துர்ப்பாக்கியமான நிலைமையிலும் தாதியா சோர்வடையாமல், சிறிது காலம் அங்கே தங்கியிருந்து எதிர்காலத் திட்டத்தைப்பற்றி யோசிக்கலானார்.

ஆங்கிலப் படைகளோ, பல்வேறு திசைகளிலிருந்தும் அங்கே படையெடுத்துச் சென்றன. மேல்காட்டில் ஆங்கிலேயர்கள் இருந்தனர். அஸிர்கட், குஜராத், கான்தேஷ், நாகபுரி முதலிய இடங்களுக்கும் அவரால் செல்ல முடியவில்லை. இவ்வாருக ஒரு புறம் அவர் தெற்கே மேற்கொண்டு செல்வது அசாத்தியமாகியது. வடக்கேயிருந்தோ ஆங்கிலப் படைகள் நர்மதையைத் தாண்டி விரட்டிக்கொண்டு வந்தன. அந்த நெருக்கடியான சமயத்திலும் அவ் வீரர் கலங்கவில்லை. தம்மைச் சூழ்ந்துகொண்டுள்ள ஆங்கிலப் படைகளின் முன்னேற்றத்தை இயன்றவரையில் தடுத்துவந்தார். அதே சமயம் தபால்களைக் கைப்பற்றுவது, தந்திக் கம்பிகளை அறுப்பது, காவற்கூடங்களைத் திடீரென்று தாக்குவது போன்ற காரியங்களில் ஈடுபட்டுக்கொண்டே நர்மதை நதிக்கரை வரையில் வந்து சேர்ந்தார்.

பரோடாவுக்குச் செல்ல வேண்டும் என்பதே அப்போது அவருடைய திட்டமாகும். அவர் மீண்டும் நர்மதையைக் கடக்காமல் தடுப்பதற்காக அந்த நதியின் எல்லாத் துறைகளையும் ஆங்கிலப் படைகள் இரு புறங்களிலும் காவல் புரிந்து வந்தன. கடைசியாகத் தாதியா கர்குன் என்ற கிராமத்துக்கு வந்து அங்கிருந்து நதியைத் தாண்ட முற்பட்டார். அங்கே மேஜர் ஸண்டர்லண்ட் இருந்தான். அப்போது அவனுடைய படைகளுக்கும் தேசீயப் படைகளுக்கும் போர் ஆரம்பமாயிற்று. போரின் மத்தியில், திடீரென்று பீரங்கிகளை யெல்லாம் விட்டுவிட்டு நர்மதையில் குதித்து நீந்தி அக்கரைக்குச் செல்லும்படி தாதியா தம் படைகளுக்குக் கட்டளையிட்டார். சிறிது நேரத்தில் தேச பக்தர்கள் எல்லோரும் அக்கரை போய்ச் சேர்ந்தனர்.

பெரிய நதியில் பெரு வெள்ளம் போய்க்கொண்டிருந்த அந்தச் சமயத்தில் அவர்கள் அவ்வாறு நீந்தி நதியைக் கடந்தது, உலக சரித்திரத்திலேயே கண்டும் கேட்டும் இராத ஆச்சரியமாகும். அதைப்பற்றி மாலிஸன் கூறுவதாவது: 'பீரங்கிகளை இழந்த பின்னரும் அவர்கள் தங்களுடைய நோக்கத்தைப் பூர்த்தி செய்தது, அதாவது நீந்தி நர்மதையைக் கடந்து சென்றது, உலகிலேயே எந்தப் படையும் சாதிக்க முடியாத சாகசமாகும். இவ்விதம் நீந்திச் செல்லும் திறமை உலகிலேயே இந்தியர்களுக்கு மாத்திரந்தான் உண்டு.'

அவ்வளவு அவசரத்திலும் ஆபத்திலுங்கூட, தாதியா நேராகப் பரோடாவுக்குச் செல்லலானார். பரோடா தர்பாரிலும் படையிலும் நானா சாஹிபை ஆதரிக்கும் பலம் பொருந்திய கட்சிகள் இருந்து வந்தன. காயக்வாடின் துருப்புகளும் தாதியாவுடன் சேர்ந்துகொள்ளுவதற்காக அவரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தன. தாதியா ராஜபுரா வரையில் வந்தார். அங்கிருந்த ராஜாவிடமிருந்து வற்புறுத்திக் கப்பத் தொகையும்

குதிரைகளும் பெற்றுக்கொண்டு, மறுநாள் சோட்டா உதய புரிக்கு வந்து முகாம் போட்டார்.

அங்கிருந்து பரோடா ஐம்பது மைல் தூரந்தான். அவரைப் பிடிப்பதற்காகப் பல இடங்களிலிருந்து ஆங்கிலப் படைகள் துரத்திக்கொண்டு வந்தன. பகைத் துருப்புகள் அவருடைய நடவடிக்கைகளை அறிந்து அவரைச் சூழ்ந்துகொண்டு வந்தன எனினும், ஒரு தடவைகூட அந்த வலையில் விழாமல் அவர் தப்பிச் சென்றது விந்தையாகும்.

சோட்டா உதயபுரியில் பார்க் தன் படைகளுடன் வந்து சேரவே, பரோடாவுக்குச் செல்லும் நோக்கத்தைத் தாதியா கைவிட வேண்டியதாயிற்று. அங்கிருந்து அவர் மீண்டும் தமது படைகளுடன் வடக்கே சென்று வஸ்வரா கானகத்துக்குள் பிரவேசித்தார்.

அப்போது பாந்தா நவாப் இங்கிலாந்து ராணியின் பிர கடனத்திற்கு இணங்க, ஆயுதங்களைக் கீழே வைத்துப் போரைக் கைவிட்டுவிட்டதால், காட்டுக்குச் சென்ற தாதியாவும் ராவ் சாஹிபும் ஒரு வலையில் அகப்பட்டுக் கொண்டவர்கள் போல ஆயினர். அந்த வலையைப் பிளந்துகொண்டு செல்லுவதும் சாத்தி யம் அல்ல. தெற்கே நர்மதையும், மேற்கே ராபர்ட்ஸனும் அவன் படைகளும், வடக்கேயும் கிழக்கேயும் கடக்க முடியாத மலை களும் இருந்தன. அந்த நிலைமையில் தாதியாவும் ராவ் சாஹிபும் சரணடைந்திருந்தால், அவர்கள் மீது யார் குற்றம் கூற முடியும்? ஆனால் அப்போதும் அவ் வீரர்கள் சரண் அடையலாம் என்று கனவிலும் கருதவில்லை. 'பயங்கரமான அந்த ஆபத் திலும் அவர்களின் நிதான புத்தியோ தைரியமோ திறமையோ அணுவளவும் குறையவில்லை' என்று மாலிஸன் புகழ்மாலை சூட்டி யிருக்கிறார்.

முதலாவது சுதந்தர யுத்தத்தைப்பற்றி லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை 1859 மே மாதம் 20-ஆம் தேதி வெளியிட்டிருந்த அபிப்பிராயம் இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடத் தக்கதாகும். அதன் விவரமாவது: '1857—58-இல் இந்தியாவில் மூண்ட புரட்சி, இந்தியாவிலுள்ள அனைவரும் பரஸ்பரம் நன்கு அறிந்துகொள்ளும்படி செய்தது. நேபாளத்திலிருந்து கூர்ஜர எல்லை வரையிலும், ராஜபுதனப் பாலைவனத்திலிருந்து நிஜாம் சம்ஸ்தான எல்லை வரையிலும் புரட்சித் தலைவர்கள் ஆங்கிலேயர் களை எதிர்த்து, அது ஒரு தேசீயப் புரட்சிபோல் தோன்றும்படி செய்துவிட்டனர். தனித் தனியாகப் பிரிந்து கிடந்த சம்ஸ்தா னங்களின் அற்பச் சுயநலன்கள், ஜனங்களின் அறியாமை முதலி யன மறைந்து, இந்தியா முழுவதும் நிகழ்ந்துவரும் சம்பவங்களில் எல்லோரும் அக்கறை கொள்ள முற்பட்டார்கள். அந்தப் புரட் சியை நாம் அடக்க முற்பட்டதன் பயனாக, மக்களிடையே இன் னும் அதிக தேசீய உணர்ச்சி உண்டாவதற்கான விதை விதைக் கப்பட்டது எனலாம். சில வருஷங்களுக்குள் இங்கிலாந்து தன் எண்ணிக்கையற்ற முரண்பாடுகளைக் களைந்து, ஆபத்தான கொள்கையையும் மாற்றிக்கொண்டாலன்றி எதிர்காலத்தில்

மக்களின் புரட்சி பின்னும் அதிக பயங்கரமாக இருக்கும் என்பது நிச்சயம்.'

## 35

## தியாகியும் துரோகியும்

டிசம்பர் 11-ஆம் தேதி தாதியா கானகத்திலிருந்து வெளி வந்து ஒரு கோட்டைக் காவலரிடமிருந்து சில சாதனங்களைப் பெற்று நேராக உதயபுரி நகரை நோக்கிப் புறப்பட்டார். உடனே ஆங்கிலப் படைகள் நான்கு புறங்களிலிருந்தும் அவர்மீது பாய்ந் தன ஆதலின், அவர் அந்த நோக்கத்தை விட்டுவிட்டு மீண்டும் கானகத்துக்குள் பிரவேசிக்க நேர்ந்தது.

அப்போது இருந்த நிலைமையில் அவர் ஒரு வார காலந்தான் பகைவர்களிடம் சிக்காமல் இருப்பது சாத்தியமென்றும், அதன் பின் சரணடைவதைத் தவிர வேறுவழி இல்லையென்றும் தோன்றி யது. ஆகையால் சுதந்தரப் போரைக் கைவிடுவதா என்பது பற்றித் தலைவர்கள் ஆலோசிக்கலாயினர். அவ்விடத்தை ஒரு கானகம் என்றே சொல்லுவதற்கில்லை. ஒரு கூண்டு என்றுதான் கூற வேண்டும். நான்கு புறமும் பகைவர் சூழ்ந்துள்ள அந்த இடத் தில் மாயப் புலி சிக்கிக்கொண்டது. ஒவ்வொரு புறத்திலும் ஆங் கிலப் படைகள் தயாராக மாத்திரம் அல்ல; ஒவ்வொரு நிமிஷ மும் தாதியாவை நெருங்கிக்கொண்டும் இருந்தன. அப்போதும் போரைக் கைவிட அந்த வீரர் விரும்பவில்லை.

ஒரு நாள் அவரும் ராவ் சாஹிபும் பிரதாபகிரியை நோக்கிப் புறப்பட்டனர். அப்போது மாலை சுமார் நான்கு மணி இருக்கும். தாதியாவின் படை காட்டிலிருந்து வெளியே வந்தவுடனே மேஜர் ராக் படைகளுடன் சென்று அவரை எதிர்த்தான். கூண் டின் எந்தப் பக்கமும் ஆங்கிலேயர்களால் காவல் புரியப்பட்டு வருவதைத் தாதியா அறிவார். எனினும் மற்றப் பக்கங்களைவிட அது சிறிது பலவீனமாக இருப்பதை உணர்ந்து அவ்வழியாகத் தப் பிச் செல்ல முயன்றார். தாதியாவின் படைகளும் ஆங்கிலப் படை களின்மீது திடீரென்று நேரடியாகப் பாயவே, அந்தப் படைகள் சிதறுண்டு போயின. இவ்விதமாக மகாராஷ்டிரப் புலி மீண்டும் கூண்டை உடைத்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டது! தாதியாவின் துணிச்சலையும் வெற்றியையும் கண்டு ஆங்கிலத் தள பதிகள் வெட்கித் தலைகுனிந்தனர்.

1858 டிசம்பர் மாதம் 25-ஆம் தேதி தாதியா வஸ்வரா கானகத்தை விட்டு வெளியே வந்தார். அதே சமயம் வீரர் பிரோஸ் ஷா அவரைச் சந்திப்பதற்காகத் தம் படையுடன் வந்துகொண் டிருந்தார். மிர்ஸா பிரோஸ் ஷா, டில்லி ராஜ

குடும்பத்தைச் சேர்ந்தவர்; அயோத்தியில் நிகழ்ந்த சுதந்தர யுத்தத்தில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டவர். கங்கையையும் யமுனையையும் கடந்து அவர் தாதியாவைச் சந்திப்பதற்காக வந்த சாகசம் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படத் தக்க தாகும்.

பிரோஸ் ஷாவையும் சிந்தியா தர்பாரைச் சேர்ந்த மான சிங்கையும் சந்திப்பதற்காகச் சென்ற தாதியாவும் ராவ் சாஹிபும் பல சில்லறைப் போர்களுக்குப் பின், 1859 ஜனவரி மாதம் 13-ஆம் தேதி இந்திரகிரி வந்து சேர்ந்தனர். நான்கு தலைவர் களும் அங்கே சில நாட்கள் வரையில் தங்கியிருந்து எதிர்கால நடவடிக்கைகள் பற்றி விவாதிக்கலாயினர்.

ஆங்கிலப் படைகளின் நடமாட்டங்கள்பற்றித் தாதியா வுக்கு எப்போதுமே விவரமான உண்மைத் தகவல்கள் கிடைத்து வந்தன. தம்மை ஆங்கிலேயர்கள் நான்கு பக்கங்களிலும் நெருக்கி வருவதை அறிந்த தாதியா, தேவஸா என்ற இடத்துக்குச் சென் றார். எனினும் ஆங்கிலப் படைகள் நெருங்கி வந்துவிட்டதால் இனி அவருக்குத் தப்ப ஓர் அங்குலங்கூட வழி இல்லை! மற்றொரு முறை ஏதாவது துணிச்சலான காரியத்தைச் சாதிக்கலாம் என்ற உற்சாகமும் அவருக்கு இல்லை. எதிர்கால வெற்றியில் சிறிதும் நம்பிக்கை இராததே அதற்குக் காரணமாகும்.

வடக்கில் நேபியரும், வடமேற்கே ஷவர்ஸூம், கிழக்கே ஸாமர்ஸெட்டும், தென்கிழக்கே ஸ்மித்தும், தெற்கே மைக்கே லும் பான்ஸனும், தென்மேற்கேயும் மேற்கேயும் பானரும் தங்கள் தங்களுடைய படைகளுடன் நெருங்கி வந்துவிட்டனர். சோர்வடைந்திருந்த படைகளுடன் தாதியா பகைவர்களின் கையில் சிக்காமல் தப்புவது எப்படி?

இனி அவர் தப்ப வழியே இல்லை என்று ஆங்கிலத் தளபதிகள் ஆறுதலும் சந்தோஷமும் அடைந்தார்கள். வலையும் நெருக்கப் பட்டு விட்டது. பிரோஸ்ஷா, மான சிங், தாதியா, ராவ்சாஹிப் இவர்களின் கழுத்தைச் சுற்றி இறுகச் சுருக்கிட்டு விட்டதாகவே ஆங்கிலேயர்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

ஜனவரி மாதம் 16-ஆம் தேதி காலையில் தாதியா, ராவ் சாஹிப், பிரோஸ் ஷா முதலியோர் எதிர்காலத் திட்டம்பற்றி விவாதித்துக்கொண் டிருக்கையில், திடீரென்று கூக்குரல்கள் கேட் டன. அவர்களின் முகாம் முழுவதும் ஆங்கிலேயர்களின் மயமா கியது. ஓர் ஆங்கில அதிகாரி பின்புறமாக வந்து தாதியாவைக் கட்டிப் பிடித்தான். உடனே ஆங்கிலேயர் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். 'தாதியா பிடிபட்டார்', 'தாதியா பிடிபட்டார்' என்ற கோஷம் வானளாவியது. ஆனால் சில நிமிஷ நேரத்தில், 'தாதியா எங்கே?', 'தாதியா எங்கே?' என்ற கூக்குரலும் பரபரப் பும் எங்கும் ஏற்பட்டன! 'இப்போதுதான் என் கையில் சிக்கினார். சிப்பாய்களே, பிடியுங்கள், பிடியுங்கள்!' என்று ஆங்கில அதிகாரி கூக்குரலிட்டான். மூலை முடுக்குக்கூட விடாமல் முகாம் முழுவதும் தேடினர். ஆனால் தாதியாவைக் காணவில்லை!

மீண்டும் ஜனவரி மாதம் 21-ஆம் தேதியன்று மாயாவி தாதியா, ராவ் சாஹிப், பிரோஸ் இம் மூவரும் ஆள்வாருக்கு அருகிலுள்ள சிகர நகரில் தென்பட்டனர். ஆங்கிலேயர்களோ வெறி பிடித்தவர்கள்போல் அவர்களை விரட்டி வந்தார்கள். அப்போது ஹோம்ஸ் படைகளுக்கும் தேச பக்தர்களுக்கும் நடந்த போரில், தேசீயப் படைகள் தோல்வியடைந்து பின்வாங்கின. அந்தத் தோல்வியின் விளைவாகத் தலைவர்களின் நிலைமை பின்னும் மோசமாகியது. வெற்றி கிடைக்கலாம் என்ற நம்பிக்கை முன்னரே பாழாகிவிட்டதெனினும், சிகரில் ஏற்பட்ட தோல்வியால், அதற்கு மேல் ஆங்கிலேயர்களை எதிர்ப்பதுகூட முற்றும் அசாத்தியம் என்பதைத் தேச பக்தர்கள் உணர்ந்துகொண்டனர்.

அந்த நிலைமையில் தாதியா, ராவ் சாஹிபிடமும் படைகளிடமும் விடை பெற்றுக்கொண்டு கானகத்திற்குப் புறப்பட்டார். அப்போது அவருடன் மூன்று குதிரைகள், இரண்டு சமையற்காரர்கள், ஒரு வேலைக்காரன் இவர்கள் மாத்திரமே சென்றனர். அவர்களுடன் தாதியா பேரன் காட்டிற்குச் சென்றார். அங்கே ஒளிந்துகொண்டிருந்த குவாலியர் சர்தார் மான சிங்கிடம் தாதியா சென்றபோது, 'படைகளை விட்டுவிட்டுத் தாங்கள் இவ்விதம் வந்திருக்கக் கூடாது' என்று அவன் கூறினான். 'நான் வந்தது சரியாயினும் அல்லவாயினும் அதைப்பற்றி இப்போது விவாதிக்க வேண்டிய அவசியம் இல்லை. நான் உங்களுடன் சிறிது காலம் தங்கியிருக்க உத்தேசித்திருக்கிறேன். இடைவிடாமல் படைகளுடன் ஆயிரக் கணக்கான மைல்கள் சஞ்சாரம் செய்ததால், மிகவும் களைப்படைந் திருக்கிறேன்' என்று பதிலளித்தார் தாதியா.

அன்னார் மான சிங்குடன் தங்கியிருக்கிறார் என்ற ரகசியத்தை அறிந்துகொண்ட ஆங்கிலேயர்கள், அவரைப் பிடிப்பதற்காகத் தங்களுடைய வழக்கமான கருவியை உபயோகிக்கலாயினர். அவர்களுக்கு எச்சமயத்திலும் வெற்றியைக் கொடுத்து வந்துள்ள துரோகமும் சூழ்ச்சியும் கையில் இருக்கும்போது, தாதியாவைப் பிடிக்க அவர்கள் கவலைப்படுவானேன்?

மிக மிக ரகசியமாக அவர்கள் மானசிங்கை அணுகி, 'நீர் எங்களிடம் சரணமடைவதுடன் தாதியாவையும் பிடிக்க உதவி புரியும் பட்சத்தில், உங்களைச் சிந்தியா முற்றும் மன்னிக்குமாறு பார்த்துக்கொள்வதுடன் நார்வார் ராஜ்யத்தையும் உங்களுக்குக் கொடுக்கிறோம்' என்றார்கள். இயற்கையாகவே மான சிங் இழி குணம் படைத்தவனாதலால், உடனே அவனைப் பேராசை ஆட்கொண்டது. ஏற்கனவே அவன் தன் சொந்த மாமனையே ஆங்கிலேயர்களிடம் பிடித்துக் கொடுக்க முயன்றவன். அந்தத் துரோகி ஆங்கிலேயர்களின் ஆசை வார்த்தைகளுக்கு முற்றும் இணங்கிவிட்டான்.

பின்னர் அவன் தாதியாவைக் கண்டு, தான் ஆங்கிலேயர்களிடம் சரணடையத் தீர்மானித்திருப்பதாக அறிவித்தபோதும், தாம் சரணடையலாம் என்ற எண்ணம் தாதியாவின் மனத்தில் எழவில்லை. மீண்டும் முகாமிற்குத் திரும்பி வருமாறு

பிரோஸ்ஷாவிடமிருந்து அவருக்கு அப்போது ஒரு கடிதம் வந்தது. அவர் அதை மான சிங்கிடம் காட்டி, 'நான் இங்கேயே இருக்கட்டுமா? அல்லது திரும்பிச் சென்று விடட்டுமா? நீங்கள் சொல்லுவது போல் செய்கிறேன்' என்றார். 'சில நாட்கள் பொறுத்துக்கொள்ளுங்கள். நான் யோசித்துச் சொல்கிறேன்' என்று அந்தத் துரோகி பதிலளித்தான்.

மான சிங் ஆங்கிலேயர்களிடம் சரணடைந்து விட்டான் என்பதைத் தாதியா அறிவாராயினும், அவனிடம் பூர்ண நம்பிக்கை வைத்திருந்தார். தம்மைக் காட்டிக் கொடுத்துவிடுவான் என்று அவர் கனவிலும் கருதவில்லை. 'நான் திரும்பிவரும் வரையில், என் வேலைக்காரன் காட்டும் இடத்தில் பத்திரமாக இருந்து வாருங்கள்' என்று மான சிங் துரோக வலையை வீசிவிட்டுச் சென்றான். அந்த வேலைக்காரன் காட்டிய இடம் மிகவும் ரகசியமானது என்ற எண்ணத்துடன் அவரும் மூன்று நாட்கள் வரையில் அங்கே தங்கியிருந்தார்.

இதன் மத்தியில் துரோகி மான சிங் தன் அலுவல்களை வெகு மும்முரமாகக் கவனிக்க முற்பட்டான். அவன் ஆங்கிலேயர்களிடம் சென்று தாதியாவைப் பிடித்துத் தருவதாகக் கூறவே, அவர்கள் அளவற்ற சந்தோஷத்தினால் மான சிங்குடன் கைகுலுக்கினார்கள். உடனே வெள்ளையருக்கும் அவனுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டது. பம்பாய் இந்தியப் படையைச் சேர்ந்த பல சிப்பாய்கள் மான சிங்குடன் அனுப்பப்பட்டனர். இரண்டொரு துரோகிகளைத் தவிர மற்ற எல்லா இந்தியர்களும் தாதியாவிடம் பக்தியும் அநுதாபமும் கொண்டவர்கள் என்பதை வெள்ளையர்கள் அறிவார்களாதலால் அந்தச் சிப்பாய்களிடம் தாதியாவின் பெயரைக்கூடக் கூறத் துணியவில்லை. மான சிங் கூறுகிறபடி கேட்க வேண்டும் என்பதும், அவன் காட்டும் நபரைக் கைது செய்துகொண்டு வர வேண்டும் என்பதுமே சிப்பாய்களுக்கு ஆங்கிலேயர்கள் விடுத்த கட்டளையாகும். அவன் அந்தச் சிப்பாய்களுடன் பேரன் கானகத்துக்குச் சென்றான். 'பிரோஸ்ஷாவிடம் திரும்பிச் செல்லுவதா, வேண்டாமா?' என்பதை மூன்று நாட்களில் வந்து சொல்லுவதாக மான சிங் தாதியாவிடம் உறுதி கூறியிருந்ததற்கு இணங்க, குறித்த காலத்தில் வந்து சேர்ந்தான்!

மூன்றாவது நாள் நடுநிசி இருக்கும். தாதியா அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். மான சிங் அவ்விடத்துக்கு அருகில் வந்து, பாய்ந்து உள்ளே செல்லும்படி சிப்பாய்களிடம் கூறவே, அவர்கள் அவ்வாறே சென்று தாதியாவைக் கைது செய்தனர். தாதியா கண்களைத் திறந்ததும் தாம் கைதியாகி யிருப்பதைக் கண்டார். ஆங்கிலேயர்களுடன் எண்ணிக்கையற்ற போராட்டங்களில் ஈடுபட்ட - அவர்களை ஏமாற்றி ஆயிரக்கணக்கான மைல்கள் சுற்றி வந்த - பல்வேறு தடவைகளிலும் அவர்களின் கையிலிருந்து மயிரிழையில் தப்பிய மகாராஷ்டிரப் புலி, இறுதியில் தன் தேச சகோதரன் ஒருவனுடைய துரோகத்தினால் பாதகர்களிடம் சிக்கிக்கொண்டது.

1859 ஏப்ரல் 7-ஆம் தேதி தாதியா துரோக வலையில் வீழ்ந்து கைதியானார். மறுநாள் காலையில் அவரை, சிப்ரியில் இருந்த ஜெனரல் மீடின் முகாமுக்குக் கொண்டு சென்றனர். பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாகப் போர் தொடுத்ததாக அவர் மீது குற்றம் சாட்டி ராணுவக் கோர்ட்டில் விசாரணை நடந்தது.

புதன்கிழமையன்று தாதியா எழுத்து மூலம் கொடுத்த வாக்குமூலம் இதுதான்: 'நான் செய்ததெல்லாம் என் எஜமானரின் கட்டளைகளுக்கு இணங்கச் செய்ததாகும். கால்பிக்கு வரும்வரையில் நானா சாஹிபின் உத்தரவிற்கு இணங்க நடந்து வந்தேன். நானே நானா சாஹிபோ தர்ம நியாயமான போரில் ஈடுபட்டதைத் தவிர, மற்றப்படி ஓர் ஆங்கிலேயரைக் கூடக் கொன்றதில்லை. ஓர் ஆங்கிலேயரைக்கூடத் தூக்கில் இட்டதில்லை. ஆகையால் இதற்கு மேல் இந்த விசாரணையில் கலந்து கொள்ள நான் விரும்பவில்லை.'

ஆங்கிலேயர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, தாதியா புரட்சியின் ஆரம்பத்திலிருந்து இறுதிவரையில் நிகழ்ந்த சம்பவங்கள் அடங்கிய குறிப்பொன்றைத் தயாரித்தார். அவற்றை அவர் வாயால் கூற, குமாஸ்தா அதை எழுதினார். பின்னர் அந்தக் குறிப்பிலும், தம் வாக்குமூலத்தின் கீழும் தாதியா டோபேயே ஆங்கிலத்தில் அழகாகக் கையெழுத்திட்டார். இந்தக் குறிப்பு இன்றும் இருந்து வருகிறது!

விசாரணையின்போது கேட்கப்பட்ட எல்லாக் கேள்விகளுக்கும் அவர், தம் குறிப்புக்கும் வாக்குமூலத்துக்கும் முரணின்றி ஹிந்துஸ்தானியில் பதிலளித்தார். யாராவது ஆங்கிலத்தில் அவரைக் கேள்வி கேட்டால், 'மாலும் நஹீ' (எனக்குத் தெரியாது) என்று ஹிந்துஸ்தானியில் பதில் கூறிவிடுவார்!

புதன், வியாழன், வெள்ளி இம்மூன்று நாட்களும் விசாரணை நடந்தது. அப்போது தாதியாவைப் பார்க்கக் கூட்டங் கூட்டமாக ஜனங்கள் வந்தனர். எனினும், பெரும்பாலும் அவர்களுக்கு அநுமதி கொடுக்கப்படவில்லை. அவரைப் பார்க்க அநுமதிக்கப்பட்ட சிலர் மிகுந்த அன்புடனும் பயபக்தியுடனும் அவருக்குத் தலை வணங்கினர்.

அவர் மீதுள்ள வழக்கின் விசாரணை நடைபெறப் போவதாகவும் அவருக்கு ஆதரவாகச் சாட்சியங்களைத் தயாரித்துக் கொள்ளும்படிக்கும் ஆங்கில அதிகாரி ஒருவன் அறிவித்த போது, தாதியா அவனிடம் கூறியதாவது: 'ஆங்கிலேயர்களை எதிர்த்து நான் போராடியிருப்பதால் மரணத்துக்குத் தயாராக இருக்க வேண்டும் என்பதை முற்றும் அறிவேன். எனக்குக் கோர்ட்டு எதுவும் வேண்டாம். விசாரணையில் கலந்துகொள்ளவும் நான் விரும்பவில்லை.'

பின்னர் தாதியா, விலங்குகள் இடப்பட்ட தம் கைகளை உயரே தூக்கி, 'பீரங்கியின் வாயிலாவது, தூக்கு வளையத்திலாவது மாண்டு, இந்தப் பாழும் சங்கிலியிலிருந்து விடுபட

வேண்டும் என்பது ஒன்றுதான் எனது விருப்பம். ஒரே விஷயம் மாத்திரம் நான் கேட்டுக்கொள்கிறேன். என் நடவடிக்கைகளுக்கும் குவாலியரிலுள்ள என் குடும்பத்தினருக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை. நான் செய்த காரியங்களுக்காக வயோதிகரான என் தந்தையைத் துன்பத்துக்கு உள்ளாக்காதீர்கள்' என்றார்.

ஏப்ரல் மாதம் 18-ஆம் தேதி விசாரணை நாடகம் நடந்தது. தாதியாவுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. அவரைத் தூக்கு மேடைக்குக் கொண்டு சென்றபோது மாலை சுமார் நான்கு மணி இருக்கும். வங்காள ஐரோப்பியப் படையைச் சேர்ந்த சிப்பாய்களின் காவலில் அவர் சிறையிலிருந்து கொண்டுவரப் பட்டார். தாதியா தூக்குமேடைக்குச் சென்றபோது அதைச் சுற்றிலும் ஏராளமான துருப்புகள் நின்றன. இந்தியக் காலாட் படை, ஐரோப்பியக் குதிரைப் படை, அந்தக் கோலத்தைக் காணவந்த சாதாரண மக்கள் முதலியோரின் கூட்டம் பிரமாதமாக இருந்தது. நான்கு புறங்களிலும் இருந்த உயரமான இடங்களில் சுற்றுவட்டக் கிராமவாசிகள் நின்றுகொண் டிருந்தனர்.

தம் தந்தையை எவ்வித ஹிம்சைக்கும் உட்படுத்த வேண்டாம் என்று தாதியா மீண்டும் கேட்டுக்கொண்டார். குற்றச் சாட்டும் தண்டனை விவரமும் அவருக்குப் படித்துக் காண்பிக்கப் பட்டன. பின்பு தாதியா தடுமாற்றமின்றிக் கம்பீரமாகச் சென்று தூக்குமேடை ஏறினார். வழக்கம்போல் கொலையாளிகள் அவருடைய கால்களையும் கைகளையும் கட்டுவதற்காக வந்தபோது, தாதியா சிறிதும் கலக்கமின்றிப் புன்சிரிப்புடன், 'இந்தச் சம்பிரதாயங்களெல்லாம் அநாவசியம்' என்று கூறி, தாமாகவே சுருக்கு• வளையத்தில் கழுத்தை விட்டுக்கொண்டார்! சுருக்கும் இறுகியது! அடிப் பலகையும் நகர்ந்தது!

பேஷ்வாவின் அந்தரங்க ஊழியரும், முதலாவது சுதந்தர யுத்தத்தில் பங்கெடுத்துக்கொண்ட முதல்தர வீரர்களில் ஒருவரும், தேசத்தின் அரும் பெருந் தியாகியும், மத ரக்ஷகரும், அன்பும் ஆண்மையும் கௌரவமும் பெருந்தன்மையும் ஒருங்கே வாய்ந்தவருமான தாதியா டோபேயின் உயிரற்ற சடலம் ஆங்கிலேயர்களின் தூக்கு மேடையில் ஊசலாடிக்கொண் டிருந்தது! அந்தத் தூக்கு மேடையில் உதிர வெள்ளம் பெருகியது! நாட்டிலோ கண்ணீர் வெள்ளம் ஓடியது! அந்த வீரர் செய்த குற்றம் என்ன? தேசத்தின் சுதந்தரத்துக்காக எண்ணிக்கையற்ற கஷ்டங்களையும் எல்லையற்ற துன்பத்தையும் அநுபவித்ததுதான்! தேச மக்களின் க்ஷேமத்துக்காக உடல் பொருள் ஆவி அனைத்தையும் அர்ப்பணம் செய்த அந்த மகான் அடைந்த வெகுமதி தூக்கு மேடைதான்!

கொடிய கொள்ளைக்காரனைப் போலவும், கொலைப் பாதகனைப் போலவும் வீர தாதியா உயிர் துறக்க நேர்ந்தது! தாதியா! அந்தோ! தாதியா! இந்தத் துர்ப்பாக்கிய நாட்டில் நீங்கள் ஏன் பிறந்தீர்கள்? வெறுக்கத் தக்கவர்களும், துரோகிகளும், மடையர்களுமான இந்த ஜனங்களுக்காக ஏன் போராடினீர்கள்? தாதியா!

உங்களுக்காக நாங்கள் இப்போது சொரியும் கண்ணீரை நீங்கள் பார்க்க முடிகிறதா? ஆயினும். என்ன? கோழைகளான நாங்கள் விடும் கண்ணீர், நீங்கள் சொரிந்த உதிர வெள்ளத்துக்கு ஈடாகுமா? ஆகாது! எக்காலத்திலும் ஈடாகாது!

தாதியாவின் உடல் ஊசலாடியதைக் கண்ட ஆங்கிலேயர்கள் தங்களுடைய 'பராக்கிரம'த்தைக் குறித்துப் பரவசம் அடைந்தனர். ரத்தம் வழிந்துகொண்டிருந்த அவரது உடல் சூரியாஸ்தமனம் வரையில் அவ்விடத்திலேயே தொங்கிக்கொண்டிருந்தது! காவலர்கள் அவ்விடத்தை விட்டுச் சென்றபின், அவரது ஞாபகார்த்தமாக அவருடைய தலைமுடியைக் கத்தரித்து வைத்துக்கொள்ள ஆங்கிலேயர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஓடி வந்தனர்!

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தத்தின் வேள்வித் தீயில் இறுதியாகப் பலியானவர் தாதியாதாம்!

பயங்கர எரிமலை தன் வாயைத் திறந்து மாமிச மலைகளையும், உதிர வெள்ளத்தையும், பிரேதக் குவியல்களையும், இடி மின்னல்களையும், அக்கினிக் குழம்பையும் கக்கியபின், வாயை மீண்டும் மூடிக்கொள்ளத் தொடங்கியது! அக்கினிக் குழம்பு மறைந்தது! வாட்களாகிற அதன் நாக்குகள் உள்ளடங்கின! இடி முழக்கங்களும் சண்டமாருதமும் மந்திரவாதியின் பைக்குள் மீண்டும் சென்று மறைந்தன! எரிமலையின் பிரம்மாண்டமான பிளவு மூடிக்கொண்டது! அதன் உச்சியில் மறுபடியும் பசும் புற்கள் தோன்றின! மீண்டும் விவசாயம் ஆரம்பமாயிற்று! திரும்பவும் கலப்பைகள் மும்முரமாக வேலை செய்யலாயின! சாந்தியும் சமாதானமும் நிலவின! எரிமலையின் மேற்புறம் மிகவும் பசுமையாகவும், கண்களுக்கு இனிமையாகவும் தோன்றுகிறது! அதன் அடியில் பயங்கரமான எரிமலை துயில்கொண்டு வருகிறது என்பதை எவரும் நம்ப முடியாதவாறு அவ்வளவு அழகாக இருக்கிறது அதன் மேற்புறம்!

## 36

## முடிவுரை

எரிமலை தாற்காலிகமாக அடங்கியது. பிரோஸ் ஷா, ராவ் சாஹிப் இவ்விரு தலைவர்களின் கதி என்ன ஆயிற்று என்று வாசக அன்பர்கள் கேட்கலாம். தாதியா தம்மை விட்டுச் சென்றபின் ராவ் சாஹிப் ஒரு மாத காலம் வரையில் உக்கிரமாகப் போரை நடத்திவிட்டு, இறுதியில் மாறுவேடம் பூண்டு காட்டிற்குச் சென்றுவிட்டார். மூன்று வருஷங்களுக்குப் பின் துரதிருஷ்டவசமாக அவர் பிடிபட்டு ஆங்கிலேயர்களால்

1862 ஆகஸ்டு 20-ஆம் தேதி தூக்கிலிடப்பட்டார். பிரோஸ் ஷாவும் மாறுவேடத்துடன் சஞ்சாரம் செய்துகொண்டிருந்த பின், அதிருஷ்டவசமாக இந்தியாவை விட்டுச் சென்று பாரசீகத்தைச் சேர்ந்த கர்பலா என்ற இடத்தில் காலங்கழித்து வந்தார்.

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தத்தைப்பற்றிப் பல் வேறு தடவைகளிலும் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. அந்தப் புரட்சி, காலத்திற்குமுன், அதாவது அதற்கான ஏற்பாடுகளெல்லாம் பூர்த்தியாகுமுன் மூண்டுவிட்டதா? இல்லை என்பதே நமது அபிப்பிராயம். 1857-இல் செய்யப்பட்ட ஏற்பாடுகளைப் போல், வெற்றிகரமான புரட்சிகளில்கூடக் காண்பது அரிது. சுதந்தர யுத்தத்திற்கு ஆதரவாக இந்தியப் படைகள் ஒன்றன்பின் ஒன்றாக முன்வந்தன. சக்தி பொருந்திய மன்னர்கள், சர்க்கார் அதிகாரிகள், போலீசார், நகர ஜனங்கள் எல்லோரும் அதில் சேருவதாக உறுதி கூறினர். அந்த நிலைமையில் யார்தாம் புரட்சியை உடனே ஆரம்பிக்காதிருக்க முடியும்? புரட்சி சம்பந்தப்பட்டவரையில் உண்மையான கஷ்டம் ஆரம்பத்தில்தான். தேசம் முழுவதும் பின்புதான் எழும். இந்தியத் தலைவர்கள் அவசரப்பட்டு விட்டார்கள் என்று சொல்லுவதற்கில்லை. அத்தனை வசதிகள் இருந்தும் புரட்சியை ஆரம்பிக்கத் துணியாதவர்கள், எக்காலத்திலும் அதை ஆரம்பித்திருக்க முடியாது.

ஆகையால் புரட்சியை ஆரம்பித்த காலம் முற்றும் சரியே. அவ்விதம் இருந்தும் தலைவர்கள் வெற்றி பெறாத்து ஏன்? அதற்கான சில்லறைக் காரணங்கள் முன்னமே ஆங்காங்கே விவரிக்கப்* பெற்றிருக்கின்றன. தோல்விக்கு முக்கிய காரணம் இதுதான்: எந்தப் புரட்சியிலும் அழிவு அலுவல்கள், ஆக்க அலுவல்கள் என இரண்டு அம்சங்கள் உண்டு. 1857-ஆம் வருஷப் புரட்சியில் முதலாவது அம்சம் வெற்றிகரமாக அநுஷ்டிக்கப்பட்டது. எனினும், இரண்டாவது அம்சம், அதாவது ஆக்க அலுவல்கள் சரிவர நடைபெறவில்லை.

ஆங்கில அதிகாரம் ஒழிக்கப்பட வேண்டும் என்பதை யாரும் எதிர்க்கவில்லை. ஆனால் எதிர்காலத்தில் எத்தகைய ஆட்சிமுறை ஏற்படுவது என்பதே அப்போது எழுந்த கேள்வியாகும். ஆங்கில ஆட்சியை ஒழித்தபின் மீண்டும் பழைய உள்நாட்டுச் சண்டைகளை ஸ்தாபிப்பதாயின் - மொகலாய, மகாராஷ்டிரர்களின் பழைய சச்சரவுகளை மீண்டும் உற்பத்தி செய்வதாயின் - அதற்காக ரத்தம் சிந்தப் பாமர ஜனங்கள் தயாராக இல்லை. ஏற்கனவே அத்தகைய சச்சரவுகளால் சலிப்படைந்த மக்களே, திடீரென்று ஏற்பட்ட வெறுப்பும் மடத்தனமும் காரணமாக, அந்நியர்கள் உள்ளே வர இடம் கொடுத்துவிட்டார்கள். அழிவு அம்சம் சம்பந்தப்பட்ட வரையில் புரட்சி வெற்றி பெற்றது; ஆனால் ஆக்க அம்சத்தை நிறைவேற்ற வேண்டிய சமயம் வந்தபோது அலட்சிய புத்தியும், பரஸ்பர பீதியும், அவநம்பிக்கையும் கொழுந்து விட்டன.

மக்களின் மனத்தை வசீகரிப்பதற்குற்ற ஒரு புதிய ஆக்கத் திட்டம் அப்போது அவர்கள் முன்னிலையில் சமர்ப்பிக்கப்பட்டிருக்குமாயின், புரட்சியின் ஆரம்பத்தைப்போல் அதன் வளர்ச்சியும் முடிவும் பிரமாதமாக வெற்றியடைந்திருக்கும். அதுகூட வேண்டியதில்லை; பிரளயத்திற்குப் பின்புதான் சிருஷ்டி என்ற உண்மையையாவது ஜனங்கள் நன்கு அறிந்து கொண்டிருப்பார்களாயின், புரட்சி வெற்றியடைந்திருக்கும். சிருஷ்டி ஒரு புறம் இருக்கட்டும்; பிரளய வேலைகளைக்கூடத் தேசம் முற்றும் நிறைவேற்ற முடியவில்லை. ஏன்? தேசத்தில் சில துரோகிகளும் இழிகுணம் படைத்தவர்களும் இருந்ததனுல் தான்! ஏற்கனவே நிலவிய உள்நாட்டுச் சண்டைகளுடன் கூடிய சுயராஜ்யத்தைக் காட்டிலும் ஆங்கில ஆட்சி பன்மடங்கு அதிக ஆபத்தானது என்பதை அறிந்துகொள்ளும் புத்தி அந்தத் துரோகிகளுக்கு இல்லாமற்போனதனுல்தான்! தங்கள் தேச சகோதரர்களுக்கு விரோதமாக அந்நியர்களுக்கு உதவி புரிய மறுக்கும் யோக்கியப் பொறுப்பும் தேசபக்தியும் அற்றவர்கள் இருந்ததனுல்தான்!

'இந்தியாவில் என் குறிப்புகள்' என்ற மகுடத்துடன் ரஸ்ஸெல் எழுதியுள்ள புத்தகத்திலிருந்து இவ்வுண்மையை அறிந்துகொள்ளலாம். அதில் அவர் கூறுவதாவது: 'பிரிட்டிஷார் மிகுந்த தைரியசாலிகளாக இருப்பினும், புரட்சிச் சமயத்தில் இந்தியர்களெல்லோரும் அவர்களுக்கு விரோதமாக இருந்திருப்பார்களாயின், இந்தியாவில் ஆங்கிலேயர்களின் பூண்டே முற்றும் அழிக்கப்பட்டிருக்கும் என்பது நிச்சயம். ஆங்கிலப் படைகள் புரட்சிக்காரர்களை எதிர்த்து வீரப்போர் புரிந்தன என்பது உண்மையே. எனினும் அவைகளின் வெற்றிக்குப் பெரிதும் இந்தியர்களே காரணமாவர். இந்தியர்களின் உதவி கிடைத்ததனுல்தான் புரட்சிக்காரர்களை எதிர்த்து நிற்பது ஆங்கிலேயர்களுக்குச் சாத்தியமாயிற்று. பாடியாலா ராஜாவும் ஜிந்த் ராஜாவும் நம் நண்பர்களாக இல்லாவிடில், சீக்கியர்கள் நமது படையில் சேராமல் பாஞ்சாலத்திலேயே அமைதியாக இருந்திருப்பார்களாயின், நாம் டில்லியை முற்றுகையிட்டிருக்க முடியாது. லட்சுமணபுரியில் நமக்குச் சீக்கியர்கள் செய்த உதவி ஈடு இணையற்றதாகும். நமக்கு உதவி புரிந்தவர்களும், உணவளித்தவர்களும், ஊழியம் செய்தவர்களும் இந்தியர்களே. போர்க்களத்திலும் நமது நிலைமையைப் பலப்படுத்தியவர்கள் இந்தியர்களே. இப்போது எங்கள் முகாமில் இருப்பவர்களை யெல்லாம் பாருங்கள்: நம் காவற் கூடங்களில் இருப்போர் இந்தியச் சிப்பாய்களே; நம் குதிரைகளுக்குப் புல் கொண்டு வருவோர் சுதேசிகளே; அவைகளைப் பராமரிப்போரும் அவர்களே; யானைகளுக்குத் தீனி வைப்போர், போக்குவரத்துச் சாதனங்களை நிர்வகிப்போர், நமது காரியாலயத்துக்குத் தேவையான சாமான்களைக் கொண்டு வருவோர், நமக்கு உணவளிப்போர், சிப்பாய்களுக்காகச் சமையல் செய்வோர், முகாம்களைச் சுத்தம் செய்வோர், கூடாரங்களை அமைப்போர், ஆங்கில அதிகாரிகளின் காவலர்கள், நமக்குப் பண

உதவி புரிவோர் முதலிய சகலரும் இந்தியர்களே. இந்திய வேலைக்காரர்களும், டோலி தூக்குவோரும், ஆஸ்பத்திரி ஆட்களும், வேலைக்காரர்களும் இல்லாவிட்டால், நம் படைகள் ஒரு வாரங்கூட உயிர் வாழ்ந்திருக்க முடியாது என்று என் காரியதரிசியான சிப்பாய் (ஆங்கிலேயர்) கூறுகின்றார். டில்லியில் கூர்க்கர்கள் நமக்குச் செய்த பேருதவி மறக்கக் கூடியதல்ல. வங்காளப் பீரங்கிப் படைகள் உயிரைத் துச்சமாக மதித்து நமக்காகப் போர் புரிந்தன.'

எனவே முதலாவது சுதந்தர யுத்தம் தோல்வி அடைந்ததன் முழுப் பாவமும் அந்தத் துரோகிகளையே சாரும். ஆனால் ஜனங்களின் முன்னிலையில் தெளிவான, வசீகரமான ஆக்கத் திட்டம் சமர்ப்பிக்கப் பெற்றிருக்குமாயின், துரோகிகள் கூடத் தேசபக்தர்களாக மாறியிருப்பார்கள். தேசபக்தியினால் கிடைக்கும் பயன் லாபகரமாகவும் வசீகரமாகவும் இருக்குமாயின் வெட்கக் கேடான பயனற்ற துரோக வேலையில் எவரும் ஈடுபட மாட்டார்கள் அல்லவா? எனினும், அவ்விதம் ஈடுபடாமல் இருப்போர் விசேஷப் பாராட்டுதலுக்கு உகந்தவர்கள் அல்ல. குடியரசாயினும் முடியரசாயினும் அராஜக அரசாயினும் சுயராஜ்யந்தான் சிறந்தது என்பதையும், எவ்வளவு அற்புதமானதாக இருப்பினும் அந்நிய ஆட்சி அவல ஆட்சியே என்பதையும் முற்றும் உணர்ந்து சுதந்தர யுத்தத் தீயில் குதித்த வீரர்கள்தாம் உண்மையில் மகிமை பொருந்திய, என்றென்றும் பாராட்டுதற்குரிய வீரத் தியாகிகளாவர்.

விடுதலையை விரும்புவது எதற்காக? தேசம் செல்வப் பெருக்குடன் விளங்கும் என்பதற்காக அல்ல; ஆனால் விடுதலையில்தான் ஆன்ம சாந்தி காண முடியும் என்பதற்காகவே. கௌரவத்துடன் ஒப்பிடும்போது லாப நஷ்டம் எம்மாத்திரம்! பொன் கூண்டுக்குள் அடிமையாக இருப்பதைக் காட்டிலும் கானகத்தில் சுதந்தரத்துடன் இருப்பது எவ்வளவோ மேன்மையானது அல்லவா?

இந்த உயர்ந்த கொள்கையை நன்கறிந்து யார் யார் தங்கள் நாட்டுக்கும் மதத்துக்கும் செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றினார்களோ, சுதர்மத்துக்காகவும் சுயராஜ்யத்துக்காகவும் யார் யார் வாட்களை உருவி, வெற்றி பெறாவிடினும் கடமையைச் செய்ய வேண்டும் என்ற புனித நோக்கத்துடன் மரணத்தை வரவேற்றார்களோ, அவர்களின் பெயர்கள் என்றென்றும் நம் ஞாபகத்தில் இருந்து வருமாக! அவர்களின் நாமங்களை நாம் என்றென்றும் பக்தியுடன் ஜபித்து வருவோமாக! அலட்சிய புத்தி அல்லது தயக்கம் காரணமாக அந்தப் புனித யுத்தத்தில் சேராதவர்களை அவர்களின் நாடு ஒரு காலத்திலும் ஞாபகத்தில் இருத்திக் கொள்ளாது. ஆனால் தங்கள் தேச சகோதரர்களுக்கு விரோதமாகப் பகைவர்களுடன் சேர்ந்து கொண்டவர்கள் என்றென்றும் எல்லோருடைய சாபத்திற்கும் உள்ளாவார்களாக!

1857-ஆம் வருஷத்திய சுதந்தர யுத்தம், இந்தியர்களிடையே எவ்வளவு தூரம் ஒற்றுமையும், சுதந்தர உணர்ச்சியும், சக்தியும் இருக்கின்றன என்பதை நிர்ணயிப்பதற்கு உற்ற ஒரு பரிசோதனையாக அமைந்தது. சோம்பேறிகள், பேடிகள், சுயநலப் பதர்கள், துரோகிகள் இவர்களே அது தோல்வி யுற்றதற்குக் காரணமாவர். ஆனால் வாளேந்தி, ரத்தம் சிந்தி, தீக்குழியில் தைரியமாகப் பாய்ந்து, ஆனந்த நடனம் புரிந்து, வீர மரணத்தை வரவேற்ற உத்தமத் தியாகிகளைக் குறைகூறத் துணியும் நாக்கு இருக்க முடியுமா?

அவர்களுக்கு வெறி பிடித்துவிடவில்லை; அவர்கள் அவசரப்பட்டு விடவில்லை; தோல்விக்குப் பொறுப்பாளிகள் அவர்கள் அல்ல; அவர்களுடைய சங்க நாதத்தினால்தான் இந்தியத் தாயின் துயில் கலைந்தது; அடிமைத்தனத்தை அறவே அழிக்கும் ஆண்மை பொங்கியது. ஆனால் இந்தியத் தாயின் ஒரு புதல்வன் கொடுங்கோன்மையைத் தாக்க முற்பட்ட அதே சமயத்தில், மற்றொரு புதல்வன் தாயின் இருதயத்திலேயே வாளை வீசி விட்டான். தாய் காயமடைந்து வீழ்ந்தாள். அவ்விரு புதல்வர்களில் எவன் கொடியவன்? எவன் துரோகி? எவன் சாபத்துக்கு ஆளானவ்ன்?

சக்கரவர்த்தி பகதூர் ஷா சிறந்த உருதுக் கவி. சுதந்தர யுத்தம் உக்கிரமாக நடந்தபோது அன்னாரிடம் ஒருவர் கூறியதாவது:

'தம்தமேமே தம் நஹீ
கைர் மாங்கோ ஜான் கீ
ஐ ஸபர் டண்டீ ஹுயீ
ஷம்ஷேர் ஹிந்துஸ்தான் கீ.'

இதன் பொருள்: 'இப்போது ஒவ்வொரு விநாடியும் உங்களுடைய நிலைமை பலவீனமடைந்து வருகிறது. ஆகையால் உங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கும்படி (ஆங்கிலேயர்களை) வேண்டிக்கொள்ளுங்கள். ஓ சக்கரவர்த்தியே, இந்தியாவின் வாள், நிரந்தரமாக முறிந்துவிட்டது!'

சக்கரவர்த்தி அதற்கு அளித்த பதில் இதுதான்:

'காஸியோ மே பூ ரஹேகீ
ஜப்தலக் ஈமான்கீ!
தப்தோ லண்டன் தக் சலேகீ
தேக் ஹிந்துஸ்தான்கீ.'

இதன் பொருள்: 'நம் வீரர்களின் உள்ளத்தில் நம்பிக்கையும் தேச விசுவாசமும் அணுவளவாவது இருக்கும் வரையில், ஹிந்துஸ்தானத்தின் வாள் மிகக் கூர்மையாக இருந்து வருவதுடன் ஒரு நாள் லண்டன் வாசற்படியையும் தாக்கும் என்பது நிச்சயம்.'

முற்றும்

